# உலகத்
# தமிழிலக்கிய வரலாறு

(கி.பி. 1851 - கி.பி. 2000)

முனைவர் க. சிவத்தம்பி
முனைவர் ச. சிவகாமி
முனைவர் இராம. குருநாதன்



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

# உலகத் தமிழிலக்கிய வரலாறு

## (கி.பி. 1851 — கி.பி. 2000)

முனைவர் கா. சிவத்தம்பி

முனைவர் ச. சிவகாமி

முனைவர் இராம. குருநாதன்



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

இரண்டாவது முதன்மைச் சாலை, மையத் தொழில்நுட்பப்

பயிலக வளாகம், தரமணி, சென்னை - 600 113.

# BIBLIOGRAPHICAL DATA

| | | |
|---|---|---|
| Title of the Book | : | Ulakat Tamiḻilakkiya Varalāṟu **(1851-2000)** |
| Author | : | Dr. K. Sivathamby<br>Tamil Professor (Retd.)<br>2/7, Rams Gate, 58, 37th Lane, Wellawatte<br>Colombo - 06, Sri Lanka<br><br>Dr. S. Sivakami<br>Associate Professor<br>International Institute of Tamil Studies<br>C.I.T. Campus, Chennai 600 113.<br><br>Dr. Rama Gurunathan<br>Professor (Retd.)<br>Pachaiappa's College<br>Chennai |
| Publisher & © | : | International Institute of Tamil Studies<br>II Main Road, C.I.T. Campus, Chennai 600 113.<br>Ph.: 2254 2992 |
| First Edition | : | 2005 |
| Publication No | : | 545 |
| Language | : | Tamil |
| Paper Used | : | 18.6 kg TNPL Maplitho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type Used | : | 10 points |
| No. of Pages | : | xvi + 616 |
| No. of Copies | : | 2000 |
| Price | : | Rs. 180/- (Rupees One Hundred and Eighty) |
| Printed by | : | United Bind Graphics,<br>189, (101-D), Royapettah High Road,<br>Mylapore, Luz, Chennai - 600 004. |
| Subject | : | History of Tamil Literature (1851 - 2000 A.D.) |

சி.வி. சண்முகம்
கல்வி மற்றும்
வணிகவரித்துறை அமைச்சர்



தலைமைச் செயலகம்
சென்னை - 600 009

# வாழ்த்துரை

காலத்தின் தேவைக்கேற்பத் தமிழாய்வும் வளர்ந்தால் தான் தமிழும் வாழும்; வளம் பெறும் என்பது உண்மை. செம்மொழியாம் தமிழ் வளரவும், உலக அரங்கில் முன்னிலை பெறவும் வேண்டிய ஆய்வுலகச் செயற்பாட்டினை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் நாளும் புதுப்பொலிவுடன் மேற்கொண்டு வருகிறது. அதன் தலையாய பணிகளுள் **'உலகத் தமிழிலக்கிய வரலாறு'** எழுதுதலும் ஒன்று.

இதுவரை எழுந்துள்ள தமிழிலக்கிய வரலாறுகள் தமிழகத்தை மட்டுமே மையப்படுத்தி எழுந்துள்ளன; இது உலகளாவியது என்பது மட்டுமன்றிப் புதிய பார்வையில் ஆய்வு நோக்கில் எழுந்துள்ளது என்பதும் இதன் தனிச்சிறப்பாகும். தமிழாய்வில் தோய்ந்த, ஆழங்கால் பட்ட தமிழறிஞர் பலரின் கூட்டு முயற்சியால் இந்நூல் ஆறு தொகுதிகளாக உருவாக்கப்பட்டுள்ளது. ஆறாம் தொகுதியான இந்நூல் கி.பி.1851 முதல் கி.பி.2000 வரையிலாக அமைந்து இக்காலத் தமிழின் அருமை பெருமைகளைப் பறைசாற்றுகிறது. இலங்கை, மலேசியா, சிங்கப்பூர் எனும் அண்மை நாடுகளின் தமிழ்நிலையை அந்நாட்டுத் தமிழறிஞரே அளித்துள்ளனர்.

இதுபோன்ற சிறந்த செயன்மைகளுக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்துவரும் **மாண்புமிகு தமிழக முதல்வர் டாக்டர் ஜெ. ஜெயலலிதா** அவர்களுக்கு நன்றியறிதலைப் பதிவு செய்கிறேன்.

இப்பெருந்திட்டத்தினை நிறைவேற்றிய அறிஞர் பெருமக்களுக்கும், வெளியிட்டுத் தமிழ்ப்பயிர் தழைக்கச் செய்துள்ள உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்துக்கும் அதன் இயக்குநர் முனைவர் சா. கிருட்டினமூர்த்தி அவர்களுக்கும் என் வாழ்த்துகளையும் பாராட்டினையும் தெரிவித்துக் கொள்கிறேன்

சென்னை - 600 009
நாள் : 26-7-2005

**சி.வி. சண்முகம்**

முனைவர் சா. கிருட்டினமூர்த்தி
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை - 600 113

## அணிந்துரை

'இலக்கியம் ஒருநாட்டின் சுயசரிதை' என்பார் திறனாய்வாளர் அட்சன். இலக்கியம் ஒரு சமுதாயப்படைப்பாக எண்ணப்பெறுதலின் அது மக்கள் முக்கியத்துவம் வாய்ந்தது. ஒரு சமுதாயத்தின் பண்பாடு, வாழ்வியல், தகவுகள், நம்பிக்கைகள், வரலாறு என்பனவற்றை அறிந்து கொள்ளுதற்கு இலக்கியம் அடிப்படை ஆவணம் ஆகும்.

தமிழிலக்கியம் உலக இலக்கியங்களுடன் ஒப்பவைத்து எண்ணும் அளவிற்குக் கருத்துவளமும் கற்பனைத்திறமும் வாய்ந்தது. உலகத்தமிழ் என்ற கோட்பாடு அண்மைக் காலத்தில் அறிஞர் களிடையே வளர்ந்து வந்துள்ளது. தமிழ் வழங்கும் நிலப்பகுதியைத் "தமிழ்கூறும் நல்லுலகம்" என்று தொல்காப்பியப் பாயிரம் சுட்டுகின்றது. இந்திய நாட்டில் தமிழகம் மட்டுமன்றி வேற்று மாநிலங்களில் விளங்கும் பல்வேறு பல்கலைக்கழகங்களிலும் தமிழ் கற்பிக்கப்படுவதுடன், தமிழியல் ஆய்வுகளும் அறிஞர்களால் மேற்கொள்ளப்பெற்று வருகின்றன. தமிழகத்திற்கு அடுத்த நிலையில் அண்டை நாடாகிய இலங்கையில் இலக்கியப் படைப்புகள், பதிப்புகள், ஆய்வுகள் நன்முறையில் நடைபெற்றுவருதல் இங்குக் குறிப்பிடத்தக்கது. தமிழர்கள் பரவலாக வாழும் மலேசியா, சிங்கப்பூர் ஆகிய நாடுகளிலும் தொடக்கப்பள்ளி முதல் பல்கலைக்கழகக் கல்வி வரை தமிழ் பயிலப் பெறுதலுடன் தமிழியல் ஆய்வுகளும் நிகழ்த்தப் பெற்று வருகின்றன. உருசியா, சப்பான், ஐரோப்பிய நாடுகள், அமெரிக்கா முதலிய உலக நாடுகளில் உள்ள பல்கலைக்கழங்களில் தமிழ் மொழிக்குத் தனி இருக்கைகள் விளங்குவதுடன் தமிழியல் ஆய்வுகள் சிறப்பாக நடைபெற்று வருதல் சுட்டத்தக்கது. இந்நிலையில், இந்திய மொழிகளில் தமிழ்மொழிக்குத்தான் முதன் முதல் உலகளாவிய நிலையில் மாநாட்டுக் கருத்தரங்குகள் நடை பெற்றுள்ளன என்ற உண்மையும் எண்ணற்பாலது.

எனவே, தமிழ் எல்லை கடந்து ஞாலப்பொதுமை வாய்ந்ததாய் யாவராலும் விரும்பிப் பயிலப்பெறும் தகுதியும் வளமும் வாய்ந்துள்ளமை எண்ணி மகிழத்தக்கது. இச்சூழலில், "உலகத் தமிழிலக்கிய வரலாறு" துறைவல்ல பேராசிரியர்களைக் கொண்டு பல தொகுதிகளாக எழுதப்பெற்று வெளியிடுதல் வேண்டும் என்ற திட்டத்திற்கு அரசு நல்கை வழங்கியது; இத்திட்டத்தினை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் மேற்கொண்டுள்ளது.

இவ்வகையில் உலகத் தமிழிலக்கிய வரலாற்று வரிசையில் இஃது ஆறாவது தொகுதியாகும்; நிறைவுத் தொகுதியாகவும் இது அமைந்துள்ளது. இத்தொகுதி உலகத் தமிழிலக்கியங்களை, கி.பி.1851 முதல் கி.பி.2000 வரை வரையறுத்து ஆராய்ந்துள்ளது. இக்காலக்

கட்டத்தில்தான் தமிழில் புதிய உரைநடை இலக்கியங்களும், புதுக் கவிதைகளும், புதுப்பார்வையில் மரபுக் கவிதைகளும், அகராதி முயற்சிகளும், நாட்டுப்புற ஆய்வுகளுக்கான தரவுகளும், மொழி பெயர்ப்பு ஆய்வுகளும், சுவடி ஆய்வுகளும், அறிவியல்தமிழ் நூல்களும் தோன்றின எனலாம். உரைநடை இலக்கிய வளர்ச்சியில், சிறுகதை, புதினம், நாடகம், பயண இலக்கியம், கட்டுரை இலக்கியம், சொற்பொழிவு வடிவங்கள், பத்திரிகை வடிவங்கள், பட்டி மன்றங்கள் என்பன பல்கிப் பெருகின. மரபுக் கவிதைகள் தமிழ் எழுச்சிக் கவிதைகளாகப் பரிணமித்தன. புதுக்கவிதைகள் படிமம், குறியீடு மற்றும் சமூக உணர்வுகளை வடித்துக்காட்டின. பேரகராதிகளின் உருவாக்கம் ஆய்வுக்குப் பெருந்துணையாக அமைந்தது.

மேலைநாட்டுத் திறனாய்வுக் கலை தமிழில் தொடங்கப் பெற்று ஆக்கப்பூர்வமான ஆய்வுக்கு வித்திட்டது. குழந்தை இலக்கியம் எனும் தனி இலக்கிய வகை முழுத்தோற்றம் பெற்றதும் இக்காலக் கட்டத்தில்தான் எனில் மிகையாகாது. மாணவர்களுக்கான அறிவியல் தமிழ்ப் பாடநூல்களும் பிற கல்விக்கான நூல்களும் வினாவிடைப் பாங்கிலான வடிவங்களும் தோன்றித் தமிழ்க் கல்வியில் எழுச்சியை ஏற்படுத்தின. சமுதாய இலக்கிய வடிவங்களின் பெருக்கத்திற்கு இதழ்களும் பத்திரிகைகளும் பெருந்துணையாற்றியதன் விளைவாகத் தமிழில் பயணக் கட்டுரைகள், கடிதங்கள், துணுக்குகள் பெருகின. ஊடகங்களில் கணினியின் பயன்பாடும் பெருகிற்று.

இவ்வாறான உலகத் தமிழ்இலக்கிய வகைகளைப் பன்னாட்டு அறிஞர்கள் ஆய்ந்து, தொகுத்து இத்தொகுதியில் வழங்கியுள்ளனர். இம்மகத்தான பணியில் ஈடுபட்ட இத்தமிழறிஞர்களைப் பாராட்டுவதில் பெருமகிழ்ச்சியடைகிறேன். இந்நூலுருவாக்கத்தை முனைப்புடன் செய்த இதன் பதிப்பாசிரியர்களைப் பாராட்டு கின்றேன். இந்நூல் உருவாவதற்கு ஒருங்கிணைப்பாளராக இருந்து ஊக்கம் அளித்த தமிழ் வளர்ச்சி **இயக்குநர் முனைவர் ம. இராசேந்திரன்** அவர்களுக்கும் இதில் கட்டுரைகளை எழுதியுள்ள பேராசிரியர்களுக்கும், துணை நின்ற வல்லுநர்களுக்கும் நிறுவனத்தின் சார்பில் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும், ஊக்கமும் தந்து வருகின்ற நிறுவனத் தலைவர் **மாண்புமிகு கல்வி (ம) வணிகவரித் துறை அமைச்சர் திருமிகு சி.வி. சண்முகம்** அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி பண்பாடு மற்றும் அறநிலையத்துறைச் செயலாளர் திருமிகு **பு.ஏ. இராமையா இ.ஆ.ப.** அவர்களுக்கும், சிறப்புச் செயலாளர் **திருமிகு தா. சந்திரசேகரன் இ.ஆ.ப.** அவர்களுக்கும் என் நன்றியறிதலைப் புலப்படுத்திக் கொள்கிறேன்.

இந்நூலுக்கு ஒளிஅச்சுக்கோப்புச் செய்த நிறுவனக் கணிப்பொறியாளர் திருமதி ந. லட்சுமிக்கும் அழகுற அச்சிட்டுத்தந்த யுனைடெட் பைண்ட் கிராபிக்ஸ் அச்சகத்தார்க்கும் என் பாராட்டுகள்.

சென்னை
*27-07-2005*

**இயக்குநர்**

# பொது முன்னுரை

தமிழ்ப் பயில்வின் இன்றைய உலகளாவிய நிலை, தமிழின் வளர்ச்சியிலும் பரப்பலிலும் ஈடுபாடு கொண்டுள்ள அரசு நிறுவனங்கள் மீதும், தமிழியல் அறிஞர்கள் மீதும் ஒரு பெரும் பொறுப்பைச் சுமத்துகின்றது.

உலகளாவிய நிலையில் பல்வேறு நாடுகளில், தம் மொழித் தொடர்பும், பண்பாட்டு அடையாளமும் அறாது வாழும் தமிழ் ஆர்வலர்கள், தமிழ் வழிப் படிப்போர், நமது பண்பாட்டின் ஆணிவேரான இலக்கியப் பாரம்பரியத்தைத் தமது மொழியிலேயே வாசித்து அறிந்து கொள்வதற்கான வாய்ப்பை வழங்குவது தமிழ், தமிழியல் வளர்ச்சிக்கான நிறுவனங்களின் கடமையாகிறது.

இத்துறையில் தமிழில், இப்பொழுதுள்ள பெரும்பாலான ஆக்கங்கள், இடைநிலை மாணவத் தேவைகளையும் ஆய்வுத் தேவைகளையும் மனங்கொண்டு எழுதப்பட்டுள்ளனவாக அமைந்துள்ளன. தமிழிலக்கிய வளர்ச்சியினைத் தமிழர் உணர்வுமுறையினதும் சிந்தனைப் போராட்டங்களினதும் ஒட்டுமொத்தமான வெளிப்பாடாக அவை அமையவில்லை.

தமிழ்நாட்டிலும், தமிழ் பயிலும் நாடுகளிலும் தமிழர் வாழும் நாடுகளிலும் வாழும் தமிழ் நிலை ஆர்வலர்களின் இத்தேவையை நிறைவேற்றும் நோக்குடன் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், தமிழக அரசின் தமிழ் வளர்ச்சித் துறையின் ஆதரவுடனும், வழிகாட்டலுடனும் இதற்கான செயல்திட்டம் ஒன்றை மேற்கொண்டது.

உலகில் தமிழிலக்கியம் தோன்றும் இடங்களிலெல்லாம் காணப்படும் இலக்கிய வளர்ச்சியை, ஒரு பதிகை வட்டத்துக்குள்ளே கொண்டு வந்து, தமிழ் மக்கள் சகலரினதும் ஒட்டுமொத்தமான இலக்கிய வெளிப்பாட்டின் தொகுதியாக அதனை ஒருங்கமைத்து வெளியிடுவதெனத் தீர்மானிக்கப்பட்டது.

இதன் காரணமாகத் தமிழகத்தில் மாத்திரமல்லாமல், இந்தியாவின் பிற மாநிலங்களிலிருந்தும் தமிழ்க் கல்வி பயிலும் நாடுகளான இலங்கை, மலேசியா, சிங்கப்பூரிலும் இன்று தமிழன்

புலம்பெயர்ந்து வாழும் நாடுகளிலும் தமிழிலக்கிய வெளிப்பாடு நடந்தேறியுள்ள முறைமையினை ஒழுங்குபடுத்தித் தொகுதிப் படுத்துவதற்கென முதலில் ஒரு பதிப்பாசிரியர் குழு நியமிக்கப் பெற்றது.

அக்குழு தமிழிலக்கிய வரலாற்றை எவ்வாறு ஒருங்கமைத்துக் கொள்வது என்பது பற்றியும், அதற்கான கால வகுப்புப் பற்றியும், ஒவ்வொரு காலப்பிரிவிலும் எவ்வெப்பெயர்கள் எவ்வாறு எடுத்து நோக்கப்படல் வேண்டுமென்பது பற்றியும், ஒவ்வொரு காலப்பிரிவுக்கும் யார் யார் பொறுப்பாகவிருத்தல் வேண்டும் என்பது பற்றியும், ஒவ்வொரு காலப் பிரிவுகளுள்ளும் வரும் தலைப்புகள் ஒவ்வொன்றையும் யார், யார் எழுதவேண்டும் என்பது பற்றியும் தீர்மானித்தது.

இதன்படிக்குக் கால வகுப்பும், பொறுப்பும் பின்வருமாறு ஒழுங்கமைக்கப்பட்டது.

காலப்பிரிவு பொறுப்பாசிரியர்

தொடக்கம் முதல் கி.பி.5ஆம் நூற்றாண்டு வரை
- முனைவர் தமிழண்ணல்

கி.பி.6 முதல் கி.பி.9ஆம் நூற்றாண்டு வரை
- முனைவர் சோ.ந. கந்தசாமி

கி.பி.10 முதல் கி.பி.13ஆம் நூற்றாண்டு வரை
- முனைவர் அ.அ. மணவாளன்

கி.பி.14 முதல் கி.பி.16ஆம் நூற்றாண்டு வரை
- முனைவர் இ. சுந்தரமூர்த்தி

கி.பி.17 முதல் கி.பி.1850 வரை
- முனைவர் இரா. இளவரசு

கி.பி.1851 முதல் கி.பி.2000 வரை
- முனைவர் ச. சிவகாமி

இலங்கை, மலேசியா, சிங்கப்பூர் இலக்கிய வளர்ச்சிகளைத் தொகுப்பித்து வழங்கும் பொறுப்பு பேராசிரியர் கா. சிவத்தம்பிக்கு ஒப்படைக்கப்பெற்றது.

திட்டப்பணிப் பொறுப்பாளராக முனைவர் ச. சிவகாமி நியமிக்கப்பெற்றார்.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவன மேனாள் இயக்குநர் முனைவர் ச.சு. இராமர் இளங்கோவும் தமிழக அரசின், தமிழ்

வளர்ச்சித் துறை இயக்குநர் முனைவர் ம. இராசேந்திரனும் திட்ட ஒருங்கிணைப்பாளராக நியமிக்கப்பெற்றனர்.

பதிப்பாசிரியர்களாக

முனைவர் தமிழண்ணல்

முனைவர் கா. சிவத்தம்பி

முனைவர் சோ.ந. கந்தசாமி

முனைவர் இ. சுந்தரமூர்த்தி

முனைவர் அ.அ. மணவாளன்

முனைவர் இரா. இளவரசு

ஆகியோர் நியமிக்கப்பெற்றனர்.

27.2.2000 முதல் மூன்று நாட்கள் 29.2.2000 வரை இப்பணிக்கான ஒருங்குசேரல் ஒழுங்கு செய்யப்பெற்றது. தமிழகத்திலும், இலங்கை, சிங்கப்பூர், மலேசியாவைச் சார்ந்த பல்கலைக்கழகங்களிலிருந்தும் புலமையாளர்கள் வரவழைக்கப் பெற்று, எழுதுமுறை பற்றிய பல்வேறு விடயங்கள் நுண்ணிதாக ஆராயப்பெற்றன. பேராசிரியர் தமிழண்ணல் ஒருங்கு சேர்கையை வழி நடத்தினார். அதன் இறுதியில் எழுது பணியைத் தொடங்கி ஒருங்கிணைப்பதற்கானப் பொறுப்பு பொறுப்பாளர்களுக்கு வழங்கப் பெற்றது.

அந்நிலையில், எழுதப்பெறும் இலக்கிய வரலாறு ஒரு தொகுதிக்குள் அடங்குவதாயின் நன்றாக அமையும் என்ற கருத்து ஏற்கப்பட்டிருந்தது.

பின்னர், எழுத்துப்பணி தொடங்கியதும், ஒவ்வொரு காலப் பிரிவினதும் முழுமையான தமிழ் உயிர்ப்பினையும், அவ்வப் பிரிவுகள் பற்றிய ஒட்டுமொத்தமான பார்வையையும் கொண்டுவர வேண்டுமென்பது பதிப்பாசிரியர் குழுநிலையிலே ஏற்றுக் கொள்ளப்பட்டது. இதன் காரணமாக முன்னர்க் கருத்திற் கொண்டிருந்த அளவிறுக்கத்தைத் தளர்த்துவதென்றும் முடிவு செய்யப்பெற்றது.

இந்த அடிப்படையில் பணி தொடரப் பெற்று, இப்பொழுது இறுதி நிலையை அடைந்துள்ளது.

இந்நிலையில் ஒவ்வொரு காலப்பகுதியும் ஏறத்தாழ 250-300 பக்கங்களுக்கான தரவுகளையும் விளக்கங்களையும் கொண்டிருப்பது தெரிந்தது. தமிழகத்தின் ஆறு காலப் பிரிவுகளுக்கும், இலங்கை, மலேசியா, சிங்கப்பூரின் இலக்கிய வரலாற்றுப் பதிவுக்கும்,

இந்நிலையில் 1500-1700 பக்கங்கள் தேவைப்படும் என்பது புலனாயிற்று.

எழுதப்படுபவை மேலோட்டமான சுருக்கங்களாக அமைந்துவிடக் கூடாது என்பதற்காகவும், வழங்கப்படும் வரலாறு தமிழ்ப் பாரம்பரியத்தின் ஓட்டத்தினை உணர்த்துவதாக அமையவேண்டும் என்பதற்காகவும், நூல் முழுமையையும், ஒரேயொரு தொகுதியாக வெளியிடுவதன் பொருத்தப்பாடு பற்றி மிகவும் விரிவாக நோக்கப்பெற்றது. ஏறத்தாழ 1500 பக்கங்கள் கொண்ட ஒரே தொகுதியாக நூலை அமைக்கும்பொழுது, அதன் அமைப்பும், தன்மையும் அதனைக் கலைக்களஞ்சியப் பாங்குக்குள்ளாக்கி, முதனிலை நோக்கமான அறிமுக உந்துதல் ஓரங்கட்டப்பட்டு விடுமோ எனும் அச்சமும் தெரிவிக்கப்பட்டது.

இப்பின்புலத்தில் உன்னிப்பான, சீர்தூக்கு நோக்கினிறுதியில், எழுதப் பெற்றுள்ள முழுவதையும் ஒரு பெரும் நூலாக வெளியிட்டு அந்நூலின் பெருக்கம் தமிழார்வலர்களைப் பின் தள்ள இடமளிக்காது, இவ்வெளியீட்டை ஒரு தொடராகக் கொண்டு ஆறு தொகுதிகளாக வழங்குவது, ஆக்கியோர் புலமைப் பணிக்கும், வாசகனுக்கும் ஒரு சேர மதிப்பளிப்பதாக அமையுமெனக் கருதியும், நூல் வெளியீட்டின் பொருளியல் சிக்கனத்திற்கு உதவுவதாக இருக்குமெனக் கருதியும், இத்தொடரைப் பின்வரும் தொகுதிகளாக வெளியிடுவது இப்பொழுதுள்ள சூழலிற் பொருத்தமுடைத்தாக இருக்குமெனப் பதிப்பாசிரியர் குழு, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்துக்குப் பரிந்துரை செய்தது.

தொகுதி 1 - தொடக்கம் முதல் கி.பி.500 வரை

தொகுதி 2 - கி.பி.501 முதல் கி.பி.900 வரை

தொகுதி 3 - கி.பி.901 முதல் கி.பி.1300 வரை

தொகுதி 4 - கி.பி.1301 முதல் கி.பி.1600 வரை

தொகுதி 5 - கி.பி.1601 முதல் கி.பி.1850 வரை

தொகுதி 6 - கி.பி.1851 முதல் கி.பி.2000 வரை

(அவ்வவ் காலப்பகுதியுள் இலங்கை, மலேசியா, சிங்கப்பூர் தமிழிலக்கியங்களும் அடங்கும்)

ஒவ்வொரு காலப்பிரிவுக்குமுரிய எழுத்துருவின் உள்ளடக்கத்துக்கும் அமைப்பிற்கும் அவ்வப்பொறுப்பாசிரியரே பொறுப்பாவர்.

**கா. சிவத்தம்பி**

# வாயில்

உலகத் தமிழிலக்கிய வரலாற்றின் நிறைவுப் பகுதியான (தொகுதி-6, 1851-2000) இந்நூல், இக்காலத் தமிழ் வளர்ச்சியைச் சிறப்பித்துரைக்கிறது. தமிழிலக்கிய வரலாற்றில் புதியன புகுந்து, தமிழை வளப்படுத்திய காலம்; படைப்பாளர், ஆய்வாளர், ஆர்வலர் எனப் பலரும் தமிழ் வளர்க்கத் துணிந்த காலம்; கல்விப்பரப்பும் கணினி கண்டு பிடிப்பும் தமிழின் எல்லைகளை விரித்த காலம்; உலக அரங்கில் தமிழின் தனிப்பெருமை உணரப்பட்ட காலம் எனப் பல பெருமைகளையுடையதாக இப்பகுதி விளங்குகிறது. தமிழகம், இலங்கை, மலேசியா, சிங்கப்பூர் எனத் தாயகத்திலும் அண்டை நாடுகளிலும் மலர்ந்துள்ள தமிழ்ப் படைப்பும், ஆய்வும் தமிழின் பன்முக எழுச்சியை, வளர்ச்சியை, இன்னும் மேற்செயற்பட வேண்டிய முறைமைகளைக் காட்டுகின்றன. உலகளாவிய நிலையில் தமிழின் வரலாற்றை உணர்த்தும் பகுதியாக இது பெருமை பெற்றுள்ளது.

அந்தந்த நாட்டுத் தமிழறிஞரின் உழைப்பில் உருவான கட்டுரைகளின் தொகுப்பாக இந்நூல் அமைந்துள்ளது. இவற்றைப் படிக்கும் பொழுது தமிழ் இலக்கிய வரலாறானது பல துறைகளிலும் பெற்றுள்ள விரைந்த வளர்ச்சியினையும், அவற்றிற்கான சூழல்களையும் தூண்டல்களையும், ஏறியுள்ள சிகரங்களையும், தொடவேண்டிய கொடுமுடிகளையும் அறியலாம். தமிழ்மொழியும், படைப்பும் வளர்ந்திருக்கின்றன; மேலும் வளர்வதற்குரிய அறிகுறியும் சூழலும் உள்ளன; காலத்திற்குத்தகத் தன்னை உருவாக்கிக் கொண்டு என்றும் உயிர்ப்புடன் திகழும் தன்மையது தமிழ் என்பனவற்றை இத்தொகுதி நன்கு உணர்த்துகிறது. அண்டை நாட்டினரின் பழகு தமிழ் நடையினையும் அவர்தம் கட்டுரைகளில் கண்டு மகிழலாம்.

தமிழர் வாழும் அண்டை நாடுகளில் தமிழின் வளர்ச்சியைக் கண்டறியும் நோக்கில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் 'அயலகத் தமிழ்க்கலை இலக்கியம் - சமகாலச் செல்நெறிகள்' எனும் கருத்தரங்கை 22, 23, 24, 25-4-1999 ஆகிய நான்கு நாட்கள் நடத்தியது. அதன் நிறைவில் அதில் பங்கேற்ற அறிஞர் பெருமக்களால் உலகளாவிய நிலையில் 'உலகத் தமிழிலக்கிய வரலாறு' உருவாக்கப்பட வேண்டும் என்ற கருத்து எழுந்தது.

இவ்வெண்ணம் செயல்பட தமிழக அரசு நிதியுதவியளிக்க முன் வந்தது. உலகத் தமிழாராய்ச்சி நிறுவனச் செயற்பாட்டின் விளைவாக இத்தொகுதி மலர்ந்துள்ளது.

இவ்வெற்றிக்கு வித்திட்டுத் துணைநின்ற, மேனாள் தமிழ் ஆட்சிமொழி மற்றும் இந்து சமய அறநிலையத்துறை அமைச்சர், அமரர், மாண்புமிகு முனைவர் தமிழ்க்குடிமகன் அவர்கள்; தமிழக அரசின் இத்திட்டப்பணிக்குப் பொறுப்பாளராக என்னை நியமித்துத் தேவையான உதவிகளை அளித்த நிறுவன மேனாள் இயக்குநர் முனைவர் ச.சு. இராமர் இளங்கோ அவர்கள்; இவ் ஆறாம் தொகுதி எழுத்துருவிலும் பங்கேற்கச் செய்த தமிழ் வளர்ச்சித் துறை இயக்குநர் மா. இராசேந்திரன் அவர்கள் மற்றும் முனைவர் தமிழண்ணல் முதலான பதிப்புக்குழுவினர்; தமிழகத் தமிழ்ப்பகுதி வரைவிற்குத் துணை நின்று பல கட்டுரைகள் வழங்கிய பச்சையப்பன் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் முனைவர் இராம. குருநாதன் அவர்கள்; சிறிதுகாலம் துணைசெய்து பின் தம் உடல்நலக் குறைபாட்டால் விலகிக்கொண்ட பச்சையப்பன் கல்லூரித் தமிழ்ப்பேராசிரியர் மா.ரா. அரசு அவர்கள்; எனது எழுத்துருவிற்குத் தேவையான அறிவுரைகளை வழங்கிய நிறுவனப் பேராசிரியர் முனைவர் அன்னிதாமசு அவர்கள்; தேவையான நூல்களைத் தந்துதவிய நிறுவன நூலகர் திருமதி. இரா. பார்வதி அவர்கள் ஆகிய அனைவருக்கும் இந்நூலின் பின்புலத்தாராய் நின்று வழி நடத்தியமைக்கு என் நன்றியைக் காணிக்கையாக்குகிறேன்.

இந் நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் தந்து வருகின்ற அழகியதொரு வாழ்த்துரை வழங்கிச் சிறப்பித்துள்ள நிறுவனத் தலைவர் மாண்புமிகு கல்வி மற்றும் வணிகவரித் துறை அமைச்சர் திருமிகு சி.வி.சண்முகம் அவர்களுக்கும், நூலை வெளியிடுவதில் முனைந்து செயல்பட்ட நிறுவன இயக்குநர் முனைவர் சா. கிருட்டினமூர்த்தி அவர்களுக்கும், என் நன்றியறிதலைப் புலப்படுத்திக் கொள்கிறேன்.

மெய்ப்புத் திருத்தியுதவிய ஆய்வு மாணாக்கர் திருமதி. அ. வனிதா, செல்வி. ரா. ராஜேஸ்வரி ஆகியோருக்கும், நூற்பணியில் பங்கேற்று செவ்வையாக நிறைவேற்றித் தந்துள்ள நிறுவன கணினிப் பணியாளர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ச. சிவகாமி

# கட்டுரையாளர்

## தமிழகம்

முனைவர் இராம. குருநாதன்
பேரா. (ஓய்வு), தமிழ்த்துறை
பச்சையப்பன் கல்லூரி, சென்னை.

முனைவர் ச. சிவகாமி
இணைப் பேராசிரியர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை - 600 113.

## இலங்கை

முனைவர் அம்மன்கிளி முருகதாஸ்
மொழியியல் துறை
கிழக்குப் பல்கலைக்கழகம்

முனைவர் கா. சிவத்தம்பி
தமிழ்ப் பேராசிரியர் (ஓய்வு)
யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம்

முனைவர் நா. சுப்பிரமணியம்
தமிழ்த்துறை
யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம்

முனைவர் செல்வரஞ்சிதம் சிவசுப்பிரமணியம்
தமிழ்த்துறை
யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம்

முனைவர் எம்.ஏ. நுஃமான்
தமிழ்த்துறை
யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம்

முனைவர் துரை. மனோகரன்
தமிழ்த்துறை
யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம்

முனைவர் செ. யோகராசா
கிழக்குப் பல்கலைக்கழகம்
மட்டக்களப்பு

முனைவர் ரமீஸ்
தமிழ்த்துறை
யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம்

## மலேசியா

முனைவர் கிருஷ்ணன்மணியம்
இந்திய ஆய்வியல் துறை
மலாயாப் பல்கலைக்கழகம்

முனைவர் எஸ். குமரன்
இந்திய ஆய்வியல் துறை
மலாயாப் பல்கலைக்கழகம்

முனைவர் வி. சபாபதி
இந்திய ஆய்வியல் துறை
மலாயாப் பல்கலைக்கழகம்

## சிங்கப்பூர்

முனைவர் சுப. திண்ணப்பன்
நன்யாங் தொழில்நுட்பப் பல்கலைக்கழகம்

முனைவர் ஆ.ரா. சிவகுமாரன்
தேசியக் கல்வி நிறுவனம்
நன்யாங் தொழில்நுட்பப் பல்கலைக்கழகம்

# உள்ளே...

# முன்னுரை

## தமிழகம்

**ச. சிவகாமி**

தமிழிலக்கிய வரலாற்றின் புதிய பொற்காலம்; புத்தெழுச்சிக் காலம்; மறுமலர்ச்சிக் காலம்; அறிவியல் காலம் எனப் பலவாறாகப் புகழப்படும் பெருமைக்குரியது இக்காலம். எனினும் பிற இந்திய, உலக மொழிகளை நோக்க இன்னும் வளம் பெற வேண்டும் என்பதும் பொதுவான எண்ணம். ஒருபுறம் வளர்ச்சி அமைய மறுபுறம் எழுச்சி தேவை எனும் முரண்நிலை இப்பகுதியின் குறிப்பிடத்தக்க கூறாகும். கற்றோர் அவையில் முடங்கியிருந்த தமிழ் பொதுமக்கள் அவையில் எழுச்சியுற்றது; செய்யுள் வடிவச் சிறப்பை உரைநடை பெற்றது; இலக்கிய வகைமைகள் இரண்டனுள்ளும் பெருகின; இலக்கியத் தமிழ் மட்டுமின்றி அறிவியல், கலை எனப் பல துறைகளிலுமாக ஆளுமை விரிந்தது; அரசு, தனியார், நிறுவனங்கள், இயக்கங்கள் எனப் புரவலர் எண்ணிக்கை மிகுந்தது; பழமைக்குப் பாதுகாப்பும் புதுமைக்கு வரவேற்பும் அளித்தது. இலக்கணக் கட்டுக்கோப்பு நெகிழ்ந்து படைப்பாளர் ஆளுமை மேலோங்கியது; சமயங்களை விட இயக்கங்கள் முன்நின்றன; பொருண்மை பல்கியது; புத்துரை கண்டது; திறனாய்வு தழைத்தது; மீளாக்கம் கூடியது; கற்பார் அவை விரிய விரிய படைப்பாளர் எண்ணிக்கையும் பரந்தது; வடமொழி பெற்றிருந்த தாக்கத்தை ஆங்கிலம் தனதாக்கிக் கொண்டது என இக்காலத் தமிழ் பற்றிச் சுருங்க உரைக்கலாம்.

தொடர்ந்த அந்நியராட்சி காரணமாக வீழ்ச்சியுற்றிருந்த தமிழ் மெல்ல கண் விழித்து நோக்கிப் பின் புதுவரவுகளால் புத்துணர்ச்சி பெற்று மீண்டும் வீறு கொண்டது. இதற்கு அரசியல் மற்றும் சமூகப் பின்புலம் முதன்மை காரணமாயிற்று. தமிழகம் இந்தியாவின் ஒருங்கிணைந்த பகுதியாகி ஆங்கிலேயரின் ஆட்சி நன்கு வேரூன்றி நின்ற காலமாக இதன் முன்பகுதி அமைகிறது. விடுதலை வேட்கை தீவிரமடைந்து அந்நியராட்சிக்கு எதிரான போராட்ட காலமாக இடைப்பகுதி நிற்கிறது. இறுதிப் பகுதி மிக அண்மையதாக, விடுதலை பெற்றதன் பின்

அவ்வேட்கை தணிந்து சமுதாயச் சீர்திருத்தம் மீதூற நாட்டுப்பற்று, மொழிப்பற்று மிக்கு அமைகிறது. மக்களிடையே விழிப்புணர்ச்சி தோற்றுவிக்கப்பட்டது. விடுதலைப் போராட்டம், சமுதாய மறுமலர்ச்சி, தமிழ்மொழி வளர்ச்சி என இம்மூன்றும் இணைந்த கலவையாக இக்காலம் பொதுநிலையில் அமைந்துள்ளது. இவற்றின் தாக்கங்கள் பலவிதமாக இலக்கியத்துள் எதிரொலித்தன.

ஐரோப்பியர் வருகை தமிழ்ப் பண்பாட்டிலும் தமிழர் வாழ்வியல் நடைமுறைகளிலும் பெருத்த மாற்றங்களைச் செய்துள்ளது. இந்திய விடுதலைப் போரில் ஈடுபட்ட தேசியவாதிகளால் தமிழ் சமயவேலியைக் கடந்து சமுதாயப் பெருவெளிக்கு வந்தது. இளங்கோவடிகளுக்குப்பின் நடைமுறை அரசியல் பற்றிய இலக்கியங்கள் இக்காலத்தில் தான் வீறு கொண்டெழுந்தன. தண்டபாணி சுவாமிகளின் ஆங்கிலியர் அந்தாதி இதற்கு உயிர்ப்பளித்தது. இந்திய விடுதலைப் போர் வரலாற்றிலே 1906 முதல் 1920 வரையுள்ள பதினைந்து ஆண்டு காலத்தைத் 'திலகர் சகாப்தம்' என அழைக்கலாம். அந்தக் காலத்தில் தான் நாட்டுப்பற்றும் மொழிப்பற்றும் ஒன்று கலந்தன. இன்னொரு வகையில் சொல்வதானால் தமிழகத்திலே தேசியமும் தமிழும் இரண்டறக் கலந்தன. தமிழ்மொழி விடுதலை வீரர்களின் கேடயமானது. பாரத தேசத்தையும், பாரத சமுதாயத்தையும் ஒருங்கிணைத்து வாழ்த்துகின்ற, வருணிக்கின்ற முதற்கவி பாரதியாராகும். இவர் 1906 பிப்ரவரி இதழில், 'எமது தாய்நாடாகிய பாரதாம்பிகையின் பெருமையை வருணித்து ஆங்கிலத்திலும் தமிழிலும் பல்வேறு காலத்துப் பல்வேறு புலவர்களால் பாடப்பெற்ற செய்யுள் மணிகளை ஒரு மாலையாகப் புனைந்து பதிப்பிக்கக் கருதியிருக்கின்றேனாதலின் பண்டைத் தமிழ் நூல்களில் பாரத நாடு முழுதினையும் ஒருங்கே புகழ்ந்து கூறப்பட்டிருக்கும் பாடல்களை அறிஞர் தெரிந்தனுப்பு வார்களாயின் அவர் மாட்டுமிக்க கடப்பாடுடையவனாவேன்........ தற்காலத்தே தமிழ்ப் புலமையிற் சான்று விளங்கும் பெருமக்கள் புதியனவாகத் தேச பக்திப் பாக்கள் புனைந்தனுப்புவீராயின் அவையும் நன்றியுடன் ஏற்றுக்கொள்ளப்படும்' என்று வேண்டுகோள் விடுத்திருப்பது (பெ. தூரன், பாரதி தமிழ், ப.18) சுட்டத்தக்கது. போராட்ட காலத்தில் சட்டத்தை மீறி ஊர்வலம் சென்ற விடுதலை வீரர்கள் 'அச்சமில்லை, அச்சமில்லை அச்சமென்பதில்லையே' என்ற பாரதி பாடலைப் பாடி அதற்கு உயிரூட்டினர்.

1930 இல் உப்பு சத்தியாக்கிரகம் தோன்றிய காலத்தில் நாமக்கல்லார் பாடிய, 'கத்தியின்றி ரத்தமின்றி' என்ற பாடல் விடுதலை வீரர் பாசறையில் மிக்க மதிப்பு பெற்றிருந்தது...... சிறைச் சாலைகளில் அரசியல் கைதிகள் முன்னிரவுகளில் யாரோ பாடிய 'சிறையில் புகுந்த மனமே' என்ற பாடலைப் பாடித் தமக்கு ஆறுதல் தேடிக் கொள்வர். சிலர் 'போலீஸ் புலிக் கூட்டம் - நம் மேல் போட்டு வருகுது பார் கண்ணோட்டம்' என்று அந்நாளில் தேசபக்தர்கள் போலீசாரிடம் பட்ட துன்பங்களை வருணிக்கும் பாடலைப் பாடி ஆறுதலடைவர். விடுதலை உணர்வை வெறியாகவே வளர்த்துக் கொண்ட தேசபக்திக் கவிஞர்கள் (மதுரை பாஸ்கரதாஸ் போன்றோர்) எழுதிய பாடல்களிலே காந்தியடிகள் பற்றியவையே அதிகம். தேசியக்கவி ராஜா சண்முகதாஸ், கவி ஆறுமுகனார், லட்சுமணதாஸ், மதுரை பாஸ்கரதாஸ், சுந்தர வாத்தியார் போன்றோர் தம் பாடல்களால் நாடகத்துறைக்கு வாழ்வளித்துத் தேசப்பற்றையும், விடுதலை வேட்கையையும் வளர்த்தனர் (ம.பொ. சிவஞானம், விடுதலைப் போரில் தமிழ் வளர்ந்த வரலாறு, இன்ப நிலையம், சென்னை, 1970).

காந்தியடிகளின் தலைமை பேராயத்திற்கு வாய்த்த காலத்தில் உரிமைக் கிளர்ச்சிகள் பல கிளைத்தன. அந்நியர் ஆதிக்கத்திற்கு எதிராகப் பேராயம் செயல்பட்ட அதே நேரத்தில் இந்தியர்களைக் கட்டுப்பாடு, அறவழிப் போராட்டம், சமூகச் சீர்திருத்தம், சுதேசி நோக்கம் போன்ற நடைமுறைகளைக் கையாளும் வகையில் அணிதிரட்ட காந்தியடிகள் முயன்றார். அதனால் தேசிய இயக்கம் இரு குணாம்சங்களைக் கொள்ளத் தொடங்கியது. ஒன்று மக்களைத் திரட்டும் அகப் போராட்டம். மற்றொன்று அந்நியருக்கு எதிராகப் புறப் போராட்டம். மதுவிலக்கு, தீண்டாமை, இந்து முஸ்லீம் ஒற்றுமை போன்றவை அகப் போராட்டச் சிக்கல்களாகவும் ஒத்துழையாமை, சட்ட மறுப்பு, சத்தியாக்கிரகம் போன்றவை புறப்போராட்டச் சிக்கல் களாகவும் எழுந்தன. இவ்வகப்புறச் சிக்கல்களைத் தன்முன் கொண்டு பேராயத்தின் அனைத்துப்போராட்டங்களிலும் தமிழ்க் கவிதைகள் வெளிப்பட்டன.

விடுதலை இயக்கங்களில் பங்கு கொள்ளுமாறு சமுதாயத்தின் அனைத்து மக்களும் அணிதிரட்டப்பெற்றனர். அவ்வாறு கிளர்ந்து எழுந்த தொழிலாளர், விவசாயிகள் போன்ற

பாதிக்கப்பட்ட பிரிவினர் தங்கள் சுய முன்னேற்றத்தை நாடினர். சோவியத் ரஷ்யாவின் தோற்றம் அவர்களுக்குப் புத்துணர்வைக் காட்டியது. இப்புதிய சூழலினால் பொதுவுடைமை இயக்கமும் அதன் கோட்பாடுகளும் உருவாகித் தமிழ்க் கவிதைகளிலும் ஏற்றம் பெற்றன. தமிழக அரசியலில் இது மக்களிடையே பெருஞ் செல்வாக்கினைப் பெற இயலாவிடினும் தமிழ்ப்படைப்புகளில் தன்னாதிக்கத்தை நன்கு நிலைநாட்டியுள்ளது குறிப்பிடத் தக்கதாகும்.

சமுதாய நிலையில் பின் தங்கியிருந்த மக்கள் கல்வியறிவில் விழிப்புணர்வு கொண்ட நிலையில் உயர் சாதியினரின் ஆதிக்கத்தை அகற்ற அவாக் கொண்டனர். அவர்களுக்கு எதிராக மாற்று இயக்கங்களைத் தோற்றுவித்தனர். சுயமரியாதை இயக்கம், சமய மறுப்பு இயக்கம், பார்ப்பனர் ஆதிக்க எதிர்ப்பு இயக்கம் போன்றவற்றைத் தன்னுள் கொண்ட திராவிட தேசியம் தோன்றியது. 'தனித் திராவிட நாடும்' பிரிவினைக் கோரிக்கையும் எழுந்தது (பி. யோகீசுவரன், தமிழ்க் கவிதைகளில் சமுதாயச் சிக்கல்கள், நீலா பதிப்பகம், சென்னை, 1985, பக்.252-253).

1912இல் 'சென்னை ஒற்றுமைக் கழகம்' எனும் அமைப்பைத் தோற்றுவித்த சி. நடேச முதலியார், பார்ப்பனர் அல்லாத மாணவர் நன்மைக்காகத் 'திராவிட மாணவர் இல்லம்', 'திராவிடர் சங்கம்' ஆகியவற்றையும் தொடங்கினார். 1917இல் பார்ப்பனர் அல்லாதோர் 'சென்னை மாகாண சங்கத்தை' நிறுவினர். 1927இல் வருணாசிரம தருமம் தொடர்பாகப் பெரியாருக்கும் காந்தியடிகளுக்கும் ஏற்பட்ட முரண்பாடு தீவிரமடைய சுயமரியாதை இயக்கம் வலுப்பெற்றது. 1937இல் இராஜாஜி கொண்டு வந்த கட்டாய இந்தித் திணிப்பும் இதனை வெகுவாக வளர்த்தது. தமிழக வரலாற்றின் திருப்புமுனை எனக் கருதப்படும் மொழிப் போர் நிகழ்வுக்குக் கவிதையே மிகச் சிறந்த பங்காற்றியுள்ளது. தமிழக அரசியல் வரலாற்றைப் பாதித்துப் புதிய மடைமாற்றம் செய்த மொழிப்போர் பற்றிய வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த செய்திகளைப் பற்றித் தெரிந்து கொள்வதற்குக் கவிதைகளே தகவல் கிடங்குகளாக அமைந்துள்ளன என்பர் (வா.மு.சே. ஆண்டவர், தமிழ்க் கவிதைகளில் சமகால வரலாறு, தமிழ் மணி புத்தகப் பண்ணை, சென்னை, 1998, ப.188). மொழிக் கொள்கையைப் பொறுத்தவரை அரசியல் இயக்கங்களைவிட மொழிப் போர்க் கவிஞர்களுக்குத் தெளிவான கருத்து இருந்தது. பாரதிதாசன் மொழிக் கொள்கையைப் பொறுத்தவரை தெளிவான புரிதல் உடையவராகத் தமிழக வரலாற்றில்

காட்சியளிக்கிறார். மொழிப் போர்க் கவிஞர்களின் சிறப்பு பற்றி மா. இராமலிங்கம், 'தமிழர்களின் நாகரிக வரலாறு, அவர்தம் பெருமை, இன்றைய நிலை, அவர் அடைய வேண்டிய விழிப்பு, ஆற்ற வேண்டிய பணிகள் போன்ற தேசிய உணர்வு கொண்ட பண்புகளை மொழிப் போர்க் கவிஞர்களிடம் காணலாம். திராவிட நாடு, திராவிட தேசியம், தமிழ்ப்பற்று போன்ற பண்புகள் வளர்வதற்கும் கவிஞர்களே அடிப்படையாக அமைந்தனர்' என்கிறார். 'கவிஞர்களாலும் அரசியல் இயக்கங்களாலும் தூண்டி விடப்பட்ட இந்தத் தமிழ்ப் பற்றுதான் தனிநாடு காண எண்ணும் தமிழ்த் தேசியமாகப் பின்னர் விரிவு பெற்றது' எனத் தனிநாயகம் அடிகளார் குறிக்கிறார் (மேற்படி, ப.190).

சுயமரியாதை இயக்கத்தால் தனித்தமிழ்க் கொள்கையாளர் வலுப்பெற்றனர். தமிழிலுள்ள புராணக் காப்பியங்களையும் நாடகங்களையும் திருத்தியும் அவற்றிலுள்ள கருத்துகளை மறுத்தும் வரையப்பட்ட புதிய காவியங்களும் நாடகங்களும் தோன்றின. அவற்றுள் புலவர் குழந்தை எழுதிய இராவண காவியமும், கலைவாணர் என்.எஸ். கிருஷ்ணன் அவர்களால் தயாரிக்கப்பட்ட கிந்தனார் கதாகாலட்சேபமும் இங்குக் குறிப்பிடத்தக்கனவாகும். (ம.பொ.சி. முன்சுட்டியது, ப.289). தேசியவாதிகள் கவிதைத் தமிழுக்குச் செய்த தலையாய பணி என்னவென்றால் எளியநடையில் பாமரரும் பொருளறிந்து ரசிக்கத்தக்க முறையில் கவிதை அமைய வேண்டும் எனப் பேசியதாகும். இதனை அந்நாளைய தமிழ்ப்புலவர் ஏற்க வில்லையென்றாலும் மக்களிடம் தங்களுக்கிருந்த எல்லையற்ற செல்வாக்கைப் பயன்படுத்தித் தேசியவாதிகள் வெற்றி பெற்றனர் (மேற்படி, ப.146).

பத்தொன்பதின் பிற்பாதியில் தமிழக நீதிமன்றங்களில் ஆங்கிலம் புகுந்து தமிழை அடிமைப்படுத்தி அதன் மீது ஆதிக்கம் கொள்ளத் தொடங்கியது. அந்தக் காலத்திலேயே ஆங்கில ஆதிக்கத்தை வேதநாயகர், வ.வே.சு. ஐயர், பரிதிமாற் கலைஞர் முதலானோர் சாடினர். அன்று பூரணலிங்கம் பிள்ளையும் சாஸ்திரியாரும் தமிழ் காக்கும் முயற்சியில் ஈடுபடாமலிருந்தால் பல்கலைக் கழகப் படிப்பிலே தமிழ் மொழிக்கே இடம் இருந்திருக்காது என்பர். மொழி ஆராய்ச்சியில் திருப்பு முனையாகக் கருதப்பட்ட 1856ஆம் ஆண்டு கால்டுவெல் இயற்றிய 'திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்' இந்திய மொழியியல் ஆராய்ச்சியைப் பொறுத்தவரை தனிப்பாதையை வகுத்துத்தந்தது. கில்பர்ட் சிலேட்டர், எமனோ, பர்ரோ போன்ற

அறிஞர்களும் இந்தியப் பண்பாட்டில் திராவிடத்தின் தனித்தன்மையைத் தெளிவு படுத்தினர்.

மறுமலர்ச்சியின் தாக்கம் ஒருபுறமும் உரிமைக் கிளர்ச்சிகளின் எழுச்சி மற்றொரு புறமும் மக்களிடையே பல்வேறு விழிப்புணர்வுகளைத் தூண்டின. அதன் வெளிப்பாடாக சமுதாயத்தில் பேரங்கமாகத் திகழும் சமயத்திலும் பல்வேறு சிக்கல்கள் எழுந்தன. இந்திய மறுமலர்ச்சிச் சூழ்நிலைக்கு ஏற்பவும் பிற சமயங்களின் பொதுப்போக்கிற்கு ஏற்பவும் இந்து சமயத்தைச் சீர்திருத்த வேண்டுமெனச் சமயவாதிகள் கிளர்ந்து எழுந்தனர். வடலூர் இராமலிங்க சுவாமிகள் இதனைத் தமிழகத்தில் தொடங்கி வைத்தார். பாரதியார் பின் தொடர்ந்து வலியுறுத்தினார். இதனால் சிறு தெய்வ வழிபாடு, உருவவழிபாடு, சடங்குகள், நம்பிக்கைகள் போன்றவற்றில் புதிய பார்வைகள் தோன்றின. சுயமரியாதை இயக்கத்தினரின் ஆலய நுழைவு, உரிமை வேண்டல் போன்ற போராட்டங்களால் தாழ்த்தப்பட்ட மக்களிடையே விழிப்புணர்வு வேகமாகப் பரவியது. பாரதிதாசனின் பங்கு இதில் அளப்பரிது. பிரம்ம சமாஜம், தியாசாபிகல் கழகம், இராமகிருஷ்ண மடம், ஆரிய சமாஜம் முதலிய அமைப்புகள் நாடு முழுவதிலும் தோன்றி இந்து சமய மறுமலர்ச்சியை உண்டாக்கின.

கத்தோலிக்கக் குருமாரும் கிறித்தவப் பாதிரிமாரும் இந்து மதத்தைக் கண்டித்து மதமாற்றத்தை நோக்கமாக வைத்துப் பிரச்சாரஞ் செய்தனர். அவரவர் சமயத்தினைப் பரப்புதலின் பொருட்டு ஒருவருக்கொருவரிடையே ஏற்பட்ட போட்டியின் விளைவாகக் கண்டனங்கள் எழுந்தன. ஒருவர் சமயத்திலுள்ள குறைபாடுகளாகத் தாம் கண்டனவற்றை மற்றவர் சுட்டிக் கண்டனங்களாக எழுப்புவதும், அதற்கு மற்றவர் பதில் விடுப்பதாக எதிர்நூல் எழுதுவதும் மறுப்பு தருவதுமாகச் சமயப்பூசல் பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதிவரை தொடர்ந்தது. அவரவர் சமயங்களின் கொள்கைகளையும் சிறப்புகளையும் விளக்குவதற்காகவும் நூல்கள் படைக்கப்பட்டன. சமயப் போராட்டங்கள் நிகழ்ந்த அதே வேளையில் சமயங்களுக்கு ஏற்பட்ட எதிர்ப்பின் விளைவாகச் சமயங்களிடையே ஒருமைபபாடு காணும் முயற்சிகளும் தோன்றின. இடையே அடங்கியிருந்த சமயப் போராட்டமும் அதன் எதிர்மையான சமய ஒருமைப்பாடும் இன்று மீண்டும் ஆதிக்கம் கொண்டு இலக்கியப் படைப்பிற்குக் களனாவதை உணர முடிகிறது.

பரவலான கல்வியினால் சமுதாயச் சூழலும் மாறத் தொடங்கியது. சாதி உயர்வு தாழ்வு, தீண்டாமை போன்ற பழைய மரபுப் போக்கினை எதிர்த்தும் ஆதரித்தும் தீவிரமான பிரச்சாரங்கள் நிகழ்ந்தன. பெண்ணின விடுதலை, முன்னேற்றம் என்பதிலும் மிகுந்த அக்கறை காட்டப்பட்டது. 1829இல் உடன்கட்டை ஏறுவதைத் தடைசெய்யும் சட்டத்தின்பின் 1872இல் குழந்தைத் திருமணமும் தடைசெய்யப்பட்டது. பெண் கல்வி வலியுறுத்தப்பட்டது. 1856இல் விதவை மறுமணச் சட்டம் எழுந்ததும் குறிப்பிடற்பாலது. கலப்பு மணம், காதல் மணம், சுயமரியாதை திருமணம் ஆகியவை எழுச்சியடைந்தன. பலதார மணம் எதிர்ப்பிற்குள்ளானது. மூடப்பழக்கவழக்கங்களும் பெரிதும் இகழப்பட்டன. பொதுவில் சமூக விழிப்புணர்வு, மறுமலர்ச்சி என்பது இக்காலப் பகுதியின் சிறப்புக் கூறாகும். பாரதி தொடங்கிய இம்முயற்சியைப் பாரதிதாசன் முழுமூச்சுடன் தொடர்ந்து தனக்கென ஒரு பரம்பரையையே உருவாக்கினார். கல்கி, வரா., புதுமைப்பித்தன் போன்றோர், உரைநடையிலக்கியங்கள் வழி சமூகப் புத்தெழுச்சிக்கு வித்திட்டனர். இருபதாம் நூற்றாண்டு முடிவடைந்த நிலையிலும் பெரும்பான்மையான சமூகச் சிக்கல்கள் இன்னும் தொடர்வது எண்ணத்தக்கது.

இத்தகு பின்புலங்களுக்கிடையே தமிழ் வளர்ச்சியைத் தூண்டிய காரணிகளாகச் சில அமைகின்றன. அவற்றுள் முதலாவதாகக் கல்வியமைகிறது. ஆங்கிலேயர் ஆட்சியில் மெக்காலே என்பாரின் முயற்சியால் ஆங்கிலக் கல்வி தமிழருக்குக் கிடைத்தது. சென்னை மாநிலத்தில் 1867இல் பல்கலைக் கழகம் நிறுவப்பட்டது. சாதிசமய வேறுபாடின்றி ஆண், பெண் இரு பாலாருக்கும் கல்வி அளிக்கப்பட்டது. பூர்ணலிங்கம் பிள்ளையும், பரிதிமாற் கலைஞரும் மிகவும் முயன்று ஆங்கிலக் கல்வியுடன் தமிழ்க் கல்விக்கும் வாய்ப்பேற்படுத்தினர். இயற்றமிழ் காலத்திற்கேற்ற புதிய போக்கில் வளரத் தொடங்கியது. ஆங்கிலத்தில் வளர்ந்துள்ள புதிய துறைகள் தமிழில் இல்லை என்பதை உணர்ந்த பலர் அக்குறைகளில் ஒன்றையோ சிலவற்றையோ நீக்குதலைத் தங்களின் நோக்கமாகக் கொண்டனர். உரைநடை இலக்கிய வகைகள் பல தமிழில் இவர்களால் தொடங்கப் பெற்று வளர்க்கப்பட்டன. ஆறுமுக நாவலர் சிதம்பரத்திலும் யாழ்ப்பாணத்திலும் தமிழ்க் கல்லூரிகளை நிறுவியதும் சுட்டத்தக்கது. இருபதின் முன்பகுதி வரை ஆசிரியர் மாணாக்கர் என்ற பழைய பரம்பரையும் தொடர்ந்துள்ளது. மீனாட்சி சுந்தரம் பிள்ளை எண்ணற்ற மாணவர்களுக்குத்

தமிழறிவைத் தந்தவர். இருமொழிக் கல்வியால் பழமையின் தொடர்ச்சியும் புதுமையின் வரவும் அமைந்ததுடன் மொழிபெயர்ப்பு, தழுவல் ஆகியனவும் சிறப்புற்றன.

தமிழைப் பயிற்றுமொழியாக்குதலும் நாடு விடுதலை பெறுதற்கு முன்பே செயல்படத் தொடங்கியது. 1946இல் அவினாசிலிங்கம் கல்வி அமைச்சராக இருந்தபொழுது திருச்சியில் ஒரு கல்லூரியில் சில பாடங்களுக்கு மட்டும் தமிழ் பயிற்று மொழி யாக்கப்பட்டது. சேலம் முனிசிபல் கல்லூரியில் இன்டர்மீடியட்டிலும் ஒரு பாடம் மட்டும் தமிழில் பயிற்றுவிக்கப்பட்டது. ஆனால் இம்முயற்சி தொடர்ந்து வெற்றி பெறவில்லை. அடுத்து 1959இல் சி. சுப்பிரமணியம் கல்வியமைச்சரானபோது மீண்டும் தமிழ் பயிற்றுமொழியாக்கப்பட்டது. ஆனால் அப்பொழுதே அதற்கு ஆதரவும் எதிர்ப்பும் தோன்றியதால் முழு அளவில் அதைச் செயற்படுத்தவோ வெற்றி பெறச் செய்யவோ இயலவில்லை. இன்றும் இந்நிலையே தொடர்கிறது. எனினும் தமிழ் பயிற்றுமொழியாகச் சில இடங்களிலும் சில துறைகளிலும் மேற்கொள்ளப்படுவதாலும் முழுமையாகத் தமிழைப் பயிற்றுமொழி ஆக்கியே தீர வேண்டும் என முனைவோரின் ஈடுபாடு மற்றும் தூண்டல்களாலும் தமிழால் எத்துறையிலும் வெற்றி பெறமுடியும் என உணர்த்த முயலும் சிலரின் தன்னார்வத்தாலும் இன்று தமிழ் எல்லா அறிவுத் துறைகளிலும் தன்னை நிலைநாட்டியுள்ளது.

தமிழ் வளர்ச்சியில் கடந்த நூற்றைம்பது ஆண்டுகளாக ஆட்சி செய்த ஆட்சியாளரின் பங்கும் அளப்பரிது. ஆட்சி மாற்றம் நிகழினும் தமிழின் வளர்ச்சியில் தொய்வு இல்லை என்பது பெருமைக்குரிய செய்தியாகும். இவ்வளர்ச்சிக்கு ஆட்சியாளர் பலவிதமான கொள்கைகளுடனும், முறைகளுடனும் துணை நின்றனர்.

விடுதலைக்கு முன்னான ஆங்கில அரசு இருவகைகளில் தமிழிலக்கிய வளர்ச்சிக்கு உதவி புரிந்துள்ளது. ஒன்று அச்சகம் அமைத்துக் கொள்ள இந்தியருக்கு அனுமதி அளித்தது. மற்றொன்று சென்னைக் கல்விச் சங்கம் நிறுவியது. அரசு 1835இல் அச்சக அனுமதியை வழங்கியது. அதுவரையில் பாதிரிமார்களே அச்சகம் அமைத்து நூல் வெளியிடும் உரிமை பெற்றிருந்தனர். பத்தொன்பதாம் நூற்றாண்டில் கிறித்தவ சமய நூல்கள் மிகுதியாக வெளிவர இதுவே முதல் காரணமாகும்.

அச்சக உரிமை பெற்றமை புலவரிடையேயும் பொது மக்களிடையேயும் ஒரு புதிய எழுச்சியைத் தூண்டியது. புலவர் தம் எழுத்துகளை அச்சில் காண விழைந்தனர். எளிதாகக் குறைந்த விலையில் நூல்கள் கைக்கு எட்டிய பொழுது கற்றோரிடையே மட்டுமின்றிப் பொது மக்களிடமும் நூல் வாங்கும் விழைவு எழுந்தது. நாட்டுப்புற இலக்கிய வடிவிலும் மக்களிடையே வழக்கில் வழங்கும் கதைகளாகவும் பல நூல்கள் எழுந்தமை இவ்வுண்மையை உணர்த்தும்.

அச்சகம் அமைத்துக் கொள்ளும் அனுமதி கிடைத்தவுடன் இங்குள்ள பலர் அச்சகங்களைத் தொடங்கினர். பழைய நூல்கள் அனைத்தினையும் அச்சிட்டுப் பாதுகாக்க வேண்டும் என்ற விருப்பில் அவற்றின் ஏட்டுச் சுவடிகள் அனைத்தும் திரட்டப் பட்டன. பலர் இதில் முழுமையாக ஈடுபட்டனர். நூல்களை அச்சிடுங்கால் அவற்றிற்கு உரையும் எழுதினர். உ.வே. சாமிநாதையர், திருமயிலை சண்முகம் பிள்ளை, தாண்டவராய முதலியார், வீராசாமி செட்டியார், கொட்டையூர் சிவக்கொழுந்து தேசிகர், முகவை இராமாநுச கவிராயர் போன்ற பலர் இம்முயற்சியில் ஈடுபட்டனர்.

1812இல் சென்னைக் கல்விச் சங்கம் (The College of Fort St. George) நிறுவப்பட்டது. 1820 முதல் நன்கு செயல்படத் தொடங்கியது. இதன் சார்பாக நூல் நிலையம், அச்சகம், புத்தக விற்பனை நிலையம் என மூன்று அமைந்திருந்தன. சென்னையில் மாவட்ட அதிகாரியாக இருந்தவரும் தமிழ் அறிந்தவருமான எல்லீஸ் துரையும் கர்னல் மக்கன்ஸி துரையும் இச்சங்கத்தை நிறுவிய முதன்மையாளர்களாவர். மாணவருக்கான பாட நூல்களின் தேவை ஏற்பட்டு மொழிபெயர்ப்பு நூல்களும் உரைநடை நூல்களும் இச்சங்கத்தினால் உருவாக்கப்பட்டன. சரபோசி மன்னரின் நூலாராய்ச்சிக் குழுவில் பணியாற்றிப் பின் இச்சங்கத்தில் பணியேற்ற கொட்டையூர் சிவக்கொழுந்து தேசிகரும், தாண்டவராய முதலியாரும் இதில் குறிப்பிடத் தக்கவராவர்.

இதன்பின் 1850இல் சென்னைப் பாடசாலைப் புத்தகச் சங்கமும் (The Madras School Book Society), அரசினர் கீழ்த்திசை சுவடிகள் நூலகமும் (Government Oriental Manuscripts Library) இங்குக் குறிப்பிடத்தக்கன. புத்தகச் சங்கம் பல உரைநடை நூல்களை எழுதி வெளியிட்டதுடன் சிறந்த உரைநடை நூல்களைச் செய்வோர்க்குப் பொருள் உதவி செய்து

அன்பளிப்புகளையும் அளித்தது. இராபின்சன் குருசோ, இந்திய சரித்திரம், உலக சரித்திரம் முதலிய சிறந்த மொழிபெயர்ப்பு நூல்கள் இச்சங்கம் அளித்த அன்பளிப்பு காரணமாக வெளிவந்தவையாகும். ஏட்டுப் பிரதிகளைத் தொகுத்து அச்சிடும் பணியைச் சுவடி நிலையம் மேற்கொண்டது. தமிழிலக்கிய வரலாற்றாராய்ச்சியிலும் சமய நூல் ஆராய்ச்சியிலும் பண்டைய திருவிதாங்கூர் அரசர்கால ஆராய்ச்சியிலும் மிகவும் உழைத்த மனோன்மணீய நாடக வாசிரியர் சுந்தரம் பிள்ளைக்கு 'இராவ் பகதூர்' விருதளித்ததும் நவிலத்தக்கது.

1946ஆம் ஆண்டு பொதுத் தேர்தலில் பதவியேற்ற காங்கிரஸ் அமைச்சரவையில் கல்வி அமைச்சராகப் பொறுப்பேற்ற தி.சு. அவினாசிலிங்கம் செட்டியார் 1946 டிசம்பரில் 'தமிழ் வளர்ச்சிக் கழகத்'தைத் தோற்றுவித்தார். இக்கழகம் தமிழில் வெளியாகும் சிறந்த நூல்களுக்கு ரொக்கப் பரிசும் பரிசுப் பத்திரமும் வழங்கித் தமிழ் எழுத்தாளர்களை ஊக்குவித்தல்; ஆண்டுதோறும் வெவ்வேறு இடங்களில் தமிழ் விழா நடத்துதல்; தமிழ் மொழியில் கலைக்களஞ்சியம் தயாரித்து வெளியிடல் எனும் மூன்று குறிக்கோள்களுடன் செயல்படத் தொடங்கியது. 1947 அக்டோபரில் மாநில, மத்திய அரசு உதவி மற்றும் தனியார் நன்கொடைகளுடன் கலைக்களஞ்சியப் பணி தொடங்கியது. 1954இல் முதல் தொகுதி வெளிவர 1968இல் இறுதித் தொகுதியான பத்தாம் தொகுதி வெளியானது. இப்பணி தெலுங்கு, ஒரியா, கன்னடம் ஆகிய மொழிகளிலும் தொடங்குவதற்கு இது தூண்டுதலாயிற்று என்பதும் குறிப்பிடத்தக்கது. தொடர்ந்து குழந்தைகள் கலைக்களஞ்சியமும் படைக்கப்பட்டது. நாடு விடுதலையடைந்தபின் நடந்த மிகப்பெரிய தமிழ்ப்பணியாகும் இது.

உலகத் தமிழ் மாநாடுகளுக்கு முன்னோடியாகத் தமிழ் வளர்ச்சிக் கழகத்தார் 1948 முதல் 1953 வரை மதுரை, திருவாரூர், கோவை, யாழ்ப்பாணம், சென்னை, டில்லி ஆகிய நகரங்களில் நடத்திய தமிழ்விழாக்கள் அமைந்தன. பதினாயிரக்கணக்கான மக்களைத் திரட்டி, இலக்கியம் மற்றும் பல துறை பற்றிய சொற்பொழிவுகளை நிகழ்த்தியமை, நாடு விடுதலை பெற்றபின் தொடங்கிய புதுமையாகும். சிறந்த நூல்களுக்குப் பரிசில் அளித்தலும் நவிலத்தக்கதே. 1947 சனவரியில் தமிழகத்தில் உள்ள பள்ளிகளில் திருவள்ளுவர் விழாவைக் கொண்டாடுமாறு கல்வி அமைச்சர் அவினாசிலிங்கம் சுற்றறிக்கை அனுப்பித் தமிழகத்தில் அரசு விழாவாக அதனைத் தொடங்கி வைத்தார். இன்றும் அது சிறப்புடன் மேற்கொள்ளப்படுவது சுட்டத்தக்கது. 1949 மார்ச்சு

22இல் தமிழ்மொழிக்காக நாமக்கல் கவிஞர் வெ. இராமலிங்கம் பிள்ளை அரசவைக் கவிஞராக நியமிக்கப்பட்டார். இவரது பதவிக்காலமான ஐந்தாண்டுகளுக்குப் பின் அது நிறுத்தப்பட்டது. எனினும் பின் கண்ணதாசன் அரசவைக் கவிஞராகப் பதவி யேற்றார். 1956 டிசம்பரில் தமிழ் ஆட்சிமொழியாக்கப்பட்டதும் குறிக்கப்பட வேண்டியதாகும்.

1959இல் தமிழ் வளர்ச்சிப் பணியை விரைவுபடுத்தும் நோக்கில், தனித்துச் செயல்படும் அமைப்பாகத் தமிழ் வளர்ச்சி ஆராய்ச்சி மன்றம் நிறுவப்பட்டது. தமிழகக் கல்வெட்டாராய்ச்சி, தமிழக வரலாற்றாராய்ச்சி, நூலக வளர்ச்சி, வாய்மொழியிலக்கிய ஆராய்ச்சி, சுவடிகள் தொகுப்பும் பதிப்பும், அனைத்துத் துறைகளிலும் தமிழில் நூல் வெளியிடுதல் எனும் முதன்மைப் பணிகள் இதன் பொறுப்பாயின. ஆண்டுதோறும் வெளிவரும் பல்துறை சார்ந்த நூல்களுக்குப் பரிசளிக்கும் திட்டமும் இதனால் செயல்படுத்தப்பட்டது. இத்துடன் 'தமிழ் வெளியீட்டுக் கழகம்' ஒன்றும் தோற்றுவிக்கப்பட்டுத் தமிழ் பயிற்றுமொழியாதற்கு வழிவகுக்கும் நூல்களையும், பொது அறிவு நூல்களையும் வெளியிட வழி செய்யப்பட்டது. சிறந்த நூல்களை வெளியிடற்கு அதன் ஆசிரியருக்கு நிதியுதவியும் வழங்கப்பட்டது. அறிவியல் நூல்களையும், பாடநூல்களையும் தமிழில் தருவதற்கு வாய்ப்பாகத் துறைச் சொல்லகராதிகளும் பல உருவாக்கப் பட்டன. 1948இல் 'சென்னை மாகாண நூலகச் சட்டம்' கொணரப்பட்டதால் நூலகங்கள் பெருகின. தமிழில் நூல் வெளியீடும் அதிகரித்தது.

தமிழ் ஆராய்ச்சி மன்றத்தின் பிறிதொரு சிறப்பான பணியாக இயம்பத்தக்கது, 'தமிழ் நூல் விவர அட்டவணை' தயாரித்ததாகும். தமிழ் நாடகம், நாட்டியம் மற்றும் இசைக் கலைகளை வளர்க்க 1954இல் சங்கீத நாடக சங்கம் நிறுவியது. இசை-நாடகம்-கிராமியக் கலைகள் முதலானவற்றில் தலைசிறந்த கலைஞர் களைத் தேர்ந்து அவர்களுக்குப் பரிசும் பாராட்டும் வழங்கப் பட்டன. நலிந்த நிலையில் உள்ள கலைஞர்களுக்கு ஓய்வூதியமும் தரப்பட்டது. இச்சங்கமே பின் தி.மு.க. ஆட்சியில் இயல் இசை நாடக மன்றமாகப் பெயர் மாற்றம் பெற்று தொடர்ந்து தன் பணிகளை ஆற்றித் தமிழ்க்கலைகள் வளர்ச்சிக்கு அரும்பணி ஆற்றிவருகிறது (ம.பொ.சிவஞானம், விடுதலைக்குப்பின் தமிழ் வளர்ந்த வரலாறு, பூங்கொடி பதிப்பகம், 1980).

தொல்பொருள் துறை, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், தமிழ்ப் பல்கலைக் கழகம், அன்னை தெரசா மகளிர் பல்கலைக்

கழகம், பல பல்கலைக் கழகங்களில் வள்ளுவர், பாரதிதாசன் இருக்கைகள், பிற மாநிலங்களில் தமிழ் வளர்ச்சிக்கு உதவி, தமிழ் சாகித்திய அக்காதெமியாக உருவெடுத்துள்ள தமிழ் இலக்கியச் சங்கப்பலகையின் குறள்பீடம், உலகத் தமிழ் இணையப் பல்கலைக் கழகம் போல்வனவும் அரசின் தமிழ்ப்பணிக்கான சான்றுகளாகும்.

பெருங்கவிஞர், அறிஞர்களின் நூல்களை நாட்டுடைமை யாக்கல்; திருவள்ளுவர், பாரதியார், பாரதிதாசன், திரு.வி.க., கி.ஆ.பெ. விசுவநாதம் ஆகியோர் பெயரில் விருது வழங்கல்; தமிழ் மொழிக் காவலர் மற்றும் அகவை முதிர்ந்த தமிழறிஞர்க்கு ஓய்வூதியம் வழங்கல்; சிறந்த நூல், அரியநூல், மொழிபெயர்ப்பு நூல் ஆகியவற்றைத் தேர்ந்து வெளியிட நிதியுதவி அளித்தல்; பிற மாநிலங்களில் (மேற்கு வங்காளம், மகாராட்டிரம்) தமிழ் வளர்ச்சி மையம் தோற்றுவித்தல்; தமிழர் வாழும் இலங்கை, சிங்கப்பூர், மலேசியா, நீயுஸியன், மொரீசியசு ஆகியவற்றிற்குத் தேவையான நூல்களை நன்கொடையாக வழங்குதல் என்பனவும் தமிழைப் பரப்பவும், வளர்க்கவும் துணை செய்யும் அரசு செயற் பாடுகளாகும்.

இங்கு மையஅரசின் சாகித்திய அக்காதெமி தமிழுக்குச் செய்யும் நற்பணிகளான தமிழ்நூல் வெளியிடுதல், தமிழிலும், பிறமொழிகளிலும் என இருநிலையிலுமான மொழி பெயர்ப்புகள் வெளியிடுதல், ஆண்டுதோறும் சிறந்த தமிழ் நூலுக்கும் மொழிபெயர்ப்புக்கும் பரிசளித்தல் என்பனவும் கூறத்தக்கன. மனிதவள மேம்பாட்டுத்துறை, பல்கலைக் கழக மான்யகுழு போன்ற மையஅரசு சார்புடையனவும் தமிழாய்விற்கும் நூல் வெளியீட்டிற்கும் துணை நிற்பது குறிப்பிடத்தக்கது.

அடுத்த நிலையில் தமிழ் வளர்ச்சிக்குப் பெருந்தொண்டாற்றி வருவனவற்றுள் குறிக்கத்தக்கது **இதழ்கள்** ஆகும். புதினம், நாடகம், செய்யுள் எனப் பல இலக்கிய வகைகளுக்குத் தம்முள் இடமளித்துச் சிறப்பளித்த நிலையில் இவை இலக்கியப் பணி புரிந்துள்ளன. புகழ்பெற்ற படைப்புகள் பலவும் முதலில் இதழ்களில் வெளிவந்த பின்பு நூலாக்கம் பெற்றுள்ளமை எண்ணற்பாலது.

ராஜம் ஐயரின் கமலாம்பாள் சரித்திரம், விவேக சிந்தாமணி இதழில் 1893-1895 இல் தொடர்கதையாக வந்து 1895 இல் நூலாக வெளியிடப்பட்டது. தமிழின் முதல் தொடர்கதைப்

புதினம் எனும் சிறப்பினையும் பெற்றது. வீராசாமி செட்டியார் முதலில் தம் கட்டுரைகளை ஒவ்வொன்றாகத் 'தினவர்த்தமானி' என்னும் இதழில் எழுதிப் பின்பே 'விநோதரசமஞ்சரி'யாக நூலுருவம் அளித்தார். கிருஷ்ணபிள்ளையின் இரட்சணிய மனோகரத்தில் உள்ள பதிகங்கள் 'நற்போதகம்' இதழில் முதலில் வெளியிடப்பட்டன. இந்நிலை இன்றுவரை நீடிக்கிறது. புதுமுக எழுத்தாளர்களுக்குப் பயிற்சிக்களமாகவும் பெரும் எழுத்தாளர் களுக்கு வெளியீட்டகமாகவும் இதழ்கள் செயல்படுகின்றன.

இலக்கிய இதழ்கள், அரசியல் இதழ்கள், அறிவியல் இதழ்கள், பொழுதுபோக்கு இதழ்கள் எனப் பலவகையாக நாளிதழ், வாரஇதழ், திங்களிதழ் எனப் பலநிலைகளில் இவை வெளிப்போந்து தமிழ்ப்பணி ஆற்றுகின்றன. இலக்கியப் படைப்புகளுடன் அவைபற்றிய திறனாய்வு, மதிப்புரை எனப் பிற வழிகளிலும் துணை செய்கின்றன. அவ்வப்போது எழுத்தாளரிடையே போட்டிகள் நடத்தித் தரமான படைப்புகளைத் தமிழுலகிற்கு வழங்குகின்றன. இது அவர்களுக்கு மிகப்பெரிய உந்துசக்தியாகும். இலக்கிய வளர்ச்சியை, மணிக்கொடிக் காலம், எழுத்துக் காலம் என வரையறை செய்து காண்பதும், அவை தமக்கென பரம்பரை உருவாக்கியிருப்பதும் தமிழ் வரலாற்றில் இதழ்களுக்குரிய தனிச்சிறப்பைப் புலப்படுத்துவதாகும். படைப்பாளர் தொகைப் பெருக்கம் இயல்பாகப் படைப்புகளின் பெருக்கத்திற்கும் வகை செய்கிறது. தமது எழுத்துகளை, தனி நூலாகப் படைத்து வெளியிட இயலாதோருக்கு அவற்றை அச்சில் காண இதழ்கள் வாயில்களாகின்றன. நாள்தோறும் இதழ்கள் தோன்றியும், மறைந்தும் காணப்படினும் எண்ணற்ற தரமான இதழ்கள் தமிழின் வளர்ச்சிக்கான படிக்கற்களாக அமைந்தன; அமைகின்றன.

சமயங்களும் இக்காலக்கட்டத்தில் தமிழ் வளர்ப்பில் தம் ஈடுபாட்டைக் காட்டியுள்ளன. தமிழ்ப்புலவர்களை ஆதரித்தல், நூல்களை வெளியிடல், நூல்படைத்தல், தமிழறிஞரைச் சிறப்பித்தல், தமிழ்க்கல்லூரிகளை நிறுவுதல் என முன்பகுதியில் சைவமடங்களின் பணி அமைந்துள்ளது. துறைசை ஆதீனத்தின் பெரும்புலவராய் மீனாட்சி சுந்தரம் பிள்ளையும் ஈசானிய மடத்துப் புலவராய், பதிப்புத்துறையிலும் உரை வரைவிலும் முனைந்து நின்ற சிதம்பரம் இராமலிங்கத் தம்பிரானும் இருந்தமை சான்றுகளாம். சபாபதி நாவலருக்குத் திருவாவடு துறையாதீனம் நாவலர் பட்டம் வழங்க, மதுரைத் திருஞான சம்பந்தர் ஆதீனம் மகாவித்துவான் பட்டம் வழங்கியது.

சமயப்பரப்புதலை முதல் நோக்கமாகக் கொண்டிருப்பினும் கிறித்தவர்கள் உரைநடையிலக்கியத்தை வளர்ப்பதில் மிகுந்த ஆர்வம் காட்டியுள்ளனர். தமிழின் பெருமையை, தனித் தன்மையை உலகிற்கு உணர்த்துவதில் இவர்கள் முன்னின்றனர். பாவாணர், கருணாமிர்த சாகரம் படைத்த ஆபிரகாம் பண்டிதர் எனப்பலர் எண்ணத்தக்கவராவர். தமிழ் இலக்கியக் கடலில் தங்கள் பயணம் பின்தங்கி இருப்பதாகக் கருதும் இசுலாமியர் இன்று தம் படைப்புகளைத் தமிழருக்கும், உலகிற்கும் உணர்த்துவதில் மிகுந்த அக்கறை கொண்டுள்ளனர். இன்று தத்தம் இலக்கியச்சிறப்பினை எடுத்துரைப்பதில் இம்முப்பெரும் சமயங்களும் ஒருமறைவான போராட்டமே, பனிப்போரே நிகழ்த்துகின்றன எனலாம். இதழ்கள், கருத்தரங்குகள், சிறப்புச் சொற்பொழிவுகள், இலக்கியப் படைப்பு மற்றும் திறனாய்வுப் போட்டிகள் எனப்பல நடைமுறைகளை இவை பின்பற்று கின்றன. சமய வளர்ச்சி என்பதற்கு அப்பாற்பட்ட நிலையில் இவற்றால் தமிழும் வளம் பெறுகிறது என்பது குறிக்கத்தக்கது. தம் சமயம் சார்ந்த தமிழறிஞருக்குப் பாராட்டும், பட்டமும் வழங்கி ஊக்கப்படுத்துகின்றன. இவற்றால் தமிழில் மட்டுமின்றிச் சமயங்களுக்கிடையிலும் மறுமலர்ச்சியும், புதிய சிந்தனைகளும் தோன்றியுள்ளன.

**இயக்கங்கள்** இன்றேல் தமிழ் இல்லை என்று துணிந்து கூறுமளவிற்கு இக்காலக்கட்டத் தமிழ் வளர்ச்சியில் அவை பெரும் பங்காற்றியுள்ளன. முதற்கண் விடுதலை இயக்கம் மக்கள் எழுச்சிக்கு இலக்கியத்தைக் கருவியாக்கியது. 1926இல் உருவான சுயமரியாதை இயக்கம் பகுத்தறிவு இயக்கமாகத் தமிழகத்தில் பரவியது. அந்தணர் எதிர்ப்பு, கடவுள் மறுப்பு, மூடநம்பிக்கை எதிர்ப்பு, புராண எதிர்ப்பு எனப்பல எதிர்குரல்களைத் தமிழகத்தில் விதைத்துத் தாழ்த்தப்பட்டோரிடையே மிகுந்த வரவேற்பைப் பெற்றது. நன்கு திட்டமிட்டுச் செயல்பட்ட இவ்வியக்கம் தன் பரவலுக்குரிய வழிகளாக இதழ்கள், இலக்கியம், மேடைப்பேச்சு முதலானவற்றை மேற்கொண்டு பொதுமக்களிடையே பரவியது. இயக்கக்கவிஞர் பாரதிதாசன் ஒரு கவிஞர் படையையே உருவாக்கிப் புரட்சி செய்தார். நாடகத் தமிழ் இதனால் பெரிதும் வளர்ந்தது என்பர். பெரியார், சி.என். அண்ணாதுரை, மு. கருணாநிதி, க.அன்பழகன், வீரமணி, நெடுஞ்செழியன், தென்னரசு, பி.சி.கணேசன், ஈ.வே.கி. சம்பத், குத்தூசி குருசாமி..., எனப்பலர் இயக்கத்தையும் அதன்வழித் தமிழையும் வளர்த்தனர்.

பிறமொழிக் கலப்பின்றித் தமிழை எழுதவும் பேசவும், தமிழ் வடமொழிக்கு உயர்ந்ததே அன்றி எவ்வகையிலும் தாழ்ந்ததல்ல என்பதை வலியுறுத்தவும் தோன்றிய தனித்தமிழ் இயக்கமும் தமிழ் வளர்ச்சியில் தன் பங்கினை நிலை நாட்டியுள்ளது. மனோன்மணீயம் சுந்தரம்பிள்ளை,

**கன்னடமும் களிதெலுங்கும் கவின்மலையாளமும் துளுவும்**
**உன்னுதரத்து உதித்தெழுந்தே ஒன்றுபல ஆயிடினும்**
**ஆரியம் போல் உலகவழக்கு அழிந்து ஒழிந்து சிதையாவுன்**
**சீரிளமைத் திறம்வியந்து செயல்மறந்து வாழ்த்துதுமே**

என அடியெடுத்துக் கொடுக்க இவ்வுணர்வு எவ்வித வேறுபாடுமின்றிப் பலரையும் ஆட்கொண்டது. அயோத்திதாசப் பண்டிதர், விருதை சிவஞான யோகிகள் போன்றோர் இதன் தொடக்க காலத்தவர் ஆவர். இத்தனித்தமிழ்ப் பற்று தமிழறிஞரை, ஆர்வலரைத் தம் பெயரையும் தனித்தமிழாக்கிக் கொள்ளச் செய்தது. பரிதிமாற்கலைஞர், மறைமலை அடிகள் இதற்கு வழிகாட்டினர். இவர்களுடன் பா.வே. மாணிக்க நாயக்கர், தமிழவேள் உமாமகேசுவரனார், திரு.வி.க., சோமசுந்தர பாரதியார், அரசஞ்சண்முகனார், கா. நமச்சிவாயர், இலக்குவனார், பாவாணர், பொன்னம்பலனார் எனப் பலரும் இதற்கு உரமிட்டனர். பெருஞ்சித்திரனார், சாலை இளந்திரையன், ஆனைமுத்து என இன்றுவரை தொடர்ச்சி காணலாம். தமிழரிடையே மொழிப் பற்று வேரூன்ற இவ்வியக்கமே அடிப்படை.

பொதுவுடைமை இயக்கமும் பாரதி முதல் இன்று வரை இடைவிடாது தன் ஆளுமையை இலக்கியங்களிடையே பரவ விட்டுள்ளது. மாற்றிக் கூறுவதானால் பொதுவுடைமை பேசாத படைப்பாளர் படைப்பாளரே இல்லை என்னுமளவிற்குச் சிறப்புப் பெற்றுள்ளது. மக்கள் கலை இலக்கியக் குழு போல்வன இதற்கு வலுவூட்டுகின்றன. தமிழ் மக்களிடையே செல்வாக்குப் பெற்றுள்ள பெருங்கட்சிகள் அனைத்துமே தமிழ் இலக்கியத் திற்கெனத் தனிப்பிரிவும் உருவாக்கித் தமிழ் வளர்ச்சிக்கு இயன்றளவு துணை செய்வதும் சுட்டத்தக்கது.

இவைதவிர நிறுவனங்களும், தனியாரும் தமிழ் வளர்ச்சியில் இன்றியமையாத பங்கேற்றுள்ளனர். அவையும் இங்கு எண்ணத்தக்கன. இக்காலத்தின் துவக்கப்பகுதியில் சமீன்தார் பலர் தமிழ்ப்புரவலராக இருந்துள்ளனர். காவடிச் சிந்து பாடிய அண்ணாமலை ரெட்டியார் போன்ற பலரை ஆதரித்த புகழை ஊற்றுமலை இருதாலய மருதப்பத் தேவர் பெறுகிறார்.

வெறிமங்கை பாகக் கவிராயரைப் பாதுகாத்த மருங்காபுரிச் சமீன்தார், மீனாட்சிசுந்தரக்கவிராயருக்குத் துணைபுரிந்த எட்டையபுரச் சமீன்தார் என்று மற்றும் சிலர் குறிப்பிடத்தக்க வராவர். பல நூல்கள் இவர்களின் வேண்டுதலின் பேரில் எழுந்தன. சங்கரமூர்த்திக் கவிராயரின் சேற்றூர்ப் பள்ளு இராமலிங்கத் தேவரால் படைக்கப்பட்டதைச் சான்றாக்கலாம். மீனாட்சி சுந்தரம் பிள்ளையின் தலபுராணப் படைப்புகள் அவ்வவ்வூர் பெரியோர் வேண்டுதல் மற்றும் புரத்தலின் பேரில் எழுந்ததை அவரது சரித்திரம் கொண்டறியலாம். சிறந்த புலவர்களுக்கு விருதுகள் வழங்கிச் சிறப்பளித்தும் அவர்தம் இலக்கிய ஆற்றலை ஊக்குவித்தனர். சிவன்மலை சுப்பிரமணியக் கடவுள் மீது 'சிவன்மலைக் குறவஞ்சி' பாடிய தே. இலக்குமண பாரதியாருக்கு இராமநாத சேதுபதி 'பாரதி'ப் பட்டம் வழங்கிப் பெருமைப்படுத்தினார். முத்துராமலிங்க சேதுபதி மாம்பழக் கவிக்குக் 'கவிச்சிங்கம்' என்ற சிறப்பினை அளித்தார்.

தஞ்சை சரபோசி மன்னர் நூலாராய்ச்சிக்குழு ஒன்று நிறுவித் தமிழ் வளர்த்தார். அதில் கொட்டையூர் சிவக்கொழுந்து தேசிகர் முதலான பலர் இருந்தனர். இப்பொழுதும் செயற்பட்டு வரும் மதுரைத் தமிழ்ச்சங்கத்தை 1901 இல் நிறுவி வளர்த்தவர் பாண்டித்துரைத் தேவராவார். இச்சங்கத்தில்தான் கந்தசாமிக் கவிராயர் தமிழ்நூலாராய்ச்சியாளராய் அமர்ந்து, தனிச்செய்யுட் சிந்தாமணியைத் தொகுத்தார் என்பது குறிப்பிடத்தக்கது. செந்தமிழ்க் கல்லூரியைத் தொடங்கிய இது 'செந்தமிழ்' திங்களிதழை 1903 முதல் வெளியிடுகிறது. பல நூல்களைப் பதிப்பித்துள்ளது. இவ்வாறு சங்கம் வைத்துத் தமிழ் வளர்க்கும் பண்பு இன்று பெருகியுள்ளது.

1911இல் துங்கர் இராதாகிருட்டிணப் பிள்ளை கரந்தைத் தமிழ்ச்சங்கத்தைத் தோற்றுவித்தார். தமிழ்ப்பொழில் திங்களிதழ் (1925), புலவர் கல்லூரி (1933), 1937இல் இந்தி எதிர்ப்புப் போரில் ஈடுபட்டமை என்பன இதன் தமிழ்ப்பணிகளாகின்றன. 1934இல் இ.மு. சுப்பிரமணிய பிள்ளையும் பு.சி. புன்னைவனநாத முதலியாரும் இணைந்து தொடங்கிய சென்னை மாகாணத் தமிழ்ச்சங்கம் ஐந்து கலைச்சொல்லாக்க மாநாடுகளை நடத்தியது குறிப்பிடத்தக்கதாகும். இன்று இச்சங்கம் தமிழ் மாநிலத் தமிழ்ச் சங்கமாகச் செயல்பட்டு வருகிறது. திருச்சி தமிழ்ச்சங்கம் திருப்பத்தூர் தமிழ்ச்சங்கம் (1967), காரைக்குடி தமிழ்ச்சங்கம் (1969), திண்டுக்கல் தமிழ்ச்சங்கம் (1981), சேலம் தமிழ்ச்சங்கம், தஞ்சாவூர் தமிழ்ச்சங்கம் (1986) என இன்று ஊர் தோறும் தமிழ்ச்

சங்கங்கள் தோன்றித் தமிழ்ப்பணி புரிகின்றன. கல்கத்தா பாரதி தமிழ்ச்சங்கம் (1941), பம்பாய்த் தமிழ்ச்சங்கம் (1942), தில்லித் தமிழ்ச்சங்கம் (1946), பெங்களூர் தமிழ்ச்சங்கம் (1950), திருவனந்தபுரம் தமிழ்ச்சங்கம், ராஜஸ்தானில் ஜெய்ப்பூர் தமிழ்ச் சங்கம், குஜராத்தில் சூரத் தமிழ்ச்சங்கம் என அயல் மாநிலங்கள் பலவற்றில் ஒன்றுக்கு மேற்பட்ட சங்கங்கள் தோன்றித் தமிழைப் பாதுகாக்கும் பணியில் ஈடுபட்டுள்ளன. லண்டன், பெர்லின், நியூயார்க், சிகாகோ எனத் தமிழர் பரவியுள்ள வெளிநாடுகளிலும் சங்கங்கள் அமைந்து செயல்படுகின்றன. இவர்களும் லண்டன் முரசு, தமிழன் குரல், வாழும் தமிழ் உலகம் போன்ற இதழ்கள் வழித் தமிழ்ப்பணி புரிவது சுட்டத்தக்கது.

இன்றைய சூழலில் **தம்மைக் கவர்ந்த பழந்தமிழ் இலக்கியங்களுக்குக் கழகம்** அமைத்து அதன்வழி அந்நூலுக்கும் நூலாசிரியருக்கும் ஆண்டுதோறும் விழா எடுத்துச் சிறப்புச் செய்தல், அப்பொழுது கருத்தரங்குகள், கவியரங்குகள், சொற்பொழிவுகள், பட்டிமன்றம் போன்றன அமைத்து அதன் புகழ் பரப்புதல் என்பனவான நடைமுறைகளும் பல்கிப் பெருகியுள்ளன. இவ்வகையில் 1927இல் நிறுவப்பட்ட தென்காசி திருவள்ளுவர் கழகமும் 1939இல் தோன்றிய காரைக்குடி கம்பன் கழகமும் மிக்க பெருமையுடையனவாகும். இளங்கோ, சேக்கிழார், பாரதி, கண்ணதாசன் எனப் பிற புலவரும் இத்தகு சிறப்பு பெற்றிருப்பினும் தமிழுக்குக் கதியாக விளங்கும் திருவள்ளுவர், கம்பர் கழகங்கள் மிகுதி காட்டுகின்றன. தனிப்புலவரின்றிப் பொதுவான **இலக்கிய அமைப்புகளும்** மிகுந்துள்ளன. இருபதாம் நூற்றாண்டின் பிற்பகுதி முதல் பொதுமக்களிடையே இலக்கியத்தைப் பரப்பும் பணி இவ்வகையில் சிறப்புடன் நடைபெறுகிறது. இராமலிங்கர் அருட்பணி மன்றம், தமிழ்வட்டம், இலக்கியச் சிந்தனை, இலக்கிய வீதி, பன்னாட்டுத் தமிழுறவு மன்றம் போல்வன சான்றுகள். தமிழகப்புலவர் குழு, தமிழ்ச் சான்றோர் பேரவை என்பனவும் எண்ணத்தக்கன.

தமிழகப் பல்கலைக்கழகங்களில் நிறுவப்பட்டுள்ள **அறக்கட்டளைகள்,** ஆதித்தனார் விருது, ராஜா சர் முத்தையா செட்டியார் விருது எனத் தனியார் நிறுவனங்கள் ஏற்படுத்தியுள்ள சிறப்புகளும் கருதத்தக்கன. படைப்பாளர், திறனாய்வாளர் இருவருமே பாராட்டப்படுகின்றனர்.

அரசியல், பண்பாடு முதலானவற்றில் ஏற்பட்ட வீழ்ச்சி காரணமாகத் தமிழ் வளர்ச்சியும் பாதிப்புக்குள்ளான நிலையில் ஆங்கிலக்கல்வி, 1850-2000 எனும் இக்காலக்கட்டத்தை எழுச்சி

யுகமாக்கியது. பாரதியின் கனவான 'வானம் அளந்தது அனைத்தும் அளந்திடும் வண்மொழியாகி'ப் பல்வேறு சாதனைகளும் சிறப்புகளும் இப்பகுதியைப் பெருமைப்படுத்தியுள்ளன. அவற்றையும் இங்கு வரிசைப்படுத்தலாம்.

1. தமிழின் பல்கோணச் சிறப்புகளை உருவாக்கிய சிற்பிகளாகப் பாரதியார், பாரதிதாசன், ஆ. சிங்காரவேலு முதலியார், உ.வே. சாமிநாதையர், மனோன்மணீயம் சுந்தரம் பிள்ளை, கல்கி, தேவநேயப்பாவாணர், தெ.பொ. மீனாட்சி சுந்தரனார், மு. வரதராசனார் எனப்பலர் அமைகின்றனர்.

2. பெண்கல்வி, பெண் முன்னேற்றம் இவற்றின் காரணமாகப் பெண் சாதனையாளர் பலர் அமைவதும் இப்பகுதியின் தனிச்சிறப்பாகும். இருப்தாம் நூற்றாண்டு ஔவையாராகப் போற்றப்பட்ட அசலாம்பிகை அம்மையார், 1902இல் 'லோகோபகாரி'யின் உதவி ஆசிரியராகவும் அதன்பின் 'ஹிதகாரணியின்' ஆசிரியராகவும் திகழ்ந்து முதல் பெண் இதழாசிரியர் எனப் பெருமை கொண்ட பண்டித விசாலாட்சி அம்மாள், ஜகன் மோகினி இதழில் எண்ணற்ற புதினங்களைப் படைத்து அன்றைய மகளிர் மனங்கவர்ந்த வை.மு. கோதைநாயகி அம்மாள், பெண் விடுதலைக்குப் பாடுபட்ட மருத்துவர் முத்துலட்சுமி அம்மாள், சமுதாயத்தின் பெருஞ்சிக்கலாக விளங்குவனவற்றைக் கள ஆய்வு செய்து புதினங்களைப் படைத்துப் புரட்சி எழுத்தாளராகப் பாராட்டப்பெறும் ராஜம் கிருஷ்ணன், பன்மொழிப் புலமையாளராக, கவிஞராகத் திகழ்ந்த ஹா.கி. வாலம், இன்று மரபுக்கவிதையில் தமக்கெனத் தனியிடம் கொண்டுள்ள சௌந்தரம் கைலாசம், புதுக்கவிதையுலகில் தடம் பதித்துள்ள நிர்மலா சுரேஷ், பெண் முன்னேற்றத் திற்குத் தொடர்ந்து செயல்பட்டுவரும் மனோன்மணீயம் பல்கலைக் கழகத்தின் முன்னாள் துணைவேந்தர் வசந்திதேவி, இதழுலகில் கோலோச்சிய வாஸந்தி, எழுத்துலகில் புதுமை படைக்கும் சிவசங்கரி என நீளும் பட்டியல் இதனைப் பறைசாற்றுகிறது. அண்மைக் காலத்தில் துளிர்விட்டுள்ள பல இளந்தளிர்கள் எதிர்காலத்தில் மிகப்பெரும் சாதனை படைப்பர் என்பதில் ஐயமில்லை.

3. வீரமாமுனிவருக்குப் பின் இக்காலப்பகுதி எழுத்துச் சீர்திருத்தத்தில் மிகுந்த அக்கறை காட்டுவதும் குறிப்பிடத் தக்கது. 1933இன் தமிழன்பர் மாநாடு, 1941இன் தமிழ்

இலக்கிய மாநாடு எனத் தொடர்ந்து எழுத்துச் சீர்திருத்தத்தின் தேவை வலியுறுத்தப்படுகிறது. ஒருபுறம் இதற்கு ஆதரவாகக் குரல் எழும்பினும் மறுபுறம் எதிர்ப்பும் உள்ளது. கா.சு. பிள்ளை, த.வே. உமாமகேசுவரனார் போன்றோர் எதிர்த்தோரில் முக்கியமானவர்களாவர். பெரியார் ஈ.வெ.ரா.வின் எழுத்துச் சீர்திருத்தம் 1978இல் நடைமுறைப்படுத்தப்பட்டது. எனினும் வா.செ. குழந்தைசாமி போன்றோரால் மேலும் சீர்திருத்தம் தேவையெனப் பேசப்படுகிறது.

4. அச்சுப்பதிப்பு தோன்றிப் பழஞ்சுவடிகளின் பதிப்பையும் புது இலக்கியப் பரவலையும் அதிகரித்தது. இன்று கணினியின் கண்டுபிடிப்பு நூல் வெளியீட்டை எளிமை யாக்கித் தமிழ் எழுத்தாளரையும் படைப்பாளரையும், பயன் பாட்டாளரையும் பெருக்கியுள்ளது. அறிவியல் வளர்ச்சி சுவடிகளையும், அரிய நூல்களையும் இறவாமல் பாதுகாக்கச் செய்கிறது. இணையமும் நூல் படைப்பிற்கும் பரப்புதற்கும் பெரிதும் துணையாகிறது. இவ்வகையில் இந்தியாவின் பிற மொழிகளைவிட தமிழ் உயர்வு பெற்றிருப்பது சுட்டத்தக்கது.

5. தமிழ் பயிற்று மொழியாதல் வேண்டும் என்ற உணர்வு, பல் துறையறிவைத் தமிழ்ப் பொதுமக்கள் உடனுக்குடன் பெறவேண்டும் என்ற கருத்து ஆகியவற்றால் அறிவியல், கலைத் துறைகள் அனைத்தும் தமிழில் குறிப்பிடத்தக்களவு வளம் பெற்றுள்ளன. மொழிபெயர்ப்பு இதற்குப் பெரிதும் உதவியுள்ளது. இங்குப் பழந்தமிழ் நூல்கள் உட்பட தமிழ்ப் படைப்புகள் இந்திய மற்றும் உலக மொழிகளில் இடம் பெற்றுள்ளதும், அங்குள்ளவை தமிழில் ஏற்றம் பெற்றுள்ளதும் நவிலத்தக்கன (S. Sivakami, Bibliography on Translations, IITS, 1982). பிறமொழிகளின் வளர்ச்சி வேகத்தோடு தமிழும் ஒருங்கிணைந்து செல்ல இவையும் துணைக் கருவியாகின்றன.

6. இக்காலப் பகுதியில் தான் உரைநடையிலக்கியங்களின் தோற்றம் அமைந்ததுடன் அவை மிகுந்த வரவேற்பையும் செல்வாக்கையும் பெற்றன. எனினும் செய்யுள் வடிவமும் காலத்திற்கேற்ப கனிந்து எளிமை பெற்றதுடன் புதுக்கவிதை, ஹைகூ எனப் புதுமைகளும் கண்டது. அகம், புறம், அறம், பக்தி எனும் பொருண்மைகளுள் சுழன்று

கொண்டிருந்த தமிழ் இலக்கியம் அவற்றினின்றும் விலகி, சமுதாயம், படைப்பாளர், இயற்கை, வாழ்த்து, வசை, நிகழ்ச்சி, அரசியல், தேசியம், வரலாறு, பயணம் எனப் பலவாக விரிவு கொள்கிறது. மீண்டும் அமைந்த தனிப் பாடல் எழுச்சி இதற்குக் களமமைத்தது. சிறப்புடையனவே இலக்கிய ஏற்றம் பெறல் வேண்டும் என்ற நிலைமாறி யாரையும் பாடலாம், எதனையும் பாடலாம், உயர்வினைப் புகழ்வது போன்றே தாழ்வினை இகழ்ந்தும் பாடலாம் என்று இலக்கிய உலகில் ஏற்பட்டுள்ள மாற்றமும் சுட்டத்தக்கது.

7. பழந்தமிழ் நூல்களைப் பொதுமக்களுக்குப் பரவலாக்கும் போக்கில் புத்துரைகள் பல எழுந்தன. கா.சு. பிள்ளையின் திருவாசகவுரை; டி.என். சேஷாசலத்தின் கம்பராமாயணவுரை; சி.கே. சுப்பிரமணிய முதலியாரின் பெரியபுராணவுரை; ச.வே. சுப்பிரமணியனின் தொல்காப்பியம், சிலப்பதிகாரம் உரைகள்; புலியூர்கேசிகனின் சங்கஇலக்கிய உரைகள் என்பனவற்றைச் சான்றாக்கலாம். திருமயிலை சண்முகம்பிள்ளை, பின்னத்தூர் நாராயணசாமி ஐயர், உ.வே. சாமிநாதையர், ந.மு. வேங்கடசாமி நாட்டார், ஔவை சு. துரைசாமிப் பிள்ளை, சோமசுந்தர பாரதியார், பொ.வே. சோமசுந்தரம் போன்றோரும் குறிக்கத்தக்கனர். நூற்றுக்கு மேற்பட்ட திருக்குறள் புத்துரைகள் பூத்துள்ளன. தமிழாசிரியர் மட்டு மின்றித் தமிழன்பர் பலரும் இதில் ஈடுபாடு காட்டுகின்றனர். தொல்காப்பிய உரைவளம் (க. வெள்ளைவாரணனார், ஆ. சிவலிங்கனார்), திருக்குறள் உரைவளம் (தண்டபாணி தேசிகர்) என்பனவும் கூறத்தக்கன. பழந்தமிழின் பரவலுக்கும், பாதுகாவலுக்கும், புத்தெழுச்சிக்கும் இவை பெரும்பங்கேற்கின்றன.

8. பழமை படைப்புகளைத் தம் விருப்பிற்கேற்ப, கருத்திற் கேற்ப மறு ஆக்கம் செய்தலும் குறிப்பிடத்தக்களவு நிகழ்ந்துள்ளது. பழந்தமிழை எளிமையாக்கி இன்றைய தமிழில் அறிமுகப்படுத்துதல் என்பதும் இதன் நோக்க மாகிறது. பாரதிதாசன் கண்ணதாசன் போன்றோர் இம் முயற்சியில் ஈடுபட்ட போதிலும் மு. கருணாநிதியின் குறளோவியமும், சங்கத்தமிழும் பெரிதும் பாராட்டப் பட்டுள்ளன. புராணப் படைப்புகளின் வசனங்களும், சுருக்க வடிவங்களும், இங்கு நினைத்தற்பாலன. சிலப்பதிகாரம்,

இராமாயணம், மகாபாரதம், பெரியபுராணம் போல்வன படைப்பாளர் விருப்பம் போல் மாற்றங்கொண்டு மறு ஆக்கங்களாக அமைகின்றன. பாரதிதாசனின் கண்ணகி வெண்பா, மணிமேகலை வெண்பா; புலவர் குழந்தையின் இராவண காவியம் போல்வன சான்றுகள். புதுமைப்பித்தன் (சாப்விமோசனம்), ச.து.சு. யோகியார் (அகல்யை) போன்றோர் மீளாய்வுப் போக்கில் இலக்கியம் படைத்துள்ளமையும் குறிக்கத்தக்கது. திருக்குறளும், பாரதி படைப்புகளும் அவை அனைத்துத் தரப்பு மக்களையும் சென்றடைய வேண்டும் என்ற உணர்வில் விளக்கக் கதைகளாகப் பலரால் சிறப்பிக்கப்பட்டுள்ளன.

9. இக்காலப் பகுதியின் மிகப் பெருஞ்சாதனைகளுள் ஒன்று களஞ்சியத் தொகுப்புகளாகும். இவற்றோடு இணைத்து எண்ணத்தக்க வகையில் தொகை நூல்களும் அமைகின்றன. 1934இல் சிங்காரவேலர் அபிதான சிந்தாமணியைக் கண்டார். தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் வாழ்வியற் களஞ்சியம் (13 தொகுதிகள்), அறிவியற் களஞ்சியம் (10 தொகுதிகள்), சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம், நாடகக்களஞ்சியம் என்பனவும் அதற்குப் பெருமை சேர்க்கின்றன. வீ.ப.கா. சுந்தரத்தின் தமிழிசைக் கலைக்களஞ்சியம், அப்துற்றஹீமின் இசுலாமியக் கலைக்களஞ்சியம், குழந்தைகள் கலைக் களஞ்சியம், மருத்துவக் களஞ்சியம், செ.ந. நடராஜ ஐயரின் இசை நடனக்களஞ்சியம் எனப் பிறவும் இக்காலப் பகுதிக்குப் பெருமை சேர்க்கின்றன. ஆசியவியல் நிறுவனம் ஆங்கிலத்தில் வெளியிட்டுள்ள தமிழிலக்கியக் கலைக் களஞ்சியமும் (Encyclopaedia of Tamil Literature) தனித்துச் சுட்டத்தக்கது.

பாண்டித்துரைத் தேவரின் பன்னூற்றிரட்டு, கருப்பையா பாவலரின் தனிச்செய்யுட் சிந்தாமணி, இராகவ ஐயங்காரின் புறத்திரட்டு என இவற்றின் உருவாக்கமும் தொடர்கின்றன.

அகராதிகளும், சொல்லடைவுகளும், பலவாறாகப் பெருகியுள்ளன. பிறமொழிச் சொற்களுக்குத் தமிழில் பொருள் தரும் அகராதிகள், தமிழ்ச் சொற்களுக்குப் பொருளுரைக்கும் தமிழகராதிகள், அவற்றிற்குப் பிறமொழிகளில் பொருளுரைக்கும் அகராதிகள், தமிழ் மொழிக்கு, இலக்கியத்திற்குச் சிறப்புதரும் பல்வகை அகராதிகள், துறைச் சொல்லகராதிகள் என எண்ணற்றன

உருவாகியுள்ளன. ஈ. இரத்தினவேலு முதலியாரின் சிறப்புப் பெயரகராதி (1908) இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்ப் பேரகராதி, க்ரியாவின் தற்காலத் தமிழகராதி, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகர முதலி, தொல்காப்பியச் சிறப்பகராதி முதலானவற்றைச் சான்றுரைக்கலாம். அகநானூறு, புறநானூறு போன்ற இலக்கியங்களுக்குச் சொல்லடைவுகளை உருவாக்கித் தந்து கேரளப் பல்கலைக் கழகம் வழிகாட்டியுள்ளது. ஆய்வாளருக்குப் பெரும்பயன் தரும் ஆய்வுத்தொகுப்புப் பணிக்கும் சிலப்பதிகார ஆய்வடங்கல் மூலம் வழிகாட்டியானது. பலரது பேருழைப்பாலும் ஈடுபாட்டாலும் மிகுந்த காலம் மற்றும் பொருட்செலவில் வெளிவரும் களஞ்சியம், அகராதி, சொல்லடைவு, ஆய்வடங்கல் என வகைப்படும் இத்தொகை நூல்களால் தமிழ்மொழியின் வளர்ச்சியும் ஆய்வும் மேம்படுத்தப்படுகின்றன. ஆய்வாளர் பணியும் எளிமை ஆகின்றது. பலவற்றையும் தேடிச் செல்லும் காலவிரயம் தவிர்க்கப்படு கின்றது. வேண்டியதை உடனுக்குடன் பெற்றுக் கொள்ளும் வாய்ப்பையும் இவை நல்குவதால் இத்துறையில் இன்று மிகுந்த அக்கறை செலுத்தப்படுகிறது. சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் இதில் பெருந்தொண்டாற்றியுள்ளது.

10. மொழியின் வளர்ச்சிக்கேற்ப அவற்றைத் தெளிவுறுத்தும் இலக்கணங்களும் வேண்டப்படுகின்றன. தண்டபாணி சுவாமிகள் அறுவகை இலக்கணம், வண்ணத்தியல்பு ஆகியவை படைத்தார். ஆர். சீநிவாசராகவாசாரியார் 'யாப்பொளி' தந்தார். குலாம் காதிறு நாவலர் 'பொருத்த விளக்கம்' தந்தார். டி. வீரபத்திர முதலியாரின் விருத்தப் பாவியல், பாம்பன் சுவாமிகளின் பல்சந்தப் பரிமளம் எனப் பிறவும் அமைகின்றன. சரவணத்தமிழன், இரா. திருமுருகன் போன்றோரும் இதில் முனைப்புக் காட்டியுள்ளனர். மொழியியல் நோக்கில் இன்றைய தமிழுக்குப் புத்திலக்கணம் படைக்கும் பணியும் தமிழக அரசால் தூண்டப்பட்டுள்ளது.

11. உலகத் தமிழ் மாநாடுகள் இப்பகுதியின் பெருமையைப் புலப்படுத்தும் பிறிதொரு கூறாகும். அனைத்துலகத் தமிழ் ஆராய்ச்சி மன்றம் (International Association of Tamil Research) பல்வேறு நாடுகளிலும் வாழும் தமிழறிஞர்களை ஒருங்கிணைத்துத் தமிழாராய்ச்சியை வளப்படுத்தவும், தமிழுணர்வைத் தூண்டவும் உலகத் தமிழ் மாநாடுகளை நடத்தி வருகிறது. முதல் மாநாடு கோலாலம்பூரில்

நிகழ்ந்தது. இரண்டாம் (சென்னை, 1968), ஐந்தாம் (மதுரை, 1980), எட்டாம் மாநாடுகள் (தஞ்சை, 1995) தமிழகத்தில் சீருடன் அரங்கேறின.

12. சங்க காலத்திற்குப் பின் இப்பகுதியில்தான் தமிழ்ப் புலவர்களும் படைப்பாளர்களும் அரசினராலும், ஆர்வல ராலும் பெரிதும் சிறப்பிக்கப்படுகின்றனர். பல்வகைப் பரிசுகளும், விருதுகளும் தமிழ்ப் புலவர் மற்றும் சான்றோர் பெயரால் வழங்கப்படுவதுடன் நினைவு நாட்களை அரசே கொண்டாடுதல், அவர்களுக்குக் கோட்டம், நினைவகம் அமைத்தல், சிலைகள் வடித்தல், பெயரிடுதல் எனப் பலவாறாகப் பெருமைப்படுத்தப்படுதல் முதலியன குறிக்கத் தக்கன. குமரிக் கடலில் வானளாவ உயர்ந்து நிற்கும் வள்ளுவர் சிலை ஈடிணையற்ற சான்றாகும். பாரதி, பாரதிதாசன், தெ.பொ.மீ., மறைமலையடிகள், திரு.வி.க., கல்கி, மயிலை. சீனி. வேங்கடசாமி எனத் தமிழ்ப் பெரியார்களின் நூற்றாண்டு விழாக்கள் தொடர்வதும் சுட்டத்தக்கது. ஔவையார், கம்பர், வ.உ.சி., பாரதியார் போன்றோர் திரைப்படம் வழியாகவும் பாராட்டப்பட்டுள்ளனர். திரைப் படங்களில் பாரதிப் பாடல்கள் ஆதிக்கம் கொள்வதும் கூறத்தக்கது. இலக்கியம் திரைப்படமாவதற்கும் சிலப்பதிகாரம், திருவிளையாடற் புராணம் என்பன காட்டாகின்றன. திருவருட்செல்வர், திருமால் பெருமை என்பனவும் எண்ணத்தக்கன.

13. இந்திய அளவில் அனைத்து மொழிகளையும் உள்ளடக்கிய நிலையில் வழங்கப்படும் மிகப் பெரிய விருதான ஞானபீட விருதினை அகிலன் (1976) பெற்றுள்ளதும், சாகித்திய அக்காதெமி வழங்கும் பாஷா சம்மான் விருதைச் ச.வே. சுப்பிரமணியம் (2000) பெற்றுள்ளதும் குறிக்கத்தக்கன.

14. சிறுவரை, இளைஞரை நல்வழிப்படுத்தவும், கற்பிக்கவும் இக்காலப்பகுதி மிகுந்த ஆர்வம் கொண்டுள்ளது. அவர்களுக்கென இலக்கியப் படைப்புகளும், அறிவியல், பொதுஅறிவு முதலான நூல்களும், இதழ்களும் ஓரளவு அவ்வப்போது எழுகின்றன. தொடரும் காலத்தில் இது இன்னும் வேகம் காட்டலாம்.

15. பிறதுறை அறிஞர்கள் தமிழ்ப்பணியில் பெரும் ஈடுபாடு காட்டுகின்றனர். கச்சிக்கலம்பகம் படைத்த பூண்டி அரங்கநாத

முதலியார் கணிதப் பேராசிரியராவார். பெ.நா.அப்புசாமி அறிவியல் ஆக்கத்திலும் மொழிபெயர்ப்பிலும் முன்னின்றவர். சுஜாதா, வா.செ. குழந்தைசாமி போன்றோர் அறிவியல், இலக்கியம் இரண்டிலும் திறமை காட்டுகின்றனர். மருத்துவர் பலர் மருத்துவ நூல்களைத் தமிழில் படைத்து வருவதும் நவிலற்பாலது. தமிழ்த் திறனாய்வுத் துறையைத் தொடக்கத்தில் வளர்த்துச் சென்ற வ.உ.சி., வையாபுரிப் பிள்ளை, கா.சு. பிள்ளை மற்றும் தெ.பொ.மீ. போன்றோர் சட்டக் கல்வி பயின்றோர் என்பதும் நோக்கத்தக்கது.

16. தமிழ் வளர்க்கும் சிற்றிதழ்களின் பெருக்கம் நாளுக்குநாள் அதிகரித்துக் கொண்டிருப்பதும் தமிழுக்கு அழியாத் தன்மையையும் என்றுமுள இளமையையும் பறைசாற்று கின்றது.

17. ஒரு தமிழ்ப் புலவனுக்கு (பாரதிக்கு) அயல்நாடு (ரஷ்யா) நூற்றாண்டு விழாக் கொண்டாடியதும் இதன் முதன்மைச் சிறப்பாகும்.

இக்காலப் பகுதியின் பொதுப்போக்காகவும் சிலவற்றைக் கணித்துரைக்க முடிகிறது.

1. தமிழ்ப்பற்று, இயக்க வேறுபாடின்றி இன்றைய படைப்புகளில் சிறப்பானதொரு இடத்தைப் பெற்றுள்ளது. சங்க இலக்கியங்களுக்குப் பின் இக்காலக்கட்டத்தில்தான் நாட்டுப்பற்று வீறுகொண்டமைகிறது.

2. எளிமை, மொழிநடையைத் தன்வயப்படுத்தியுள்ளது.

3. காந்தீயச் செல்வாக்கு இருப்பினும் திராவிட இயக்கம், பொதுவுடைமை இயக்கம் இவற்றின் ஆளுமையே மிகுதி. எனினும் இன்று இவையும் மாறிப் பொதுவானதொரு பார்வைக்குத் தமிழ்ப்படைப்பு இட்டுச் செல்லப்படுகிறது.

4. அறிவியல் வளர்ச்சியும், சமூக முன்னேற்றத்துடிப்பும் அக்கறையும் உடனுக்குடன் தமிழக, இந்திய, உலக நடப்புகளை இலக்கியமாக்குகின்றன.

5. தலித்தியம், பெண்ணியம் என்பன படைப்பிலக்கியத்துள் மிகுதியாகப் பேசப்படுகின்றன.

6. அன்று வடமொழி கொண்டிருந்த ஆதிக்கத்தை இன்று ஆங்கிலம் கைப்பற்றியுள்ளது. வடமொழிச் செல்வாக்கும்

வீழ்ச்சியுற்றுள்ளதே தவிர முழுமையாகக் களையப்படவில்லை. ஆங்கிலக் கலப்பு தமிழுக்குப் பெரும் அச்சுறுத்தலாகவே வளர்ந்துள்ளது.

7. படைப்பாளர் எந்த அவையை/இதழை முன்னிறுத்திப் படைக்கிறாரோ அதற்கேற்ப, தம் படைப்பின் தரத்தையும் மாற்றிக்கொள்வது பெரும்பான்மையோரிடம் காணப்படுகிறது.

8. அன்று அரங்கேற்றம் பெற்ற சிறப்பினை இன்று நூல் வெளியீட்டு விழாக்கள் கொள்கின்றன.

9. தமிழகத்திற்கு வெளியே அயல்மாநிலங்களிலும், நாடுகளிலும் வாழ நேர்ந்தாலும் அங்கும் தமிழ்ப்பணி புரிதல் பரவலாகவுள்ளது.

10. முதலில் மூலநூல் பின் உரையுடன் மற்றும் உரை வளங்களுடன், மீண்டும் புத்துரை காணல் என்பதாகப் பழந்தமிழ் நூல்களின் பதிப்புத் தொடர்கிறது.

11. நூல் அறிமுகம், கதைமாந்தர் இயல்பு காணல், இலக்கிய நயம் பாராட்டல் என அறிமுக நிலையில் தொடர்ந்த திறனாய்வுப் போக்கு, மேனாட்டு இலக்கியத் திறனாய்வு நெறியைப் புகுத்தி ஆய்தலாக ஒருசாராரால் மாற்றப் பட்டுள்ளது. தமிழுக்கென்று தனித்த கொள்கைகளும், கோட்பாடுகளும் உள; தொல்காப்பியர் வழிகாட்டுகிறார்; இவற்றின் மூலம் திறனாய்வை மேற்கொள்ளும் பொழுதே தமிழின் தனித்துவம் மேலும் விளக்கம் பெறும் எனப் பிறிதொரு சாரார் உரைக்கின்றனர். இருநிலையாலும் தமிழ் வளம் பெறுகிறது.

12. படைப்பிலக்கியம் போன்று மொழிபெயர்ப்பிலக்கியங்களும் வரவேற்கப்படுகின்றன. பிறமொழிகளில், சிறப்புப் பெற்றன வற்றை உடனுக்குடன் தமிழிலும் அறிமுகப்படுத்த வேண்டும் என்ற எண்ணம் மிகுந்து வருகிறது.

13. "சிறுகதை வரலாற்றைச் சற்றே கூர்ந்து நோக்கினால் அதன் வளர்ச்சிப் பாதையில் மகளிரின் காலடிச் சுவடுகளைக் காண முடிகிறது. அவர்கள் எண்ணிக்கையில் குறைவாக இருந்தாலும் அவர்களின் பங்கு கணிசமானதேயாம்" எனும் கூற்று (மா. இராமலிங்கம், விடுதலைக்கு முன் புதிய தமிழ்ச் சிறுகதைகள், ப. 71) தமிழின் பிற இலக்கிய வகைப்

படைப்புகளுக்கு மட்டுமின்றிப் பிறதுறை வெளியீடு களுக்கும் சாலப் பொருந்தும். எத்துறையின் வரலாறும் பெண் படைப்பாளரின், எழுத்தாளரின் பணியுடனன்றி முற்றுப் பெறாது என்பதில் மிகையில்லை. இவர்தம் எண்ணிக்கை நாளும் உயர்ந்து வருவது மகிழ்விற்குரியதாம்.

14. இலக்கணச் செல்வாக்கு மொழியியல் ஆய்வாக மடைமாற்றம் கண்டுள்ளது.

15. நூலுக்குப் பாயிரம் அமைக்கும் மரபு, அச்சுக்கூடம் வழி நூல் வெளிவரத் தொடங்கியபோது சாற்றுக்கவிகளுடன் வெளியிடும் மரபானது. இம்மரபு பழைய நூல்களைப் பதிப்பித்தோரையும், தம் நூல்களைப் பதிப்பித்தோரையும் பாராட்டி நண்பர், ஆசிரியர், மாணாக்கர் முதலானோர் வரையும் கவிகளாகும். இவற்றால் நூலாசிரியர், உரையாசிரியர், பதிப்பாசிரியர் முதலியோர் பற்றிய செய்திகள், நூல் பற்றிய செய்திகள், சிறப்புகள் என்பனவும் அறியவரும். அச்சகப் பதிப்பு பழமையடைந்த பின் இவற்றிற்கு மாற்றாக அணிந்துரை, மதிப்புரை, முகவுரை, திறனாய்வுரை, வாழ்த்துரை எனப்பல வடிவங்கள் இடம்பெறுகின்றன. நூலின் துறை சார்ந்த பெரியோர், தமக்கு வேண்டியோர், தமிழ்ப் பெரியார் என்போர் இவற்றை அளிக்கின்றனர். அவ்வக் காலக்கட்டத்தின் பெருமைக்குரியோர் இதனை வழங்குகின்றனர் என்ற நிலையில் ஒருமைப்பாடு அமைகிறது.

16. உரைநடை இலக்கிய வளர்ச்சி, திராவிட இயக்கத் தாக்கம் இவற்றின் காரணமாகப் பக்திப் பனுவல்கள் தவிர்ந்த ஏனையவற்றில் கடவுள் வாழ்த்துடன் நூலைத் தொடங்கும் மரபு அருகிவிட்டது.

மொத்தத்தில் தமிழ் இலக்கிய வரலாற்றில் இக்காலப்பகுதி ஆல் போல் தழைத்து அருகுபோல் வேரோடி, சுடரும் கதிரொளியாய், யானையின் வலியுடன், கடல்போல் ஆழத்துடன், வான்போல் பரந்து காற்றாய் எங்கும் புகுந்து பல்வகை மலராய் மலர்ந்து மணம் வீசிக் கொண்டிருக்கிறது. எதிர்ப்பும் முரணும் தமிழின் வளர்ச்சியில் இன்றும் காணப்படினும் அவற்றை வென்று உயர்ந்து நிற்கும் ஆற்றல் தமிழுக்குண்டு என்பதைக் கடந்தகால அதன் வரலாறு கொண்டு உணர்ந்து உறுதிபட மொழியலாம்.

# இலங்கை

கா. சிவத்தம்பி

## பிரித்தானிய ஆட்சிக்காலம்

### 1. கிறித்துவ தேவ ஊழியச் செயற்பாடுகளும் சுதேசப்பண்பாட்டு விழிப்புணர்வுகளும் (1800 – 1880 – நாவலர் காலம்)

பிரித்தானிய ஆட்சி தொடங்கிய பின்னர், சுதேச மத-பண்பாட்டு விழிப்புணர்வு இலங்கைத் தமிழிலக்கியத்தில் ஒழுங்கமைதியுடன் தோன்றிய காலப்பகுதியை இலங்கைத் தமிழிலக்கிய வரலாற்றின் ஒரு கால அலகாகக் கொள்வது பொருந்தும். மிஷனரித் தொழிற்பாடும் பண்பாட்டு விழிப்புணர்வும் தொடர்புடையனவாகவிருப்பதாலும் இந்த இரண்டு செயற்பாடுகளுமே பிரதானமாக இலக்கிய வாயிலாகவே வெளிப்பட்டனவாதலின் இலக்கிய வரலாற்றில் இவை முக்கியப்படுவது இயல்பே.

இந்தக் காலம் பற்றிய அறிகையில் பின்வரும் விடயங்கள் முக்கியமாகின்றன.

#### 1. புரட்டஸ்தாந்த மிஷனரிகளின் வருகை

பிரித்தானிய ஆட்சி தொடங்கப் பெற்று, மத நடைமுறை நெகிழ்வு ஆட்சி மட்டத்திற் காணப்படத் தொடங்கியதும் ஆங்கிலப் பாரம்பரியத்தை மையமாகக் கொண்ட முக்கிய புரட்டஸ்தாந்துத் தேவ ஊழியச் சபைகள் இலங்கைக்கு வந்து சேர்ந்தன.

* லண்டன் மிஷனரிக்கழகம் - 1804 - 5
* பப்ரிஸ்ற் சபையினர் - 1812
* வெஸ்லியன் மெதடிஸ்த சபை - 1814 - 15
* அமெரிக்கன் மிஷன் - 1817
* சேர்ச் மிஷனரி சொசைட்டி எனப்பட்ட தேவ ஊழியர் சபை- 1818

இவற்றுள் பப்ரிஸ்ற் சபையினர் இலங்கையின் வடக்குப் பிரதேசத்திற் பணியாற்றவில்லை. அமெரிக்கன் மிஷன் முதலில் யாழ்ப்பாணத்தைத் தவிரப் பிற இடங்களிற் செயற்படவில்லை.

ஒல்லாந்தர் காலத்து நிலவிய இறப்பிறமாதுத் திருச் சபைக்கும் இவற்றுக்கும் வேறுபாடுகள் இருந்தன. அதைவிட இவை கத்தோலிக்கப் பாரம்பரியத்திலிருந்தும் வேறுபட்டன வாகும். இந்தத் தேவ ஊழியச் சபைகளின் செயற்பாட்டில் நவீனமயவாக்கம் (Modernization) ஒரு முக்கிய அமிசமாகவிருந்தது. தமது மதப் பிரிவுகளைப் பரப்புவது மாத்திரமல்லாமல், உலகில் 19ஆம் நூற்றாண்டில் வளரத் தொடங்கிய மேனாட்டுமயவாக்க மையங் கொண்ட நவீனமயவாக்கத்தில் (westernization) இலங்கையில் இவை முக்கிய பங்கு வகித்தன.

**II. கல்வியே இவர்களின் பிரதான மதப் பரப்புகை வாயிலாக அமைந்தமை**

பிரித்தானிய அரசாங்கம் முதன்மைப்படுத்திய ஆங்கில மொழி மூலக் கல்வியை வழங்குதல் மூலமே இத்திருச்சபைகள் பிரதானமாகத் தொழிற்பட்டன. நேரடி மதமாற்றம் மிகக் குறைந்தபட்சமே நடைபெற்றது என்பர். கல்வி வழியாக மத மாற்றம் நிகழ்ந்தது.

கல்வியைத் தமது பிரதானமான தளமாகக் கொண்டதனால் அவர்கள் பின்வருவனவற்றில் கவனம் செலுத்த வேண்டுவது அத்தியாவசியமாயிற்று.

**அ) பாடப்புத்தகங்கள் எழுதுதல்**

தமிழ்மொழியை ஆங்கிலப் பாட அமைப்பிற் கற்பிப் பதற்கான பாடப் புத்தகங்கள் மாத்திரமல்லாது கணிதம், தருக்கம் போன்ற பாடங்களுக்கும் பாடநூல்கள் எழுதியமை.

உ-ம்:
* கறோல் விசுவநாதபிள்ளை எழுதிய வீசகணிதம்-1855
* நெவின்ஸ் சிதம்பரப்பிள்ளை எழுதிய நியாய இலக்கணம்-1844
* கணக்கதிகாரம் - சுவாமிபிள்ளை-1844

**ஆ) மேனாட்டு முறைக் கல்வியைப் பயிற்றத் தொடங்கியபொழுது பிரதானமாக ஆங்கிலத் திலிருந்த பாடநூல்களை மொழிபெயர்க்க வேண்டியிருந்தது.**

அமெரிக்க மிஷனைச் சேர்ந்த டொக்ட்ர் சாமுவேல், பிஸ்க், கிறீன், மேனாட்டு வைத்திய முறைமையை விவரிக்கும் நூல்களைத் தமிழில் மொழிபெயர்த்தனர்.

| முதல்நூல் | மொழிபெயர்ப்பில் | மொழிபெயர்ப்பாசிரியர் | வருடம் |
| --- | --- | --- | --- |
| Druit's Surgery | இரண வைத்தியம் | ஜே.டான்ஃபோத் | 1867 |
| Gray's Anatomy | அங்காதிபாதம் | டி.டபிள்யூ.சாப்மன் | 1872 |
| Hooper's | வைத்தியாகரம் | வில்லியம் போல் (பதிப்பு கிறீன்) | 1875 |
| Well's Chemistry | கெமிஸ்தம் | டாக்டர் எஸ்.கிறீன் (சப்மன், சாமிநாதன் என்போர் உதவியுடன்) | 1875 |

## இ) அகராதித் தொகுப்பு

தமிழ் பற்றிய தமது ஈடுபாடு காரணமாக இந்த மிஷனரிமார்கள் அகராதித் தொகுப்பில் ஈடுபட்டிருந்தனர். கிறிஸ்தவர்கள் அகராதித் தொகுப்பில் ஈடுபடுவது வீரமாமுனிவரின் சதுரகராதி முதல் நாம் காணும் ஒரு பண்பாகும். (அகராதி நிகண்டிலிருந்து வேறுபட்டது).

மானிப்பாய் அகராதி எனப்படும் நூல் 1842இல் வெளிக் கொணரப்பட்டது.

மேலும் சென்னையில் 1862இல் வெளிவந்த வின்ஸ்லோ அகராதிக்கு (தமிழ்- ஆங்கிலம்-தமிழ்) யாழ்ப்பாண அறிஞர்கள் உதவியிருந்தனர்.

**ஈ) கிறிஸ்தவம் பற்றிய பிரசுரங்களையும் வெளியிட்டனர். மிஷனரிமார்களின் தமிழ்ப் பயில்வு இரண்டு முக்கிய வகைகளில் தமிழின் வளத்தை விஸ்தரித்தது.**

1) ஆங்கிலத்தில் தமிழினதும் தமிழ்ப் பாரம்பரியத்தினதுமான புகழை எழுதினர்.
2) ஆங்கில இலக்கியப் பாரம்பரியத்தில் வரும் சில எழுத்து மரபுகளைத் தமிழுக்குக் கொண்டு வந்தனர். இத்தகையன வற்றுள்ளே பிரதானமானது இலக்கிய வரலாறு பற்றிய நோக்காகும்.

இந்த வகையில் மிக முக்கியமான ஆக்கங்களாகக் குறிப்பிடப்பட வேண்டியவை இரண்டாகும். ஒன்று சைமன் காசிச்செட்டி என்னும் புத்தளத்து அறிஞர் ஆங்கிலத்தில் எழுதிய "தமிழ் புளூற்றாக்" (The Tamil Plutarch) எனும் நூலாகும் (1859). இதுவே தமிழ்ப் புலவர்கள் பற்றி ஆங்கிலத்தில் வந்த முதல் நூலாகும். மற்றது வட்டுக்கோட்டைச் செமினரியைச் சேர்ந்த ஆனல்ட் சதாசிவம்பிள்ளை எழுதிய "பாவலர் சரித்திர தீபகம்" (1886) ஆகும்.

எழுத்தறிவின் பரப்பல் மூலம் கிறித்தவத்தைப் பரப்பும் இம் முயற்சி மேனாட்டு மயமாக்கத்தை, கிறித்துவ மதமயமாக்கும் நிலைமையைக் கண்டு, இந்நாட்டின் பாரம்பரியப் பண்பாடு விழித்துக் கொண்டது. கிறித்துவர்கள் பயன்படுத்திய அதே நடைமுறைகளைக் கையாண்டு பாரம்பரிய மதமாகிய சைவத்தை நிலைநாட்டும் முயற்சியை ஆறுமுகநாவலர் (1822-1879) மேற்கொண்டார்.

### III. ஆறுமுக நாவலரின் பணிகள்

அனைத்துத் தமிழிலக்கியப் பாரம்பரியத்திலும் கிறிஸ்துவ மயவாக்கத்தை எதிர்த்துச் சுதேச மதப் பாரம்பரியத்தை (நாவலரைப் பொறுத்தவரையில் அது சைவத் தமிழ்ப் பாரம்பரிய மாகும்) நிலைநாட்டுவதற்குழைத்த பிரதான அறிஞர் ஆறுமுக நாவலர் எனலாம். அவர் தமது பணியினை,

சைவப் பிரசாரகராக
பதிப்பாசிரியராக
நூலாசிரியராக
உரையாசிரியராக
பாடநூலாசிரியராக
சைவவிளக்க / கிறித்துவ எதிர்ப்பு ஆசிரியராகத்

தொழிற்பட்டு நிறைவேற்றினார்.

அவரின் வாழ்க்கை வரலாற்றைப் பின்வரும் காலப்பகுப்பின் அடிப்படையில் வைத்து நோக்குவது சுலபமாக விருக்கும். அதே வேளையில் அவரது பணிகளின் சிறப்பை நன்கு விளங்கிக் கொள்வதற்கு உதவும்.

**1822 – 1834** - குழந்தைப் பருவம். தமிழ்ப் புலமையாளரிடத்துப் பாடங் கேட்டமை.

**1834 – 1847** - கிறிஸ்தவர்களின் தொடர்பு. முதலில் 1841 வரை மாணவனாகவும், பின்னர் ஆசிரியராகவும், மொழிபெயர்ப்பாளராகவும் விளங்கினார்.

**1848 – 1864** - மிஷனரிமாரின் செயற்பாடுகளுக்குக் கல்வி, மதத் துறைகளில் எதிர்ப்பு நடவடிக்கைகளை மேற் கொள்ளல்; இடைக்கிடை இந்தியா சென்றுவரல்.

**1864 – 1870** - தமிழகத்திலிருந்தமை. கோயில்களிலும் ஆதீனங் களிலும் சைவப் பிரசங்கம் செய்தமை; சிதம்பரத்தில் பாடசாலை நிறுவியமை; நூற்பதிப்பு, உரையாக்கம் ஆகியவற்றில் ஈடுபட்டிருந்தமை.

நாவலரது நூல்கள்

பாடப்புத்தகங்கள் - இலங்கைப் பூமிசாஸ்திரம்
சைவவினாவிடை - முதற்புத்தகம்
சைவவினாவிடை - இரண்டாம் புத்தகம்
முதற்பாலபாடம்
இரண்டாம் பாலபாடம்
மூன்றாம் பாலபாடம்
நான்காம் பாலபாடம்
இலக்கணச் சுருக்கம்
இலக்கண வினாவிடை

உரையாக்கப்பட்ட பிரதான மத நூல்கள் - பெரியபுராணம்
திருவிளையாடற் புராணம்
பெரியபுராண வசனம் (ஒரு பகுதி)

பதிப்பித்த நூல்கள்

* உரையுடன் பதிப்பித்தவை - கோயிற்புராணவுரை
திருவள்ளுவர் பரிமேலழகர் உரை
நன்னூல் விருத்தியுரை
திருமுருகாற்றுப்படையுரை
திருச்செந்தில் நிரோட்டகயமக அந்தாதி உரை
பிரயோகவிவேக உரை
கோயிற்புராணவுரை
திருச்சிற்றம்பலக்கோவையாருரை
தொல்காப்பியம் சொல்லதிகாரம்
சேனாவரையர் உரை
மருதூரந்தாதியுரை
நன்னூற் காண்டிகையுரை
சூடாமணி நிகண்டுரை
உபநிடதவுரை

* பிறநூல்கள் - சிவாலய தரிசன விதி
குளத்தூர் அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ்
கந்தரலங்காரம்
கந்தரனுபூதி
ஏரெழுபது
திருக்கைவழக்கம்
புட்பவிதி
மறைசையந்தாதி

திருக்கரசைப்பதிற்றுப்பத்தந்தாதி
பட்டணத்துப்பிள்ளையார் பாடல்
அருணகிரிநாதர் வகுப்பு
திருச்செந்தூரகவல்
விநாயக கவசம்
சீவகவசம்
சக்தி கவசம்
சேது புராணம்
தருக்க சங்கிரகம்
இலக்கணக் கொத்து
கந்தபுராணம்
பதினோராந் திருமுறை
நால்வர் நான்மணிமாலை
இரத்தினச் சுருக்கம்
சிதம்பர மான்மியம்

வாதப்பிரதிவாத எழுத்துக்கள் சைவதூஷண பரிகாரம்
யாழ்ப்பாணச் சமயநிலை
(தகவல் வெ. கனகரத்தின உபாத்தியாயரின் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர் சரித்திரம்)

நாவலரின் இலக்கிய வரலாற்று முக்கியத்துவம்

1) பாரம்பரியப் பண்பாட்டுப் பேணுகைக்கு இலக்கியப் பாரம்பரியம் மீளக் கண்டுபிடிக்கப் பெற்று, காலத்துக் கேற்ற இயைபுடன் போற்றப்படல் வேண்டுமென்ற கருத்தின்படி தொழிற்பட்டமை.

2) கிறிஸ்தவர்களால் அறிமுகப்படுத்தப்பெற்ற மொழிக் கையாளுகை முயற்சிகளைத் தமிழின் பாற்படுத்தி, தமிழின் பண்பாட்டுப்பூர்வமான வளர்ச்சிக்கு வழிகோலியமை.

3) சைவத் தமிழ்ப் பாரம்பரியத்தை வற்புறுத்தியமை.

4) இலங்கைவாழ் தமிழர்களின் சமூக-பண்பாட்டுப் பிரச்சினைகளை மையமாகக் கொண்ட இலக்கிய எழுத்துக்களின் தோற்றம்.

## IV. நாவலர் காலத்து மற்றைய சைவவழிப் புலவர்களின் பங்களிப்புக்கள்

* சிவசங்கரபண்டிதரின் புலமையும் ஆக்கங்களும்
* அடுத்துவரும் காலப்பகுதியில் தமது சேவைப் பூரணத்துவத்தை எய்தும் சி.வை. தாமோதரம்பிள்ளை, வல்வை வயித்தியலிங்கம்பிள்ளை, சிவசம்புப் புலவர் போன்றோர் பணிகள் தொடங்கியமை.

## V. இக்காலத்து முகிழ்க்கும் இஸ்லாமிய இலக்கியப் பாரம்பரியம்

இலங்கையின் இஸ்லாமிய இலக்கியப் பாரம்பரியம் இக்காலத்தில் மேற்கிளம்புவதை அவதானித்துக் கொள்ளல் வேண்டும்.

பதுறுதீன் புலவரின் முகையிதீன் புராணமே எமக்குக் கிடைத்துள்ள முதலாவது இலங்கை இஸ்லாமிய இலக்கியமாகும்.

இந்நூல் 1816இல் அரங்கேற்றப் பெற்றது என்ற தகவல் உளது. பதுறுதீன் புலவர் சென்னையிற் பிறந்து யாழ்ப்பாணத்தில் வாழ்ந்து மறைந்தவரா அல்லது யாழ்ப்பாணத்திற் பிறந்து வாழ்ந்து மறைந்தவரா என்பது தெளிவாகத் தெரியாது.

ஆயினும் இந்நூலின் அரங்கேற்றம், யாழ்ப்பாணத்தில் ஒரு நீண்ட முஸ்லீம் பாரம்பரியம் நிலவியது என்பதை எடுத்துக் காட்டுகின்றது. 1868 முதலே அரபுத் தமிழ் நூல் மரபு ஒன்றும் இங்கு இருந்து வந்துள்ளது என்பது தெரிய வருகின்றது. (மீஸான் மாலை - 1868, தீன் மாலை, கண்டி 1878).

## VI. கத்தோலிக்க இலக்கியப் பாரம்பரியம்

1800-1880க் காலப் பிரிவிற் கத்தோலிக்க இலக்கியம் முதன்மைப்படாதிருப்பது ஒரு முக்கிய பண்பாகவுள்ளது. ஆனால் மன்னார், யாழ்ப்பாணம் ஆகிய பகுதிகளில் கத்தோலிக்க நாடகங்கள் பலவும் சிற்றிலக்கியங்களும் தோன்றியதற்கான சான்றுகள் உள்ளன.

## VII. சமயச்சார்பற்ற இலக்கியங்கள் காணப்படாமை

இக்கால இலக்கியங்களைப் பார்க்கும்பொழுது மதத் தொடர்புள்ள இலக்கியங்களே பெரிதும் காணப்படுகின்றன.

சமூகம் சார்ந்த இலக்கியங்கள் பற்றிய குறிப்புக்கள் இல்லை. ஆனால் "கனகிபுராணம்" போன்ற நூல்களைப் பார்க்கும் பொழுது, சமூகச் சார்புள்ள இலக்கியங்கள் செழுமையுடன் விளங்கியமை தெரியும். ஆனால் அவை வற்புறுத்தப்படாதும், பேணப்படாதும் ஒழிந்தன என்று கூறலாம். சமயச் சார்பற்ற இலக்கியங்கள் பற்றியதற்கான பரம்பரைக் கதைகள் உள்ளன. 1800-1880க் காலப் பகுதியைத் தொடர்ந்து வரும் காலப்பகுதியை 1880-1930 என்ற அலகாகிக் கொள்ளல் வேண்டும்

## மரபும் மாற்றமும் (1880–1930)

### நாவலருக்குப் பின்வரும் காலம்

#### 1) இக்காலப் பகுதியில் வரையறை பற்றிய ஒரு விளக்கம்

நாவலர் காலத்துடன் இலங்கையின் சமூக-பண்பாட்டுப் பிரச்சினைகளைத் தோற்றுவிக்கும் இலக்கியம் தோன்றுவது ஒரு புறமிருக்க, மறுபுறத்தில் தமிழில் நவீனமயப்பாடும், மரபுப் பேணுகையும் தொடர்கின்றன. இந்த வளர்ச்சியின் ஒரு மையமாக இலங்கையில் புதினப் பத்திரிகைகள் தோன்றுவதைக் கொள்ளலாம். யாழ்ப்பாணத்தில் ஈழகேசரியும், கொழும்பில் வீரகேசரியும் 1930இலேயே தொடங்குகின்றன. தினகரன் 1932இல் தொடங்குகின்றது. இந்த வகையிலே நோக்கும்பொழுது நவீன தமிழ்த் தொழிற்பாட்டின் பிரிமுனையாக 1930 அமைகின்றது. 1930களில் இலங்கையில் வாக்குரிமைச் சமத்துவம் வருவதுடன் எழுத்தறிவுப் பரவலும் ஏற்படுகின்றது. உண்மையான நவீன தமிழிலக்கியம் எழுத்தறிவின் விருத்திக்கு வழி வகுக்கும். பரந்துபட்ட சமூக சனநாயகப் போக்கின் வெளிப்பாடுமாகும். அந்த வகையிலும் 1930 ஒரு புதிய யுகத்துக்கு இலங்கையை இட்டுச் செல்கிறது.

இந்தப் பின்புலத்திலேயே இக் காலவகுப்புச் செய்யப்படுகின்றது.

இக்காலப் பகுதியின் பிரதான அமிசங்களாகப் பின்வருவனவற்றை எடுத்துக் கூறலாம்.

1) நாவலர் தொடக்கி வைத்த சைவத் தமிழ் இலக்கிய மரபின் விருத்தி.
2) தமிழகத்தில் இலங்கையின் தமிழறிஞர்கள் ஏற்படுத்தும் இலக்கியத் தாக்கம்.
3) கத்தோலிக்க இலக்கிய மரபிற் காணப்படும் எழுச்சி.
4) இஸ்லாமியத் தமிழிலக்கியத்தின் வளர்ச்சி.

5) மலையக இலக்கியத்தின் தோற்றம்.

6) நவீனத்துவத்தின் ஊற்றுக்கால்கள்.

## 1) நாவலர் தொடக்கி வைத்த சைவத்தமிழ் இலக்கிய மரபின் விருத்தி

நாவலருக்குப் பின் அவர் தொடக்கி வைத்த மரபிலக்கிய ஆய்வுமுறைமை தொடர்கின்றது. நாவலர் காட்டிய அளவுக்குச் சமூகப் பிரக்ஞை காட்டப்படாதிருப்பது இப்புலமைப் போக்கின் ஒரு பண்பாகும். ஆனால் தாம் வாழும் சமூகம் பற்றிய ஒரு சிரத்தை இல்லையென்றும் கூறிவிட முடியாது.

நாவலர் மரபின் தொடர்ச்சியாக அமையும் புலமை யாளர்களுள் பின்வருவோரைக் குறிப்பிட்டுக் கூறலாம்.

உடுப்பிட்டிச் சிவசம்புப்புலவர்
பொன்னம்பலபிள்ளை
வல்வை ச. வயித்தியலிங்கம்பிள்ளை (1843-1900)
சி.வை. தாமோதரம்பிள்ளை (1832-1901)
சுன்னாகம் அ. குமாரசாமிப்புலவர்

இவர்கள் பாரம்பரியம் பேணுகையுணர்வுடன் தொழிற் பட்ட அறிஞர்களாவர். வயித்தியலிங்கம்பிள்ளை போன்ற சிலர் கிறிஸ்துவ மத கண்டனங்களையும் எழுதினர்.

## 2) தமிழகத்தில் இலங்கை அறிஞர்கள் ஏற்படுத்திய இலக்கியத் தாக்கம்

இக்காலகட்டத்தின் முக்கிய பண்புகளில் ஒன்று தமிழகத்தில் இலங்கைத் தமிழறிஞர்கள் ஏற்படுத்திய தாக்கம் ஆகும். வட்டுக்கோட்டைச் செமினரியிற் கல்வி கற்றுச் சென்னை சென்றவர்களும், நாவலர் வழி வந்தவர்களும் இவர்களுள் வருவர். அத்தகைய அறிஞர்களுள் முக்கியமானவர்கள் பின்வருமாறு:

சி.வை. தாமோதரம்பிள்ளை (1832-1901)- இவர் பழந்தமிழிலக்கியப் பதிப்புத் துறையில் முன்நின்றார்.

வி. கனகசபைப் பிள்ளை (1855-1906) - 'ஆயிரத்தெண்ணூறு வருடங்கட்கு முற்பட்ட தமிழர்' என்ற ஆங்கில நூலை எழுதியவர்.

தி.த. கனகசுந்தரம்பிள்ளை (1863-1922)- இவர் திருகோண மலையைச் சேர்ந்தவர்

ந. கதிரைவேற்பிள்ளை (1874-1907) - இவர் திருவி. கலியாண சுந்தர முதலியாரின் ஆசிரியர்.

இவர்கள் இலங்கையிலும் தமிழகத்திலும் வாழ்ந்து தங்கள் இலக்கியப் பணிகளைச் செய்தார்கள்.

### 3) கத்தோலிக்க இலக்கிய முனைப்பு

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியிலிருந்து இலங்கையில் கத்தோலிக்கம் புத்தெழுச்சி பெறத் தொடங்கிற்று. 1886 இல் யாழ்ப்பாணம் ஒரு மறை மாவட்டம் ஆயிற்று. இக்கால கட்டத்தில் (1876) சத்தியவேத பாதுகாவலன் ஆரம்பிக்கப்பட்டது. இதனை நடத்துவதற்கு அருளப்ப முதலியார் என்பவர் இந்தியாவிலிருந்து அழைத்து வரப்பட்டார். இவர் கத்தோலிக்க மத விவாதங்களில் ஈடுபட்டார். இக்காலத்தில் திருச்செல்வர் அம்மானை போன்ற நூல்கள் வெளியாயின.

இந்த எழுச்சியின் சின்னமாகச் சுவாமி ஞானப்பிரகாசரைக் கொள்ளல் வேண்டும். இவர் காலம் 1875 முதல் 1947 வரையெனினும், கத்தோலிக்க மதச் செயற்பாடுகள் பற்றிய இவரின் எழுத்துக்கள் 1930க்கு முன்னரே எழுதப்பட்டுள்ளமையை அவதானித்துக் கொள்ளல் வேண்டும். இவர் சைவத்துக்கு எதிரான பல கண்டனங்களை எழுதினார். அவையெல்லாம் 1904-1924க் காலப் பகுதியைச் சேர்ந்தவையாகும்.

### 4) இஸ்லாமியத் தமிழிலக்கிய வளர்ச்சி

இக்காலகட்டத்தில் இஸ்லாமிய இலக்கியம் மிகச் செழிப்பாக வளர்கின்றது. யாழ்ப்பாணம், கண்டி, கொழும்பு ஆகிய இடங்களிலிருந்து முக்கிய நூல்கள் வெளிவரத் தொடங்குகின்றன.

இலங்கையில் இஸ்லாமிய விழிப்புணர்ச்சியில் முக்கியமான இருவர், இக்காலத்தைச் சேர்ந்தவர்களாவர். ஒருவர் முஹம்மது காசீம் மரைக்காயர். சித்திலெவ்வை எனவே அழைப்பர். இலங்கை முஸ்லிம்களின் பண்பாட்டுத் தனித்துவத்திற்கும் மத உணர்வு விழிப்புக்கும் இவர் முக்கிய பங்காற்றினார். சைவர்களிடையே ஆறுமுக நாவலர் சாதித்ததை முஸ்லிம்களிடையே இவர் சாதித்தார். இவர் "முஸ்லிம் நேசன்" என்ற பத்திரிகையை (1883 முதல்) நடத்தினார். "அசன்பேயுடைய கதை" என்ற இவரது நெடுங்கதை (1885) இலங்கையின் முதல் தமிழ்நாவல் என்று போற்றப் படுகிறது. இவர் தமிழிலும் பாடப்புத்தகங்களை எழுதினார்.

இன்னொருவர் அருள்வாக்கி அப்துல் காதிர் புலவர் ஆவர். இவர் கண்டியில் வாழ்ந்தவர். முதுமொழிமாலை, திருமதீனத்தந்தாதி மாலை, 'கண்டி கலம்பகம்' என வரும் பல நூல்களை இயற்றினார்.

இக்காலத்துக்குரிய முக்கிய முஸ்லிம் புலவர்களுள் யாழ்ப்பாணம் அசனாலெவ்வையும் ஒருவர் (1870-1912).

### 5) மலையக இலக்கியத்தின் தோற்றம்

இலங்கையின் மலைப் பிரதேசத்தில் பெருந்தோட்டங் களில் (கோப்பி, தேயிலை) வேலை செய்யக் கொண்டு வரப்பட்ட தமிழகத்தினர் இங்குக் குடியேறியபொழுது அவர்களிடையே எழுத்திலக்கியம் வளரவில்லை. அவ்வளர்ச்சி கோ. நடேசையரின் வருகையுடன் ஆரம்பிக்கின்றது. 1920இல் அவர் தேசபக்தன் என்ற புதினப் பத்திரிகை ஆசிரியரானார். கிராமியப் பாடல்களை அச்சடித்து விநியோகித்தார். இந்தத் தொடக்கம், மலையகத் தமிழிலக்கியத்தின் ஊற்றுக்கண்ணாக அமைந்தது எனலாம்.

### 6) இலங்கையின் நவீனத் தமிழிலக்கியத்தின் ஊற்றுக்கால்கள்

மேற்கூறிய பண்புகளினூடே இலங்கைத் தமிழிலக்கியம் படிப்படியாக நவீனத்துவத்தை நோக்கி நடைபோடத் தொடங்கு வதையும் இக்காலகட்டத்திலே காணலாம்.

கவிதையில் ஏற்படும் மாற்றத்தினை மூவரின் படைப்புக்களில் அவதானிக்கலாம்.

அச்சுவேலி தம்பிமுத்துப்புலவர் (1857-1937)
தி.த. சரவணமுத்துப்பிள்ளை (1863-1922)
பாவலர் துரையப்பாபிள்ளை (1872-1929)

திருகோணமலையைச் சேர்ந்த சரவணமுத்துப்பிள்ளையின் 'தத்தை விடு தூது' பாரம்பரியமான இலக்கிய வகைப்பாட்டு அமைப்பினுள் வைத்துக் கூறப்படுகின்றதெனினும் அதன் உள்ளடக்கத்தில் சமூகத்தில் பெண்கள் நிலை முன்னேறல் வேண்டும், முன்னேற்றப்படல் வேண்டுமென்பது மிக அழுத்த மாகவே கூறப்பட்டுள்ளது. தமிழில்வரும் பெண்ணிலைவாத எழுத்துக்களுக்கான வரலாற்றுக்கிளர்வை ஆராய்பவர்களுக்கு இது முக்கியமாகும்.

இவர்களுள் பாவலர் துரையப்பாபிள்ளை மிக முக்கிய மானவர். இந்திய சுதந்திரப் போராட்டத்தினாற் கவரப்பட்ட இவர், யாழ்ப்பாணச் சமூக மாற்றத்திலும் முன்னேற்றத்திலும்

இலக்கியம் முக்கிய இடம் வகிக்க வேண்டுமெனக் கருதினார். அவரது யாழ்ப்பாண சுவதேசக் கும்மி என்ற பாடலும், சமூகம் பற்றிய பல கீர்த்தனைகளும் முக்கியமானவை.

இவர்களைத் தொடர்ந்து முக்கியம் பெறுபவர்கள் நவாலியூர் சோமசுந்தரப் புலவர் (1878-1952), முதுதமிழ்ப் புலவர் மு. நல்லதம்பி முதலியோராவர்.

இக்காலகட்டத்தில் நாவலுக்குரிய கட்டமைப்பினைக் கொண்ட மங்களநாயகி தம்பையாவின் "நொறுங்குண்ட இதயம்" (1919) வெளிவந்தது.

1924இல் தொடங்கும் யாழ்ப்பாண மாணவர் காங்கிரஸ் இலங்கைத் தமிழ் மக்களின் அரசியல் நவீனமயப்பாட்டில் முக்கியமான ஒரு மைல்கல்லாகும்.

பத்திரிகை தவிர்ந்த தொடர்புச் சாதனம் என்ற வகையில் வானொலி 1925இல் தொடங்குகின்றது. இது 1947இன் பின்னரே வன்மையான சாதனமாக மேற்கிளம்புகின்றது.

கல்வித் துறையின் வழியாக, குறிப்பாக ஆங்கிலக் கல்வி வழியாக நவீன தமிழியல் இலக்கியம் பற்றிய பரிச்சயம் ஏற்படுகிறது. ஆங்கிலம் கற்றோர் தமிழிலும் "நவீன" இலக்கியத்தின் அத்தியாவசியத்தை உணர்ந்தனர்.

இந்த மாற்றங்கள் ஒருமித்து இணையும்பொழுது இலங்கைத் தமிழிலக்கியத்தின் நவீன காலத்துக்கு நாம் இட்டுச் செல்லப்படுகின்றோம்.

### 1930க்குப் பின்னர்

* ஏற்கனவே பார்த்தபடி 1930லிருந்து இலங்கைத் தமிழிலக்கியத்திலே புதிய காலப் பகுதி மேற் கிளம்புவதை அவதானிக்கின்றோம்.

* 1930க்குப் பின்வரும் காலகட்டத்தைப் பகுத்து நோக்குவதற்குத் தொழிற்பட்டு வந்து கொண்டிருக்கும் மூன்று பண்புகளைக் குறிப்பிடல் வேண்டும். இம்மூன்று பண்புகளும், அடுத்து எடுத்துக் கூறப்படவிருக்கும் காலப்பகுதிகளிலும் சமாந்தரமான முறையிலே தொழிற்பட்டு வந்துள்ளன என்பதை மறந்து விடுதல் கூடாது. இது இலங்கைத்

தமிழிலக்கிய வரலாற்றின் ஒரு மிக முக்கிய அமிசமாகும். அவையாவன:

1. மதப் பண்பாட்டு இலக்கியங்கள் தொடர்ந்து பேணப்படுகின்றமையும் எழுதப்படுகின்றமையுமாகும். இதன் காரணமாக, சைவ, கிறிஸ்தவ, இஸ்லாமிய இலக்கியங்கள் தொடர்ந்து முக்கியத்துவம் வகித்து வருவதை அவதானிக்கலாம். இம்மத மரபுகளின் முக்கிய புருடர்கள் போற்றப்பட்டு வருவதையும் காணலாம்.

1930 முதல் இலங்கையில் ஏற்படும் அரசியல் மயப்பாடு இன, மதப் பண்பாட்டுத் தனித்துவங்களை மறக்க, கைவிட முடியாத ஒரு நிலையினை ஏற்படுத்தியுள்ளமையால், ஒவ்வொரு குழுவினரும் தமது பாரம்பரிய தனித்துவங்களைப் பேணுவதற்காக மத-பண்பாட்டு இலக்கியங்களைப் பேணி வருகின்றமையைக் காணலாம்.

இதன் காரணமாக நவீன காலத்தினும் மரபிலக்கியப் பேணுகையும் போற்றுகையும் சமாந்தரமான இலக்கியச் செல்நெறியாக அமைந்துள்ளமையைக் காணலாம்.

சைவம், கிறிஸ்தவம், இஸ்லாம் பற்றித் தோன்றிய பல்வேறு இலக்கியங்களை இப்பண்புக்கு உதாரணமாகக் கூறலாம்.

2. ஈழத்துத் தமிழிலக்கியத்தின் ஒரு முக்கியச் செல்நெறியாக இருப்பது கல்விசார் புலமைப் பாரம்பரியமாகும்.

1930 முதல் வரும் காலப் பகுதியில் இரண்டு முக்கியத் தளங்களை இதன் ஆதாரமாக இனங்கண்டு கொள்ளலாம்.

அ. பாரம்பரியக் கல்வி மரபு
ஆ. பல்கலைக்கழகங்கள்

பாரம்பரியக் கல்விமரபில் வந்தவர்கள் தத்தம் மத பண்பாட்டு மரபினைப் போற்றும் படைப்புக்களைத் தோற்றுவித்தனர். இவர்களில் முக்கியமானோராகப் பின்வருவோரைக் குறிப்பிடலாம்,

சி. கணேசையர்
பண்டிதமணி சி. கணபதிப்பிள்ளை
புலவர்மணி பெரியதம்பிப்பிள்ளை
கந்தமுருகேசன்
புலவர்மணி ஆ.மு. ஷரிபுத்தீன்

கணேசையர் அவர்களினது தொல்காப்பிய உரைப் பதிப்பும் இலக்கண விடயங்கள் பற்றிய அவரது கட்டுரைகளும் மிக முக்கியமானவைகளாகும். இன்று பின்னோக்கிப் பார்க்கும்போது தொல்காப்பியம் பற்றிய மரபு நிலை விளக்கத்திற்கு இவரது பதிப்புப் போல உதவுவது வேறொன்றுமில்லை என்று துணிந்து கூறலாம். இவர் ஈழநாட்டுத் தமிழ்ப் புலவர் சரித்திரத்தையும் எழுதினார்.

பல்கலைக்கழகங்கள் பாரம்பரியத்தை மீள் கண்டுபிடிப்பன வாகவும், புலமை ஆராய்ச்சிகளைச் செய்வனவாகவும், அதே வேளையிற் சமகால இலக்கிய முயற்சிகளுடன் ஊடாட்ட முடையனவாகவும் அமையத் தொடங்கின.

இந்தப் புலமைப் பாரம்பரியத்தில் இடம்பெற வேண்டுவோர்:

சுவாமி விபுலானந்தர்
பிரான்சிஸ் கிங்ஸ்பெறி
பேரா. க. கணபதிப்பிள்ளை
பேரா. வி. செல்வநாயகம்
பேரா. ம.மு. உவைஸ்
பேரா. சு. வித்தியானந்தன்
பேரா. க. கைலாசபதி
பேரா. ச. தனஞ்சயராசசிங்கம்
பேரா. பொ. பூலோகசிங்கம்
பேரா. கா. சிவத்தம்பி
பேரா. சுசீந்திர ராஜா
பேரா. சி. தில்லைநாதன்
பேரா. அ. சண்முகதாஸ்
கலாநிதி. சி. மௌனகுரு
கலாநிதி. எம்.ஏ. நுஃமான்
பேரா. சித்திரலேகா மௌனகுரு
பேரா. க. அருணாச்சலம்

3. 1930இனைத் தொடர்ந்து வரும் காலப் பகுதிகளில் வரும் எழுத்தாளர்கள் தமிழகத்தின் நவீன எழுத்துத் துறையினருடன் ஊடாட்டங்கொண்டு தமிழில் முழுமையான இலக்கியச் செயற்பாட்டில் ஈடுபட்டு வந்துள்ளனர்.

நாவலர் காலம் முதல் தொடர்ந்து வரும் பண்பு இதுவெனக் கொள்ளலாம்.

1930இல் தொடங்கும் காலத்தின் அடுத்த எல்லையாக 1990ஐக் கொள்ளின், நடுவில் வரும் அறுபது வருடங்களையும் இலக்கிய வரலாற்று ஊடாட்டங்களின் அடிப்படையிற் பின்வரும் கட்டங்களாக வகுத்துக் கொள்ளலாம்.

1930 - 1960

1960 - 1980

1980 -

முதலில், பிரித்தானிய ஆட்சி முடிவுறும் 1948ஐ ஏன் இறுதி ஓர் எல்லையாகக் கொள்ளவில்லை என்பதை அறிதல் வேண்டும். 1930 முதல் இலங்கையில், பிரித்தானிய ஆட்சித்தாக்கம் காரணமாக மேற்கிளம்பும் தேசஉணர்வு முக்கியமானதாகின்றது. சர்வசன வாக்குரிமை, இனத்துவ அரசியல், இடதுசாரிக் கருத்து நிலைகள் எனப்பல்வேறு சக்திகள் தொழிற்படத் தொடங்கு கின்றன. அவ்வாறு பார்க்கும்பொழுது 1948இலும் பார்க்க 1956 முக்கியமானதை அவதானிக்கலாம். இலங்கையின் இனத்துவ வளர்ச்சியில் இது ஒரு முக்கிய கட்டமாகின்றது. அரசியலில் மாத்திரமல்லாமல் கல்வித் துறையிலும் இக்காலத்தில் முக்கிய மாற்றங்கள் ஏற்படுகின்றன.

சுயமொழி மூலம், கல்வி பல்கலைக்கழக மட்டத்தை எட்டுவதும் இலங்கையின் சமூக-கல்வித்துறைகளில் ஏற்படும் மாற்றமும் முக்கியமானவைகளாகும். இவற்றையும், ஈழத்துத் தமிழிலக்கியத்தில் ஏற்பட்ட மாற்றங்களையும் மனங்கொண்டே ஏறத்தாழ (1960) அறுபதுகளின் தொடக்கம் ஓர் எல்லையாக வரையறை செய்யப்படுகின்றது.

அதேபோன்று எண்பதுகளும் இலங்கையில் சமூக-அரசியல் இருப்பில் மிக அடிப்படையான மாற்றங்களை ஏற்படுத்து கின்றன. 1977இல் தொடங்கப் பெற்ற திறந்த பொருளாதாரமும், விரிந்து சென்று ஒரு மைல்கல்லாகின்றது. இலக்கியத்திலும் இந்த மாற்றங்கள் தென்படத் தொடங்குகின்றன. இலக்கியமும் வரலாறும் ஒன்றையொன்று பாதிக்கும் தன்மையை நன்கு அவதானிக்கலாம்.

1990களில் தொடங்கும் பண்புகளின் தொடர்ச்சியை இப்பொழுது (2000) காணக்கூடியதாகவே இருக்கின்றது.

## 1930 – 1960க் காலப்பகுதி

1.* புதினப் பத்திரிகைகளின் தொடக்கமும், அவற்றினால் ஏற்படும் தாக்கங்களும்.

1930 - ஈழகேசரி
1930 - வீரகேசரி
1932 - தினகரன்

1. எழுத்தறிவு விருத்தி ஏற்படுத்தும், சமூக சனநாயகத்தின் முதற் படிக்கல்லாக இதனைக் கொள்ளல் வேண்டும்.

2. தமிழ்மொழி முற்றிலும் நவீன சூழலிற் பயன்படுத்தப்படும் பண்பு தொடங்குகின்றது. (செய்திகள், விளம்பரம் முதலியன)

3. நவீன தமிழிலக்கிய வடிவங்களின் வருகை - இப்பத்திரிகை களின் மூலம் நாவல், சிறுகதை ஆகிய வடிவங்கள் சனரஞ்சக மாகின்றன.

   வீரகேசரியின் எச். நல்லையா, கே.வி.எஸ். வாஸின் நூல்கள்

   ஈழகேசரியில் கசின் எழுதிய சத்தியதீசி என்றதோர் நாவல்.

4. இலங்கையர்கோன், வைத்தியலிங்கம் 1939களில் ஈழகேசரியில் எழுதத் தொடங்கிவிடுகின்றனர்.

2. **இக்காலகட்டத்தின் பிரதான இலக்கிய நடவடிக்கையாக அமைவது மறுமலர்ச்சி இயக்கத்தினது தோற்றமும் (1942) "மறுமலர்ச்சி" எனும் சஞ்சிகையின் தொடக்கமும் (1946) ஆகும்.**

* சுப்பிரமணிய பாரதியார் தமிழில் ஏற்படுத்திய தாக்கத்தை ஏற்றுக்கொண்டு, அத்தகைய ஒரு பாரதி யுகம் இலங்கையிலும் ஏற்படவேண்டும் என்பதற்காக உழைத்த பத்திரிகை.

* கவிதை இவர்களது பிரதான வெளிப்பாட்டுத்துறையாயிற் றெனினும், சிறுகதை, கட்டுரை முதலிய துறைகளும் துலங்கத் தொடங்கின.

* மறுமலர்ச்சி இயக்கத்தின் பிரதான சாதனை ஈழத்துத் தமிழிலக்கியத்தை நவீன தமிழிலக்கிய வட்டத்தினுட் கொண்டு வந்தமையாகும்.

* இந்த இயக்கத்தில் முக்கிய இடம்பெற்றோர்

**கவிஞர்கள்:** நாவற்குழியூர் நடராசன், சோ. நடராசன், அ.ந. கந்தசாமி, மஹாகவி, சாரதா, செ. கதிரேசர்பிள்ளை, சில்லையூர் மு. செல்லையா.

சிறுகதையாசிரியர்கள்: அ.செ. முருகானந்தம், தி.ச. வரதராசன், அ.ந. கந்தசாமி, கனக செந்திநாதன், சொக்கன், சி. வேலுப் பிள்ளை, தாழையடி சபாரத்தினம்.

3. இக்காலத்தில் பாடசாலைக் கல்வித் தேவைகட்காக எழுதப்பெற்ற இலக்கியம் சார்ந்த நூல்களும் தோன்றின. இவ்வெளியீடுகளின் பிரசுரத்தில்

திருமகள் அழுத்தகமும் இலங்காபிமானி அச்சியந்திர சாலையும் முக்கிய இடம்பெற்றன.

குசேலர் சரித்திரம் - கணேசையர்
பாண்டவர் கதை - பிரான்ஸிஸ் கிங்ஸ்பெறி
இராமன் கதை - "

4. வீரகேசரி, தினகரன் பத்திரிகைகள் காரணமாக அகில இலங்கை மட்டத்தில் நவீன இலக்கியங்கள் (நாவல்கள் சிறுகதைகள், கட்டுரைகள்) வெளிவரத் தொடங்கின.

5. மேலும் இக்காலத்திலே பல சஞ்சிகைகளும் வெளி வந்து கொண்டிருந்தன.

இவை காரணமாகப் பின்வருவோரின் எழுத்தாக்கங்கள் நன்கு தெரியவரலாயின.

பண்டிதமணி சி. கணபதி பிள்ளை
பேராசிரியர் க. கணபதிப் பிள்ளை
நவாலியூர் சோமசுந்தரப் புலவர்
வித்துவான் ச. வேந்தனார்
புலவர்மணி. பெரியதம்பிப் பிள்ளை
பண்டிதர். பொன். கிருஷ்ணபிள்ளை

இக்காலகட்டத்தில் மலையக இலக்கியம் முளைவிடத் தொடங்கிற்று. மலையக மக்களிடையே அதிகம் எழுத்தறிவு பரவாதிருந்தமையால் வாய்வழிப்பாடல் மரபு ஒன்று நிலவிற்று. முக்கிய சமகால விடயங்கள் பற்றிப் பாடி, அப்பாடல்களை அச்சிட்டு விற்கும் மரபு இருந்தது

இக்காலகட்டத்தின் முக்கிய மலையக எழுத்தாளராக மேற்கிளம்பியவர்களுள் சிதம்பரநாதபாவலர் ஒருவராவர்.

மலையகத்தைப் பற்றி ஆங்கிலத்தில் சி.வி. வேலுப்பிள்ளை எழுதினார். இந்தப் பின்புலத்தில் தோன்றிய கே. கணேஷ், இலங்கையின் இடதுசாரி இலக்கிய வளர்ச்சியின் பிதாமகர்களில்

ஒருவராவர். இவர் பதிப்பித்த பாரதி என்னும் சஞ்சிகை இலங்கையின் முக்கியமான நவீன சஞ்சிகைகளில் ஒன்றாகும்.

6. மட்டக்களப்பில் சுவாமி விபுலானந்தர் மிக முக்கியமான இலக்கியமையமாக விளங்கினார்.

1940களில் பின்கூற்றிலிருந்து மட்டக்களப்பிற் தமிழுணர்ச்சி கொண்ட பகுத்தறிவு இலக்கியம் ஒன்று இலக்கிய முதனிலை பெறுகிறது. இந்த இயக்கத்தில் சா. இ. கமலநாதன், எஸ்.டி. சிவநாயகம், காசி ஆனந்தன் ஆகியோர் முக்கிய இடம் வகித்தனர். இந்த இயக்கத்தினர் 50களில் தமிழரசுக்கட்சியுடன் இணைந்து கொள்கின்றனர்.

இக்காலத்தில் முஸ்லீம் எழுத்தாளராக இருந்தவர் பித்தன் கே.எம். ஷா என்ற சிறுகதையாசிரியராவார்.

50களிலே கவிதை எழுதத் தொடங்கிய ராஜபாரதி, நீலாவணன் முதலியோரும் முக்கிய கவிஞர்களாவர்.

கிழக்கிலங்கையின் இன்னொரு பகுதியாகிய திரிகோண மலை மூதூர் பகுதிகளிலிருந்து வ.அ. இராசரத்தினம் முக்கிய சிறுகதை ஆசிரியராக மிளிரத் தொடங்குகிறார்.

7. 1930-1960க் காலப் பகுதியில் குறிப்பாக ஐம்பதுகளில், தமிழ்மொழி மூலம் கல்வி வளரத் தொடங்க உலகப் பிரசித்தி பெற்ற ஆங்கிலப் பாடநூல்கள் பல மொழிபெயர்க்கப்பட்டன. இக்காலத்தில் அரச கருமமொழித் திணைக்களம் இந்தப் பாடப் புத்தக மொழிபெயர்ப்புக்குப் பொறுப்பாயிருந்தது. அடுத்து வரும் காலப் பகுதிகளில் இது கல்வி வெளியீட்டுத் திணைக் களத்தின் பணியாக்கப்பெற்றது.

8. நாடக எழுத்துக்கள் முக்கியமான இடத்தைப் பெறத் தொடங்கின. பேராசிரியர் கணபதிப்பிள்ளையின் யாழ்ப்பாணப் பேச்சுமொழித் தமிழ் நாடகங்கள் இத்துறையில் ஒரு முக்கிய மைல்கல்லாகின்றன. நானாடகம் (1940), இருநாடகம் (1952), சங்கிலி (1956) ஆகியன முக்கியமானவை. சங்கிலி செந்தமிழில் அமைந்தது. பேரா. கணபதிப்பிள்ளையின் தவறான எண்ணம், சங்கிலி ஆகியவற்றுடன் ஈழத்தின் நவீன நாடகத்தில் அரசியல் விடயங்கள் இடம்பெறத் தொடங்குகின்றன. 1956 முதல் இலங்கைக் கலைக்கழகத்தின் தமிழ் நாடகக்குழு பாரம்பரியக் கூத்து மரபுக்குப் புத்துயிரளிக்கும் பணியினை ஆரம்பிக்கின்றது.

## 1960 – 1980

இக்காலப் பகுதியின் பிரதான அமிசங்கள் மூன்றாகும்.

1. அடிநிலைச் சமூக மட்டத்திலிருந்து வந்த எழுத்தாளர்கள்- தானியல், டொமினிக் ஜீவா.
2. பல்கலைக்கழகத் தமிழ்மொழி மூலம் பட்டதாரி எழுத்தாளர்கள் - செங்கை ஆழியான், செம்பியன் செல்வன், செ. கதிர்காமநாதன், யோகநாதன், யோ. பெனடிக்ற்பாலன்.
3. 1972-77க் காலப் பகுதியில் நிலவிய, தமிழகத்து வணிகச் சஞ்சிகைகளுக்கான கட்டுப்பாடு இலங்கையின் சனரஞ்சக இலக்கியம் வளருவதற்கான வாய்ப்புக்களை அதிகரித்தது.

### 1. முற்போக்கு இலக்கியவாதத்தின் எழுச்சி

* இலங்கையின் வரலாற்றில் முதல் தடவையாக குறிப்பிட்ட சமூக அரசியற் கருத்துநிலையொன்றினைத் தளமாகக் கொண்ட ஓர் இலக்கியக் கழகம் தொழிற் படத் தொடங்குகின்றது. இலக்கியத்தின் சமூக-அரசியற் பயன்பாட்டினை இது பிரதானப்படுத்தியது.
* 1945ல் தொடங்கப்பெற்று 1954 முதல் செயற்பாடுடன் இயங்கிய இவ்விலக்கிய இயக்கம், 60களின் முக்கியமான இலக்கிய சக்தியாக விளங்கியது. 1966 அளவில் ஏற்பட்ட பொதுவுடைமைக்கட்சிப் பிளவினாற் பாதிக்கப் பெற்றது. இவ்வியக்கத்தின் இலக்கிய முதன்மை 60கள் முழுவதிலும் நிலவியதெனலாம்.
* இதன் முதன்மைக் காலத்தில் மூன்று இலக்கியக் கோஷங்கள் முன்வைக்கப்பட்டன. முதலில் (1957-1960) "ஈழத்து இலக்கியம்" என்ற கோஷம் முன்வைக்கப்பட்டது. ஈழத்தின் தனித்துவமான இலக்கியப் பாரம்பரியம் நிலை நிறுத்தப்பட வேண்டுமென்றும், ஈழத்து இலக்கியத்தில் அக்கறை கொண்டுள்ள இலக்கிய சக்திகள் யாவும் ஒன்றுபடல் வேண்டுமென்றும் வற்புறுத்தப்பட்டன. அடுத்து "தேசிய இலக்கியம்" என்பது. இதன் வழக்கு இலங்கையின் தமிழிலக்கியம் தமிழ்நாட்டின் பிரதியாக அமையாது இலங்கையின் தேசியப் பிரச்சினைகளுக்கு முக்கிய இடம் கொடுப்பதாக, முக்கியமான சிங்கள

தமிழ் உறவுக்கு முக்கியத்துவம் அளிப்பதாக அமைதல் வேண்டுமென்பது இதனாற் கருதப்பட்டது. மூன்றாவது "மண்வாசனை" என்பது. அதாவது அவ்வாறு எழுதப் படுகின்ற இலக்கியங்கள், இலங்கையின் மண்ணைப் பிரதிபலிப்பதாக, அவ்வப் பிரதேசங்களுக்குரிய பிரச்சினைகளை எடுத்துக்கூறுவதாக அமைய வேண்டுமென வற்புறுத்திற்று. ''யதார்த்தம்'' எனும் இலக்கியக் கொள்கை வற்புறுத்தப்பட்டது எனலாம்.

இந்தக் கொள்கைகள் காரணமாக, இவ்விலக்கிய இயக்கம், இலங்கையில் நிலவிய சகல தமிழ் பேசும் இனக் குழுக்களின், பிரதேசங்களின் நவீன தமிழ் இலக்கிய முயற்சிகளை ஒருங்கிணைத்தது. இதனால் யாழ்ப் பாணம், மட்டக்களப்பு, வன்னி மலையகம் என்று பேத மில்லாமல், தமிழர்-முஸ்லிம்கள் என்ற பேதமில்லாமல் தமிழ் பேசும் கலைஞர்கள், எழுத்தாளர்களை ஒருங்கிணைக்கும் ஒரு சக்தியாக இது தொழிற்பட்டது. இவ்வாறு புதிய இலக்கியக் கொள்கைகளுக்குப் போராடிய இவ்விலக்கிய இயக்கம், அது ஊக்குவித்த இலக்கியப்போக்குக் காரணமாகத் (பேச்சுவழக்குச் சொற் பயன்பாடு; சமூக சமத்துவம் வற்புறுத்தப்படல், சிறுகதை நாவலுக்கு முக்கியத்துவம் கொடுத்தல்) தமிழிற் பாரம்பரியமாகப் பழைமையைப் பேணும் இலக்கிய வாதிகளுடன் முரண்பட வேண்டிய தேவையொன்று ஏற்பட்டது. இதுவே மரபுப்போராட்டம் என முகிழ்த்த போராட்டமாகும். இதனை முற்போக்கு இலக்கிய இயக்கத்தின் முன்னணி எழுத்தாளர் முன்னின்று நடத்தினர்.

இவ்விலக்கியப் போக்குக்கு எதிர்ப்புமிருந்தது. அவ்வெதிர்ப்பு குறிப்பாக அறுபதுகளின் பிற்பகுதியில் வன்மையுடன் முன்வைக்கப்பட்டது. அது முதலில் தனிப்பட்ட எழுத்தாளர்களின் எதிர்ப்பாகவும், பின்னர் கோட்பாட்டு நிலைப்பட்ட எதிர்ப்பாகவும் வெளிப்பட்டது. கோட்பாட்டு நிலையில் வெளிப்படுத்தப்பட்ட எதிர்ப்பில் முக்கியமானது மு. தளையசிங்கம் முன் வைத்த கருத்தாகும். சமூக சமத்துவம், பொருளாதார இன்னல் விடுவிப்பு ஆகியனவற்றுக்கு முக்கிய இடம்கொடுக்கும் அதேவேளையில் இலக்கியம் ஆன்மீக நிறைவுக்கும் இடமளிப்பதாக இருத்தல் வேண்டுமென்பதே அக்கருத்தாகும்.

முற்போக்கு இலக்கிய இயக்கத்தின் மிகப் பிரதானமான சாதனை, யாழ்ப்பாணத்தில் ஒரு புதிய தலைமுறை சிறுகதை எழுத்தாளர்களைத் தோற்றுவித்தமையாகும். சமூக அடிநிலையினரான இவர்கள் தமது பிரச்சினைகளை, தமக்கு எதிரான சமூக ஒடுக்கு முறைகளைத் தாமே எழுதினர். இது தமிழிலக்கியத்திலேயே முதன்முதலில் நடந்த ஓர் இலக்கிய நிகழ்வாகும். டானியல், ஜீவா, என்.கே. ரகுநாதன் முதலியோர் இத்துறையிற் சாதனைகள் பல புரிந்தனர். இவர்களை விட யோகநாதன், பெனடிக்ற்பாலன், கதிர்காமநாதன் எனப்படும் முக்கிய எழுத்தாளர்கள் தோன்றினர். மட்டக்களப்பில் முற்போக்கு இயக்கத்தின் தாக்கம் கவிதைத் துறையிலேயே மிகத் துல்லியமாகக் தெரியத் தொடங்குகிறது. சண்முகம் சிவலிங்கம், எம்.ஏ. நுஃமான் முதலிய முக்கிய கவிஞர்கள் தோன்றுகிறார்கள். முஸ்லிம்களினாலே தமது சமூகப் பிரச்சினைகளை முன்னிறுத்திச் சிறுகதை எழுதிய முக்கிய எழுத்தாளர்கள் பலர் இக்காலகட்டத்திலே தோன்றினர். எம்.எச்.எம். றமிஸ், திக்குவெல்லைக் கமால், நீள்கரைநம்பி, எம்.ஐ.எம். ஹம்ஸா.

நாவல் துறையில் இளங்கீரன், செ. கணேசலிங்கன் முதலியோர் முன்னணியில் நின்றனர்.

கவிதைத்துறையில் முருகையன், சில்லையூர் செல்வராசன் புரட்சிக்கமல் முதலியோர் முக்கியப்பட்டனர்.

இக்காலத்தில் எழுதிய மிகமுக்கிய கவிஞர்களில் ஒருவர் மஹாகவி ஆவார். இவர் முற்போக்கு இலக்கிய இயக்கத்தைச் சார்ந்தவரல்ல. எனினும் அவருடைய கவிதைகளில் இந்த நாட்டின் வாழ்க்கை முறைமையைச் சித்திரிக்கும் பல விடயங்கள் மிக முக்கிய இடம்பெற்றன. மிகுந்த நுண்ணுணர்வுடன் கவிதை படைக்கும் மஹாகவியும் முருகையனும் நீலாவணனும் இக்கால கட்டத்தில் பிரதான கவிஞர்களாவர்.

இக்காலப் பகுதியில் தொழிற்பட்ட பிரதான புனைகதை ஆசிரியர்களாகப் பின்வருவோரைக் குறிப்பிடலாம்.

டானியல், டொமினிக் ஜீவா, என்.கே. ரகுநாதன், கே.வி. நடராஜன், எஸ். பொன்னுத்துரை, பித்தன், அப்துற்ஸமது, என்.எம்.எஸ். ராமையா, வெளிவத்தை ஜோசப், செம்பியன் செல்வன், செங்கையாழியான், செ. கதிர்காமநாதன், நீர்வை பொன்னையன், பெனடிக்ற்பாலன், இவர்களைத் தொடர்ந்து அ. யோசுராசா, சாந்தன், டானியல் ஜீவா, அந்தனிஜீவா, தெணியான், சட்டநாதன், முருகபூபதி.

நாவலாசிரியர்களாக விளங்கியவர்களில் டானியல் (பஞ்சமர்) செ. கணேசலிங்கன் (சடங்கு) இளங்கீரன் (நீதியே நீ கேள்) செங்கையாழியான் (வாடைக்காற்று, காட்டாறு) தெணியான், சாந்தன் முக்கியமானவர்களாவர்.

கவிதைத் துறையில் 1970 முதல் புதுக்கவிதை முக்கிய இடம்பெறத் தொடங்குகின்றது. இலங்கையின் முக்கிய புதுக்கவிதைப் படைப்பாளிகளாக தா. ராமலிங்கம், சிவனேசன், வ.ஐ.ச. ஜெயபாலன் மேற்கிளம்பினர்.

* இக்காலகட்டத்தின் முக்கிய பண்புகளில் ஒன்று இலக்கிய விமர்சனத்தின் வளர்ச்சியாகும். இத்துறையில் மிக முக்கிய மானவர்களாக எடுத்துப் பேசப்படுவர்கள் க. கைலாசபதி, கா. சிவத்தம்பி, மு. தளையசிங்கம் ஆகியோராவர்.
* இக்காலகட்டத்தில் மிக முக்கிய பண்புகளில் ஒன்று இலங்கையில் தோன்றிய இலக்கியப் படைப்புகளுக்கும், விமர்சனங்களுக்கும் தமிழகத்திலே கிடைத்த வரவேற்பாகும்.
* தமிழ்மொழி மூலம் உயர்கல்வி காரணமாகப் பொருளாதாரம், வரலாறு, அறிவியல் ஆகிய துறைகளில் முக்கிய நூல்கள் எழுதப்படலாயின. கல்வி வெளியீட்டுத் திணைக்களம் பிரசித்தி பெற்ற ஆங்கிலப் பாடநூல்களைத் தமிழில் மொழிபெயர்த்தது.
* நாடகத்துறையில் இக்காலகட்டத்தில் மரபு வழிக் கூத்துக்கள் முக்கிய மடையத் தொடங்கவே ஏட்டு வடிவிலிருந்த கூத்துக்கள் பதிப்பிக்கப்பெற்றன. (உ-ம்: சு. வித்தியானந்தன் - மூவிராசாக்கள் நாடகம், அலங்கார ரூபன் நாடகம், வீ.சி. கந்தையா - இராமநாடகம், கா. சிவத்தம்பி - மார்க்கண்டன், வாளபிமன் நாடகம், சொக்கன், தேவன் முதலிய பலரின் நவீன நாடகங்களும் பிரசுரிக்கப்பட்டன.
* இக்காலகட்டத்து இலக்கிய வளர்ச்சியில் செய்திப் பத்திரிகைகளின் ஞாயிறு இதழ்கள் முக்கிய பங்காற்றின. (தினகரன், வீரசேகரி)

### 1980–2000 போர்க்கால இலக்கியம்

எண்பதுகள் இலங்கையின் வரலாற்றில் மிக முக்கியமான ஒரு தசாப்தமாக அமைந்துவிட்டன. இலங்கையின் பிரதான

இனங்களான சிங்களவர் தமிழரிடையே ஏற்பட்ட இனக் குழுமப் போர்க்கால இலக்கியப் போராட்டம் ஒருபுற மாகவும், மறுபுறத்தில் 1977இல் தொடங்கிய திறந்த பொருளாதாரக் கொள்கை காரணமாக உள்வந்த வெகுசனப் பண்பாடு (mass culture) காரணமாகவும் இலக்கியச் செல்நெறியில் மிக முக்கிய மாற்றங்கள் ஏற்பட்டன.

எண்பதுகளில் ஏற்பட்ட மிக முக்கிய திருப்பம் கவிதையிலேயே ஏற்பட்டது. இக்காலப் பிரிவிற் சேரன், விஜேந்திரன், சோலைக்கிளி, நட்சத்திரன் செவ்விந்தியன் என முக்கிய கவிஞர் பலர் மேற்கிளம்பினர். இலங்கைத் தமிழிலக்கியத்தில் ஏற்பட்ட மாற்றங்களைச் சேரன் கவிதைகள் நன்கு பிரதிபலிக்கின்றன. புதுக்கவிதை மிக முக்கியமான கவிதை வடிவமாக மேற்கிளம்பிற்று. இதனூடே மரபுக் கவிதையின் சமகால முக்கியத்துவம் குன்றத் தொடங்கிற்று என்றும் கூறலாம். இக்காலப் பகுதியில் ஏற்பட்ட சமூக, அரசியல் மாற்றங்களை உள்வாங்கி எழுதுவதில், ஏற்கனவே எழுதி வந்தோருடன் சில புதிய தலைமுறையினரும் காணப்பட்டனர். அவர்களுள் முக்கியப்படுவோராக ரஞ்சகுமார், சுதாராஜ், உமா வரதராஜன் ஆகியோரைக் குறிப்பிடலாம்.

இக்காலப் பகுதியில் "புலம்பெயர் இலக்கியம்" எனும் ஒரு முக்கிய இயங்கியல் வளர்ச்சி காணப்பட்டது. இலங்கையில் நிலவிய நிலைமைகள் காரணமாக ஐரோப்பிய நாடுகளுக்குச் சென்ற எழுத்தாளர்கள் தமது அநுபவங்களை அவ்வந்நாடு களிலிருந்து வெளியிடத் தொடங்கினர். இவையே புலம்பெயர் இலக்கியம் எனப் போற்றப்பட்டன. நோர்வே, கனடா, இங்கிலாந்து, பிரான்சு, ஜெர்மனி, அவுஸ்திரேலியா ஆகிய நாடுகளிலிருந்து வந்த தமிழ்ச் சஞ்சிகைகளில் இவர்களது இலக்கியங்கள் பிரசுரமாகின.

## புலம்பெயர் இலக்கியங்கள்

இலங்கைத் தமிழர்கள் காலனித்துவ உத்தியோகத்தர் களாகவும், தொழிலாளர்களாகவும் 20ம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் மலாயா நாடுகளுக்குச் சென்றனர். எனினும் அரசியல் காரணங்களுக்கான பெயர்வு 1956இலிருந்து தொடங்குகிறது என்லாம். இலங்கையின் தனிச் சிங்களச் சட்டம், அதனுடன் காரண காரியத் தொடர்பு கொண்ட இனக்கலவரங்கள் முதலில் புலமைத்

தொழிலில் ஈடுபட்டிருந்த வைத்தியர்கள், பொறியியலாளர்கள், ஆசிரியர்கள் ஆகியோர் பலரை வெளியேறச் செய்தன. இத்தகையோர் ஆங்கில அறிவு நன்கு வரப்பெற்றவர்களாக இருந்தமையினால் இவர்கள் பெரும்பாலும் கனடா, இங்கிலாந்து, அவுஸ்திரேலியா ஆகிய ஆங்கில மரபு சார்ந்த நாடுகளுக்கே சென்றனர். இவ்விடங்களில் இவர்கள் தங்கள் மத (இந்து) அடையாளத்தைப் பேணுவதில் காட்டிய சிரத்தையை மொழி அடையாளத்தைப் பேணுவதில் காட்ட முடியவில்லை. அத் தேவையும் அவர்களுக்கிருக்கவில்லை.

1960களிலிருந்தே நிலைமை மாற்றம் அடைகிறது. மத்திய கிழக்கில் தேவைப்பட்ட உடல் வலுசார்ந்த, நிபுணத்துவம் வேண்டப்படாத தொழில்களுக்கான பயணங்கள் மேற் கொள்ளப்படத் தொடங்கின. இவை இலங்கையின் வடகிழக்குப் பகுதிகளின் சமூகச் சமநிலைகளை மாற்றியமைக்கத் தொடங்கின. பணப்பகிர்வு, படிப்பு, சாதி மட்டங்களை ஊடறுத்து நிகழத் தொடங்கிற்று.

1970களின் நடுக்கூற்றிலிருந்து தொடங்கி 84இலிருந்து வலுப்பெறத் தொடங்கும் படையினர் கெடுபிடிகாரணமாகவும், போர்ச்சூழல் காரணமாகவும் ஏற்பட்ட தொழிலின்மை, தொழில் வாய்ப்பின்மை காரணமாகவும் அகதிகளாக வெளியேறத் தொடங்கும் ஒரு போக்கு ஆரம்பமாகியது. தமிழ் இளைஞர்களும் யுவதிகளும் போராட்டங்களிலும் இயக்கங்களிலும் ஈடுபடுவதைத் தவிர்க்க முடியாத நிலைமை முனைப்பெய்த பெற்றோர்கள் தங்கள் பிள்ளைகளை இந்தச் சூழல்களிலிருந்து விடுவித்துக் கொள்வதற்காகப் பிற நாடுகளுக்கு அனுப்பும் ஒரு சூழலும் ஏற்பட்டது. இதற்குமேல் இயக்க நடவடிக்கைகள் காரணமாகவும் இயக்க மோதல்கள் காரணமாகவும் மேலும் பல இளைஞர்கள் வெளியேற வேண்டிய தேவை ஏற்பட்டது. கொழும்பில் இருக்க முடியாத சூழல், தமிழகத்தில் நிலைகொள்ள முடியாத நிலை ஆகியன இவர்களை மேல்நாடுகள் பக்கம் திருப்பின. ஒரு கட்டத்திலிருந்து ஏறத்தாழ 1980களின் பிற்கூற்றிலிருந்து சென்றவர்களின் குடும்பங்கள் அவ்வந் நாடுகளுக்குச் சட்டரீதியாகவும், களவாகவும் போக வேண்டிய நிலைமை ஏற்பட்டது. இவர்கள் 1960களில் சென்றவர்கள் போன்று பிறமொழி அறிவு எதுவுமற்றவர்கள். இவர்கள் ஆங்கிலச் சார்பற்ற பிரான்ஸ், நோர்வே, ஜெர்மனி, சுவிட்ஸர்லாந்து, இத்தாலி என்பனவற்றில் குடியேறுவதற்கான வாய்ப்புக் கிட்டிற்று.

ஆங்கில மரபு சார்ந்த நாடுகளிலே கனடா ஒன்றே இடமளிக்கக் கூடியதாகவிருந்தது. கல்வித்தராதரம் உள்ளவர்கள் பெரும்பாலும் அவுஸ்திரேலியாவிற்குக் குடிபெயர்ந்தார்கள். இங்கிலாந்தின் அடிநிலை உடல் உழைப்புத் தொழில்களுக்கென பலர் சென்று சேர்ந்தனர். இவ்வாறாக ஏறத்தாழ 3-5 இலட்சம்பேர் வெளியேறினர். இவர்களிற்பலர் இளைஞர்கள், தமிழ் மாத்திரமே தெரிந்தவர்கள். இவர்களில் சிலர் ஏற்கனவே இலக்கியப் பரிச்சயம் உடையவர்கள், எழுத்தாளர்களாக இருந்தவர்கள். இத்தகையோர் அவ்வந்நாடுகளிலிருந்து கொண்டு, தாங்கள் அநுபவித்த துயர்கள் பற்றி, தங்களைச் சூழவுள்ள பண்பாட்டு மோதுகைகள் பற்றித் தமிழிலே தம்மொழியிலேயே எழுதத் தொடங்கினர். மேற்குநாடுகளிலுள்ள தொழில்நுட்பவாய்ப்புக்கள் இவர்களது வெளியீடுகளுக்கு கவர்ச்சியையும் செழுமையையும் அளித்தன. ஏறத்தாழ ஒவ்வொரு சஞ்சிகைகள் வெளிவந்தன.

| | |
|---|---|
| நோர்வே | சுவடுகள் |
| பிரான்ஸ் | புதுமை |
| ஜெர்மனி | தாயகம் |
| சுவிட்ஸர்லாந்து | மனிதம் |
| இத்தாலி | -- |
| ஹொலண்ட் | -- |
| கனடா | நான்காவது பரிமாணம் |

இந்த வெளியீடுகளுக்கான தளமாகத் தமிழகம் அமைந்தது. அதற்கு மேலாக இவர்கள் வாழுமிடங்கள் தமிழகத்து வெளியீடுகளுக்கான சந்தைகளுமாயின. இதுதான் புகலிட இலக்கியத்தின் சமூகப் பொருளியல் பின்புலம்.

ஆனால் இலக்கிய நிலையில் இந்த எழுத்துக்கள் தமிழிலக்கிய வரலாற்றிலேயே இதுகால வரையில் காணப்படாத ஒரு பரிமாணத்தைத் தந்தன. ஏற்கனவே ஈழத்தில் பெயர் பெற்றிருந்த பல எழுத்தாளர்கள் புலம்பெயர்ந்து அந்நிலையில் மிக முக்கியமான படைப்புக்களைக் கொண்டு வந்தனர். அத்தகையோரில் இராஜேஸ்வரி பாலசுப்பிரமணியம், வ.ஐ.ச. ஜெயபாலன், சேரன், முருகபூபதி, மகாலிங்கன் முதலியோர் சுட்டிக்குறிப்பிடத்தக்கவர்கள். இன்னொரு குழுவினர் ஈழத்தில் தமது ஈடுபாட்டைத் தொடங்கி அங்குச் சென்று கலைச் செழுமையும், உணர்ச்சி முதிர்ச்சியுமுள்ள படைப்புகளைக்

கொண்டு வந்தனர். இத்தகையோரில் பெயர் சுட்டிக் குறிப்பிடப்பட வேண்டியவர்கள்:

கவிதை - இளவாலை விஜேந்திரன், கி.பி. அரவிந்தன், நட்சத்திரன், செவ்விந்திரன், தமயந்தி, மைத்ரி ஆகியோராவார்.

சிறுகதை - பார்த்திபன்

நாவல் - பொ. கருணாகரமூர்த்தி, தேவகாந்தன்

புலம்பெயர் இலக்கியத்தின் செழுமையை வளப்படுத்தியவர்களுள் அ. முத்துலிங்கம், எஸ். பொன்னுத்துரை ஆகியோர் இணைந்து கொள்கின்றனர். மேலும், இலக்கியச் செயற்பாடுகளில் ஈடுபாடு காட்டி வந்துள்ள பத்மநாப ஐயர் போன்றோர் இந்த வெளியீடுகட்கு ஒரு முனைப்பும் முழுமையும் வழங்கினர்.

இந்தப் புகலிட இலக்கியங்கள் ஈழத்துத் தமிழிலக்கியத்தின் ஒரு விஸ்தரிப்பாக அமைகின்ற அதே வேளையில் 1960 முதல் ஐரோப்பிய, அமெரிக்கச் சூழலில் படிப்படியாக முக்கியத்துவம் பெற்று வந்துள்ள குடிப்பெயர்வு இலக்கியங்கள் (Migrant Literature) என்ற வகையைச் சார்ந்தவை. பல்வேறு நாடுகளிலிருந்து சென்றவர்கள் குறிப்பாக அமெரிக்கா, கனடா நாடுகளில் தங்கள் தங்கள் அநுபவங்களை ஆங்கிலத்தில் பதிவு செய்து கொண்டனர். அதனால் கனேடிய (ஆங்கிலத்தின்) இலக்கியத்தின் செழுமை விரிவுற்றது எனலாம்.

ஈழத்தமிழரின் புகலிட ஆக்கங்களில் பல தம் இலக்கியச் சிறப்புக் காரணமாக மேற்கூறிய இலக்கிய கவனத்தை நிச்சயமாகப் பெற வேண்டும். புரிதலுள்ள மொழிபெயர்ப்பு வாளிப்பான எடுத்துரைப்பு இந்தப் புலம்பெயர் இலக்கிய வாதிகள் சிலரையாவது தமிழின் வட்டத்துக்கப்பாலே கொண்டு செல்லத்தக்கது. அந்த முயற்சி மேற்கொள்ளப்படவேண்டும். அப்பொழுது ஈழத்துத் தமிழரின் வரலாறும் சோகமும் அதே வேளையில் திறமையும் உலகச் சொத்துக்களாகும்.

**பின்குறிப்பு: இத்தகைய ஒரு மொழிபெயர்ப்புத் தொகுதியினை பத்மநாப ஐயர் போன்றோரின் உதவியுடன் பேராசிரியர் செல்வா கனகநாயகம் வெளிக் கொணர்ந்துள்ளார்.**

# மலேசியா

**வி. சபாபதி**

வரலாற்று ஆராய்ச்சிகளின் கணிப்பின்படி மலேசியாவிற்கும் இந்தியாவிற்கும் சிறப்பாகத் தமிழகத்திற்கும் ஏறக்குறைய 2000 ஆண்டு காலமாகத் தொடர்பு இருந்ததாக அறியப்படுகின்றது. 1840ஆம் ஆண்டு ஜேம்ஸ் லோ (James Low) அவர்கள் மேற்கொண்ட புதைபொருள் ஆராய்ச்சியின் கருத்துப்படி பல நூற்றாண்டுகளுக்கு முன்பே கெடா, பினாங்கு ஆகிய பகுதிகளில் இந்தியர்கள் குடியேறி வாழ்ந்ததற்கான சான்றுகள் உள்ளன. இந்தியாவுடனும் குறிப்பாகத் தமிழகத்துடனும் மலாயா நாட்டிற்கு இருந்த தொடர்பினை டாக்டர் குவார்ட்ஸ் வேல்ஸ் சுட்டிக்காட்டுகின்றார். இத்தொடர்பு ஒரு வளமிக்க நாகரிகத்தின் விளைவாக ஏற்பட்ட ஒன்று. தற்சமயம் அந்தக் குடியேற்ற நிலைகள் வெறும் நினைவுகளாக மட்டுமே இருக்கின்றன.

அடுத்த நிலையில் அதாவது 18ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் ஏற்பட்ட தொடர்பே இன்று மலேசியா நாட்டில் வாழும் தமிழர்களின் நிலையை உறுதி செய்வதாக இருக்கின்றது. இவ்வகையில் குடியேறிய தமிழர்களும் அவர்களது சந்ததிகளும் தற்பொழுது தமிழ்மொழி பேசும் மலேசியர்களாக வாழ்கின்றனர். இத்தொடர்பு முன்கூறிய பண்பாட்டின் மூலமாகவோ, வாணிபத்தின் மூலமாகவோ ஏற்பட்ட ஒன்றல்ல. ஆங்கில ஆட்சியில் அடிமைப்பட்டிருந்த இரண்டு நாடுகளின் ஒன்றிலிருந்து மற்றொன்றிற்கு வேலை நிமித்தமாக வந்த தொழிலாளர்களால் ஏற்பட்ட தொடர்பு. 1786இல் பினாங்கு பிரிட்டிஷ் ஆட்சிக்கு உட்பட்டது. அன்றிலிருந்து 20ஆம் நூற்றாண்டு வரை மலாயாவுக்கு வந்தவர்கள் 95% தோட்டத் தொழிலாளர்களே. ரப்பர், கரும்பு, காப்பி, தென்னை போன்ற தோட்டங்கள் பெருகப் பெருக இந்தியத் தொழிலாளர்களின் குடியேற்றமும் வளர்ந்தது. இவ்வெண்ணிக்கை 1860-1957 காலப்பகுதியில் சுமார் நாற்பது இலட்சம் என்று கணக்கிடப் பட்டது. எனினும், அவர்களுள் இருபத்தெட்டு லட்சம் மக்கள் மீண்டும் தங்கள் தாயகமான தமிழகத்திற்குத் திரும்பி விட்டனர்.

தமிழ்மக்கள் பெரிய அளவில் மலாயாவில் குடியேறியதற்குப் பல காரணங்கள் உள்ளன. முதலாவதாக மலாயாவின் பொருளாதாரம் பெருகப் பெருக மக்களின்

குடியேற்றமும் பெருகியது. இரண்டாவது பொருள்களை உற்பத்தி செய்யும் நிலையிலிருந்து பொருள்களை விற்கும் சந்தையாக இந்நாடு மாறியமையும் மற்றொரு காரணமாகும். மூன்றாவது, தென்னிந்தியர்கள் குறிப்பாகத் தமிழர்களின் கடுமையான உழைப்பு, பணிவு, மலிவாகக் கிடைக்கும் உழைப்பு, நிர்வாகத்திற்கு அடங்கிப் போகும் இயல்பு ஆகியன வெள்ளைக்கார முதலாளிகளை ஊக்குவித்தன. தாய்நாட்டின் சமூக-பொருளாதாரப் பிரச்சினைகளும் அவர்கள் நாடு பெயர ஊக்குவித்தன. இந்நாட்டிற்கு வந்த தமிழர்கள் பல பிரச்சினைகளுள் சிக்குண்டு அவதிபட்டவர்கள் என்றாலும் மலாயா நாட்டுத் தமிழ் இலக்கியத் தோற்றத்திற்கு விதை விதைத்தனர்.

அன்று வாழ்ந்த தமிழர்கள் தமிழையும் தமிழ்ப் பண்பாட்டுக் கூறுகளையும் மனதில் நிறுத்தி இன்றுவரை மலேசியத் தமிழ் இலக்கியம் என்ற ஒன்று உருவாகுவதற்கு உறுதுணை புரிந்தனர். ஆரம்ப முயற்சிகள் யாவும் தமிழ்மொழியையும் சமயத்தையும் காக்கும் நிலையில் இருந்தன. பெரும்பாலான தமிழர்கள் தோட்டப் புறங்களில் வாழ்ந்ததால் தமிழ்மொழி தோட்டங்களிலேயே முதலில் கால் ஊன்றியது. முதன்முதலில் 1821ஆம் ஆண்டு பினாங்கு மாநிலத்தில் ஒரு தமிழ்ப்பள்ளி ஆரம்பிக்கப்பட்டது. அதனைத் தொடர்ந்து கோயில்கள், சமயத்தோடு தொடர்புடைய நிறுவனங்கள் மற்றும் பல சங்கங்களும் தமிழ் வளர உதவின.

தாயகத்தைவிட்டுப் பிழைக்க வந்த தமிழர்கள் மலையகத்தைத் தங்கள் தாய்நாடு என்று கருதினர். பல வகையில் அவர்கள் அடிமைப்பட்டிருந்தாலும் மலையகத்தைத் தாய்நாடாகக் கருதித் தமிழை நிலைநிறுத்துவதற்கு அரும்பாடு பட்டனர். இதனால் தமிழிலேயே நூல்கள் வெளிவரத் தொடங்கின. தமிழ்நாட்டு நூல்களை மட்டுமல்லாமல் அதே போக்கில் இந்நாட்டுப் பின்னணியில் பல நூல்களைச் சென்ற நூற்றாண்டிலும் இந்த நூற்றாண்டிலும் வெளியிட்டனர். ஆரம்ப காலத்தில் வெளிவந்த நூல்களுள் குறிப்பிடத்தக்கவை வண்ணை அந்தாதி, வண்ணை நகர் ஊஞ்சல், சிங்கை நகர் அந்தாதி (1887), சல்லாப லாவணி (1893), சீறாச் சதகம் (1900), முருகவேள் பஞ்சரத்தினப் பாமாலை (1928), தண்ணீர் மலை சிவசண்முக நாதனின் பக்திசுர கீர்த்தனை (1929), பினாங்கு தண்ணீர்மலை முருகன் ஆடுமயில் பாடல்கள் (1931), கோலாலம்பூர் பத்துமலை சக்தி வடிவேலர் பேரில் காவடி, அலங்கார ஆசிரிய விருத்தம்

(1936), பினாங்கு ஜெனரல் ஆஸ்பித்திரியில் வீரையா செய்த பரிதாபக் கொலைச் சிந்து (1941), மலாயா நாட்டில் வெள்ளத்தால் விளைந்த விபத்தின் சிந்து (1932) ஆகியன. இந்நூல்கள் தமிழ்நாட்டுப் பாணியைச் சார்ந்திருந்தாலும் அவர்களின் இலக்கியம் படைக்கும் வைராக்கியத்தைக் காட்டுகின்றன.

தமிழர்கள் தமிழையும் மலாயாவையும் இரு கண்களாக மதித்துப் பல பத்திரிகைகளையும் தொடங்கினர். தமிழ் அல்லது மலாயா என்ற பெயரில் நாள், வார, மாதம் இரு முறை, திங்கள் இதழ்கள் அதிகமாக வெளிவந்தன. தமிழகம் (1923), தமிழரசி (1929), தமிழரசு (1931), தமிழர் பாதுகாவலன் (1932), தமிழன் (1933), தமிழன் குரல் (1958), தமிழாசிரியன் (1948), தமிழோசை (1954), தமிழ் ஒளி (1958), தமிழ்க் குயில் (1956), தமிழ்க் கொடி (1939), தமிழ்ச்சுடர் (1948), தமிழ்ச் செல்வன் (1934), தமிழ்த்தாய் (1958), தமிழ்த் தொண்டன் (1933), தமிழ்ப் பூங்கா (1963), தமிழ்ப் பூஞ்சோலை (1946), தமிழ் மணி (1962), தமிழ் ஜோதி (1956) முதலியன தமிழ் என்று தொடங்கிப் பெயரிடப் பெற்ற இதழ்களாகும். அடுத்து மலாயா மித்திரன் (1932), மலாயா (1957), மலாயாத் தூதன் (1932), மலாயா நண்பன் (1948), மலாயா மித்ரன் (1937), மலாயா வர்த்தமணி (1946), மலாய் நாடு (1930), மலாய் மணி (1935), மலாய் மணி (1960), மலேசிய மலர் (1963), மலைநாடு (1958), மலைமகள் (1956), மலைமகள் (1964) ஆகியவை மலாயா என்ற பெயருடன் தொடங்கின. இவை தவிர மலேசியத் தமிழ் இலக்கியத்திற்குத் தமிழ் நேசன் (1923), தமிழ் முரசு (1935), தமிழ் மலர் (1963), மலேசிய நண்பன், தினமணி போன்ற பத்திரிகைகளும் உறுதுணை புரிந்தன.

மலேசியத் தமிழ் மறுமலர்ச்சி இலக்கியங்களாகக் கவிதை, சிறுகதை, நாவல் ஆகியவை விளங்குகின்றன.

# சிங்கப்பூர்

**சுப. திண்ணப்பன்**

உலக வரைபடத்தில் ஒரு சிறிய புள்ளிதான் சிங்கப்பூர். இது தென்கிழக்கு ஆசியாவில் உள்ள ஒரு சிறு தீவு. சிங்கப்பூரின் மக்கள் தொகை 3,440,693 (ஜூலை 1997) ஆகும். இதில் 76.4% சீனர். 14.9% மலாய்க்காரர், 6.4% இந்தியர், 2.3% பிற இனத்தவர். இந்தியருள் தமிழரே (65%) பெரும்பான்மையினர். இந்தியருள் மலையாளிகள், தெலுங்கர்கள், குஜராத்திகள், பஞ்சாபியர், வங்காளிகள் முதலியோரும் அடங்குவர். இங்கு வாழ்வோர்

பௌத்தம், தௌவிசம், கிறித்துவம், இஸ்லாம், இந்து, சீக்கியம் முதலிய சமயங்களைப் பின்பற்றுகின்றனர். சிங்கப்பூரின் தேசிய மொழி (National Language) மலாய்மொழி. நாட்டின் அதிகாரத்துவ மொழிகளாகச் (Official Languages) சீனம், மலாய், தமிழ், ஆங்கிலம் ஆகியவை விளங்குகின்றன. இருப்பினும் ஆங்கிலமே அலுவலக மொழியாகக் கோலோச்சுகிறது; கல்வி நிலையங்களில் பயிற்று மொழியாகவும் விளங்குகிறது.

### வரலாறு

1819இல் ஆங்கிலேயக் கிழக்கிந்தியக் கம்பெனியைச் சார்ந்த சர். ஸ்டாம்ஃபோர்டு இராஃபிள்ஸ், வணிக நோக்கோடு சிங்கப்பூர் வந்தபோது சிங்கப்பூர் ஒரு சிறு மீன்பிடி கிராமமாக ஜொகூர் சுல்தான் ஆதிக்கத்தில் இருந்தது. இதனை ஒப்பந்தத்தின் அடிப்படையில் இராஃபிஸ் அவரிடமிருந்து பெற்றுக் கொண்டார். பிறகு சிங்கப்பூர் ஆங்கிலேயக் கிழக்கிந்தியக் கம்பெனியின் முக்கிய வணிகத் துறைமுகமாக மாறியது. இந்தியாவைத் தலைமையகமாகக் கொண்ட கிழக்கிந்தியக் கம்பெனி இன்றைய மலேசியாவில் உள்ள பினாங்கு, மலாக்கா ஆகிய இரு நகரங்களோடு சிங்கப்பூரையும் சேர்த்துத் தொடுவாய்ப் பகுதிக் குடியேற்ற நாடுகள் (Straits Settlements) என அறிவித்து, நிர்வகித்து வந்தது. 1867இல் தொடுவாய்ப் பகுதிக் குடியேற்ற நாடுகளின் நிர்வாகம் லண்டனின் நேரிடைப் பார்வைக்கு மாற்றப்பட்டது. சிங்கப்பூர் 8-12-1941வரை ஆங்கிலேய அரசில் ஒரு மாநில அந்தஸ்தை (Constitutional Position) பெற்றிருந்தது. 1942இல் ஏற்பட்ட இரண்டாம் உலகப்போரின் போது சிங்கப்பூர் ஜப்பானியர் வசம் ஆயிற்று. 1945 செப்டம்பர் வரை சிங்கப்பூர் ஜப்பானியர் வசம் இருந்தது. 1946 ஏப்ரல் முதலாம் தேதி தொடுவாய்ப் பகுதிக் குடியேற்ற நாடுகள் என்னும் அமைப்பு கலைக்கப்பட்டது. அதன் பின்னர் சிங்கப்பூர் பிரிட்டிஷ் அரசின்கீழ் இயங்கும் தனிக் குடியேற்ற நாடாயிற்று; 1948இல் தேர்ந்தெடுக்கப்பட்ட ஆறு உறுப்பினர்களைக் கொண்ட சட்ட மன்றம் ஒன்று அமைக்கப்பட்டது. பின்னர் இந்த எண்ணிக்கை 51க்கு உயர்த்தப்பட்டது. சர் ஜார்ஜ் ரெண்டலின் ஆலோசனைப் படி 7-7-1954இல் இன்னும் அதிகமான தன்னுரிமைகளைச் சிங்கப்பூர் பெற்றது. 1955இல் சிங்கப்பூர்ச் சட்டமன்றத்திற்குப் பொதுத்தேர்தல் நடைபெற்று டேவிட் மார்ஷல் முதலமைச்சராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். 1958இல் பிரிட்டிஷாருக்கு உட்பட்ட

முழுச் சுய ஆட்சி பெற்ற அரசாங்கம் அமைக்கும் உரிமையைப் பெற்றது. அதன் விளைவாக முதலமைச்சர் பிரதம மந்திரி என அழைக்கப்பட்டார். பெயரளவுக்கு நாட்டின் தலைவராக இருந்தவர் யங் டி பெர்த்துவான் நெகரா என அழைக்கப்பட்டார். பின்னர் 1959இல் நடைபெற்ற தேர்தலில் திரு லீ குவான் இயூ சிங்கப்பூரின் முதல் பிரதமர் ஆனார். 1963இல் மக்களின் விருப்பத்திற்கு ஏற்பச் சிங்கப்பூர் மலாயாவுடன் இணைந்தது. மலேசியா உருவாயிற்று. 1965 ஆகஸ்டு 9ஆம் தேதி சிங்கப்பூர், யாரும் எதிர்பாராத நிலையில் மலேசியாவிடமிருந்து பிரிந்து தன்னுரிமை பெற்ற தனியரசாக உருப்பெற்றது. அதே ஆண்டு டிசம்பர் 22ஆம் நாள் சிங்கப்பூர் ஒரு குடியரசு நாடாயிற்று. தற்போது ஐந்து ஆண்டுகளுக்கு ஒரு முறை மக்களால் தேர்ந்தெடுக்கப்படும் நாடாளுமன்ற உறுப்பினர்களைக் கொண்டு இங்கு ஆட்சி நடைபெறுகிறது. நாட்டின் உச்சத்தலைவர் அதிபர். இவர் 1993ஆம் ஆண்டு முதல் மக்களால் நேரிடையாகவே தேர்ந்தெடுக்கப்படுகிறார். இப்போது அத்தகைய அதிபராகப் பணியாற்றுபவர் செல்லப்பன் இராமநாதன் என்னும் தமிழர் ஆவார்.

### சிங்கப்பூரில் தமிழ்

'சிங்கப்பூரில் ஆங்கிலக் கிழக்கிந்தியக் கம்பெனிக்கு ஒரு வர்த்தக நிலையத்தை ஏற்படுத்த சர். ஸ்டாம்ஃபோர்டு இராஃபிள்ஸ் பினாங்கிலிருந்து வந்தபோது அவருடைய பணியாளர்களுள் இந்தியர்கள் சிலரும் இருந்தார்கள் என்றும், அவர்கள் இந்தியாவின் தென் பகுதியிலிருந்து வந்தவர்கள் என்றும், அவர்கள் தமிழ் மொழி பேசினார்கள் என்றும் வரலாற்றுக் குறிப்புகள் தெரிவிக்கின்றன'. 1821ஆம் ஆண்டில் எடுக்கப்பட்ட மக்கள் தொகைக் கணக்கெடுப்பு, சிங்கப்பூரில் 4727 பேர்கள் இருந்தார்கள் என்றும் அவர்களில் 132 பேர்கள் இந்தியர்கள் என்றும் தெரிவிக்கிறது.

சிங்கையில் 1959லிருந்து தமிழ்மொழி ஆட்சிமொழியாக அங்கீகரிக்கப்பட்டு நடைமுறையில் இருந்து வருகிறது. இதனால் சிங்கை நாடாளுமன்றத்தில் தமிழில் பேச முடியும். அவ்வாறு பேசும்போது அது உடனுக்குடன் மற்ற மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டுக் கூறப்படும். ஆங்கிலமே அலுவலக மொழியாகக் கோலோச்சினாலும் அலுவலகங்களுக்குத் தமிழிலும் கடிதங்கள் எழுதலாம்.

சிங்கையில் இருமொழிக்கொள்கை நடப்பில் இருப்பதால் மாணவர்கள் பாரம்பரியப் பண்பாடுகளை அறியத் தாய்மொழியையும், பல இனமக்களிடையே கருத்துப் பரிமாற்றம் செய்ய ஆங்கில மொழியையும் கற்க வேண்டும். இதனால் தமிழ்மொழி ஒரு பாடமாக 152 தொடக்கப் பள்ளிகளிலும், 76 உயர்நிலைப் பள்ளி களிலும், 13 தொடக்கக் கல்லூரிகளிலும், 10 நிலையங்களிலும் சுமார் 490 தமிழாசிரியர்களால் கற்பிக்கப்படுகிறது.

சிங்கப்பூர், தகவல் தொழில் நுட்பத்தில் சிறந்து விளங்குகிறது. அதனால் தகவல் தொழில்நுட்பத்தின் வழி, தமிழில் செய்திகளைப் பரிமாறிக் கொள்ளக் கணினியிலும் தமிழ் கொண்டுவரப்பட்டது. இதனால் கணினி வழி, தமிழ்மொழி பள்ளிகளில் கற்பிக்கப்படுகிறது. இணையத்தில் தமிழ்மொழிப் பக்கங்கள் 2-2-96 முதல் சிங்கப்பூர் அதிபர் 'ஓங் டெங் சியோங்' அவர்களால் அதிகாரபூர்வமாகத் திறக்கப்பட்டுச் சிங்கப்பூர்ப் பல்கலைக்கழகத்திலிருந்து முறையாக உலா வருகின்றன. இது உலக அளவில் தமிழர்களோடு தமிழ் இலக்கியக் கருத்துகளைப் பரிமாறிக் கொள்ள வழிவிடுகிறது.

சிங்கையில் தமிழ் இலக்கிய வளர்ச்சிக்கு உறுதுணையாக இருப்பவை வானொலியும் தொலைக்காட்சியுமாகும். உள்ளூர்ப் படைப்பாளர்களின் கவிதைகள், நாடகங்கள், கதைகள், இலக்கியப்பேச்சுகள் அவ்வவ்போது இவற்றில் இடம்பெறு கின்றன. இவை தமிழ் இலக்கியம் இங்கு வளர ஊன்றுகோலாய் உள்ளன. அறிவியற் சொற்களுக்கு உடனுக்குடன் தமிழ்ச் சொற்கள் கண்டுபிடிக்கப்படுகின்றன. அவை வானொலி, தொலைக்காட்சி, மற்றும் அரசு அலுவலகங்களில் பயன்படுத்தப் படுகின்றன. இவை மொழிவளர்ச்சிக்கு உரமாக அமைகின்றன.

தமிழ்முரசு, தமிழ்மலர், மலாயா நண்பன், தமிழ்நேசன் முதலிய செய்தித்தாள்கள் தமிழ் இலக்கிய வளர்ச்சியின் களங்களாக இருந்து வந்தன. தற்போது தமிழ்முரசு மட்டுமே சிங்கையில் வெளிவருகிறது. சிங்கை எக்ஸ்பிரஸ், இந்தியன் மூவி நியூஸ் என்னும் இதழ்களும் தமிழ் இலக்கியப் படைப்புகளைத் தாங்கி வெளிவருகின்றன. ஆங்கில நாளேடான தி ஸ்ட்ரெயிட்ஸ் டைம்ஸில் (The Straits Times) சீனம், மலாய், தமிழ் ஆகிய மொழிகளைத் தாங்கி வந்த இருமொழிப் பக்கம் (Bilinqual Page) என்னும் பகுதி, வாரம் ஒரு முறை வெளிவந்தது. தற்பொழுது இப்பகுதி இடம்பெறவில்லை.

இலக்கிய வளர்ச்சிக்கு அரசாங்கம் தூண்டுகோலாக இருக்கிறது. இலக்கியம், கலை ஆகியவற்றில் சிறந்து விளங்குபவர்களைக் கண்டறிந்து சிங்கை அரசாங்கம் 'கலாசார விருது' (Cultural Award) வழங்குகிறது. சிங்கை அரசாங்கத்தால் வழங்கப்படும் உயரிய விருது இதுவாகும்.

அரசாங்கத்தால் நடத்தப்படும் மற்றொரு நிகழ்ச்சி எழுத்தாளர் வாரம் (Writers' Week). 1986ஆம் ஆண்டு சிங்கப்பூர்க் கலைவிழாவில் ஒரு கூறாகத் தொடங்கப்பட்ட எழுத்தாளர் வாரம் 1991 முதல் பெரிய அளவில் நடத்தப்பட்டு வருகிறது. சிங்கப்பூர்க் கலைவிழாவில் (Singapore Arts Festival) குழுவினர் தெரிவு செய்த சிறந்த படைப்புகள் இந்நிகழ்ச்சிகளில் அந்தந்த எழுத்தாளர்களாலேயே வாசிக்கப்படும். இது இலக்கியப் படைப்பாளர்களை ஊக்குவிக்கிறது.

சிங்கப்பூரில் இயங்கும் அமைப்புகளுள் ஒன்று தேசியப் புத்தக மேம்பாட்டுக் கழகம் (National Book Development Council). இது இரண்டாண்டுகளுக்கு ஒரு முறை சிறந்த புத்தகங்களுக்கு விருது (National Book Development Council Award) வழங்கிப் படைப்பாளர்களை ஊக்குவிக்கிறது.

தென்கிழக்காசிய நாடுகளுக்கிடையே வழங்கப்படும் ஒரு மதிப்பு மிக்க விருது 'தென்கிழக்காசிய இலக்கிய விருது' (South East Asia Write Award). இது 1979லிருந்து தாய்லாந்து மன்னரால் வழங்கப்படுகிறது. தென்கிழக்காசியாவில் ஆசியான் கூட்டமைப்பில் உள்ள இந்தோனேசியா, மலேசியா, பிலிப்பைன்ஸ், சிங்கப்பூர், தாய்லாந்து, புருணை முதலிய நாடுகளின் அதிகாரத்துவ மொழிகளில் படைக்கப்படும் தலை சிறந்த இலக்கியங்களுக்கு இவ்விருது வழங்கப்படுகிறது. தென் கிழக்காசியாவில் தமிழ்ப் படைப்பாளிகள் இவ்விருதைப் பெறுவதற்குச் சிங்கப்பூர் மட்டுமே வழிவகுக்கும் தகுதி உடையது. காரணம் சிங்கப்பூரே தமிழை ஆட்சிமொழியாகக் கொண்டுள்ளது. இதுவரை ஐந்து தமிழ் இலக்கியப் படைப்பாளிகளுக்கு இவ்விருது வழங்கப்பட்டிருக்கிறது.

ஆலயங்கள் அவ்வவ்போது ஏற்பாடு செய்யும் தமிழ்ச் சொற் பொழிவுகள், ஆண்டுதோறும் நடத்தும் திருமுறை மாநாடுகள் இங்கு இலக்கிய நுகர்ச்சிக்கு வழிவிட்டு மறைமுகமாக இலக்கிய வளர்ச்சிக்குத் துணை புரிகின்றன. தமிழர் பேரவை, தமிழ்மொழிப் பண்பாட்டுக் கழகம், மாதவி இலக்கிய மன்றம், சிங்கப்பூர்

தமிழாசிரியர் சங்கம், சிங்கப்பூர் தமிழ் எழுத்தாளர் கழகம் முதலிய சமூக அமைப்புகள் அவ்வப்போது இலக்கியம் சார்ந்த விழாக்களை நடத்தி மக்களின் இலக்கிய ஆர்வத்தைத் தூண்ட உதவுகின்றன. பள்ளிகளிலும், கல்லூரிகளிலும் உள்ள தமிழ் இலக்கிய மன்றங்கள் இலக்கியம் தொடர்பான நிகழ்ச்சிகள், போட்டிகள் நடத்தி மாணவர்களிடையே இலக்கிய ஆர்வம் பெருக வழி வகுக்கின்றன.

### சிங்கப்பூர்த் தமிழ் இலக்கியம்– ஒரு வரையறை

சிங்கப்பூர்த் தமிழ் இலக்கியம் என்பது சிங்கப்பூர் மண்ணின் மணம் கமழும் வகையில்-சிங்கப்பூர்ப் பின்னணியைச் சித்திரிக்கும் வகையில்-சிங்கப்பூரர்களால் அல்லது சிங்கப்பூர் நிரந்தரவாசிகளால் எழுதப்படுகின்ற இலக்கியம் என வரையறுக்கலாம். சிங்கப்பூர்ப் பின்னணியைத் தவிர்த்து இங்குள்ள குடிமக்களாலோ நிரந்தவாசிகளாலோ இயற்கை, மொழி, சான்றோர், இலக்கியம் முதலிய பொது நிலைப் பொருள்கள் பற்றி எழுதப்பெறும் இலக்கிய வகைகளையும் சிங்கப்பூர் இலக்கியமாகவே கருத வேண்டிய நிலையும் உள்ளது.

சிங்கப்பூர் தனிக் குடியரசு நாடாக 1965ல் தோற்றம் கண்டது. அந்த நிலையில் நோக்கினால் சிங்கப்பூர்த் தமிழ் இலக்கியம் என்பது குறுகிய கால வரலாறு கொண்டதாகத் தோன்றும். எனினும் சிங்கப்பூர், பிரிட்டிஷ் அரசின் நேரடிப் பார்வையில் இருக்கும் போது அதாவது 1887 ஆம் ஆண்டிலேயே தமிழ் இலக்கியம் (சிங்கைநகர் அந்தாதி) சிங்கப்பூரில் தோன்றிவிட்டது. எனவே, இந்நிலையில் நோக்கும்போது சிங்கைத் தமிழ் இலக்கியம் ஒரு நூற்றாண்டு கால வரலாற்றினைக் கொண்டது என்றே சொல்ல வேண்டும்.

சிங்கப்பூர்த் தமிழ் இலக்கியம் சிறுகதை, நாவல், நாடகம், கட்டுரை எனப் பல்வேறு வடிவங்களையும் கொண்டது. சிங்கப்பூர் மக்களாட்சி பெற்ற காலத்தை மையமாக வைத்துத் தமிழ் இலக்கிய வளர்ச்சியைக் குடியரசு நிலைக்கு முந்திய பகுதி (1887 முதல் 1965 வரை) எனவும், குடியரசு நிலைக்குப் பிந்திய பகுதி (1965 முதல் இன்று வரை) எனவும் பகுத்துக் காணலாம். குடியரசுக்குப் பிந்திய காலப்பகுதியில் இலக்கிய வளர்ச்சி மிகுதியாக இருப்பதால் அக்காலப் பகுதி இலக்கிய வரலாற்றை இலக்கிய வகை அடிப்படையிலும் குடியரசுக்கு முந்திய காலப் பகுதி இலக்கிய வரலாற்றைப் பொது நிலையிலும் பார்க்கலாம்.

## சிங்கப்பூர்க் குடியரசு நிலைக்கு முந்திய பகுதி (1887 முதல் 1965 வரை)

### தோற்றம் (1887–1935)

தாய்த்தமிழகத்தின் தொன்மையான இலக்கியங்கள் கவிதை வடிவிலேயே அமைந்துள்ளதை அனைவரும் அறிவர். அதனைப் போலவே சிங்கப்பூரில் தோன்றிய முதல் இலக்கிய முயற்சிகள் கவிதை வடிவிலேயே இருக்கக் காண்கிறோம். '1870 ஆம் ஆண்டு வாக்கில் தமிழ் அச்சகங்கள் இங்கு நிறுவப்பட்டன. செய்தித் தாள்கள் ஒன்றன் பின் ஒன்றாகத் தோன்றி இலக்கியப் படைப்புகளுக்கு முதல் வாயிலாகவும் தூண்டுகோலாகவும் அமைந்தன' என்று வை. திருநாவுக்கரசு சிங்கப்பூர் இலக்கியத்தின் தோற்றத்திற்குக் களமாக அமைந்தவற்றைக் குறிப்பிடுகிறார்.

1887-ஆம் ஆண்டில் சிங்கப்பூர் சி.கு.மகுதூம் சாயபு அவர்களுக்குச் சொந்தமாகிய தீனோதய இயந்திர சாலையில் அச்சிடப்பட்டதும், யாழ்ப்பாணம் வண்ணை நகர் சி.ந. சதாசிவ பண்டிதர் அவர்களால் இயற்றப்பட்டதுமான சிங்கை நகரந்தாதி சித்திரகவிகள் என்னும் நூலே சிங்கைத் தமிழ் இலக்கியத்தின் முன்னோடி நூலாகத் திகழ்கின்றது. உண்மையில் இவை இரண்டு நூல்கள். இவற்றுடன் வண்ணையந்தாதி, வண்ணைநகர் ஊஞ்சல் ஆகிய இரு நூல்களும் இணைக்கப்பெற்று ஒரே நூலாகவே அச்சிடப்பட்டு வெளியீடு செய்யப்பட்ட நிலையே காணப்படுகின்றது. சிங்கை நகர் அந்தாதி, சித்திரகவிகள் என்னும் இரண்டும் சிங்கப்பூர் சுப்பிரமணிய சுவாமி மேற்பாடப்பெற்றவை. சிங்கப்பூர்த் தேங்ரோட்டில் நாட்டுக்கோட்டை நகரத்தார்களால் 1859-இல் எழுப்பப்பெற்ற கோவில் மூலவராகிய தண்டாயுத பாணியே அக்காலத்தில் சுப்பிரமணிய சுவாமி என வழங்கப் பெற்றதாக மகுதூம் சாயபுவால் வெளியிடப்பட்ட சிங்கை நேசன் இதழ் வாயிலாக அறிய முடிகிறது. மலேசியா, சிங்கப்பூர்த்தமிழ் இலக்கிய வரலாற்றை நோக்கும்போது, சிங்கப்பூரில்தான் முதல் தமிழ் இலக்கியம் உருவாயிற்று என்று இந்த இரண்டு நூல்களையும் குறிப்பிட்டுப் பாராட்டுகிறார் முனைவர் இரா.தண்டாயுதம். "இலக்கண இலக்கிய இருங்கடல் உண்டு கலக்கமில்லாமல் கலை எலாம் உணர்ந்தோன் சொற் பொருட்சாரன் துதி சொல் ஆசாரன், தக்க சத்சங்கன், தமிழிற் பிரசங்கன்" என்று இவ்விரு நூல்களின் ஆசிரியராகிய சதாசிவ பண்டிதர் பாராட்டப்பெறுகின்றார். சிங்கை நகர் அந்தாதி 100

கட்டளைக் கலித்துறைப் பாடல்களால் அமைந்தது. கவிதை நயமிக்கது; ஆழ்ந்த தத்துவக் கருத்துக்களையும் பக்தி உணர்வையும் இந்நூலில் காணலாம். ஒவ்வொரு பாடலிலும் சிங்கை நகர் பற்றிய மரபு வழி இலக்கியக் குறிப்புகள் இடம் பெற்றுள்ளன. இந்நூல் தமிழ்க் கடவுளாம் முருகனைப் பற்றியது; சைவச் சார்புடையது. இதனை இயற்றியவரோ இலங்கைத் தமிழர். இதனை வெளியிட்டவரோ இசுலாமிய நெறியைச் சார்ந்த மகுதூம் சாயபு. இந்தியத் தமிழரால் எழுப்பப் பெற்ற கோயில் பற்றியது இந்நூல். எனவே, சமய நல்லிணக்கம் முதல் தமிழ் நூலிலேயே அமைந்திருக்கக் காண்கிறோம். இந்த நூல் பண்டிதர் நடையில் அமைந்த புலவர் இலக்கியமாகவே கருதத்தக்கது. சிங்கை நகர் அந்தாதி முருகனைப் பற்றி இயற்றப்பட்ட ஒரு பக்தி நூல். எனவே சிங்கப்பூரில் அன்றிருந்த சமூகத்தைப் படம்பிடித்துக் காட்ட அதிகம் வாய்ப்பில்லை. எனினும் செய்யுள்களைப் படித்துப் பார்க்கும்போது அக்காலச் சமுதாயம் பற்றிய சில செய்திகளை அறிய முடிகிறது'. இறுதிப் பகுதி 'சிங்கப்பூர் சுப்பிரமணியசுவாமி' பேரிற்பாடிய சித்திரக் கவிகள் ஆகும். மாலைமாற்று வெண்பா, அஷ்டநாக வெண்பா, துவிநாக விருத்தம், முதலிய பதினெட்டுச் சித்திரக் கவிகளை இப்பகுதி உள்ளடக்கியது. இப்பகுதி ஆசிரியரின் புலமையைக் காட்டும் பகுதியாகும்.

இந்த இரண்டு நூல்களோடு இக்காலக்கட்டத்தில் தோன்றிய ந.வ. ரங்கசாமிதாசனின் குதிரைப் பந்தயலாவணி (1893) பொன்னுசாமிப் பிள்ளையின் சல்லாபலாவணி (1893), க.வேலப் பிள்ளையின் சிங்கை முருகேசர் பதிகம் (1893) முகமது அப்துல் காதரின் கீர்த்தனைத் திரட்டு (1896) ஆகிய நூல்களும் சிங்கப்பூர்த் தமிழ் இலக்கிய முன்னோடி நூல்களாகக் கருதத்தக்கவை. குதிரைப் பந்தய லாவணி என்பது முதலிரு நூல்களைப்போல் கடினமான சொற்களைப்பயன்படுத்தாமல் சிங்கப்பூரில் வழங்கிய தமிழ்ச் சொற்றொடர்களையும் மலாய்ச் சொற்களையும் கொண்டு, சிங்கப்பூரின் காட்சிகளையும் மக்கள் நடமாட்டத்தையும் விளக்கும் நூல் என்றும் சிங்கப்பூர்ப் பின்னணியை முழுதாகக் கொண்ட முதல் தமிழ் இலக்கிய முயற்சி என்றும் இதனைப் பாராட்டுகிறார் வை. திருநாவுக்கரசு. குடியேற்ற சமூகம் என அழைக்கப்படும் தமிழ் மூதாதையார் எவ்வாறு தஞ்சை மாவட்டப் பகுதியிலிருந்து கப்பலில் சிங்கப்பூர் வந்து குடியேறித் தங்கள் வாழ்க்கையை அமைத்துக் கொண்டனர் என்பதைக் குதிரைப் பந்தயலாவணி நன்கு

சித்திரிக்கிறது எனவே பொதுமக்கள் இலக்கியம் என்று இதனைக் குறிப்பிடலாம். இவ்வாறு சிங்கப்பூர்த் தமிழ் இலக்கியத்தின் தொடக்ககால இலக்கியங்கள் புலவர் இலக்கியமாகவும், பொது மக்கள் இலக்கியமாகவும் திகழ்ந்த நிலையை நாம் காண்கிறோம். இந்த இரண்டு கூறுகளும் தொடர்ந்து நீடித்திருப்பதைச் சிங்கப்பூர்த் தமிழ் இலக்கிய வரலாறு அறிவோர் நன்கு உணர்வர்.

சிங்கைநேசனில் (3-9-1888, 24-9-1888) மகுதும் சாய்பு அவர்கள் எழுதிய 'வினோத சம்பாஷணை' என்னும் பெயரில் அன்றைய தேவை கருதி எழுதிய புனைகதைகள் சிங்கைத் தமிழ் இலக்கியத்தில் சிறப்பிடம் பெறுகின்றன. இதனைத் தமிழ் மொழியில் எழுதப்பட்ட முதல் தமிழ்ச் சிறுகதைகளாக நாம் கொள்ள வேண்டியுள்ளது என்று நா. கோவிந்தசாமி குறிப்பிடுகிறார். இது ஆய்வுக்குரிய ஒன்று.

1900லிருந்து சுமார் முப்பத்தைந்து ஆண்டுகள் சிங்கைத் தமிழ் இலக்கியத்தில் ஒரு தேக்க நிலை ஏற்பட்டது. 1887 ஆம் ஆண்டு ஜூன் 27ஆம் தேதி தொடங்கப் பெற்ற சிங்கைநேசன் என்னும் கிழமை இதழ் 1890ஆம் ஆண்டு ஜூன் 23ஆம் தேதி இதழோடு தன் பணியை முடித்துக் கொண்டது. 'சிங்கைநேசன் மூடப்பட்ட பிறகு எந்தெந்தச் செய்தித்தாள்கள் தோன்றி மறைந்தன என்பது ஆராய்ச்சிக்குரியது. ஆனால் 1923 செப்டம்பர் 15ஆம் தேதி பொதுஜன மித்திரன் என்னும் பத்திரிகை தோன்றியது' என்கிறார் வை. திருநாவுக்கரசு, இவ்விடைப்பட்ட காலத்தில் இலக்கியங்களைத் தாங்கி வருவதற்குப் போதிய சாதனம் இல்லாததினால் இத்தேக்கம் ஏற்பட வாய்ப்பு இருக்கிறது. இக்காலக்கட்டத்தில் சமயச் சார்பான தோத்திரப் பாக்களும் கீர்த்தனைகளும் எழுதப்பட்டுள்ளன என்பதற்குக் குறிப்புகள் மட்டுமே கிடைக்கின்றன. அலங்காரவழிநடைச்சிந்து, சிங்கைநகர் சுப்பிரமணிய சுவாமிகள் விருத்தம் முதலியவை இக்காலக்கட்டத்தில் வெளிவந்த சிறு நூல்கள் ஆகும். 1930இல் யாழ்ப்பாணம் வல்வை 'வே. சின்னையா' என்பவர் 'நவரசகதாமஞ்சரி' என்னும் கதைத் தொகுப்பை வெளியிட்டுச் சிங்கைச் சிறுகதை இலக்கியத்திற்கு முன்னோடியாக விளங்கினார் என்கிறார் நா. கோவிந்தசாமி.

### எழுச்சி (1935-1945)

1935லிருந்து சிங்கைத் தமிழ் இலக்கியத்தில் ஓர் எழுச்சி ஏற்படலாயிற்று. இதற்குக் காரணங்களாக விளங்கியவை, முப்பதுகளில் இந்தியாவில் துடிப்புடன் எழுந்த இந்தியச் சுதந்திர

இயக்கம்; தமிழகத்தில் பாரதியின் உயிரோட்டமான பாடல்கள்; சீர்திருத்தக் கொள்கைகள் சிங்கப்பூர் இலக்கியப் போக்கில் ஏற்படுத்திய தாக்கங்கள் முதலியவையாகும். 20-12-1929இல் பெரியார் ஈ.வே. ராமசாமி அவர்களின் சிங்கை, மலாயா வருகை இங்குச் சீர்திருத்த கருத்துக்களைத் தாங்கிய இலக்கியத்தைப் படைக்கத் தூண்டின. மேலும் 16-1-29இல் கோ. சாரங்கபாணியைத் துணை ஆசிரியராகக் கொண்டு தொடங்கிய 'முன்னேற்றம்' இதழும் 1935 ஜூலை 6ஆம் தேதி தமிழர் சீர்திருத்தச் சங்கத்தின் குரலாக வெளியாகிய 'தமிழ் முரசும்' இலக்கியங்கள் வெளி வருவதற்குக் களங்களாக அமைந்தன.

1935லிருந்து சிங்கைத் தமிழ் இலக்கியத்தின் போக்கில் மாற்றம் ஏற்படலாயிற்று. பொதுவாகச் சமயச்சார்பான இலக்கியங்கள் குறைந்து சமுதாயச் சிந்தனையுள்ள இலக்கியங்கள் தோன்றலாயின. சிங்கை புத்தர் ரேசுக்கோர்சுறோட்டு, பிரமன் ஆலயம் சுவாமி தெரிசனைக்காகப் பாடிய 'வழிநடைச் சிந்து' என்னும் நூல் (1936) சமயச் சார்புடையதாகவும் அதேவேளையில் அன்றைய சிங்கப்பூரைக் காட்டிடும் நூலாகவும் அமைகிறது. 1893இல் வெளியாகிய குதிரைப் பந்தயலாவணியை அடுத்து இந்த வழிநடைச்சிந்து அன்றைய சிங்கப்பூரின் தோற்றத்தைக் காட்டிடும் நூலாகும்.

சிங்கைத் தமிழ் இலக்கியத்தின் எழுச்சிக்குக் காரணமாய் அமைந்த தமிழர் சீர்திருத்தச் சங்கத்தின் கொள்கைஏடான 'தமிழ்முரசோடு சீர்திருத்தம்' என்னும் மாத இதழ் 1939 மார்ச் மாதத்திலிருந்து வெளிவரத் தொடங்கியது. 1939 ஜூலை சீர்திருத்தம் இதழில் ந. பழநிவேலு எழுதிய இந்தியா - அன்றும் இன்றும் என்னும் பாடல் இந்தியாவைப் பாடுவதாக உள்ளது. இதே இதழில் தெ.வே. வைத்திலிங்கம் எழுதிய 'எது நன்று?' என்னும் கவிதையும் கி.ஆ.பெ. விசுவநாதம் விடுத்த வேண்டுகோளும் சிங்கைக் கவிஞர்களும் மக்களும் தமிழகத்தின் நிகழ்ச்சிகளில் உணர்வு பூர்வமாக ஈடுபாடு கொண்டிருந்தனர் என்பதைக் காட்டுகின்றன.

சிங்கப்பூரின் தமிழ்க் கவிதை எழுச்சிக்கு அடித்தளம் அமைத்தவர்களாகிய 'ந. பழனிவேலன்', 'சிங்கை முகிலன்' படைப்புகள் சீர்திருத்த உணர்வோடும் துடிப்போடும் விளங்கின. புதிய இலக்கிய மறுமலர்ச்சிக்கு வழிகோலின. 22-8-1936இல் தமிழ் முரசில் ந. பழநிவேலு எழுதிய 'கல்யாணப் பந்தலில்" என்னும் கதை சாதிப் பிரச்சினையை மையமாக வைத்து எழுதப்பட்டது.

இக்காலக்கட்டத்தில் தமிழ் முரசு நாளிதழ் வாயிலாகத் திருவாளர்கள் ந. பழனிவேலு, எம். ஆறுமுகம், வை. ராஜரத்தினம், சிவத்தம்பி, முகிலன், திருமதி ராஜம்மாள் முதலியோர் சிறுகதைகள், நாவல்கள், நாடகங்கள் எழுதினர். இது சிங்கப்பூர் தமிழ் இலக்கியத்தின் பரப்பைச் சிறிது பெரிதாக்கியது. 1936க்கும் 1942க்கும் இடைப்பட்ட காலப்பகுதியில் தமிழ் முரசு இதழில் மட்டும் முப்பதுக்கு மேற்பட்ட சிறுகதைகளும் நான்கு குறுநாவல்களும் ஒரு முழு நீள நாடகமும் வெளிவந்துள்ளதாக நா. கோவிந்தசாமி குறிப்பிடுகிறார். இக்காலக்கட்டத்தில் ந. பழனிவேலு காதற்கிளியும் தியாகக்குயிலும் (1936), விஷமுள் (1937), சுபத்திரா தேவி (1938) என்னும் தொடர்கதைகளைத் தமிழ் முரசில் எழுதினார். பாரதமித்திரனில் கிராமக்காட்சி (1934) என்னும் கதையை வெளியிட்டார். இவர் 1936இல் எழுதி இயக்கிச் சீர்திருத்த சங்கத்தால் மேடையேற்றப்பட்ட 'சுகுன சுந்தரம் அல்லது ஜாதி பேதக் கொடுமை' என்னும் நாடகமும் 1937இல் மேடையேற்றப்பட்ட 'கௌரிசங்கர் அல்லது கிழ மணக் கொடுமை' என்னும் நாடகமும் சிங்கப்பூர் நாடக இலக்கிய வளர்ச்சிக்கு உதவின. பொதுவாக ந. பழனிவேலு அவர்களின் படைப்புகள் அனைத்தும் சமூகச் சீர்திருத்தக் கருத்துகளை மையமாகக் கொண்டவை. இவர் எழுதிய 'கருணாகரன் குணவல்லி ரகசியங்கள்' என்னும் சிறுகதை மலாயா ரப்பர்த் தோட்டங்களில் ஈழத் தமிழ் அதிகாரிகளின் அதிகாரத்திற்கு உட்பட்டுத் துன்புற்ற தென்னிந்தியத் தமிழர்களின் அவல வாழ்க்கையைச் சித்திரிக்கிறது.

திருமதி ராஜாம்பாளின் விஜயாள் ஒரு அனாதை (1939 தமிழ்முரசு) என்னும் சிறுகதை ஒரு சீனப்பெண்ணை மருமகளாக ஏற்றுக்கொள்வதற்குத் தமிழ்க் குடும்பத்தினர் எந்த அளவுக்கு எதிர்ப்புத் தெரிவித்தனர் என்பதைக் கருவாகக் கொண்டது. இது போன்ற சிறுகதைகளைத் தவிர்த்து எழுத்தாளர்களின் ஏனைய படைப்புகள் தமிழ்நாட்டுச் சமூக வாழ்க்கையையே நிலைக் களமாகக் கொண்டிருந்தன என்றும் சாதி ஒழிப்பு, கைம்பெண் மணம், பொருந்தாமணம், மத ஊழல் எதிர்ப்பு, பிராமண எதிர்ப்பு, மதச் சீர்திருத்தம், இதிகாச எதிர்ப்பு முதலிய கருப்பொருள்களைக் கொண்டிருந்தன என்றும் கூறுகிறார் நா. கோவிந்தசாமி. இக்காலக்கட்டத்தில் இலக்கிய வளர்ச்சிக்குப் பலவகையிலும் உறுதுணையாக இருந்த கோ. சாரங்கபாணி 1940இல் வெளியிட்ட முதல் 'தமிழ் முரசு ஆண்டுமலர்' தமிழ்

இலக்கிய வளர்ச்சிக்குப் பெருந்துணை புரிந்தது. தொடர்ந்து 1941லும் அடுத்த மலர் வெளியாயிற்று.

1942-1945 ஜப்பானியரின் ஆட்சிக்கு உட்பட்ட காலத்தில் சிங்கை இலக்கியத்தின் எழுச்சி மீண்டும் தளர்ச்சி அடைந்தது. போரின் கொடுமையால் தமிழ் இலக்கியத்திற்கு ஆதரவு தந்து வந்த தமிழ் முரசு பத்திரிகையும் நீண்ட காலத்திற்குச் செயல்பட வில்லை. எனினும் நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ் அமைத்த தற்காலச் சுதந்திர இந்திய அரசாலும் (Azad Hindu) இந்திய தேசிய இராணுவத்தாலும் உருவான கோட்பாட்டினால் ஈர்க்கப்பட்ட பக்ருதீன் சாகிப், சொ.ஐ.துரை, ரெ. சீனிவாசன், கோ. சாரங்கபாணி, முகிலன் முதலிய சிங்கப்பூர் எழுத்தாளர்கள் அவ்வரசாங்கத்தால் சிங்கப்பூரிலிருந்து வெளியிடப்பெற்ற சுதந்திர இந்தியா (நாளிதழ்), யுவபாரதம் (வாரஇதழ்), சுதந்திர உதயம் (திங்கள் இதழ்) ஆகியவற்றில் தங்கள் இலக்கியப் படைப்புகளை எழுதி வெளியிட்டனர். இக்கால இலக்கியப் படைப்புகள் பிரிட்டிஷ் இந்தியாவை விடுவிப்பதையே முதன்மை நோக்கமாகக் கொண்டிருந்தன என்பதற்கு ஓர் எடுத்துக்காட்டாக

“நல்ல சமயமடி பாப்பா நிப்பன்
நம் அருமைத் தோழரடி பாப்பா
வெள்ளை நிறத் தவரைப் பாப்பா – விட்டு
ஓடிடவே செய் வோமடி பாப்பா”

என்னும் புதுப் பாப்பா பாடலைக் குறிப்பிடலாம்.

### வளர்ச்சி (1946–1965)

1945ல் இரண்டாம் உலகப்போர் முடிவுற்றாலும் அது ஏற்படுத்திய வேலை இன்மை, பொருளாதார வீழ்ச்சி, அச்ச உணர்வு போன்றவை சில ஆண்டுகள் தொடர்ந்தன. போருக்குப் பின்னர் தமிழ் முரசு செயல்படத் தொடங்கியது. 1946க்கும் 1947க்கும் சேர்ந்து, 1947இல் தமிழ் முரசின் ஆண்டுமலர் வெளியாயிற்று. அதில் தமிழவேள் எழுதிய தலையங்கம் படைப்பிலக்கிய வளர்ச்சியில் அவர் கொண்டிருந்த ஆர்வத்தையும் முனைப்பையும் உணர்த்துகின்றது என்று ஜே.எம். சாலி குறிப்பிடுகிறார். மேலும் சிங்கப்பூர், மலாயா படைப்பிலக்கிய வளர்ச்சிக்குப் பெரும் பங்காற்றிய முக்கிய இதழ் 'மலாயா நண்பன்' எனவும் சாலி குறிப்பிடுகிறார். 1942-ஆம் ஆண்டில் நாளிதழாகத் தொடங்கப்

பட்ட 'மலாயா நண்பன்' பல எழுத்தாளர்களையும் பத்திரிகை யாளர்களையும் உருவாக்கியது. 'மலாயா நண்பன்' நாளிதழைத் தொடர்ந்து 1947இல் பக்ருதீன் சாஹிப்பை ஆசிரியராகக் கொண்டு 'பேனா முனை' என்னும் திங்கள் இதழும், லெட்சுமணனை ஆசிரியராகக் கொண்டு 'திராவிட முரசும்' வெளியாயின. போரின் கசப்பான நிகழ்ச்சிகள் இலக்கியத்தில் கருவாயின. ந. பழனிவேலுவின் 'தலைவெட்டும் தர்பார்' என்னும் கவிதை ஐப்பானியரின் கொடுங்கோல் ஆட்சியைச் சித்திரிக்கிறது.

திரு. ந. பழனிவேலு தமது கவிதைகளை எல்லாம் ஒன்று திரட்டிக் கவிதை மலர்கள் என்னும் நூல் வடிவில் தமிழ் முரசு வெளியீடாக 1947இல் வெளியிட்டார். 1948இல் திரு. அசி. சுப்பையா 'சுந்தரமூர்த்தி நாயனார் கிரிமினல் கேஸ்' என்னும் நாடக நூலை வெளியிட்டார். பெரியபுராணத்தில் வரும் சுந்தரமூர்த்தி நாயனாரைச் சிவபெருமான் தடுத்தாட்கொண்ட நிகழ்ச்சியைச் சிங்கப்பூர் வழக்கு மன்றம் ஒன்றில் விசாரணை ஆக்கிப் புராண இதிகாசங்களைச் சாடி நிற்கும் முறையில் இந்நூல் எழுதப் பெற்றிருக்கிறது. தமிழ்முரசின் துணையாசிரியர்களாகப் பணியாற்றிய ந. தேவராஜன், ரெ. சீனிவாசன், மெ. சிதம்பரம், வை. திருநாவுக்கரசு, அ. முருகையன், தி. செல்வகணபதி, முருகு சுப்பிரமணியம் முதலியோர் திரு. கோ. சாரங்கபாணியோடு இணைந்து சிங்கப்பூர் இலக்கிய வளர்ச்சிக்குப் பல்லாற்றானும் ஊக்கமும் ஆக்கமும் ஊட்டினர். இதன் விளைவாக இலக்கிய உலகத்திற்குப் புதுமைதாசன் (P. கிருஷ்ணன்). R. வெற்றி வேலு, ரா. நாகையன், M.K. துரைசிங்கம், பா. சண்முகம், ஜெகதீசன் முதலியோர் அறிமுகமாயினர். முகிலனின் 'அனாதை' என்ற சிறுகதையும், புதுமைதாசனின் 'வாழமுடியாதவள்', 'அனாதைக் குடும்பம்' என்ற சிறுகதைகளும் சிங்கப்பூரின் அக்கால வாழ்க்கைச் சிக்கல்களை ஒட்டி அமைந்தன.

1952 முடிவு வரை சிங்கப்பூரில் குடிநுழைவுச் சட்டம் இல்லை. அதனால் 1952வரை தமிழில் முறையாகக் கல்வி கற்ற இளைஞர் பலர் மலாயாவிலிருந்தும் இந்தியாவிலிருந்தும் சிங்கைக்குக் குடியேறினர். அவர்களுள் க. கனகசுந்தரம், சே.வெ. சண்முகம், ஏ.பி. ராமன், எம். துரைராஜ், ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள். க. கனகசுந்தரத்தின் 'நடந்த கதை' ஆர். வெற்றிவேலுவின் 'ஓடிப் போனவள்' தொடர்கதை, சே.வெ. சண்முகத்தின் 'தமிழச்சியா' தொடர்கதை, பக்ருத்தின்

சாகிப்பின் 'கதீஜாவின் காதல்', மா. பக்கிரிசாமியின் 'அந்துவா' நாடகம் ஆகிய படைப்புகள் சிங்கப்பூர் வாழ்க்கைச் சிக்கல்களைக் கருப்பொருளாகக் கொண்டு எழுதப்பட்டன. எஸ்.எஸ். சர்மா, இ.எஸ்.ஜே. சந்திரன், ஆ. பக்கிரிசாமி போன்றோர் ஐம்பதுகளின் தொடக்கத்தில் எழுத ஆரம்பித்தனர். ஏபி. ராமன் 1956இல் 'கலைமலர்' என்னும் சினிமா இதழைத் தொடங்கினார். இக்காலக்கட்டத்தில் எழுந்த கலைமலர், இந்தியன் மூவி நியூஸ், மனோகரன் முதலிய சினிமா இதழ்களும் இலக்கிய வளர்ச்சிக்கு ஓரளவு உதவின. 1951இல் வை. திருநாவுக்கரசு தமிழ்முரசின் தலைமைத் துணையாசிரியர் பொறுப்பேற்றார். அவர் சேலத்தில் 'பூந்தோட்டம்' என்னும் இதழை நடத்தி வந்தவர். அந்தப் பெயரையே தலைப்பாகக் கொண்டு தமிழ்முரசில் அன்றைய நாட்டு நடப்புகளையும், சமூகத்தையும் பற்றி நேரிடையாகவும் நையாண்டியாகவும் பல இன்றமிழ்க் கட்டுரைகளைத் 'தும்பி' என்னும் புனைபெயரில் எழுதித் தமிழ் இலக்கியம் வளர உதவினார்.

தமிழவேள் அவர்கள் 13-1-1952இல் தமிழர் திருநாளைத் தோற்றுவித்தார். அதையொட்டிப் பல போட்டிகள் நடத்திக் கவிதை, சிறுகதை, நாடகம் ஆகிய துறைகள் பல்கிப் பெருக அவர் ஒரு மாபெரும் களத்தை அமைத்துக் கொடுத்தார். தொடர்ந்து 19-4-1952இல் கந்தசாமி வாத்தியார் என்னும் சுப. நாராயணன் ரசனை வகுப்பை ஆரம்பித்தார். இலக்கியத்தின் சுவை அறிய இப்பகுதி மிகவும் துணை புரிந்தது. இருப்பினும் புதுமைப்பித்தன், அண்ணாதுரை விவகாரத்தால் இப்பகுதி இடையில் நிறுத்தப்பட்டது. பள்ளி மாணவர்களுக்கு இலக்கிய ஆர்வத்தை ஊட்டக் கோ. சாரங்கபாணி 2-5-1952 அன்று தமிழ் முரசில் 'மாணவர் மணிமன்ற மலர்' என்னும் தனிப்பகுதியை வெளியிட்டதோடு மாணவர்களின் படைப்புகளையும் இடம்பெறச் செய்தார். இதன் விளைவாக இலக்கிய உலகத்திற்கு அறிமுகமான எம்.கே. நாராயணன், எம்.எஸ். வேலு, எம்.எஸ். சண்முகம், ஐ. உலகநாதன் முதலியோர் எழுத்தாளர்கள் ஆயினர்.

ரசனை வகுப்பு நின்றவுடன் 5-7-1952இல் வை. திருநாவுக்கரசு தலைமையில் எழுத்தாளர் பேரவை என்னும் ஒரு புதுப்பகுதி தமிழ் முரசு நாளிதழில் உருவாக்கப்பட்டது. 'புலவர்கள் சங்கம் கூடித் தமிழ் வளர்த்தனர்; நாம் எழுத்தாளர் பேரவை அமைத்து விழுமிய எழுத்தைப் பெருக்குவோம்' என்னும் முகவுரையோடு இது தமிழ்முரசில் தொடங்கப்

பெற்றது. எழுத்தாளர்கள் குறைந்தது மாதம் ஒரு படைப்பை யாவது எழுத வேண்டும் என்று பேரவை கட்டாயப்படுத்தியது. ஒவ்வொரு மாதமும், சில தலைப்புகளைக் கொடுத்து, அத்தலைப்புகளுக்கு ஏற்பச் சிறுகதைகள் எழுதத் தூண்டியது. இது சிங்கையில் தமிழ் இலக்கியப் படைப்பாளிகள் எழுத்தார்வம் பெறுவதற்கும் திறன் பெறுவதற்கும் பெரிதும் துணை புரிந்தது. 1952முதல் 1957வரை 'தமிழ்நேசன்'இல் பணிபுரிந்த கு. அழகிரிசாமி தமக்கிருந்த படைப்பாற்றலாலும் திறனாலும் இங்குச் சிறுகதை இலக்கியம் வளர மேலும் உதவினார். 1953ஆம் ஆண்டிலிருந்து தமிழ் முரசில் பணியாற்றிய அ. முருகையன் 'கப்பல் கதைப்பு', 'என்ன செய்வாள் பாவம்' முதலிய சிறுகதைகளைச் சிங்கப்பூரின் பின்னணியில் எழுதினார். இவரின் வருகை சிங்கை, மலாயா தமிழ் எழுத்துலக வளர்ச்சிக்கு உதவியது. இக்காலக்கட்டத்தில் சிங்கையில் ஐ. உலகநாதனால் தொடங்கப்பெற்ற 'மாதவி' என்னும் இலக்கிய ஏடு பல புது எழுத்தாளர்களின் படைப்புகள் உருவாவதற்கு வழி வகுத்தது. மாதவி இலக்கிய ஏடு தொடங்கக் காரணமாக இருந்த ஐ. உலகநாதன் சிங்கப்பூரில் தமிழ்மொழிபால் ஆர்வம்கொண்ட பலருக்கும் கவிதையின் அடிப்படைக் கூறுகளைச் சொல்லிக்கொடுத்து அவர்களைக் கவிதை எழுதத் தூண்டினார். இதன்வழி இவர் சிங்கையில் பலர் கவிதை எழுதக் காரணமாக விளங்கினார். கலைமலர், மனோகரன், இந்தியன் மூவி நியூஸ் ஆகிய சினிமாத்துறை ஏடுகளும் சிறுகதை இலக்கியம் வளர இடம் கொடுத்தன.

1953இல் நீலகண்ட சாஸ்திரியார் வருகையும் மலாயாப் பல்கலைக்கழகத்தில் சமஸ்கிருதத் துறை ஏற்படுத்த அவர் செய்த பரிந்துரையும் தமிழரிடையே கோபத்தையும் எழுச்சியையும் ஏற்படுத்தின. அதனால் கோ. சாரங்கபாணி தலைமையில் தமிழ் எங்கள் உயிர் என்னும் இயக்கத்தின் விளைவாக எழுத்தாளர்கள் கா. பெருமாள், முகிலன் முதலியோர் தமிழ்ப்பற்றூட்டும் கவிதைகள் எழுதித் தமிழர்களைத் தட்டி எழுப்பினர். ஐம்பதுகளின் இறுதியில் மு. தங்கராசன், எம்.கே. நாராயணன், இராம. கண்ணபிரான், ஐ. உலகநாதன் முதலியோர் தங்கள் படைப்புகளை எழுதத் தொடங்கினர். ஐ. உலகநாதன் 'மாதவி' என்ற இலக்கியத் திங்கள் ஏட்டைத் தொடங்கிப் பல எழுத்தாளர்களையும் கவிஞர்களையும் உருவாக்கினார். இதன் விளைவாகக் கவிஞர் அமலதாசன், திருவேங்கடம், மலர்மாணிக்கம், முதலியோர் கவிதை உலகத்திற்கு அறிமுகமாயினர்.

1959இல் சிங்கப்பூர் தன்னாட்சி பெற்றது. 1963க்கு முன்பு மலேசிய இணைப்புக்கான போராட்டமும் இணைப்புக்கான எண்ணமும் உச்சக்கட்டத்தில் இருந்தன. இதன் விளைவாக மலேசியப் பாடல்கள் பல. எழுந்தன. 1963இல் மலாயாவுடன் சிங்கப்பூர் இணைந்தது. மலேசியா என்ற அமைப்புப் பிறந்தது. பிறகு கம்யூனிச மிரட்டல் நிகழ்ச்சிகள் இன ஒருமைக்குப் பங்கம் விளைவித்தன. இக்காலக்கட்டத்தில் மலேசியா நாட்டுப்பற்றுப் பாடல்களை எழுத்தாளர்கள் எழுதினர். கவிஞர்கள் ஐ. உலகநாதன், முத்தமிழன், முல்லைவாணன், க.து.மு. இக்பால், கா. பெருமாள், ந. பழனிவேலு, முகிலன், அமலதாசன் முதலிய கவிஞர்கள் இத்தகைய பாடல்களை எழுதினர். இக்காலக் கட்டத்தில் தமிழ்முரசில் தொடங்கப்பெற்ற வெண்பாப் போட்டியும் தமிழர் திருநாள் போட்டியும் கவிஞர்களுக்கு ஊக்கம் ஊட்டிக் கவிதை எழுதத் தூண்டின. இதன் விளைவாகக் குமாரி அ. பார்வதி, பெரியசாமி, கா.கு. இளந்தமிழன், பொய்கை வேங்கடாசலம், டி. சே. சீனிவாசன் முதலியோர் கவிதை எழுதத் தொடங்கினர்.

1963ஆம் ஆண்டு மே மாதம் சிங்கை வானொலியில் பணியாற்ற வந்த கா.பெருமாள் நூற்றுக்கணக்கான மலேசியப் பாடல்களை எழுதி ஒலிபரப்பினார். இது அன்றைய அரசியல் சூழலில் மக்களிடையே நாட்டுப்பற்றை ஊட்டியது. 1-3-64 அன்று தி. செல்வகணபதியை ஆசிரியராகக் கொண்டு ஆரம்பிக்கப்பட்ட 'தமிழ் மலர்' நாளேடு இந்தோனேசிய எதிர்ப்புணர்வுப் பாடல் களுக்குக் களம் அமைத்துக் கொடுத்தது. ஐ. உலகநாதனைத் தலைவராகக் கொண்ட புதுப்போர்ப் பரணி பாடும் ஒரு குழு உருவாகிப் பல பாடல்களைப் பாடியது. இவ்வாறு சிங்கையில் குடியரசுக்கு முந்திய காலப்பகுதியில் தமிழ் இலக்கியப் படைப்புகள் தோன்றுவதற்குப் பல்வேறு அமைப்புகளும் பத்திரிகைகளும் படைப்பாளர்களும் காரணமாக இருந்தனர் எனலாம்.

1965இல் படைப்பாளர்கள் யாரும் எதிர்பாரா வண்ணம் சிங்கப்பூர் மலேசியாவிலிருந்து பிரிந்து 9-8-1965இல் குடியரசு நாடாகியது. அதன் பின் படைப்பிலக்கியங்கள் பல்வேறு நிலைகளில் வளரத் தொடங்கின. அவற்றை இலக்கிய வகை அடிப்படையில் இனிக் காணலாம்.

### சிங்கப்பூர்க் குடியரசு நிலைக்குப் பிந்திய பகுதி (1965 முதல் 2000 வரை)

சிங்கப்பூர் 1965இல் ஒரு தனிக் குடியரசு நாடாகியது. இக்காலக்கட்டத்தின் தொடக்கத்தில் வரலாற்று ரீதியாகவும், நிலவியல் ரீதியாகவும் சிங்கப்பூரை மலாயாவுடன் இணைந்த ஒரு பகுதியாகவே சிங்கப்பூர் மக்கள் முதலில் கருதி வந்தனர். எதிர்பாராது அரசியலில் ஏற்பட்ட இத்திடீர் திருப்பம் இலக்கியங்களிலும் பிரதிபலித்தது. அன்றைய பத்திரிகைகள் இரு நாட்டுக்காரர்களுக்கும் உரிய செய்திகளையே தங்கள் பத்திரிகைகளில் பிரசுரித்து வந்தன. இதனால் 1966, 1967, 1968 ஆகிய ஆண்டுகளில் சிங்கப்பூர் தேதிய தினத்தைப் புகழ்ந்து சிங்கப்பூர்த் தேசிய தினமலர் என்றும், அதே வேளையில் மலேசிய தேசிய தினத்தைப் புகழ்ந்து மலேசிய மெர்தேகா மலர் எனவும் வெளியிட்டுக் குழப்பமுற்றிருந்தன.

1967இல் சிங்கப்பூரைச் சேர்ந்த சே.வே. சண்முகம் தமிழ்நேசனில் எழுதிய மண்டூர் மகள் தொடர் கதை முற்றிலும் மலேசிய பின்னணியைக் கொண்டது. 1968இல் தமிழ் முரசு வெளியிட்ட மெர்தேகா மலரில் சிங்கை மா. இளங்கண்ணன் மலேசியா நம் நாடு என்னும் கட்டுரை எழுதினார். இந்த அளவிற்கு மக்களும் எழுத்தாளர்களும் குழம்பிப் போய் இருந்தனர். இந்நிலையிலிருந்து மீளச் சிங்கப்பூர் எழுத்தாளர் களுக்குச் சற்றுக் காலம் பிடித்தது. இந்தக் காலக்கட்டத்தில் சிங்கப்பூர் தன் உயிர் வாழ்தலுக்குப் போராட வேண்டிய நிலையும் ஏற்பட்டதால் இலக்கிய வளர்ச்சியில் ஒரு தேக்கம் ஏற்பட்டது. இருப்பினும்கூட சே.வெ. சண்முகம் 1967இல் சிங்கப்பூர்ப் பின்னணியில் 'மீன் வாங்கலையோ' முதலான அங்கதத் (Satire) தொடர் கதைகளைத் 'தமிழ் மலரிலும்' எழுதி வந்தார். சிங்கப்பூரில் பிறந்த சிங்கை மா. இளங்கண்ணனும், 1965ஆம் ஆண்டிலிருந்து எழுத்துலகில் நுழைந்த நா. கோவிந்தசாமியும் சிங்கைத் தொடர்புடைய படைப்புகளைத் தருவதற்குச் சற்று காலம் பிடித்தன. அதே போன்று நீண்ட இடைவெளிக்குப் பிறகு 1968இல் எழுத்துலகில் நுழைந்த இராம கண்ணபிரானும், வானொலி நாடகங்கள் வழி அறிமுகமான பொன். சுந்தரராசுவும் சிங்கைமண்ணின் மணம் வீசும் படைப்புகளைத் தருவதற்குச் சில காலம் ஆயிற்று. இதற்கெல்லாம் அன்றைய அரசியலில் நிலவிய குழப்பமே காரணம் ஆகும். இந்தக் குழப்ப நிலை காலவோட்டத்தில்

படிப்படியாகக் குறைய ஆரம்பித்து ஒரே மக்கள் ஒரே நாடு ஒரே சிங்கப்பூர் என்னும் நிலையை நோக்கிச் செல்லத் தொடங்கியது. இக்காலக்கட்டத்தில் தோன்றிய சிங்கைப் படைப்புகளில் மலேசியாவைப் பாடும் நிலை குறைந்ததைக் காணமுடிகிறது. இனி இப்படைப்புகளைக் கவிதை இலக்கியம், உரைநடை இலக்கியம் என்று இரு கூறுகளாகப் பிரித்துக் கொண்டு காண்போம்.

**கல்வித்திட்டத்தில் இலக்கியம்**

சிங்கப்பூர்த் தமிழ்க் கல்வித்திட்டத்தில் தொடக்க நிலை முதல் பல்கலைக்கழகப் புகுமுக வகுப்பு வரை இலக்கியப் படிப்புக்கு ஓரளவு இன்றியமையாத இடம் கொடுக்கப் பட்டுள்ளது. தொடக்கநிலையில் ஆத்திசூடி, கொன்றைவேந்தன், திருக்குறள் முதலிய நீதி நூல்களிலிருந்து சில பகுதிகள் பாடமாக வைக்கப்பட்டுள்ளன. பழமொழிகளும் ஒவ்வொரு வகுப்புப் பாடத்திட்டத்திலும் இடம் பெற்றுள்ளன. அழ. வள்ளியப்பா, கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை ஆகியோரின் பாடல்களும் பாடப்பகுதியில் உள்ளன. உயர்நிலையில் தனியாகச் செய்யுட் பகுதிகள் இடம்பெறாவிட்டாலும் உரைநடை வடிவில் இலக்கியச் செய்திகள் பாட நூல்களில் உள்ளன. பாரதியார், பாரதிதாசன், வைரமுத்து ஆகியோரின் கவிதைகளும் படிக்கும் பனுவல்களாகப் பாடங்களில் தரப்பட்டுள்ளன. தமிழைச் சிறப்பாகப் படிக்கும் உயர்தமிழ் மாணவர்களுக்கு இலக்கியச் சுவையை அனுபவிக்க உதவும் அணி இலக்கணப் பகுதிகளும் பாடத்திட்டத்தில் உள்ளன. உயர்நிலை, சாதாரணநிலைத் தேர்வில் (GCE 'O' Level) இலக்கியப் பாடத்தைத் தனியாக எழுதுவதற்குரிய வாய்ப்பும் உண்டு. புகுமுக வகுப்பு நிலையில் (GCE 'A' Level) இலக்கியப் பாடமாக இக்காலக் கவிதை நூல் ஒன்றும், சிறுகதைத் தொகுப்பு ஒன்றும், நாடகம் ஒன்றும், புதினம் ஒன்றும் பாடமாக வைக்கப்பட்டுள்ளன. உயர்தமிழ் படிக்கும் மாணவர்களுக்குச் சங்ககால நூல்கள், திருக்குறள், சிலப்பதிகாரம், மணிமேகலை, கம்பராமாயணம், பெரியபுராணம் ஆகிய நூல்களிலிருந்து சில செய்யுட் பகுதிகளும், இலக்கியக் கட்டுரைத் தொகுப்பு நூல் ஒன்றும், புதினம் ஒன்றும் பாடமாக இடம் பெற்றுள்ளன.

பல்கலைக்கழக நிலையில் தேசிய கல்விக்கழகத்தில் தமிழாசிரியர் பயிற்சி பெறும் மாணவர்களுக்குத் தமிழ் இலக்கிய வரலாறு, குழந்தை இலக்கியம், திறனாய்வு, இக்காலக் கவிதைகள், இக்கால உரைநடை இலக்கியங்கள், சிங்கப்பூர்த் தமிழ்

இலக்கியம் ஆகியவை பாடமாக இடம்பெற்றுள்ளன. சங்ககால முதல் இக்காலம்வரை உள்ள கவிதைகள் சிலவற்றின் தொகுப்பு நூல் ஒன்றும் பாடமாக வைக்கப்பட்டுள்ளது. இலக்கியச் சுவையை மாணவர்கள் நுகர்வதற்கு ஏற்ற வகையில் ஆண்டுதோறும் பாரதி விழா, மு.வ. விழா முதலிய விழாக்களும் அவ்வப்போது அறிஞர்களின் சொற்பொழிவுகளும் நடைபெறுகின்றன.

### பல்வகை பண்பாட்டுச் சூழலில் தமிழ் இலக்கியம்

சிங்கப்பூர் சீனம், மலாய், தமிழ், ஆங்கிலம் முதலிய பன்மொழி பேசும் மக்களையும், கிறித்துவம், இஸ்லாம், இந்து, பௌத்தம், சீக்கியம் முதலிய பல சமயங்களைத் தழுவிய மக்களையும், சீனர், மலாய்க்காரர், இந்தியர், ஈயூரேஷியர் முதலிய பல இனங்கள் சார்ந்த மக்களையும் கொண்ட நாடு. எனவே பல்வகை பண்பாட்டுக் கலப்புச் சூழலுக்குப் பலவகையிலும் வாய்ப்பு உண்டு. இக்கலப்புச் சூழலைக் காட்டும் போக்கு தமிழ் இலக்கியங்களில் மிகுதியாக இடம்பெறாவிட்டாலும்கூட ஒரு சில சிறுகதைகள், நாவல்கள், புதுக்கவிதைகள் ஆகியவற்றில் இடம்பெற்றுள்ளதைக் குறிப்பிடாமல் இருக்க முடியாது. சிங்கை மா. இளங்கண்ணனின் அலைகள் என்னும் நாவல் சீனப் பெண்ணைத் திருமணம் செய்து கொண்ட தமிழரின் வாழ்வைச் சித்திரிக்கும் போக்கில் சீனப்பண்பாட்டை விளக்குகிறது. இவரின் வழிபிறந்தது என்னும் கதையில் தைப்பூசத்தன்று சீனர்கள் காவடி எடுக்கும் போக்கும் சித்திரிக்கப்படுகிறது. இராம. கண்ணபிரானின் சபாரியா என்னும் சிறுகதை மலாய்ப் பண்பாட்டைத் தொட்டுக் காட்டுகிறது. இளங்கோவன் ஒரு ஆங்கிலக்கதையின் வழி சீனர்கள் இந்தியர்கள் மீதுகொண்ட ஒரு சில மனப்போக்குகளை விளக்கியுள்ளார். தமிழர் அல்லாத ஏனைய இனத்தவர்கள் தமிழ் இலக்கியத்தை அறியும் வகையில் தமிழ் இலக்கியத் தொகுப்பு நூல்கள் ஆங்கிலமொழி பெயர்ப்புடன் வெளிவந்துள்ளன.

1985இல் வை. திருநாவுக்கரசைத் தொகுப்பாசிரியராகக் கொண்டு வெளியிடப்பெற்ற The Poetry of Singapore என்னும் ஆங்கிலத்தொகை நூலும், 1995இல் நா. கோவிந்தசாமியைக் கொண்டு வெளியிடப்பெற்ற Journeys என்னும் நூலும் நமக்குப் பெருமை சேர்க்கக்கூடிய நூல்கள் ஆகும். சிங்கப்பூர் பற்றிய பாடல்களைத் தொகுத்து The Centre for Arts நினைவுகளும், ஆசைகளும் (The Poetic History of Singapore, Memories and Desires) என்னும் தலைப்பில் 1998இல் வெளியிட்டுள்ளது.

இந்நூல்கள் அரசு அங்கீகாரம் பெற்ற நிறுவனங்களால் தொகுத்து வெளியிடப்பெற்ற பெருமைக்குரியன. சிங்கப்பூரின் நான்கு அதிகாரத்துவ மொழிகளின் கவிதைகளும் இந்நூல்களில் இடம்பெற்றுள்ளன. இந்நூல்களில் இடம்பெற்ற அனைத்துக் கவிதைகளும் ஆங்கில மொழிபெயர்ப்புடன் விளங்குவன.

சிங்கப்பூர் புனைகதைகள் என்னும் பெயரில் (The Fiction of Singapore) வெளிவந்த இரண்டாம் தொகுதியில் சிங்கப்பூர்ச் சிறுகதைகள் 17 ஆங்கில மொழிபெயர்ப்புடன் தரப்பட்டுள்ளன. Modern Asian plays Singapore என்னும் நூலில் இரு நாடகங்கள் ஆங்கில மொழிபெயர்ப்புடன் தரப்பட்டுள்ளன. இவற்றை வெளியிடும் பொறுப்பாசிரியர் குழுவில் நா. கோவிந்தசாமியும், க. இளங்கோவனும் இடம்பெற்றுள்ளனர்.

சிங்கப்பூர்த் தேசிய பல்கலைக்கழகக் கலைகள் மையத்தின் சார்பில் இப்பொழுது வெளிவரும் சிங்கா என்னும் இலக்கிய இதழ் சிங்கப்பூர்த் தமிழ் இலக்கிய வகைகளான கவிதைகள், புதுக்கவிதைகள், சிறுகதைகள், நாடகங்கள் ஆகியவற்றை ஆங்கில மொழிபெயர்ப்புடன் வெளியிட்டு வருகின்றது. சிங்கப்பூர்த் தமிழ் இலக்கியம் பற்றிய ஆய்வுக் கட்டுரைகளும் இவ்விதழில் இடம்பெறும். இவ்வாறு மேற்கண்ட தொகுப்பு நூல்களும் சிங்கா இதழும் தமிழ் அல்லாத மற்ற இனத்தவர் சிங்கப்பூரில் தமிழ் இலக்கியத்தைப் பற்றி அறிய வழி செய்கின்றன. இம்முயற்சிக்குப் பின்னணியாகவும் உறுதுணையாகவும் இருப்பவர் சிங்கப்பூர்த் தேசிய பல்கலைக்கழக ஆங்கிலப் பேராசிரியர் எட்வின் தம்பு என்பதையும் இங்குக் குறிப்பிட வேண்டும். சிங்கப்பூர்க் கவிஞர்களின் கவிதைகள் சில ஆங்கில மொழிபெயர்ப்புடன் பெருவிரைவு போக்குவரத்துக் கழகத் தொடர் வண்டியில் பலரின் பார்வையில் படும்வண்ணம் அவ்வப் போது வைக்கப்பட்டுள்ளன. இவற்றையும் மற்ற இனத்தவர்கள் படித்து வருகின்றனர்.

சிங்கப்பூரில் தமிழ் அதிகாரத்துவ மொழியாக இருக்கிற காரணத்தால் தென்கிழக்காசிய இலக்கிய விருது பெறும் வாய்ப்பு நான்கு ஆண்டுகளுக்கு ஒரு முறை தமிழ் இலக்கியப் படைப்பாளர் களுக்குக் கிடைக்கிறது. இதுவரை இவ்வாய்ப்பினால் பயன் பெற்றவர்கள் ஐவர். அவர்கள் கவிதை, புதினம், சிறுகதை, நாடகம் என்ற பலவகை இலக்கியப் படைப்புகளை உருவாக்கியவர்கள்.

## வேற்றினச் செல்வாக்கு

சிங்கப்பூரில் சீனம், மலாய், ஆங்கிலம் முதலிய மொழிகளைச் சார்ந்த வேற்றினத்தவருடன் தமிழர்கள் உடனுறைகின்ற காரணத்தால் அவர்கள் வாழ்க்கையிலும் மொழியிலும் பண்பாட்டிலும் வேற்றினச் செல்வாக்கு வருவதற்கு வாய்ப்புகள் உள்ளன. அவற்றின் கூறுகளை ஓரளவு சிங்கப்பூர்த் தமிழிலக்கியத்தின் உள்ளடக்கத்திலும் மொழி நடையிலும் காண முடிகின்றது. சீனப்பெண்களைத் திருமணம் செய்து கொள்ளுதல், சீனப்பிள்ளைகளை எடுத்து வளர்த்தல், பிற இன அண்டை வீட்டாருடன் பழகுதல், மலாய்க்காரர்களோடு நட்புக்கொள்ளுதல், மலாய்ப் பெண்களையோ ஆடவர்களையோ மணந்து கொள்ளுதல், பிற இனத்தவரோடு வணிகத்தொடர்பு கொள்ளுதல் முதலியவற்றைக் கருப்பொருளாகக் கொண்ட கதைகள் சிங்கப்பூர் இலக்கியத்தில் இடம் பெற்றுள்ளன. கவிதை இலக்கியத்தில் இத்தகைய வேற்றினச் செல்வாக்கு உள்ளடக்கத்தைப் பொறுத்தவரை காணமுடியவில்லை.

மொழிநடையில் சிங்கப்பூர்த் தமிழர்களிடையே வழங்குகின்ற மலாய் மொழிச் சொற்கள் சில புதுக்கவிதைகளில் இடம்பெற்றுள்ள இயல்பைக் காண முடிகின்றது. கதைகளில் பாத்திரங்களின் உரையாடலின்போது இத்தகைய சொற்கள் இடம்பெறுவதையும் காணலாம். மரபுக் கவிதைகளில் பிறமொழிக் கலப்பை எள்ளுகின்ற நோக்கில் இத்தகைய சொற்களைக் கவிஞர்கள் கையாண்டுள்ளனர். மலாய், சீனமொழிக் கலப்பு கவிதைகளில் மிகுதியாக இல்லை. பிற இனத்தவரின் உணவு, உடை, நாகரிகம், பழக்கவழக்கங்கள், விழாக்கள் முதலியவற்றைக் குறிப்பதற்குரிய பிறமொழிச் சொற்கள் வேற்றினச் சூழலில் வாழும் வாழ்க்கையைக் காட்டும் இலக்கியங்களில் தவிர்க்க முடியாத ஒன்றே. இவ்வாறே இடப்பெயர்கள், ஆள்பெயர்கள் ஆகியவற்றிலும் பிறமொழிச் செல்வாக்கைக் காணலாம். வாக்கியங்களில் இறுதியில் 'லா' சேர்த்துப் பேசும் மலாய்க்காரர் வழக்கைப் பின்பற்றித் தமிழ் வாக்கியங்களிலும் சொற்களிலும் 'லா' பேசும் பண்பைச் சில இலக்கியங்களில் காண்கிறோம். மலாய், சீனம் ஆகியவற்றின் செல்வாக்கை ஒப்பிடுகின்றபோது மலாய் மொழிச் செல்வாக்கே மிகுதியாக உள்ளது. இதற்குக் காரணம் சீனர் மலாய்க்காரர் தமிழரிடையே இணைப்பு மொழியாக மலாய்மொழி இருப்பதே ஆகும். இப்போது இளைஞர்களால்

எழுதப்படும் இலக்கிய வகைகளில் ஆங்கில மொழிச் செல்வாக்குப் படிப்படியாக இருந்து வருவதையும் பார்க்க முடிகின்றது. எதிர்காலத்தில் இந்தப் போக்கே மிகுதியாக இருக்கும்.

**இக்கட்டுரை எழுத உதவிய நூல்கள்**


1. நா. கோவிந்தசாமி, சிங்கப்பூர்த் தமிழ்ச் சிறுகதைகள்
2. நா. கோவிந்தசாமி, **சிங்கப்பூர்த் தமிழ் இலக்கிய வளர்ச்சி: ஒரு சமூகவியற் கண்ணோட்டம்**, கட்டுரை சிங்கப்பூரில் தமிழும் தமிழிலக்கியமும், Vol. 2, 1979.
3. இலியாஸ், எம், தமிழ்வேள் சாரங்கபாணி
4. இலக்குமி மீனாட்சி சுந்தரம், இலக்கிய அரும்புகள்
5. வீரமணி, அ. தொகுப்பாசிரியர், சிங்கப்பூரில் தமிழ்மொழி தமிழ் இலக்கிய வளர்ச்சி, 1965-1990.
6. வீரமணி, அ, சிங்கப்பூர் வளர்ச்சியில் தமிழ்மொழி
7. ஆய்வரங்கம், சிங்கப்பூர்த் தமிழ் எழுத்தாளர் கழகத்தின் 20ஆம் ஆண்டு நிறைவு விழா மலர்.
8. சிங்கப்பூரில் தமிழும் தமிழிலக்கியமும், சிங்கப்பூர்ப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேரவை, சிங்கப்பூர், 1977, 1979, 1981, 1985, 1987, 1989.
9. 2ஆவது, 3ஆவது, 4ஆவது தமிழ் இளையர் ஆய்வரங்கக் கட்டுரைத் தொகுப்பு, தமிழர் பேரவை இளையர் மன்றம், சிங்கப்பூர், 1983, 1984, 1985.
10. இரா. சிவகுமாரன், சிங்கப்பூர்த் தமிழ்ப் படைப்பிலக்கியம் - ஒரு திறனாய்வு (1965-1990) ஆய்வேடு.
11. கவிஞர் செவ்வியன், சிங்கப்பூரில் தமிழர்களும் தமிழும்.
12. முரசு நெடுமாறன், மலேசியத் தமிழ்க் கவிதைக் களஞ்சியம்
13. ரே. சோமசுந்தரம், மேடை நாடகங்கள் (1990)
14. சுப. திண்ணப்பன், சிங்கப்பூரில் தமிழ்மொழியும் இலக்கியமும்
15. சுப. திண்ணப்பன், ஆய்வரங்கத் தலைமையுரை.

# கவிதை

## தமிழகம்

ச. சிவகாமி

### மரபுக்கவிதை

இக்காலப் பகுதியில் புதிதாக உரைநடையிலக்கியங்கள் தோன்றித் தமிழைத் தழைக்கச் செய்ததுடன் கவிதை படைப்பிலும் புதிய பரிமாணங்களைப் பார்க்கிறோம். எனவே அவற்றினின்றும் தனித்து நோக்க வேண்டியதாக மரபுக்கவிதை அமைகிறது. ஒரு கவிதையென்பது எந்தப் பொருளை, எந்த யாப்பில், எந்த அமைப்பில் எப்படிப் பாடவேண்டும் என்பன போன்ற காலங்காலமாகத் தொடரும் விதிமுறைகளுக்குக் கட்டுப்பட்டு வெளிவரும்பொழுது அது மரபுக்கவிதை ஆகிறது. "காலம் காலமாகத் தொடர்ந்து பின்பற்றப்பட்டும் பயின்றும் வரும் எண்ணங்கள் சொல், செயல், பொருள்...... எதுவாயினும் மாறாது அமைவது பற்றி மரபு எனச் சுட்டத்தக்கது. ஏற்கெனவே நிலவி வரும் கொள்கைகள், கோட்பாடுகள், முறைகள், மரபு எனப்படுவதால் மாறாமையே மரபு எனத் தோன்றும். ஆயின் அடிப்படை மாறாது இருக்க, அதனில் வேரூன்றிய வளர்ச்சியும் விரிவும் கூட மரபில் புதுமை சேர்க்கலாம். எனவே பழங்காலந் தொட்டு அமைவதைப் பழமரபு எனவும், அதில் மாறிவரும் புதுமையினைப் புதுமரபு எனவும் மரபு மாற்றம் எனவும் கூறலாம். மாறுவது மரபல்ல எனத் தோன்றினும், அம்மாற்றம் பயிற்சியும் ஆட்சியும் செல்வாக்கும் பெற்று விளங்கும் போது, அதுவும் மரபாக உருவாதல் உண்டு" என்ற சிந்தனை இன்றைய மரபுக்கவிதைகளின் போக்கினைத் தெளிந்துரைத்ததாகும் (ச.வே. சுப்பிரமணியன், அன்னிதாமசு, எண்பதில் மரபுக்கவிதை, எண்பதுகளில் தமிழ், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1982, ப. 675).

உரைநடையிலக்கியம் (சிறுகதை, புதினம் போல்வன) புதுக்கவிதை யெனும் பெரும் புயல்கள் தமிழ்க்கடலை இன்று கலக்கினும், அவற்றின் வேகத்தால் நிலைகுலையாது, திசை மாறாது செல்லும் தோணியாக மரபுக்கவிதை பயணிக்கிறது.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியை ஆட்சி செய்த கவிஞர்கள் தொல் மரபினை முழுமையாகப் பின்பற்றினர். எனினும் இருபதாம் நூற்றாண்டில் நிகழ்ந்த இலக்கியப் புரட்சிக்கான வித்துகள் இக்காலக்கட்டத்தில் விதைக்கப்பட்டன. இது மரபுக்கவிதையிலும் எதிரொலித்தது. பாடுபொருள், வெளியீடு, வடிவம் எனக் கவிதையின் முக்கூறும் மாற்றம் கண்டன. இம் மாற்றத்திற்குப் புதுயுகக் கவிஞனாக அவதரித்த பாரதி தலைமை தாங்கினான். நடப்பியலுக்கு முதன்மையளித்துச் சமுதாய முன்னேற்றத்திற்கு வகை செய்வதாகக் கவிதை அமைய வேண்டும்; எவ்வகை இலக்கியமாயினும் அது பொதுமக்களுக் குரியதாக, அவர்களைச் சென்றடைவதாக இருக்க வேண்டும் என்ற உணர்வு தமிழ்க் கவிஞரிடையே ஆழப் பதிந்தது. அறிவியல் வளர்ச்சி, கல்வி, மராத்தி, வங்காளம் போன்ற இந்திய மொழிகளில் தோன்றிய இலக்கியப் புரட்சி, உலகின் பிற பகுதிகளில் நிகழ்ந்த முக்கியமான மாற்றங்கள், உலகப் போர்கள், சமூக விழிப்புணர்வு, அரசியல் சூழல் எனப் பலவற்றால் தமிழ் இலக்கிய உலகில் தோன்றிய மறுமலர்ச்சி மரபுக்கவிதையில் இடம்பெறல் இயல்பாயிற்று.

நாட்டுப்பற்று, மொழிப்பற்று, தேசிய உணர்வு, சமூக மறுமலர்ச்சி, பெண் விடுதலை, பொதுவுடைமைச் சிந்தனை எனத் தமிழ்க் கவிதைக்குப் புதிய பாடுபொருளைப் பாரதி வழங்கினான். எழுத்தறிவு பெற்றோர் யாவருக்கும் புரியும் வண்ணம் எளிய நடை என்பதை அதன் இலக்கணமாக்கினான். இதனைத் தொடர்ந்து வழி நடத்திச் செல்வதில் பெரும் பங்காற்றிய பாரதிதாசன் திராவிட இயக்கத் தாக்கத்தால் இந்திய தேசிய உணர்வினைத் தமிழ்த்தேசிய உணர்வாக்கினார். மூடப்பழக்க வழக்க எதிர்ப்பு, புராண எதிர்ப்பு, ஆரியர் எதிர்ப்பு என அதன் கொள்கைகள் வேரூன்றத் தொடங்கின. தமக்குள்ள மொழிப் பற்றை வெளிப்படுத்தாதவர் தமிழ்க்கவிஞரில்லை என்றளவிற்குத் தாய்மொழிப்பற்றும் பரந்தமைந்தது. தமிழக அரசியலில் பொதுவுடைமைக் கட்சி ஆதிக்கம் பெற இயலவில்லையாயினும் இலக்கியத்தில் அதன் ஆளுமை தொடர்ந்து நீடிக்கிறது. கவிஞர் தாம் எக்கட்சி சார்புடையராயினும் தொழிலாளர் முன்னேற்றம், அவர் தம் உரிமை, வறுமை எதிர்ப்பு, ஊழல் எதிர்ப்பு, ஆட்சியாளர் - அதிகார வர்க்கத்தினரின் கொடுமைகள் என்பனவற்றையும் தம் கருத்திற்கேற்ப வடிக்கின்றனர். இவற்றுடன் காந்தீயமும் குறிப்பிடத்தக்க வரவேற்பைப் பெற்றுள்ளது.

பாரதி, பாரதிதாசன் என்ற இவ்விரு சுழல் வட்டத்திற்கும் அப்பால் மூன்றாவதாகத் தன் போக்கில் பழைய மரபிலேயே

அழுத்தமாகக் காலூன்றி நிற்கும் வட்டமும் உண்டு. இவ்வட்டத்தை நாம் ஒரு குறிப்பிட்ட பெயரைச் சொல்லி அழைப்பதற்கில்லை. வேண்டுமானால் ஆராய்ச்சி வசதிக்காகப் 'பழம்புலவர் வட்டம்' என்ற பெயரைப் படைத்துக் கொள்ளலாம். இவ்வட்டத்தில் வி.கோ. சூரிய நாராயண சாஸ்திரியார், வெ.ப. சுப்பிரமணிய முதலியார், மு. ராகவ ஐயங்கார், மறைமலையடிகள், திரு.வி.க. முதலியோர் அடங்குவர் என்பர். (மா. இராமலிங்கம், இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கியம், என்சிபிஎச், சென்னை, 1999, ப. 162). அண்மைக் காலக் கவிதைகளில் இம்மூன்றாம் வட்டம் அருகிவிட்டது. புதுக் கவிதையின் எழுச்சியும் ஆட்சியும் இதற்குக் காரணங்களாகும்.

இருபதின் கவிதைகளை, தேசியப் பண்பின, இனவாதப் பண்பின, பொதுவுடைமை தத்துவப் பண்பின, தனி மனித வாதப் பண்பின என நான்காகவும் பகுத்துரைப்பர் (பாரதிதாசன், எதிர்காலத்தில் தமிழ்க்கவிதை, தமிழர் எதிர்காலவியல் (பதி) ப. டேவிட் பிரபாகர், சென்னை கிறித்துவக் கல்லூரி, சென்னை, 1993, ப. 10).

மரபுக்கவிதை மட்டுமே கவிதையிலக்கியமாகும் எனும் கொள்கையினராகப் பாரதிதாசன் முதலான கவிஞர் பலர் அமைகின்றனர். எனினும் மரபு, புதுமை என இருவகையிலும் கவிதை படைப்போரும் உளர். சான்றாகப் பூவை அமுதனைச் சுட்டலாம். கவிஞனுக்குரிய இலக்கணம்,

**பித்தனாகிப் புத்தனாகிப் பின்னுமாகி முன்னுமாகிச்**
**சித்தனாகித் தத்துவங்கள் பேசுவான் – நாட்டின்**
**சிறுமை கண்டு கண்டு நெஞ்சு கூசுவான்**

*(சக்திக்கனல், கண்ணதாசன் இதழ்க் கவிதைகள், ப. 13)*

என இதில் பேசப்படுகிறது. 'கவிதை என்பது காலங்காலமாக வரும் கவின்கலையாகும். அதற்கு எனச் சில மரபுகள் உள்ளன. அவையே அதற்கு அழகு தருவன ஆகும். ஓசை நயம் கவிதையின் உயிர்நாடி; மரபுக்கவிதை மங்கி வரும் நாளில் அதனை உயிர்த் துடிப்புடன் இயக்கி எழுதப்பட்ட நூல் இதுவாகும்' (செல்வின் குமார், முல்லைமலர், முன்னுரை) என்பது மரபுக்கவிஞர் மன நிலையை உணர்த்துவதாகும்.

மரபுக்கவிதைகளை மரபிலக்கணமான தொல்காப்பியத் தோடு இணைத்துப் பார்க்கும் பொழுது சில கருத்துகள் காணக் கிடக்கின்றன. தொல்காப்பியம் சிறப்பித்துள்ள அகப்பாடல்கள் இன்று காதல் பாடல்களாகக் கனிந்துள்ளன. மரபு மாற்றம்

அதிகமாகக் காணப்படினும் மரபுத் தொடர்ச்சியமைதலும் சுட்டத்தக்கது. அகப்பாடல் தலைவன் தலைவியரின் இயற் பெயரின்றி அமைதல் வேண்டும் என்ற நெறியை ஏற்றுப் பாடலே பரவலாகக் காணப்படினும் அருகிய நிலையில் இயற்பெயர் சுட்டலும் அமைகிறது. பெண் தன் காதலுள்ளத்தைத் தானே பிறரிடம் உரைத்தலைத் தொல்காப்பியம் தடுக்கிறது (1054). இங்குப் பாரதிதாசனைப் பின்பற்றி (புரட்சிக்கவி) பிறரும் தலைவி தானே தன் காதல் மனநிலையைத் தெரிவிப்பதாகப் பாடியுள்ளனர். (கந்ததாசன், சுதந்திரத் திருநாள், ப. 101) அங்குத் தலைவன் தலைவியின் நலம் பாராட்ட இங்குத் தலைவியும் தலைவனின் நலம் பாராட்டுகிறாள் (பாடுங்குயில், ப. 121). தலைவனின் பொருள்வயிற் பிரிவு; கல்வியிற் பிரிவு; பிரிவில் தலைவி ஞாயிறு, திங்கள்... போன்றவற்றைத் தூதனுப்புதல் முதலிய பழம் பொருண்மைகளும் பாடப்படுகின்றன (கந்ததாசன், முன்சுட்டியது).

பாடப்படுகின்ற ஆண்மகனின் வீரத்தையும் ஈரத்தையும் பேசும் பாடாண் திணையை இன்று, தம் விருப்பத் தலைவர் மீது பாடப்படும் புகழ்ப்பூக்களுடன் இணைத்து நோக்கலாம். இதுவும் அரசியல் என்ற எல்லை தாண்டி, எத்துறையாயினும் அதில் சாதனை படைப்போரைச் சிறப்பிப்பதாக உள்ளதும் குறிப்பிடத்தக்கது. இங்கு அரசியல் தலைவர்களும், பொதுநலத் தொண்டர்களும் அதிகமாகப் பாராட்டப்படுகின்றனர். அன்றைய சமூகம் ஆண் இனத்தை முன்னிறுத்தியே இயங்கியதால் பாடாண் திணை அமைந்தது. ஆனால் இன்று பல்வேறு துறைகளில் பெண்டிரும் பெருமை பெற்றுள்ள நிலையில் அவர்களும் இப்புகழ்பூக்களுக் குரியோராகின்றனர். அன்னை தெரசா, இந்திரா காந்தி ஆகியோர் மீது எழுந்துள்ள பாடல்களை இதற்குச் சான்றாக்கலாம்.

தொல்காப்பியர் சுட்டும் புறத்துறைப் பொருண்மைகள் பலவும் இம்மரபுக் கவிதைகளிலும் இடம்பெறக் காண்கிறோம். நிலையாமை (தொல். 1024) எண்ணம் வாழ்வியல் உணர்த்தும் கவிதைகளில் இடம்பெறுகிறது. எனினும் பக்தியியக்கக் காலத்தில் பரவி நின்றநிலை அமையாது அருகியே காணப்படு கின்றது. சான்றாகப் பின்வரும் பாடலை எடுத்துக்காட்டலாம்.

**இதயத்தை எண்ணம் வெல்லும்**
**இளமையை முதுமை வெல்லும்**
**அதிகமாய்த் தோன்றும் நெஞ்சில்**
**ஆசையைக் காலம் வெல்லும்**

மதியினை விதியே வெல்லும்
வாழ்க்கையைக் கனவே வெல்லும்
வதைபட்ட நிலையில் இந்த
மனிதனை மரணம் வெல்லும்

(கண்ணதாசன் கவிதைகள், தொகுதி 4, ப. 152)

'கழிந்தோர் தேஎத்து அழிபடர் உறீஇ ஒழிந்தோர் புலம்பிய' கையறு நிலைப்பாடல்கள் (தொல். 1025) இன்றும் தொடர்கின்றன. இரங்கற்பா, சரமகவி எனவும் இது அழைக்கப் படுகின்றது. அரசியல் தலைவர், பொதுநலத் தொண்டர், உறவு, தனக்கு மிகவும் வேண்டியவர் எனப் பல திறத்தவரும் இதில் இடம்பெறுகின்றனர். பால் வேறுபாடற்ற நிலை நிலவுவதும் சுட்டற்பாலது.

தனக்கு உற்ற நண்பராகவும், பேராதரவு தந்த பெரியாராகவும் இருந்த சி.வை. தாமோதரம் பிள்ளை இறந்த போது வி.கோ. சூரியநாராயண சாஸ்திரியார் பாடிய கையறு நிலைப்பாடல், மறைமலையடிகள் தமது தந்தையும் ஆசானும் ஆன சோமசுந்தர நாயகர் மறைவின்போது பாடிய 'சோமசுந்தரக் காஞ்சியாக்கம்', இசைப் புலவர் சுப்பராமதீக்ஷிதர் மறைந்த போது பாரதியார் பாடிய பாடல், சர் ஏ.டி. பன்னீர் செல்வத்தின் மறைவு குறித்துப் பாரதிதாசன் பாடியது, அண்ணல் நேரு மறைந்த ஞான்று கண்ணதாசன் பாடிய பாடல் என்பன மறக்க முடியாத இரங்கற்பாக்கள் என்பர் (மா. இராமலிங்கம், முன்சுட்டியது, ப. 196-197).

'சிறந்த நாளணி செற்றம் நீக்கிப் பிறந்த நாள்வயின் பெருமங்கலம்' (1037) மற்றும் 'வழிபடு தெய்வம் நின் புறம் காப்பப் பழிதீர் செல்வமொடு வழிவழி சிறந்து பொலிமின்' (1367) எனும் புறநிலை வாழ்த்தும் இன்று பலவாறாகப் பல்கிப் பெருகியுள்ள வாழ்த்துப் பாக்களுக்கு அடித்தளமாகின்றன. மணிவிழா, மண விழா, மனைவிழா, அரசியல்விழா, பொதுவிழா என அவை பரந்து அமைகின்றன. அரு. சோமசுந்தரனின் 'கவிதை ஆற்றில்' எனும் நூல் முழுமையும் இத்தகு வாழ்த்துகளால் நிறைந்திருப்பது குறிக்கத்தக்கது. தனியொருவர் அல்லது ஒரு குடும்பத்தின் சிறப்பு நாட்களுக்கான வாழ்த்துகளுடன் அனைவருக்கும் பொதுவான விழாக்களுக்குமான வாழ்த்துகளும் இப்பொழுது மிகுந்த வரவு காட்டுகின்றன. தீபாவளி, விடுதலை நாள் முதலானவற்றிற்கும் வாழ்த்து வழங்கப்படினும் பொங்கல் விழா சிறப்பாகப்பலராலும் பாராட்டப்படுகிறது. தமிழர் திருநாளாக வழங்கப்படுவதால் இச் சிறப்பமைகிறது.

தொல்காப்பியர் உணர்த்தும், அறிவுரை பகரும் வாயுறை வாழ்த்து (1369) அகப்புறப் பொருண்மைகளைத் தொடர்ந்து வெற்றி பெற்ற அறநூல்களுக்கு வழிகாட்டுகிறது. வாழ்க்கையை நல்வழி நடத்தி, பெற்ற பிறவியைப் பிறர்நலம் போலும் பெற்றிய தாக்கும் பண்பில் அறநூல்கள் முன்னிற்பதாலும் சமுதாயச் சீர்மை இலக்கியக் கோட்பாட்டின் நோக்கங்களுள் ஒன்றாக அமைவதாலும் எவ்வகையிலேனும் இவை இடையறாது தொடர்ந்து இடம் பெற்று வருகின்றன. வாழ்வியல் பொதுவறங்கள் பெரும்பாலும் மாற்றமுறாது தொடரினும் மாற்றம் கண்டுள்ளனவும் உண்டு. சான்றாக ஈகையைச் சுட்டலாம். இது சோம்பேறித்தனத்தை வளர்ப்பதால் தவிர்க்கப்பட வேண்டியதாக இன்று (புதுக்குறள் 37:2) கருதப்படுகிறது. அதே வேளையில் குருதிதானம், கண்தானம் என்பன (புதுமைக்குறள் 882-889) வேண்டப்படுகின்றன. பொது நிலையில் அனைவரையும் முன்னிறுத்திப் பாடப்பட்ட அறப்பொருள் பண்பு இன்று குறிப்பிட்டோரைச் சுட்டியமைதலும் உண்டு.

அன்றைய அறநூல்கள் மனிதப் பண்பினை மேம்படுத்தி வாழும் நெறி சீரியதாக அமைய வழிகாட்டின. இன்றைய மரபுக்கவிதைகள் அதனின்றும் வளர்ச்சி பெற்ற தன்மையில் தற்காலச் சமூகச் சிக்கல்களை முன்னிறுத்தி அவற்றின் தீர்விற்கு முனைய வேண்டுகின்றன.

முயற்சியோடு மக்கள் சக்தி
திரள வேண்டுமே – எயிட்ஸ்
மூளுவதால் தோன்றும் கேட்டை
விளக்க வேண்டுமே – நித்தம்
விளக்க வேண்டுமே

*(வலசை ப. கணேசன், மறுமலர்ச்சிக் கவிதைகள் ப. 61)*

என்று இன்றைய ஆட்கொல்லி நோயான எயிட்ஸ்க்கு எதிர் நடவடிக்கையின் தேவை வலியுறுத்தப்படுகின்றது. உழைப்பு, குடும்பக் கட்டுப்பாடு போல்வன மிகுதியாகப் பேசப்படும் கூறுகளாகும்.

காமப்பகுதி கடவுளும் வரையார் (1029) எனச் சமயப் பாடல்களுக்குத் தோற்றுவாய் அமைத்தது தொல்காப்பியம். இந்நூற்றாண்டின் முற்பகுதி வரை சமயவிலக்கியமே இலக்கிய வரலாற்றில் ஆட்சி செலுத்தியது. இன்று அதனிடத்தைச் சமுதாயம் ஏற்றுள்ள போதிலும் சமயப் பாடல்களும் ஆங்காங்கே குறிப்பிடத்தக்கவளவு இடம்பெற்றுள்ளன. க. பெருமாளின் அருள்வெள்ளம் முழுமையும் பக்திப்பாடலாக அமைதல் கூறத் தக்கது. சமய எதிர்ப்பியக்கங்களின் தாக்கம் காணப்படினும்

கடவுள் வாழ்த்தினை நூலின் தொடக்கத்தில் அமைக்கும் இலக்கிய மரபினை ஒட்டிப் பல மரபுக்கவிஞர் தம் நூலுள் முதலில் இறைவணக்கப் பாடல்களை அமைத்திருப்பதும் (வா.மு. சேதுராமன், சந்தித்தேன் சிந்தித்தேன்) நவிலற்பாலது. ஆழ்வார் நாயன்மார் பாடல்களில் இடம்பெற்ற நாயகன்-நாயகி பாவமும் இவற்றில் இடம் பெறுகின்றன (க. பெருமாள், அருள்வெள்ளம், ப. 115). தலந்தோறும் சென்று அல்லது தாங்கள் மேற்கொள்ளும் தலயாத்திரையின் போது வழிபட்ட கடவுளர் மீது பாடல் இயற்றும் மரபும் தொடர்ச்சி காட்டுவதைச் சில கவிஞரிடையே (சக்தீபால ஐயா கவிதைகள்) பார்க்கலாம். சித்தர் பாடல் போக்கிலும் அருகிய நிலையில் பாடல்கள் எழுவதைக் காணமுடிகிறது (தேகாலய ஞான திறவுகோல், அரிமேலழகன், தேகாலய ஞான பீடம், சென்னை, 2001).

தொல்காப்பியம் பொதுநிலையில் இலக்கியம் பற்றியும் சில கருத்துகளை இயம்பியுள்ளது. அவற்றுள்,

> உயர்ந்தோர் கிளவியும் வழக்கொடு புணர்தலின்
> வழக்கு வழிப்படுத்தல் செய்யுட்குக் கடனே *(1163)*

என்பதொன்றாகும். இலக்கியத்திற்கும் அதன் தோற்றக்களனான சமூகத்திற்கும் இடையே இடைவெளியின்றி வழக்கில் உள்ளனவே இலக்கிய ஏற்றம் பெறல் இங்கு வேண்டப்படுகிறது. இவ்வழக்கு பாடுபொருள், அதனை வெளிப்படுத்தும் சொற்கள் என இரண்டினையும் உள்ளடக்கியதாகும். இங்கு உயர்ந்தோர் என்பதனை இன்றைய சூழலுக்கு ஏற்ப, சமுதாய நலனில் அக்கறை கொள்வோர் எனப் பொருள் கொள்வதில் தடையில்லை. உயர்வு நவிற்சியற்ற, இயல்பு வழிப்பட்ட தன்மையே இலக்கியத்தை அணி செய்வதாகக் கருதலாம். இந்நிலை இன்றைய மரபுக் கவிதைகளிலும் சிறப்பாகப் பின்பற்றப்படுகிறது.

> புற்றீசல் போலிங்கே கட்சி தோன்றப்
> புதைந்தே தான் போனதிங்கே நாகரிகம்
> வெற்றுச்சொல் வெறும் பயல்கள் பேச்சின் மேலே
> விரும்பித்தான் கொண்டார்கள் அடிமை மோகம்
> குற்றங்களே தீர்ப்பெழுதும் காலம் நாட்டைக்
> குட்டிச் சுவராக்குகின்ற கோலம் இன்னும்
> அற்புதங்கள் பல இங்கே மக்கள் முன்பாய்
> அன்றாடம் அரங்கேற்றம் ஆகுதய்யா!

*(இராம. இராகவேந்திரன், வணக்கத்திற்குரிய, ப. 18)*

என்ற கவிதையைச் சான்றாக்கலாம். நடப்பியல் இங்குப் பாடுப்பொருளாகியுள்ளது. புற்றீசல், வெற்றுச் சொல், வெறும் பயல்கள், குட்டிச்சுவர் எனும் வழக்குச் சொற்கள் மிக இயல்பாக பொருந்திக் கவிதையின் வெகுளி மெய்ப்பாட்டிற்கு மிகுந்த அழுத்தம் தரக்காணலாம். ஆற்றாமையால் வெடித்த வெகுளி இறுதியில் இரங்கலாய் உருமாறி நடப்பியலைக் காட்சிப்படுத்தி யுள்ளது.

எதையும் பாடலாம் என்று அவரவர் விருப்பிற்குத் தொல்காப்பியம் அனுமதியளித்த போதிலும் அவற்றில் சமூக உணர்வு முன்னிற்க வேண்டும் என்ற எச்சரிக்கையை,

> **அறக்கழிவுடையன பொருட்பயம்படவரின்**
> **வழக்கென வழங்கலும் பழித்தன்று என்ப** *(1164)*

எனும் நூற்பாவில் பெறலாம். வாழ்வியல், சமூக, அரசியலறங்கள் பிழைபடாது அல்லது அவற்றின் சீர்மைக்குக் குறைவு நேராது இலக்கியம் எழுதல் வேண்டும் எனும் விதி எக்காலத்தும் பொருந்தும் பொதுவிதியாய் நிற்றல் குறிப்பிடற்பாலது. சமூக அக்கறையுள்ள எக்கவிஞனும் இவ்விதியை உடைக்க விழைவ தில்லை. இன்றைய புதுக்கவிதைகளில் இது இன்று முறிக்கப் படுவதைக் காணினும் (ச. சிவகாமி, சமூக மேம்பாட்டுச் சிந்தனை, இக்காலக் கவிதைகளில் சமூகம், அன்னிதாமசு (பதி), அமுத நிலையம், சென்னை, ப. 243), மரபுக்கவிஞர் மாற்றம் காட்டாது அரணாகவே நிற்பது நவிலற்பாலது.

கவிஞன் தான் கூறவிழைந்த கருத்தைப் புலப்படுத்தற்கோர் நெறியாக உவமையைத் தொல்காப்பியர் எடுத்துரைக்கிறார். பின்னாட்களில் செய்யுளை அழகு செய்யும் ஓர் உறுப்பாக, அணியாக விளக்கம் பெறினும், கருத்து விளக்கப் பயன்பாட்டுக் கூறாக உவமையைக் கொள்ளலே பொருத்தமாகத் தோன்றுகிறது. இலக்கியம் கற்றோர் அவைக்கு மட்டுமல்ல பொதுமக்களுக்கும் சென்றடைதல் வேண்டும் என்ற இன்றைய கோட்பாட்டுச் சூழலில் கவிதையில் எளிமை வேண்டப்படுகிறது. மரபுக் கவிதையை மீறிய புதுக்கவிதையின் வெற்றிக்கு இவ்வெண்ணமும் ஒரு காரணமாகும். இங்கு மரபுக்கவிதையில் பயன்படுத்தப்படும் உவமைகள் மிகுதியும் கூறவந்த கருத்தினைத் தெளிவுறுத்த, அதன் முழுப் பொருளையும் உணர்த்தவே எழுந்துள்ளன. ஒன்றன் தொழில், அதன் பயன், அதன் வடிவம், நிறம் என்ற ஏதேனும் ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட நிலையில் உவமமும்

உவமிக்கப்படும் பொருளும் ஒன்றி நிற்றல் வேண்டும் என்ற தன்மையில் மாற்றம் இன்றியே மரபுக்கவிதைகளும் அமைகின்றன.

உயர்ந்த பொருள்களே உவமமாக அமைதல் வேண்டும் எனும் தொல்காப்பிய எண்ணம், 'உயர்ந்ததன் மேற்றே உள்ளுங்காலை' (1124) என்பதில் வெளிப்படுகிறது. ஆனால் இவ்வரையறை இன்று மீறப்பட்டதொன்றாகக் காணப்படுகிறது. 'சாவுக்கு முன்னாடி ஊதிச் செல்லும் தாரையைப் போல் குழல் பெற்றே இதழ் விரித்தாய்' என அஞ்சுமணிப் பூவை வருணித்தல் (பூவை அமுதன், உள்ளக் கடலின் உணர்வலைகள்) சான்றாகும். ஆனால் காலமாற்றத்திற்கு ஏற்ப புதிய புதிய உவமைகள் மரபுக்கவிதைகளில் இடம் பெறுதல் பாராட்டத்தக்கதாகும். உவமையில் 'அடுக்கிய தோற்றம் விடுத்தல் பண்பே' (1257) எனத் தொல்காப்பியம் வேண்ட, அதனை மறுத்து மரபுக்கவிதைகள் அடுக்குவமையைப் பரவலாகத் தந்துள்ளன (கா. வேழ வேந்தன், ஏக்கங்களின் தாக்கங்கள்). இது கூறவரும் கருத்தைப் பல கோணங் களிலிருந்தும் விளக்கமளிக்கிறது; ஆழமாக வலியுறுத்துகிறது என்பனவற்றால் ஏற்றுக்கொள்ளக்கூடியதொன்றாம்.

யார், யார் எப்படிப்பட்ட உவமைகளைப் பேச வேண்டும் என்ற தொல்காப்பிய விதிமுறைகள் (1247-1252) இன்றைய இலக்கியச் சூழலுக்கு ஏற்புடைமையின்மையின் அவை இங்குக் கருதப்பட வேண்டியன ஆகா. இருபதாம் நூற்றாண்டுக் கவிதைகளின் உவமைகளை ஆராய்ந்த ஆய்வாளர்,

1. இருபதாம் நூற்றாண்டுக் கவிதைகளில் தான் இயற்கைப் பொருள்களைச் சமுதாய நோக்கோடு அணுகிப் பார்க்கின்ற ஒரு புதிய பார்வை உருவாகியுள்ளது. 2. பாரதி வழிகாட்ட பாரதி தாசன் பின்பற்றினார். மற்ற கவிஞர்களும் சமூகச் சீர்த்திருத்தக் கருத்துகளையே முதன்மையாகக் கொண்டுள்ளனர். இயற்கைப் பொருள்களில் நிலவினை மட்டும் மிகுதியாகப் பாடுபொருளாக்கி யிருப்பது குறிப்பிடத்தக்கது. 3. கவிஞர்கள் பெரும்பாலும் உவமைகளை விட உருவகங்களை மிகவும் அருகிய நிலையில் படைத்துள்ளனர். உவமையின் வாயிலாகவே கருத்துகளை எளிமையாக உணர்த்த முடியும் என்று கருதியே இக்கவிஞர்கள் உருவகங்களை மிகுதியாகப் படைக்கவில்லை எனத் தோன்றுகிறது என்பர் (சு. மாரியப்பன், இருபதாம் நூற்றாண்டுக் கவிதைகளில் உவமைகள், நிர்மலா பதிப்பகம், செங்கல்பட்டு, 1994, பக். 591-595). இக்கூற்று ஏற்புடையதே. அருகிய நிலையில் தென்படும் உருவகக் கவிதைக்கு,

**பிச்சைக்காரனைப் பிடித்து வந்து**
**பந்தி பரிமாற வைக்கின்றார்களே**
**தச்சுக்கலையில் தகுதி பெற்றவர்க்கு**
**விறகு வெட்டியா விரிவுரை செய்வது?**
**எச்சில் இலைகள்**
**கோபுர உச்சியில் ஏறிக் கொண்டதால்**
**என்னமாய் மதிப்பில் உயர்ந்து விட்டன**
**அவற்றைச் சொல்லிக் குற்றமில்லை**
**படித்த எருமைகள்**
**அறிவை எங்கே அடகு வைத்தன**

*(தங்கப்பா, கள்ளும் மொந்தையும், ப. 54)*

எனும் 'பட்டமளிப்பு'க் கவிதையை எடுத்துக்காட்டலாம்.

மரபிலக்கணப் பார்வையில் மரபுக்கவிதைகளை அணுகும் பொழுது மற்றொரு கருத்தும் சுட்டப்பட வேண்டிய தாகிறது. தொல்காப்பியர் மரபியலில் நூலின் குற்றங்களாகப் பட்டியலிடப் படுவனவற்றுள் (1608) மாறுகொளக் கூறல், பொருள் இல மொழிதல், மயங்கக் கூறல், கேட்போர்க்கு இன்னாயாப்பிற்று ஆதல், பழித்த மொழியான் இழுக்கம் கூறல், தன்னான் ஒரு பொருள் கருதிக் கூறல் என்பன இம்மரபுக் கவிதைகளில் இடம்பெறல் அக்கருத்தாகும்.

'முல்லைச்சரம், தமிழ்ப்பணி, கவிதை முதலான சிறிய இதழ்களில் வெளியிடப்படும் மரபுக்கவிதைகள் யாவும் பொறுப்பு உணர்ச்சியுடன் எழுதப்படாதன போன்று காணப்படுகின்றன. இவ் விதழ்கள் மரபுக்கவிதைக்கு ஊக்கம் தருவதாக இருப்பினும் சுடர்விட்டு ஒளிவிடும் பாடல்களைக் காண முடியவில்லை. பழைய புலவர்கள் சிலர் திருமண வாழ்த்து எழுதுவதிலும் இரங்கற்பா இயற்றுவதிலும் மரபுக்கவிதைகளைப் பயன்படுத்து கின்றனர். நாள், வார, மாத இதழ்கள், நிறுவனங்கள் சிறப்பு மலர் வெளியிடும் பொழுது சிலர் மரபுக் கவிதை எழுத முனைகின்றனர். பலர் மரபுக்கவிதை எனத் தொடங்கி இரண்டடிகளுக்குப் பின்னர் உரைநடையாக வடிப்பதும் காணப்படுகிறது. முற்போக்கு, மொழி வளர்ச்சி, இனமானப் பாவலர்கள் சிலர் இயற்றும் பாக்கள் வெற்றுக் கொள்கை முழக்கங்களாக உள்ளன' எனும் கூற்று சிறிது மிகைப்படுத்தப்பட்டதொன்றாக அமையினும் முற்றிலுமாகப் புறக்கணித்தற்கில்லை (மு. இளங்கோவன், இலக்கியம் அன்றும் இன்றும், ராஜேஸ்வரி புத்தக நிலையம், சென்னை 1997, ப. 18). மற்றும் மேற்குறித்த கருத்திற்கு இது அரணாதலும் நோக்கத்தக்கது.

மரபுக்கவிதைகளின் இன்றைய போக்கினை அளவிடும் பொழுது பல சிறப்புக் கூறுகள் அறிய வருகின்றன. அவற்றைப் பின்வருமாறு வரிசைப்படுத்தலாம்.

1. பழம் பெருமை பேசிக் கொண்டிருப்பதில் பயனில்லை. இன்றைய வாழ்வின் அவலம் அலசப்பட வேண்டும் என்று சமூகத்தின் பால் மடைமாற்றம் செய்யப்பட்டுச் சமூக உணர்வுத் தூண்டல் இன்று முன்னிற்கிறது.

புதுடில்லித் தெருக்களிலே
பூனாவின் சந்துகளில்
பேப்பர் விற்று
மதுரையிலே மதறாசில்
வீடுகட்டி தார் ஊற்றி
ரோடு போட்டு
சிதலத்து விஜயநகர்
சிற்பங்கள் காட்டினபின்
காசு கேட்டு
பதினெட்டு வயசுக்குள்
ஈழத்தின் காடுகளில்
ரத்தம் சிந்தி
பாமாயில் வரிசைகளில்
பம்பாயின் குடிசைகளில்
அமெரிக்காவில்
கோமேனி ஈரானில்
கனடாவில் ஜெர்மனியில்
பெரும்பாலான
சாமான்ய வேலைகளை
சளைக்காமல் செய்தற்கு
சம்மதித்து
தேமதுரத் தமிழோசை
உலகமெலாம் பரவும் வகை
செய்துவிட்டோம்

*(சுஜாதா, நைலான் ரதங்கள், பக். 77-78)*

என்பது போன்று இது அமைகின்றது. நடப்பியலை எடுத்துரைக்கும் போக்கே, புதுக்கவிதையில் மட்டுமன்றி மரபுக்கவிதைகளிலும் ஆழமாக அதிகமாக உணர்த்தப்படுவதற்கு இது காரணமாகிறது.

2. மக்களிடையே விழிப்புணர்வு மலரத் தொடங்கியுள்ளதை, கல்வியின் பயனாகக் கருத்து வளர்ச்சி ஏற்பட்டுள்ளதை,

சிந்தனையாற்றல் வலுப்பெற்றுள்ளதை மரபுக்கவிதைகள் நன்கு வெளிப்படுத்துகின்றன.

> நாங்களெல்லாம் வெறும்பாதை நடுகற்கள்
> நாதியிலா குழந்தைகள்! இனிமேலும்
> ஓங்கியெழும் வறுமையெனும் அலைகளிலே
> வாழ்வெனும் ஓடத்தை ஓட்டிடவே
> இயலாது; இயலாது; இம்மண்ணில்
> இனிமேல் துயரங்கள் புடை சூழ
> அயலார்க்குத் தொண்டு செய இயலாது
> யாருக்காக வாழ்கிறோம் நாங்கள்?
> *(மலர் எழிலன், கண்ணதாசன் இதழ் கவிதைகள்)*

3. ஒரு பொருள் குறித்த மரபு வழிச்சிந்தனை மாற்றம் பெறுகிறது. இம்மாற்றத்தை மாற்றுச் சிந்தனை அல்லது மாற்றுக் கருத்து எனக் குறிக்கலாம். புத்தரின் துறவறம், யசோதர காவியமாக,

> சாக்காடு நோய் முதுமை சங்கடங்கள் வந்தாலும்
> வாழ்க்கை வாழ்வதற்கே மன்னவரே ஏன் மறந்தீர்?
> சேற்றுத் தொடர்புக்குச் செந்தாமரை நாணி
> ஆற்றாமை கொண்டு அகன்றதா எங்கேனும்?
> ஊர் புகழ ஐயா நீர் ஓடி விட்டீர், எங்களுக்கு
> ஆர்புகல் என்று ஓர் நொடியாகிலும் நினைத்தீரா?
> *(நீலமணி, பௌர்ணமிப் பொழுதுகள், பக். 12-13)*

எனக் கேள்விக்குறியாக்கியிருப்பதைச் சான்றாக்கலாம்.

4. சங்கப்பாடல்கள் உவமை வழி வரலாற்றுச் செய்திகளைப் பதிவு செய, இன்றைய மரபுக் கவிதைகள் பாரதி காட்டிய வழியில் வரலாறுகளையே பாடுபொருளாக்கிச் சிறப்பித்துள்ளன. கண்ணதாசனின் 'வியட்நாமில் அமெரிக்கக் கொலைகாரர்கள்', 'வங்கதேசமே' (கண்ணதாசன் கவிதைகள், தொகுதி-4, பக். 111, 155) என்பனவற்றைச் சான்றாக்கலாம். இப்பொருண்மை ஈடுபாட்டில் பிறரைவிட இவர் முன்னிற்கிறார். வா.மு.சே. ஆண்டவரின், தற்காலக் கவிதைகளில் சமகால வரலாறு எனும் நூல் இதனை விரித்துரைக்கக் காணலாம்.

5. மரபுக் கவிதைகளின் சிறப்புப் பொருட்களுள் ஒன்றாகத் தன்னுணர்வு அமைதல் நினைக்கத்தக்கது. சங்கப்புலவரிடத்துப்

பாராட்டப்பட்ட அடக்கவுணர்வு இங்குப் பெருமிதமாகப் பெருக்கெடுத்துள்ளது.

6. சங்க அகப் பாடல்களின் பின்புலமாக இயற்கை அமைய, மரபுக்கவிதைகளில் தனிப்பொருண்மையாக வளம் பெற்று அணி செயக் காணலாம். இங்கு இவ் இயற்கை வருணனை மனிதனுக்கு வாழ்வியல் பாடம் கற்பிப்பதாக மடைமாற்றம் பெற்றுள்ளது.

நெடிதுயர்ந்து நிழல் பரப்பிப் பூத்து நிற்கும்
நேரமெலாம் தண்காற்று மணம் சுமக்கும்
அடிமுறிந்து வீழ்ந்தாலும் அறுபட்டாலும்
அப்போதும் பலவகையாம் பொருள்கள் ஆகும்
கொடுமை செயும் மாந்தருக்கும் கூரை வேயக்
குறையாமல் தனை ஈயும் வள்ளலாக
மடமையினால் மரமென்று பழிக்க வேண்டாம்
மரம்போலப் பயனாகி வாழ்வீர் நன்றே

(பூவை அமுதன், முன்சுட்டியது, ப. 38)

7. மரபுக்கவிஞர் தம் முன்னோடிகளை, அவர்தம் படைப்புகளைப் பாராட்டி நிற்பதையும் பரவலாகப் பார்க்கலாம். வள்ளுவரின் வாய்மொழி பலருக்கும் வழி மொழியாகியுள்ளது. பாரதி, கம்பன் மிகுதியாகப் பேசப்படும் புலவராவர். இளங்கோ, பாரதிதாசன், கண்ணதாசன், பட்டுக்கோட்டை கலியாணசுந்தரம் ஆகியோரும் இவ்வாறு சிறப்பிக்கப்படும் பிறராவர்.

8. தலைவனின் ஊரினைச் சிறப்பித்தல் ஊர் வெண்பா எனத் தனி இலக்கிய வகையாக, தலைவனின் நாட்டுச் சிறப்பினைக் காட்டும் சங்கப்பாடல்களினின்றும் வளர்ச்சி பெற்றதை அறிகின்றோம். இது மரபுக்கவிதையில் தனிப்பாடற் பொருண்மையாக, தான் விரும்பும் எவ்வூரினையும் சிறப்பித்து நிற்கக் காணலாம் (வேணாட்டுச் சிறப்பு, அ.செல்வின் குமார், முல்லை மலர், ப. 50) இது ஒரு ஊர் எப்படியிருக்க வேண்டும் என்று தன் கற்பனையில் உருவாக்கித் தருவதாகவும் மாற்றம் பெற்றுள்ளது. கம்பனின் கோசலம், பாரதியின் கற்பனையூர் என்பன இவற்றிற்கு முன்னோடியெனலாம்.

9. இளங்கோ உணர்த்திய சமயப்பொறை, கம்பன் காட்டும் சமயப் பொதுமை, பிற தெய்வங்களையும் பாடி வழிகாட்டிய பாரதிநிலை என்பன மரபுக்கவிதையிலும் அமைகின்றன. அன்று

சமண பௌத்த மதங்களையும் ஒருங்கிணைத்து ஒத்த மதிப்பளித்த பாங்கு இன்று இந்து - இசுலாம் - கிறித்துவ மதங்களிடையே அமைத்துக் காட்டப்படுகிறது. சமயப்பொறை, பொதுமை வலியுறுத்தப்படுவதுடன் (க. பெருமாள், அருள் வெள்ளம், ப. 6) பிற சமயக் கடவுளர்க்கும் வாழ்த்துப் பாடல் (க. கணேசலிங்கம்- அன்பின் வடிவம் இயேசு, உணர்வுக்கோலம், ப. 128) தொடர்கிறது.

தமிழ் மரபுப்படி இறைவணக்கத்துடன் நூலைத் தொடங்கும் மரபும் சிலரிடம் அமைந்துள்ளது. மரபுக் கவிதையில் சமயம் பெற்றுள்ள செல்வாக்கு, புதுக்கவிதையில் இன்மையும் கூறத்தக்கதாகும்.

10. உரைநடையிலக்கிய வகையான பயண இலக்கியம் மரபுக் கவிதையிலும் மலர்ந்துள்ளதை வா.மு. சேதுராமனின் 'சந்தித்தேன் சிந்தித்தேன்'; 'பறந்த போதினிலே பிறந்த கவி மகளே' முதலான நூல்களின் வழி காணலாம்.

11. இருபதின் இறுதிப்பகுதியில் பெரிதும் பேசப்பட்டு இன்றும் தொடரும் பெண்ணியச் சிந்தனைகள் புதுக்கவிதையில் வீறுகொண்டு அமைவதைப் போன்று இங்குக் காண்பதற்கில்லை. மரபிற்கேற்ப, மரபு நிலையிலேயே பெண்கள் விளங்க வேண்டு கின்றனர். பெண் விடுதலை என்பது மிக மெல்லிய இழையாக இழையோடுகிறதேயன்றி வற்புறுத்தப்படவில்லை. ஆங்காங்கே பெண்மையை இழிவுபடுத்தலும் அமைவது வருந்துதற்குரியது.

12. புதுக்கவிதை அறிவியல் சிந்தனைகளுக்கு அளித்துள்ள சிறப்பையும் இதில் காண இயலாவிடினும் அருகிய நிலையில் ஏற்றம் பெற்றிருப்பதும் (வலசை ப. கணேசன், முன்சுட்டியது, ப. 43) குறிக்கத்தக்கதாம்.

13. நடப்பியல் பொருளுரைக்கும் பாடல்கள் அது குறித்த இரங்கற்பாக்களாய் நிற்றலும், புதுக்கவிதையில் இடம் பெறுவது போன்று அரசியல் எதிர்வு வலுவுடன் இங்கு இன்மையும் எண்ணத்தக்கன.

14. பொதுவுடைமைச் சிந்தனையாளர் மட்டுமின்றிப் பொதுவாக மரபுக்கவிஞரின் பண்பாக உழைப்பாளருக்கும், எளியோர்க்கும் குரல் கொடுக்கும் போக்கு அமைகிறது.

15. வாழ்க்கைத் தத்துவங்களை வடிப்பதிலும் மரபுக் கவிதைகள் சிறப்புற்றுள்ளன.

16. எளிய சொற்களால் யாவரும் உணரும் வண்ணம் மரபுக்கவிதைகள் எழினும் அவற்றுள்ளும் உட்பொருள் உறைந்து நிற்கக் காணலாம்.

தரையறியாக் கண்ணகியின் கால்கள், மன்னன்
சபையேறி நின்றதுதான் மக்களாட்சி
திரைமறைவில் நடப்பதுவா மக்களாட்சி
செய்திசொல அவை வருதல் மக்களாட்சி
முறை தவறி மன்னவனே நடந்திட்டாலும்
முறை கேட்க முன் வருதல் மக்களாட்சி
இறைநெறியில் தவறியதை இடித்துரைத்தே
எது நீதி எனக் கேட்டல் மக்களாட்சி

*(பெரி. சிவனடியான், கவிக்குவியல், ப. 44)*

என மக்களாட்சிக்கு விளக்கம் தருவது போல் அமையும் இப் பாடல், இன்று நடப்பதாகக் கூறப்படும் ஆட்சி மக்களாட்சி அல்ல; அதற்கு முரணான நிலையே நடைபெறுகிறது; அன்று கண்ணகிக்கு இருந்த மனவலிமை இன்று இல்லை; அது ஒவ்வொருவர்க்கும் வேண்டும் என்பதைக் குறிப்பாக வலியுறுத்துகிறது.

17. ஒன்றன் வருணனையாக அமையும் பாடல்கள் பெரிதும் இயல்பு வருணனையாக அமைகின்றன. உயர்வு நவிற்சி காண்பதற்கில்லை. இருப்பதைக் கூறி வருணிக்கும் பாங்கு, இல்லாததை அடுக்கி வருணித்தலாக மாற்றம் கண்டுள்ளதை,

நகரத்துச் சுறுசுறுப்பு
நலங்காட்டும் பொழுது போக்கு
மிகும் போக்குவரவின் ஓட்டம்
வானொலியின் இசை முழக்கம்
பகலை இரவில் காட்டும்
பல விளக்கு வரிசையெல்லாம்
புக அரிதாய் வாழும் சிற்றூர்
பொலிவின்றி என்றும் தோன்றும்

*(கோ. வேள்நம்பி, வெள்ளி உருகி விழுதுகள் ஆகி, ப. 26)*

என்பது போன்ற பாடல்களில் காணலாம்.

தமிழகத்தில் அரும்பி மலர்ந்த முப்பெரும் இயக்கங்களின் சிந்தனைகளை மூன்று வகையான மலையருவிகளோடு ஒப்பிடலாம். காந்தீயம், நிகரமைக் (பொதுவுடைமை) கொள்கை, பகுத்தறிவுவாதம் என்பனவே அம் முப்பெருஞ்சிந்தனைகள். அவற்றை உருவாக்கிய இயக்கங்கள் பேராயக்கட்சி, பொது வுடைமைக் கட்சி, சுயமரியாதை இயக்கம் என்பன. இம்மூன்றும் தமிழ்க்கவிதை உலகைத் தம் ஆளுகைக்குக் கொண்டு வந்தன என்பது மறுக்க முடியாத உண்மை. இக்காலக் கவிதைகளில் நாட்டுப்புற இலக்கியங்களின் செல்வாக்கும் பாரதி, பாரதிதாசன்,

சுத்தானந்த பாரதியார், பட்டுக்கோட்டைக் கலியாண சுந்தரம், கொத்தமங்கலம் சுப்பு போன்றோராடம் சிறப்புற அமைந்துள்ளது. ராய.சொ., வாணிதாசன், முடியரசன் போன்றோர் தாலாட்டுக்குச் சிறப்பு செய்திருப்பினும் கண்ணதாசன் இதில் தனிச் சிறப்புப் பெறுகிறார் என்பர். 1947 ஆம் ஆண்டு சாமி வேலாயுதம் பிள்ளை வெளியிட்டிருக்கும் 'மொழியரசி' எனும் தொகுப்பு நூல் மொழி குறித்த நூல்களில் குறிப்பிடத்தக்கது. தமிழுணர்ச்சி போதாக இருந்து அரும்பாக விரிந்த நாற்பதுகளில் இத்தகைய நூலைத் தொகுத்து வெளியிட்ட வேலாயுதனாரின் பெருந்தொண்டு போற்றத்தக்கது. வி.கோ. சூரியநாராயண சாஸ்திரி, தூரன், அ. சீனிவாசராகவன், கம்பதாசன், சாலை இளந்திரையன், தமிழழகன் முதலிய கவிஞர்கள் வடிவச் சோதனை செய்துள்ளனர் (மா. இராமலிங்கம், முன் சுட்டியது, பக். 157-230).

வெண்பா, ஆசிரியம் என்பன காணப்படினும் விருத்தப் பாக்களே மிகுதியாகக் காணப்படுகின்றன. வஞ்சிப்பா காசுமான் போன்று மிகச் சிலரிடமே காணப்படுகிறது. க. பெருமாள் மட்டுமே கலிப்பாவில் கடவுள் வாழ்த்துப் பாக்களைப் பாடியுள்ளார். அந்தாதி அமைப்பு (முனைப்பறுதல், க. பெருமாள், அருள்வெள்ளம்); மகுட அமைப்பு (ஓ., க. இறைவன், கண்ணதாசன் இதழ்க் கவிதைகள்) போன்றனவும் அருகி அமைகின்றன. விருத்தப்பா அமைப்பால் ஓசை நயம் சிறக்கும் பாடல்கள் மிகுந்துள்ளன. பொதுநிலையில் இன்றைய மரபுக்கவிதைகளில் யாப்பு ஆய்வு ஆழங்கால்படின் புதிய புதிய வடிவங்களை, கொள்கைகளைக் காணவியலும்.

இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் மரபுக் கவிதைகளின் யாப்பியலை ஆராய்ந்த ஆய்வாளர் (இரா. சம்பத், இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் மரபுக் கவிதை யாப்பியல்: மரபும் நெகிழ்வும், புதுவை மொழியியல் பண்பாட்டு ஆராய்ச்சி நிறுவனம், புதுச்சேரி, 1998, பக். 153-283), 'பாடுபொருளும் பாடுதற்குரிய சூழலும் மாறுகின்றபொழுது பாடல் வடிவமும் தவிர்க்க முடியாதபடி மாற்றமுறுகின்றது. அந்த வடிவ மாற்றம் பழைய மரபை ஒட்டிய தாகவே அமைகிறது. ............தமிழ்க் கவிதை உலகில் இடைக்காலந் தொட்டு இக்காலம் வரை ஆசிரிய விருத்தத்தின் செல்வாக்கு மிகுந்துள்ளது. விருத்தப்பா வடிவம் பாடுவதற்கு ஏற்ற எளிய இலக்கண அமைதி கொண்டிருப்பது அதன் செல்வாக்கிற்குக் காரணமாகிறது. மரபுக்கவிஞர்களின் படைப்புகளில் யாப்பியல் நெகிழ்வு ஏற்பட்டுள்ளது. இந்நெகிழ்வும் அருகியே உள்ளது. பெருகிய அளவில் இல்லை.

கவிமணி பாடிய வெண்பா 326; கடவுளைப் பாடுவதற்கும், வாழ்த்துப்பா பாடுவதற்கும் பயன் கொண்டுள்ளார். முடியரசன் 1783 எண்சீர் விருத்தங்கள் பாடியவர். யாப்பு விதிகளையே முதலாகக் கொண்டு விடாமல் சுதந்திரமாகக் கவிதைபாடும் இயல்பினர் கண்ணதாசன் என்பன போன்ற பல கருத்துகளைத் தந்துள்ளார்.

கவிதை உருவாக்கத்திற்கு யாப்பு ஒரு தடையில்லை என்பதையே புதுக்கவிதை கோலோச்சும் இன்றும் எழுந்து கொண்டிருக்கும் மரபுக்கவிதை நூல்கள் உணர்த்துகின்றன. சௌந்தரா கைலாசம், அரசு மணிமேகலை எனச் சில பெண் கவிஞரும் உளர்.

கவிதை வளர்ச்சிக்கெனத் தனி இதழ்களே தோற்றுவிக்கப் பட்டு வெளிவருவதும் குறிப்பிடத்தக்கதாகும். சான்றாகத் தெசிணியின் ‘கவிதை’, வா.மு. சேதுராமனின் ‘தமிழ்ப்பணி’ மா. செங்குட்டுவனின் ‘கவிக்கொண்டல்’, பொன்னடியானின் ‘முல்லைச் சரம்’ சோலை இருசனின் ‘சங்கொலி’, சுந்தரமூர்த்தியின் ‘கவியுகம்’ போன்றவற்றைச் சுட்டலாம்.

## காப்பியத்தமிழ்

புதுக்கவிதையும் உரைநடைத்தமிழும் வீறுடன் இலங்கும் இக்காலக்கட்டத்திலும் பெருங்காப்பியங்களின் உருவாக்கமும் தொடர்கிறது. புதிய வரவுகள், மறு ஆக்கங்கள், தழுவல்கள், மொழிபெயர்ப்புகள் என்பனவாக அவை அமைகின்றன. புதிய வரவுகள் புதுப்பொருண்மைகளுடன் பொலிவுறுகின்றன. பொருளடிப்படையில் இக்காலத்தெழுந்த காப்பியங்களை ஆய்வாளர், வரலாற்றுக் காப்பியங்கள், வரலாற்றுக் கற்பனைக் காப்பியங்கள், சமுதாயக் காப்பியங்கள், சமயக்காப்பியங்கள், புராண இதிகாச காப்பியங்கள் என வகைப்படுத்துவர் (மு. தமிழ்க்குடிமகன், பத்தாண்டுத் தமிழ்க் கவிதைகள், அறிவொளி பதிப்பகம், மதுரை, 1986)

சமயப் பொதுமையையும் நாட்டுப்பற்றையும் வலியுறுத்தும் முற்றுருவகக் காப்பியமாகப் பாரத சக்தி மகா காவியத்தைக் கவியோகி சுத்தானந்த பாரதியார் படைத்துத் தமிழை அணி செய்துள்ளார். வ.வே.சு. ஐயர், பாரதியார், தாகூர் ஆகியோரின் வாழ்த்துகளைப் பெற்ற இக்காப்பியம் ஐந்து காண்டங்களும் 146 படலப் பிரிவுகளும் கொண்டது. பெரும்பாலும் விருத்த யாப்பைக் கையாண்டிருந்தாலும் அகவலும், குறளும் ஆங்காங்கே

இடம்பெற்றுள்ளன. ஒரே உலகம், ஒரே மக்களினம் ஒரே கடவுள் எனும் குறிக்கோள் நோக்குடன் எளிய நடையில் அமைந்துள்ள இதனுள் 'யோக ரகசியங்கள்' பல இடம்பெற்றுள்ளதாக ஆசிரியர் கூறுகின்றார்.

தீமைகள் அனைத்தும் நீங்கி, நன்மைகள், மட்டுமே நிறைந்த ஒரு புத்துலகைப் படைக்கும் இலட்சியக் கற்பனைக் காவிய நோக்கு இதில் அமைகின்றது. உடல் வீரமும் உள வீரமும் உயர்வுடன் காட்டப்பெறலும் பாரதம், கண்ணன், இராமன், சிவாஜி, குரு கோவிந்தர், பிரதாப் சிங், காந்தி கிளைக்கதைகள் இடம் பெறலும் இதனைக் காலத்திற்கேற்ற காப்பியம் ஆக்குகின்றன. மணிமேகலைக் காப்பியம் முதல் தொடங்கிய பல சமயக் கோட்பாட்டு ஆய்வும் மறுப்பும் இங்கும் தொடர்கின்றன. சமயப் போராட்ட நீக்கமும் சமயப் பொதுமை ஆக்கமும் இந் நோக்கத்திற்குத் துணையாகின்றன என்பர் (ச.வே. சுப்பிரமணியன், தமிழ் இலக்கிய வகையும் வடிவும், தமிழ்ப்பதிப்பகம், சென்னை, 1984, ப. 283). 1945 இல் பதிப்பிக்கப் பெற்ற இக்காப்பியத்திற்குத் தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகம் இராசராசன் விருது வழங்கிச் சிறப்பித்துள்ளது.

1964 இல் முடியரசன் எழுதி வெளியிட்ட காப்பியம் பூங்கொடியாகும். 31 காதைகள் கொண்ட இந்நூல் தமிழுக்காக எழுந்த முதல் காப்பியமாகும். மணிமேகலையின் தாக்கத்தை மிகுதியாகக் கொண்டுள்ள இது தமிழ் மக்களுக்குத் தமிழுணர்வைத் தூண்டுவதை அடிப்படையாகக் கொண்டது.

காந்தி, காமராசர், அண்ணா, கலைஞர் போன்ற அரசியல் சார்புடை வரலாற்றுத் தலைவர் மீது காப்பியம் படைத்தல் இக்காலக்கட்டத்தின் சிறப்புக் கூறு எனலாம். நாட்டுத்தந்தை பல காப்பியங்களின் தலைவராகிறார். அரங்க. சீனிவாசனின் மனித தெய்வம் காந்தி காதை அளவிலும், அமைப்பிலும் காப்பியத் தலைவனின் வாழ்வாகிய காலப்பகுதியிலும் பரப்பும் அளவுப் பெருமையும் கொள்கின்றது. வழங்கிய கதையொன்றை-மக்களிடம் செல்வாக்கு மிகுதி பெற்ற கதையைக் காப்பியமாக்கும் மரபுக்கு மாறாகச் சில ஆண்டுகட்கு முந்தைய வரலாற்றைக் காப்பியமாக்கும் புதுமை இதில் பொருந்துகின்றது. காப்பியம் வாழ்க்கை வரலாறாக அமைதலாகவும் இது காணப்படுகின்றது. அரசியல் காப்பியமெனவும், அறவியல் நெறிக் காப்பியம் எனவும், சமயவியல் காப்பியமெனவும், பக்திக் காப்பிய மெனவும், வாழ்வியல் காப்பியமெனவும் கூறத்தக்கதாகப் பல

பொருட் கூறுகளும் இடம்பெற்று முதன்மை கொண்டமைதல் புலப்படுகின்றது. விருத்த அமைப்பு, காப்பியத்திற்கு மரபு வடிவத் தொடர்ச்சியை வெளிப்படுத்துகின்றது. பல்வகைச் சந்தமும், ஓசை விரைவுமுடைய பாடல்கள் விரவி வருகின்றன. காப்பிய மரபுக் கோட்பாடுகள் பல பின்பற்றப்படுவதுடன் தலைவன், காலம் இவற்றிற்கேற்ப புதுமைகளும் பின்பற்றப்படுகின்றன. பாயிரம், காப்புக் கூறும்போது இறை (கண்ணன்) வணக்கத்துடன் அமைந்து விடாது இந்திய தேசியத் தலைவர் பலரைப் பாடுவதுடன் ஆசிரியனின் ஆளுமையிணைவுடன் பிறப்பு, ஆசான், சாபக்கேடு, வறுமைகளைப் போற்றுதல் என்பன புதுமைகளாகும். கம்பனின் ஆளுமை இக்காப்பியத்தில் நிறைந்துள்ளது. பிள்ளைத்தமிழ், புலம்பல் போன்ற பிரபந்தங்களை உள்ளடக்கிப் புதுமை காட்டிடினும் காப்பிய மரபு பெரிதும் பின்பற்றப் பட்டுள்ளது. சிரவணன் கதை, அரிச்சந்திரன் கதை முதலான கிளைக்கதைகளும் காப்பிய ஓட்டத்தில் இணைகின்றன. பெருங் காப்பியம் எழக் காலச் சூழலின் அழுத்தம் காரணமாதலை இக்காப்பியம் காட்டுகின்றது. எனினும் பெரிய லட்சியம் ஒன்றைப் போற்ற, அதற்கு இவ்வகையிலும் நிலைத்த உருவளிக்க அமைந்த பெரு முயற்சியாக இக்காப்பியம் அமைகின்றது. விருத்தப் பாக்களை வளர்த்த கம்பன் இனத்தைச் சார்ந்த கவிஞர்கள் இன்னும் தமிழகத்தில் மறைந்துவிடவில்லை என்பதனை இம் மனிததெய்வம் காந்திகாதை காட்டுகின்றது என்பர் (ச.வே. சுப்பிரமணியன் + அன்னிதாமசு, எண்பதில் தமிழ், உதநி, சென்னை, 1982, பக். 709-711).

பண்டிதை அசலாம்பிகை அம்மையாரை இந்த நூற்றாண்டின் ஔவையார் என்றே கூறலாம். 1924 ஆம் ஆண்டே அவர் 'காந்தி புராணத்தை' எழுதி வெளியிட்டார். அக்காலத்தில் இந்நூலுக்கு விமர்சனம் எழுதிய வ.வே.சு. ஐயர், 'இக்காவியத்தின் நடையழகும் விருத்தங்களை அமைத்திருக்கும் பொருத்தமும் ஆங்கில மொழிகளையும் தமிழுக்கு அன்னியமான சொற்களையும் வெகுநயமாகக் கவிகளில் அமைத்திருக்கும் அழகும் மகாத்துமாவின் உயர் வாழ்வில் நடந்தவற்றை விடாது உரைத்திருக்கும் நுட்பமும் ஆராயுமிடத்தில் இந்நூல் தமிழ்நாட்டிற்கு ஒரு நன்கொடை என்றே எண்ணுகின்றோம். தமிழ் வளர்ச்சிக்கு இத்தகைய முதல் நூல்கள் இன்றியமையாதன' என்றுரைக்கிறார்.

'காந்தி புராணத்தை'யும் விடப் பலவகையில் சிறப்புடைய ஓரழகிய பெருங்கலைக் காப்பியம் கலைவாணரின் 'உதயம்'. காந்தியடிகளை இக்காப்பியம் ஓர் அவதார புருஷனாகக்

காட்டுகிறது. மில்டனின் படைப்பில் சுவர்க்க வீழ்ச்சியையும் சுவர்க்க மீட்சியையும் நாம் காண்பது போல இக்காப்பியத்தில் இந்திய நாட்டின் வீழ்ச்சியையும் எழுச்சியையும் காண்கிறோம். இந்திய நாட்டின் விடுதலைப் போராட்டத்தையும், காந்தியடிகளின் தியாக வாழ்வையும் உருவக நலம்பட இலக்கிய நயத்தோடு தீட்டிக் காட்டும் அரிய கலைக் காப்பியம். ஒன்பான் சுவையும் பொதுள, செம்மாந்த நடையில் செல்லுவது என்பர் (மா. இராமலிங்கம், இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கியம், என்சிபிஎச், 1999, பக். 184-185). '29 காதைகளும் 923 விருத்தங்களும் கொண்டது இந்நூல். டி.கே. இராமநுசக் கவிராயரின் 'மகாத்மா காந்தி காவியம்' 30 காண்டங்களில் அவரின் வரலாறுரைப்பது.

திராவிட இயக்க அரசியல் தலைவரான அறிஞர் அண்ணாதுரையின் வாழ்வியல் 'அண்ணா வண்ப்பிய'மாக 1968 இல் வெளிவந்தது. அவரது பிறப்பு முதல், உலகத் தமிழ் மாநாடு நடத்தி ஆட்சி புரிந்த காலம் வரை விளக்குகிறது. அவரின் இறுதிக்காலம் அதனால் இடம்பெறவில்லை. இந்நூலில் அண்ணா வடநாட்டுக்கு அறிமுகமாதல், மாநிலங்களவையில் நிகழ்த்திய சொற்பொழிவின் சிறப்பு ஆகியவற்றுடன் அவர் தமிழ்த்தாயுடன் உரையாடுதல் போன்ற கற்பனைச் செய்திகளும் இடம்பெறுகின்றன. கிளைக்கதைகளைப்போல் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் நிகழ்த்திய பல சொற்பொழிவுகள் விரித்துரைக்கப் பட்டுள்ளமை காப்பியப் போக்கைத் தடை செய்வதாக உள்ளது. பல தொடர்பற்ற செய்திகளுடன் உலகத் தமிழ் மாநாடு பற்றிய செய்திகள் மிக விரிவாக உள்ளன.

ஆனால், இதுபோலின்றி 'அண்ணா காவியம்' மிகைப் படுத்தப்படாத வரலாறாக அமைகின்றது. அவரது எழுத்து, பேச்சு, நடிப்பு முதலிய திறன்களுடன் தமிழ்க்காப்பு, ஆட்சிமுறை அனைத்தும் இதனுள் அடங்கியுள்ளன. 1974 இல் தி.மு.க வெள்ளி விழா ஆண்டில் ஆனந்தன் இதனைப் படைத்து வெளி யிட்டுள்ளார். வள்ளுவரின் அவதாரமாகப் பகுத்தறிவியக்கத் தலைவரைக் காட்டுவது எண்ணுதற்குரியது என்பர். (மு. தமிழ்க்குடிமகன், முன்சுட்டியது, பக். 53-54).

சிலம்பின் உணர்வுடன் வே. கபிலன் 1980 இல் கலைஞர் காவியம் தந்துள்ளார். மங்கல வாழ்த்துடன் தொடங்கி ஞாயிறு, மதி, மழை, தமிழ் என்பன தொடர்ந்து வாழ்த்தப்பட்டுள்ளன. காண்டப்பகுப்பின்றி 33 பகுதிகளைக் கொண்டுள்ளது. ஆறாம் பகுதி கதையாக அன்றி இசைப்பாட்டான தாலாட்டாக உருவாகியுள்ளது. தண்டி கூறும் காப்பிய உறுப்புகளும் காப்பியத்

தன்மைகளும் இந்நூலுள் முழுமையாக அமைந்துள்ளதைச் சிலம்பொலி செல்லப்பன் தம் முன்னுரையில் விரிவாகக் காட்டியுள்ளார். கலைஞரின் 'நெஞ்சுக்கு நீதி' அடிப்படை நூலாக இக்காப்பியம் அதன் வழி நூலாவதைக் காப்பிய ஆசிரியரின் முன்னுரை தருகின்றது.

பழங்கதைகளைத் தம் விருப்பிற்கேற்ப மாற்றித் தரும் பாங்கு இக்காலப் பகுதியில் மிகுந்து காணப்படுவது சுட்டத்தக்கது. கம்பராமாயணத்தை வெண்பாவில் சுப்பிரமணிய ஐயர் மாற்றித் தந்துள்ளார். 9379 நேரிசை வெண்பாக்களால் இயன்ற இக்காப்பியம் 'இராமாயண வெண்பா' எனப் பெயரியது. கம்பனுக்கு இவர் செய்த கவிதாஞ்சலியாகவும் இதனைக் கொள்ளலாம். இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தினராகக் கருதப்படும் மதுரகவி ஸ்ரீநிவாஸ ஐயங்கார் 4000 வெண்பாக் களால் 'மதுர கவி இராமாயண வெண்பாவை'ப் படைத்துள்ளார். 1990 இல் இந்நூல் எம்.கே. இராமன் (கம்பன்) உரையுடன் வெளிப் போந்துள்ளது. குண்டலகேசியின் கதையைத் தம் கற்பனையில் விரித்து வளர்த்து 'குண்டலகேசி'யெனும்பெயரிலேயே பிறிதொரு காப்பியமாக இளங்குமரன் ஆக்கியுள்ளார். பதின்மூன்று படலங்களில் 1129 விருத்தங்கள் உடைய இந்நூல் 1959 இல் மதுரை மீனாட்சியம்மன் கோயிலில் அரங்கேற்றம் செய்யப்பட்டது. பழந்தமிழ்ச் சொற்களே இதில் மிகுதியும் இடம் பெற்றுள்ளமை குறிப்பிடத்தக்கது.

இம்மறு ஆக்கங்கள் தமது கொள்கைப் பரப்புதலுக்குப் பயன்படுதலுடன் எதிர்நூலாக அமையும் தன்மையையும் புலவர் குழந்தையின் இராவண காவியத்துள் காணலாம். இதில் சமுதாய-இன எதிர்ப்பு அடிப்படையாகி, கதை நிலையில் முழுமையான மாற்றம் அமைகின்றது. அங்கு எதிர்த் தலைவனாக இருந்த இராவணன் இங்குத் தலைமை மாந்தனாகி, குணச் சிறப்புடைய வனாக ஏற்றம் பெற்று நிலவ, இராமன் சிறப்பற்ற பண்புடைய எதிர்மை மாந்தனாகின்றான். ஆயின் தலைவனின் வெற்றியை இராமாயணம் காட்டி இன்பியலாக முடிய, இராவண காவியம் திராவிட மன்னன் இராவணன் வீழக் காட்டித் துன்பியல் ஆகின்றது. 5 காண்டங்களும் 57 படலங்களும் 3100 பாடல்களும் கொண்டது.

இந்நூல் எழுந்த காலத்தில் அரசியல் எதிர்ப்புணர்ச்சி காரணமாக அரசாங்கத்தால் தடை செய்யப்பட்டது. நூலாசிரியரின் நன்றியுரை இதனைத் தன்மான இயக்கத்தின் புலப்பாடாகக் கொள்ளத் துணை புரிகின்றது. வரலாறாகவும் உண்மையாகவும்

கருதப் பெற்ற இராமாயணத் தலைவரைக் கற்பனையாக்கி, அதனை எதிர்த்துப் புதுக்கற்பனைக் காவியம் எழுகின்றது. ஆனால் இதுவே உண்மை வரலாறு என நிறுவ முயல்கின்றார் ஆசிரியர். கதை நிலையில் இது எதிர்நூலாயினும் காப்பிய நிலையில் கம்பனைப் பின்பற்றுகின்றது. காண்டப் படலப் பகுப்பு மட்டுமின்றிக் காப்பிய அமைப்பும் கவிநிலையும் வருணனைக் கூறுகளும் ஒத்து அமைகின்றன.

நாட்டு நகரப் படலங்களின் இடத்தை இராவண காவியத்தில் தமிழகப் படலம் பெறுகின்றது. கடல்கோள் போன்ற பகுதிகள் புராண மரபுத் தோய்வு காட்டுகின்றன. முதற்காண்டம் பின்புலம் தந்தும் அறிமுகம் கூறியும் அமைய இரண்டாம் காண்டமே கதைத் தலைவனைத் தந்து கதையுட் செல்கின்றது. வீடணன் பீடணன் ஆவதும் சீதையைச் சிறை செய்தல் நிரைகவரும் புறப்போர் ஆதலும், உயிர்க்கொலை செய்யும் ஆரியரின் வேள்வி மறுப்பே முரண் தோன்றும் மையச் செயலாவதும், அறச்செயலாக இராமாயணம் தந்தன இங்கு மறச் செயலாவதும் கிட்கிந்தையும் இலங்கையும் குரக்கினமும் அரக்கினமும் கொண்டன்றித் தமிழ் மக்களாலேயே அமைவதும் பிறவும் இரண்டு காப்பியத்தையும் பேரளவில் வேறுபடுத்து கின்றன. (ச.வே. சுப்பிரமணியன், தமிழ் இலக்கிய வகையும் வடிவும், பக். 281-282). தமிழருக்குத் தாழ்வு வந்துவிடக் கூடாது என்ற சீற்றம் மேலோங்கி நிற்பதாகக் கருதுவர்.

தி. வேங்கட கிருஷ்ணய்யங்காரின் 'இராகவ காவியம்' இங்குக் குறிப்பிடத்தக்க பிறிதொரு நூலாகும். வால்மீகி, கம்பன், துளசி ஆகியோருடன் தம் கற்பனைக்கும் இடமளித்து இராமாயணத்துக்கு மாற்று வடிவம் கண்டுள்ளார். ஏழாவதாக மங்கல காண்டம் அமைத்து விருத்தம், துறை விரவ ஆறாயிரம் பாடல்கள் பாடியுள்ளார். ஆசிரியரே தேவையான இடங்களில் சொற்களுக்குப் பொருளும் விளக்கமும் அமைத்துள்ளார். மிக எளிய நடையிலேயே காப்பியம் அமைந்துள்ளது. இக்காலக் கட்டத்தில் காணப்படும் பெருகிய இராமாயண மறு ஆக்கங்கள் அது தமிழ்ச் சமுதாயத்தில் பெற்றுள்ள ஆளுமையை வெளிப்படுத்து கின்றன எனலாம்.

கிறித்துவ, இசுலாமிய காப்பியங்களும் இப்பகுதியில் சிறப்பிடம் கொள்கின்றன. கிறித்துவக் கம்பன் எனப் போற்றப்படும் எச்.ஏ. கிருஷ்ணப்பிள்ளை ஜான்பனியனின் முழு உருவகக் கதையான திருப்பயணியின் முன்னேற்றம் (Pilgrim's

Progress) எனும் நூலைத் தழுவிக் காப்பிய மரபிற்கேற்ப மாற்றி 'இரட்சணிய யாத்திரிகம்' தந்துள்ளார். தமிழ்க் கிறித்துவ இலக்கிய வரலாற்றிலும் இது முதன்மை பெறுகிறது. வாழ்க்கையைப் படைத்துத் தந்த காப்பிய மரபில் ஒரு உயிரின் யாத்திரையை அளிப்பது வாயிலாக மாற்றம் தருகிறது. செலவு என்பது காப்பிய உறுப்பாக, கூறாக அமைந்த போதிலும் அச்செலவே காப்பியமாக உருவாகுதல் வளர்ச்சி நிலையாகவும் அமைகின்றது. சமணர்கள் பிறமொழிக் கதைகளைக் காப்பியங்களாகத் தமிழில் தந்ததால் அவர்கட்குரிய காப்பியக் கொள்கைகளும் தமிழில் இடம் பெற்றன எனவும் வடமொழி வழி வந்த தண்டி காரணமாக அவர்க்குரிய கோட்பாடுகளும் தமிழில் புகுந்தன எனவும் கொள்வதற்கேற்ப கிறித்துவ இசுலாமிய காப்பியங்கள் தமிழில் தோன்றியதால் மேனாட்டுக் காப்பியத் திறன்களும் தமிழில் இடம்பெறுகின்றன என்பது போதரும்.

சமய உருவகக் காப்பியமாக அமைந்தமையால் அகஞ்சார் அருளியல் பாடிக் காப்பியத்தின் தேவைக்கூறான அகச் சுவையை நிறைவு செய்துள்ளார். கதை கூறலுக்கிடையே இறைவாழ்த்துப் பாடல்கள் பல புனைந்து தரும் காப்பிய மரபும் இவரிடம் தொடர்ந்து பல 'தேவாரப் பாடல்கள்' இடைமிடைகின்றன. வைணவத்திலிருந்து கிறித்துவத்தின் பால் சார்ந்து தான் உணர்ந்த உணர்வனுபவங்களைக் கூறுவதற்கு வாய்ப்பாகக் கவிஞருக்கு ஜான்பனியனின் கதை அமைகின்றது. கிறிஸ்தியானின் ஆன்ம ஈடேற்றத்தில் கவிஞரையே நாம் காண்கிறோம் எனின் அது மிகையன்று (ச.வே. சுப்பிரமணியன், முன் சுட்டியது, பக். 277-278). கம்பன் மணமும் கம்பன் நடையும் இக்காப்பியத்தில் நிறைந்திருக்கிறது.

எஸ். ஆரோக்கியசாமியின் 'சுடர்மணி' மற்றொரு கிறித்துவக் காப்பியமாகும். கண்ணதாசனின் 'இயேசு காவியம்' அண்மையில் மலர்ந்த குறிப்பிடத்தக்க பிறிதொரு கிறித்துவக் காப்பியமாகும். மண்ணுலக வாழ்வில் இயேசுவின் பிறப்பு முதல் இறுதி வரையிலான நிகழ்ச்சிகளைக் கூறும் இந்நூலும் வாழ்வியல் காப்பியமாகவே தோன்றியுள்ளது. மத்தேயு, மாற்கு, லூக்கா, யோவான் எனும் நால்வர் அருளிய நற்செய்திகளின் அடிப்படையில் எழுந்துள்ளது. கிறித்துவம், இந்து சமயப் பொறைக்கு எடுத்துக்காட்டாக இந்நூல் திகழ்கிறது. இதனாசிரியர் 'அர்த்தமுள்ள இந்து மதம்' படைத்த தீவிரமான கண்ணன் பக்தர். அந்நிலையினின்றும் மாறாது, திருச்சி கலைக்காவிரி அமைப்பினர் விருப்பிற்கேற்ப மறுக்காது அவர்கள் போற்றும் வண்ணம் அவர்கள் உதவியுடன் இதனைச்

சிறப்பாகப் படைத்துள்ளார். தமது படைப்புகளில் இதுவே 'இறவாக் காப்பியம்' எனவும் உணர்த்தியுள்ளார். இயேசு பெருமான் பற்றிய இசைப்பாடல்களை இசைத் தட்டிற்காக வழங்கிய கண்ணதாசனின் கவித்திறனில் களிப்படைந்த திருச்சி கலைக்காவேரியினர் இக்காப்பியப் படைப்புப் பொறுப்பையும் அவர்க்களித்தனர். பதினைந்து நாட்களில் இருபத்திநான்கு அமர்வுகளில் கவிஞர் இதனைப் பாடி முடித்தார். பின் பல கிறித்துவ அறிஞர் கூடி அதனைப் படித்துச் சில திருத்தங்கள் வேண்ட அவற்றையும் செய்த பின்பு நூல் 1981 இல் வெளியிடப்பட்டது. கவிஞரின் இறுதிக் காலத்தில் எழுந்த இணையற்ற இந்நூல் அவர் மறைவின் பின்பே அச்சானது. ஐந்து பாகங்களில் பிறப்பில் தொடங்கி மங்கலத்துடன் நிறைவதாக நூல் அமைந்துள்ளது. இடையிடையே இசைப் பாடல்களும் உள. இறுதிப்பகுதியான மங்களத்தில்,

நாடு விளங்கிட வீடு துளங்கிட நல்லவர் பாவிகளும்
கேடு மறைந்திட கீழ்நிலை மாறிட கேட்டதும்
ஓடிவரும்
பாடுபவர் இதைப் படிப்பவர்க்கெல்லாம் பரமனின்
வீடு வரும்
கூடுகளில் அவன் ஆவி புகுந்து நன்மைகள் கோடிவரும்

எனப் பாடியுள்ளது போன்றே நூல் முழுமையும் எளிமையும் இனிய சந்தங்களும் நிறைந்துள்ளன.

நான்கு இசுலாமியக் காப்பியங்கள் இக்காலப்பகுதியில் அறிய வருகின்றன. ஐதுரூசு நயினார்ப் புலவர் நவமணிமாலை என்னும் முகியித்தீன் புராணத்தை இயற்றியுள்ளார். இதற்கு முன் மூவர் முகியித்தீன் ஆண்டவரின் வாழ்க்கை வரலாற்றைப் பாடியிருப்பினும் இவர் அவரின் வாழ்வில் நிகழ்ந்த, நிகழ்த்திக் காட்டிய இயற்கை இகந்த அற்புத நிகழ்ச்சிகளுக்கு மட்டுமே சிறப்பிடம் தந்து அவற்றைக் கருப்பொருளாக்கிப் பாடியுள்ளார். அவர்களிடமிருந்து இதனால் வேறுபட்டு அமைகிறார். எனவே புதுமைகளைப் பாடும் புதிய நூல் எனும் பொருளில் நவமணி மாலை பெயர்ப் பொருத்தம் பெறுகிறது. 35 படலங்களில் 2335 செய்யுட்களில் இவை விரித்துரைக்கப்படுகின்றன. குலசேகரப் பட்டணத்தில் அரங்கேற்றம் செய்யப்பட்ட இந்நூல் எழுந்த காலம் 1855 ஆகும்.

திருத்தலம் ஒன்றன் பெயரால் அழைக்கப்படும் ஒரே இசுலாமியத் தமிழ்க் காப்பியம் நாகூர்ப்புராணம். வடநாட்டில் உள்ள மாணிக்கப்பூரில் பிறந்து தமிழகத்து நாகூரிலே நல்லடக்கம்

பெற்ற சாகுல் கமீது ஆண்டகையின் பெருமையைப் பகர்வது இக் காப்பியம். இப்பெரியோரின் மறைவுக்குப் பின்னர் அவர்தம் சிறப்பாற்றல் காரணமாக நிகழ்ந்த நிகழ்ச்சிகள் இதன் கருப்பொருளாகின்றன. நாகூர் குலாம் காதிறு நாவலர் இதனைப் படைத்துள்ளார். இவரே ஆரிபு நாயகம் எனும் பிறிதொரு காப்பியத்தையும் முகாஷபாமாலை எனும் குறுங்காப்பியத்தையும் இயற்றியுள்ளார். மதுரையில் பாண்டித்துரைத் தேவரால் நிறுவப்பட்ட நான்காம் தமிழ்ச்சங்க உருவாக்கக் காரண கர்த்தாக்களுள் இவரும் ஒருவர். மதுரைத் தமிழ்ச் சங்கத்துப் புலவராற்றுப்படை இவருக்குப் பெருமை தேடித்தந்த நூலாகும். சங்கப்பாடல்களில் புலவருக்குள்ள ஈடுபாடு இக்காப்பியத்துள் நன்கு வெளிப்பட்டுள்ளது. விருத்தப்பாவாலான இதனுள் பல சித்திரக் கவிகளும் இடம் பெற்றுள்ளன. முஸ்லிம்களுக்குப் புனிதத்தலமான மதினா, மக்கா, ஜெரூசலம் ஆகிய மூன்றின் பின் நான்காவதாக நாகூர் அமைந்து சிறப்பதாக ஆசிரியர் பாராட்டி யுள்ளார்.

ஆரிப் என்பது இறைவனின் நல்லடியாரைக் குறிக்கும் சொல்லாகும். இத்தகையோருக்கு எல்லாம் தலைவராக இருக்கக் கூடியவர் ஆரிபு நாயகம் ஆவர். இப்பெருமைக்குரியவர் சுல்தானுல் ஆரிபின் செய்யிது அகுமதுல் கபிறுர் றிபாயி அவர்கள். இப்பெரியாரின் வாழ்க்கை வரலாறே 'ஆரிபு நாயகமாக' மலர்ந்துள்ளது. இதனுள்ளும் சங்கப்பாக்களின் தாக்கம் மிகுதியாகக் காணப்படுகிறது. ஓசை நயம் மிகுந்த பாடல்கள் இக்காப்பியத்தை அணி செய்கின்றன. இவ்விரு காப்பியங் களையும் குலாம் காதிறு நாவலர் முறையே 1882, 1884 ஆகிய ஆண்டுகளில் படைத்துள்ளார்.

இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய தமிழ்க் காப்பியங்கள் அனைத்தும் கடவுள் வாழ்த்துப் படலத்தைப் பொறுத்த வரையில் ஒரே ஒழுங்கு முறையைப் பின்பற்றியுள்ளன. நாட்டு நகரப் படலங்களும் அவ்வாறே அமைந்துள்ளன. இஸ்லாத்துக்கு முரணான செய்திகளை எவ்வளவுக் கெவ்வளவு தவிர்க்க முடியுமோ அவ்வளவுக் கவ்வளவு தமது காப்பியங்களில் முஸ்லிம் புலவர்கள் தவிர்த்தே சென்றுள்ளனர். இயற்கை வருணனைகள் பெரும்பாலும் தமிழக இயற்கையினைச் சுட்டிக் காட்டுவது போன்று இருந்தாலும் அறபு நாட்டின் புவியியல் அமைப்பும் அத்தகைய வருணனைகளில் பேணப்பட்டுள்ள மையைக் காணலாம். திருக்காரணப் புராணத்தையும் நாகூர்ப் புராணத்தையும் தவிர்த்த ஏனைய இஸ்லாமியத் தமிழ்க்

காப்பியங்களில் அறபு நாட்டிலும் அறபு நாட்டைச் சார்ந்த நாடுகளிலும் வாழ்ந்த பெரியோர்களே பாட்டுடைத் தலைவராகின்றனர். அறபுச் சொற்களின் ஆளுமையும் இவற்றில் இதன் காரணமாக மிகுந்துள்ளன என்பர் (ம.மு. உவைஸ், இஸ்லாம் வளர்த்த தமிழ், உதநி, சென்னை, 1984, பக். 236-276).

தமிழுக்கு மற்றுமொரு புதுவரவாக, இசுலாமிய காப்பியமாக மு. மேத்தாவின் 'நாயகம் ஒரு காவியம்' எழுந்துள்ளது. இசுலாமிய வரலாற்றில் இறுதி நபியாகக் குறிக்கப்படும் முகம்மது நபியின் வரலாறாக அமையும் இந்நூல் மரபுக்கவிதை, புதுக்கவிதை, இசைப்பா மூன்றும் இணைய படைக்கப்பட்டுள்ளது. அண்ணலின் மறைவு வரை எழுதி நூலை அமங்கலமாக முடிக்க விரும்பாது கி.பி. 624 ஆம் ஆண்டு நடைபெற்ற பத்ருப் போர் வரையிலான வாழ்க்கையோடு நூல் நிறைவுறுகிறது என்பர். நபிகள் வரலாற்றை இயம்பும் சீறாப் புராணத்தின் பின் பலராலும் பாராட்டப் பெறும் பெருமைக் குரியதாக இந்நூல் விளங்குகிறது. மிக மிக அண்மையில் 1994 இல் வெளிவந்து புதுக்கவிதையுலகில் பெரிதும் போற்றப்படும் மு. மேத்தாவின் தலைசிறந்த படைப்பாகிறது. 'கவிராஜன் கதை' படைத்து வைரமுத்து புதுக்கவிதை காப்பிய அமைப்பிற்கும் இடங்கொடுக்கும் என வழி காட்ட மேத்தா அதில் முனைந்து வெற்றி பெற்றுள்ளார். இசுலாமிய கலைச் சொற்களுக்கும், பிறவற்றிற்கும் தேவையான இடங்களில் அடிக்குறிப்பில் விளக்கம் நல்கிக் கவிதைப் பிரியர் அனைவரும் தடையின்றிப் படித்து இன்புறும்படி நூலை யாத்துள்ளார்.

**இறுதிநபியின்**
**வருகைக்காகவும்**
**ஒளிமிகுவாழ்வின்**
**உதயத்திற்காகவும்**
**காலம்அங்கே**
**கடுந்தவம்செய்தது**
**காலையும்மாலையும்**
**கலிமாச்சொன்னது**
**பாலைமணலெலாம்**
**பகல்நோன்பிருந்து**
**தோள்இணைந்துஇலைகள்**
**தொழுங்கநடத்திடக்**
**காற்றும்சென்றது**
**ஹஜ்ஜுயாத்திரை!**

எழில்மலைக்கைகளை
ஏந்தியபடியே
வானம்நட்சத்திர
வாய்களைத்திறந்து
தூங்காதுஇரவெலாம்
துஆக்கேட்டது
இறைவன்
அகலத்திற்கே ஓர்
அருட்கொடையாக
சாந்தநபிகளை
ஜக்காத்வழங்கினான்

என விழுமிய நடையால் இக்காப்பியம் இயன்றுள்ளது. புதுக் கவிதை காப்பிய உலகிற்குப் பெருந்துணையாவதை வாலியின் அவதாரபுருஷன் மற்றும் பாண்டவர் பூமி எனும் இராமாயண, மகாபாரத மறு ஆக்கங்களும் உணர்த்துகின்றன.

சிறுகாப்பியங்கள் கதைப்பாடல்களாக அமைவனவற்றையும் காப்பியங்களோடு இணைத்துப் பார்க்கும் பாங்கு ஆய்வாளரிடையே காணப்படுகின்றது. எனினும் அவற்றைத் தனித்து நோக்கும் பார்வையும் அமைகிறது. அமைப்பாலும் அளவாலும் தன்மையாலும் பெருங்காப்பிய இயல்பு குறைந்த இக்கதைகளைச் சிறுகாப்பியம் எனவோ கதைப்பாடல் எனவோ கூறுவது பொருத்தமே. காப்பியக் கதையின் துணுக்காக அமையும் பாரதியின் பாஞ்சாலி சபதம் போன்றன, ஆசிரியர் கருத்துப்படி 'காவியம்' எனினும் தமிழின் பிறபல காப்பியங் களிலிருந்து பல நிலைகளில் பெரிதும் மாறுபடுவதால் கதைப் பாடல் வகையாக அடக்கலாம். கதைக்கூறு முக்கியத்துவம் பெற்று உரைநடைக் கதையிலக்கிய வகைகளிலிருந்து வடிவால் வேறுபட்டு அமையும் இவற்றைக் காப்பிய இலக்கிய வகையின் இக்கால எச்சவுருவாகக் கருதலாம். பாவியம், காவியம் போன்ற பெயரில் இவை அறியப்படுதல் உண்டு.

புராண இதிகாசக் கதைகளும் கதைக்கூறுகளும் இக்கதைப் பாடற்பொருளாக அமைவதுடன் அவற்றை ஒட்டிப் புனையப் பட்ட கற்பனைக் கதைகளும், வரலாற்றுப் புனைவுகளும் கதைப் பாடலை ஆக்குவதுண்டு. இவ்வாறின்றித் தற்காலப் புனைகதை இலக்கியம் போன்று முற்றிலும் புதிதான கற்பனைக் கதைகளும் அமைகின்றன. எப்பொருள் கதையாயினும் காப்பியத்தின் துணையுறுப்புக்களான நில, நீர் வருணனைகள், கதிரெழுச்சி

முதலியன இடமின்றி, நிகழ்வுகளே முதனிலை பெற்று இலக்கிய வகையை உருவாக்குகின்றன. தன்னிகரற்ற தலைவனோ, மாதிரி மனிதனோ தலைமை பெறாது இவை பொதுமக்கள் இலக்கியத் தன்மை கொள்கின்றன. இயற்கை இகந்த செயல்களோ கடவுட் பாத்திரங்களோ இடம்பெறாது இயல்புத்தன்மை மிக்கு அமைகின்றன. மீவியல்புக் கற்பனையும் மிகைப் புனைவுகளும் குன்றி, இயற்கையோடு ஒட்டி உருப்பெறுகின்றன.

பழங்கதைகளுக்குப் புதிய விளக்கம்தரல், ஒரு காவியத்தின் ஒரு பகுதியை விரித்துப் பாடுதல் போன்றன சில கதைப் பாடல்களின் இயல்பாக அமைகின்றன. தம் காலச் சமுதாய அரசியல் எண்ணங்கட்கேற்பப் பழங்கதைகளைத் திரித்தும் மாற்றியும் புதுக்கியும் அமைக்கும் இந்நிலையைப் பாரதியின் பாஞ்சாலி சபதம், பாரதிதாசனின் கண்ணகி புரட்சிக் காப்பியம், வெ.ப. சுப்பிரமணிய முதலியாரின் அகலிகை வெண்பா, சாலை இளந்திரையனின் சிலம்பின் சிறுநகை, தமிழ்ஒளியின் விதியோ வீணையோ போன்றவற்றில் காண்கிறோம்.

மொழிபெயர்ப்பாக அமையும் கதைப்பாடல் பிறிதொரு வகையாக அமைகின்றது. கவிமணியின் ஆசியஜோதி, சாரண. பாஸ்கரனின் யூசுப் சுலைகா போன்றன இவ்வகையில் குறிக்கத் தக்கன. காலத்தின் தேவைக்கேற்ப பற்பல கதைப்பாடல்கள் உருவாயின. கவிமணியின் மருமக்கள் வழி மான்மியம், துரை. மாணிக்கத்தின் பறவைகள் மாநாடு (இந்தி எதிர்ப்புக் காவியம்) போல்வன சான்றுகள். (ச.வே. சுப்பிரமணியன், முன்சுட்டியது, பக். 290-292).

பத்தாண்டுத் தமிழ்க் கவிதைகளைத் தொகுத்து ஆய்ந்த ஆய்வாளர் தற்காலக் காப்பியங்கள் பற்றித் தரும் கருத்துக்களும் இவண் சுட்டத்தக்கன. அவை : காப்பிய மரபுகளைக் கண் மூடிப் பின்பற்றாமல் மேலை நாட்டுத் தாக்குரவால் தற்போதைய காப்பியங்கள் சில மாறுதல்களைப் பெற்றுள்ளன. சிலப்பதிகாரத்தின் தாக்குரவு இக்காலக் காப்பியங்களில் மிகுதியும் உள்ளது. கதிரவன், நிலவு, மழை பற்றிய வாழ்த்துகள் இத்தன்மையில் அமைந்துள்ளன. (இங்குக் கம்பராமாயணத் தையும் இணைத்துக் கொள்ளலாம்) இந்தி எதிர்ப்பு, 'தீக்குளித்த செம்மல் சின்னசாமி', 'தமிழ்த்தாயின் ஆணை', 'பறவைகள் மாநாடு', 'நடுகல்', 'வழக்குரை காதை' என்பனவற்றிற்குக் கதைக் கருவாகியுள்ளது. பன்னிரண்டு காப்பியங்களை இயற்றிப் பல்வேறு தனித்தன்மைகளை நிலை நாட்டிய வகையில் துரை-மாணிக்கம் தனித்து நிற்கிறார் (மு. தமிழ்க்குடிமகன், முன்சுட்டியது, பக். 80-81).

இக்காலக் காவியங்களை நாம்தண்டியலங்காரம் கூறும் விதிகளைக் கொண்டு அளக்க வழியில்லை. கதை பொதி பாடல்களே இந்நாளில் காவியங்கள் என்று அழைக்கப்படு கின்றன. அதுவும் கூட மிக நீண்ட தொடர்நிலைச் செய்யுளாக இருக்க வேண்டும் என்பதில்லை. ஏதோ ஒரு கருத்தைக் கதை வடிவில் செய்யுளாகப் பாடினால் போதும் என்று ஆகிவிட்டது. இலக்கண விதிகள் நிலையானவையல்ல. மாறக் கூடியவையே. எல்லாம் மாறுகிறபோது காவிய இலக்கணமும் மாறத்தானே செய்யும் எனும் கூற்றும் (மா. இராமலிங்கம், இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கியம், ப. 202) இங்கு எண்ணற்பாலது.

ரா. ராகவ ஐயங்காரின் பாரிகாதை, ஜகவீர பாண்டியனாரின் வீரபாண்டியம், நாமக்கல் கவிஞரின் அவனும் அவளும், சே.ர. குமாரசாமியின் அம்பிகாபதி அமராவதி, கண்ணதாசனின் மாங்கனி, ஆதிமந்தி ஆட்டனத்தி, ஆ.கு. ஆதித்தனாரின் மொழிபெயர்ப்பான துறையச் செல்வம், பொன்னடியானின் ஓர் இதயத்தின் ஏக்கம், வா.மு. சேதுராமனின் தாய்மண், தி.சு. வேலுசாமிப்பிள்ளையின் கந்தபுராண வெண்பா, அ. கிருஷ்ணசாமி நாயுடுவின் திருவள்ளுவர் காவியம், ஷண்முகம் பிள்ளையின் திருவிளையாடற் புராண சங்கிரகம் எனப் பிற காப்பியங்கள், கதைப்பாடல்களின் பட்டியலும் நீளுகிறது.

## சிற்றிலக்கியங்கள்

புதுமை ஊற்றுக்கள் தமிழிலக்கியப் பரப்பில் ஆங்காங்கே பெருக்கெடுத்த போதிலும் பழமையும் இக்காலப் பகுதியில் போற்றப்பட்டதைப் பல்கியுள்ள சிற்றிலக்கியங்கள் உணர்த்து கின்றன. பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதி மற்றும் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கம் வரை சமயங்கள் மற்றும் புரவலரின் பிடியிலிருந்த சிற்றிலக்கியங்களில் விடுதலைப் போர், திராவிட இயக்க எழுச்சி, சமுதாய விழிப்பு இவற்றின் காரணமாக அவற்றின் உள்ளடக்கமாகிய பொருண்மையிலும், பாட்டுடைத் தலைமையிலும் பெரும் மாற்றங்கள் ஏற்பட்டன. சிற்றரசரும் புரவலரும் பெற்றிருந்த தலைமையிடத்தை அரசியல் தலைவர்கள் ஏற்றனர். இக்காலக்கட்டத்தில் ஊட்டப்பட்ட மொழி மற்றும் நாட்டுப்பற்றால் அவையும் இவற்றின் பாடுபொருளாயின. பழமையும் புதுமையும் இணைந்த இக்காலப்பகுதியில் சிற்றிலக்கியங்களின் தொடர்ச்சியும் அவற்றின் வளர்ச்சியும் இயல்பாயின. மரபைப் பின்பற்ற விரும்பியோர்க்கும், அதில் மாற்றம் ஏற்பட விரும்பாதோர்க்கும், தமது அரசியல் தலைவர்களை இறைவனுக்குச் சமமாக ஏற்றியுரைக்க எண்ணி யோர்க்கும் சிற்றிலக்கியங்கள் கைகொடுத்தன. தமது எண்ணத்தை

ஈடேற்றுவதற்கு இதன் பன்னூறுபட்ட வகைமைகள் நல்வாய்ப் பாகி இடங்கொடுத்தன. அவற்றின் இலக்கண மரபை, பொதுப் பண்பினால் பின்பற்றினும் பாடுபொருளுக்கேற்ப அவற்றில் புதுமைகளையும் செய்துள்ளனர். பக்தியின், சமயங்களின் பிடியிலிருந்து, ஆளுமையிலிருந்து தமிழிலக்கியம் விடுபட முனைந்ததை அவை உணர்த்துகின்றன. எனவே இக்காலப் பகுதியில் எழுந்த சிற்றிலக்கியங்களை முற்றிலும் மரபினை அடியொற்றிப் பாடப்பட்டவை; புதிய பொருண்மைகளை, பாடு பொருளைச் சிறப்பித்துப் புதிய பரிமாணங்களைக் காட்டியவை என இரண்டாகப் பகுக்கலாம். சிற்றிலக்கியங்களின் இலக்கணத்தைப் பின்பற்றியவை மரபுக்கவிஞரிடையே எடுத்துரைக்கப்பட்டுள்ளதால் இங்குச் சிற்றிலக்கியங்களுக்குப் புதுப்பாதை காட்டிய சில விளக்கம் பெறுகின்றன.

திருக்குறள் விடு தூது - இரா. இளங்குமரன், கம்பன் பிள்ளைத் தமிழ் - நா. கனகராஜையர், செந்தமிழ் அந்தாதி - து. அரங்கன், கூட்டுறவுக் குறவஞ்சி - தஞ்சை வாணன், சீனத்துப் பரணி - மு. பாலசுப்பிரமணியன், காந்தி திருத்தசாங்கம் - ராய.சொ, திரு.வி.க. கலம்பகம் - மறையரசன், அச்சக ஆற்றுப்படை - மு. இளங்கோவன், ஈழப்புலி ஆற்றுப்படை - அரிமதி தென்னகன், உழைப்பாளர் சிந்து - சுமாச, புரட்சித் தலைவர் புகழ் அந்தாதி - ஜி. உலகநாதன், கலைஞர் சிலேடை வெண்பா - நல்லியக்கோடன் என்பன பாட்டுடைத்தலைமை மாற்றத்தை அறிவிக்கும் சிலவாகும். இவை முறையே இலக்கியம், புலவர், மொழி, கொள்கை, நாட்டுப்பற்று, நாட்டுத்தலைவர், அறிஞர், இடம், இனம், வர்க்கம், அரசியல் தலைவர் என அமைந் திருக்கக் காணலாம். அரசியலும் அதன் வழி நாட்டுப்பற்று, மொழிப்பற்று, இனப்பற்று ஆகியன சமுதாயத்தில் மிகுந்த தாக்குதலை ஏற்படுத்தியுள்ளதை இவை உணர்த்துகின்றன. தமிழரின் தலைமை வழிபாட்டுப் பண்பின் ஆழ அகலங்களையும் இச்சிற்றிலக்கியங்கள் வெளிப்படுத்துகின்றன.

அ. அறிவுநம்பியின் திருஅம்மானை 20 பாடல்கள் கொண்டது. கம்பராமாயணத்தின் மதிப்பினை, பெருமையினை ஆய்வுப் போக்கில் தற்காலச் சமூக அரசியல் நிகழ்வுடன் ஒப்பிட்டு கம்பன் மற்றும் கதை மாந்தர் வழி வெளியிட்டிருப்பது உள்ளடக்கத்தின் வளர்ச்சியைத் தெரிவிக்கிறது. பொருள் வரையறை செய்யப்பட்ட சிற்றிலக்கியங்களின் உள்ளடக்கமும் மரபு மீறிய மாற்றத்தைக் கொண்டுள்ளதைப் பல நூல் வழி அறிய முடிகிறது.

த. அமிர்தலிங்கத்தின் தலைவர் ம.பொ.சி. ஆற்றுப்படை அவரது வாழ்க்கை வரலாற்றை எடுத்துரைக்கும் உத்தியாகப் பயன்பட்டுள்ளது. ஆ.கு. ஆதித்தரின் 'காமராசர் உலா', உலா வரும் தலைவனை ஏழு பருவ மகளிரும் புகழ்ந்து வாழ்த்துவதாக அமைகிறது. மறையரசனின் பெரியார் பேருலா பெயருக்கேற்ப ஏழு பருவ ஆடவரும் பெண்டிரும் கண்டுகளிப்பதாக அமைந்து சிறக்கிறது. இந்தி எதிர்ப்பினை உள் நிறுத்தி சு. சாம்ராஜ் கண்ட 'தமிழ்ச்செல்வி உலா' பெண்பாற் தலைமை பெற்ற முதல் உலா ஆகிறது. காமம் இங்கு வீரம் ஆக மாறிப் பொலிவுறுகிறது. ஏழு வகைப் பருவ மகளிரில்லை. இறுதியில் இந்தி வெறியர் அடிபணிதலாக நிறைவுறுகிறது. ராய. சொக்கலிங்கனாரின் 'கும்மிப்பாட்டு', காந்தீயத்தைத் தலைமையாக்கியுள்ளது. விடுதலைப் போராட்டம், தமிழ்ச் சமுதாய மரபுகள், சமூக முன்னேற்றச் சிந்தனைகள் ஆகியவற்றைச் சிறப்பித்துக் கும்மியடித் துள்ளது. பல்பொருள் இணைவின் ஒரு நூலாக, சு.மா. சண்முக சுந்தரம் 'சிந்துமாலை' மற்றும் 'தமிழ்ச்சிந்து' இயற்றியுள்ளார்.

க. வெள்ளைவாரணனார் (வெண் கோழியார்) 'சென்னை மாநில முதலமைச்சர் ச. இராசகோபாலாச்சாரியார் அவர்களிடத்து வெண்கோழியுய்த்த காக்கை விடு தூது' படைத்துள்ளார். அது இந்தி கட்டாயப் பாடமாக்கப்பட்டதை எதிர்த்து எழுந்துள்ளது. மற்றும் புறப்பொருள் இலக்கியமாக மலர்ந்துள்ளதுடன் பாட்டுடைத்தலைவர் (இராஜாஜி) எதிர்த் தலைவராக அமைவதும் சுட்டத்தக்கது. புலவர் ஒருவரைப் பொருளுடையார் பால் செலுத்தி நாடு, மொழி, மக்கள் இவை நன்னிலைக்கு வர வேண்டுமெனப் பொதுநலன் வேண்டும் புலவர் விடு தூதும் (இராசை கி. அரங்கசாமி) எண்ணத்தக்கதே. தமிழகத் தேர்தல் களத்தில் வெற்றி பெற்ற நிலையில் தமிழக முதல்வர் ஜெயலலிதா மீது அக்கினிபுத்திரன் 'புரட்சித்தலைவி போர்ப்பரணி' பாடியுள்ளார். ப. எழில்வாணன் வாகை, பாவை, மடல் (கடிதம்) எனும் மூன்றின் இணைவாக, 'கலைஞரின் வாகையும் மார்கழிப் பாவையும்' படைத்துள்ளார். கண்ணதாசனின் 'தைப் பாவை' அகப்பொருளுடன் சமுதாயத்தையும் பாடுபொருளாகக் கொண்டுள்ளது.

பிள்ளைத்தமிழ் இலக்கியம் பலவிதமான மாற்றங்களுக்கு உட்பட்டுள்ளமை குறிக்கத்தக்கது. அரு. சோமசுந்தரத்தைத் தொகுப்பாசிரியராகக் கொண்டு வெளிவந்துள்ள 'திருவள்ளுவர் பிள்ளைத்தமிழ் பருவத்திற்கொருவராகப் பதின்மரால் பாடப்பட்டுள்ளது. 'வாரியார் பிள்ளைத் தமிழ்' பருவத்திற்கு ஒரு

பாடலாகப் பத்துப்பாடல்களில் இயன்றது (க. தியாகசீலன்). காப்புப் பருவப் பாடல்கள், ஒவ்வொரு பிள்ளைத்தமிழிலும் அதன் ஆசிரியர் மற்றும் பாட்டுடைத்தலைவருக்கேற்ப இயற்கை, அரசியல் தலைவர், புலவர், அறிஞர் முதலானோர் மீது பாடப்பட்டுள்ளன. சான்றாக வீரமாமுனிவர் பிள்ளைத்தமிழின் (பண்ணை சண்முகம்) காப்புப்பருவம் இயற்கையன்னை, தமிழன்னை, ஞாயிறு, திங்கள், வளன், மரியன்னை, இயேசு, தொல்காப்பியர், திருவள்ளுவர், புத்தன், நபிகள் ஆகியோரிடம் பாட்டுடைத் தலைவரைக் காக்க வேண்டுதலைச் சுட்டலாம். ஆசிரியரின் விருப்பிற்கேற்ப பருவங்களும் மாற்றங்கொள்கின்றன. சொ.சொ.மீ. சுந்தரம் படைத்த பண்டிதமணி பிள்ளைத்தமிழ் இறுதி மூன்று பருவங்களுக்குப் பதிலாகத் 'திருநீற்றுப்பருவம்', 'திருவாசகப்பருவம்', 'சன்மார்க்க சபைப் பருவம்' ஆகியன கொண்டுள்ளது. மாவண்ணா தேவராஜனின் 'பெரியார் பிள்ளைத்தமிழ்' 123 பாடல்களும், 14 பருவங்களும் கொண்டது. வாழ்த்துப் பருவம், கூர்ந்து உணர்பருவம், விரைவுறு பருவம், கதைகேள் பருவம் ஆகியன புதிதாக இணைந்துள்ளன.

மறையரசனின் (த. வேதராசன்) 'பட்டுக்கோட்டைக் கலியாணசுந்தரம் முதுமைத் தமிழும்' குறிக்கப்பட வேண்டிய தாகும். பிள்ளைத்தமிழ் இலக்கியத்தின் பிறிதொரு வளர் பகுதியாக இது அமைகிறது. காப்புப்பருவம், பிள்ளைக் கனியமுது பருவம், வருகைப் பருவம், நரைமுடிப்பருவம், கண்ணாடிப்பருவம், பேரர்மகிழ்பருவம், வழுக்கைத்தலைப் பருவம், பொக்கைவாய்ப் பருவம், கைத்தடிப் பருவம், கைக்கொட்டுப்பருவம் எனப் பத்துப் பருவங்களும் நூறு பாடல்களும் கொண்டது.வாழ்த்துப் பகுதியில் வள்ளுவர், இளங்கோ, கம்பன், காளமேகம், பாரதி, பாரதிதாசன், பரிதிமாற் கலைஞர், புதுமைப்பித்தன், கண்ணதாசன், தமிழ்ஒளி ஆகியோர் வாழ்த்தப் பெற்றுள்ளனர்.

இக்காலப்பகுதியில் தோன்றியுள்ள சிற்றிலக்கியங்கள் சமுதாயத்தில் பெற்றுள்ள செல்வாக்கும் சிந்திக்கத்தக்கது. புதுக்கவிதையெனும் காட்டாறு இதற்கொரு பகைப்புலம் என்பதில் ஐயமில்லை. இதன் பாடுபொருளும் சமுதாயச் சீர்திருத்தத்திற்குச் சிறப்பிடம் அளிக்கவில்லை. அரசியலும் அதனால் விளையும் தனியார் துதிபாடுதலும் மிகையாகி, பொதுவான இலக்கிய ஆர்வலர்க்குத் தடையாகின்றன. மொழிப்பற்று, புலவரைப் பாடுதல், அறிஞரைப் பாடுதல், பிறமொழி எதிர்ப்பு எனப் பல மாற்றுரு கொண்டுள்ளது.

இருபதின் முன் பகுதிவரை கோலோச்சிய சிற்றிலக்கியத்தமிழ் அதன் பின் சிறிது சிறிதாகத் தொய்வு பெற்று இன்று அருகிய நிலையிலேயே வெளிப்படுகின்றது. உரைநடையிலக்கியங்களின் பெருக்கம், புதுக்கவிதையின் தாக்கம், தொலைக்காட்சி வரவு ஆகியன இதற்குக் காரணங்களாகின்றன. மரபினைப் போற்ற வேண்டும்; மரபிலும் தம்திறன் காட்ட வேண்டும்; மரபை வளர்க்க வேண்டும் என்று எண்ணுவோரால் மட்டுமே இன்று சிற்றிலக்கியம் உயிர்த்துக் கொண்டுள்ளது. (நன்றி: சிலம்பு நா. செல்வராசு; இருபதாம் நூற்றாண்டுச் சிற்றிலக்கியங்கள்; மணிவாசகர் பதிப்பகம்; சென்னை; 1995).

இனி மரபுக்கவிதையுலகில் குறிப்பிடத்தக்க சிலரைக் காணலாம்.

### வேதநாயகம் சாஸ்திரியார் (1774-1864)

திருநெல்வேலி, தேவசகாயம் - ஞானப்பூ அம்மாள் இவரது பெற்றோர் ஆவர். சுவாட்சு ஐயர் என்பார் இவரைப் பன்னிரண்டாவது வயதில் தஞ்சைக்குக் கொணர்ந்து ஆளாக்கினார். கற்பிப்பதும் கவிபாடுவதும் தம் பணியாகக் கொண்டு, கிறித்துவப் பாக்கள் பல்லாயிரம் இயற்றிச் சாஸ்திரியார் ஆனார். திருமறைச் செய்திகளை உள்ளீடாகக் கொண்ட தமிழிலக்கியங்களையும், தமிழிசைப்பாடல்களையும், தமிழ்நாட்டுச் சூழலில் தமிழில் படைத்தளிக்க முயன்ற தமிழ் நாட்டுத் திருமறைப் புலவரில் முதன்மையானவர் இத்தஞ்சை வேதநாயகர் என்பர். பழந்தமிழ் வடிவங்களிலும் தாம் உருவாக்கிய வடிவங்களிலுமாக ஏறக்குறைய 112 நூல்களைப் படைத்துள்ளார் (ஜி. ஜான் சாமுவேல், இலக்கியக் கொள்கை - தொகுதி 2, வேதநாயகம் சாஸ்திரியார், பக். 419-422). இவற்றுள் அறுபது நூல்கள் மட்டுமே பதிப்பிக்கப்பட்டுள்ளன. தமிழ்க் கிறித்துவர்கட்கு வழிபாட்டில் பயன்படுமாறு முதன் முதல் பாக்கள் இயற்றியதுடன் அவை தமிழிசையுடன் பாடப் பெறும் வகையிலும் அமைத்திருப்பது குறிப்பிடத்தக்கது. கிறித்துவ திருமணங்களில் இன்றும் இவரது மங்கல வாழ்த்துப் பாக்கள் பாடப்படுகின்றன என்பர்.

இவரது நூல்களுள் பெத்லகேம் குறவஞ்சி மிகுதியாகப் பாராட்டப்படுகிறது. இந்நூல் வேப்பேரியில் அரங்கேற்றம் செய்யப்பெற்று 'ஞான தீபக் கவிராயர்' என்ற சிறப்பினையும் பெற்றுத் தந்தது. இவரது 'நோவாவின் கப்பல்', சரபோஜி மன்னரின் நூறு வராகன் பரிசில் பெற்றது. பிரச்சார நோக்கத்தோடு எழும் இயக்க இலக்கியப் படைப்பாளர்கள்,

தங்கள் கருத்துகளை மக்களுக்குப் பரப்ப விரும்பும் பொழுது மேட்டுக்குடியினரின் செந்நெறி இலக்கிய (Classical Literature) வடிவங்களை விட்டுவிட்டு, பாமர மக்களின் நாட்டுப்புற (Folk-Literature) இலக்கிய வடிவங்களில் தத்தம் கருத்துகளைப் பரப்புவர். இம்முயற்சியின் பயனாக முகிழ்த்த படைப்புகளே வேதநாயகரின் சாஸ்திரக் கும்மி, சித்திர ஞானக்கும்மி, ஞானக்கும்மி, ஞானத் தாலாட்டு, திருச்சபைத் தாலாட்டு, ஞான ஏத்தப்பாட்டு, திருச்சபை யூஞ்சல், பிரலாப ஒப்பாரி போல்வன. இவற்றில் கவிஞரின் படைப்பாற்றலும், கற்பனைத் திறனும், இறையுணர்வு வெளிப்பாடும் இசை வன்மையும் உச்ச நிலையை எய்துகின்றன. (மேற்படி பக், 410-411)

இறைவனையும் திருமறைச் செய்திகளையும் பாடுவதை மட்டுமே தம் குறிக்கோளாகக் கொண்ட இவர், அருணகிரி நாதரின் திருப்புகழ்ச் சந்தங்களின் தாக்கத்தைத் தம் கீர்த்தனைகளில் பெற்றுள்ளார். நாடக இயல்புகளைப் பெறாமல் இறைவனின் பல்வேறு அருட் செயல்களோடு சாதிக்கொடுமை போன்ற சமுதாயக் கருத்துகளைத் தாங்கி நிற்கும் ஞானத்தச்சன் நாடகம்; உலா இலக்கிய மரபுகளைப் பின்பற்றாமல் கிறிஸ்துப் பெருமானின் பல்வேறு சிறப்புகளை 1356 அடிகளில் வாழ்த்தி நிற்கும் ஞான உலா, குறியீட்டுப் பாங்கிற்குச் சிறப்பளித்து விவிலியத்தின் பழைய புதிய ஏற்பாடுகளை உள்ளடக்கிக் காட்டும் ஆராணாதித்தம்; உன்னதப் பாட்டைத் தழுவி இறைவனுக்கும் சீயோனுக்கும் இடையே உள்ள காதல்தொடர்பினை விளக்கும் காதல் இலக்கியமான ஞான அந்தாதி; ஞான நொண்டி நாடகம், பேரின்பக் காதல், தியானப் புலம்பல் என்பன பிற சில குறிப்பிடத் தக்க நூல்களாகும். இவர்,

**நெஞ்சம் உலர்ந்தேன் நெடுந்துயரினால் மெலிந்தேன்**
**தஞ்சம் எங்கும் காணேன் சரணமலர் அல்லாமல்**
**வஞ்சகன் மேல் நின் கிருபை வைத்துன் திருச்சுதனார்**
**அஞ்சு காயத்தில் அணைத்தாற்றும் பராபரனே**

*(பராபரன்மாலை 125)*

என்று எளிய நடையில் பாடலமைத்திருப்பினும் குறியீட்டு உத்தியில் இலக்கியம் படைத்தலில் பெருவிருப்புடையவர். தனது நீண்ட வாழ்க்கையை இறைப்பணியில் செலவிட்ட இவர் அதன் ஒரு பகுதியாகப் பல நூல்களைப் படைத்துத் தமிழ்ப் பணியிலும் பங்கு கொண்டுள்ளார்.

**மீனாட்சி சுந்தரம் பிள்ளை (1815 – 1876)**

திரிசிரபுரம் கிராமத்தைச் சார்ந்த இவரின் பிறந்த நாள் 6-4-1815; பெற்றோர் சிதம்பரம் பிள்ளை - அன்னத்தாச்சியார் ஆவர். திருவாவடுதுறை ஆதீனத்துடன் நெருங்கிய தொடர்புடையவர். சென்ற நூற்றாண்டில் பல புகழுடை மாணாக்கர்களை உருவாக்கிய 'மகா வித்துவான்' என்ற பெருமைக்குரியவர். தல புராணங்களில் மிக அதிகமாக 22 புராணங்கள் பாடியவர்; சூத சங்கிதையை மொழிபெயர்த்தவர்; 10 பிள்ளைத்தமிழ்; 16 அந்தாதி; 7 மாலை; 3 கோவை; 2 கலம்பகம்; மற்றும் பல பதிகம்; உலா, தூது, குறவஞ்சி என எண்பதிற்கு மேற்பட்ட பல்வகை நூல்கள் இயற்றியிருப்பினும் தமிழ்த்தாத்தா உ.வே. சாமிநாதையரின் ஆசிரியர் என்பதும் சேக்கிழார் பிள்ளைத் தமிழுமே இன்று இவரை நினைவூட்டுகின்றன. அம்மானை, லாலி, மங்களம் போன்ற நாட்டுப்பாடல் வடிவங்களிலும் இலக்கியம் படைத்துள்ளார். சேக்கிழார் பிள்ளைத்தமிழின் காப்புப் பருவம், பாட்டியல் மரபுப்படித் தெய்வங்களை அழைக்காது, சுந்தரமூர்த்தி நாயனார் பாடிய திருத்தொண்டத் தொகையில் அமைந்த நாயன்மார் அனைவரும் காக்க என்ற முறையில் அதன் பதினொரு பாடல்களின் முதற் குறிப்புகளையே தலைப்பாகக் கொண்டு பதினொரு பாடல்களில் அமைந்துள்ளது குறிக்கத்தக்கதாகும்.

மிக வேகமாகச் செய்யுள் இயற்றும் திறன் பெற்றிருந்தும் புதுமை நோக்கு இன்மையால் இவரது படைப்புகள் ஏற்றம் பெறவில்லை. சைவப்பற்றாலும் மடப்பற்றாலும் குமரகுருபரர், சிவஞானமுனிவர் வரலாறுகளைப் படைத்துள்ளார். குசேலோபாக்கியானத்தைத் தம் மாணாக்கர் வல்லூர் தேவராச பிள்ளையுடன் இணைந்து பாடினார் என்றும் அவர் பெயரில் இவர் பாடியளித்தார் என்றும் இருவிதக் கருத்துகள் நிலவுகின்றன.

தலபுராணங்களைத் தம்கால மக்கள் விருப்பப்படிப் பாடி அன்று மிக்க புகழுடைப் பாவலராய் விளங்கினார். சித்திரகவிகள் இயற்றுவதில் சிறப்புப் பெற்றிருந்த இவர் யாருக்கு மடல் வரையினும் கவிதை ஒன்றுடன் தொடங்குவது இயல்பாகும். தம் காலத்திய புதுவை வித்துவான் சவராயலு நாயகர் மீது மாலை பாடியிருப்பது குறித்தற்பாலது. எண்ணற்ற தனிப்பாடல்களாலும் பிறர் நூல்களுக்குச் சிறப்புப் பாயிரமும் பாடியுள்ள இவர் 1.2.1876 அன்று இவ்வுலக வாழ்வை நீத்தார்.

### சோடாசாவதானம் சுப்பராய செட்டியார் (– 1894)

மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை மாணாக்கருள் ஒருவர். 16 அவதானங்கள் செய்வதில் வல்லவராதலால் சோடசாவதானி ஆனவர். எயினனூர் ஆதிபுர தலபுராணம், விரிஞ்சேசர் சதகம் எனும் இரு நூல்கள் எழுதியுள்ளார். கம்பன்-அயோத்தியா காண்டம், பரஞ்சோதி திருவிளையாடற் புராணம், காஞ்சிபுராணம், புலியூர் வெண்பா ஆகியவற்றிற்கு உரை எழுதியுள்ளார். காங்கேயன் உரிச்சொல் நிகண்டு, சிதம்பர சுவாமிகளின் திருப்போரூர் சந்நிதிமுறை, மீனாட்சி சுந்தரம் பிள்ளையின் மாயூரபுராணம், நாகைக் காரோண புராணம் ஆகியவற்றைப் பதிப்பித்துள்ளார். 1869 இல் முதன்முதலில் பதினோராம் திருமுறையினைப் பதிப்பித்தவர் என்ற பெருமைக்கும் உரியவராகிறார்.

### சரவணப் பெருமாள் கவிராயர்

அட்டாவதானியான இவர் முதுகுளத்தூரைச் சேர்ந்தவர். முத்துராமலிங்க சேதுபதியின் அவைப்புலவர். சேதுபதியின் அமைச்சரான முத்திருளப்பப் பிள்ளை மீது காதல் பிரபந்தம் பாடியுள்ளார். பணவிடு தூது, அசுவமேத யாக புராணம், வினாயகர் திருமுகவிலாசம் என்பன பிற நூல்கள்.

### (சிறிய) சரவணப் பெருமாள் கவிராயர் ( – 1886)

அட்டாவதானம் பெரிய சரவணக் கவிராயரின் பேரன்; அருணாசலக் கவிராயரின் மகன். முதுகுளத்தூரைச் சார்ந்தவர். இராமநாத சேதுபதியின் சமஸ்தான வித்துவான். மதுரைச் சிலேடை வெண்பா, குன்றைச் சிலேடை வெண்பா, திருச்சுழியல் ஒரெழுத்தந்தாதி, கழுகுமலை ஒரெழுத்தந்தாதி, மகர வந்தாதி, பனைசத் திரிபந்தாதி, கயற்கண்ணிமாலை, மதுரையமக வந்தாதி, புவனேந்திரன் அம்மானை, கந்த வருக்கச் சந்த வெண்பா முதலான நூல்களைப் படைத்துள்ளார்.

### புரசை சபாபதி முதலியார் (–1886)

அட்டாவதானம் சபாபதி முதலியார் என்றும் அழைக்கப் படுவார். பெற்றோர் வெண்ணெய்க்கார இரிசப்ப முதலியார் - முனியாத்தையம்மாள் ஆவர். சந்தப்பாக்களையும் வண்ணப் பாக்களையும் விரைந்து பாடுவதில் வல்லவர். திருப்போரூர் முருகன் மீது மிகுந்த பற்றுடையவராய் அலங்கார பஞ்சகம், குறவஞ்சி, கலம்பகம், சதகம், பதிற்றுப்பத்தந்தாதி எனப்பல பாடியுள்ளார். அறுபத்து மூவர் உற்சவ வழி நடைத்தரு, காஞ்சி குமரக் கோட்டக் கலம்பகம், தியாக கயிலாசநாதர் வண்ணம்,

குருவிக்குளம் ஸ்ரீ மீனாட்சி சுந்தரேஸ்வரர் சதகம், சுப்பிரமணிய சுவாமி கீர்த்தனை; திருத்தணிகை இரட்டைச் சொல் யமகமாலை (உரையுடன்), திருப்போரூர் புராணம் என நாற்பதிற்கு மேற்பட்ட நூல்களைப் படைத்துள்ளார். திருத்தணிகையாற்றுப்படை, கந்தரனுபூதி, மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ் ஆகியவற்றிற்கு உரை வரைந்துள்ளார்.

### மு.ரா. கந்தசாமிக் கவிராயர் (-1918)

முகவூர் இராமசாமிக் கவிராயரின் மூன்றாம் மைந்தர். மதுரையில் விவேக பாநு அச்சியந்திரசாலையும், இதழும் நடத்தியவர். அரிமழத் தலபுராணம், கழுகுமலையாண்டவர் துதி மஞ்சரி, குமண சரித்திரம், தனிச்செய்யுட் சிந்தாமணி, திருப்போரூர் திரிபந்தாதி, பலாருவேதநாயகியம்மை பிள்ளைத்தமிழ் ஆகியவற்றுடன் கம்பராமாயண ஆரணிய காண்டத்திற்கும் உரை கண்டுள்ளார்.

### வேதநாயகம் பிள்ளை (1826-1889)

திருச்சி குளத்தூரில் பிறந்த இவர், மீனாட்சி சுந்தரம் பிள்ளையிடம் தமிழ் கற்று அவருடன் நட்பும் கொண்டார். முனிசீப் ஆகப் பணியாற்றியவர். தேவ மாதா அந்தாதி, திருவருள் அந்தாதி, திருவருள் மாலை, பெரிய நாயகி அம்மாள் பதிகம், சத்திய வேதக் கீர்த்தனை எனப் பல நூல்கள் இயற்றியிருப்பினும் உரைநடையில் படைத்த 'பிரதாப முதலியார் சரித்திரம்' எனும் முதல் தமிழ்ப் புதினத்தால் அழியாப் புகழ் பெற்றுள்ளார். இவர் எழுதிய மற்றொரு புதினம் 'சுகுண சுந்தரி சரித்திரம்' ஆகும். 'சர்வ சமய சமரச கீர்த்தனை', 'பெண் மதி மாலை', நீதிநூல் ஆகியவற்றால் படைப்பாளருக்குத் தேவையான சமூகப் பொறுப்புணர்வு தமக்கிருப்பதை வெளிப்படுத்தியுள்ளார். தம் வாழ்க்கை அனுபவங்களையும் தனிப்பாடல்களாக்கி உள்ளார். அவை தனிச் செய்யுட் சிந்தாமணியுள் உள. தமது தொழிலில் பெற்ற மன நிறைவின்மையை நகைச்சுவையாக வடித்து இன்றும் சுவைக்கும்படியாகச் செய்துள்ளார். பத்தொன்பதாம் நூற்றாண்டின் கிறித்துவப் புலவருள் மிகுந்த பெருமைக்குரிய வராகப் போற்றப்படுகிறவர். இவர் மீது மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை 'குளத்தூர்க் கோவை' எனும் ஐந்திணைக் கோவை பாடியிருப்பதும் சுட்டற்பாலது. இவர் வேண்டவே அவர் சீகாழிக் கோவை பாடியதும் குறிக்கத்தக்கது. நீதி மன்றச் சட்டங்களைத் தொகுத்துச் 'சித்தாந்த சங்கிரகம்' படைத்ததும் உன்னத்தக்கது.

### இராமலிங்க சுவாமிகள் (1823 – 1874)

தென்னாற்காடு மாவட்டம் மருதூரில் இராமையா - சின்னம்மை ஆகியோரின் ஐந்தாவது மகவாக 1823 அக்டோபர் ஐந்தாம் நாள் தோன்றினார். சிறு வயதிலேயே சமய ஈடுபாட்டுடன் பெரிய புராணச் சொற்பொழிவுகள் நிகழ்த்தினார். சென்னை கந்தகோட்டத்திறைவனைத் 'திருவோங்கு' எனப் பாடித் துதித்த பொழுது இவர் வயது ஒன்பது. வடலூரார், திருவருட்பிரகாச வள்ளலார் என்று சிறப்பிக்கப்படும் இவரது பாடல்கள் ஆறு திருமுறைகள் அமைந்த 'திரு அருட்பா'வாகத் தொகுக்கப் பட்டுள்ளன. மனுநெறித் திருநூல், ஜீவகாருணிய ஒழுக்கம் எனும் உரைநூல்களும் படைத்துள்ளார்.

அகப்பொருளில் 54 பதிகங்களும் இசைப்பாடலாக 51 பதிகங்களும் பாடியுள்ளார். திருவருட்பா பதிகங்கள் பெரும் பான்மையானவற்றிற்குத் தாமே தலைப்புக் கொடுத்துள்ளார். எஞ்சியவற்றிற்குப் பதிப்பாசிரியர் தந்துள்ளார். கீர்த்தனை, கும்மி, சிந்து, கண்ணி போன்ற நாட்டுப்புற வடிவங்களைச் சிறப்பித் துள்ளார். இவரது அருட்பெருஞ்சோதி அகவல் 1956 அடிகள் பெற்று அகவலிலக்கியத்துள் மிக நீண்டது என்ற பெருமை பெற்றுள்ளது.

'பாடும் பாட்டெல்லாம் அம்பலப் பாட்டே' என்று இறைவனைப் பாடுதலையே பொருளாகக் கொண்டவர். தேவார, திருவாசக, திருக்குறள் கருத்துகளுக்கு மிகுந்த சிறப்பளித்துத் தம் பாடல்களுள் போற்றியுள்ளார். மாணிக்கவாசகர் இறை யருளுக்காக அழுது தவித்தது போல இவர் தலைவியாகி இறைத்தலைவனுக்காக ஏங்கி நிற்கக் காணலாம். மரணமிலாப் பெருவாழ்வு பெற, அருட்பெருஞ்சோதி தனிப்பெருங் கருணையை உணர்ந்து ஆன்ம நேய ஒருமைப்பாட்டுடன் வாழவேண்டும் எனக் கற்பித்தவர். 'வாடிய பயிரைக் கண்ட போதெல்லாம் வாடிய' இப்பெருமான்,

**அகத்தே கறுத்துப் புறத்தே வெளுத்திருந்த உலகர்**
**அனைவரையும்**
**சகத்தே திருத்திச் சன்மார்க்க சங்கத்து அடைவித்திட,**
**அவரும்**
**இகத்தே பரத்தைப் பெற்று மகிழ்ந்திருத்தற்கென்றே**
**எனையிந்த**
**யுகத்தே இறைவன் வருவிக்க உற்றேன் அருளைப்**
**பெற்றேனே.**

எனத் தம் பிறப்பு நோக்கை வெளிப்படுத்தியுள்ளார். தம் பாடுந் திறன் இறைவன் அளித்த நன்கொடை எனக் கருதும் இவர், 'ஏன் உரைத்தேன், இரக்கத்தால் எடுத்துரைத்தேன் கண்டீர் யான் அடையும் சுகத்தினை நீர் தான் அடைதல் குறித்தே' என நவின்றிருப்பதும் சுட்டத்தக்கது.

கடவுள் ஒருவரே, அவரை ஒளி வடிவில் வழிபடல் வேண்டும்; சிறுதெய்வ வழிபாடு கூடாது; உயிர்ப்பலி கூடாது; சாதிசமயவேறுபாடு காட்டாது ஆன்ம நேய ஒருமைப்பாட்டுடன் வாழவேண்டும்; ஊன் உண்ணல் கூடாது முதலான கொள்கை களைத் தம் இலக்கியத்துள் வலியுறுத்தியுள்ளார். 'எனக்கு முக்தி பெற வேண்டும் என்ற இச்சையும் இல்லை; உலகத்து உயிர்க் கெல்லாம் இன்பம் செய்வது என் இச்சையாம் எந்தையே' எனும் விண்ணப்பம் இவரது உயரிய நோக்கை வெளிப்படுத்தும். தம் அறிவுரைகள் பிறருக்கே எனாது தம் வாழ்விலும் அவற்றைக் கடைப்பிடித்துக் காட்டிய ஞானி இவ்வள்ளலார். 1865 இல் சமரச சுத்த சன்மார்க்க சத்திய சங்கத்தினை நிறுவினார். 1867 இல் தருமச்சாலையைத் தொடங்கி சாதி, சமய வேறுபாடின்றி அனைவருக்கும் உணவளித்து வந்தார். ஆனால் தமது அறிவுரைகள் தம் காலத்திலேயே எதிர்பார்த்த பலன் தராததை எண்ணி மனம் நொந்து 'கடைவிரித்தேன் கொள்வாரில்லை; கட்டிக் கொண்டேன்' என்றுரைத்துத் தம் சித்திவளாக அறையுள் நுழைந்து தம்மை மறைத்துக் கொண்டார். 1874 சனவரி 30இல் காற்றோடு கலந்தார்.

சங்கராச்சாரியார் வடமொழியே எல்லா மொழிகளுக்கும் தாய்மொழி என்றுரைத்தபோது அவ்வாறாயின் தமிழ் தந்தைமொழி என்று பதிலளித்துத் தம் மொழிப்பற்றை நிறுவிய வள்ளலார் பாடல்கள்,

**சாதி சமயச் சழக்கை விட்டேன் அருள்**
**சோதியைக் கண்டேனடி – அக்கச்சி**
**சோதியைக் கண்டேனடி**

என்பது போன்று மிக எளிமை வாய்ந்தனவாகும். 'ஒருமையுடன், உனது திருவடி நினைக்கின்ற உத்தமர் தம் உறவு வேண்டும்; 'கோடையிலே இளைப்பாறி கொள்ள வகை கிடைத்த குளிர் தருவே'; 'அன்பெனும் பிடியுள் அகப்படும் மலையே'; 'வான் கலந்த மாணிக்க வாசக' என, கற்பார் உள்ளத்தை உருக்கும் வகையில் பாடலளித்த பெருமை இவருக்குண்டு. எனினும்

இவற்றிற்கு நேர் எதிராக, கடுநடையுடன் அன்றைய வழக்கிற்கு ஏற்ப உரைநடை நூல்கள் அமைந்துள்ளன. சமய சமரசத்தை வலியுறுத்தியதற்கேற்ப இவர் ஸ்ரீராமநாதத் திருப்பதிகம், ஸ்ரீவீரராகவப் பெருமாள் போற்றித் திருப்பஞ்சகம், இலக்குமி தோத்திரம் முதலானவற்றையும் பாடி சைவ, வைணவ வேறுபாட்டினின்றும் தாம் விலகி நிற்பதை உணர்த்தியுள்ளார்.

திருவருட்பாத் திருமுறைகளைத் தொகுக்கும் பணியினை 1860 ஆம் ஆண்டு சுவாமிகளின் சீடரான தொழுவூர் வேலாயுத முதலியார் தொடங்கினார். 1892 இல் முழுமையான முதற்பதிப்பு முதன்முறையாகப் பொன்னேரி சுந்தரம்பிள்ளையால் வெளியிடப் பட்டது. இவரது பாடல்கள் அருட்பா என்ற பெயரால் வெளியிடப் பட்ட போது, யாழ்ப்பாணத்துப் புலவராகிய ஆறுமுக நாவலர் அதனை எதிர்த்துத் தம் குழுவினருடன் வழக்காடு மன்றம் சென்றார்; வழக்கில் தோல்வி கண்டார்.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் முப்பெரும் புலவருள் முதல்வராகப் போற்றப்படுபவர் வள்ளலார். பாடல்களின் எளிமையும் தெளிவும், பொருள் ஆழமும், பக்திப் பெருக்கும், சமூகச் சீர்திருத்த சிந்தனையும் இதற்கு அடிப்படைக் காரணங் களாகின்றன. இவ்வகையில் பாரதிக்கு முன்னோடி யாகவும் பெருமையுறுகிறார். "இந்திய தேசிய எழுச்சிக்குத் தமிழகத்தைப் பொறுத்தவரையில் இராமலிங்கரே முன்னோடியாவார். வள்ளலார் இயற்றியுள்ள கவிதை வடிவிலான திருவருட்பா ஆறு திருமுறைகளில் ஆறாவது திருமுறையும் உரைநடையிலான ஜீவகாருண்ய ஒழுக்கம், நான்கு விண்ணப்பங்கள், மஹோபதேசம் ஆகியனவும் சமயச் சார்பற்ற சமூக இலக்கியங்களாகும். இவை ஆன்ம நேய ஒருமைப் பாட்டிற்கேயன்றி இந்திய தேசிய ஒருமைப்பாட்டிற்கும் உதவி புரிவனவாகும் என்று ம.பொ. சிவஞானம் (விடுதலைப் போரில் தமிழ் வளர்ந்த வரலாறு; ப. 33) பாராட்டுவார்.

ஏழை எளியோரின் பசித்தீ தணிய இவர் ஏற்றி வைத்த தீ இன்றும் அணையாது தன் பணியை வடலூரில் தொடர்ந்து கொண்டிருக்கிறது. ஊரன் அடிகள், பொள்ளாச்சி ந. மகாலிங்கம் போன்றோர் இவர் தம் கொள்கைகளைப் பரப்பும் பணியில் தீவிரமாக ஈடுபட்டுள்ளனர். வாழ்க்கைக்குப் பொருளுரைத்து வாழ்ந்து காட்டிய இப்பெரு மகனைத் தமிழுலகம் அவ்வப்போது கருத்தரங்குகள் வழி நினைவு கூர்வதும் சுட்டற்பாலது.

### எச்.ஏ. கிருஷ்ணப்பிள்ளை (1827 – 1900)

திருநெல்வேலி ரெட்டியார்பட்டியில் வைணவ வேளாளர் மரபில் சங்கரநாராயணர், தெய்வநாயகி அம்மாள் ஆகியோருக்கு மகனாய்ப் பிறந்தார். தீவிர வைணவராக இருந்து பின் தமது முப்பதாம் அகவையில் கிறித்துவராக மாறியவர். கிறித்துவ சமய இறையியல் கோட்பாடுகள் முழுமையையும் தன்னுள் அடக்கிய சிறந்த காப்பியமாகப் போற்றப்படும் 'இரட்சணிய யாத்திரிகத்தை' இயற்றிக் கிறித்துவக் கம்பனாகியவர். இது ஜான் பனியனின் Pilgrim's Progress (திருப்பயணியின் முன்னேற்றம்) நூலின் தழுவலாகும். பாவமுள்ள உயிர், கவலையால் நொந்து கிறிஸ்துவின் அருளால் திருந்தி மோட்சம் அடைவதை இக்காப்பியம் பேசுகிறது. இக்காப்பியத் தலைவர் ஏசு கிறிஸ்து ஆவார். திருவாசகத்தைப் பின்பற்றி 1884 இல் எழுதிய 'போற்றித் திரு அகவல்' இவரின் முதனூலாகும்.

'இரட்சணிய மனோகரம்' எனும் மற்றொரு நூல் தேவாரப் பாடல்களின் உருக்கத்தைப் பெற்றிலங்குவது. இதனுள் ஒவ்வொரு பதிகமும் தலைப்புப் பெற்றிருப்பதுடன் உட்பொருளை விளக்கி நிற்கும் கொளுவும் கொண்டிருப்பது, இவரிடம் காணப்படும் புதுமை எனலாம். இரட்சணியக் குறள், இரட்சணிய சமய நிர்ணயம் எனப்பிற நூல்களையும் படைத்துள்ளார். இவரது படைப்புகளில் திவ்விய பிரபந்தத்தின் மணமும், நாயன்மார்களின் உருக்கமும் கம்பனின் சுவையும் அமையக் காணலாம். சான்றிற்கு,

> செறுத்து உமக்கு மற்றவர் செயும் தீமையைச் சிந்தை
> நிறுத்திடாது மன்னிப்பீரேல் நீர் செய் தீமைகளும்
> பொறுத்து உமக்கு மன்னித்து அருள்புரிவர்
> பூதலம் முற்று
> ஒறுத்திடற்கு அதிகாரியாம் உன்னதத்து அரசன்
> *(இரட்சணிய மனோகரம், திருவாக்கு : 14)*

எனும் பாடலைச் சுட்டலாம்.

இவர் 1893இல் உரைநடையில் தம் வாழ்வின் ஒரு பகுதியைப் 'பாளையங்கோட்டை எச்.ஏ. கிருஷ்ணப்பிள்ளை கிறிஸ்தவனான வரலாறு' எனத் தன் வரலாறாகப் படைத்துள்ளார். 'காவிய தரும சங்கிரகம்' எனும் பன்னூற்றிரட்டை (2500 பாடல்கள்)யும் உருவாக்கினார். இதன் முதல் பகுதி 512 பாடல்களுடன் 1926, 1979இல் வெளிவந்துள்ளது. எஞ்சியவை வெளிவந்ததாகத் தெரிய வில்லை. வேதமாணிக்கநாடாரின், 'வேதப்பொருள் அம்மானை',

கால்டுவெலின் 'பரதகண்டபுராணம்' ஆகியவற்றைப் பதிப்பித்துள்ளார்.

ஆங்கிலத் தமிழ் அகராதி தொகுப்பாளரான பீட்டர் பெர்சிவல் ஐயருக்குத் தமிழ் கற்பித்தார். 'தினவர்த்தமானி' இதழின் துணை ஆசிரியராகவும் சில காலம் பணியாற்றியுள்ளார். தம் வாழ்நாளின் இறுதிவரை (1900) கிறித்துவ சங்க ஆசிரியராக அமர்ந்து நூல் வெளியீட்டில் ஈடுபட்டார். இவ்வாறு பலவித மாகத் தமிழ்ப்பணி புரிந்த இவரை நற்செய்திப் பாவேந்தர், நற்செய்திக் கவியரசர், மகாவித்துவான் எனப் பாராட்டுவர்.

### தொழுவூர் வேலாயுத முதலியார் (1832 – 1889)

தொண்டை நாட்டைச் சார்ந்த செங்கல்வராய முதலியார்-ஏலவார் குழலியம்மை ஆகியோருக்கு மகனாகப் பிறந்தார். இராமலிங்க சுவாமிகளின் மாணாக்கராகி அவரது திருவருட்பாவை முதன் முதலில் வெளிவரச் செய்தவர். அவர்மீது திருவருட்பிரகாச சந்நிதி முறை பாடியுள்ளார். வள்ளலார்மீது மருட்பா கட்சியினர் வழக்குத் தொடுத்தபோது அதனை எதிர்த்து நின்றதுடன் அவரது 'போலி யருட்பா மறுப்பு' நூலுக்குக் கண்டன நூலும் எழுதினார். (போலி யருட்பா மறுப்பென்னும் குதர்க்காரண்ய நாச மகா பரசு) வடமொழியிலும் வல்ல இவர் பராசரஸ்மிருதியை மொழி பெயர்த்துள்ளார். உபயகாலநிதிப் பெரும்புலவர் எனும் பட்டமும் பெற்றுள்ளார்.

மாநிலக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றியவர். உரைநடையிலும் செய்யுளிலுமாகச் சுமார் ஐம்பது நூல்கள் படைத்துள்ளார். மாலை, அந்தாதி, சதகம், கலம்பகம், ஆற்றுப் படை, கோவை, அட்டகம், மங்களம், பஞ்சரத்தினம் எனச் சிற்றிலக்கிய வகைமைகளில் செய்யுள் நூல்கள் அமைந்துள்ளன. திருத்தணிகை முருகன் மீது தனிப் பற்றுடையவர் என்பதை அவை அறிவிக்கின்றன. அம்பலக்குறம், அருள்நாம பாராயணத் திரட்டு, சித்திர யமக வந்தாதி, சந்நிதி முறையீட்டு மாலை, சிவஞான பாலைய தேசிகர் மும்மணிக் கோவை, திருத்தணிகைக் கலம்பகம், திருத்தணிகை பதிற்றுப் பத்தந்தாதி, அழகராயிரத்தந்தாதி (திருப்பதி அழகரந்தாதி), நெஞ்சராற்றுப்படை, மூத்த பிள்ளையார் சரண சதகம், வடிவுடையம்மன் சவுந்திரியாட்டகம், சங்கர விஜய வசனம், பெரியபுராண வசனம், வேளாண்மரபியல், விநாயக சதுர்த்தி விரதம் என அவர் நூற்பட்டியல் விரியும்.

### குலாம் காதிறு நாவலர் (1833 – 1908)

பத்தொன்பதாம் நூற்றாண்டு இசுலாமியப் புலவருள் குறிப்பிடத்தக்கவரான இவர் நாகூரைச் சார்ந்தவர். மகா வித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையின் மாணாக்கரான இவருக்குப் புகழ் தேடித்தந்த இலக்கியம் புலவராற்றுப் படையாகும். பாண்டித்துரைத் தேவர் முன்னிலையில் அரங்கேற்றினார். அரசஞ் சண்முகனார் சிறப்புப்பாயிரம் அளித்துள்ளார். நாகூர்க் கலம்பகம், திருமக்காத் திருவந்தாதி, நாகூர்ப்புராணம், பதாயிகுக்கலம்பகம், நபிநாயகம் மும்மணிக் கோவை, ஆரிபு நாயகம் எனப் பல நூல்களைப் படைத்துள்ளார். சீறாப்புராண வசனம், அரபுத் தமிழ் அகராதி போன்ற நூல்களையும் தந்த இவர், பினாங்கில் (இந்தோனேசியா) வித்தியா விசாரிணி எனும் இதழையும் நடத்தித் தமிழ்ப்பணி புரிந்துள்ளார்.

### மாம்பழக் கவிச்சிங்க நாவலர் (1836 – 1886)

முத்தையா ஆச்சாரி - அம்மணி அம்மாள் ஆகியோருக்கு மகனாகப் பழநியம்பதியில் பிறந்தவர். குழந்தைப் பருவத்திலேயே அம்மை நோயினால் கண்பார்வையிழந்தார். மாரிமுத்துக் கவிராயரிடம் இலக்கிய இலக்கணம் கற்றுக் கவிபாடும் வல்லமை பெற்றார். பாப்பம்பட்டி வேங்கடசாமி நாயக்கர் மீது கீர்த்தனை, குறவஞ்சி, புலிப்பவனி, வேட்டைப் புகழ்ச்சி ஆகியன பாடியுள்ளார். இவரது கவித்திறனால் பொன்னுசாமித் தேவராலும் முத்துராமலிங்க சேதுபதியாலும் பாராட்டப் பெற்றவர். அவர்களாலேயே கவிச்சிங்கமானார். குமரகுருபதிகம், குமரனந்தாதி, சந்தப்புகழ், சிவகிரிப்பதிகம், சிவகிரியமகவந்தாதி, திருவருட் சமூக விலாசத் துதித்தமிழ், வேதவாங்க புராணம், பழநிக் கோயில் விண்ணப்பம், தயாநிதிக் கண்ணி, விநாயக மூர்த்தி பதிகம் என மற்றும் பல நூல்களைப் படைத்துள்ளார்.

### சு. சபாபதி முதலியார் (1837–1898)

மதுரையைச் சார்ந்தவர். ஆங்கிலம், வடமொழி, கணிதத்திலும் புலமை மிக்கவர். மதுரைக் கல்லூரித் தமிழாசிரியர். பரிதிமாற் கலைஞர் இவரது மாணாக்கர். திருப்பரங்கிரி குமரன் அந்தாதி, மதுரை மாலை மற்றும் பெரியகுளம் ஊர்மக்கள் வேண்ட 'குளந்தை வடிவேலன் பிள்ளைத்தமிழ்' ஆகியன பாடியுள்ளார். 1863 இல் பிள்ளைத்தமிழ் பாட 1896 இல் அது அச்சானது.

**வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் (1839 – 1898)**

பத்தொன்பதாம் நூற்றாண்டின் பெருங்கவிகளுள் எண்ணிக்கையிலும் வகைகளிலும் மிக அதிகம் பாடியவர் என்ற பெருமையைக் கொண்டவர் இவர். திருநெல்வேலியில் செந்திநாயகம் பிள்ளைக்கும் பேச்சி முத்தம்மைக்கும் 22.11.1839 இல் மகனாய்த் தோன்றியவர். சங்கரலிங்கம் என்பது இயற்பெயர். முருகதாசர், திருப்புகழ் சாமியார், வண்ணச்சரபம் எனப் பலவாறாகப் போற்றப்படுகின்றார். இறையருளால் தாம் பாடுவதாகக் கூறும் இப்புலவர் நாயன்மார் போன்று பல தலங்களுக்கும் சென்று அங்குள்ள இறைவனை இறைவியரைப் பாடும் பாங்கினைக் கொண்டிருந்தமையால் முந்நூற்றுக்கும் மேற்பட்ட தலங்கள் இவரின் பாடல்களைக் கொண்டுள்ளன. சுமார் ஒரு லட்சம் பாடல்கள் வரை இயற்றினார் என்றும் அவ்வப்போது முருகப் பெருமானிடம் கொண்ட ஊடலால் அனலிலும் புனலிலும் இட்டவை போக தற்பொழுது சுமார் 50,000 பாடல்களே உள என்றும் கூறுவர் (ஊர்ப் பெயரும் நூற்றொகையும், கௌமாரசபை; திருவாமாத்தூர்; 1964).

சந்தப் பாடல்கள் பாடுதல் இவருக்கு மிகவும் விருப்பமான ஒன்று. முதலொலியல் அந்தாதி, ஏகத்தாள் இதழகலந்தாதி, ஒரு தொடைச்செய்யுள் நிரோட்டக வந்தாதி, வகுப்புச் சந்தத் திருப்புகழ், தசாங்க வகுப்பு, பஞ்சரத்தினக் கோவை, மகுட ஆசிரியப் பதிகம் எனப்பல வடிவங்களைத் தமிழிலக்கியம் இவரால் பெற்றுள்ளது. பத்தொன்பதாம் நூற்றாண்டில் வகுப்புப் பாடிய ஒரே புலவராக, அறிந்த வரையில் இவர் காணப்படுகிறார். எழுகூற்றிருக்கை பாடுதலே கடினமானதாக இருக்க, இவர் எண்கூற்றிருக்கை, ஒன்பது கூற்றிருக்கை, தசாங்கக் கூற்றிருக்கை, ஒருபது கூற்றிருக்கை எனப்பல பாடியுள்ளார். இலக்கிய வடிவங்களை இணைத்துத் தருவதனைத் திருவாமாத்தூர் பதிகச் சதகம், சடகோபர் சதகத் தந்தாதி போன்றவற்றால் காட்டலாம்.

சூரியன், சிவன், சக்தி, திருமால், கணபதி, முருகன், பொதுக் கடவுள் என ஏழு கடவுளரை இணைத்து 'ஏழாயிரப் பிரபந்தம்' பாடியுள்ளார். வாரத்தின் ஒவ்வொரு கிழமைக்கும் ஒரு கடவுள், ஒரு பதிகம் என நூறு வாரங்களில் நூறு பதிகங்கள் இயற்றி இணைத்தது இப்பிரபந்தமாகும்.

இலக்கியங்கள் தவிர, இவர் அறுவகையிலக்கணம், ஏழாம் இலக்கணம், வண்ணத்தியல்பு எனும் இலக்கண நூல்களையும் படைத்துள்ளார். எழுத்து முதலா ஐந்து இலக்கணங்களுடன்

புலமையிலக்கணத்தை இணைத்து அறுவகையிலக்கணமாக்கி யுள்ளார். இவற்றுடன் 'தவ வியல்பு' இணைந்து ஏழாமிலக்கணம் தோன்றியுள்ளது. இது அறுவகை யிலக்கணத்திற்குப் புறனடை போல் அமைந்துள்ளது. வண்ணத் தியல்பு என்பது எண்வகைச் சந்தங்களின் பிறப்பு முறைகளையும் அவற்றின் இலக்கணங் களையும் கூறுவதாகும். இவ்வகையில் இலக்கணம் படைத்துப் புதுமையைத் தோற்றுவித்துள்ளார். இவற்றுடன் 'வாகடப் பிள்ளைத்தமிழ்' என்றொரு மருத்துவ நூலும் பாடியுள்ளமை குறிப்பிடத்தக்கது.

திருக்குறள் கருத்துகளை விளக்கும் 'மநுநெறித் திருநூல்', கந்த புராணக் கதையை நவிலும் 'முசுகுந்த நாடகம்', 'ஔவையார் பதிகம்', 'வடலூரார் வருகைப் பதிகம்', 'புலவர் புராணம்' போன்றவற்றால் முற்கால, தம்காலப் புலவரைச் சிறப்பித்திருக்கும் பாங்கினை அறியலாம்.

இவரது நூல்களில் தன் வரலாற்றுக் குறிப்புகள் அதிகமாக உண்டு. முருகனால் முற்பிறப்பில் தாம் அருணகிரிநாதர் என்று உணர்த்தப்பட்டதாகக் கூறும் இவர் தம் பாடல்களால் பல அற்புதங்களும் புரிந்துள்ளமையை இவரின் தனிப்பாடற்றிரட்டு உணர்த்தும். 'புலவர் புராணம்' பாடித் தமிழ்ப் புலவர்களுக்கு ஏற்றம் தந்த இவர் தம்முடைய வாழ்க்கை வரலாற்றையும் விரிந்த அளவில் 'குருபர தத்துவமாக'ப் பாடி இவ்வகையில் முன்னோடி யாகிறார். இந்நூல் 29 சருக்கங்கள், 240 பாடல்கள் கொண்டது. தம் வாழ்வை இறைவழிபாட்டில் கழித்தவராதலால் இதனுள் இடம்பெறும் செய்திகள் பெரும்பாலும் வழிபாட்டிற்காகப் பல தலங்களுக்குச் சென்றது, அங்குக் கிடைத்த இறையனுபவங்கள் போன்றனவே உள. இவரது பாடல்களில் தன்னுணர்வு மிகுந்து காணப்படும். திருவாமாத்தூர் தல புராணத்துள் தன்னைத் தானே,

> செந்தமிழ்ப் பாண்டி நாட்டுத் திருநெல்வேலியிலோர்
> சேயாய்
> வந்தனன் என்பேர் மூன்று வகைப்பட உலகம்
> சொல்லும்
> கந்தவேள் அருளால் வேதம் கழறும் நன்னெறி
> ஓராறும்
> சொந்தமாப் பெற்றுப் பற்பல தலந்தோறும்
> துதித்துச் சூழ்ந்தேன்

என அறிமுகப்படுத்திக் கொள்கிறார். இந்நூலுள் தலச்சிறப்பாகத் தன்னுடைய அனுபவத்தையும் இணைத்திருத்தல் புதுமையாகும்.

இறைப்பற்று, மொழிப்பற்று, புலமைப்பற்று எனும் மூன்றையும் பிரிக்க இயலாதவாறு தம் நூல்கள் அனைத்தினாலும் உணர்த்தும் இப்புலவர் போன்று வேறொருவர் உரைத்ததில்லை எனத் துணிந்து கூறலாம். இளங்கோ போன்று எத்தெய்வத் தினைப் பாடினாலும் அத்தெய்வத்தையே முழு முதலாகக் கொண்டவரோ என ஐயுறும் வகையில் சிறப்பாகப் பாடுகிறார். உயிர்ப்பலி எதிர்ப்பும் ஊன் மறுப்பும் இவர் பாடல்களில் முதன்மைக் கொள்கைகளாக வலியுறுத்தப்பட்டுள்ளன. வேள்விகளில் உயிர்ப்பலி செய்வதையும் எதிர்க்கும் தண்டபாணி சுவாமிகள் 'பலி கொளும் தேவதைகள் யாவையுங் கொல்லேனோ' (பழனித் திருவாயிரம் சித்தி 43) என்று கவலுகிறார். "கொன்று தின்னும் கொடியர் எல்லோரையும் வென்று தீர்க்கும் வினோத மென்று ஈவையோ" (ஞாயிறு ஆயிரம் 25) என்று ஏங்குகிறார்.

தமிழலங்காரம், முத்தமிழ்ப் பாமாலை, தமிழைத் துதித்த பதிகம், தெய்வங்களுக்குத் தமிழாசை விளைத்த பதிகம் எனப் பல நூல்களை மொழிக்காகப் பாடிய புலவர், அம்மொழியைச் சுட்டும் இடங்களிலெல்லாம் அதன் சிறப்புப் புலப்படும் வகையில் பலவாறாகப் போற்றியிருப்பதும் சுட்டத்தக்கது. இவருக்கு முன்பே மொழிப்பற்றில் உயர்ந்தோங்கிய புலவர் பலர் இருப்பினும் இவரே தமிழுக்கெனத் தனி நூல்கள் படைத்த முதல்வர் எனும் பெருமைக்குரியவராகிறார்.

'இங்கிலீசுக்காரர் அநியாயக் கொடுமையை என்னென்று சொல்வேன் அம்மா' என்று (கீர்த்தனைப் பாடல் திரட்டு. 14) அன்றைய ஆங்கிலேயர் ஆட்சியைத் துணிந்து எதிர்த்த வீரப் புலவராகவும் காட்சியளித்தல் பாராட்டற்குரியது. 'ஆங்கிலேயர் அந்தாதி' என்ற நூலும் படைத்து விடுதலைப் போருக்குத் தமிழகத்தில் வித்திட்ட பெருமைக்குரிய முதல்வர் என்பதும் குறிப்பிடத்தக்கது. இந்நூல் அண்மையில் தான் வெளியிடப் பட்டுள்ளமையால் இப்புலவரின் இச்சிறப்பு சரிவர இதுகாறும் புலப்படுத்தப்படவில்லை.

'சத்திய வாசகம்' எனும் ஒரே ஒரு உரைநடை நூலும் எழுதியுள்ளார். மதம், புலமை, உலகயியற்கை, இறைப்பற்று என்பனவற்றை இந்நூலுள் விளக்கியுள்ளார். பண்டிதர்க்கே உரிய அன்றைய கடு நடையை விடுத்து மிக எளிய நடையில் எழுதியிருப்பது வியத்தற்குரியது.

> கல்விக்கடல் அளவுபடாது என்று ஒரு வார்த்தை
> உலகில் விளங்குகின்றதாயினும், எந்தப் புலவன்
> மற்றொரு புலவனைக் காணும்போது பொறாமை

**முதலிய குணம் உதியாமல், ஆனந்தம் உதிக்கப்
பெறுகின்றானோ அவன் கல்விக்கடலின் கரை
கண்டவன் என்பதற்கு ஐயமில்லை** (61)

**ஞானம் ஒரு தீபமும் சித்தி அதன் ஒளியும்
என்றறிவதே உண்மையறிவாகும்** (112)

என்பன சான்றுகளாம்.

இவரது படைப்புகள் பெரும்பான்மை இன்னும் ஏட்டுச் சுவடிகளிலேயே உள. ஒரு சிலவே வெளிவந்துள்ளன. ஏனைய திருவாமாத்தூர் கௌமார மடாலயத்தாரால் பாதுகாக்கப்பட்டும் பதிப்பிக்கப்பட்டும் வருகின்றன. வள்ளலாரிடம் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்ததுடன் அவரைத் தாயுமானவரின் அவதாரமாகவும் ஆறுமுக நாவலரை நச்சினார்க்கினியராகவும் பாராட்டுவார் (தனிப்பாடற்றிரட்டு 282). இயன்ற விடமெங்கும் தமிழ்ப்புலவரைப் பாராட்டியுரைப்பவர். அவர் தம் பாக்களை ஆய்வுப் போக்கில் நலன் நோக்கிப் பெருமைப் படுத்தியிருப்பதும் (திருவாமாத்தூர் தல புராணம் 2.4.11) இவரின் தனிச்சிறப்பு. மகா வித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை, கவி குஞ்சர பாரதி, பழனி மாம்பழக் கவிராயர் போன்றோருடனும் உறவு கொண்டிருந்தார். வீரகேரளம்புதூர் ஜமீன் இருதாலய மருதப்பத் தேவர் இவர்பால் மிக்க நட்பும் உதவியும் உடையவராயிருந்தார். சிரவணபுரம் இராமானந்த சுவாமிகள் இவரின் சீடராவார். தம் வாழ்நாளின் இறுதியில் திருவாமாத்தூரில் பத்தாண்டுகள் எல்லை தாண்டா நியமத்துடன் தவமியற்றி 5-7-1898 இல் இவ்வுலக வாழ்வை நீத்தார்.

### பாம்பன் குமரகுருதாச சுவாமிகள் (1851 – 1929)

சாத்தப்பபிள்ளை, செங்கமலத்தம்மாள் மகவாகத் தோன்றிய இவரின் இயற்பெயர் அப்பாவு. முருகன் மீது ஆழ்ந்த பக்தியுடையவர். எண்ணற்ற முருக பக்தி நூல்களைப் படைத்திருப்பினும் இன்றும் முருக பக்தர்களால் போற்றப்படுவது 'சண்முககவசம்' மற்றும் குமாரஸ்தவம் ஆகும். இவரின் நூல்கள் அனைத்தும் 6 மண்டலங்களாகத் தொகுக்கப்பட்டு 6666 பாடல்கள் என எண்ணப்பட்டுள்ளன. பஞ்சாமிர்தவண்ணம், திருத்தொடையல், திருவலங்கல் திரட்டு, பல்சந்தப் பரிமளம், தகராலய இரகசியம், திருப்பா, குமரவேள் பதிற்றுப்பத்தந்தாதி, நாலாயிரப் பிரபந்த விசாரம், குமார சாமியம், செக்கர்வேள் செம்மாப்பு, செவியறிவுறூஉ' என்பன அவற்றுள் சில.

இன்றும் திங்கள்தோறும் முழுநிலவு அன்று திருவான்மியூரில் இவரது சமாதியில் இரவில் சிறப்பு வழிபாடு நிகழ்கிறது.

### மு.ரா. அருணாசலக் கவிராயர் (1852 – 1939)

முகவூர் இராமலிங்கக் கவிராயரின் மகன், மு.ரா. கந்தசாமிக் கவிராயர், இவரது உடன் பிறப்பாவார். சிவகாசிப் புராணம், குறுக்குத் துறைச் சிலேடை வெண்பா, செய்யுள் வடிவில் ஆறுமுக நாவலர் சரித்திரம், சிவகாசி வெண்பா அந்தாதி (மூலமும் உரையும்) ஆகியவற்றைப் பாடியுள்ளார். பகழிக் கூத்தரின் திருச்செந்தூர்ப் பிள்ளைத் தமிழைப் பதிப்பித்துள்ளார். திருப்பரங்கிரிப் புராணம், திருக்குற்றாலப் புராணம் ஆகியவற்றிற்கும் வசனம் வரைந்துள்ளார். முன்னூலைத் தாமே வெளியிட்டும் உள்ளார்.

### வெண்பாப்புலி வேலுசாமிப்பிள்ளை (1854 – 1926)

சுப்பிரமணியபிள்ளை - சுந்தரம்மாள் புதல்வராவார். வெண்பா இயற்றும் திறமையால் வெண்பாப்புலியானார்.

5665 பாடல்கள் அடங்கிய கந்த புராண வெண்பா, தேவார சிவதல வெண்பா, திருக்கச்சூர் ஆலக்கோயிற் புராணம், தில்லை விடங்கன் புராணம், திருவேட்டக்குடிப் புராணம், தேவார வைப்புத் தலக் கட்டளைக் கலித்துறை, தில்லை விடங்கன் நிரோட்டக யமக வந்தாதி முதலியன படைத்துள்ளார்.

### திருமயிலை சண்முகம் பிள்ளை (1855 – 1905)

மணிமேகலை காப்பியத்தை முதன் முதலில் பதிப்பித்த (1894) சிறப்பிற்குரியவர் . நன்னூல் விருத்தியுரை, தஞ்சைவாணன் கோவை, மச்சபுராணம், சிவவாக்கியார் பாடல்கள் முதலிய வற்றையும் பதிப்பித்து 'மகாவித்துவான்' பட்டம் பெற்றுள்ளார். கம்பன் - அயோத்தியா காண்டம், கந்தரனுபூதி, திருக்கயிலை உலா, பொன் வண்ணத்தந்தாதி, திருவாரூர் மும்மணிக்கோவை, பிச்சாடன நவமணிமாலை, சிவஞான முனிவரின் சதுர்வேத தாற்பரிய சங்கிரகம், கண்ணுடை வள்ளலின் மாயாப்பிரலாப குரு வணக்கம் ஆகியவற்றிற்கு உரை வரைந்து தம் புலமையை நிலை நாட்டியவர். திருமயிலை உலா, திருமுல்லை வாயிற் புராணம், திருச்சிராமலை மான்மிய சங்கிரகம், புவனாம்பிகை சோடச யாகோத்பவ மாலை, கற்பக வல்லி மாலை, கபாலீசர் பஞ்சரத்தினம் எனும் நூல்களையும் படைத்துள்ளார். கந்த புராண வசனமும், சிற்றிலக்கண வினா விடையும் இவர் எழுதிய பிற நூல்களாகும்.

### பின்னத்தூர் நாராயண சாமி ஐயர் (1862 – 1914)

வேங்கட கிருட்டின அவதானிகள் (அப்பாசாமி ஐயர்) - சீதாலட்சுமி அம்மாள் இவரது பெற்றோர். மாணாக்கராற்றுப் படை, இயல்மொழி வாழ்த்து, தென் தில்லை உலா, கலம்பகம், இராமாயண அகவல், இறையனார் ஆற்றுப்படை, சிவகீதை, இடும்ப வன புராணம், தமிழ் நாயக மாலை, நரி விருத்தம், நீலகண்டேச்சுர கோவை, பழையது விடு தூது, செருப்பு விடு தூது, அரதைக் கோவை எனப் பன்னூல்களின் ஆசிரியரான இவர் நற்றிணைக்கு உரை வரைந்துள்ளார். அகநானூற்றுக்கு உரையை நிறைவு செய்யும் முன்பே இவ்வுலக வாழ்வை நீத்தார்.

### பிச்சை இபுராகிம் புலவர் (1863 – 1908)

அரசங்குடியில் பிறந்த இவர் பகுதாது மாலை, ஆதமலை திருப்புகழ், வெள்ளாங் குளத்தூர் அவுலியாமாலை, திருமதீனத்துக் கலம்பகம், திருமதீனத்துப் பதிற்றுப் பத்தந்தாதி, நாகூர் பிள்ளைத் தமிழ், மகபூப் சுபகானிமாலை, நாயகத் திருப்புகழ், நத்தகறொலியாண்டவர்கள் பிள்ளைத்தமிழ், சீதக்காதிப்பதிகம், மொகிதீன் ஆண்டவர் மாலை, திருமதீனத்து வெண்பா வந்தாதி, திருமதீனத்து மாலை, திருமதீனத்து யமக வந்தாதி முதலியன படைத்து இஸ்லாமிய சிற்றிலக்கியப் புலவர் வரிசையில் இணைகிறார்.

### பண்டிதை மனோன்மணியம்மையார் (1863–1908)

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியிலும் இருபதின் தொடக்கத்திலும் வாழ்ந்து சிற்றிலக்கியங்கள் பல படைத்த பெண்பாற்புலவராக அமைகிறார். குன்றத்தூரை அடுத்த மண்ணிவாக்கத்தைச் சார்ந்த இவர் மருத்துவமும் அறிந்தவர். மனோன்மணியம் எனும் மருத்துவ நூலும் படைத்துள்ளார். இவர் தந்துள்ள இலக்கியங்களாகப் பழநி வெண்பாப் பதிகம், பழநி இரங்கல், பழநிப் பாமாலை, திருவாமாத்தூர் அழகிய நாதர் பஞ்சரத்தினம், சென்னை கந்த சுவாமிப் பதிகம், திருவானைக்கா அகிலாண்ட நாயகி அந்தாதி, திருமயிலைக் கற்பக வல்லி அந்தாதி, திருக்கழுக்குன்றம் திரிபுர சுந்தரி மாலை, பழநிச் சந்நிதிமுறை, பழநிச் சிங்கார மாலை, பூவைச் சிங்கார சதகம், குன்றத்தூர் பொன்னியம்மன் பதிகம், புதுவைக் காமாட்சி அம்மன் பதிகம் என்பன அமைகின்றன.

### கருப்பையா பாவலர் (1864 – 1907)

மதுரை, கொட்டாம்பட்டியைச் சேர்ந்த இவர் அழகர் பதிகம், இலக்குமி அந்தாதி, பரங்கிரி மாலை, நவரத்தினம், திருப்போரூர் ஆண்டவர் திரிபந்தாதி, கட்டளைக் கலிப்பா, திருப்பல்லாண்டு, சிதம்பர சுவாமி கலாமாலை, வண்ணங்கள், திருக்கோட்டியூர் திரிபந்தாதி, திருச்செந்தில் திரிபந்தாதி, ஓரெழுத்தந்தாதி, திருக்குரம்பைத் திரிபந்தாதி, திருமெய்யம் ஓரெழுத்தந்தாதி, மருதூர் நாகநாதர் மாலை, திருமயிலைக் கற்பகாம்பிகை மாலை, நாமகள் இரட்டை மணிமாலை, திருஞான சம்பந்தர் மாலை, வடமுல்லை வாயில் மாசிலாமணி சரித்திரம், மயிலைச் செந்தில்வேல் முதலியார் ஐந்திணைக் கோவை, பதிகங்கள், முறையூர் மீனாட்சி சுந்தரேசுவரர் பிரபந்தத் திரட்டு ஆகியவற்றைத் தந்துள்ளார்.

### அண்ணாமலை ரெட்டியார் (1865 – 1891)

சங்கரநயினார் கோயிலுக்கருகிலுள்ள சென்னிகுளம் என்ற சிற்றூரில் சென்னவ ரெட்டியார் - ஓவு அம்மாள் தம்பதியரின் புதல்வராய் 1865 இல் தோன்றினார். ஊற்றுமலைத் தனிப்பாடற்றிரட்டு, வீரைத்தலபுராணம், வீரை நவநீத கிருஷ்ண சாமி பதிகம், வீரை அந்தாதி, வீரைச் சிலேடை வெண்பா, வீரைப் பிள்ளைத் தமிழ், கோமதி அந்தாதி எனப் பன்னூல்கள் படைத்திருப்பினும் கழுகுமலை முருகக் கடவுள் மீது பாடிய 'காவடிச்சிந்தே' இலக்கிய வரலாற்றில் இவருக்குச் சிறப்பிடம் பெற்றுத் தந்தது. காவடிச்சிந்து பாடிய முதல்வர் என்பதுடன் இதுவரை எழுந்துள்ள காவடிச் சிந்துகளில் முதன்மைச் சிறப்புடையதாகவும் இது கருதப்படுகிறது. முருகன் கோயில்களுக்கு நடைப்பயணம் செய்வோரிடையும், தமிழிசை அரங்குகளிலும் இது இன்றும் பாடப்பட்டு வருகிறது. தேசியக்கவி பாரதி தனது 'தொன்று நிகழ்ந்த தனைத்தும்' எனும் பாடலை, 'ஆறுமுக வடிவேலவனே' எனும் இவரின் காவடிச் சிந்தினையொட்டி அமைத்திருக்கக் காணலாம்.

தன்னையாதரித்த ஊற்றுமலை ஜமீன்தார் இருதயாலய மருதப்ப தேவர் மீது பாடிய 334 பாடல்கள் ஊற்றுமலைத் தனிப்பாடற்றிரட்டில் உள. அவற்றுள் கைக்கிளைப் பாடல்கள் மிகுதியாக உள. திரிகூட ராசப்பக் கவிராயரின் கவிதைச் சாயல் இவரிடம் உண்டு என்பர். (க.சி. கமலையா, தமிழ் இலக்கியக் கொள்கை, தொகுதி - 6, ப. 333).

### முத்துத் தாண்டவராய பிள்ளை (1868 - )

பரங்கிப் பேட்டையில் பிறந்த இவர் தமிழாசிரியர் ஆவார். சிந்தாமலை விநாயகர் மாலை, சாதாக்கியத் திருமுறை, ஒருபா ஒருபஃது, பொய்யா வினாயகர் இருபா இருபஃது, தில்லையாடிப் புராணம், வெள்ளைவாரணப் பிள்ளையார் திருவிரட்டைமணிமாலை, முருகன் வருகைப்பத்து, ஐயனாரிதனார் மாலை, திருமகள் மாலை எனச் சிற்றிலக்கியப் படைப்புகளில் ஆர்வம் காட்டியுள்ளார்.

### ஜி.எஸ். வேதநாயகர் (1868 - 1932)

மதுரை அருகில் தாத்தம்பட்டியில் பிறந்தவர். கர்நாடக இசையில் புலமைமிக்கவர். சுமார் 320 கீர்த்தனைகள் பாடி அதில் தம் திறமையை வெளிப்படுத்தியுள்ளார். அவற்றுள் 69 கீர்த்தனைகளால் தொடுக்கப்பட்டுள்ள 'கிறித்து பெருமான் சரிதைமாலை' சிறப்பு மிக்கது. 40 பாடல்கள் கொண்ட 'பரலோக ராச்சியப் பாமாலை' மிகுந்த எளிமையும் உருக்கமும் பெற்றது. ஆடவருக்கும் பெண்டிருக்கும் தனித்தனியே 341, 300 பாடல்களில் கிறித்துவ சமய அறிவுரைகளைப் பகரும் கும்மிகளையும் பாடியுள்ளார். இயேசு பெருமான் மீது பாடியுள்ள அமலகுரு சதகம், சற்குரு சதகம் என்பனவும் குறிப்பிடத்தக்கன. கிறித்துவ வாழ்வின் இலக்கணத்தை, பெருமையைப் பறைசாற்றும் 1800 குறட்பாக்கள் அடங்கிய 'இருமை நெறிக்குறள்'; பக்திக் காதலாக, நாயக நாயகி பாவத்தில் 800 கண்ணிகளில் அமையும் 'நித்தியானந்தக் காதல்; 260 பாக்களில் கன்னிமரியாளின் புலம்பலாக அமையும் 'நெஞ்சுருகட்டும்' எனும் சிலுவைப் புலம்பல், உயர் வக்கணை நிராகரணத் தந்தாதி, மோசியா வருகை மாலை, நூதன மாளிகை, நகை எழுபது, தையலர் சிந்து, நராவதாரக் கடவுள் நாம சுப்ர தீபம், நாமிடுக நொண்டிச் சிந்து என்பன இவரின் பிற படைப்புகளாம்.

### பனைக்குளம் அப்துல் மஜீது (1871 - 1897)

இராமநாதபுரத்தைச் சார்ந்தவர். தமிழகத்திலும், மலேசியாவிலுமாக வாழ்ந்தவர். கவிப்பூஞ்சோலை, இலக்கியப் பூங்கா, நாயக வெண்பா, பெருமானார் அருள்வேட்டல், நெறித்திரள் முதலான நூல் படைத்தவர். வெண்பா வேந்தர் எனச் சிறப்பிக்கப்பட்ட இவர் எனது தமிழ் வாழ்க்கை, தமிழ்நாட்டு இசுலாமியப் புலவர்கள் என வாழ்க்கை வரலாறுகளும் கண்டுள்ளார். எனினும் நாயக வெண்பாவே இவருக்குப் புகழ் சேர்த்துள்ளது.

### செய்குத் தம்பிப் பாவலர் (1872 – 1950)

நாகர்கோவிலை அடுத்த கோட்டாறு இலங்கடையினைச் சார்ந்த இவரின் தந்தை பக்கீர் மீரான் சாகிபு ஆவார். 16 வயதிற்குள் பா புனையும் ஆற்றல் பெற்றவர்; சதாவதானி; சீறாப்புராணத்திற்குச் சீரிய வுரை கண்டவர்; அதனை நன்முறையில் பதிப்பித்தவர்; வள்ளலாரின் அருட்பா கட்சியினருக்கு ஆதரவு அளித்தவர் எனப் பல பெருமைகளை ஒருங்கே கொண்டவர். இவரின் படைப்புகள் ஷம் சுத்தாதீம் கோவை, கல்வத்து நாயகம் இன்னிசைப் பாமாலை, திருநாகூர்த் திரிபந்தாதி, திருக்கோட்டாற்றுப் பிள்ளைத்தமிழ், பதிற்றுப்பத் தந்தாதி, நாயக மான்மியம், நீதி வெண்பா, அழகப்பக் கோவை, நாகைக்கோவை எனப் பலவாகும். இவற்றால் இசுலாமியப் புலவரில் குறிப்பிடத்தக்கவராகிறார். இந்திய விடுதலைப் போரிலும் கதர் இயக்கத்திலும் பங்கேற்றவர். தமது சொல்லாற்றலால் ஆறுமுக நாவலரைக் கவர்ந்தவர்.

### கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை (1876 – 1954)

தேரூரில் (நாஞ்சில் நாடு) சிவதாணு பிள்ளை - ஆதிலெட்சுமி ஆகியோருக்கு மகனாகப் பிறந்தவர். விடுதலைப் போராட்டம் உச்ச நிலை கண்டிருந்த காலத்தே வாழ்ந்திடினும் அதன் பாதிப்பின்றியே இவரது கவிதைகள் அமைந்துள்ளமை வியப்பாகும். எளிமையும் தெளிவும் இழையோடும் இவரது கவிதைகளில் முற்போக்குச் சிந்தனைகள் சீரியவிடம் பெற்றுள்ளன. நாட்டில் நிலவிய சாதிக்கொடுமைகளும் தீண்டாமை நோயும், உயிர்ப்பலி கொடுக்கும் வழக்கமும், நாஞ்சில் நாட்டின் மருமக்கள் தாயமுறை போன்ற மூடப்பழக்கங்களும் இவரை மிகவும் பாதித்தன என்பதை இவரது கவிதைகளில் தெளிவாகக் காண முடிகிறது. பாரதியார் மீது மிகுந்த மதிப்புடையவர். கம்பன் கவிகளில் தன்னை இழந்தவர். திராவிட இயக்கத்தார் கம்பராமாயணத்தை எரிக்க முனைந்தபொழுது, 'ஓலை எரியும் தாள் எரியும் உள்ளத்து எழுதி வைத்து நிதம் காலை மாலை ஓது கவி கனலில் வெந்து கரிந்திடுமோ?' எனக் கனன்றவர். 'உள்ளத்து உள்ளது கவிதை.......' எனக் கவிதைக்கு இலக்கணம் வடித்த இவர் அதற்கு இலக்கியமாகக் கம்பன் கவிகளைச் சுட்டிப் பெருமைபடுத்துகிறார்.

இளமை முதல் இவர் பாடிய கவிதைகள் பல, அன்று தொகுத்து வைக்கும் உணர்வின்மையால் மறைந்துவிட்டன. எஞ்சியவற்றை வையாபுரிப் பிள்ளையின் துணையோடு 1938-இல் மு. அருணாசலம் 'மலரும் மாலையும்' என வெளியிட்டுள்ளார். மருமக்கள்வழி மான்மியம் (1944), ஆசிய ஜோதி (1941),

உமர்கய்யாம் (1945), தேவியின் கீர்த்தனைகள் என்பன பிறவாகும். இவர் மழலைகளுக்குப் பாடிய பாடல்கள் முதலில் 'குழந்தைச் செல்வம்' எனும் பெயரில் வெளிவந்து பின் மலரும் மாலையும் தொகுதியுள் இணைக்கப்பட்டுள்ளன. 24-12-1940இல் சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கத்தால் 'கவிமணி' பட்டம் பெற்றார்.

திருவிதாங்கூர்ப் பகுதியில் உள்ள கல்வெட்டுகளை ஆராய்ந்து தமிழிலும் ஆங்கிலத்திலும் பல கட்டுரைகள் எழுதியுள்ளார். இவர் அவ்வப்போது எழுதிய கட்டுரைகள், நிகழ்த்திய சொற்பொழிவுகள் அளித்த நேர்காணல் போன்றவை தொகுக்கப்பட்டு 'கவிமணியின் உரைமணிகள்' என்ற நூலாக (1957) வெளிப்போந்துள்ளன.

ஒரு கவிஞன் அல்லது படைப்பாளியின் வெற்றி சமுதாயத்தில் அவன் படைப்பு ஏற்படுத்தும் தாக்கத்தைப் பொறுத்துள்ளது. அவ்வகையில் கவிமணி தம் 'மருமக்கள் வழி மான்மியம்' வழி சாதனை புரிந்துள்ளார். இவரை இருபதாம் நூற்றாண்டின் முதன்மைக் கவிஞர் வரிசையில் அமர வைத்திருப் பதற்கு இந்நூல் முதற் காரணம் எனலாம். திருவனந்த புரத்திலிருந்து வெளியான 'தமிழன்' என்ற இதழில் மருமக்கள் வழி மான்மியம் 1917 ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் தொடங்கி, பகுதி பகுதியாக 1918 பிப்ரவரி வரை தம் பெயரைக் குறிப்பிடாது பழைய ஓலைச்சுவடிகளில் காணப்பட்டதாக வெளியிட்டார். இது அச்சாதியினரிடையே விழிப்புணர்ச்சியை ஏற்படுத்த அவர்களின் ஒருமித்த வேண்டுகோளுக்கிணங்க 1926 ஆம் ஆண்டு திருவிதாங்கூர் சட்டசபையில் நாஞ்சில் நாட்டு வேளாளரின் மருமக்கள் தாய ஒழிப்புச் சட்டம் நிறைவேறியது. (தமிழ்க் கவிதைகளில் சமுதாயச் சிக்கல்கள், பி. யோகீசுவரன், 1985, பக். 154- 155) இந்நூல் தமிழின் மிகச் சிறந்த அங்கத இலக்கியமாகப் போற்றப்படுகிறது.

இசைக்கச்சேரிகளில் இடம் பெறக்கூடிய சிறந்த இசைப்பாடல்கள் தேவியின் கீர்த்தனைகளாகும். முதல் கவிதை நூல் அழகம்மை ஆசிரிய விருத்தமாகும். இதனைத் தமக்குச் சிவதீட்சை யளித்த திருநெல்வேலி உமையொருபாகக் குருக்கள் வேண்டப் பாடினார். தனிக்கவிதைகள் தொகுப்பான மலரும் மாலையும் 1330 பாக்கள் கொண்டது. அதில் அமைந்துள்ள தீண்டாதார் விண்ணப்பம், நாட்டுக்கே உழைப்போம், ஹரிஜனர்க் காக வருந்தல், தீண்டாமைப்பேய், மதுவிலக்குப் பாடல்கள், பெண்களின் உரிமைகள், வேலையில்லாத் திண்டாட்டம் போல்வன அவரது சமூகச் சிந்தனையை இயம்புகின்றன. 'கோவில்

முழுதும் கண்டேன்' பாடலில் திருமூலரின் எதிரொலி கேட்கலாம். இவரை ஒரு வாழ்த்துக்கவி எனப் போற்றுமளவிற்குப் பலவகை வாழ்த்துப் பாக்கள் பாடியுள்ளார். அக்கால மரபிற் கேற்ப பல சிறப்புப் பாயிரங்களும், கையறு நிலைப் பாடல்களும் பாடியுள்ளார். இவரது கவிதைகள் மரபைப் போற்றுவனவே.

தோட்டத்தில் மேயுது வெள்ளைப்பசு - அங்கே துள்ளிக் குதிக்குது கன்றுக்குட்டி போன்ற பாடல்கள் இவரைச் சிறந்த குழந்தைக் கவிஞராக்கியுள்ளன.

இவர்தம் மொழிபெயர்ப்பு நூல்களான ஆசிய ஜோதியும், உமர்கய்யாமும் மிகச்சிறந்தனவாக அறிஞர் பெருமக்களால் போற்றப்படுகின்றன. மொழிபெயர்ப்புகள் தமிழ் மரபிற் கேற்பவும், சொல்லுக்குச் சொல் மொழிபெயர்ப்பாக அமையாது கருத்துப் பெயர்ப்பாகவும் அமைய வேண்டும் எனும் கொள்கையர் இவர் என்பதை இவை காட்டுகின்றன. கவிமணியின் மூலக்கவிதைகள் போன்றே அவையும் எளிமையும், தெளிவும், இசையின்பமும் பெற்று விளங்குகின்றன. தனிப்பாடல்களிலும் பல மொழிபெயர்ப்புகள் உள. ஆங்கிலக் கவிஞர் எட்வின் அர்னால்ட்டின் Light of Asia ஆசிய ஜோதியாகியுள்ளது. பிட்ஸ்ஜெரால்ட் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்த உமர்கய்யாம் பாடல்களின் தமிழ் வடிவம் கவிமணியின் உமர்கய்யாம் பாடல்களாகும்.

கவிமணியின் வாக்குவன்மைக்கு, எடுத்துக்காட்டாக, ஏழைச் சிறுமியரின் மனப்புழுக்கத்தை அப்படியே எதிரொலிக்கும்,

**நல்ல பண்டங்களைக் கண்டறியோம் – ஒரு**
**நாளும் வயிறார உண்டறியோம்**
**அல்லும் பகலும் அலைந்திடுவோம் – பசி**
**ஆற வழியின்றி வாடிடுவோம்........**
**தேயிலை தேயிலை என்பீர் அம்மா! – இது**
**தேக்கிலை தானோ தெரியாதம்மா!**
**வாயும் வயிறு நிறைந்திடுமோ? – இதில்**
**வைத்த அமுதும் திகைந்திடுமோ**

என்பதுபோன்ற பாடல்களை நவிலலாம். இவரது தேவியின் கீர்த்தனைகளும் (1956), குழந்தைச் செல்வமும் 1957 தமிழக அரசின் பரிசில் பெற்றவை. திராவிட இயக்கம் வீறு கொண்டெழுந்த காலத்தே வாழ்ந்திருந்தாலும் அதன் தாக்கம் சிறிதும் படியாத மரபுக்கவிஞர் இவர்.

*பாரதியார் (1882 – 1921)*

எட்டையபுரம் சின்னசாமி ஐயர் - இலட்சுமி அம்மாள் பெற்றெடுத்த அருந்தவப் புதல்வர் (11.12.1882) தேசியக் கவி பாரதியார். சுப்பிரமணியன் என்ற இயற்பெயரும் சுப்பையா என்ற செல்லப்பெயரும் கொண்ட இம்மகாகவி தமது பதினோராம் வயதில், விருதை சிவஞான யோகியாரால் கவித்திறனுக்காகப் 'பாரதி' எனும் பட்டம் பெற்றார். அதுவே பின்னாளில் இயற்பெயராய் நிலைத்துவிட்டது. காளிதாசன், சக்தி தாசன், சாவித்திரி என்ற நிருபநேயர், ஓர் உத்தம தேசாபிமானி, நித்தியதீரர் என்று பல புனைபெயர்களைச் சூடிக் கொண்ட பாரதி ஆங்கிலக் கவிஞர் ஷெல்லி மீது கொண்ட ஈடுபாட்டால் தம்மை 'ஷெல்லி தாசன்' என்றும் அழைத்துக் கொண்டார். தம் குறுகிய கால வாழ்விலேயே பெருஞ்சாதனை படைத்தவர்.

**சுவைபுதிது பொருள்புதிது வளம்புதிது**
**சொற்புதிது சோதிமிக்க**
**நவகவிதை எந்நாளும் அழியாத**
**மகா கவிதை**

என்று தம் கவிதைக்குத் தாமே கட்டியம் உரைத்த பாரதியின் கூற்றின் உண்மை அவரை ஒரு வரகவியாகத் தமிழ் உலகிற்கு இனங்காட்டியுள்ளது. மக்களுக்காக மக்களைப் பாடிய இம்மக்கள்கவி பைந்தமிழ்த் தேர்ப்பாகனாய் இன்றும் உலா வருகிறார். 'தனிமை இரக்கம்' இவரது முதல் கவிதை. 1912 ஆம் ஆண்டு பாஞ்சாலி சபதத்தின் முதற்பாகம் வெளியிட்ட போது அதில், 'எளிய பதங்கள், எளிய நடை, எளிதில் அறிந்து கொள்ளக் கூடிய சந்தம், பொது ஜனங்கள் விரும்பும் மெட்டு, இவற்றினை உடைய காவிய மொன்று தற்காலத்திலே செய்து தருவோன் நமது தாய்மொழிக்குப் புதிய உயிர் தருவோன் ஆகின்றான்' என்று முன்னுரை எழுதியுள்ள பாரதியார், அதற்குத் தகுந்த எடுத்துக் காட்டுமாகிறார். 'அருமையான உள்ளக் காட்சிகளை எளிமை கொண்ட நடையிலே எழுதுவது நல்ல கவிதை... காலம் மாறமாற பாஷை மாறிக் கொண்டு போகிறது. பழைய பதங்கள் மாறிப் புதிய பதங்கள் உண்டாகின்றன. புலவர் அந்தந்தக் காலத்து மக்களுக்குத் தெளிவாகத் தெரியக் கூடிய பதங்களையே வழங்க வேண்டும்' என இக்கருத்தைத் தம் கட்டுரையினுள்ளும் வலியுறுத்தியுள்ளார்.

பாரதியாரின் பாடல்களிலே தேசியமும் சர்வதேசியமும் கொஞ்சி விளையாடின. நாட்டுப்பற்றும் மொழிப்பற்றும்

ஏறுநடை போடத்தொடங்கின. விடுதலை வேட்கை வீர முழக்கம் இட்டது; காந்தியடிகளின் அன்பு நெறியும் உலகைத் திருத்த உயிர்த்தியாகம் செய்த சான்றோர்களின் திருத்தொண்டும் ஒளிவிட்டுப் பிரகாசித்தன.

பாரதியின் பாடல்களில் மனித நல நாட்டம் வீறு பெற்று விளங்கலாயிற்று. மண்ணகக் காதலிலே கடவுள் தன்மையை - தெய்வீகப் பேராற்றலைக் கண்டார். காட்டினார். அவர் சமயத்திலே சமரசம் கண்டார். 'ஒன்று பரம் பொருள் நாமதன் மக்கள், உலகு இன்பக் கேணி' என்று அறிவுறுத்தினார். சக்தி வழிபாட்டின் உச்சத்தை உலகிற்குக் காட்டினார். கண்ணனையே - காதலியாக- சக்தியாகச் சொல்லோவியம் ஆக்கினார். புதுமைக்கவி, பொதுமைக்கவியாக இவற்றால் சிறக்கிறார்.

பல்லாண்டுகளாக உலக வாழ்வில் நாகரிக முன்னேற்றம் கண்ட நாட்டில், சமூகம், மொழி பற்றிய உணர்வுகளை இந்திய மக்கள் புறக்கணித்ததால், இந்த உலகியலை மெய்யுணர்வோடு பாரதியார் இணைத்தார். பொருள் முயற்சியையும் தொழில் வளர்ச்சியையும், அறிவியல் முன்னேற்றத்தையும் தமது மெய்யுணர்வுக் கோட்பாட்டு வண்ணத்திலே குழைத்து, குறிப்பிட்ட எந்தச் சமயத்தையும் சாராத ஆன்மீக உணர்வாக அவர் வெளிப்படுத்தியுள்ளார். இது பாரதியின் கவிதைகளில் காணப்படும் புதுமை. தோத்திரப் பாடல்களிலும் வேதாந்தப் பாடல்களிலும் நாடு, மொழி, சமுதாயம், தொழில், அறிவுக் கலைகள் போன்ற புதிய உலகியல் பொருள்களை இணைத்தே பாடியுள்ள எழுச்சிக்கவி இவர்.

உலகில் மண்டியுள்ள எல்லா வகையான கொடுமைகளையும் எதிர்த்துப் போர் முரசு கொட்டிய வீரகவி. தொழிலாளியின் துன்பத்தை, அடக்கியொடுக்கப்பட்ட அபலைகளின் உள்ளக் குமுறல்களைக் கண்ணீர் காவியமாகத் தீட்டினார். புதியதோர் உலகைப் படைக்கத் தம் பாடல்களிலே வழி வகுத்துக் கொடுத்தார். இத்தகைய புதிய எண்ணங்களை, கருத்துகளைப் பாடுபொருளாக முதன்முதலில் பயன்படுத்திய பெருமை இவரைச் சாரும்.

நாடு, மொழி, இனம் என்ற வேறுபாடுகளையெல்லாம் கடந்து மனித குலம் முழுவதையும் பரந்த கண்ணோட்டத்தில் பாரதியார் தரிசிக்கிறார். பாதிக்கப்பட்டோர் எங்கெல்லாம் இருக்கிறார்களோ அவர்களுக்காகவெல்லாம் இரங்குகிறார். போராடுவோர் எங்கிருப்பினும் அவர்களுக்காகப் பரணி

பாடுகிறார். உரிமை பெற்றவர்களுக்கு வாழ்த்துரைக்கிறார். உலகத்தில் எந்த மூலையில் நிகழும் மாற்றமாயினும் அது இந்திய மேன்மைக்கு உதவும் என்று கணித்திருக்கிறார். செய்திப் பரிமாற்றங்களுக்கு நவீனமான வசதிகள் இல்லாத போதே இத்தாலியையும் பெல்ஜியத்தையும், ரஷ்யாவையும் ஜப்பானையும் சீனாவையும் பற்றிச் சரியாக ஆராய்ந்திருக்கிறார். மற்ற நாடுகளைப் பற்றிச் சிந்தித்த பாரதியார், அரசியல் அடிப்படையில் தேசிய இயக்கங்கள், பொருளியல் புரட்சிகள் ஆகியவற்றைப் பற்றி எழுதியதோடு நில்லாமல் கல்வி, பண்பாடு, பெண்ணுரிமை, அறிவியல் முதலியவற்றைப் பற்றியும் எழுதுகிறார் என்பார் ஆ. செகந்நாதன் (பாரதீயம், அன்னம், சிவகங்கை, 1983, ப. 79) இவற்றால் இத்தமிழ்க் கவி தேசிய கவியாக உயர்வடைந்துள்ளார்.

ஆணும் பெண்ணும் சமவுரிமையுடன் வாழவேண்டிய ஆன்மாக்களே என்பதை அறிவுறுத்தினார். பெண் விடுதலைக் கும்மி பாடினார். 'நிமிர்ந்த நன்னடையும் நேர் கொண்ட பார்வையும் நிலத்தில் யார்க்கும் அஞ்சாத நெறிகளும் திமிர்ந்த ஞானச் செருக்கும் இருப்பதால் செம்மை மாதர் திறம்புவதில்லையாம்' என்று புதுமைப் பெண்களைக் காட்டும் பாரதி 'ஆணும் பெண்ணும் நிகரெனக் கொள்வதால் அறிவிலோங்கி இவ்வையம் தழைக்குமாம்...... நாணும் அச்சமும் நாய்கட்கு வேண்டுமாம். ஞான நல்லறம் வீர சுதந்திரம் பேணு நற்குடிப் பெண்களின் குணங்களாம்' எனத் தம் கருத்துரைக்கிறார்.

நிவேதிதாவைச் சந்திப்பதற்கு முன்னரே பெண்கள் முன்னேற்றத்தையே நோக்கமாகக் கொண்டு தொடங்கப்பட்ட 'சக்கரவர்த்தினி' என்னும் இதழுக்குப் பாரதியார் ஆசிரியர் பொறுப்பேற்றதோடு அதில் பல கட்டுரைகளும் எழுதியுள்ளார். நிவேதிதாவின் அறிவுரை அவருக்கு மேலும் ஊக்கம் கொடுத்திருக்கக் கூடும். தாய்த் தெய்வ வழிபாடும், இளமையில் ஏற்பட்டதாயின் பிரிவுத்துயரும், நிறைவேறாத இளமைக் காதலும் பாரதியார் மனதில் ஆளுமை கொண்டு பெண்ணைக் குறித்துப் பாடுவதற்கு ஊக்கம் கொடுத்தன என்று கொள்ளுவது பொருத்தமானது என்பர். (ஐசக் சாமுவேல் நாயகம், பாரதியார் கவிதை நூல்கள் குறித்த ஆய்வுகள் ஒரு மதிப்பீடு, 1992, பக். 450)

பாரதியாரின் சமூகச் சீர்திருத்தப் பிரச்சாரத்தில் முன்னுரிமை பெற்றுத் திகழ்வது பெண்ணுரிமை இயக்கம். சமூகச் சீர்திருத்தக் கருத்துகளின் பரப்பை வைத்துக் கணிப்போமாயின் பெண்ணுரிமை இயக்கம் பற்றிய கருத்துகளே பெரியது. மற்ற

சீர்திருத்தக் கருத்துகளை வெளியிடும் பொழுது ஓரளவு தணிந்தும் முறையிட்டும் வேண்டியும் நிற்கும் பாரதி பெண்ணுரிமை இயக்கத்தின் மின்னலென அடியென விளங்குகின்றார். இந்தியாவிலேயே பாரதியாரை ஒத்த அளவில் பெண்ணுரிமை இயக்கத்திற்குப் பாடுபாட்ட வேறு ஒரு கவிஞர் இருக்கக் கூடுமோ என எண்ணத் தோன்றுகிறது எனத் தம் பாரதி பற்றிய ஆழ் கல்வியால் தெளிந்துரைக்கிறார் பெ.சு. மணி.

இளைய சமுதாயத்திடம் பெரும் நம்பிக்கை கொண்ட பாரதி அவர்களுக்கு எழுச்சியும், ஊக்கமும், அறிவுரையும் வழங்கினார். சாதி எதிர்ப்பு, சமய மறுப்பு, அத்வைத உறுதி, சக்தி சிவ காட்சி, யோகத் திருத்தல், சுயேச்சைப் போக்கு, எளிமை, அன்பு நெறி முதலிய சித்தர் போக்கனைத்தும் பாரதியின் பண்புகளாகவும் பாடற்பொருளாகவும் அமைகின்றன. காலச் சூழலுக்கு ஏற்ப இலக்கியப் பாடுபொருள் மாறுவது தவிர்க்க இயலாதது என்பதைப் பாரதியாரின் சிற்றிலக்கியங்கள் காட்டுகின்றன. தமது புதிய கருத்துகளுக்கு ஊக்கமளிக்க அவற்றைச் செயற்படுத்தியும் காட்டிய இவ்வரகவி பூணூல் அணிவதையும் விட்டவர்.

பக்திப் பாடல்களில், தோத்திரப்பாடல்களில், வேதாந்தப் பாடல்களில் என அனைத்திலும் கூடப் பழமை மரபினின்றும் மாறி, வாழ்க்கை வாழ்வதற்கே என்ற கோட்பாட்டை வலியுறுத்தி, வேண்டாத பழமைப் பற்றை விலக்கிப் புதிய பாதை காண வருமாறு மனித இனத்தை வழிகாட்டி அழைத்து, புலனடக்கம் கூடிய அதே சமயம் வேண்டாத கட்டுப்பாடுகளற்ற, விடுதலை வாழ்வுக்கு வித்திட்டு வாழ்கின்ற வாழ்க்கை பொருளுடையதாக இருக்க வேண்டுமானால் பிறர் நலம் பேணுவதாகவும் சமுதாயத்தில் கூட்டு நலன் கருதுவதாகவும் இருக்கவேண்டும் என வற்புறுத்தி அது முடியும் என்ற நம்பிக்கையும் ஊட்டுவதால்தான் பாரதியின் பாடல்களில் வளம்புதிது என்று இறும்பூது எய்துகிறோம் என்பார் தெ.பொ. மீனாட்சி சுந்தரம் (பாரதியியம், மணிவாசகர் பதிப்பகம், 1982, ப. 90).

பரம்பரை பரம்பரையாகப் புலவர்கள் பாடி வந்த கவிதைத் தலைப்புகளையும் இலக்கிய வடிவங்களையும் முறைகளையும் மொழிகளையும் ஒதுக்கிக் கவிஞன் எந்தத் தலைப்பையும் கற்பனையின் கண்ணோட்டத்தில் எளிய நடையில் பாடும் சுதந்திரத்தை அவனுக்கு அளித்தவர் விந்தைக்கவி பாரதி என்றால் அது மிகையாகாது. பாரதிதான் கவிதையைப் புரவலரின் ஆதிக்கத்திலிருந்து மீட்டவர் என்றும் கூறலாம்.

நாட்டார் பாடல் மரபுகளுடன் நந்தனார் சரித்திரக் கீர்த்தனையில் சிறப்புற்று விளங்கும் மெட்டுகளும், காவடிச்சிந்து, நொண்டிச் சிந்து பாணிகளும், சித்தர் வழிவந்த ஆனந்தக் களிப்பும், கிளிக்கண்ணிகளும், திருவருட்பா மெட்டுகளும் வேத நாயகரின் கீர்த்தனை அமைப்புகளும் பாரதியாரின் பாடல்களில் இடம் பெற்றுள்ளன. பேரளவிற்கு இசைப்பாட்டு மரபுகளையும் நாட்டுப்புறப்பாடல்களின் கவர்ச்சி மிகு இயல்புகளையும் கலந்து தம் புதிய கவிதைகளைப் படைத்துள்ளார். எனவே தான் 'பாரதி மக்கள் கவிஞர், கவிதையைப் பொதுமக்கள் உடைமையாக்கிய பெருமை அவருக்கு உண்டு. இருபதாம் நூற்றாண்டில் தமிழ் இலக்கியப் பண்புகள் நலிந்துவிடாமல் நிலை நிறுத்திய பெருமை பாரதியாரைச் சாரும்' என்பர், (தமிழண்ணல், பாரதியியம், ப.239). பாரதியார் உயிர்க் கவியாகவும் உயர் கவியாகவும் உயர்ந்தமைக்கு இவையும் காரணமாகலாம்.

பாரதியின் காப்பியப் படைப்புகளில் ஒன்றான குயில் பாடல் குறித்து நான்கு விதமான திறனாய்வுப் பார்வைகள் காணப்படுகின்றன. குறிப்பாகக் குயில், கவிஞரின் கவிதைக் காதலை விளக்கும் பாடல், கவிஞரின் இளமைக் காதலை விளக்கும் பாடல், தத்துவக் கருத்தை விளக்குகிறது, வேதாந்தக் கருத்தினை விளக்குகிறது எனும் கருத்துகள் வெவ்வேறு திறனாய்வாளரால் வலியுறுத்தப்படுகின்றன என ஐசக் சாமுவேல் நாயகம் (முன்சுட்டியது ப. 448) எடுத்துக் காட்டுகிறார். எந்தச் சமுதாயப் பயன் மதிப்புகளையும் சார்ந்து விடாதவாறு இயற்றப்பட்டுள்ள குயில்பாட்டு இலக்கியத்தின் கொடுமுடி யாகிறது; பாரதியின் தலைசிறந்த இலக்கியப் படைப்புமாகிறது என்பர்.

தமிழ்த் திறனாய்வுத் துறையின் முன்னோடியும், சிறந்த நாட்டுப்பற்றாளருமான வ.வே.சு ஐயர், பாரதியின் கண்ணன் பாட்டை "அட்சரம் லட்சம் பெறுமான பாக்கள்! அவை மனத்தை ஈர்க்கும் மாணிக்கங்கள்" என உணர்த்தியுள்ளார். 'உருவும் உயிரும் பெற்று, நித்திய மௌனத்துடன் மனித உள்ளங்களுடன் ஒட்டி உறவாடும் பாத்திரமாகக் கண்ணன் அமைந்துள்ளான்' எனக் கண்ணன் பாட்டைக் கைலாசபதி போற்றுகின்றார்.

பாரததேச நிலையைப் பாரதக் கதையின் உள்ளீடாக இழையோடவிட்ட 'பாஞ்சாலி சபதம்' தெறிக்கும் கனல் போலமைந்து உணர்ச்சியைக் கொட்டுகிறது. இறுதியில்

பாண்டவரும் பாஞ்சாலியும் கூறும் சபத மொழிகளில் நாட்டு விடுதலைக்காக மக்கள் கூற வேண்டிய உறுதி மொழி உள்ளது என்பார் மு. வரதராசனார் (தமிழ் இலக்கிய வரலாறு ப. 346). உரிமையின் வேட்கையை உணர்ச்சியோடு பாடிய இப்பாடலில் எந்தப் பாரத இலக்கியமும் குறைத்து மதிப்பிடாத தருமனை, துணிவுடன் வீமன் எதிர்த்துரைப்பதாக,

**இது பொறுப்பதில்லை – தம்பி, எரிதழல் கொண்டுவா**
**கதிரை வைத்திழந்தான் – அண்ணன் கையை எரித்திடுவோம்**

எனக் காட்டுகிறார். (ச.வே. சுப்பிரமணியன், தமிழ் இலக்கிய வரலாறு, ப. 350) நம் நாட்டின் பழைய கதையினைப் படித்தும், கேட்டும் அந்த உணர்வில் மூழ்கித் திளைப்பவர் நம் மக்கள். எனவே, அந்தப் பழைய கதையினால் அவர்களுடைய உள்ளத்தை ஈர்ப்பது எளிது. அந்தப் பழைய கதையில் மரபு வழியாகப் போற்றப்படும் தலைவனிடம் உள்ள குற்றங்களைச் சுட்டி, தலைமகனுடைய தவறுதலாலேயே தீமைகள் உண்டாகக் கூடிய சூழ்நிலை உண்டாயிற்று என்பதை மக்கள் மனத்தில் ஆழப் பதியுமாறு செய்ய இயலும் என்று பாரதியார் நம்பினார். எனவே பாஞ்சாலியின் பழைய கதையைப் புதிய வடிவில் தருவதற்கு நம் கவிஞர் முனைந்தார் என இதற்குக் கா. மீனாட்சிசுந்தரம் (பாரதி பாநிலை, பக். 25-26) விளக்கமளிக்கிறார். இவ் இலட்சிக்கவி நாட்டைத் தாயாக, தந்தையாக உருவகித்துத் தெய்வமாக மக்கள் உள்ளத்தில் பதிந்திடச் செய்த முதல்வர் ஆவார்.

பல்வேறு பா வகைகளையும், வடிவ வகைகளையும் கையாண்ட பாரதி மிகுதியாகப் பயன்படுத்தியிருப்பது சிந்து வடிவங்களே. இதனாலேயே சிந்துக்குத் தந்தையாகிறான். இவரது 1691 பாடல்களில் 716 சிந்து வடிவங்கள் என்று த. கோவேந்தன் கணக்கிட்டுள்ளார்.

தமிழ்ப்பற்று, நாட்டுப்பற்று, சமுதாயப்பற்று, மனித நேயம், உலகளாவிய பார்வை, சிறுமை கண்டு பொங்குதல், நல்லனவற்றை வாழ்த்தி வரவேற்றல், நல்லாரைச் சிறப்பித்தல், நலிந்தோரைத் தாங்குதல், நல்வழிப்படுத்தல், எதிலும் நுண்மாண் நுழைபுலங் காட்டல், தொலைநோக்கு தருதல், உள்ளத்து உணர்ச்சியை அப்படியே வெளிக்கொணருதல், புதுமை காண்பதில் மாளாக்காதல், வேண்டாத பழமையைத் துணிந்து எதிர்த்தல், அறிவியலையும் ஆன்மீகத்தையும் இணைத்துப் புத்துலகம் காணல் எனப் பலவாக அமையும் பாரதியின் பாடுபொருள் அவரைப் பாட்டுக்கொரு புலவனாக, ஞானக்

கவியாக, உலக மகாகவியாக உயரச் செய்துள்ளது. நெஞ்சில் துணிவும், நேர்மைத் திறனும், நிலத்தில் யாருக்கும் அஞ்சாத நேர் கொண்ட பார்வையும் பெற்ற உன்னதக் கவி. அவர் எண்ணம், சொல், செயல், எழுத்து ஆகியவற்றில் முரண்பாடற்றவர். தம் பாடல்களால் தமிழரை, தமிழைத் தலைநிமிரச் செய்தவர். இருபதாம் நூற்றாண்டிற்கு மட்டுமின்றி இவ்வூழிக்கே மாபெருங் கவிஞர் எனும் பாராட்டிற்கும் மிகப் பொருத்தமானவர். எனவே யுகக் கவிஞர் என்றும் போற்றப்படுகின்றார்.

'ஊருக்கு நல்லது சொல்வேன் - எனக் குண்மை தெரிந்தது சொல்வேன்' என்பது பாரதியின் கவிதைத் தத்துவம்.

**உயிர்களிடத்திலன்பு வேணும் - தெய்வம்**
**உண்மை யென்று தானறிதல் வேணும்**
**வயிர முடைய நெஞ்சு வேணும் - இது**
**வாழும் முறைமையடி பாப்பா**

என்பது அவரின் வாழ்வியற் கொள்கை. 'பெண்ணுக்கு ஞானத்தை வைத்தான் - புவி பேணி வளர்த்திடு மீசன்', மண்ணுக்குள்ளே சில மூடர் - நல்ல மாதரறிவைக் கெடுத்தார்' என்பதில் உறுதியானவர். எனவே தான் புதுமைப் பெண்ணைப் படைத்துக் களித்தார். 'காக்கை குருவி யெங்கள் சாதி' எனப் பாடிக் களிப்புற்ற பாரதி, 'எல்லாருமோர் குலம் எல்லாரு மோரினம் - எல்லாரும் இந்திய மக்கள் எல்லாருமோர் நிறை, எல்லாரு மோர் விலை, எல்லாரும் இந்நாட்டு மன்னர்' எனப் பொதுமை காண விழைந்தார். 'காணி நிலம் வேண்டும் - பராசக்தி, காணி நிலம் வேண்டும்' எனக் கற்பனை உலகில் மிதந்தாலும்,

**தானம் வேள்வி தவங்கல்வி யாவும்**
**தரணி மீதினிலை பெறச் செய்வேன்**
**வான மூன்று மழைதரச் செய்வேன்**
**மாறிலாத வளங்கள் கொடுப்பேன்**
**மானம் வீரியம் ஆண்மை நன்னேர்மை**
**வண்மை யாவும் வழங்குறச் செய்வேன்**
**ஞானம் ஓங்கி வளர்ந்திடச் செய்வேன்**
**நான் விரும்பிய காளி தருவாள்**

என நிலவுலக மேன்மையையே சிந்தித்தார். எனவேதான் அவரால் 'ஆடுவோமே பள்ளு பாடுவோமே ஆனந்த சுதந்திரம் அடைந்து விட்டோமென்றாடுவோமே' என்று முன்னுணர்ந்து கூத்தாட முடிந்தது.

'இந்திய வரலாற்றில் முதன்முதலில் தடை செய்யப்பட்ட கவிதை பாரதியின் கனவு, சிறுகதை ஆறிலொரு பங்கு; பாரதி காலத்தில் தீவிரவாத தேசியக் கவிஞர் இந்தியாவில் பாரதி மட்டுமே' எனும் பெ.சு. மணியின் கூற்றும் இங்குச் சுட்டத்தக்கது.

இன்று செழித்தோங்கித் தமிழ் இலக்கிய வரலாற்றில் தன் ஆளுமையை நிலைநிறுத்தியுள்ள புதுக்கவிதைக்கு வசன கவிதையெனத் தோற்றுவாய் தந்தருளியவர் பாரதி. இவரது மொழிபெயர்ப்புப் பணியும் பரந்து விரிந்தது. 'பிற நாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள் தமிழ் மொழியிற் பெயர்த்தல் வேண்டும், ......... திறமான புலமையெனில் வெளிநாட்டார் அதை வணக்கம் செய்தல் வேண்டும்' என வலியுறுத்திய பாரதி சொல்லோடு - அறிவுறுத்தலோடு நின்று விடாது செயற்படுத்தியும் காட்டி யுள்ளார். நம்மாழ்வார், நாச்சியார், அருணகிரிநாதர் ஆகிய வருடைய சில பாடல்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துத் தமிழைப் பிற நாட்டார் வணக்கம் செய வைத்துள்ளார். ஆசிய மொழிகளான சீன, ஜப்பானிய மொழிப் பாடல்கள்; ஐரோப்பிய மொழிகளான ஆங்கில, பிரெஞ்சு மொழிப் பாடல்கள்; இந்திய மொழிகளான சமஸ்கிருதம், வங்க மொழிப் பாடல்கள், நூல்கள் ஆகியவற்றைத் தமிழுக்குத் தந்துள்ளார்.

மூன்று பேரியக்கங்கள் பாரதியிடத்தில் இருந்தன ஒன்று தேசியம். இன்னொன்று சமுதாய அரசியல் சீர்திருத்தங்கள், மூன்றாவது அவர் குழந்தைகளுக்காக எழுதவேண்டுமென்று ஆசைப்பட்டுச் செய்த முயற்சி. இந்த மூன்று முயற்சிகள் தான் மூன்று கவிஞர்களாக வடிவெடுத்தன. குழந்தை இலக்கியக் கவிஞர் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை; பாரதியின் தேசியத் தன்மை முழுவதும் நாமக்கல் கவிஞராகக் குடிகொண்டது. சமுதாயச் சீர் திருத்த இயக்கங்களினுடைய பெரும் விசுவரூபமாகப் பாரதி தாசன் விளங்கினார். பாரதிதாசனை விடச் சிறப்பான பரம்பரை பாரதியாருக்கு உண்டு; பாரதிதாசன், கம்பதாசன், கண்ணதாசன், சுத்தானந்த பாரதி, கவிமணி, நாமக்கல்லார் எனப் பெரும் கவிஞர்களைக் கொண்டது என்று சிற்பி பால சுப்பிரமணியம் உணர்த்தியுள்ளார். (நவீனத் தமிழ் இலக்கியம் சில பார்வைகள், இரா. நஞ்சப்பன் (தொகு), வைகறை, 1997, பக். 63-64). க.த. திருநாவுக்கரசின் 'தமிழ்க் கவிதையில் பாரதியின் தாக்கம்' என்னும் நூல் இதனைச் சிறப்பாக விரித்துள்ளது. 'பாவலர் நெஞ்சில் பாரதி' எனும் தொகுப்பு நூல் (அரு. அருமைநாதன்) போல்வன தமிழகத்தில் பாரதி பெற்ற செல்வாக்கினை உள்ளங்கை நெல்லிக் கனியாக்கும்.

பாரதிபுகழ் கடல் கடந்த பெருமைக்குரியது. 'ஈழத்தில் எழுந்த தேசியப் பாடல்களை ஆராயுமிடத்து பாரதியின் தாக்கம் நமது (இலங்கை) கவிதையில் நெகிழ்ச்சியும் உருக்கமும் வேகமும் புதுமையும் ஏற்பட ஏதுவாயமைந்தது எனும் செய்தி புலப்படுகிறது. பெரிய தம்பிப்பிள்ளை, மு. செல்லையா, நல்லதம்பி சரவணபவன் ஆகியோர் பாரதியைப் பின்பற்றிப் பாடியோராவர். விபுலானந்த அடிகள், ஈழகேசரி இதழ் தொடங்கிய நா. பொன்னையா, ஆகியோர் பாரதி புகழ் பரப்பியோரில் முன்னோடிகளாவர்' எனக் கைலாசபதி கூறியுள்ளார் (பாரதியியல் பக். 227, 246).

பாரதியின் நூற்றாண்டு விழாவை ரஷ்யாவும், பாரிசும் கொண்டாடியமை சிறப்பித்துக் கூறப்பட வேண்டியதாகும். சோவியத் நாடு பிரசுரம் 'மகாகவி பாரதி பற்றிச் சோவியத் அறிஞர்கள்' எனும் நூலை அப்பொழுது வெளியிட்டுள்ளதும் குறிப்பிடற்குரியது. அலெக்ஸாந்தர் எம். துபியான்ஸ்கி எனும் ரஷ்ய அறிஞர், 'பாரதியின் கவிதைக்கலை சில கருத்துகள்' எனும் தம் கட்டுரையில் 'பாரதியின் வெறி கொண்ட தாய் பாடல் பழந்தமிழிலக்கிய மரபு வழியில் உருவான படிமத்தின் குறிப்பிட்ட கால வளர்ச்சி நிலை என்றாய்ந்துரைத்திருப்பதுடன் 1963 இல் தான் பாரதி கவிதைகள் தனியொரு நூலாக ரஷ்ய மொழியில் வெளியாயிற்று என்கிறார்.

கவிஞர், சிறுகதையாளர், இதழாளர், மொழிபெயர்ப் பாளர், விடுதலைப் போராட்ட வீரர், உரைநடையாளர், சிந்தனை யாளர், சீர்திருத்தவாதி எனப் பன்முகங் கொள்ளும் பாரதியாரின் வரலாற்றைப் பலரும் படைத்துள்ளனர். முதலில் படைத்த பெருமைக்குரியவர் கவியோகி சுத்தானந்த பாரதியார். அது முதல் இன்று சீனி. விசுவநாதன் வரை (மகாகவி பாரதி வரலாறு, 1996) பல சிறந்த நூல்கள் வெளிவந்துள்ளன. கவிஞர் வைரமுத்துவின் 'கவிராஜன் கதை' எனும் புதுக்கவிதைக் காப்பியமும் இங்குச் சுட்டற்பாலது. 'தேச பக்த சமாஜம்' என்ற பெயரில் பாரதி தொண்டர் பரம்பரையைத் தோற்றுவித்தவர் சுப்பிரமணிய சிவா. இப்பரம்பரையினரில் குறிக்கத்தக்கோர் கல்கி, சதாசிவம், மதுரை சிதம்பர பாரதி, நெல்லை சோமயாஜுலு, வத்தலகுண்டு சீனிவாச வரதன், தியாகராஜசிவம் போன்றோர். தம் உயிர் பிரியும் வேளையிலும் பாரதியின் 'என்று தணியும் எங்கள் சுதந்திர தாகம்' என்ற பாடலைப் பாட வேண்டி அதனைக் கேட்டுக் கொண்டே வ.உ.சி உயிர் துறந்ததும் எண்ணத்தக்கதாகும்.

தம்பாடல்களுக்குத் தாமே இசைக்குறிப்பு வழங்கியது போல் பாரதியார் அவற்றை வெளியிடவும் செய்துள்ளார். அவர்

முதன்முதல் வெளியிட்டது ஸ்வதேச கீதங்கள் ஆகும். பாரதியாரை முதன் முதல் தமிழ் மக்களுக்கு அறிமுகப்படுத்தியவர் பரலி. சு. நெல்லையப்பர். பாரதிக்காகவே வாழ்ந்து அவர் புகழ் பரவும் வகையில் உலக மகா கவியாக உணர்த்தியவர் வ.ரா. எட்டையபுரத்தில் பாரதி நினைவு மண்டபம் எழுப்பியவர் கல்கி. இவரே 1949 இல் சென்னையில் பாரதியார் சங்கத்தையும் தோற்றுவித்தார். வி. கிருஷ்ணசாமி ஐயர் சுதேச கீதங்களை (வந்தே மாதரம், நாட்டு வணக்கம், எங்கள் நாடு) பதினைந்தாயிரம் படிகள் வெளியிட்டு இலவசமாக மக்களுக்கு வழங்கிப் பாரதியைச் சிறப்பித்துள்ளார். 1903 இல் ஆங்கில அரசு இட்டிருந்த தடையை 1946இல் அன்றைய கல்வியமைச்சர் அவினாசிலிங்கம் செட்டியார் நீக்கினார். பின் முன்னாள் முதலமைச்சர் ஓமந்தூர் பி. ராமசாமி செட்டியார் பாரதி படைப்புகளை நாட்டுடைமையாக்கினார். பாரதி புகழ் பரப்புவதில் கல்கத்தா பாரதி தமிழ்ச்சங்கத்திற்கும் குறிப்பிடத்தக்க இடனுண்டு. தமிழக அரசு ஆண்டுதோறும் 'பாரதியார் விருதி'னைத் தமிழறிஞர் ஒருவருக்கு வழங்குகிறது. கோவைப் பல்கலைக்கழகத்திற்குப் பாரதியார் பெயர் இடப்பட்டுள்ளது. 'தாமரை' திங்களிதழ் பாரதி திறனாய்வியலுக்கு ஆற்றும் தொண்டு சிறப்பிக்கத்தக்கதாகும். எனினும் பாரதிக்குத் தரப்பட வேண்டிய முதல் மரியாதையை, முன்னுரிமையைத் தமிழகம் வழங்கவில்லை. அவரது கருத்துகளும், பணிகளும் முழுமையாகத் தமிழரிடையே பரவவில்லை. அவரை மக்களிடையே முன்னெடுத்துச் செல்வதில் பொதுவுடைமையியக்கம் காட்டும் ஆர்வமும் வேகமும் அவர் பெருமையை மங்கவிடாது காக்கின்றன. அண்மையில் வெளிவந்த 'பாரதி' திரைப்படமும் இங்குச் சுட்டப்பட வேண்டியதாகும். பன்முக ஆளுமை படைத்த பாரதியை ஒருசில கோணங்களில் மட்டுமே காட்டிய குறைபாடுடைய தெனினும் சரியான நேரத்தில் தமிழருக்குப் பாரதி என்ற உண்மைக்கவியை, உணர்ச்சிக் கவியை இனங்காட்டிய பெருமையுடையதாகும்.

'பாரதி' போன்ற ஒரு யுகக்கவிஞனின் எழுத்துகள் பலநிலைகளில் பயன்படுத்தப்படுவன. எனவே பலவகையான பதிப்புகள் வேண்டப்படும். ஆராய்ச்சியாளருக்கானக் கால அடைவுப் பதிப்பு, பாடபேத வளப் பதிப்பு வேண்டும்; பொருளடிப்படையில் பதிப்புகள் வேண்டும். இலக்கியச் சுவைஞருக்குத் தேர்ந்தெடுத்த பதிப்பு (Selected works) வேண்டும். பொதுவாக மக்களுக்கு ஏற்றவாறு பொருள் எளிதில் விளங்கும் படியான பதிப்பும் வேண்டும்' என்பர் க. கைலாசபதி (முன்

சுட்டியது பக். 208 209). இதனை நிறைவேற்றும் வகையில் இப்பல விதமான பதிப்புகளும் இன்றுள. காலவரிசை மற்றும் பாட வேறுபாடுகளுடன் கூடியதான ஆய்வுப் பதிப்பைத் தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகம் ம.ரா.போ. குருசாமியைப் பதிப்பாசிரியராகக் கொண்டு வெளியிட்டுள்ளது. பொருளடிப்படைப் பதிப்புகளைத் தந்ததில் பெரியசாமி தூரன் முன்னிற்கிறார். பொதுமக்களுக்கான மலிவுப் பதிப்புகள் பலவாக பெரும்பாலும், அனைத்துத் தமிழ்ப் பதிப்பகங்களாலும் வெளியிடப்பட்டுள்ளன எனலாம். பாரதியின் பாடல்களை மொழிபெயர்ப்பதில் பிரேமா நந்தகுமார், டி.என். ராமசந்திரன் போன்றோர் முன்னிற்கின்றனர்.

பாரதியின் நூற்றாண்டு, தமிழரிடையே பாரதியை வெளிப்படுத்துவதில் ஓரளவு வெற்றி கண்டது எனலாம். ஆனந்த விகடன், பாரதியின் பாடல் வரிகளுக்கு ஏற்ப 'பாரதிச் சிறுகதைகள்' தந்து கொண்டாடியது குறிப்பிடத்தகுந்தது. (செத்த பிணமும் உயிர்த்தெழும்; அடிமைப்பட்ட தேசம்) பாரதி ஆய்வாளர் பட்டியல் பெ. தூரன், ப. ஜீவானந்தம், ம.பொ. சிவஞானம், தா. கோவேந்தன், பெ.சு. மணி, சீனி. விசுவநாதன், ரா.அ. பத்மநாபன் என நீண்டது.

தமிழறிஞர் மட்டுமன்றி இந்தியாவின் அரசியல் தலைவர், இலக்கியவாதிகள் பலரும் பாரதியைப் போற்றிப் பாராட்டியுள்ளனர். **காந்தி:** இவர் மகாகவி. இந்த நாட்டின் செல்வம். இவரைப் பத்திரமாகப் போற்ற வேண்டும்; **வினோபா:** இந்திய தேசிய கவிஞரிடையே திலகம் போன்றவர்; **அரவிந்தர்:** இந்திய தத்துவங்களை அனுபவத்தால் உணர்ந்த அதிமேதை; **ராஜாஜி:** மாகாண மொழிகளில் அதாவது வங்காளி, தெலுங்கு, குஜராத்தி, மராத்தி போன்றவற்றில் சென்ற முந்நூறு ஆண்டுகளிலே பாரதி போன்ற கவி பிறக்கவில்லை, தமிழ்நாட்டில் இவர் திருவவதாரம் செய்தது தமிழர்களுக்குக் கிடைத்த பாக்கியம்; **மோகன்லால் சுகாதியா:** தேசிய ஒருமைப்பாடு என்ற தொடர் வழக்கில் வருமுன்பே இக்கோட்பாடு சுப்பிரமணிய பாரதியாரால் தெளிவாகவும் விளக்கமாகவும் கூறப்பட்டுள்ளது; **சர்தார் உஜ்ஜல் சிங்:** நான் ஓர் இந்தியன் என்ற முறையில் தீர்க்க தரிசனத்துடன் இந்திய விடுதலைக்காகக் குரல் கொடுத்த பாரதியை எங்கள் இந்திய நாட்டின் தேசிய கவிஞர் என்று சொல்வதில் பெருமை அடைகிறேன்; **சரோஜினி நாயுடு:** இனம் மொழி நாடு எனும் வேறுபாடுகளைக் கடந்து உலக நன்மைக்காக அவதாரம் செய்த மகான்களின் வரிசையைச் சேர்ந்தவர். **ஹரீந்திரநாத் சட்டோபாத்யாயா:**

கால எல்லைகளைத் தாண்டிப் புதிய புதிய பொருளைத் தரும் உன்னுடைய ஜீவகீதம் எங்களிடையே இன்னும் ஒலித்துக் கொண்டே இருக்கிறது, பாரதி! நீ இன்னும் இறக்கவில்லை, நீ வாழ்ந்து கொண்டிருக்கிறாய் - மக்களோடு மக்களாக, தமிழோடு தமிழாக; **ஜி. சங்கர் குரூப்:** உலக இலக்கியத்தில் யாரும் பாரதியை அசட்டை செய்து விட முடியாது. அவர் ஒரு யுகக் கவிஞர்; **ஹரிஹர சர்மா:** ஸ்ரீ பாரதியார் தோகோபநிஷத்தெனக் கருதப்படும் தம்முடைய வீறுடைய பாடல்களால் தமிழகத்தில் புதுயுகத்தைப் படைத்திருக்கிறார்; **எச். ஹசின்ஸ்:** அழகின் தூய வாய்மையான வடிவத்தைப் பாரதி கவிதையிலே காண இயலும்; **நீதிபதி பின்ஹே:** பாரதியாரின் பாட்டைக் கேட்டால் ஐந்தே நிமிடங்களில் விடுதலை பெறும் எனும் இவை வெறும் பாராட்டுப் பத்திரங்கள் அல்ல; பாரதியாரின் படைப்பிற்கான நேர்மையான விமர்சனங்களும் ஆகும்.

**நாமக்கல் கவிஞர் வெ. இராமலிங்கம் பிள்ளை (1888 – 1972)**

மோகனூரில் ஏட்டு வெங்கட்ராம பிள்ளைக்கும் அம்மணி அம்மாளுக்கும் 19-10-1888 அன்று பிறந்த இவர் சிறந்த ஓவியரும் ஆவார். விடுதலை இயக்கக் கவிஞரான இவர் காந்தீயத்தில் ஆழ்ந்த பற்றுக் கொண்டவர்; தம் கவிதைகளில் அதனைப் பரப்பியவர். 'தமிழன் என்று சொல்லடா, தலை நிமிர்ந்து நில்லடா' என்றுரைத்துத் தமிழனை வீறுகொண்டெழ வேண்டியவர். 'கத்தியின்றி ரத்தமின்றி யுத்தமொன்று வருகுது' என்ற பாடல் வழி தேசியக் கவிஞராகப் புகழ் பெற்றவர். உப்பு சத்தியாக்கிரகத்தில் பங்கேற்ற தேசியத் தொண்டர்கள் இப்பாடலைப் பாடிச் சென்றது குறிப்பிடத்தக்கது. 'தம்மரசைப் பிறர் ஆளவிட்டுவிட்டுத் தாம் வணங்கி கைகட்டி நின்ற பேரும்' என்ற பாடலைப் பாடிப் பாரதியாரின் பாராட்டைப் பெற்றவர். 1922இல் 'வந்தே மாதரம் தேசியப் பாட்டுக்கள்' எனும் முதல் கவிதை நூல் வெளிவந்துள்ளது. தொடர்ந்து தேச பக்திப் பாடல்கள், காந்தி அஞ்சலி, தமிழன் இதயம், தமிழ்த்தேன், கீர்த்தனைகள், மலர்ந்த பூக்கள்' என வெளிவந்தன. முழுமையான கவிதைத் தொகுதி 'நாமக்கல் கவிஞரின் பாடல்கள்' என 1960இல் வெளிவந்துள்ளது. அவளும் அவனும் எனும் கதைப்பாட்டும் படைத்துள்ளார்.

தன் வரலாற்றை 'என் கதை' (1947) என எழுதியுள்ளார். மலைக்கள்ளன் (1942) முதலான ஏழு புதினங்களும் மாமன் மகள், (1954) அரவணை சுந்தரம் (1940) என இரு நாடகங்களும்

தந்துள்ளார். ஆரியராவது திராவிடராவது (1947), திருவள்ளுவரும் பரிமேலழகரும் (1956), திருவள்ளுவர் இன்பம் (1956), காந்தியடிகளும் கம்பநாட்டாழ்வாரும், (1964) நான் கண்ட வ.உ. சிதம்பரம் பிள்ளை (இ.ப. 1965) என உரைநடை நூல்களும் யாத்துள்ளார். திருக்குறளுக்குப் புத்துரை (1954) கண்டதும் கூறத்தக்கது.

இவரது கவிதை வாழ்வு முதற்கண் நாடகங்களில் தொடங்கியுள்ளது. விடுதலை இயக்கப் பாடல்களில் பாரதியாரை அடியொற்றியுள்ளார். தம் கவிதைகளில் 1933 ஆம் ஆண்டுவரை நிகழ்ந்த விடுதலைப் போராட்ட நிகழ்ச்சிகளில் இருபத்தொன்பதைப் பதிவு செய்துள்ளார். (கஸ்தூரி நாகராஜன், நாமக்கல் கவிஞர் படைப்புகள், 1990, பக். 41-42) 13.4.19 அன்று நடந்த பஞ்சாப் ஜாலியன் வாலாபாக் படுகொலையை,

**எட்டிய மட்டும் சுட்டெறிந் தையோ**
**பெண்டு பிள்ளைகளைப் பெரியரைச் சிறியரை**
**ஒண்டிய பேரையும் ஓடிய பேரையும்**
**கண்டவர் கேட்டவர் கலங்கிடுமாறு**
**குண்டுள மட்டும் கொன்றன ரந்தோ**

என, 'பஞ்சாப் துயர முறையீடாக' வடித்துள்ளார். அன்றைய தமிழ்க் கவிஞர்களில் காந்தியடிகளுக்கும், அவரது கொள்கை களுக்கும் மிகப் பெரியப் பரப்பாளராக இவர் அமைகிறார். பிற விடுதலை வீரர் (இராஜாஜி, திலகர்.......) பலர் மீதும் புகழ்ப் பாக்கள் புனைந்துள்ளார். விடுதலை வேட்கையும் நாட்டுப்பற்றும் இவர் பாடல்களில் மலிந்துள்ளன.

பாரதியைத் தம் ஆசானாகக் கொண்டுள்ள இவர் இளங்கோவடிகள், கம்பன், வள்ளுவர், எனப் பழந்தமிழ்ப் புலவர் களுடன் பாரதியார், கவிமணி, பாரதிதாசன், உ.வே.சா, யோகி சுத்தானந்த பாரதியார் ஆகிய தம் சமகாலப் புலவரையும் அறிஞரையும் போற்றியுள்ளார். தமிழ்மொழிப் பற்றிலும் தாம் யாருக்கும் சளைத்தவரல்ல என்பதை உணர்த்தும் கவிஞர், சுயமரியாதையியக்கத்தாரின் மொழிக் கொள்கையையும், ஆங்கில ஆதிக்கத்தையும் எதிர்த்துள்ளார். தமிழ் வழிக் கல்விக்கும், அது ஆட்சி மொழியாவதற்கும் விழைவதுடன் வளர்வதற்கும் உரிய தம் கருத்துகளையும் பதிவு செய்துள்ளார் (மேற்படி ப. 62-64) தமிழிசை இயக்க ஆதரவாளராகச் செயல்பட்டுள்ளார். பொதுவாகத் தம் காலத்தவரான பாரதிதாசனின் கொள்கை களினின்றும் முழு நிலையில் முரண் காட்டுபவராகவே அமைகிறார். காந்தீயத்தால் மட்டுமே சிறந்த சமுதாயத்தை

உருவாக்க முடியும் என்பதில் ஆழ்ந்த நம்பிக்கை கொண்டுள்ளார். இவரது கவிதைகள் பெரும்பான்மையும் காந்தீயப் பறைசாற்றலாகவும், கவித்துவம் நலிந்த எளிய நடையாகவும் அமைந்ததால் பாரதி, பாரதிதாசன் போன்று பெரு வெற்றி பெற முடியவில்லை. எனினும் அன்று தம் கவிதைகளால் விடுதலையியக்கத்திற்கு எழுச்சியூட்டியவர்; நாட்டுப்பற்றையும் மொழிப்பற்றையும் விதைத்தவர்; வாழ்க்கை வரலாறு, திறனாய்வு போன்ற பலதுறைப் படைப்புகளை நல்கித் தமிழ்ப்பணி புரிந்தவர் என்பன போன்ற காரணங்களால் இருபதாம் நூற்றாண்டுக் கவிஞருள் குறிப்பிடத்தக்கவராகிறார்.

1949 ஆம் ஆண்டு தமிழக ஆஸ்தானக் கவிஞர், 1953 இல் சாகித்திய அக்காதெமி உறுப்பினர்; 1954 இல் அதன் நிர்வாக உறுப்பினர், 1956, 1962 ஆம் ஆண்டுத் தேர்தல்களில் தமிழகச் சட்ட மன்ற மேலவை உறுப்பினர்; 1970 ஆண்டு இந்திய அரசின் 'பத்ம பூஷன்' விருது பெற்றவர் எனப் பல சிறப்புகளையும் இவர் பெற்றுள்ளார்.

### பாரதிதாசன் (1891 – 1964)

கனக சுப்புரத்தினம் என்ற இயற்பெயருடைய இப் புதுச்சேரி ஈன்ற புரட்சிக் கவியின் பெற்றோர் கனக சபை - இலட்சுமியம்மாள் ஆவர். 29-4-1891 அன்று பிறந்த இவர் தமது பதின்மூன்றாம் வயதில் முதல் பாடலைப் பாடினார். அது முதல் இலக்கிய உலகில் தம் பன்முகத் திறமையைத் தம் வாழ்நாளின் இறுதி வரை (18-4-1964) வெளிப்படுத்திக் கொண்டே இருந்தார். இவரது தமிழ்ப்பற்றும் தன்மான (சுயமரியாதை) இயக்கப் பற்றும் இவருக்குப் பலத்த புகழையும், பரம்பரையையும் பெற்றுத் தந்தன. பொதுவுடைமைக் கொள்கையில் நம்பிக்கையும் ஈடுபாடும் காட்டிய இவர் திராவிட இயக்கக் கவிஞரின் முன்னோடியாவார். இவரது பாடல்களின் பரவலுக்கும், புகழ்ச்சிக்கும் இவை பெருங் காரணமாகின்றன.

சுமார் பத்தாண்டுகள் பாரதியாருடன் நெருங்கிப் பழகிய பாரதிதாசன், 'பாரதியிடத்தில் பார்ப்பனத்தன்மை எள்ளளவும் கிடையாது. பார்ப்பானை ஐயரென்ற காலமும் போச்சே, என்று பெரியார்க்கு முன்பே முரசு கொட்டிச் சொன்னவன் பாரதி. நான் புரட்சிக் கவிதைகள் எழுதக் கற்றுக் கொண்டதே அவரிடம் தான். என்னை முதன் முதலில் மனமுவந்து பாராட்டியவரும் அவரே. என் கவிதையை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து ஆங்கில நாளேட்டில் வெளிவர ஏற்பாடு செய்தார். இந்தக் காலத்தில்

எந்தப் பார்ப்பான் நமக்கு இப்படி உதவி செய்வான்? அதனால் தான், நான் பாரதியாரைப் போற்றுகிறேன், பாரதிதாசன் என்று புனை பெயரும் வைத்துக் கொண்டேன்' என்று தாம் அவர் தாசனான வரலாற்றைச் சுட்டுகிறார் (மா. அண்ணாதுரை, பாவேந்தர் பாரதிதாசன், பூங்கொடி வெளியீடு, ஈரோடு; 1991, பக். 143-144).

இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்க் கவிஞரில் பாரதிக்கு அடுத்து வைத்துச் சிறப்பிக்கப்படும் பெருமைக்குரிய இவர் முதலில் தம்மைத் தம் ஆசான் போன்று தேசியக் கவியாக, இறை நம்பிக்கை உடையவராகவே வெளிப்படுத்தியுள்ளார். இவரது நூலான 'மயிலம் ஸ்ரீ சுப்பிரமணியர் துதியமுது' தம்மைத் தலைவியாகவும் முருகப்பெருமானைத் தலைவனாகவும் கொண்டு பாடியதாகும். மயிலம் முருகக் கடவுள்மீது வண்ணப்பாட்டும், பஞ்சரத்நமும் பாடியுள்ளார். காந்தியடிகளின் ஒத்துழையாமை இயக்கக் கருத்துகளையும், கதர்க் கொள்கையையும் சிறப்பித்து இயற்றப்பட்ட நூல் 'கதர் இராட்டினப் பாட்டு' (1930) ஆகும். இவற்றின் பின் கவிஞர் தன்மான இயக்கக் கவிஞராக, பொது வுடைமையாளராக, ஆரிய, சமய எதிர்ப்பாளராகக் காட்சி யளிக்கிறார். பாடு பொருளிலும் சமயக் கொள்கையிலும் கவிஞர் மாற்றம் காட்டிடினும் எப்பொழுதும் மரபுக்கவிதைக்கே இடமளித்துள்ளார்.

தனிப்பாடல்கள், கதைப்பாடல்கள், நாடகங்கள், உரைநடை எனப் பல வடிவங்களையும் இவர் தம் கொள்கைப் பரப்புதலுக்குக் கையாண்டுள்ளார். இவர் பாடல்கள், பாரதிதாசன் கவிதைத் தொகுதிகள் நான்காகவும், பாரதிதாசன் பன்மணித் திரளாகவும் வெளிவந்துள்ளன. பல தனிப்பாடல்களை இசைவல்ல பாரதிதாசன் இசைப்பாடல்களாகவும் தாமே இராக, தாளமிட்டுப் பாடியுள்ளார். அவை 'இசையமுது' என இரு தொகுதிகளாகியுள்ளன (1947, 1952). பாரதிதாசனுக்குப் பெருமை தேடித்தந்த நூல்களுள் ஒன்றான அழகின் சிரிப்பு இயற்கையின் பால் கவிஞருக்குள்ள ஈடுபாட்டைப் புலப்படுத்தும். அக, புறப்பாடல்களைத் தழுவிப் பாடப்பட்டது 'தேனருவி'யாகும் (1956).

குமரகுருபரர் வாழ்க்கை வரலாற்றை உள்ளடக்கிய எதிர்பாராத முத்தம் (1938), பெண்மையைப் பெருமைப்படுத்த வேண்டும் என்ற நோக்கிலும், முதியோர் காதலுக்குச் சிறப்பளித்தும் படைக்கப்பட்ட குடும்பவிளக்கு, பொதுவுடைமைச் சமுதாயத்தை உருவாக்கிக் காட்டிய பாண்டியன் பரிசு (1943); கல்வியின்

பெருமையை உணர்த்தும் இருண்ட வீடு (1948), நாட்டு விடுதலைக்காகக் காதலைத் தியாகம் செய்யும் 'காதலா? கடமையா?' (1948), செஞ்சி மன்னன் தேசிங்கைக் கொடியவனாகக் காட்டும் 'தமிழச்சியின் கத்தி', விடுதலை இந்தியா அமைய வேண்டிய முறை காட்டும் 'கடல் மேற் குமிழிகள்' (1948) என்பன இவரின் பேர் சொல்லும் கதைப் பாடல்களாகும். சிலப்பதிகாரத்தையும், மணிமேகலையையும் ஆரியச் சார்பின்றி முழுக்க முழுக்கத் தமிழ் மணத்துடன் படைக்க விரும்பி 280 எண்சீர் விருத்தங்களில் 'கண்ணகி புரட்சிக் காப்பிய'த்தையும் (1962), 288 வெண்பாக்களில் 'மணிமேகலை வெண்பா'வையும் (1962) தந்துள்ளார். தமிழியக்கம் (1945), திராவிடர் புரட்சித் திருமணத்திட்டம், பாரதிதாசன் ஆத்திசூடி (1948), பாரதிதாசன் இளையார் ஆத்திசூடி (1967) என்பனவும் இவரின் குறிப்பிடத்தக்க வெளியீடுகளாம்.

கொய்யாக்கனி, சத்திமுத்தப்புலவர், வீட்டுக்கோழியும் நாட்டுக்கோழியும், காட்டுக் குறத்தி நாட்டுப்புறத்தான் கலப்புத் திருமணம் போன்ற எழு கவிதை நாடகங்களையும் படைத் துள்ளார். இவை தவிர 27 உரைநடை நாடகங்களை வடித்திருப்பதும் குறிப்பிடத்தக்கது. இரணியன் அல்லது இணையற்ற வீரன், படித்த பெண்கள், சேரதாண்டவம், சௌமியன், கழைக்கூத்தியின் காதல், நல்லமுத்துகதை, அமைதி என அப்பட்டியல் நீளுகிறது. உரைநடை நாடகமான பிசிராந்தையார் இவருக்குச் சாகித்திய அக்காதெமி பரிசினைப் (1970) பெற்றுத் தந்தது. பழந்தமிழ் நூல்களில் இவருக்குள்ள பற்றையும் ஈடுபாட்டையும் இது போன்ற நூல்கள் காட்டுகின்றன.

புதுவை முரசு, ஸ்ரீ சுப்ரமண்ய பாரதி கவிதா மண்டலம், குயில் முதலான இதழ்களை நடத்திய பாரதிதாசன் தம் படைப்புகளை முதலில் இவற்றிலும் பிற ஏடுகளிலும் வெளியிட்டு அதன் பின் நூலாக்கம் கண்டுள்ளார் என்பதும் சுட்டத்தக்கது. நாடோடி, வழிப்போக்கன், அடுத்த வீட்டுக்காரன் கிறுக்கன், கிண்டற்காரன், அரசு, சுயமரியாதைக்காரன் முதலான புனைபெயர்களும் இவர்க்குண்டு. இவரது படைப்புகள் பலவகைப்படினும் அவை தமிழ்மொழி, தமிழினம், இன ஒற்றுமை, புராண எதிர்ப்பு, ஆரிய எதிர்ப்பு, பொதுவுடைமைக் கொள்கை, பெண் கல்வி, பெண்ணுரிமை, பகுத்தறிவுக் கொள்கை, சாதி சமய ஒழிப்பு, மூட நம்பிக்கை எதிர்ப்பு, குடியாட்சி எனும் பொருண்மைகளை வலியுறுத்துவனவாக அமைந்துள்ளன.

**செந்தமிழே உயிரே நறுந்தேனே**
**செயலினை மூச்சினை உனக்களித்தேனே**
**நைந்தா யெனில் நைந்து போகும் என் வாழ்வு**
**நன்னிலை உனக்கெனில் எனக்குந்தானே**

என்று தமிழ்மீது தனக்குள்ள அளப்பரிய பற்றினை இயம்பும் கவிஞர் அதனை வளப்படுத்தற்கு,

**உலகியலின் அடங்கலுக்கும் துறைதோறும் நூற்கள்**
**ஒருத்தர் தயை இல்லாமல் ஊரறியும் தமிழில்**
**சலசலவென எவ்விடத்தும் பாய்ச்சிவிட வேண்டும்**
**தமிழொளியை மதங்களிலே சாய்க்காமை வேண்டும்**
**இலவச நூற் கழகங்கள் எவ்விடத்தும் வேண்டும்**
**எங்கள் தமிழ் உயர்வென்று நாம் சொல்லிச் சொல்லித்**
**தலைமுறைகள் பல கழித்தோம்; குறை களைந்தோமில்லை**

என்று வழிக்காட்டியிருப்பது பின்பற்ற வேண்டியதாம். இவரது படைப்புகளில் புலப்படும் தமிழ்ப்பற்று, 'பாரதிதாசன் தமிழுணர்வு' (அன்னிதாமசு, உலகத் தமிழ்க் கல்வி இயக்கம், தமிழூர், 1995) எனும் நூலில் விரித்துரைக்கப்பட்டுள்ளது. கவிஞரிடையே இயல்பாக ஊறியிருந்த தமிழ்ப்பற்றும், அன்றைய இந்தி எதிர்ப்பு வேகமும் அவரது தமிழ் பற்றிய பாடல்களுக்குக் காரணமாகின்றன. இளங்கோ, கம்பர், ஞானசம்பந்தர், குமர குருபரர், தண்டபாணி சுவாமிகள் என இவர்க்கு முன்பே தமிழ்ப் பற்றில் தோய்ந்த தமிழ்ப்புலவர் தோன்றியிருப்பினும் தமிழைப் பாடியதில் இவர்க்கு ஈடுயிணையில்லை என்பதே அறிஞர் முடிபு.

தேசியக் கவிஞனாக முளைவிட்ட போதிலும் தமிழின உணர்வு மீதூர்ந்த தன்மையால் தமிழும் தமிழகமும் இவர் பாடல்களில் முன்னிற்க தொடங்கிப் பின் அவையே எல்லாம் என்ற நிலையாயிற்று. அன்றைய அரசு மற்றும் சமூகச் சூழல் சமுதாய விழிப்புணர்ச்சி மற்றும் சமுதாய முன்னேற்றத்தின் இன்றியமையாமையை எதிர்நோக்கியிருந்ததால் அவற்றையே தம் பாடற் பொருண்மையாக்கிக் கொண்டார். இளைஞர்க்குப் புத்துணர்ச்சியும், புத்தெழுச்சியும் ஊட்டினார். 'மன்னிய திராவிடர்க்கு மதமில்லை, சாதியில்லை' என்ற கருத்துடையவராதலின்

**மிக்குயர்ந்த சாதி கீழ்ச்சாதி என்னும்**
**வேற்றுமைகள் தமிழ்க்கில்லை, தமிழர்க்கில்லை**
**பொய்க்கூற்றே, சாதி எனல் ஆரியச் சொல்**
**புறநஞ்சு! பொன்விலங்கு! பகையின் ஈட்டி**

என மொழிகிறார். கடவுளின் பெயரால் பலியிடுதலைக் கலப்படமற்ற கயமையாகும் எனக் கனல்கின்றார். பெண் முன்னேற்றமே நாட்டின் முன்னேற்றமாகும் என்பதை வலியுறுத்துவதற்காக, 'கல்வி இல்லாத பெண்கள் களர்நிலம்; அந்நிலத்தில் புல் விளைந்திடலாம், நல்ல புதல்வர் விளைதல் இல்லை' என்றுரைத்துப் பெண் கல்வியை வேண்டுவது அமைகிறது.

**பெண்ணுக்குப் பேச்சுரிமை வேண்டாமென்கின்றீரா**
**மண்ணுக்கும் கேடாய் மதித்தீரா பெண்ணினத்தை**
**பெண்ணடிமை தீருமட்டும் பேசும் திருநாட்டு**
**மண்ணடிமை தீர்ந்து வருதல் முயற்கொம்பே**
**ஊமைஎன்று பெண்ணை உரைக்கு மட்டும் உள்ளடங்கும்**
**ஆமை நிலைமைதான் ஆடவர்க்கு உண்டு**
**புலன் அற்ற பேதையாய்ப் பெண்களைச் செய்தால் அந்**
**நிலம் விளைந்த பைங்கூழ் நிலைமையும் அம்மட்டே**

என்று பெண் விடுதலையை வலியுறுத்தியுள்ளார். 'வாடாத பூப்போன்ற மங்கை நல்லாள் மணவாளன் இறந்தால் பின் மணத்தல் தீதோ? பாடாத தேனீக்கள், உலவாத் தென்றல், பசியாத நல்வயிறு பார்த்ததுண்டோ?' என விதவைத் திருமணத்திற்கு வழிகாட்டுகிறார்.

மூடப்பழக்க வழக்க ஒழிப்பு, தன் மானத் (சுயமரியாதை) திருமணங்கள், கலப்புத் திருமணம் எனச் சமூகச் சீர்திருத்தத்திற்குத் தம் பாடல்கள்வழிப் போராடும் கவிஞர், பொதுவுடைமைக் கொள்கைக்குத் தம்படைப்புகளில் பேரிடம் கொடுத்துள்ளார். இதற்காகத் தொழிலாளர் நலன் வேண்டும் பாடல்களும் பல படைத்துள்ளார். இவர் காணும் புத்துலகு,

**மதத்தினைக் கொன்று போடு**
**சாதியை மனத்தில் வையேல்**
**எது பிறர்க்கும் தீங்காமோ**
**அதனை நீ அகற்ற வேண்டும்**
**புதுவினை செய்க அஃது**
**பொதுநலம் ஆதல் வேண்டும்**
**இது செய்க போர்கள் இல்லை**
**இன்ப நல்லுலகைக் காண்பாய்**

என்பதாய் அமைகிறது. 'கல்லார் கடைப்பட்டார் ஆதலினால் கல்வி தான் எல்லார்க்கும் கட்டாயம் வேண்டுமால்' என்று கல்வியின் தேவையை வற்புறுத்துகிறார். 'காதலுக்கு வழி வைத்துக் கருப்பாதை சாத்தக் கதவொன்று கண்டறிவோம்; இதிலென்ன

குற்றம்? சாதலுக்கோ பிள்ளை? தவிப்பதற்கோ பிள்ளை' என்று குடும்ப நலத்திட்டத்திற்கு 1929 இலேயே வரவேற்பளித்துள்ளார்.

புதியதோர் உலகம் செய்வோம், எங்கெங்குக் காணினும் சக்தியடா, துன்பம் நேர்கையில் யாழெடுத்து, நீலவான் ஆடைக்குள் உடல் மறைத்து, ஓடப்பராயிருக்கும் ஏழையப்பர், தமிழுக்கும் அமுதென்று பேர், ஒண்டமிழ்த்தாய் சிலம்படியின் முன்னேற்றம்..... என்று மிகப் பெரிய பட்டியல் இவர் கொள்கைக்கும், புலமைக்கும் சான்றாய் அமைகின்றது. சாலை இளந்திரையன், நாரா. நாச்சியப்பன், முருகு சுந்தரம், சுரதா, பொன்னடியான்...... என்று இவரது பாடற் பரம்பரையின் வழித் தோன்றல் பட்டியலும் நீண்டது. இச்சிறப்புடைய ஒரே தமிழ்ப் புலவர் இவர். 'ஆவேசத்தையும் உணர்ச்சியையும் வெண்மையாகக் கொட்டும் உயர்கவி' என்று தம் சம காலத்தவர் வ. ராமசாமி; 'அவர் தம் பாடல்களைப் படிக்கின்ற அந்நியனும் தமிழனாகி விடுவான்' என்று திறனாய்வாளர் அ.சி. செட்டியார் போன்றோர் பலரால் பெரிதும் பாராட்டப்பட்டவர். தமிழ் இதழியல் முன்னோடிகளில் ஒருவரான இவர் தம் முற்போக்குக் கவிதை களால் புரட்சிக் கவிஞராகி, திராவிட இயக்க வளர்ச்சிக்குப் பெருந்துணையானார்.

இலக்கியப் படைப்பில் கொள்கைகளுக்கு முதன்மை யளித்த காரணத்தால் இலக்கிய நயம் ஆங்காங்கே குறைபடுதலும் உண்டு. 'இவருடைய காதற்பாக்கள் காமத்தைத் தூண்டுவன; பிற்காலத்துப் பாடியன கவித்திறம் குறைந்தவை; மன எரிவையே பாட்டாகக் கொட்டுவதால் மாக்கவிஞன் என்ற நம்பிக்கை தகர்கின்றது. பெண்மைப் பாக்கள் உடல் பற்றியதாகவும் அமைந்துள போன்ற குறைகளும் கூறப்படுகின்றன என்பர் (மது.ச. விமலானந்தம், மேற்படி ப. 537). எனினும் தமிழ் மற்றும் அரசியல் செல்வாக்கால் இன்றும் புகழுடன் விளங்குகின்றார். 1990 ஆம் ஆண்டின் நூற்றாண்டு விழா இதற்குச் சிறந்த சான்றாகும்.

சாகித்திய அக்காதெமி, 'பாண்டியன் பரிசு' நூலுக்கு விருது அளித்து சிறப்பித்துள்ளது. தமிழக அரசும், புதுவை அரசும் இவரைப் பலவாறாகப் போற்றுகின்றன. ஆண்டுதோறும் பாவேந்தரின் பிறந்தநாள் விழா கொண்டாடுகின்றனர். 1978 முதல் தமிழக அரசு 'பாவேந்தர் பாரதிதாசன் விருதினை'த் தமிழறிஞருக்கு வழங்கி வருகிறது. 1990 முதல் 'பாவேந்தர் பரிசி'னைக் கலைத் துறையினருக்கு வழங்கி வருகின்றது. 1991இல் இவரது படைப்புகள் அனைத்தும் நாட்டுடைமையாக்கப் பட்டதும் குறிப்பிடத்தக்கது. 1993 இல் கவிதைகள் அனைத்தையும் ஒரே தொகுதியாகப் 'பாரதிதாசன் கவிதைகள்' என்ற பெயரில் ஆ. திருவாசகன், சுரதா கல்லாடன் ஆகியோர் பதிப்பித்துள்ளனர்.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், நூற்றாண்டு விழாவை முன்னிட்டுப் புரட்சிக் கவிஞரின் நூறு பாடல்களைத் தேர்ந்து தெலுங்கு (சி. ஆர். சர்மா), கன்னடம் (வி. பசுமலை அரசு), மலையாளம் (ப. பத்மனாபன்தம்பி, டி. ராமகிருஷ்ணன்), ஆங்கிலம் (வி. முருகன்) என நான்கு மொழிகளில் மொழி பெயர்த்து வெளியிட்டுள்ளது.

**பச்சை விளக்காகும் உன்**
**பகுத்தறிவு தம்பி**
**பச்சை விளக்காலே - நல்ல**
**பாதை பிடி தம்பி**

### வே.ப. பாபுல் (1-7-1914 -)

திருச்செங்கோடு வட்ட வேலக்கவுண்டன் பட்டியைச் சேர்ந்தவர். திருமறையின் தேன்மலர்கள் அல்லது திருக்குர்ஆன் கருத்து வெண்பா (6600), திருநபி வெண்பா (1800), வளமாக்கள்-இசுலாமிய இறை நேயர்கள் (3000), கலிபாக்கள் வெண்பா (1600), காந்தீயம் (5000), தியாகிகள் வெண்பா (5225), அண்ணா வெண்பா (401) என வெண்பாக்களைப் பாடி வழங்கியிருப்பினும் அவை இன்னும் வெளிவராதது சுட்டத் தக்கது. 'விடுகவி நூறு' எனும் ஒரு நூல் மட்டுமே அச்சிடப்பட்டுள்ளது என்பர். எனினும் குன்றா விருப்புடன் விவிலிய வெண்பா, கீதை வெண்பா, நபிமார்கள் வெண்பா, நாயகத் தோழர்கள், நபிகள் நாயகத்தின் பேரர்கள் எனப் பல நூல்களை உருவாக்குவதில் முனைந்துள்ளார் என்பர் (மது.ச. விமலானந்தம், தமிழ் இலக்கிய வரலாறு, ப. 417).

### வாணிதாசன் (1915 - 1974)

புதுவை வில்லியனூரில் பிறந்தவர். பாரதிதாசன் பரம்பரையினரில் ஒருவர். பெற்றோர் திருக்காமு - துளசியம்மாள், இயற்பெயர் அரங்கசாமி. பாரதிதாசனின் 'அழகின் சிரிப்பை' ஒத்து எழிலோவியம் படைத்துள்ளார். இவரது பல படைப்புகளில், பாரதிதாசன் அதிகமாகப் பாதித்துள்ளதைக் காணலாம். 'வாணிதாசன் கவிதைகள்' என்ற பெயரில் மூன்று தொகுதிகள், தமிழச்சி, கொடி முல்லை, குழந்தை இலக்கியம், பாட்டரங்கப் பாடல்கள், பொங்கல் பரிசு, சிரித்த நுணா முதலான பதினேழு கவிதை நூல்கள் படைத்துள்ளார்.

புதினம், சிறுகதை, பிரெஞ்சு இலக்கிய மொழிபெயர்ப்பு + கட்டுரைகள் எனப் பிறவற்றிலும் தம் திறன் காட்டியுள்ளார். ம.லெ. தங்கப்பா, தெசிணி ஆகியோர் இவரது கவிதைகளை

ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துள்ளனர். திராவிட இயக்கக் கவிஞராயினும், அதன் பாடுபொருளான தமிழ்ப்பற்று, இந்தி எதிர்ப்பு, பொதுவுடைமை நோக்கு, இறைமறுப்பு ஆகியவற்றைப் பெரிதும் பாடினும் இந்திய தேசிய ஒருமைப்பாட்டை வளர்க்கும் கவிதைகளையும் பாடியுள்ளார். தமிழக அரசு 'பாட்டரங்கப் பாடல்கள்' நூலுக்குப் பரிசு வழங்கியுள்ளது. பாவேந்தர் பாரதிதாசன் விருதும் பெற்றுள்ளார்.

### பவுல் இராமகிருட்டிணன் (26.9.1916 – )

முத்துக்கருப்ப பிள்ளை-மீனாட்சி தம்பதியினருக்குப் பிறந்த இவர் 1972இல் கிறித்தவரானார். இறை வாழ்த்து முதல் ஆதிக் கலம்பகம் ஈறாக 18 சிற்றிலக்கியங்களின் தொகையாக அமையும் திருவடி மாலை; தமிழ்க் கிறித்தவ அகப்பொருள் இலக்கியத்தில் சிறப்பிடம் பெறும் சாலமோன் திருவருட் கோவை எனும் தெய்வத் திருமுல்லை குறிப்புரையுடன் (ஞானவான் சாலமோனின் உன்னதப் பாட்டைப் பாடுவது); இயேசு பெருமானின் வாழ்வினை 7 காண்டம் 49 அதிகாரங்களில் எடுத்துரைக்கும் பெருங்காவியம் மீட்பதிகாரம் எனப் படைத்துத் தாம் சார்ந்த சமயத்திற்குச் சிறப்பு செய்துள்ளார்.

### தாமஸ் உடையார் (4–8–1919 –)

'மாதாவின் புலவன்' எனும் புனைபெயருடைய இத்தஞ்சைக்காரரின் பெற்றோர் சூசை உடையார் - சூசை அம்மாள் ஆவர். 13 நூல்களின் தொகுதியான திருவருட்பா மாலை (1977), தன்னூர் மாதாவைச் சிறப்பிக்கும் கோட்டூர் அந்தாதி (1978), முன்னிரு அடிகளில் பழைய ஏற்பாட்டுக் கதையும் பின்னிரு அடிகளில் குறளும் ஆக அமையும் 55 வெண்பாக்கள் கொண்ட மனுக்குல வெண்பா (1979), கோட்டூர் மரியன்னை பதிகம் (1979) கந்தரலங்காரப் போக்கில் அமையும் கர்த்தர் புகழாரம் (1980), மாதாவிடம் அடைக்கலம் புகும் சரணாஞ்சலி (1980), திருப்பாடுகளின் தியான மாலை (1980), நன்று நாற்பது (1982), ஒரியூர் அருளானந்தர் பதிகம், திருக்காவலூர் பதிகம் எனப் பல சிற்றிலக்கியங்களைப் படைத்து கிறித்துவ சமயத்துக்கும் தமிழுக்கும் பெருந்தொண்டாற்றியுள்ளார்.

### முடியரசன் (1920 –)

பாரதிதாசன் பரம்பரையின் முன்னவர். திராவிட இயக்கக் கவிஞர். தம் கவித்திறனை மரபுக்கு மட்டுமே சொந்தமாக்கியவர். புதுக்கவிதை எதிர்ப்பாளர். எக்கோவின் காதல் எனும் சிறுகதைத்

தொகுப்பு, அன்புள்ள பாண்டியனுக்கு எனும் கடிதவிலக்கியம் எனப் பிற துறைப் படைப்புகளைத் தந்திருப்பினும் கவிஞராகவே போற்றப்படுபவர். முடியரசன் கவிதைகள், காவியப்பாவை, கவி யரங்கில் முடியரசன், பாடுங்குயில், நெஞ்சு பொறுக்கவில்லையே எனும் கவிதைத் தொகுப்புகளுடன் பூங்கொடி, வீரகாவியம், ஊன்றுகோல் ஆகிய சிறுகாப்பியங்களையும் பாடியுள்ளார். 1966, 1973 ஆம் ஆண்டுகளில் சிறந்த கவிஞர்க்குரிய தமிழக அரசின் பரிசினை முறையே முடியரசன் கவிதைகளும், வீர காவியமும் பெற்றுத் தந்தன. இவரது சில பாடல்கள் இந்திய மொழிகள், மற்றும் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. தமிழ் வழிபாடும் சமுதாயச் சீர்திருத்தமும் இவரது கவிதைகளின் உயிர்நாடியாகும். திராவிட இயக்கத் தாக்கத்தால் 'துரைராசு' எனும் தன் பெயரை முடியரசனாக்கியவர். 'சாதி என்பது ஏனோ?' எனும் கவிதையே முதற் கவிதையாகும். இன்றைய சமுதாயச் சீர்கேடுகளைப் பல கோணங்களிலும் சுட்டி அவற்றிற்கான தீர்வுகளையும் காண முனைந்துள்ளார். பொதுவுடைமை, ஒருமையுணர்வு ஆகியவற்றை வாழ்த்தி வரவேற்கிறார். தமிழைத் தெய்வமாக, தாயாக, தந்தையாக, காதலியாக, மனைவியாக, மகனாகக் கண்டு தம் தமிழ்ப்பற்றை வெளிக்காட்டுகிறார். தமிழ் வளர்ச்சிக்குரிய வழிகளைப் பட்டியலிட்டிருப்பதும் (பூங்கொடி) சுட்டத்தக்கது. இயற்கையைப் பாடுவதிலும் தனி விருப்பு காட்டும் கவிஞர் காதல் பாடல்களிலும் அதனை வெளிப்படுத்தியுள்ளார். இக் காதல் பாடல்களில் தலைவனின் நலத்தைப் பாராட்டி யுரைக்கும் தலைவியையும், தலைவியின் பிரிவில் ஏங்கும் தலைவனையும் காட்டியிருப்பது அகப்பாடல்களில் கவிஞர் தரும் புதுமையாகும். இவரது 'ஊன்றுகோல்' பண்டிதமணி கதிரேசன் செட்டியாரின் வாழ்க்கையைப் பாடுவதாகும்.

*சுரதா (1921 –)*

நாகபட்டினம் திருவேங்கடம் - செண்பகம் தம்பதியரின் புதல்வர். இராசகோபாலனாகிய இவர் பாரதிதாசன் மீது கொண்ட பற்றால் சுப்புரத்தினதாசன் - சுரதா ஆனவர். சாவின் முத்தம் (1946) முதல் கவிதைத் தொகுப்பாகும். தமிழக அரசின் பரிசு பெற்ற தேன்மழை (1965), துறைமுகம் (1976), சிரிப்பின் நிழல், வார்த்தை வாசல் (1984), சுவரும் சுண்ணாம்பும் (1994) அமுதும் தேனும் எனப் பிற கவிதைத் தொகுதிகளையும் வெளி யிட்டுள்ளார். 3000 பாடல்களுக்கு மேல் படைத்துள்ள இவர், பாரதிதாசனுடன் 3 ஆண்டுகள் உடனுறைந்து அவரது படைப்பு களைப் படியெடுத்திருப்பினும் அவரது நிழல் தம் கவிதைகளில்

படியாதவாறு தனித்தன்மை காத்துள்ளார். தமிழ்க் கவிதைப் படைப்பில் இவருக்குள்ள தாகம் காவியம் (1955), இலக்கியம் (1958), ஊர்வலம் (1963), விண்மீன் (1964) சுரதா (1968) முதலான கவிதையிதழ்களை நடத்தத் தூண்டியது.

கவியரங்கக் கவிஞருள் ஒருவரான இவர் ஜெக சிற்பியனால் உவமைக் கவிஞராகப் பட்டம் சூட்டப் பெற்றார். 1971இல் ஆனந்த விகடனில் வாரந்தோறும் ஓராண்டுக்கு மேலாகக் கவிதை படைத்துள்ளார். திரைப்படங்களுக்கும் பாடல்கள், வசனம் எழுதிப் புகழ் பெற்ற இவர் நெஞ்சில் நிறுத்துங்கள் போன்ற கட்டுரை நூல்களும் தந்துள்ளார். 1972இல் கலைமாமணி, 1978 இல் பாவேந்தர் பாரதிதாசன் விருது, 1990இல் கலைத்துறை வித்தகருக்கான பாரதிதாசன் விருது ஆகியவற்றைத் தமிழக அரசு வழங்கி இவரைச் சிறப்பித்துள்ளது. கேரள அரசின் குமரன் ஆசான் விருது (1990) பெற்றுள்ளதும் சுட்டற்பாலது. நெசவாளியைப் பற்றி எழுதும்பொழுது,

'காலத்தால் முந்தியவன் கவிஞன் அந்தக்
கவிஞனையும் முந்தியவன் ஆடை நெய்வோன்
ஓலைதனில் எழுதாமல் அன்னோன் நெய்யும்
உடையதனில் வண்ணப் பாட்டெழுதும் சிங்கம்'

என்று நவின்றுள்ளார். சொல்லாட்சி, உவமை, வரலாற்றுச் செய்திகள், சொல்விளக்கம் முதலியவை இவர் கவிதைகளில் சுடர்விடும் தனித்தன்மைகள் என்பர். (மீரா, எதிர்காலத்தமிழ்க் கவிதை, அன்னம், 1985, ப. 18).

**சாரண பாஸ்கரன்**

கூத்தா நல்லூர் தந்த 'கவிஞர் திலகம்' இவர். திராவிட இயக்கக் கொள்கைகளில் பற்றுடையவராயினும் நபிநேயம் காட்டுபவர். இறைவழிபாட்டினர். மணியோசை, சாபம், சங்க நாதம், இதயக் குமுறல், நாடும் நாமும், மணிச்சரம் போன்ற கவிதை நூல்களைச் சமுதாயச் சீர்திருத்த நோக்கோடு பாடியுள்ளார். 'யூசுப் சுலேகா' காவியம் இவருக்குப் பெரும்புகழைப் பெற்றுத் தந்துள்ளது.

**கண்ணதாசன் (1927 – 1981)**

முத்தையா எனும் இயற்பெயரினரான கண்ணதாசன் 24-6-1927 இல் சிறுகூடல்பட்டியில் பிறந்தார். பெற்றோர் சாத்தப்பன் - விசாலாட்சி ஆவர். 1949 இல் தமது 22 ஆம் வயதில்

தெய்வானை அம்மையாருக்கு வளர்ப்பு மகனானார். குடும்பச் சூழல் காரணமாக இவரது கல்வி எட்டாம் வகுப்புடன் நிறைவடைந்தது. ஆனால் அனுபவக்கல்வியில் பெரும் பேராசிரியரானார். மிக இளமையிலேயே இவரிடம் தமிழ் ஈடுபாடு இயற்கையாக அமைந்திருந்தது. 1944 இல் 'காலை குளித்தெழுந்து' எனும் முதல் கவிதை படைத்துத் தம் இலக்கியப் பணியைத் துவக்கினார். தமது வாழ்நாளில் திரைப்படத் துறையில் பாடலாசிரியராக மிக்கப் புகழுடன் விளங்கினார். அவ்வப் போது எழுதிய தனிப்பாடல்கள் ஏழு தொகுதிகளாக வெளியிடப்பட்டுள்ளன. இவை தவிர காப்பியங்கள், கதைகள், கட்டுரைகள், நாடகங்கள், வாழ்க்கை வரலாறு, மொழிபெயர்ப்பு எனப் பல துறைகளிலும் தம் திறமையை வெளிப்படுத்தியுள்ளார். இதுவரை அவரது படைப்புகளின் எண்ணிக்கையாக 105 நூல்கள் குறிக்கப்பட்டுள்ளன. இன்னும் வெளிவராதனவும் உண்டு என்பர். 1944இல் எழுதத் தொடங்கிய இவர், 1981இல் இவ்வுலக வாழ்வை விட்டு நீங்கும் வரை தம் படைப்புகளைத் தமிழுக்கு வாரி வாரி வழங்கிக் கொண்டேயிருந்தார். அவரது சாதனைப் பட்டியலில் இறுதியானது இயேசு காவியமாகும்.

1944இல் திருமகளின் ஆசிரியராக இலக்கிய உலகில் புகுந்தார். பிறசில இதழ்களில் பணியாற்றியிருப்பினும் தாமே தென்றல், முல்லை, தென்றல் திரை, கண்ணதாசன் எனும் இதழ்களையும் நடத்தியமை குறிப்பிடத்தக்கது. இவற்றுள் தென்றலும் கண்ணதாசனும் ஓரளவு வெற்றி கண்டன. விடுதலைப் போராட்டத்திலும் பங்கேற்ற இக்கவிஞர் பின்னாளில் பல கட்சிகளில் இடம்பெற்று அரசியல் வாழ்வில் தோல்வி கண்டவர். இவரது படைப்புத்திறன் திரைப்படத் துறைக்கு அப்பால் பெரிதும் விளக்கம் பெறாமைக்கு இதுவே காரணமாகும். தாம் சார்ந்திருந்த அரசியல் கட்சி காரணமாகச் சிலகாலம் நாத்திக ராகவும் இருந்தார். அதிலிருந்து விலகிய பின் மிகத் தீவிரமான ஆன்மீகவாதி ஆனார். அவரது 'அர்த்தமுள்ள இந்து மதம்' அரசியலில் இழந்த புகழை, செல்வாக்கை மீட்டுத்தந்தது கூறத் தக்கது. அரசியல் ஊடாட்டம் காரணமாக இவர் பாடற் பொருண்மைகளிலும் முரண்பாடு காணலாம். கருத்து முரண்களும் உள. எனினும் இவரது கவிதையாற்றல் அவற்றை வெற்றி கொண்டது. தம்முடைய நிறை குறைகளைத் தாமே விமர்சித்து அவற்றிற்கு அமைதி காட்டித் தம் தனித்துவத்தை நிலை நாட்டியுள்ளார். பாரதிக்குப் பின் பல் துறைகளிலும் மாண்புடைக் கவிஞராக விளங்கிய கண்ணதாசனை அவரது பரம்பரையின் தொடர்ச்சி எனவும் நவிலலாம்.

திரைப்படத் தயாரிப்பிலும் ஈடுபட்ட கவிஞர் 1970 இல் மைய மாநில அரசுகளால் சிறந்த திரைப்படப் பாடலாசிரியராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். 1979 இல் சிறந்த கவிஞருக்காக 'அண்ணாமலை அரசர் நினைவுப் பரிசு' இவருக்கு வழங்கப் பட்டது. இதே ஆண்டில் சாகித்ய அக்காதெமி இவரின் 'சேரமான் காதலி' புதினத்திற்கு விருது வழங்கிச் சிறப்பித்தது. தமிழ் மக்கள் மனதில் கவியரசராகவும், தமிழக அரசவையில் அரசவைக் கவிஞராகவும் போற்றப்பட்டார். காரை முத்துப்புலவர், வணங்காமுடி, கமகப்பிரியா, பார்வதிநாதன், ஆரோக்கியசாமி எனும் புனை பெயர்களும் இவருக்குண்டு.

கவிஞரின் எழுத்துலக வாழ்க்கையை ஆய்வாளர் (சித்திரா திருமாவளவன், கண்ணதாசன் ஆய்வுமாலை, கண்ணதாசன் பதிப்பகம், சென்னை, 2000, ப. 29) மூன்றாகக் காண்பர். அவை

1.1949 முதல் 1960 வரை மாறுபட்ட கருத்துக்களைக் கொண்ட அரசியல் சிந்தனை சார்ந்த மக்கள் நலம்.

2.1960 முதல் 1972 வரை தேசிய நீரோட்டத்தில் இணைந்த சமுதாயச் சிந்தனை சார்ந்த மக்கள் நலம்.

3.1972 முதல் 1981 வரை சமயச் சிந்தனை சார்ந்த மக்கள் நலம்.

என அமைகின்றன. இப்பகுப்பு, கவிஞரின் சிந்தனை வளர்ச்சியைத் தெளிவாக்கியுள்ளது. 'போற்றுபவர் போற்றட்டும் புழுதிவாரித் தூற்றுபவர் தூற்றட்டும் தொடர்ந்து செல்வேன் ஏற்றதொரு கருத்தை எனது உள்ளம் என்றால் எடுத்துரைப்பேன் எவர் வரினும் நில்லேன் அஞ்சேன்' என்ற கொள்கையாளர் கண்ணதாசன். இவர் தமது கவிதைகளை, பார்த்தது கோடி பட்டது கோடி சேர்த்தது என்ன? சிறந்த அனுபவம்; கற்றவை எல்லாம் மற்றவர்க்கு எனவே வடித்து வைக்கின்றேன் எனத் தம் அனுபவ வெளியீடாகக் கொள்கிறார்.

கற்பனை வளர்தல் வேண்டும் கவிநயம் பிறப்பில்
வேண்டும்
சொற்பொருள் அறிவும் வேண்டும் சுவைபட
உரைத்தல் வேண்டும்
பற்பல கருத்தும் கூறும் பான்மையை வளர்த்தல்
வேண்டும்
இப்பெரும் மனிதன் தானே இயற்கையில் கவிஞன்
ஆவான்

என்பது கவிஞருக்கு இவர் தரும் விளக்கமாகும். 'என்றுவரை செங்கதிரில் ஒளி இருக்கும், என்று வரை நிலவினிலே குளிர் இருக்கும், என்று வரை இமயமலை நிமிர்ந்திருக்கும், அன்று வரை என் கவிதை நிலைத்திருக்கும்' என்று தம் கவிதைகளுக்குத் தாமே சாகாவரம் வழங்கியுள்ளார்.

ஆழ்வார்களுக்கு இணையான கண்ணன் பக்தியுடைய வராயினும் சமயப் பொறையுடையவர். 'சமயமே ஒருமைப் பாட்டைத் தனிமையில் காத்து நிற்கும்; அமையுமோர் தேசபக்தி அளிப்பதும் சமயமாகும், இமையெனப் பண்பைக் காக்க இருப்பதும் சமயமாகும்' என்ற கருத்தாளர் இவர். 'நள்ளிராப் பொழுதில் நானும் கண்ணனும் உள்ளூறும் பொருள்களை உரைப்ப துண்டு காண்' எனத் தமக்கும் இறைவனுக்கும் உள்ள நெருக்கத்தைக் காட்டுகிறார். நாத்திகக் கருவறுப்போம், நாத்திகர்க்கோர் புத்திமதி என நாத்திகத்தை எதிர்த்து நிற்பதும் சுட்டத்தக்கது.

**அரசியல் தத்துவங்கள் முளைத்ததும் இங்கே**
**ஆன்மிக வேதமெல்லாம் நாமின்றி எங்கே**
**தர்ம நெறிகள் இந்த உலகுக்கு ஒன்றே**
**தந்து வளர்த்தது எங்கள் தாயகம் அன்றோ**

எனத் தம் நாட்டுப்பற்றை விளம்புவார் கவிஞர். 'நம் முன்னோர்கள் நினைத்து உணர்ந்து நிலைநிறுத்த விரும்பிய ஒருமை உணர்வைப் போற்றிக் காப்பதில் தமிழ்க் கவிதை பாரதியாருக்குப் பிறகு சிறிது பின்னடைவு கண்ட தெனினும் அக்குறையைப் போக்க கண்ணதாசன் கவிதைகள் முனைந்து நிற்கின்றன' எனும் வல்லம் வேங்கடபதியின் கூற்று இவண் எண்ணத் தக்கது. சீனா, பாகிஸ்தான் இந்தியாவுடன் போர் தொடுத்தபோது அவற்றை எதிர்த்தும் பாடல்களியற்றியுள்ளார். 'மானிடராய் எண்ணி மதிக்காதீர் மானிடரே! முற்றும் சுடு காடாய் முடியட்டும் சீனநலம், சற்றும் அசையாமல் சாயட்டும் சீனர்தலை, பற்றிப் பருந்தெல்லாம் பருகட்டும் அவர் குருதி' என்பதைச் சான்றாக்கலாம். 'சிந்துவிலோர் சேனை; சியால் கோட்டில் மறுசேனை.........' என இந்திய இராணுவ வீரர்களையும் பாராட்டியிருப்பது குறிப்பிடத்தக்கது.

அரசியல் தலைவர் பலருக்கும் வாழ்த்துப்பா அல்லது வசைப்பா மற்றும் இரங்கற்பா பாடியுள்ளார். பெருந்தலைவர் காமராசர் மறைவின் போது, 'சாகாதாகச் செத்தது மேனி, தளராதாகத் தளர்ந்தது பூமி' என வருந்துகிறார். 'அரசியல் என்றால் நாட்டில் ஆயிரம் பொய்யின் கூட்டு, அரசியல்வாதி

என்றால் அன்றாடம் பொய்யில் வாழ்வோன்' என்பது இவர் கருத்து. தமிழ், தமிழர், தமிழகம் என ஒடுங்கிக் கிடந்த கவிஞர் மனம் பின்னாளில்,

**ஒவ்வொரு மொழிக்கும் ஒவ்வொரு நாடு**
**உலகம் யாவும் மானிடர் வீடு**
**உரிமைகாப்போம் உறவையும் காப்போம்**
**ஒன்றாய் இணைந்து என்றும் வாழ்வோம்**

எனப் பரந்து விரிந்துள்ளது. அரசியல் இழிவினைப் பலவாறாக இவர் பாடியுள்ளதும் குறிக்கத்தக்கது. விடுதலை இந்தியாவின் சீர்கேட்டையும், 'பணமிருப்போர் குடி கெடுத்தால் பாதுகாக்கும் சட்டமே - நீ வலையை வீசிப் பிடிப்பதெல்லாம் ஏழைகளை மட்டுமே' எனச் சுட்டி ஏசுகிறார். 'நாடு முன்னேற நலங்கள் பெருக வேண்டுமென்றால் விதியொன்று செய்வோம்; ஜனநாயகத்தைச் சற்றே நிறுத்திச் சவுக்கை எடுப்போம் தரித்திரம் நீங்கும்' என வழியும் காட்டுகிறார்.

சமுதாயத்தைப் பாடுதல், அதன் குறைகளைச் சுட்டுதல், அவற்றிற்குத் தீர்வு காணுதல் என்பன சமூகக் கவிகளின் கடமையாகின்றன. கண்ணதாசனும் தம்மை மிகச் சிறந்த கவியாக முன்னிறுத்தியுள்ளார். 'ஆலை அடைத்ததென அடுப்படியில் பூனை வர' எனும் தைப்பாவைப் பாடலைச் சான்றாக்கலாம். கோரிக்கை எனும் பெயரில் வேலை நிறுத்தத்திற்கு எதிர்ப்புத் தெரிவித்த முதற் கவிஞர் இவர் (தொகுதி 6, ப. 128). மது, புகை முதலான பழக்கங்களுக்கு எதிர்ப்புத் தெரிவித்து அறிவுரை வழங்கியுள்ள கவிஞர் (கண்ணதாசன் கவிதைகள் தொகுதி - 9, ப. 278) வன்முறையாளரை,

**வன்முறைக்கூட்டமே! வன்முறைக் கூட்டமே**
**வளரும் என் பூமியை வதைக்கவா தோன்றினீர்?**
**வீடு வேண்டும் என்று வீட்டையே கொளுத்தினீர்**
**நாடு வேண்டும் என்று நாட்டையே பொசுக்கினீர்**

எனச் சாடுகிறார். விதவையர் மறுமணத்தின் இன்றியமையாமையையும் (கண்ணதாசன் கவிதைகள், தொகுதி - 5, ப. 200) வலியுறுத்தியுள்ளார். 'ஒரு நூறு கோடியாய் மக்கள் தொகை கூடி உணவுக்குத் தத்தளிக்கும், ஓராயிரம் கட்சி பேதங்கள் தோன்றியே உள்நாட்டு யுத்தம் மூளும்' என கி.பி. இரண்டா யிரத்தில் இந்தியாவின் நிலையைக் கவிஞர் கற்பித்தது இன்று உண்மையாகியுள்ளதும் கூறத்தக்கது. 'வாழ்கின்ற மனைகளில் வாரிசுக்கு இரண்டென்று வடிவான வரையறுத்து மனையிலும் நாட்டிலும் மனது வைத்தே இந்த மக்கள் தொகை குறைத்து

தாழாத தத்துவம் கர்ப்பத் தடையென்று தழுவினால் எதிர்காலமே சரியாகும். இல்லையேல் சஞ்சலம்தான் மூளும் தர்ம பாரத தேசமே' என்று குடும்பக் கட்டுப்பாட்டைக் கடைப்பிடிக்க வேண்டியுள்ளார்.

கவிஞர் கண்ணதாசனுக்கு அழியாப் புகழ் தந்தவை அவரது வாழ்க்கைத் தத்துவம் பற்றிய பாடல்கள் எனில் அதில் மிகையில்லை.

**வாழ்வதில் பற்றுவை வாழ்க்கையைக் கற்றுவை**
**போவதோர் நாள் வரும், போன பின்னால் இவண்**
**ஆவதோர் பொருளிலை, அறிவை நீ சத்தியம்**
**அழுவதேன் துடிப்பதேன் ஐயமேன் அச்சமேன்?**
**எழுவதும் விழுவதும் இயற்கையென்று ஆறுகொள்**
**இன்று நீ நாளை நீ என்றும் நீ என்றிரு**
**நன்று செய், நன்று சொல், நடத்து உன் வாழ்வினை**
**வாழ்வதே முடிவென வாழ்வதைத் தொடங்கினால்**
**நெஞ்சமும் சந்நிதி நித்தமும் நிம்மதி**

என்பது போன்று அவை அமைகின்றன. பெ. இளவரசு, 'கண்ணதாசன் கவிதைகளில் தத்துவம்' எனத் (கண்ணதாசன் பதிப்பகம், சென்னை, 2000) தனி ஆய்வே இதில் நிகழ்த்தியுள்ளார். 'வாழ்க்கையைக் கனவே வெல்லும் வதை பட்ட நிலையில் இந்த மனிதனை மரணம் வெல்லும்' என்பது கவிஞரின் மரணம் பற்றிய கூற்று.

மிக எளிய, தெளிந்த நடையில் அரிய கருத்துகளை இனிய சொற்பெருக்கில் திறம்பட மொழியும் வல்லமை படைத்த கண்ணதாசன் கவிகள் தமிழன்னைக்குத் தனியின்பம் அளிப்பன. இவரது கவிதைகளில் அறிவியல் கருத்துகளும் காலத்திற்குத் தக நிறைந்து கிடப்பதை மித்ரா தமது ஆய்வில் (கவியரசு கண்ணதாசன் கவிதைகளில் அறிவியல், கண்ணதாசன் பதிப்பகம், சென்னை, 2000) வெளிப்படுத்தியுள்ளார். பாரதிக்குப் பின் வெளி உலகினையும் பாடற்பொருளாக்கிப் பெருமை கண்டவர் கண்ணதாசன். ருஷ்ய நாட்டின் கொடுங்கோலாட்சியை எதிர்த்து 'மாறுமிவ் உலகம், ரஷ்ய மாக்களின் கொள்கை தன்னை கூறுபோட்டழிக்கும்! முற்றக் கொதிக்கும் என் நெஞ்சின் ஆணை' என வசைபாடியமை இன்று உண்மையாகியுள்ளமை கருதத் தக்கது. அவலச்சுவை படைப்பதில் தனியார்வம் காட்டுகின்றார்.

தமது கவிதைகளின் கருத்து முரண்களுக்குத் துணிந்து, 'மாறாதிருக்க யான் வனவிலங்கல்ல மாற்றம் எனது மானிட தத்துவம்' எனக் காரணம் காட்டியிருப்பதும் நோக்கத்தக்கது. பழந்தமிழ் இலக்கியங்களை, இலக்கியச் சிந்தனைகளை, அழகிய சொற்றொடர்களைத் தம் படைப்பில் எளிமைப்படுத்திக் கொடுத்துள்ளமையும் இங்குச் சுட்டற்பாலது. 1952-53 இல் டால்மியபுரம் பெயர் மாற்றப் போராட்டத்தில் ஈடுபட்டுச் சிறை சென்றபோது பாடிய மாங்கனி, ஆட்டனத்தி ஆதிமந்தி (1956) போன்றவை சான்றுகளாகும். கவியரசர் கம்பன் மீதும் மிகுந்த ஈடுபாடுடையவர். மரபிலேயே ஊறித் திளைத்ததாலும் எண்ணிய வுடன் கவி மழை பொழியும் ஆற்றல் கை கூடியதாலும் புதுக் கவிதையின் பால் இவர் மனம் ஈடுபடவில்லை போலும். பொருட் செறிவுடைய சிறப்பான கவிதைகளை விரைந்து பாடும் இவரின் கவித்திறனுக்கு மூன்றே நாட்களில் நூறு பாடல்களைப் பாடி நிறைவு செய்த 'அம்பிகை அழகு தரிசனம்' சான்றாகும். மிகக் குறுகிய காலத்திலேயே 'இயேசு காவியம்' நிறைவுற்றதும் குறித்தற் பாலது. பல்துறையினரும் பலதிறத்தோரும் இவரிடம் பிறந்த நாள், மணநாள், மணிவிழா, மனைவிழா, நூல்வெளியீடு என வாழ்த்து கவிகள் பெறுவதைப் பெருமையாகக் கருதினர். தம் திரையிசைப் பாடல்களால் தமிழக மக்களனைவரையும் கொள்ளை கொண்ட இம்மக்கள் கவி இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற பெருங்கவிஞருள் ஒருவராவார். இவர் எழுத்துலக வாழ்வின் குறிப்பிடத்தக்க பகுதி உரைநடை செழுமைக்கும் துணையாயது. இவரின் ஞான மலர்களும், புஷ்பமாலிகாவும் சிறந்த வசன கவிதை நூல்களாகப் பாராட்டப்படுகின்றன. மொழிப்பற்றில் யாருக்கும் இவர் சளைத்தவரில்லை என்பதை,

**ஆயர்கைப் புல்லாங் குழலில் அமைந் தெழுந்து**
**தாயர்கை வளையலிலும் சலங்கையிலும் குடிபுகுந்து**
**கோயில்மணி ஓசையிலே கொஞ்சித் தவழ்ந்து வந்து**
**சேயின்மணி வாங்கச் சிறகை விரித்தெழுந்து**
**பூஞ்சிட்டுப் போல்வான் புறத்தே பறந்து வந்து**
**அப்பனுக்குக் கணக்காகி ஆச்சியர்க்குப் பட்டாகி**
**ஒப்பரிய தாயர்க்கு ஒப்பாரிக் கலையாகி**
**தப்பிப் பிறந்த தங்கமெனத் தாய் உரைத்த**
**இப்பாவிக் கவிமகனை ஈன்றெடுத்த செந்தமிழே**

என்பதில் காணலாம்.

## புதுக்கவிதை

தமிழ் இலக்கியம் காலச்சூழலுக்கு ஏற்ப அவ்வப்போது வகைமை, வடிவம், பொருண்மை, வெளியீடு என்பனவற்றில் மாற்றம் கொண்டு தன்னை வளப்படுத்தியுள்ளது. இவ்வுயிர்ப்பு நிலையே அதனை என்று முள இன் தமிழாக, இளமைத் தமிழாக உலாவரச் செய்துள்ளது. இவ்வகையில் புதுக்கவிதையெனும் புதுக்கிளையைத் தமிழ் பெற்றுள்ளது. New Poetry, Modern Poetry, Free Verse என ஆங்கிலத்தில் வழங்கப்பட்ட இவ்வகைமை தமிழில் வசன கவிதையாகிப் பின் புதுக்கவிதையாக நிலை பெற்றுள்ளது. யாப்பிலாக் கவிதை, இலகு கவிதை, உரைப்பா, உரைவீச்சு, கட்டிலடங்காக் கவிதை, கட்டற்ற கவிதையெனப் பலவாறாக வழங்கப்பட்ட போதிலும் புதுக்கவிதை என்பதே பெருவழக்காகி நிலைத்துவிட்டது.

இலக்கணம் எனும் கட்டுக்குள், வரையறைக்குள் சிக்கிக் கொள்ள விரும்பாத கவிஞன், அல்லது தனது எண்ணங்களை எண்ணியபடி வெளிப்படுத்த இலக்கணம் தடையாக நிற்பதாக உணரும் கவிஞன் மரபினை மீறிக் கவிதை படைக்கும்பொழுது அது புதுக்கவிதையாகிறது. எனினும் முற்றிலும் மரபிலிருந்து விலக இயலாதவாறு உவமை, உருவகம், குறியீடு, படிமம், ஓசை நயம் போன்ற கவிதை தரும் இலக்கிய இன்பங்கள் இதனுள்ளும் அமைந்து பழமைக்கு மதிப்பளித்து, கவிதையியல்பு கொண்டு புதுக்கவிதையாகிறது. வசன கவிதை வேறு, புதுக்கவிதை வேறு; வசன கவிதையின் வளர்ச்சி நிலையே புதுக்கவிதையெனும் கருத்தும் பரவலாகக் காணப்படுகிறது.

யாப்பு முறைக்குக் கட்டுப்படாது, கவிஞனின் உணர்ச்சி வெளிப்பாட்டிற்கு முதன்மையளித்த புதுக்கவிதை தொடக்கத்தில் பாரதிதாசன் போன்ற மரபுக்கவிஞரால் பெரும் எதிர்ப்பிற் குள்ளாகியது. நாளடைவில் இவ்வெதிர்ப்பு குறைந்து இன்று இலக்கிய உலகில் தனியாட்சி செலுத்துகிறது. சரஸ்வதி இதழில் 1959 ஆம் ஆண்டு மலரில் க.நா.சு. எழுதிய கட்டுரையில் வசன கவிதை புதுக்கவிதையெனப் பெயர் மாற்றம் பெற்றதென்பர். 1939 ஆம் ஆண்டில் அவர் நடத்திய ‘சூறாவளி’ எனும் வார இதழில் ‘மணப்பெண்’ எனப் பெயரிய அவரின் வசனகவிதை முயற்சிக்கு வரவேற்பும் எதிர்ப்பும் தொடர் விவாதங்களாக நடைபெற்றதும் இங்குக் குறிப்பிடத்தக்கதாம்.

உரைப்பாட்டு, கட்டுரைச்செய்யுள் எனச் சிலப்பதிகாரத்தில் கூறப்படுவனவற்றை வசன கவிதையின் முன்னோடிகளாக

வல்லிக்கண்ணன் கருதுவர் (புதுக்கவிதையின் தோற்றமும் வளர்ச்சியும், அகரம், கும்பகோணம், 1999, ப. 39). தொல்காப்பியர் அடிவரையில்லாதன என நவிலும் நொடியொடு புணர்ந்த பிசி, மறைமொழி கிளந்த மந்திரம், கூற்றிடை வைத்த குறிப்பு (1421) என்பனவும் இங்கு எண்ணத்தக்கன. நீண்ட நெடுங்காலத்தின் பின் இருபதின் அறிவுச்சூரியன் பாரதி மேலைக் காற்றின் நுகர்வால் 'காட்சிகள்' வழி புதுக்கவிதைக்கு முன் வரவாக, கட்டியமாக அமைந்த வசனகவிதை உதயமானது. தமிழ் இலக்கியப் பரப்பில் அவர் தோற்றுவித்த இவ்வூற்றுக் கண் இன்று கங்கையாய்ப் பெருக்கெடுத்துள்ளது. இதற்கு வழி வகுத்தவர் ந. பிச்சமூர்த்தி ஆவார்.

1934 இல் ந. பிச்சமூர்த்தியின் முதல் கவிதை வெளியானது. இவருடன் கு.ப.ரா, புதுமைப்பித்தன், ச.து.சு. யோகியார், கா.ந.சு, சி.சு. செல்லப்பா என இதன் ஆளுமை பரந்து விரியத் தொடங்கியது. 1944 இல் கே. ராமநாதன் வசன கவிதைகளுக்கான முதல் நூலைத் தொகுத்து வெளியிட்டார். இதன் பின் 1962 இல் சி.சு. செல்லப்பா, எழுத்து இதழில் வெளிவந்த கவிதைகளில் தேர்ந்தவற்றின் தொகுப்பாக வெளியிட்ட 'புதுக்குரல்கள்' புதுக்கவிதை வரலாற்றில் குறிப்பிட்டதக்க இடத்தைப் பெற்றது.

இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் தோன்றிய இந்திய மறுமலர்ச்சி இயக்கத்தைப் பின்னால் தள்ளி, தமிழ் மறுமலர்ச்சி இயக்கத்தை முன்னால் கொண்டு வந்த, திராவிட இயக்கத்தின் செல்வாக்கால் பிராமண அறிவு ஜீவிகள் தாம் தனிமைப்படுத்தப் படுவதை உணர்ந்தனர். உலகில் வேறெங்கும் இல்லாதத் தீண்டாமையால் நூற்றாண்டுகளாக வசதியான வாழ்க்கை வாழ்ந்து வந்தவர்களின் இருப்பு பலத்த கேள்விக்கு உட்பட்டது. இதில் நிலைகுலைந்தவர்கள் தம் அடையாளச் சிக்கலுக்கு ஆட்பட்டனர். திராவிட இயக்கத்தின் விளைவாகத் தோன்றிய மணிக்கொடியின் மூலம் அறிமுகமானாலும் வெகுவிரைவில் (அறுபதுகளில்) தமது அடையாளத்தைப் புதுப்பித்துக் கொள்வதில் அக்கறை காட்டியதின் விளைவே தனி மனிதனை முன்னிறுத்தும் மேலைச் சார்பிலான புதுக்கவிதையாகும். எனவே திராவிட இயக்கத்தின் எதிர்விளைவாகவே பிற்காலத்தில் எழுத்துக் குழுவினரால் புதுக்கவிதைகள் படைக்கப்பட்டன (சு. அரங்க ராசு (அக்கினிபுத்திரன்), தமிழ்ப் புதுக்கவிதை ஒரு திறனாய்வு - மூன்றாம் உலகப் பதிப்பகம், சென்னை, 1991, ப. 337) என்ற கருத்தும் புதுக்கவிதை வரலாறு குறித்துக் காணப்படுகிறது.

பாரதிக்குப் பின் வந்த எழுத்து மரபினர் அவருடைய கலைப்பண்பையும் இந்திய தேசியத்துவத்தையும் வேதாந்தக் கருத்தையும் ஏற்றுக் கொண்டனர். ஆனால் சமூகப் பொறுப்பை, எளிமையை, மக்களுக்குக் கொண்டு செல்லும் தன்மையைக் கை நழுவவிட்டனர். புதுக்கவிதை பிராமணர் இயக்கமாக இருந்ததும் அதன் எளிமையற்ற போக்கும், சமூகச் சார்பற்ற போக்கும் எழுத்துக்கு எதிராக வானம்பாடிகளைத் தோற்றுவித்தன. இதில் இரு தனித்த போக்குகள் இணைந்தன. ஒன்று பாரதிதாசன் வழி வந்த பிராமணர் எதிர்ப்பியக்கம் சார்ந்த, தமிழ்ப் பண்பாட்டு மரபு சார்ந்த தமிழாசிரியர்கள் குழு. மற்றொன்று கவிதையில் மார்க்சியப் பார்வையை வலியுறுத்தும் இடது சாரிச் சிந்தனையாளர் குழு. இந்த இரு மரபினர்க்குமான தத்துவப் போராட்டமே பின்னர் 1975 அளவில் வானம்பாடிகள் இயக்கத்தை விரிசலுக்குள்ளாக்கியது எனக் க. பூரணச்சந்திரன் கூறுகிறார் (புதுக்கவிதையும் புதுப்பிரக்ஞையும், ப. 6).

வசதிக்காகப் புதுக்கவிதையின் காலக்கட்டத்தை மூன்றாகப் பகுக்கலாம். 1930 முதல் 1940 வரை முதற்கட்டம்; மணிக்கொடியும் கலாமோகினியும் புதுக்கவிதைக்கு மேடை அமைத்த காலம். 1960 முதல் 1970 வரை இரண்டாவது கட்டம்; எழுத்தும் நடையும் புதுக் கவிதைக்கு ஒத்திகை நடத்திய காலம். எழுபதிற்குப் பிறகு மூன்றாவது கட்டம்; கசடதபறவும் வானம் பாடியும் புதுக்கவிதையை அரங்கேற்றிய காலம் (மீரா, எதிர்காலத் தமிழ்க் கவிதை, அன்னம், புதுக்கோட்டை, 1985, ப. 73) என்பர். இதனின்றும் புதுக்கவிதையின் வளர்ச்சி இலக்கியச் சிற்றிதழ் களோடு பிணைந்து கிடக்கக் காணலாம். கலாமோகினி, கிராம ஊழியன், கனவு, கணையாழி, மீட்சி, விருட்சம், காலச்சுவடு என அவ்விதழ்களின் பட்டியலும் நீண்டது; தொடர்வது. சுமார் எழுபது இதழ்களை மது.ச. விமலானந்தம் குறிப்பிட்டுள்ளார்.

புதுக்கவிதையின் வளர்ச்சிப் படிகளில் ந. பிச்சமூர்த்தியின் காட்டுவாத்து (1962); தி.சோ. வேணுகோபாலனின் கோடைவயல் (1965); எஸ். வைத்தீஸ்வரனின் உதய நிழல் (1970); ந. காமராசனின் கறுப்பு மலர்கள் (1971); மீராவின் கனவுகள் + கற்பனைகள் = காகிதங்கள் (1971) இன்குலாப் கவிதைகள் (1972), தர்மு அரூப்இன் கண்ணாடியுள்ளிருந்து (1973); ஞானக் கூத்தனின் அன்று வேறு கிழமை (1973), தமிழ் நாடனின் மண்ணின் மாண்பு (1973), சி. மணியின் வரும் போகும் (1974), புவியரசுவின் இதுதான் (1975), பசவய்யாவின் நடுநசிநாய்கள் (1975) என்பன குறிப்பிடத்தக்க நூல்களுள் சிலவாகும்.

எழுபது, எண்பது, தொண்ணூறுகளில் புதுக்கவிதைத் தொகுப்புகள் தொடர்ச்சியாகச் சிறிது சிறிதாகப் பெருக்கம் காட்டியுள்ளன. புதுக்கவிதை முயற்சியில் ஈடுபட்ட பலப்பல இளைஞர்கள் உற்சாகமாகத் தங்கள் கவிதைகளைத் தொகுத்து நூலாக்கம் செய்துள்ளனர். யதார்த்தத்தைக் கவிதையில் கொண்டு வந்து ஓரளவு சாதனை நிகழ்த்தியவர்கள் என்றால் முற்போக்குக் கவிஞர்கள் எவரையும் விட சி. மணி, ஞானக்கூத்தன், ஆத்மாநாம், கலாப்பிரியா போன்றோரைத் தான் சொல்ல வேண்டும். ஒரு சில கவிதைகளில் மு. சிவராமு, நாரணோ ஜெயராமன் போன்றோரும் கூட என்பர் க. பூரணச்சந்திரன் (புதுக்கவிதையும் புதுப்பிரக்ஞையும், ப. 16).

புதுமை நோக்க வடிவத்தில் புதுமை நோக்க உள்ளடக்கத்தைப் படைத்த தர்மு அரூப், சிவராம், நகுலன், அபி போன்றோர்; புதுமை நோக்க உள்ளடக்கத்தை மரபு சார் வடிவத்தில் வழங்கிய ஞானக்கூத்தன்; கவர்ச்சி வாத உள்ளடக்கத்தைக் கவர்ச்சிவாத வடிவத்தில் வழங்கியதுடன் அமையாமல் புதுமை நோக்க உத்திகளில் சமகாலச் சமுதாயத் திறனாய்வையும் வழங்க முனைந்த மு. மேத்தா; உத்தி, உள்ளடக்க ஆய்வில் ஈடுபடாது சமுதாய அங்கதத்தையே உள்ளடக்கமாகவும் வடிவமாகவும் கருதி கவி புனைந்த செல்வகணபதி, இன்குலாப், பல்வேறு இலக்கியப் படைப்பாக்க முறைகளில் ஈடுபட்ட தமிழன்பன், கவிதைத் தொகுப்பிற்கும் கவியரங்கிற்கும் வெவ் வேறு பாடநெறிகளைப் பின்பற்றி, புதுமை நோக்கம், கவர்ச்சி வாதம் இரண்டிலுமே இணையற்று விளங்கும் அப்துல் ரகுமான் எனப் பிறிதொரு பட்டியலை சி.இ. மறைமலை வழங்குகிறார் (சமூகவியல் நோக்கில் புதுக்கவிதை, மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 1991, ப. 92). பழமலய், துறவி, அரிமதி தென்னகன், நீலமணி, அறிவுமதி, பாப்ரியா இவர்களுடன் மாலதி ஹரீந்திரன், நிர்மலா சுரேஷ், பொன்மணி வைரமுத்து, மீ. உமாமஹேஸ்வரி, ஆண்டாள் பிரியதர்சினி போன்ற பெண்பாற் கவிஞரும் இங்கு எண்ணத்தக்கவர்.

தனிப்பாடல் போன்ற பொதுஅமைப்புப் பெற்ற புதுக்கவிதையில் நீண்ட படைப்புகளும் கதையமைப்புடன் வெளிப்பட்டுள்ளன. சிற்பியின் சிகரங்கள் பொடியாகும், சாக்கடைகளும் தான் இன்னும் வற்றிவிடவில்லை என்பன சிறந்த கதைக்கவிகளாகக் கருதப்படுகின்றன. பாரதியின் வாழ்க்கையைக் 'கவிராஜன் கதை'யாகப் புதுக்கவிதையில் வைரமுத்து புனைந்து வெற்றி கண்டார். இது வாலியை இந்திய காப்பியங்களான

இராமாயணத்தையும், பாரதத்தையும் முறையே அவதார புருஷனாகவும், பாண்டவர் பூமியாகவும் படைக்கத் தூண்டியது. சங்கப்பாக்களைப் புதுக்கவிதையாக்கும் முயற்சியை வெற்றிப் பேரொளி கொண்டுள்ளார்.

"புதுமை நோக்கக் கலைஞர்களால் குறுகிய வட்டத்திற்குள் அடைக்கப்பட்டிருந்த புதுக்கவிதையை எளிமைப்படுத்திப் பரவல் தொடர்புச் சாதனங்களுக்கு ஏற்ற வடிவமைப்புக் கூறுகளை அறிமுகப்படுத்தியதனாலேயே வானம்பாடி மக்கள் செல்வாக்கு பெற்றது. இதன் விளைவாகக் கலைநுணுக்கக்கூறுகளுக்கு முதன்மை அளிக்கப்படாமல் கவர்ச்சிவாதக் கூறுகளுக்கே முதன்மையளிக்கப் பட்டது. கவர்ச்சி வாதம் இருவகைப்படும். மக்கள் கருத்தைக் கவரும் கவர்ச்சியான உள்ளடக்கத்திற்கு முதன்மையளித்தல் உள்ளடக்கக் கவர்ச்சி வாதமாகும். அரசியல்வாதிகளைக் கடுமையாகத் திறனாய்வு செய்தல், செல்வர்கள் மீது சீற்றம், ஏழைகளிடம் பரிவுணர்வு, பெண்களுக்குரிய சிக்கல்களாகிய வரதட்சணைக் கொடுமை, திருமணம் தள்ளிப் போவதால் முதிர் கன்னியராக வாழ்வோர் மீது கழிவிரக்கம், வேலையில்லாத் திண்டாட்டத்தின் கொடுமை, பரத்தையருக்குப் பரிந்து பேசுவதைப் போல் இடக்கரடக்கல் செய்திகளை எடுத்துக்கூறல், உள்நாட்டு அரசியலை ஓரங்கட்டி விட்டு அயல்நாட்டு அரசியல் நிகழ்ச்சிகளைக் கடுமையாகத் திறனாய்வு செய்தல் முதலானவை இதன் பாடுபொருளாகின்றன.

இரண்டாவது வடிவமைப்புக் கவர்ச்சிவாதக் கூறுகளாகும். இதனுள் நகைச்சுவைத் துணுக்குகளைப் போல அல்லது நகைச்சுவைத் துணுக்குகளாகவே கவிதை படைத்தல், இரட்டுற மொழிதல் என்னும் உத்தியைப் பின்பற்றி நகைச்சுவை விளைத்தல், விடுகதையைப் போன்ற கவிதை அமைப்பு முறை, முழக்கங்களைப் போலக் கவிதைகளை உருவாக்கல், எதுகை, மோனை, இயைபுத் தொடைகளைப் பயன்படுத்தி வார்த்தை களால் பெறும் இன்பத்தையே குறிக்கோளாகக் கொண்டு கவிதை அமைத்தல் இதன்பாற்படும். எத்தகைய குறிக்கோளும் இன்றி முரண், படிமம் ஆகியவற்றை வெறும் சுவை கருதிப் படைத்தல் இதன் மற்றொரு கூறாகும். இதன் விளைவாகப் புதுக்கவிதையில் கவர்ச்சி வாதம் கொடிகட்டிப் பறந்தது. எனவே இதன் அடுத்த கட்டமாக வணிக மய இலக்கியங்கள் செழிக்கத் தொடங்கின.

ஏக்கங்கள், விருப்பங்கள், பயங்கள், கனவுகள் ஆகிய வற்றுக்கான வடிகாலாக வெகுசன வாசிப்பு அமைகின்றது. இதன் விளைவாக இலக்கியம் ஊற்றமிகு இலக்கியம், (Serious Literature) நுகர்ச்சி முறைமைப் பாங்கான இலக்கியம் (Consumerist Literature)

என இருவகைப் போக்கில் பிரிந்துநின்றது. வெகுசனத் தொடர்புச் சாதனங்களாகச் செயற்பட்ட பத்திரிகைகள் நுகர்ச்சி முறைமைப் பாங்கான இலக்கியங்களையே வளர்த்தன. இத்தகைய சூழலில் ஊற்றமிகு இலக்கியங்களை மட்டுமின்றி மேம்போக்கான எழுத்துகளையும் படைத்தால் வாசகர் கவனத்தைப் பெரிதும் கவர இயலும் என்னும் நிலைக்குக் கவிஞர்கள் ஆளாயினர். இருவகைப் பண்பாட்டிற்கு ஏற்பவும் எழுதுவதன் மூலம் தங்களைப் பெரியதொரு வாசகர் வட்டத்திற்கு உரியவராக்கியதில் அப்துல்ரகுமானும், தமிழன்பனும் குறித்தற்குரியராவர். எனினும் புதுக்கவிதையை வெகுசன வாசிப்புக்கு ஏற்ற இலக்கிய வடிவமாக மாற்றிய பெருமை மு. மேத்தாவுக்கே உரியது" (இ. மறைமலை, சமூகவியல் நோக்கில் புதுக்கவிதை பக். 38-39, பக். 49-50).

புதுக்கவிதை வரலாற்றில் ஏற்பட்ட மாற்றத்தை வீழ்ச்சியாகக் கருதும் ஆய்வாளர் அதனை, 'வாசகர் உள்ளத்தோடு கவிஞனின் உணர்வுகள் உறவாடும் வகையில் உறுதுணை புரிந்த ஆற்றல் வாய்ந்த ஊடகமாக மரபுக்கவிதை விளங்கியது. ஆனால் புதுக்கவிதை வாசகரது அறிவுக்கு விருந்தாக, சிந்தனைக்கு மருந்தாக அமைய வேண்டும் என்ற நோக்கத்தில் தனது பயணத்தைத் தொடங்கியது. உணர்வை முதன்மைப்படுத்தாமல் அறிவை முதன்மைப்படுத்தியதன் விளைவாகவே குறியீடு, படிமம், இருண்மை என்னும் உத்திகள் புதுக்கவிதை உலகில் கோலோச்சின. இவ்வுத்திகளின் மேலாண்மை வாசகரிடமிருந்து புதுக்கவிதையை அன்னியப்படுத்திவிடுமோ என்னும் அச்சம் கொண்ட கவிஞர்கள் எதனையும் மிகை எளிமைப்படுத்திவிடும் ஒரு பொதுநோக்கை மேற்கொண்டனர். கடுநெறியான படிப்புக்குரிய (Serious Reading) நெறியில் கவிதை அமைவது வாசகருக்கும் கவிதைக்குமிடையே பெருத்த இடைவெளியை ஏற்படுத்திவிடும் என்றஞ்சினர். இதன் விளைவாக, எளிய நிலையிலான படிப்புக்குரிய வடிவமாகப் புதுக் கவிதையை மாற்றிவிட்டனர். இத்தகைய மாற்றத்தைச் சாதிப்பதற்கும் பரப்புவதற்கும் கவியரங்கம், வானொலி, தொலைக்காட்சி, திரைப்படம் ஆகியவை பெரிதும் துணைபுரிந்தன. இத்தகைய மாற்றத்தின் தோற்றுவாயாகவே வானம்பாடி இயக்கம் செயற்பட்டது' என விளக்குகிறார் (மேற்படி 87).

வானம்பாடிக் காலத்துக்குப்பின் தமிழகக் கவிதையில் இரண்டு மிகப்பெரிய சக்திகளாகச் செயல்பட்டிருப்பவர்கள் கலாப்ரியாவும் ஆத்மாநாமும். தங்களின் இயல்பான கவித்துவத்தாலும் கூர்மையான பார்வையாலும் தமிழ்க் கவிதைக்குப் புதிய

பரிமாணங்களை இவர்கள் தந்துள்ளார்கள். தங்கள் மீது தாங்கள் கொண்ட சுய ஈடுபாடு (Self - Commitment) சமூக மற்றும் புற இயக்கங்கள் மீது கொண்ட ஈடுபாடு (Social - Commitment) ஆகிய இரண்டுமே இவர்கள் இருவர் மீதும் ஆதிக்கம் செலுத்தின. சமூக ஈடுபாடு கலாப்ரியாவிடம் ஒரு அமுங்கின தொனியில் வெளிப் படுகிறது; ஆத்மாநாமிடம் அது அங்கதப் பாணியிலும் சமயங்களில் உரத்தும் வெளிப்படுகின்றது. கவிதைகளின் வடிவத்திலும் மொழிப்பயன்பாட்டிலும் இருவரும் வெற்றிகரமான சோதனைகளைச் செய்துள்ளனர் (ஆர். சிவக்குமார், புதுக்கவிதையும் புதுப்பிரக்ஞையும் பக். 45-46).

எதையும் பாடலாம் எப்படியும் பாடலாம் என்ற உரிமையால் கவிதையெழுத விரும்புவோர் எல்லாம் புதுக்கவிதை படைப்பாளராகின்றனர். எனவே பலவித பொருண்மைகள், குறிப்பாக நடப்பியல் புதுக்கவிதையில் மிகுந்த ஆளுமை பெற்றுள்ளது. நிகழ்கால நிகழ்வுகளுக்கு இலக்கியப் பதிவினை அளிப்பதில் சங்க இலக்கியங்களுக்குப் பின் புதுக்கவிதைகளே முன்னிற்கின்றன. வெண்மணி படுகொலை, ஈழத்தமிழர் துயரம்...... எனப் பல பாடுபொருளாகியுள்ளன. 'எவனோ தூண்டிவிட்ட சண்டையாலே அடிச்சுக்கிட்டு அழிந்தோம், இனியேனும் முழிச்சுக்கிட்டு ஒன்று சேர்ந்து உழைப்போம். அல்லா ராமர் கோயில்களை அப்புறமா படைப்போம்' (வானம் தொலைந்து விடவில்லை, ஜீவி, ப. 23) என்பது போன்று அவை எதிர்காலச் சந்ததியினருக்கான எச்சரிக்கையாக, அறிவுறுத்தலாக அமைகின்றன.

இன்றைய இலக்கியப் போக்கிற்கு ஏற்ப சமூகச் சீர்கேடுகளை முன்னிறுத்துவதும், சமூகச் சீர்திருத்தத்திற்கு வழிகாட்டுவதும் மிகுதியாக அமையக் காணலாம்.

**கற்பினை**
**விலைபேசும்**
**காவல்நிலையங்கள்**
**கையெழுத்துக்காக**
**மடியில் கைவைக்கும்**
**தாசில்தார் அலுவலகங்கள்........**
**பணம் படைத்தோருக்குப் பத்தும் செய்யும்**
**நீதிமன்றங்கள்........**
**சொந்த**
**ஆதாயம் தேடி**
**ஆட்சிக்கு வரும்**

அரசியல்வாதிகள்
பாலுணர்ச்சிகளை
அவிழ்த்துவிட்டு
எழுத்துக்களை
விபச்சாரம் செய்யும் வார
நாளிதழ்கள்
சாதித்தீயால்
குடிசைகளை எரிக்கும்
நாகரிக உலகின்
நச்சுப் பாம்புகள்
இவை இல்லாத
புதிய சமுதாயம்
கொண்டுவர
ஒரு
புரட்சிமழை
பெய்திட வைப்போம்

*(கோகிலா தங்கசாமி, நீந்தத் தெரியாத மீன்கள், பக். 12-14)*

என்பது போன்று சமூக அவலங்கள் தொகுத்தும், தனித்தும் பல வாறாகப் பேசப்படுகின்றன. இவற்றிற்கு அடிப்படைக் காரண மாய் அரசியலும் ஊழலும் அமைவதைப் பலரும் எடுத்துரைக்கின்றனர்.

அரசியல் வட்டாரத்தில்
லட்சம் என்பதெல்லாம்
இப்போது அலட்சியமாகிறது
கோடி என்றால் மட்டுமே
கொஞ்சம் புன்னகை தெரிகிறது.

*(புதுமைதாசன் (தொகு), விடியல் விழுதுகள், ப. 47)*

என்பதைக் காட்டாக்கலாம். ஆட்சியாளருடன் அதிகார இனமும் இணைந்து கொண்டதும்,

கொறஞ்ச சம்பள ஆயாவை
குத்தம் சொல்ல மூணாபீசரு
ரண்டாபீசரு முகடு ஒர்த்தன்
சிரிப்பதே இல்லை
சிரிக்காத ஆபீசர்க்கு
சப்போர்ட் மூணு எம்.எல்.ஏ
ரண்டு பயல் பொறுக்கி
ஒருத்தன் கேடி லிஸ்டுல *(நவகவி, தரிசனம், ப. 103)*

என எடுத்துக்காட்டப்பட்டுள்ளது. இவற்றிலிருந்து விடுபட வேண்டுமானால் சமூக அங்கத்தினர் ஒவ்வொருவரும் விழிப்புணர்ச்சி பெறவேண்டுமென்பதை,

உனக்கு
மேய்ப்பவன் இல்லை
நீ
மேய்க்கப்படுபவனும் இல்லை
உன் தேவைகள்
உனக்குத் தெரிந்தாலும்
உன் தேவைகள்
உனக்கு மறுக்கப்படுவதாலும்
இஸங்களின் இறுக்கிய பிடியில்
இற்றுப் போகாதே
தவமும் தத்துவமும்
தீர்வல்ல
உன்னை
நீயே
மேய்க்கக் கற்றுக்கொள்
இல்லையேல்
அடுத்தவன் உணவுக்கு
நீ.......... மேய்க்கப்படுவாய்

*(அ.வை. பழனிச்சாமி, வெண்மை ஒரு நிறமல்ல, ப. 36)*

என்பது போன்ற கவிதைகள் தந்து எண்ணத் தூண்டுகின்றன. இன்றைய அறிவியலின் வளர்ச்சி புதுக்கவிதையில் நன்கு தடம் பதித்து மரபுக்கவிதையினின்றும் தான் சமூக அக்கறையில் மேலோங்கி நிற்பதை உணர்த்துகிறது.

படிப்படியாய் மரங்கள் – மேகம்
படிந்துவரும் வழிகள்
வெட்டி வெட்டிச் சாய்க்கிறோம்
விறகாக்கி மகிழ்கிறோம்
இறங்கி வர மழைமட்டும்
இருக்காது
இயற்கை மனம் நீண்ட காலம்
பொறுக்காது

*(அரிமதி தென்னகன், கிள்ளைகளே கேளுங்கள், ப. 16)*

எனச் சுற்றுச்சூழலில் விழிப்புணர்வு வேண்டப்படுகிறது. 'மனித குலத்தின் முன்னேற்றம் முழுமையான விஞ்ஞானமாகும்'

(சிந்தனையின் நிழல்கள், செ. வெற்றிவேல், ப. 26) என்ற உணர்வு புதுக்கவிதையாளரிடையே நிறைந்துள்ளது.

இன்று இலக்கிய உலகில் எல்லாத் துறைகளிலும் சிறப்பிடம் பெற்றுள்ள பெண்ணியச்சிந்தனை புதுக்கவிதைகளிலும் பெரும் செல்வாக்குப் பெற்றுள்ளது. பெண்ணியச் சிந்தனைகளை முழுமையாகப் புரிந்து கொண்ட, பெண் விடுதலைக்காக உண்மையான அக்கறையுடன், செவ்விய நோக்கில், இயல்பு நெறியில் உள்ளார்ந்த நேயத்தோடு காட்சிப் படுத்துபவர்களாக மாலதி ஹரீந்திரன் (மாலதி ஹரீந்திரன் கவிதைகள்), துறவி (தரையில் ஓடும் ரயில்கள்), தமிழன்பன் (அந்த நந்தனை எரிச்ச நெருப்பின் மிச்சம்) போன்றோர் அமைகின்றனர். எனினும் பல கவிதைகள் இன்று அதிகமாகப் பேசப்படும் பொருள் பற்றித் தாமும் பாடவேண்டும் என்ற உணர்வில் மட்டுமே எழுந்துள்ளதாகத் தோன்றுகின்றன. பெண்ணியச் சிந்தனையில் ஆழங்கால்பட்டு ஆய்ந்து தோய்ந்து முகிழ்த்தவைகளாகத் தோன்றவில்லை.

பெண்ணியப் பார்வையைப் புதுக்கவிதைகளில் படரவிடும் பொழுது 'ஊக்கம்' கொள்ளும் அளவிற்கு விழிப்புணர்ச்சியும் எழுச்சியும் காட்டப்படுகிறது என்பது உண்மையே எனினும் இவற்றிற்குப் பின்னடைவு ஏற்படுத்தும் வகையில் மரபு போற்றும் பழமைவாதமும் பரவலாக அமைகிறது. எனவே சமூகத்தில் பெண் விடுதலை பற்றிய எதிர்க்குரலும் ஒலிக்கக் காண்கிறோம். ஆண்படைப்பாளர் பலரும் பெண் முன்னேற்றத்திற்குப் போற்றத் தக்க நிலையில் தம் பங்களிப்பை அளித்திருப்பது போல் பெண் படைப்பாளரிடமும் குறிப்பிடத்தக்க விழிப்புணர்ச்சி வெளிப் பட்டுள்ளது வரவேற்கத்தக்கது. எனினும் இவர் தம் எண்ணிக்கை இன்னும் பல்கிப் பெருக வேண்டும்.

உருகும் மெழுகென்றும், தியாகச் சுடரென்றும் வருணனைகள் செய்து, அச்சம், மடம், நாணம் என்றும் பெண்மைக்கு அழகு என வாழ்த்துப்பா பாடி அதிகார வேலிக்குள் நம்மைச் சிக்க வைத்த மனித மிருகம் எது? எவன்? யார்? என்ற வினா (மீ. உமா மஹேஸ்வரி, சுட்டும் விழிச்சுடர், ப. 25) பெண்ணிடையே வெடித்துள்ள நிலை, 'பெண் சமத்துவம்' இனி விரைவில் என்ற நம்பிக்கையைத் தோற்றுவித்துள்ளது (ச. சிவகாமி, காலச்சுழலில் பெண், மாதவி பதிப்பகம், சென்னை, 1996, பக். 129-147). ஆகவே,

அந்த
வானவில்கள்
நாண வில்வளைக்க வேண்டும்
கண்ணீர்சுரக்கும்
விழிகளில்
கனல்நிரப்பவேண்டும் ஆவேச
புறப்பாட்டில்
சமூகமுரண்பாடு
சரியாக்கப்படவேண்டும்
நம்பிக்கையிருக்கிறது
வளைக்கரங்கள்அந்த
வரலாறு எழுதும்

*(ஜீவா, வானம் தொலைந்து விடவில்லை, பக். 52-53)*

எனத் துணியலாம்.

தமிழினத்தை முன்னிறுத்தியே புதுக்கவிதை படைத்தல் அமையினும் மிக அருகிய அளவில் உலக சமுதாயத்தை ஒருங்கிணைத்துப் பார்க்கும் பார்வையும் அமைந்து, தன் சமூகப் பொறுப்புணர்ச்சியை வெளிப்படுத்துகிறது.

இனி
சீனத்தில் சீனனோ
அமெரிக்காவில் அமெரிக்கனோ
இந்தியாவில் இந்தியனோ
இல்லை
எங்கும் மனிதனே இருப்பான்.........
ஓட்டுப் போடாத
ஆகாயம் போல - இந்த
உலகமும் ஒன்றேதான்........
மனிதமே - இனி மதம்

*(தமிழன்பன்,*
*அந்த நந்தனை எரிச்ச நெருப்பின் மிச்சம் ப. 53-57)*

என்பது சான்றுரைக்கும். இத்தகு பொறுப்புணர்ச்சி சமூகச் சீர்கேட்டாளரைக் கண்டிப்பதிலும் காணப்படுகிறது. 'வீரப்பன் பட்டினியாம், விவஸ்தையில்லா செய்தி...... வந்த அதிகாரிகள் வசமாய்ச் சுட்டு வீழ்த்தி வந்த சதிகாரனிவன், சாகச வீரப்பனிவன் பட்டினி கிடக்கிறானாம். பரபரப்பாய்ச் செய்தியிங்கு, பொட்டினிலே தட்டினாலும் புத்தி திருந்திடாரே' என இதழியல்

அறம் துறந்த இதழ்களைக் கண்டித்து அதற்கு வேண்டிய சமூக நல நோக்கு இங்கு வலியுறுத்தப்படுகிறது (கொ. கலைச்செல்வி, ஈர நெஞ்சங்கள், ப. 18).

தொன்றுதொட்டுவரும் மரபுப் பாடுபொருளான இயற்கை, காதல் என்பனவும் குறிப்பிடத்தக்களவு இடம் பெற்றுள்ளன. மனித வாழ்வு குறித்த தங்கள் பார்வையை வெளிப் படுத்தும்போது இயற்கையை ஓரளவுக்குத் தங்கள் கவிதைகளின் இயக்கத்திற்குப் பயன்படுத்துபவர்கள் என்று காசியபன், கல்யாண்ஜி, ஆர். ராஜ கோபாலன், சுகுமாரன், பிரம்மராஜன் ஆகியோரைக் குறிப்பிடலாம் என்பர். பெரும்பாலும் பெண்ணின் அழகை விவரிக்கும் ரீதியிலோ அல்லது காதல் தோல்வியை மிகைப்படுத்தப்பட்ட கூற்றுக்களில் சொல்வதாகவோ இங்குக் கவிதைகள் எழுதப்படுகின்றன. கிடைப்பவற்றுள் சிறந்த காதல் கவிதைகளைத் தேவதேவன், கலாப்ரியா, பிரம்மராஜன் ஆகியோர் எழுதியுள்ளனர் என்பர் (ஆர். சிவக்குமார், முன் சுட்டியது, பக். 40-41).

புதுக்கவிதை நூல் என்றால் காதல் தோல்வி, காந்தி, வரதட்சிணை, முதிர் கன்னியர் துயரம், வேலையில்லாத் திண்டாட்டம், ஏழ்மை கண்டு இரங்கல், ஆகியவை பற்றிய பாடல்களின் தொகுப்பாகவிருந்தால் போதும் என்ற மன நிலைக்குக் கவிஞர் ஆளாகிவிட்டமையை இன்று வெளி வந்துள்ள பெரும்பாலான கவிதை நூல்கள் காட்டுகின்றன என்ற கூற்றும் (சி.இ. மறைமலை, புதுக்கவிதையின் தேக்கநிலை, திருமகள் நிலையம், சென்னை, 1986, ப. 60) ஏற்புடையதே.

எளிய நடையில் அனைவரும் புரிந்து கொள்ளும் வண்ணம் கவிதை படைத்தல் வேண்டும் எனும் புதுக்கவிதை நோக்கம், புதுக்கவிதை படைப்பாளர் அனைவராலும் பின்பற்றப் படுதல் இல்லை. படிமமும் குறியீடும் ஆளுமை கொள்கின்றன. இவற்றின் காரணமாகப் பல கவிதைகளில் இருண்மைநிலை அமைவதும் சுட்டத்தக்கது. புதுக்கவிதை விற்பின்னர்களாகப் போற்றப்படும் பெருங்கவிஞரிடையே இவை அதிகமாகக் காணப் படுகின்றன. மீராவின்

**எங்கள் தலைவர்**
**எட்டி உதைத்தார்**
**வறுமை வேகவேகமாய் வெளியேறிற்று**
**பரட்டைத் தலையும் எலும்பும் தோலும்**
**கிழிந்த கந்தையுமாக** *(ஊசிகள் ப. 14)*

எனும் கவிதையைக் குறியீட்டிற்குச் சான்றாக்கலாம். நடைமுறை வாழ்க்கையில் காணும் காட்சிகள் படிமங்களாகப் புதுக்கவிதையில் சிறப்புறுவதை எ. வைதீஸ்வரனின்,

இந்த நகரச் சுவர்கள்
நகராதபாம்புகள்
அடிக்கடி வால் போஸ்டர் தோல்
வளர்ந்து தடித்துவிட
நள்ளிரவில்
அவசரமாய் சட்டை யுரித்துப்
புதுத் தோலில் விடிந்து
பளபளக்கும்
பட்டணத்துப் பாம்புகள்
இந்த நகரச் சுவர்கள் *(உதய நிழல்)*

எனும் ‘உரிப்பு’ கவிதையில் காணலாம். பாலாவின் ‘புதுக்கவிதை ஒரு புதுப்பார்வை’ நூல் இவற்றை விரிவாக ஆராய்கிறது.

இருண்மைக் கவிதை நிகழ்காலத்தில் இருட்டடிப்புச் செய்யப்பட்ட வாழ்வை, உண்மைகளை வாசகருக்கு வெளிச்சமிட்டுக் காட்டும் அதே நேரத்தில் கருத்துகளைச் செய்திகளாய்ச் சொல்லும் போக்கைக் கைவிட்டு உணர்த்த முற்படுகிறது. புதுக் கவிதையில் கவிதைத் தன்மைக்குக் காரணமாக உள்ளது. ஆனால் அளவுக்கு மீறினால் இருண்மை, கவிதையையே இருட்டடிப்புச் செய்துவிடுவதும் உண்டு. உத்தி உள்ளடக்கத்தை விழுங்கிவிடும் விபத்து நேராமல் பார்த்துக் கொள்ள வேண்டும். இன்குலாப்பின் ‘கேழ்வரகில் நெய் வடிகிறது என்றால்’, தமிழன்பனின் ‘பலபகல்கள் வேகும் ஒரு ராத்திரி’, தணிகைச் செல்வனின் ‘கோழியே வாழிய, ஆத்மாநாமின் ‘அவசரம்’, அக்கினிபுத்திரனின் இங்கே ரிப்பேர் செய்யப்படும், ஜனகப்ரியாவின் ‘யார் அறியாதவர்கள்’ முதலான கவிதைகளில் இருண்மையைக் காணலாம். தருமுசிவராமு, பிரம்ம ராஜன், அபி, ஆனந்த் போன்ற கவிஞர்களும் இருண்மையைக் கையாள்கின்றனர். கவிதையை மக்கள் தொடர்பு சாதனமாகக் கையாளும் சார்பு நிலைக் கவிஞர்களின் கவிதைகளில் பெரும்பாலும் இருண்மை இடம் பெறுவதில்லை என்பர் (சு. அரங்கராசு, முன்சுட்டியது, ப. 300).

புதுக்கவிதையின் பிற வெளியீட்டு உத்திகளில் குறிப்பிடத் தக்க தொன்றாக அங்கதம் அமைகிறது.

எங்கள் நாட்டின் எம்.எல்.ஏக்களே
இணையிலா வீரராய் இருப்பதனாலே

**சட்டசபைக்குள் யுத்த காண்டம்**
**சற்றும் குறைவின்றி நடக்கக் காண்கிறோம்**

*(இளந்தேவன், வெளிச்ச விரல்கள், ப. 38)*

மற்றும் ஒரு பூமாலையின் புலம்பலாக அமையும்,

**மந்தி மந்திரியானாலும்**
**மந்திரி மந்தியானாலும்**
**நஷ்டம் என்னவோ எனக்கே எனக்கு**

*(கிருஷ்ணன் பாலா, இந்த ராஜபாட்டையில், ப. 59)*

என்பன சான்றுகள். அரசியல் பாடும் கவிதைகளே மிகுதியும் இதற்கு இடமளிக்கின்றன.

இராமாயணம், மகாபாரதம், பிற புராணங்கள், சிலம்பு, வள்ளுவர், பாரதி, காந்தி ஆகியோரின் செல்வாக்கு தனியாய்விற்கு உட்படும் அளவில் அமைகின்றன. இவற்றிலும் இதிகாச இலக்கியங்களின் ஆளுமை மேலோங்கியுள்ளது. படிமம், குறியீடு முதலான வடிவங்களில் அரசியல், சமுதாயம், வாழ்வியல் அவலங் களை வெளிப்படுத்த இவை பெருந்துணையாகின்றன. காதல் பாடுதற்கும், பெண்ணுரிமை, பெண்விடுதலையை வலியுறுத்தவும் கையாண்டுள்ளனர். இலங்கைத் தமிழர் நிலையும் இராமாயணப் பயன்பாட்டை அதிகமாக்கியுள்ளது. இராமாயணப் பயன் பாட்டில் பெருவிருப்புடையவராக மு. மேத்தா அமைகிறார். கதை நிகழ்வுகள், கதை மாந்தர் இரண்டுமே புதுக்கவிதை வெளியீட்டிற்குச் சிறப்பளிக்கின்றன. இப்பழங்கதைகள் இவற்றில் மறு மதிப்பீடாக, அல்லது புதிய பார்வையில் தோன்றிய புதுக் குரலாக அமைவதை,

**இராமாயணத்தில்**
**எனக்குப்பிடித்த பாத்திரம்**
**வண்ணான் தான்**
**ஏனென்றால்**
**உதாரண புருஷனான**
**ஸ்ரீராமன் உள்ளத்திலிருந்த**
**சந்தேக அழுக்கை**
**வெளுத்தவன் அவன் தானே**

எனும் வ. தேனப்பனின் 'என்னைக் கவர்ந்தவர்' கவிதையில் காணலாம். இத்தகையனவும் குறிப்பிடத்தக்களவில் உண்டு.

**மாயன் மந்திரியானால் என்ன?**
**மாடுகளுக்குப் புல்லே போதும்**

*(தமிழன்பன், கருவறையிலிருந்து ஒருகுரல், ப. 34)*

அநீதிகள் வளரும் வாசல்களில்
சுரண்டல் முளைத்து வரும் முற்றங்களில்
தீண்டாமை வேரூன்றும் திண்ணைகளில்
உனது அக்கினிக் குஞ்சு
விரைந்துசென்று.........
தீமூட்டட்டும்
தீ மழை பொழியட்டும் தீயோர் மாளட்டும்
நெருப்பு வேள்வி நடக்கட்டும்
நீதிநெறி பிழைக்கட்டும்

*(இன்குலாப், கிழக்கும் பின் தொடரும், ப. 96)*

சிலரது எழுத்துக்கள்
திருதராஷ்டிரப் பிறவிக் குருடாய்
இருப்பதைக் கூடப்
பொறுக்க முடியும்
ஆனால் அவைதாம்
சமுதாயத்தின் பீம பலத்தை
உடைத்து நொறுக்கப் போலித்தழுவல் வேடம் பூண்டால்
நம் கைகள் இருப்பது
பூப்பறிப்பதற்காக அல்ல

*(கண்ணதாசனின் இதழ் கவிதைகள் ப. 114)*

என்பன மற்றும் சில சான்றுகள்.

தனித்தமிழ் இயக்கம், மொழிப்போர் என மொழியின் தூய்மைக்கும் உயர்விற்கும் போராட்டம் நிகழும் அதேவேளையில் ஆங்கிலமும் வடமொழியும் கலந்த புதுவித நடையைப் பின்பற்றுதலும் பரவலாகக் காணப்படுகிறது. இதனால் தமிழின் வளம் சிதைக்கப்படுதல் கண்கூடு. தமிழ் நாடன் போன்றோர் இதில் கவனம் செலுத்த வேண்டியவராவர். கவிதைத் தலைப்புகளே ஆங்கிலத்தில் அமைதல் கலாப்ரியா போன்ற பலரிடம் உண்டு. புதுக்கவிதை வாழ்விழந்துபோன மணிப்பிரவாள நடையின் மறு பிறவியோ எனத் தமிழ்க்குடிமகன் அச்சம் கொண்டுள்ளார் (பத்தாண்டுத் தமிழ்க் கவிதைகள், அறிவொளி பதிப்பகம், மதுரை, 1986, ப. 44). இவர் தமது ஆய்வேட்டில் புதுக்கவிதையில் தவிர்க்கப்பட வேண்டியவனவாகச் சொல்லுடைப்பு, இயைபின்மை (Discontinuity) அருவருப்பான படிமங்கள், தாள் வீணடிப்பு போன்றவற்றையும் சுட்டுகிறார் (மேற்படி, ப. 38-39).

''புதுக்கவிஞர்களைப் பற்றிக் கூறப்படும் குற்றச் சாட்டுகளில் ஒன்று அவர்களின் சொற்காமம். வார்த்தைகளை

(அக்கினி வீணைகள், பூமியின் பிரளயங்கள், வியர்வை நதிகள், இருட்டின் ஆத்மாக்கள்) வைத்து வாசகர்களைப் பிரமிப்படையச் செய்யலாம் என்ற பிரமை புதுக்கவிஞர்களை விட்டு விலக வேண்டும். வெறும் சப்தங்கள் எல்லாம் சங்கீதமாவதில்லை என்பதை உணர வேண்டும். இது போல மேலை நாட்டிலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட இலக்கியக் கோட்பாடுகளுக்காகவே Expressionism, Imagism, Surrealism, Symbolism போன்றவற்றைப் பொருத்தமில்லாமல் புகுத்துவதற்காகவே புதுக்கவிதை என்ற தப்பான எண்ணத்தையும் கைவிட வேண்டும்' என்ற (மீரா, எதிர்காலத் தமிழ்க்கவிதை, அகரம், சிவகங்கை, 1985, பக். 81-82) கருத்தும் புதுக்கவிதையாளர் சிந்திக்கவேண்டியதொன்றாகும்.

இவ்வெண்ணம், 'உரை என்ற ஊடகத்தால் தற்காலத் தன்மையும், எளிமையும், நேர்முகமும், பேச்சுச் சந்தமும் பெற்றது புதுக்கவிதை. அது தொடர்ந்து இறுகிவிட்ட தற்போதைய மேலை நாட்டுத் தாக்கத்திற்குட்பட்டுத் தானும் இறுகி இருண்மை வயப்பட்டு அபத்தக் கவிதை (absurd poetry)யாகவும் எதிர்க்கவிதை (anti poetry)யாகவும் திசைமாற்றம் பெற்று வருகிறது (சு. அரங்க ராசு, முன்சுட்டியது, ப. 343) என வலியுறுத்தப்படக் காணலாம். தமிழ்க்குடிமகன் புதுக்கவிதை யாளரில் ஒரு வகையினராகத் 'தரக்குறைவினர்' எனச் சிலரை இனங்காட்டி யிருப்பதும் (முன்சுட்டியது, பக். 14) அறியத்தக்கது.

பொதுவான சில எண்ணங்களும் தற்காலத் தமிழ்க் கவிதையாகப் பொங்கி வரும் புதுக்கவிதைகளை நோக்க எழுந்துள்ளன. புதுக்கவிதையாளர் சிந்தனையின் நடைமுறை யாக்கம் மிகுதியும் புரட்சிப்பாதையையே காட்டுகின்றன. காந்தீயத்தை ஆதரிப்போர் கூட 'தேசப் பிதாவே வா...... மீண்டும் வா..... ஆனால் நீ ஊன்றிய கைத்தடியை ஓங்கிப் பிடித்தபடி ஓடிவா' (போடி சிவாஜி, அன்புள்ளவர்க்கு, ப. 11) என்றே வேண்டியுள்ளனர். பொதுவுடைமைக் கருத்துகளை விதைக்கும் சிந்தனைகள் கிளிப் பிள்ளையின் குரலாகவே பலவிடங்களில் எதிரொலிக்கின்றன. "ஓ!. ஓ! செல்வம் உடைய பெரியீர் உங்களால் தாம் பாரி ஆக முடியவில்லையே..... அதுகளேனும் நக்சல் பாரி ஆகிப் போனால் என்ன? புழுங்கி ஏன் நீர் பொறாமைப் படுகிறீர் (மீரா, ஊசிகள், ப. 23), 'நாற்பது வயது விதவைகள் இருக்கலாம்' (தமிழ் மகன், ஆறறிவு மரங்கள், ப. 16) என்பன போன்ற பொருந்தாக் கூற்று களும் உண்டு. புரட்சி எனும் பெயரில் வன்முறைத் தூண்டலும், வாழ்வில் நம்பிக்கையின்மையை வறட்சியை வெளிப்படுத்துவதும் பரவலாகக் காணப்படுகின்றன. தம் மனம் போன போக்கில்

இலக்கியம் படைத்தற்கு ஏற்ற களம் புதுக்கவிதை எனக் கொண்டு, சமூக உணர்வு அற்ற படைப்பாளரால் தூவப்படும் நச்சு விதைகளிடமிருந்து தமிழிலக்கியத்தை, சமுதாயத்தைச் சீரழிக்காது பாதுகாத்தல் இன்றைய தேவை என்பதைத் திறனாய்வாளர் ஏற்றுக் கொள்கின்றனர்.

இரா. மீனாட்சி, தேவமகள், திரிசடை, ரோகிணி, கி. விசய லட்சுமி, தான்யா நடராசன், சாந்தா சுப்பிரமணியன், நிர்மலா விஸ்வநாதன், கோகிலா தங்கசாமி, சித்ரா, அரசு மணிமேகலை, தாமரை, வெண்ணிலா, கனிமொழி, ஆண்டாள் பிரியதர்சினி எனப் பெண் கவிஞரும் பாரதிபுத்திரன், புதிய ஜீவா, துரை சண்முகம், பிரளயன், அப்துல் காதர், பழநிபாரதி, ஆசு, விக்கிரமாதித்தன், ஆனந்த், நா. சுகுமாரன், ஆர். ராஜகோபாலன், ரா. சீனிவாசன், அப்பாஸ் என ஆண் கவிஞரும் ஆக வளர்ந்து வரும் புதுக்கவிஞரின் பட்டியலை சு. அரங்கராசு தம் நூலுள் (ப. 314, 375) சுட்டியுள்ளார்.

இன்று பொதுமக்களின் மிகுந்த செல்வாக்கைப் பெற்றுள்ள இப்புதுக்கவிதை, திறனாய்வு எனும் அறுவடைக்காகக் காத்திருக்கிறது. பதர் நீக்கிய மணிகள் தொகுக்கப்படும் பொழுது அவற்றினின்றும் புதுக்கவிதையின் இலக்கியக் கொள்கை பிழிந்தெடுக்கப்பட்டு அதன் தனித்துவமும் (இலக்கணம்) காணப் படலாம். தோற்ற காலத்தில் எழுந்த ஆவேசமான எதிர்ப்புகள் அடங்கிய நிலையில் புதுச்சிந்தனைகளுடன், புத்தொளி பாய்ச்சி, புதுவணி பூண்டு, புதுமணம் கொண்டு புதுக்கவிதை நூல் பல பலரால் வெளிவந்து கொண்டிருப்பது, தமிழ் இலக்கிய வரலாற்றில் தனக்கென ஓர் தனியிடத்தை அது உறுதியுடன் நிலை நிறுத்தியிருப்பதைக் காட்டுகிறது.

**சிற்பி (பாலசுப்பிரமணியம்) (1936 –)**

கோவை மாவட்டம் ஆத்துப் பொள்ளாச்சியில் பிறந்தவர். தமிழ்ப் பேராசிரியரான இவர் தமிழ்க் கவிதையுலகில் தடம் பதித்த 'வானம்பாடி' இயக்கத்தை வழி நடத்திய படைப்பாளி களுள் ஒருவர். பாரதியைத் தமக்கு எல்லாமுமாய்க் கொண்டுள்ள இவர், கம்பனும் பாரதிதாசனும் தம்மை ஆட்கொண்ட பிற கவிஞர்கள் என்பார். மலையாள மொழிப்பயிற்சியும் மார்க்சியமும் தம் படைப்புகளைச் செழுமைப்படுத்தியுள்ளன எனவும் கூறுவார். 1963 இல் முதல் கவிதைத் தொகுப்பான 'நிலவுப்பூ' வெளிவந்துள்ளது. இந்நூலுக்குப் பாரதிதாசனும்

கண்ணதாசனும் அணிந்துரை வழங்கியிருப்பது குறிப்பிடத் தக்கது. எழுத்து, இலக்கிய வட்டம், வானம்பாடி முதலான சிற்றிதழ்களால் தம் கவித்திறனை வளப்படுத்திக் கொண்டவர். 'நேரே நில் நிமிர்ந்து பார், நெஞ்சில் பட்டதை வளமாய் சொல்' என்பதைத் தம் கவிதைக் கோட்பாடாகக் கொண்டுள்ளார். தம் கவிதைகளைப் பற்றி,

**நாம் மரபின் பிள்ளை - புதுமையின் தோழன்**
**என் களம் - என் மண்**
**என் பாத்திரங்கள் என் மனிதர்கள்**
**என் பின்புலம் தமிழ் இலக்கியம்**
**மற்றவையும் மற்றவர்களும் எனக்கு**
**விருந்தினர்கள் மட்டுமே**

எனச் சுயவிமர்சனமும் செய்துள்ளார். மாறுபட்ட கோணங்களில் இயற்கையையும் மனிதனையும் காண விழைவதால் இவரது ஒவ்வொரு படைப்பும் ஒருவிதத் தனித்தன்மையுடன் திகழ்கின்றன. சிரித்த முத்துக்கள் (1968); புதிய சமுதாயத்தை ஒளிப்பறவை எனும் குறியீடாய்க் காட்டும் 'ஒளிப்பறவை' (1971); கவிதை வடிவத்திலும் நோக்கிலும் மாற்றங் கண்ட 'சர்ப்ப யாகம்' (1976); கதைக் கவிதையாக எழுதப்பட்ட காவியமான 'மௌன மயக்கங்கள்' (1982); சமுதாயச் சிந்தனைகளை எள்ளல் தொனியுடன் பல்வேறு புதிய முயற்சிகளைக் கவிதையுலகிற்கு அறிமுகப்படுத்திய 'புன்னகைப் பூக்கும் பூனைகள்' (1982); கவிஞரின் அகமுகப் பயணத்தை வெளிப்படுத்தும் 'சூரிய நிழல்' (1990); தமிழ்த் தொன்மங்களையும் தனித்த சிந்தனைகளையும் உள்ளடக்கிய 'இறகு' (1996); கவிதை நாடகமாய் 'ஆதிரை' (1993); என அவை அமைகின்றன. சிறுவர்க்கான கவிதைக் கொத்தாக 'வண்ணப் பூக்களையும்' படைத்துள்ளார். மற்றொரு கவிதை நாடகமான மனுஷி, காப்பியப் படைப்பாகக் கனிந்து கொண்டிருக்கும் 'இராமானுஜர்' ஆகியவற்றை விரைவில் இக்கவிஞரிடமிருந்து தமிழுலகு பெறும். 1990 வரையிலான இவரது படைப்புகள் முழுமையாகத் தொகுக்கப்பட்டு 'சிற்பியின் கவிதை வான'மாகக் (1996) கைக்கெட்டியுள்ளது.

கவிஞரின் செல்லமான நூலான 'மௌன மயக்கங்கள்' பரத்தமை நெருப்பில் வெந்து கரிந்த ஒரு மல்லிகையின் கதையாகும். 'பல நாட்கள் உணர்ச்சியின் விளிம்பில் அமர்ந்தபடி நான் பாத்திரங்களாக மாறி எழுதிய காவியம்' என்பது கவிக்

கூற்று. அகலிகையைத் தம் பல கவிதைகளுக்குக் குறியீடாக்கு கிறார். சிறந்த குறியீட்டுக் கவிதை 'மௌனம்'; தாழ்த்தப்பட்ட மக்களின் எழுச்சியாக அமையும் கதைக் கவிதையான 'சிகரங்கள் பொடியாகும்', படைப்புக்கு அனுபவமே அடிப்படை என்பதை உணர்த்தும் 'மதுரை வீரன்'; சமுதாய மாற்றத்தை வெளிப் படுத்தும் சர்ப்பயாகம், ஓ சகுந்தலா, மௌனத்திரை, ரோஷம், மரணம் பற்றிய சிந்தனையான 'மயான சத்தியங்கள்' அறிவியல் மனித உணர்வைக் கொன்று விடுமோ என்ற அச்சத்தில் தோன்றிய 'மனிதம்' என்பனவற்றைத் தம் சிறந்த கவிதைகளாகக் கவிஞர் இனம் காட்டுகிறார். (நானும் என் கவிதையும், சிற்பி பக். 48).

தமிழ், ஆங்கிலம், மலையாளம் ஆகிய மும்மொழிப் புலமையின் வீச்சினையும் இவர் படைப்புகளில் காணலாம். புத்தம் புது உவமைகள், உருவகங்கள், படிமங்கள் கவிதை வளத்திற்கு வலிமை சேர்ப்பன. சிந்தனைத் தெளிவும் செந்தமிழ் ஆற்றலும் உயர் நெறிகளில் கொண்டுள்ள பற்றும் கவிதைக்கு உள்ளார்ந்த வீறுகளாக அமைகின்றன. மரபில் எழுந்து, வானம் பாடியாய்ப் பறந்து, மண்ணில் விண் சமைக்கும் கவிதை வியப்புகளை இவரிடம் கண்டு வியக்கிறார்; சிற்பியின் கவிதை வானப் பதிப்பாசிரியர் ச. மெய்யப்பன் (நூல் - முன்னுரை).

### அப்துல் ரகுமான் (9-11-1937 -)

பாரதியார், பாரதிதாசன், கண்ணதாசன் வரிசையில் அடுத்து எண்ணத்தக்க சிறப்புடையவராக இம்மதுரைக் கவிஞர் திகழ்கிறார். தந்தை மஹதி எனும் சையத் அஹ்மத் பாய் சிறந்த உருதுக் கவிஞர். தாய் ஜைனப் பேகம். இவரது தந்தை வழிப் பாட்டனாரும் உருது, பார்ஸி ஆகிய மொழிகளில் மிகுந்த புலமையுடையவர். இல்லப் பாரம்பரியம் இவரில் இயல்பாகக் கவிதை ஊற்றைப் பெருகச் செய்துள்ளது. ஆங்கிலம், இந்தி, உருது ஆகியவற்றில் தேர்ச்சியும், அரபி, பாரசீகம் ஆகியவற்றில் புரிதலும் கொண்ட இவரின் பன்மொழிப் புலமை தமிழ்க் கவிதையுலகிற்குக் கிடைத்த நல்வரமாகும். அனைத்திந்திய வானொலியால் தலைசிறந்த கவிஞரெனத் தேர்ந்தெடுக்கப்பட்ட இவரை, சுரதா 'புதுக்கவிதை..... எழுதுகின்ற கவிஞர்களுள் அப்துல் ரகுமான் முன்னிற்கும் மோனையைப் போல் முன்னிற் கிறார்' எனப் பாராட்டியுள்ளார். இவரது முதல் கவிதை 1951 இல் பதினான்காம் வயதில் எழுதப்பட்டது. 1957இல் ஆனந்த விகடனில் வந்த 'காதல் கொண்டேன்' முதன்முதலில் வெளிவந்த கவிதையாகும். கவியரங்குகள் வழி தன்னையும் தமிழையும்

வளர்த்துக் கொண்ட கவிஞருள் இவரும் ஒருவர். இதுவரை பால்வீதி (1974), நேயர்விருப்பம் (1978), சுட்டுவிரல் (1989), ஆலாபனை (1995), விதை போல் விழுந்தவன் (1998), முத்தமிழின் முகவரி (1998), பித்தன் (1998) என ஏழு கவிதைத் தொகுதி களையும், அவளுக்கு நிலா என்று பெயர் (1966), முட்டைவாசிகள் (1986), மரணம் முற்றுப்புள்ளி அல்ல (1986), விலங்குகள் இல்லாத கவிதை (1987), கரைகளே நதிகளாவதில்லை (1995) எனும் கட்டுரைக் கவிதைகளையும் வெளியிட்டுள்ளார்.

உருதுக்கவிஞர் இக்பாலின் படைப்புகளை இரு தொகுதிகளில் மொழிபெயர்த்து வெளியிட்டுள்ளது; ஜூனியர் விகடன் வழி சப்பானிய ஹைகூக் கவிதை தமிழில் பரவ வழி செய்தது; அரபி, பாரசீக, உருது மொழியில் புகழ் பெற்ற கஜல் வடிவத்தைப் 'பாக்யா' இதழில் வாசகர்க்கு அறிமுகப்படுத்தி தமிழிலும் அவற்றைப் படைக்கும் சோதனை முயற்சியை மேற் கொண்டது; 'முஷைரா', 'நஜ்ம்' வடிவத்தைத் தமிழுக்கு அளித்தது; 'கவிராத்திரி' என்ற புதுமுறைக் கவியரங்கம் நடத்தி மாணவர் பலரைக் கவிஞராக்கித் தமிழ் கவிதையுலகிற்குப் புத்தெழுச்சியும், புதுப்பொலிவும் பெற்றுத் தந்தது; சன் தொலைக் காட்சியில் வாரந்தோறும் கவிராத்திரி நடத்தியது; 'கவிக்கோ' எனும் தமிழ்க்கவிதை இதழ் தொடங்கியுள்ளது என இவரது தமிழ்க் கவிதைப்பணி பன்முகங்காட்டுகிறது. ஆதாம்-ஏவாள் முதல் ஏசுகிறிஸ்து, நபிகள் நாயகம் வரை இறைத்தூதர்களை மையமாக வைத்து மனித குல வரலாற்றைப் பெருங்காப்பியமாகப் படைக்கும் முயற்சியில் தற்பொழுது முனைந்துள்ளார். கவிக்கோ ஆக இன்று கவிதையுலகில் கோலோச்சுகிறார்.

இவரது கவிதைகளில் மேலோங்கி நிற்கும் தன்மைகள், தமிழ்க்கவிதை இலக்கியத்தின் பொதுவான தன்மைகளுக்கு மாறு பட்டவை ஆகும். விளக்கமான நீண்ட கவிதைகளுக்கு மாறாகச் சிறு சிறு வாக்கியங்களில் தந்தி மொழித்தன்மையில் கவிதை இயற்றுவது அப்துல்ரகுமானுக்கே உரிய கலையாகும். கவிதைக்கு வார்த்தைச் சிக்கனம் அவசியம் எனும் இலக்கியக் கொள்கை உடையவர் அப்துல் ரகுமான் (முஜப்பர் ஷாம்ரீ); இயற்கையான படிமங்களை வித்தியாசமான கோணத்தில் படம்பிடித்துப் படிக்கிறவனின் மனத்திரையில் பிரம்மாண்டமாக நிழலாடவிடும் evocative வகையிலாகட்டும் எல்லா விதத்திலும் எல்லாத் தளத்திலும் இயங்குகின்றவை அவருடைய கவிதைகள் (கலாப்ரியா), புதுக்கவிதை திறம்படக் கையாளும் உத்திகள் பற்பல என்றாலும் அவற்றுள் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவை நான்கு. அவை முரண்,

குறியீடு, தொன்மம், படிமம் என்பனவாகும். தம் கவிதைகளில் இவ்வுத்திகளை அற்புதமாகவும் அழகாகவும் கையாண்டு, அழுத்தமாகவும் ஆற்றலோடும் பயன்படுத்தித் தனிமுத்திரை பதித்திருப்பவர் கவிக்கோ ஆவார் (இரா. மோகன்); கவிதைகளில் பயிலும் உருவகங்கள் அவர்தம் கட்டுரைகளில் இடம் பிடித்துக் கொள்வதால் அக்கட்டுரைகள் கவிதையின் தகுதியைப் பெற்றுவிடுகின்றன (தெ. ஞானசுந்தரம்) என்பன இவர் பற்றிய திறனாய்வாளரின் மதிப்பீடுகள். இவரது வெற்றியின் பின்புலம் இவ்வாறு எடுத்துரைக்கப்பட்டுள்ளது. இவையே இவரின் தனித்துவம் என்பதும், புதுக்கவிதைகளில் அதன் சிறந்த நான்கு உத்திகளை மிக அதிகமாகவும் அழகாகவும் கையாண்டவர் இவரே என்பதும் குறிப்பிடத்தக்கது.

1. தீப மரத்தின்
தீக்கனி உண்ண
விட்டில் வந்தது
கனியோ
விட்டிலை உண்டது

2. புறத்திணைச் சுயம்வர மண்டபத்தில்
போலி நளன்களின் கூட்டம்
கையில் மாலையுடன்
குருட்டுத் தமயந்தி (ஐந்தாண்டுக் கொருமுறை)

என்பன போன்று இவரது கவிதைகள் அமைகின்றன. இவரது கவிதைகளில் புராண, இதிகாசத் தொன்மங்கள் மிகுதியாகப் பயன்படுத்தப்படுவதாலும் அவற்றுள் சில, 'மாயமான்மோகத்தில் இராவணர்களிடம் சோரம்போகும் சீதைகள்' என்பன போன்று காணப்படுவதால் இந்துமத எதிர்ப்புணர்வு இவரிடம் உள்ளதாகக் குற்றம் சாட்டப்படுவதும் உண்டு. எனினும் இவரே கிறித்துவ தொன்மங்களையும் 'என் ஆறாவது விரல் வழியே சிலுவையிலிருந்து வடிகிறது ரத்தம். ஆம் என் 'மாம்சம்' வார்த்தை ஆகிறது' என்பது போன்றும் பயன்படுத்தியுள்ளார். ஆயினும் இவரில்

அரன் என்றழைப்பினும்
வரன் கொடுப்பவன் நீ
அரியென் றிசைப்பினும்
சரியென் றிசைப்பாய்
கர்த்தன் என்றுரைப்பினும்
அர்த்தம் நீ தான்
அல்லா எனினும் நீ
அல்லாது வேறு யார்?

என்பது நோக்க சமயப் பொறையும் வெளிப்படுகிறது எனலாம். பொதுவாக அவரது படைப்புகள் மானுடத்தின் அழுகலை வெளிப்படுத்தி அதனை மருந்திட்டுச் சீராக்கி மேன்மேலும் மேனிலை நோக்கி அழைத்துச் செல்வதையே, மானுடத்தைப் பாடுவதையே அடிப்படைப் பண்பாக, இலக்காகக் கொண்டுள்ளன. 1999 ஆம் ஆண்டின் சிறந்த தமிழ்க் கவிஞராக நடுவண் அரசின் சாகித்திய அக்காதெமி தேர்ந்து பாராட்டியிருப்பது நவிலத் தக்கது. 1986 இல் குன்றக்குடி அடிகளாரால் கவியரசர் ஆனார். 1989 இல் தஞ்சை தமிழ்ப்பல்கலைக் கழகத் தமிழன்னை விருது; 1989 இல் தமிழக அரசின் பாரதிதாசன் விருது, கலைமாமணி விருது, 1992 இல் அக்னியின் அக்ஷர விருது, 1996 இல் சிற்பி அறக்கட்டளை விருது, 1998 இல் ராணா இலக்கிய விருது எனப் பல விருதுகளைத் தொடர்ந்து பெற்றுள்ளார். (கவிக்கோ அப்துல்ரகுமான் மணிவிழா மலர், 1998).

### ஈரோடு தமிழன்பன் (செகதீசன்) (28-9-40 -)

கோவை மாவட்டம் சென்னிமலையில் பிறந்த இவரின் பெற்றோர் நடராஜா, வள்ளியம்மாள் ஆவர். 'தமிழன்பன் கவிதைகள்' என மரபுக் கவிதைகள் படைத்து, தமிழக அரசின் பரிசினைப் பெற்றபின் இன்று புதுக்கவிதையுலகில் கோலோச்சும் சிறப்பினர். பாரதிதாசன் பரம்பரைக் கவிஞர். கவியரங்குகள் எண்ணற்றன கண்டவர். சொல்லாட்சியிலும் படிமக் குறியீட்டிலும் தனித்திறம் காட்டும் இவரின் பாடல்களில் இன்றைய அறிவியலும், இனம், மொழி, நாடு கடந்த பொது மனிதப் பார்வையும் சிறப்பிடம் பெறுகின்றன.

உள்ளார்ந்த வேதனையுடன் சமூகச் சீர்திருத்தம் குறித்து மிக ஆழமாகச் சிந்தித்து ஏற்புடைய கருத்துகளாக, நடைமுறைக்கு ஒத்துவருவனவாகக் கூறும் மிகச் சிலகவிஞருள் இவர் முன்னிற்கிறார். சிலிர்ப்புகள், தோணி வருகிறது, தீவுகள் கரையேறுகின்றன, நிலா வரும் நேரம், சூரியப் பிறைகள், ஊமை வெயில், திரும்பி வந்த தேர்வலம், ஊர் சுற்றி வந்த ஓசை, கிழக்குச் சாளரம், என் வீட்டெதிரே எருக்கஞ் செடி (1995) என இவரது படைப்புப் பணி தொடர்கிறது. மரபுக் கவிதையை விட்டுவிட வில்லை என்பதை 'விடியல் விழுதுகள்' உணர்த்துகின்றது. அமெரிக்கத் தமிழ்ச் சங்கங்களின் அழைப்பின் பேரில் அமெரிக்கா சென்றவர் அங்குத் தம்மைக் கவர்ந்த இடங்களையும் நிகழ்ச்சிகளையும் கவிதைகளாக்கி, தம் பயண அனுபவத்தை 'உன் வீட்டிற்கு நான் வந்திருந்தேன் வால்ட் விட்மன்' எனப் புதுக் கவிதை நூலாக வெளியிட்டிருப்பதும் (1996) குறிப்பிடத்தகுந்தது.

இன்றைய நிலையில் தலித்தியம், பெண்ணியம், சூழலியம் இவற்றிலும் தம் சிந்தனையைத் திருப்பியுள்ள கவிஞர், சிலி நாட்டுக் கவிஞர் பாப்லோ நெருடாவின் கருத்துகளிலும், கவிதை களிலும் கவரப்பட்டுள்ளார். ஈழத்தமிழர் சிக்கல், நெருக்கடிக் கால அவலம், தேசிய இனப் பிரச்சினை எனத் தம் சமகால நிகழ்வுகளுக்கு மிகுந்த அழுத்தம் தந்து பாடும் இக்கவிஞர், 'எதைப் பார்த்தாலும் எனக்கு மனிதனுடைய வருத்தம் தெரியும். மனிதனுடைய வீழ்ச்சி, மனிதனின் கண்ணீர் இவற்றைப் போக்குவதற்கு வழிகிடைக்குமா என்று பார்ப்பதுதான் என் கவிதையின் நோக்கம்' என்கிறார் (நானும் என் கவிதையும், தமிழன்பன் ப. 68).

புதுக்கவிதைகளுக்குத் தம் படைப்பில் முதன்மைச் சிறப்பளித்தாலும் சிறந்த திறனாய்வு நூல்களையும் தந்துள்ளார். கொடி காத்த குமரன் (வில்லுப்பாட்டு), கரும்புச் சுவைக்கதைகள் (சிறுவர் நூல்), கண்ணுக்கு வெளியே சில கனாக்கள் (உரை ஓவியங்கள்) ஒரு மழை நாளில் (சிறுகதைகள்) எனப் பிற துறைகளிலும் முனைந்துள்ளார்.

### மு. மேத்தா (5-9-1945 - )

மரபுக்கவிஞராக எழுதத் தொடங்கி, வானம்பாடிக் குழுவில் சேர்ந்து புதுக்கவிஞராகி இன்று திரையிசையிலும் தன் திறமைகாட்டி வருபவர் பெரிய குளம் தந்த பெருங்கவிஞரான இவர். 'காதலின் மோகமும், தமிழின் தாகமும் என்னைக் கவிதை எழுதத் தூண்டின. அப்புறம் இந்தச் சமுதாய அநியாயங்களின் மீது ஏற்பட்ட கோபம் என் கவிதையின் நெற்றியில் இரத்தப் பொட்டு வைத்தது. இதுதான் நாளடைவில் என் கவிதைக்கு மூன்றாம் கண்ணாக முளைக்கத் தொடங்கியது' என்று கவிதைத் துறைக்குத் தாம் வந்த பின்புலத்தைக் கவிஞரே வெளிப்படுத்தி யுள்ளார். இவர் புதுக்கவிதைக்கு,

**இலக்கணச் செங்கோல்**
**யாப்புச் சிம்மாசனம்**
**எதுகைப் பல்லக்கு**
**மோனைத் தேர்கள்**
**தனிமொழிச் சேனை**
**பண்டித பவனி**
**இவை எதுவும்**
**இல்லாத**
**கருத்துக்கள் தம்மைத்**
**தாமே ஆளக்**

கற்றுக் கொண்ட
புதிய மக்களாட்சி
முறையே புதுக்கவிதை

என இலக்கணம் வடித்துள்ளார். 'தேசப்பிதாவுக்கு ஒரு தெருப்பாடகனின் அஞ்சலி' என்ற கவிதையால் பாராட்டப் பெற்ற இவர் தமது 'கண்ணீர்ப்பூக்கள்' கவிதைத்தொகுப்பால் பல்லாயிரக் கணக்கானோரைத் தம் வயப்படுத்தினார். நூற்றுக்கணக்கானோர் புதுக்கவிஞராகவும் துணை நின்றார். தொடர்ந்து பல நூல்களை வெளியிட்டுப் புதுக்கவிதையுலகில் தமக்கென்று ஓர் நிரந்தர இடத்தைப் பிடித்துக் கொண்டுள்ளார். இவர் புதுக்கவிதை வரலாற்றில் ஓர் சாதனையாளர் எனில் அது மிகையன்று. ஊர்வலம், மனச்சிறகு, அவர்கள் வருகிறார்கள், முகத்துக்குமுகம், நடந்த நாடகங்கள், காத்திருந்த காற்று, ஒரு வானம் இரு சிறகு, திருவிழாவில் ஒரு தெருப்பாடகன், நந்தவன நாட்கள், இதயத்தில் நாற்காலி, என்னுடைய போதிமரங்கள், தீப்பூத்த நந்தவனம், கனவுக் குதிரைகள், வெளிச்சம் வெளியே இல்லை என இவர் படைப்புகளின் பட்டியல் நீண்டது.

வியட்நாம் போர் (சமாதானம்); வங்காள தேசம் (பத்மா நதிக்கரையில் பாரதக் கவிஞன், அறுவடை); சோவியத் நாடு (கங்கா கடிதம் எழுதுகிறார்); ஈழத்தமிழர் போராட்டம் (அசோகவனத்தில் ஒரு சோகவனம், சரியாடி பராசக்தி, அடித்துத் துவைக்காமல், ஈழத்துப் பூக்கள், என் கவிதை எரிகிறது, பூமி புரண்டு படுக்கிறது) அஸ்ஸாம் சிக்கல் (1983), சாதிச் சிக்கல் (காற்றை மிரட்டிய சருகுகள்).... என வெளிநாட்டு உள்நாட்டு அவலங்களைப் படிப்போர் மனத்தில் தைக்கும் வண்ணம் கவிதை படைத்துள்ளார். 'மார்க்சியக் கொள்கைகளில் தன்னை முழுக்கவும் இணைத்துக் கொண்டு செல்கிற பாங்கு இல்லாவிட்டாலும், இந்தச் சமுதாய அமைப்பை முற்றிலும் மாற்றிவிட்டுப் புதுயுகம் படைக்க வேண்டுமென்ற முனைப்பு இவருடைய முற்போக்குப் பாடல்களில் அடிநாதமாக ஒலிப்பதைப் பார்க்க முடிகிறது.... நம்முடைய தாழ்ந்த நிலையினைப் போக்குவதற்குப் புரட்சி ஒன்றே மருந்தாகும் என்கிறார்'. (க. இராமச்சந்திரன், யார் இந்த மேத்தா, திருமகள் நிலையம், சென்னை; 1992; பக். 51-52).

1977 இல் 'ஊர்வலம்' கவிதைத் தொகுதிக்காகத் தமிழக அரசின் பரிசினைப் பெற்றுள்ளார். 1986 இல் பாவேந்தர் பாரதிதாசன் விருதும் தமிழக அரசிடமிருந்து பெற்றுள்ளார். நபிகள் நாயகத்தின் வரலாற்றைக் காப்பியமாக்கியுள்ள (நாயகம்

ஒரு காவியம்) இவர் சிறுகதை (அவளும் நட்சத்திரம் தான்) புதினம் (சோழ நிலா - ஆனந்தவிகடன் பொன் விழா இலக்கியப் போட்டியில் முதல் பரிசு பெற்றது, மகுட நிலா) கட்டுரைகள் (மு. மேத்தாவின் முன்னுரைகள், நினைத்தது நெகிழ்ந்தது, நானும் என் கவிதையும்,......) எனப் பிற துறைகளிலும் தன் வல்லமையைக் காட்டியுள்ளார். தமது கவிதைகளில் ராமாயணத்தின் ஈடுபாட்டை வெளிப்படுத்துவதுடன் எளிய வளமான கற்பனை, கருத்தைக் கவரும் சொல்லாட்சி, ஆழமான மன உணர்வுகளின் அற்புதப் படைப்பு, போன்றவற்றால் புதுக்கவிஞரிடையே வெற்றிவுலா வருகிறார். இவரது கவிதைகள் ஆங்கிலம், இந்தி, மலையாள மொழிபெயர்ப்புகளையும் கண்டுள்ளன என்பர் (மது. ச. விமலானந்தம்)

**வைரமுத்து (13-7-53 -)**

மதுரை மாவட்டத்தைச் சார்ந்த இவரின் பெற்றோர் இராமசாமி மற்றும் அங்கம்மாள் ஆவர். தமது பதினான்காவது வயது முதலே கவிதை எழுதத் தொடங்கிய இவர் பத்தொன் பதாம் வயதில் (1972) 'வைகறை மேகங்கள்' என்ற முதல் தொகுதியை வெளியிட்டார். இதுவரை சுமார் முப்பது நூல் களின் சொந்தக்காரராகியுள்ளார். மரபுக்கவிதை, புதுக்கவிதை, திரைப்படக்கவிதை என முத்துறையிலும் தம் புலமையைக் காட்டியுள்ளார். திருத்தி எழுதிய தீர்ப்புகள் (1979), இன்னொரு தேசிய கீதம் (1982), கவிராஜன் கதை (1982), கொடிமரத்தின் வேர்கள் (1984), இந்தப் பூக்கள் விற்பனைக்கல்ல (1991), ஒரு போர்க்களமும் இரண்டு பூக்களும் (1991), சிகரங்களை நோக்கி (1992), வானம் தொட்டு விடும் தூரம் தான் (1993), எல்லா நதியிலும் என் ஓடம் (1993), என் ஜன்னலின் வழியே (1994), மீண்டும் என் தொட்டிலுக்கு (1994), தண்ணீர் தேசம் என்பன வெளிப்போந்துள்ள இவர் படைப்புகளில் சிலவாகும். இவரது படைப்புகளில் சிறந்தனவாக தேர்ந்தெடுக்கப்பட்ட கவிதைகளின் தொகுப்பு தற்பொழுது 'வைரமுத்து கவிதைகள்' எனும் பெயரில் வெளியிடப்பட்டுள்ளது.

வானொலி, கவியரங்குகள், இதழ்கள் எனக் கவிதை யாற்றலை வளர்த்துக் கொண்டு இன்று சாதனைக் கவிஞராகி யுள்ளார். கவிப்பேரரசாகப் பாராட்டப்படும் இவர் கபிலர், பாரதி, பாரதிதாசன், கண்ணதாசன், கலில் ஜிப்ரான் ஆகியோர் பால் மிகுந்த ஈடுபாடு கொண்டவர். திராவிட இயக்கப்பற்றாளர். தாம் பிறந்து வளர்ந்து வாழ்ந்த சூழலை வைத்தே தம்

படைப்புகளை உருவாக்குவதால் மண் வாசனைக் கவிஞராகிறார். எனவே மண்ணின் மணம் கமழும் நாட்டுப்புறப் பாடல்களின் சாயலையும் பரக்கக் காணலாம். இயற்கையை ரசிப்பதிலும் கவிதையாக்குவதிலும் தனி ஈடுபாடு காட்டித் தம் கவிதைகளை வெற்றி பெறச் செய்துள்ளார். காதல் பாக்களைப் பாடுவதிலும் வல்லவர். குலத் தொழிலான வேளாண்மையும் மிக்க சிறப்புடன் மற்றும் அதன் துணைத் தொழில்களும் துறைகளுமான காடு வளர்ப்பு, வன விலங்குப் பாதுகாப்பு, கால்நடை வளம் போல்வனவும் இவரது கவிதைகளில் விளக்கம் பெற்றுள்ளன.

**தூரத்து வயல்களில்...........**
**தொலைந்து போன தங்கள் வாழ்வை**
**நிலங்களில் குனிந்து**
**நிமிராமல் தேடும்**
**நிரந்தரக் கூலிகள்**

என்பது போன்று இவரும் தம் சமகாலக் கவிஞர் இயல்பிற் கேற்ப சமூக நிலைகளையும், சிக்கல்களையும் எடுத்துக் காட்டுகிறார். பொதுவுடைமை கருத்துகளையே சமூக முன்னேற்றத்திற்கான தீர்வாகவும் சுட்டுகிறார்.

மகாகவி பாரதியின் வரலாற்றை மிக்க சிறப்புடன் 'கவிராஜன் கதை' எனப் புதுக்கவிதையாக்கியுள்ளார். தமது வரலாற்றையும் 'இதுவரை நான்' எனத் தந்துள்ளார். சிகரங்களை நோக்கி, தண்ணீர் தேசம் என்பன புதுக்கவிதை தந்த கதை யிலக்கியங்களாகும். பிற உலகமொழி கவிதைகளின் மொழி பெயர்ப்பாக 'எல்லா நதிகளிலும் என் ஓடம்' அமைகிறது. நாடறிந்த கவிஞரான இவரை, நடுவண் அரசு நான்கு முறை சிறந்த திரைப் படப் பாடலாசிரியராகத் தேர்ந்தெடுத்ததன் மூலம் தமிழுக்குப் பெருமை சேர்த்துள்ளார். இவை தவிர இவர் பெற்ற பரிசுகளும், விருதுகளும் பலவாகும். தமது கவிதைகளைத் தொலைக் காட்சியில் ஒளியிழைகளாகக் காட்சிப்படுத்தித் தமிழுக்கு மற்றொரு பெருமையும் தந்துள்ளார். இந்திய மொழிகளிலேயே முதலாவதான இம்முயற்சிக்கும் அகில இந்திய அளவில் விருது பெற்றுள்ளார். "தமிழ் மொழியின் மீது உலகத்தின் கவனத்தைத் திருப்ப வேண்டும் என்றால் தமிழ் மொழியில் ஒரு எழுத்தாளன் அல்லது ஒரு கவிஞன் அல்லது இன்னும் ஒரு படைப்பாளன் நோபல் பரிசு பெறுவது என்பது ஒரு முக்கியமான கவன ஈர்ப்புத் தீர்மானமாக இருக்கும் என்று கருதுகிறேன். அதை என் தலைமுறையில் எந்த எழுத்தாளன் பெற்றாலும் தமிழுக்குக்

கிடைத்ததாக எண்ணி நான் தலைவணங்குவேன். அதை நோக்கியதுதான் என்னுடைய பயணமாகக் கூட இருக்கும்" என்று தம் கவிதை இலக்கைச் சுட்டியுள்ளார். (இளவல் மனோகரன்; மதுரைச் சீமையிலிருந்து ஒரு மண்வாசனைக் கவிஞன்; காவ்யா; பெங்களூர்; 1998).

பெரும்பாலும் படைப்புக்கும் - படைத்தவனுக்கும் இடையே இடைவெளி இருத்தல் கூடாது எனக் கருதும் கவிஞர், 'என்னைப் பொறுத்தவரையில் மாண்டு கொண்டு இருக்கிற அல்லது மெல்ல மெல்ல நசித்துக் கொண்டிருக்கிற மனித நேயத்தைப் புதுப்பிப்பதும் இயற்கையை விட்டுத் தள்ளிப் போய்க் கொண்டிருக்கிற மனித குலத்தை மீண்டும் இயற்கையின் பால் ஆற்றுப்படுத்துவதுமான நோக்கங்களை என் எழுத்துக்கு அடிநாதமாகக் கொண்டிருக்கிறேன்' என்றுரைக்கிறார். (க. ஆ. முருகேசன், வாழ்க்கை நதியோடு வைரமுத்து; காவ்யா; பெங்களூர்; 1999).

### நிர்மலா சுரேஷ்

இன்று தமிழுலகில் தமக்கென நிலையானதோர் இடத்தைப் பெற்றுள்ளவர் நிர்மலா சுரேஷ். கவியரங்குகளில் தம் கவித்திறன் காட்டி வளர்ந்த இவர் சிறந்த திறனாய்வாளரும் ஆவார். அரபுநாடுகள் மற்றும் கனடா போன்ற பல வெளிநாடுகளில் பயணித்த இவர் அங்கும் தமிழ்ப்பணி புரிந்துள்ளார். இதனால் 'அரபுக் கவிதைக்கு ஆரத்தி' (1999) போன்ற மொழிபெயர்ப்புக் கவிதை நூல்களையும் தந்துள்ளார். மண்ணில் பதியும் பாதங்கள் (1984) இவரின் முதல் கவிதைத் தொகுப்பாகும். இதன்பின் 'தென்றலும் தலைமை ஏற்கும்' (1987), 'நிர்மலா சுரேஷ் கவிதைகள்' (1990), 'பாலைவனப் பௌர்ணமிகள்' (1999) எனும் நூல்களையும் வெளியிட்டுள்ளார். 1999இல் வெளிவந்த 'எப்போதும் உதயம்' கவியரங்குகளில் கலைஞர் கருணாநிதியைப் பாராட்டி பாடியவற்றின் தொகுப்பாகும்.

இயேசுவோடு தொடர்புடைய இடங்களுக்கு நேரில் சென்று களப்பணி செய்து படைத்த புதுக்கவிதையிலான 'இயேசு மாகாவியம்' (2001) இவரது கவிதைப் பயணத்தில் குறிப்பிடத்தக்க மைல்கல் ஆகும். ஹைகூக் கவிதை படைப்பிலும், ஆய்விலும் பெரிதும் ஈடுபாடு காட்டும் இவர் தொடர்ந்து மொழிபெயர்ப்புக் கவிதைகளைத் தருவதிலும் முனைந்துள்ளார். இவருடைய கவிதைகளும் இந்தி மற்றும் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்

பட்டுப் பல தொகுப்பு நூல்களில் இடம்பெற்றுள்ளன. 1990ஆம் ஆண்டு, தமிழ்நாடு அரசின் 'பாரதிதாசன் விருது' பெற்றுள்ளார்.

'கல்வி கொடுப்பதில்லை அறிவை! அறிவுதான் கற்க வைக்கிறது'; 'கலைமகளை வரதட்சணை வாங்கும் மாமியாராக்கு கின்றன நமது மரபுகள்! கலைமகளையே சிலுவையிலறைந்த நிறுவனங்கள் சில'; 'சாதி, மதம் என்னும் இரு தந்தங்களோடு வாக்குப் பெட்டியை ஏந்தி வலம் வருகிறது பட்டத்து யானை' என்பன போன்ற இவரது கவிதை மொழிகள் இவரைச் சிறந்த சமுதாயச் சிந்தனையாளராகக் காட்டக் காணலாம். பெண்ணியம் பேசும் பெண் கவிஞரானாலும் இவரது பார்வை அதனுள் மட்டும் அடங்காது அரசியல், சமுதாயம், வாழ்வியல் எனப் பிறவற்றிலும் ஆழப் பதிந்துள்ளது. 'இதழ்கள், வானொலி, தொலைக்காட்சி எனும் ஊடகங்கள் இவர் புலமைக்குப் புகலிடமாக உள்ளன. புதியபுதிய உவமைகளைக் கையாளும் இக்கவிஞர் நடப்பியலுக்கு மிகுந்த சிறப்பளிக்கக் காணலாம். எதனையும் துணிவாக எடுத்துரைக்கும் இவர், தனித்துவமிக்க இன்றைய கவிஞரில் குறிப்பிடத்தக்கவராவார். தம் கவிதை பற்றி இவர்,

உறவும் நட்பும் / படிக்க முடியாத
டெலிபோன் டைரக்டரியாக,

சுற்றத்தின்/சுற்றுப்புறம்/சூழல் மாசு ஆக,
சுவர்களுக்குள்ளே பிரபஞ்சம் படைத்து,

ஓநாய்கள் வரைந்த / சாது ஆடுகளின்
சித்திரங்களை / இனங்கண்டு,

புகழ்ச்சி என்னும் / கிட்டப்பார்வை;
இகழ்ச்சி என்னும் / தூரப்பார்வை

ஆகிய / சாளேஸ்வரக் கோளாறுகளை
மிகை மதிப்புகளாய் மாற்றி

நாள் காட்டிகளில் / சாதனைகளெல்லாம்
விடுமுறையாய்ச் சிவந்துவிட,

தகவல்புயலில் / தற்காப்பு வளையம் அமைத்து,
காலம் கவிதையாகிறது/ என் கவிதை காலமாகாமல்

எனக் 'காலமாகாத கவிதை' யில் கூறுவது கூறத்தக்கது. சாகித்திய அக்காதெமியின் கவிதைத் திருவிழாக்களில் மட்டுமின்றி உலக

நாடுகளின் தமிழ் மேடைகளையும் தம் கவித்துவத்தால் அலங்கரிக்கும் இவரை, 'ஆழமான அரசியல் உணர்வும், அழுத்தமான சமுதாய அனுபவமும் உலகத் தொலைநோக்கும் நிறைந்தவர்; பெண்களுக்குரிய வட்டம் இதுதான் என்றிருந்த தடைகளைக் கடந்து தடுப்புகளை உடைத்து அதே சமயம் பண்பாட்டிலிருந்து வழுவாத நேர்மையோடு பாரதி கண்ட புதுமைப் பெண்ணாய்த் தனித்துவத்தோடு விளங்குகிறார் தமிழ்நாட்டில் நிர்மலாசுரேஷ்' எனப் பாராட்டியிருப்பது (பதிப்புரை, பாலைவனப் பௌர்ணமிகள், 1999) பொருத்தமே.

கவிதையின் மதிப்பு (Values), வாழ்க்கையின் மதிப்பு, மனிதனின் மதிப்பு, இயற்கையின் மதிப்பு ஆகியவை எல்லாம் தனித்தனித் திண்ணைகள் அல்ல. இவற்றின் ஒருங்கிணைப்பு இல்லாத படைப்பு ஊனமாகி விடுகிறது. பொய்ம்மையாகவும் கூடும்... இந்த என் படைப்பு இயல்பான மன உந்துதல்களின் பிம்பமோ, பிரதிபலிப்போ அல்ல மனமேதான்! விரல் நுனியில் வடிந்த இதயம்!' என்பது இவரது கவிதை பற்றிய கோட்பாடாக அமைகிறது (கடிகாரக் குயிலும் கடல்குதிரையும், ப. 4).

## ஹைகூ கவிதை

ஜப்பானிய மொழி தமிழிலக்கிய உலகிற்கு வழங்கிய நன்கொடை 'ஹைகூ'. 'ஹைகூ' என்னும் மூன்றடிக் கவிதை 5-7-5 என்ற அசை எண்ணிக்கையில் இயற்றப்படுவது. இது நான்கு நூற்றாண்டுக்கால வரலாறுடைய ஜப்பானியக் கவிதை வகையாகும். பொதுவான கவிதை இலக்கணக் கூறுகளினின்றும் வேறுபட்டது. ஸென் சிந்தனை வழியே தோன்றி, இன்று உயர் கவிதையாய் நிலைத்துள்ளது. தந்தி மொழி நடையும், அணி களற்ற அழகும் கொண்டது.. மானுடம் பேசும் உள்ளடக்கத்தில் காதல் இல்லை. ஹைகூ முழுப்பொருளையும் வெளியிடுவதில்லை. படிப்பவரே படைப்பின் பங்காளராகிப் பொருளை உய்த்துணர்தல் வேண்டும். இதன் இறுதிவரி அதிர்வுகளை ஏற்படுத்தும்' என்று இதன் இலக்கண முரைப்பர் (நிர்மலா சுரேஷ்; ஹைகூக் கவிதைகள்; திருமகள் நிலையம்; சென்னை; இப. ஆக 1988; ப. 358).

தொல்காப்பியர் நூலின் உத்திகளாகக் கூறுவனவற்றுள் (1610) அமையும் 'வந்தது கொண்டு வாராதது முடித்தல்'; 'உய்த்துக் கொண்டு உணர்த்தல்' என்பனவற்றை இதனுடன் ஒப்பு நோக்கலாம். வடிவில் குறுமை கொளினும் பொருள் ஆழத்தால், விரிப்பால் பெருமையுறலால் இதனை வாமனக் கவிதை என அப்துல்ரகுமான் புகழ்கிறார். சுதேசமித்திரனில் (16-10-1916)

பாரதியார் 'ஜப்பானியக் கவிதை' எனும் கட்டுரை வழி தமிழுக்கு இதனை முதன் முதலில் அறிமுகப்படுத்தினார் என்பர். சி.மணி. தமிழில் தொடங்கி வைத்தவர். எனினும் 1974 இல் அப்துல் ரகுமான் எழுதி வெளியிட்ட 'பால் வீதி' கவிதைத் தொகுப்பில் உள்ள 'சிந்தர்' கவிதைகளே தமிழிலக்கியத்துள் ஹைகூக்குத் தோற்றுவாயாகின்றன. தொடர்ந்து 1984இல் முழுமையான ஹைகூ கவிதைத் தொகுப்பாக அமுதபாரதியின் 'புள்ளிப்பூக்கள்'; அறிவுமதியின் 'புல்லின் நுனியில் பனித்துளி' எனும் இரு நூல்கள் மூன்று .மாத இடைவெளியில் மலர்ந்துள்ளன. இவற்றின் பின் கவிஞர் மற்றும் திறனாய்வாளரால் ஈர்க்கப்பட்டு மேலும் பல தொகுதிகள் உலா வரத் தொடங்கின. (தமிழில் ஹைகூ; நெல்லை சு. முத்து; அன்னம்; சிவகங்கை; மு.ப. 1994; பக் 57-66)

அளவின் குறுமையாலும் பொருண்மை வரையறை யாலும் வெளியீட்டுக் கட்டுப்பாட்டாலும் இக்கவிதைகளின் வருகையும் பரவலும் அருகியே உள. இருபதாம் நூற்றாண்டின் இறுதியில் தமிழ்த்தாய் பெற்றெடுத்த இத்தத்துப்பிள்ளை இன்னும் தளர்நடையிலே உளது. ஜப்பானிய ஹைகூ கவிதையின் பொது மரபிலிருந்து மீறியே தமிழ் ஹைகூகள் பெரும்பாலும் இயற்றப்படுவதை நிர்மலா சுரேஷ் தம் நூலுள் (பக். 238-241) எடுத்துக்காட்டியுள்ளார். மூலக்கவிதையின் மரபினை, கோட் பாடுகளை முற்றிலுமாக உணராமையே இதற்குக் காரணமென அவர் உரைப்பார். எந்த ஓர் இலக்கியமும் படைப்பவனின் புலமைக்கும் ஆற்றலுக்கும் மரபு மாற்றங்களை, மீறல்களைப் பெற்றே அமையும் என்பது தமிழில் நீண்ட கால இலக்கிய வரலாறு உணர்த்தும் உண்மையாகும். இதற்குப் பிற நாட்டி லிருந்து இறக்குமதி செய்யப்படும் இலக்கியமும் விலக்கல்ல; மண்ணின் மணமும் இலக்கியச் சூழலும் மாற்றத்திற்கு வழி வகுக்கும் என்பதைத் தமிழ் ஹைகூ கவிதைகள் உணர்த்துகின்றன.

அமுதபாரதியே அதிகமான ஹைகூ படைத்தவர் எனும் பெருமைக்குரியவராகிறார். இவரது 'ஹைகூ அந்தாதி' மற்றொரு புது முயற்சியாகும். தமிழன்பனின் 'சூரியப் பிறைகள்', கு. மோகன ராசுவின் 'உலக அமைதி நோக்கி', கழனியூரனின் 'நிரந்தர மின்னல்கள்' போன்ற நூல்கள் குறிப்பிடத்தக்கவையாகும். இதில் கு. மோகனராசு, ஜப்பானிய ஹைகூவின் விதி முறைகளை முற்றிலுமாகப் பின்பற்றியுள்ளார் என்பர். நிர்மலா சுரேஷ் (நிர்மலா சுரேஷ் கவிதைகள்); பரிமளமுத்து (இலையுதிர் காலம் நிரந்தமல்ல); மித்ரா (ஹைகூ கவிதைகள்) எனப் பெண் படைப் பாளிகளும் சிறப்பான ஹைகூ கவிதைகளைத் தந்துள்ளனர்.

வாசகரின் விருப்பம் போல் பொருள் கொள்வதற்கு இடமளித்தலே இக்கவிதைகளின் தனிச்சிறப்பு. அறிவுமதியின்

உழுது வந்த களைப்பில்
படுக்கும் மாடுகள்
காயம் தேடும் காக்கை *(புல்லின் நுனியில் பனித்துளி)*

என்பதனைச் சான்றாக்கலாம். புதுக்கவிதை போன்று தமிழ் ஹைகூவும் எல்லாப் பொருண்மைகளுக்கும் இடனாவதை நெல்லை சு. முத்து ஆய்வு உணர்த்துகிறது. அறிவியலின் தாக்கத்தை,

நிலவில் கவியரங்கமா?
நட்சத்திரம் யாவும் ரசிகரா?
பறப்பதேனோ ராக்கெட் *(காற்றின் கைகள்)*

என அமுதபாரதியின் கவிதையில் காட்டலாம். சமூகச் சிக்கல்களின் எதிரொலியைப் பரிமளமுத்து தரும்,

வெட்டினால் என்ன
விறகாக்கி எரித்தால் என்ன?
ஆணிவேரோ ஆழத்தில் *(இலையுதிர் காலம் நிரந்தரமல்ல)*

என்பது சுட்டும். சமூக உணர்வுடன் எத்தளத்திலும் படைப்பாளி இயங்க முடியும் என்பதற்குத் தமிழ் ஹைகூக்கள் சிறந்த சான்றா கின்றன. இலக்கியச் சூழல் மற்றும் மண்ணின் மரபிற் கேற்பவே இலக்கிய உருவாக்கம் அமையுமாதலால் ஜப்பான் ஹைகூ விலிருந்து தமிழ் ஹைகூ வேறுபடுவது இயல்பேயாகும்.

## திரையிசைப் பாடல்கள்

இருபதாம் நூற்றாண்டின் மாபெரும் மக்கள் இலக்கிய மாகப் புதிதாக உருவெடுத்த இலக்கிய வகை திரையிசைப் பாடலாகும். கவிதையிலக்கியத்தின் ஒரு கூறாகத் திகழும் இது எப் பருவத்தினரும், எத்தரத்தினரும் சுவைக்கும் வண்ணம் பரந்து விரிந்த ஆளுமை கொண்டுள்ளது. ஒரு வகையில் வாய்மொழி யிலக்கியத்தின் இடத்தைத் தன் பரவலால் இன்று கைக் கொண்டுள்ளது எனவும் கூறலாம். இன்றைய இலக்கிய வகைகளுள் தன் இசையால், எளிமையால் தலையாய செல்வாக்கினை மக்களிடையே பெற்றுள்ளது. பொழுதுபோக்கு ஊடகமான திரைப்படத்தில் இடம்பெற்று வானொலி, தொலைக்காட்சி எனப்பிற ஊடகங்களிலும் ஒலி, ஒளி பரப்பப்பட்டு தன் தனித் துவத்தை நிலைநாட்டியுள்ளது. எந்தவொரு கூட்டம் அல்லது விழா எங்கு நடந்தாலும் அங்கு முன்னொலிக்கும் பெருமை;

ஒலி, ஒளி நாடாக்கள் வழி எளிதாகக் கிடைத்தல் இவற்றால் தவிர்க்க இயலா வல்லமை பெற்றுள்ளது. திரையிசைப் பாடல்களின் ஒலிநாடா விற்பனைக்கும் அனைத்து வகைத் தமிழ் நூல்களின் விற்பனைக்கும் இடையே உள்ள இடைவெளி மலைக்கும் மடுவுக்கும் உள்ள இடைவெளியாகும் என்பது தமிழ்ச் சமூகத்தில் இதற்குள்ள செல்வாக்கினை எடுத்துரைக்கப் போதுமானதாகும்.

திரைப்படத்தின் இடையே அதன் கதைப்போக்கினைத் தழுவி, கதைமாந்தர் பாடுவதாக இசையுடன் அமையும் பாடல்கள் திரைப்படப் பாடல்கள் ஆகின்றன. திரைப்படத்தின் தயாரிப்பாளர், இயக்குநர், இசையமைப்பாளர் ஆகியோரின் விருப்பிற்கேற்ப, அவர்கள் தேர்ந்தளிக்கும் மெட்டுகளுக்கு ஏற்ப திரைப்படப் பாடலாசிரியர் பாடல் எழுதுகின்றனர்; அவற்றில் அவர்கள் வேண்டும் திருத்தங்களையும் செய்கின்றனர். எனவே தனிக்கவியாகயிருக்கும்பொழுது கிடைக்கும் உரிமை இங்கில்லை; கட்டுப்பாடுகளுடன் தான் கவிதை படைக்கின்றனர். எனினும் இதிலும் தம் முத்திரையைப் பதித்துள்ளோர் பலர். இவர்தம் படைப்பாற்றல் திரைப்பாடல்களில் குறிப்பிடத்தக்க விழுக் காட்டிற்கு இலக்கியத் தகுதியைப் பெற்றுத் தந்துள்ளது.

1931இல் வெளிவந்த முதல் பேசும் தமிழ்த் திரைப்படமான 'காளிதாஸில்' பாட்டெழுதிய மதுரபாஸ்கரதாஸ் முதல் திரைப்படப் பாடலாசிரியராகிறார். தொடர்ந்து பாபநாசம் சிவன் தம் ஆட்சியைப் போற்றத்தக்க வகையில் நிலைநிறுத்தியுள்ளார். 1935 இல் சீதா கல்யாணம் திரைப்படத்திற்குப் பாடல் எழுதத் தொடங்கி 1977 இல் கிருஷ்ண லீலா வரை ஆயிரத்திற்கும் மேற்பட்ட திரைப்படப் பாடல்களைப் பாடியுள்ள இவர் எண்ணிறந்த கீர்த்தனைகளையும் இயற்றித் தமிழிசை உலகிலும் அழியா இடம் கொண்டுள்ளார். 'சொப்பன வாழ்வில் மகிழ்ந்து சுப்பிரமணிய சுவாமி உனை மறந்தால்', 'மன்மத லீலையை வென்றாருண்டோ' போன்ற பல பாடல்கள் இன்றும் இவர் புகழ்பாடிக் கொண்டிருக்கின்றன. 1972 இல் இந்திய அரசின் 'பத்ம பூஷண்' விருது பெற்றுள்ளார்.

கே.பி. காமாட்சி, கம்பதாசன் எனப்பிறரும் இங்குக் குறிக்கத்தக்கவராவர். திரைப்படப் பாடலாசிரியரில் முதல் பெண்மணியான டி.பி. ராஜலட்சுமி 1936 இல் 'மிஸ். கமலா' திரைப்படத்திற்குக் கதை, வசனம், நடிப்பு, இயக்கத்தோடு தம் பாடல்களைப் பாடி ஆடியுமுள்ளார். இக்காலக்கட்டத்தில்

இந்திய விடுதலைப் போர் உச்சத்தில் இருந்தமையால் நாட்டுப் பற்று மிக்க பாடல்களும் அன்றைய சமூகச் செல்வாக்குக்கு ஏற்பப் பக்திப் பாடல்களும் திரைப்படங்களில் மிகுந்த ஏற்றங் கண்டன. இதனால் நாடக மேடைகளில் அன்று பாராட்டப் பட்டப் பாடல்கள் திரைப் படங்களில் ஒலித்தன. எனவே பாரதியாரின் பாடல்களுக்குத் திரையுலகம் நல்ல வரவேற்பு அளித்தது. பாரதிதாசன், கல்கி போன்ற பிறதுறைப் புலமையாளர் களும் தம் திறமையை இதிலும் உணர்த்தியுள்ளார். ஒரு திரைப் படத்தில் இடம் பெறும் பாடல்களின் எண்ணிக்கை அன்று (மிக) அதிகமாக இருந்ததுடன் இன்றைய திரைப்படப் பாடல்களில் ஆங்கிலம் பெற்றிருந்த ஆட்சியை அன்று வடமொழி கைக்கொண்டிருந்தது.

உடுமலை நாராயணகவியின் நுழைவு திரைப்படப் பாடல்களுக்குப் புதியதொரு பாதையைக் காட்டியது. தமிழின உணர்வும், சமூகச் சீர்திருத்தமும் பொதுவுடைமைக் கொள்கையும் தமிழ்ச் சமுதாயத்தில் வேரூன்றத் தொடங்கிய காலக்கட்டத்தில் இவரும் இவரைத் தொடர்ந்து பட்டுக்கோட்டைக் கல்யாண சுந்தரமும் தம் பாடல்களில் இவற்றிற்கு முக்கியத்துவமளித்தனர். முன்னவர் திராவிடப் பாரம்பரியத்திற்கு ஊக்கமளிக்க, பின்னவர் பொதுவுடைமைக்குச் சிறப்பளித்தார்.

தனித்தமிழுக்கும் புதிய புதிய கற்பனைக்கும் இடமளித்து உடுமலை நாராயணகவி திரைப்பாடல்களில் பெரியதொரு மாற்றத்தை ஏற்படுத்த அவற்றிற்கு இலக்கியத் தகுதியைப் பெற்றுத் தந்து பின்வருபவர்களுக்கு வழிகாட்டியானார். இவரே திரைப் பாடல்களில் நாட்டுப்புறப் பாடல்களின் தாக்கத்தையும் தோற்றுவித்தார். 'விண்ணோடும் முகிலோடும் விளையாடும் வெண்ணிலவே' (புதையல்) எனப் பல பாடல்கள் இன்றும் இவர் புகழ் பாடுகின்றன. திரையுலகில் வெற்றி பெற்றோரில் பாடல்கள் எழுதி நீண்ட காலம் நிலைத்து நின்றோருடன் ஒப்ப எண்ணத் தக்க வகையில் பட்டுக்கோட்டை ஒளிர்கிறார். குறுகிய காலமே, குறைந்தளவே பாடல்கள் எழுதியிருப்பினும் மக்கள் கவியாகப் பொதுமக்களின் பேராதரவை இவர் பெற்றுள்ளார். 'தூங்காதே தம்பி தூங்காதே'; 'சின்னஞ் சிறு கண் மலர் செம்பவள வாய் மலர்', 'துள்ளாத மனமும் துள்ளும்' போன்ற கருத்தாழம் மிக்க கவிதைகள் இப்பெருமையை அவருக்கு வழங்கியுள்ளன.

அடுத்து வந்த மூன்று பத்து ஆண்டுகளின் திரையிசைப் பாடல்கள் கண்ணதாசனின் ஆளுகைக்குட்பட்டிருந்தது. இலக்கிய உலகில் அவர் பல்வேறு தடங்களில் தம்மை வெளிப்படுத்தினும்

நிலையான பெரும்புகழை அவருக்கு ஈட்டித் தந்தது திரைப்படப் பாடல்களே. 'நான் நிரந்தரமானவன் அழிவதில்லை, எந்த நிலையிலும் எனக்கு மரணமில்லை' என்ற இவரின் வாய்மொழி உண்மையாகிவிட்டது. 'சட்டி சுட்டதடா கை விட்டதடா', 'உள்ளத்தில் நல்ல உள்ளம் உறங்காதென்பது' போன்ற வாழ்க்கையின் உண்மைகளை எடுத்துரைக்கும் தத்துவப் பாடல்களே இவருக்கு நிலைபேறளித்துள்ளன. கதையோடும் கதை மாந்தரோடும் ஒன்றி வரும் இவரது கவிதை வரிகள் இவரைக் கவியரசாக்கின. 'மலர்ந்தும் மலராத பாதிமலர் போல வளரும் விழி வண்ணமே-நதியில் விளையாடி கொடியில் தலை சீவி நடந்த இளந் தென்றலே - வளர் பொதிகை மலை தோன்றி மதுரை நகர் கண்டு பொலிந்த தமிழ் மன்றமே' போன்ற பாடல்கள் இவரைப் புகழின் உச்சிக்குக் கொண்டு சென்றன. பழம் பாடல்களைப் பழகு தமிழில் புதுப்படலாக்கி மக்கள் மன்றத்திற்குக் கொண்டு வந்து சேர்த்த பெருமைக்குரியவர் இவர். இவரது பாடல்களில் பல திரைப் படங்களுக்குத் தலைப்பாகிய சிறப்பும் பெற்றுள்ளன. பின் வந்த கவிஞர்களிடத்திலும் இவர் ஆளுமையைக் காணலாம்.

இக்காலக்கட்டத்தில் தஞ்சை ராமையாதாஸ் (வாராயோ வெண்ணிலாவே கேளாயோ எங்கள் கதையை); கா.மு. ஷெரீப் (ஒன்று சேர்ந்த அன்பு மாறுமா); மருதகாசி (மணப்பாறை மாடு கட்டி மாயவரம் ஏரு பூட்டி); சுரதா (அமுதும் தேனும் எதற்கு) கு.மா. பாலசுப்பிரமணியம் (சிங்கார வேலனே தேவா) எனப் பிறரும் தம் திறம் காட்டியுள்ளனர்.

கண்ணதாசன் காலத்தில் நுழைந்து இன்றுவரை தனக் கென ஓரிடத்தைத் திரைப்படப் பாடல் வரைவில் கொண்டிருப்பவர் வாலி. கண்ணதாசன் சிவாஜி படங்களுக்குப் பாட்டெழுதி பெரு வெற்றி பெற்றது போல் இவர் எம்.ஜி.ஆர் படங்களுக்குப் பாட்டெழுதி புகழ் பெற்றார். எம்.ஜி.ஆரைப் புகழ்ந்து பாடல் வரைவதில் இவரும் புலமைப்பித்தனும் போட்டியாளர்கள் எனலாம். 'மாதவி பொன்மயிலாள் தோகை விரித்தாள்', 'உறவு என்றொரு சொல் இருந்தால் பிரிவு என்றொரு பொருள் இருக்கும்' 'கண் போன போக்கிலே கால் போகலாமா?' என்பன போன்ற நல்ல பாடல்களைத் தந்திருப்பினும் திரைப்படப் பாடல்களில் ஆபாசத்திற்கு அதிக இடமளித்தவர் என்ற குற்றச்சாட்டிற்கும் இலக்காகிறார்.

கண்ணதாசனின் திடீர் மறைவால் ஏற்பட்ட வெற்றிடத்தை நிரப்புதற்கு நடந்த போட்டியில் வென்றவர் வைரமுத்து. 'பொன் மாலை பொழுதில்' திரைக்கவியாக மலர்ந்தவர் இன்று கவிப்

பேரரசாக உலா வருகிறார். கண்ணதாசனுக்குப் பின் கதை நிகழ்ச்சிக்கும் கதை மாந்தருக்கும் பொருத்தமாகப் பாட்டெழுதி நிலைத்து நிற்கிறார். 'பூங்காற்று திரும்புமா?' 'சின்ன சின்ன ஆசை, சிறகடிக்கும் ஆசை' என இதயத்தைத் தொடும் பாடல்களால் ரசிகர்களைத் தம்பால் ஈர்த்துள்ளார். 'ஓடுகிற தண்ணியிலே ஒரைச்சு விட்டேன் சந்தனத்தை', 'பாடறியேன் படிப்பறியேன் பள்ளிக்கூடம் தானறியேன்' என நாட்டுப்புறப் பாடல்களுக்கும் திரை ஏற்றம் தந்துள்ளார். தம் கற்பனைகளின் உச்சத்தால் திரையுலகின் உச்சியை எட்டியுள்ளார். இவர் தம் திறனை விரசமான பாடல்களிலும், கதைநாயகரை எல்லையின்றிப் புகழ்தலிலும் ஆங்கிலக் கலப்பிலும் காட்டி வீணடித்துக் கொண்டிருக்கிறார். இதில் இவரை இன்றைய கவிஞர் பலரும் பின்பற்றிக் கொண்டிருப்பதும் தமிழுக்குப் பெருமை தரவில்லை.

புதுக்கவிதையாளர், பாரதிதாசன் பரம்பரையினர் எனப் பலரும் விரைந்த புகழ், நிறைந்த பணம் எனும் கவர்ச்சியால் இதனுள் நுழைந்து தம்மைத் தக்க வைக்க முயன்றுள்ளனர். நா. காமராசன், கங்கை அமரன், பொன்னடியான், மு. மேத்தா, குருவிக்கரம்பை சண்முகம், அறிவுமதி, பழநிபாரதி என இப்பட்டியல் தொடர்கிறது. புலமைப்பித்தன், ஆலங்குடி சோமு, முத்துலிங்கம் போன்றோரும் நினைவில் நிற்கும் கவிதைகள் பல தந்துள்ளனர். பெண் கவிகளின் வரவு அத்தி பூத்தாற் போன்றே அமைகிறது. தற்பொழுது தாமரை என்பார் முகங்காட்டியுள்ளார்.

சமூகச் சீர்திருத்த கருத்துகள் ஒருபுறம், சமூகச் சீர்கேடுகளை வளர்த்தல் மறுபுறமுமாக விந்தைப் போக்கினைத் திரைப்பாடல்கள் இன்று கொண்டுள்ளன. ஊழல் முதலான அரசியல் அவலங்களும், சமூக அவலங்களும், பெண்ணுரிமைச் சிந்தனைகளும் அங்கங்கே தென்படுகின்றன. எனினும் பெண்ணைக் கேலிப் பொருளாக்கி இழிவுபடுத்தும் பாடல்களும், ஆணாதிக்கத்தை வலியுறுத்தும் பாடல்களும் மிகுதியாக உள. யதார்த்தம், வணிகம் என்ற போர்வையில் திரைப்படப் பாடல்களின் தரம் குறைந்து கொண்டிருப்பதைச் சமூகச் சிந்தனையாளர் சுட்டியுள்ளனர். களைகளுக்கிடையே நெல்மணிகளைப் பொறுக்குவது போன்ற கடினமான பணியாகவே திரைப்படப் பாடல்களில் இலக்கியத் தரம் வாய்ந்த கவிதைகளை இனங்காண்பது அமைகிறது. (நன்றி: சு. சண்முகசுந்தரம், வைரமுத்து வரை, காவ்யா, பெங்களூர், 1996).

## கவியரங்கக் கவிதைகள்

20 ஆம் நூற்றாண்டில் கவிதைகள் எழுத்து வடிவில் இருந்தால் போதாது; மேடையில் எடுத்துப் படிக்கும் வடிவமாக வேண்டும் என்ற எண்ணத்தைக் கவியரங்கங்கள் ஏற்படுத்தின. பழைய பாடாண்திணைப் பாடல்கள், தனிப்பாடல்கள் போன்றவை புலவர்களின் உணர்ச்சி வெளிப்பாடாகப் பொதுமக்கள் முன்னிலையில் பாடப்பட்டுப் பொதுமக்களால் சுவைக்கப் பட்டவை என்பதால் இன்றைய கவியரங்கத்துடன் நெருங்கிய தன்மை கொண்டவை என்பது குறிப்பிடத்தக்கது.

பொதுமக்களை நினைத்து நேரில் சென்று அவர்களி டையே கவிதை உணர்ச்சியை ஊட்டும் போக்கினை இக் காலத்தில் மகாகவி சுப்பிரமணிய பாரதியார் தொடங்கி வைத்திருக்கிறார். இது ஓரளவு பொதுமக்கள் முன்னிலையில் நடைபெறும் இன்றைய கவியரங்கத்திற்குத் தோற்றுவாய் எனலாம். ஆனால் இன்று பெரும்பான்மையாகப் பயிலப்படும் கவியரங்க அமைப்புக்கு வித்திட்டது வானொலி நிலையமே. திருச்சி வானொலி நிலையம் தமிழ்ப்புத்தாண்டு நாளையொட்டி 13-4-1944 அன்று 'எழில்' எனும் பொது தலைப்பில் முதல் கவியரங்கத்தை ஒலிபரப்பியது. சிட்டியும் (சுந்தரராஜன்) சோமுவும் இதற்கு ஏற்பாடு செய்தனர். டி.கே. சிதம்பரநாத முதலியார் தலைமையில் பதினெண்மர் கவிதை படித்தனர். இதன் வெற்றி 1946க்குப் பின் சென்னை, பாண்டிச்சேரி, கோவை, திருநெல்வேலி ஆகிய வானொலி நிலையங்களையும் இதில் ஈடுபடச் செய்தது.

தமிழகத்தில் கவியரங்கை விரிவாக்கிய பெருமை காரைக்குடி கம்பன் கழகத்திற்குச் சேரும். 1938 இல் தொடங்கப் பட்ட இக்கழகம் 10-4-1949 முதல் இன்று வரை ஒவ்வொரு ஆண்டும் கம்பன் விழாவில் கவியரங்கமும் நடத்திச் சிறப்பிக் கின்றது. இன்று பல்கிப் பெருகியுள்ள பிற கம்பன் கழகங்களிலும் இந்நிகழ்ச்சி தொடர்ந்து கவியரங்கக் கவிதைகளுக்கு வளம் சேர்க்கின்றது.

13-6-1971 முதல் சென்னை மெரினா கடற்கரையில் வள்ளுவர் சிலைக்குப் பின்புறம் மணற்பரப்பில் திங்கள்தோறும் முதல் ஞாயிறு மாலை 'கடற்கரை கவியரங்கம்' நடைபெற்று வருகிறது. பாரதிதாசனின் மாணாக்கரான பொன்னடியான் இதனை முன்னின்று நடத்துகிறார். 'இயற்கைப் போராட்டங் களுக்கு அஞ்சாமல் நடைபெறும் இக்கவியரங்கம் இளநிலைக் கவிஞர்களும் தங்கள் கன்னிப் படைப்புகளை அச்சமின்றிப்

படித்தின்புற வாய்ப்பளிக்கும் பயிற்சிப் பாசறையாகவும் விளங்கி வருகிறது' என அவர் பெருமிதம் கொண்டுள்ளார். இக் கடற்கரைக் கவியரங்கம் தமிழகத்தின் பல்வேறு பகுதிகளிலும் ஓடைக் கவியரங்கம் (தருமபுரி), மலைச்சாரல் கவியரங்கம் (உதகை) ஆற்றங்கரைக் கவியரங்கம் (தஞ்சை), சுற்றுலாக் கவியரங்கம் (நெல்லை) என்பன போன்று பரந்து விரிந்து இளங்கவிகளுக்கு எழுச்சியும் பயிற்சியும், தமிழுக்கு வளர்ச்சியும் அளிக்கின்றது.

நாளடைவில் பல்வேறு இலக்கிய மன்றங்கள் கவியரங்குகளுக்குச் சிறப்பளித்தன. இலக்கிய விழாக்களில் கவியரங்கம் ஓர் இன்றியமையாத பகுதியாக இன்று கருதப் படுகிறது. தமிழக மெங்கும் உள்ள இலக்கிய மன்றங்களில், கவியரங்குகளுக்கு முதன்மையளித்துச் சிறப்பிப்பனவாக, கலை இலக்கியப் பெருமன்றம், தமிழ்நாடு முற்போக்கு எழுத்தாளர் சங்கம், தமிழகக் கவிஞர் பேரவை, சேலம் தமிழ்ச் சங்கம், கவிதை உறவு, வானம்பாடி இயக்கம், வாணியம் பாடிக் கவிதைக்குழு (கவிராத்திரி), வைகறை இயக்கம் போன்றவற்றைச் சுட்டலாம். பாரத இளைஞர் சமூக நற்பணி மன்றம் (பாண்டிச்சேரி), பம்பாய் தமிழ்ச் சங்கம், கல்கத்தா பாரதி தமிழ்ச் சங்கம் எனப் பிற மாநிலத் தமிழ்ச் சங்கங்களும் இதில் ஈடுபாடு காட்டுவது நவிலத்தக்கது. இலக்கிய மாநாடுகள், அரசியல் மாநாடுகள், சிறப்பு நாட்கள், சிறப்பு விழாக்கள் என எங்கும் எதிலும் இன்று கவியரங்கம் கோலோச்சுகிறது. இப்பொழுது தொலைக்காட்சிகளும் இவற்றுடன் இணைந்து கவியரங்குகளைக் காட்சிப்படுத்துகின்றன.

நூற்றுக்கணக்கானோர் கவியரங்கக் கவிஞர்களாக உள்ளனர். அவர்களுள் தமிழகத்தில் கவியரங்குகளை நடத்தி வெற்றி பெற்றவர்களில் பாரதிதாசன் முதல்வர் ஆவார். அடுத்து, திரைப் படப் பாடல்களால் மக்களுக்கு அறிமுகமாகியிருந்த கண்ணதாசன் கல்லூரிகளிலும் இலக்கிய மன்றங்களிலும் பல்வேறு அரசியல் கட்சிகளிலும் கவிதையைச் சுவையுணர்வுடன் சொல்லிக் கவியரங்குகளுக்கு ஒரு தனிச்சிறப்புச் சேர்த்தார். எந்த விதமான அரசியல் பின்னணியும் இல்லாமல் தம்முடைய கவிதை ஆற்றல் ஒன்றினால் மட்டுமே கவியரங்குகளை இனிப்பாக்கி வரலாறு படைத்தவர் அப்துல் ரகுமான் ஆவார். 'கவியரங்கக் கதாநாயகர்' எனும் பெருமைக்குரியவர் இவர். அரசியல் தலைமையும் இலக்கியப் புலமையும் ஒரு சேரப் பெற்ற கலைஞர் மு. கருணாநிதியின் கவியரங்க நுழைவு ஒரு பெரும்பரபரப்பை ஏற்படுத்தியது.

பல நூறு கவியரங்குகளில் தலைமையேற்றுப் பாடிய சுரதாவின் உவமைகள் கற்றாரைக் களிப்படையச் செய்வன. கவிஞர் வைரமுத்துவின் வளமான கற்பனைகளும் சொல் ஆளுமையும் அங்கத உணர்வும் கவியரங்குகளில் தனித்து நின்றன. எந்தச் செய்தியையும் முரண் உத்தியில் அமைத்து விளக்கும் முறைமையை மு. மேத்தா கையாண்டு வெற்றி கண்டுள்ளார். தமிழ் மொழி உணர்வுடன் கருத்துகளைச் சொல்லும் வல்லாளர் புலமைப்பித்தன். சிலேடை, வருணனை, அங்கதங்களால் அவையை ஆட்கொண்டவர் தமிழன்பன். கருத்துகளை நயமாக எடுத்துச் சொல்வதில் முருகுசுந்தரம், மீரா, சிற்பி முன் நிற்கின்றனர். சந்தப்பாடல்களால் மரியதாஸ், இளந்தேவன், குருவிக்கரம்பை சண்முகம், வாலி போன்றவர்கள் அவையினரை வியக்கச் செய்துள்ளனர். பொன்னி வளவன் வெளிப்படையாகவும் வேகமாகவும் பாடிக் கவியரங்கைச் சூடேற்றுவதுண்டு. சரியான திறனாய்வுப் பார்வையால் உண்மைகளை ஊருக்கு உரைப்பதில் இன்குலாப் கவிதைகள் சிறப்பிடம் பெறுகின்றன.

ஏதேனும் ஒரு விழாவில் சிறப்பு நிகழ்ச்சியாகக் கவியரங்கம் ஏற்பாடு செய்யப்படுகிறது. கவியரங்கில் தலைமைக் கவிஞர் கொடுக்கப்பட்ட கவியரங்கத் தலைப்பை ஒட்டி முதலில் தம் கவிதையை வழங்குவார். இதன் பின் பிற கவிஞர்கள் ஒருவர் பின் ஒருவராகத் தமக்குத் தரப்பட்ட தலைப்பில் கவிதை படிப்பர். ஒரு கவிஞர் பாடி முடித்தபின் அவர் கவிதையின் சிறப்பான பகுதிகளைத் தலைவர் எடுத்துக்காட்டிக் கவிதையிலேயே பாராட்டுவார். முடிவில் தலைவர் தம் கவிதை பாடிக் கவியரங்கை நிறைவு செய்வார்.

கவியரங்கக் கவிதைகள் தனிப்பாடல் தன்மை கொண்டவையாகவும், பட்டிமன்றப் பண்பு பெற்றவையாகவும், அமைப்பாளர் - கவிஞர் - அதன் தலைவர் விருப்பங்களை மையப்படுத்துவனவாகவும் அமைந்துள்ளன. மக்கள் நெஞ்சில் இடம்பெற வேண்டும் என்ற நோக்கில் எழுதப்படும் கவியரங்கக் கவிதைகளில் நெகிழ்ச்சியைக் காண முடிகிறது. எனவேதான் ஆசிரிய விருத்தம் பெரும் இடத்தைப் பிடித்தது. இன்று சிறுபான்மையான ஓசை ஆதிக்கம் குறைக்கப்பட்டுக் கருத்துக்கு ஆழம் தருகையில் அது புதுக்கவிதையாகவும் மாறியதைக் காண்கிறோம். இயற்றுகிற கவிஞனுக்குத் தான் பெரும்பாலும் அது மரபாக இருப்பதா - மரபை மீறியதாக இருப்பதா என்ற சிக்கல் வருகிறது. கேட்பவர்களைப் பொறுத்தளவில் பெரும் பான்மையோர் கருத்தை உள்வாங்கிக் கொள்கிறார்கள்.

கருத்தைப் பரப்புவதே கவியரங்கின் முனைப்பான நோக்கம். பாமர மக்களுக்குமானதாக - எளிமையானதாக - உடனடிப்பயன் தருவதாக - கருத்தைப் பரப்புவதாக - உணர்வூட்டுவதாகக் கருத்தரங்கக் கவிதைகள் அமைகின்றன. மறுமலர்ச்சி தந்த சீர்திருத்தக் கருத்துகள் மக்களிடம் எழுச்சியுடன் சொல்லப்பட்ட வரலாறாகத் தான் கவியரங்கத் தோற்றம் அமைந்திருக்கிறது. மக்கள்வை முன் கவிஞர் தம் படைப்பாற்றலைக் காட்டுவதும், கவிஞரின் படைப்பினை அவன் வாயிலாகவே அவையோர் கேட்டுச் சுவைப்பதும் தனியின்பமாக அமைகின்றன. தம் படைப்புக்கான உடனடிப் பாராட்டும், விமர்சனமும் கவிஞரின் படைப்புத் திறனுக்கு ஊட்டமும் உற்சாகமும் அளிக்கின்றன.

பக்தி, பகுத்தறிவு, இலக்கியம், தமிழ்மொழிப்பற்று, இந்தி எதிர்ப்பு, இந்தியத் தேசியம், தமிழ்த்தேசியம், காந்தீயம், மார்க்சியம், அறிவியல், இயற்கை ஆகிய பல்வேறு உள்ளடக்கங்களைக் கவியரங்கம் கொண்டுள்ளது. கேட்கும் கவிதைகள் என்பதால் கவியரங்கில் பயன்படுத்தப்படும் மரபுக்கவிதை, புதுக்கவிதை, இலகு கவிதை என்ற மூன்றுவகைக் கவிதைகளிலும் ஓசை உருவம் முன்னிறுத்தப்படுகிறது.

பட்டிமன்ற முறை, ஏற்ற இறக்கம் கொடுத்துப் படிக்கும் முறை, யாப்பு மாற்றிப் பாடும் முறை, வினா - விடை முறை, புராண இதிகாசச் செய்திகளைக் கையாளும் முறை, நிகழ்காலத்தை இணைத்துப் பாடும்முறை, முரண்தொடை, வருணனை, அங்கதம், சிலேடை, படிமம், குறியீடு, போன்றவை கவியரங்கக் கவிதைகளில் கலைத் திறனோடு வெளிப்படுகின்றன.

தொடக்கத்தில் கூறப்படும் தேவையற்ற வாழ்த்துகளைப் புறக்கணித்த புரட்சி; பேச்சு மொழியைப் பயன்படுத்தி நிகழ்காலச் செய்திகளை இணைத்துப் பாடிய ரகுநாதன் முயற்சி; படிக்கும் ஊடகமாயிருந்த புதுக்கவிதை கேட்கும் ஊடகமாய் மாறிய வளர்ச்சி; தலைப்பின்றிப் பாடுதல் - தனி மனித வழிபாடு தவிர்த்தல்- மார்க்சியக் கருத்துகளை வடித்தல் எனும் வானம்பாடிக் கவிஞர்கள் கண்ட புதிய மலர்ச்சி; கவிதையை அழகியலாக்கி இளைஞர்களை எழுதத்தூண்டும் வாணியம்பாடிக் குழுவின் பயிற்சி; பொழுதுபோக்குக் கவிதைகளைப் போராட்டக் கருவியாக்கிக் கொண்ட மக்கள் எழுச்சி என்பன இக்கவியரங்கக் கவிதைகளின் வரலாற்றில் திருப்புமுனைகளாகின்றன.

தமிழ்க்கவிதை இலக்கண இறுக்கம் நீங்கி எளிமை பெற்று பொதுமக்களுக்கும் பொருந்தி வரும் இன்னோர்

இலக்கிய வடிவமாகத் திகழ்வதும் இதனால் கவிதை உணர்வு கொண்டோரில் பலர் படைப்பாளர்களாக மேடையேறியதும், கருத்து வெளியீட்டில் நிகழ்காலச் சிக்கல்களை முதன்மையாகக் கொண்டு புதுமைப் போக்குகளோடு எதிர்கால நம்பிக்கைகளைத் தாங்கிவரும் ஒரு புதிய மேடைக்கலையாகி உள்ளதும் கவியரங்கால் பெற்ற பயன்கள் ஆகும்.

தலைப்பு, கால வரையறை என்ற கட்டுப்பாடுகளால் கவிதையில் செயற்கைத் தன்மை, வெறும் சொல்விளையாட்டு, வெற்று நகைச்சுவை ஆகியவற்றால் நீர்த்துப் போதல்; வருவாய் நோக்கத்தால் கவிஞர்களிடம் கொள்கைப்பிடிப்பு, படைப் பாற்றல் ஆகியன குறைதல்; தன்னலம் கருதி இடம்பெறும் தனிமனித வழிபாடு; கவிதை-கவிஞன் இணைப்பு முழுமை பெறாமல் இடைவெளி உண்டாதல் போன்றவை இக்கவியரங்கக் கவிதைகளின் குறைகளாகச் சுட்டப்படுகின்றன.

எனினும் தமிழ்க்கவிதை வரலாற்றில் இவற்றிற்கும் தனியிடமுண்டு. இக்கவியரங்கக் கவிதைகள் அவ்வப்போது நூலாக்கமும் பெறுகின்றன. பண்டைய தமிழ்ச் சுவடிகள் போன்று வெளியீட்டை எதிர்நோக்குவனவும் உள. (நன்றி: மு. சண்முகம், தமிழ் மறுமலர்ச்சியில் கவியரங்கக் கவிதைகள், கலா வெளியீடு, சென்னை, (மு.ப.டிச. 1990).

## இலங்கை

**எம்.ஏ. நுஃமான்**

19ஆம் நூற்றாண்டின் பின்பகுதி தமிழ் மொழியிலும் பிற தென்னாசிய மொழிகளிலும் நவீனத்துவத்தின் ஆரம்ப கட்டம் எனலாம். இக்கால கட்டத்திலேயே நவீன இலக்கிய வடிவமான நாவல் இம்மொழிகளில் தோற்றம் பெற்றது. நவீன உரைநடை வளர்ச்சி பெற்றது. ஆயினும் கவிதையைப் பொறுத்த வரை 20ஆம் நூற்றாண்டின் தொடக்கம் வரையிலும் பாரம்பரிய மரபே பேணப்பட்டது எனலாம். இலங்கையிலும் இத்தன்மையையே நாம் காண்கிறோம்.

19ஆம் நூற்றாண்டின் நடுப்பகுதியிலிருந்து இருபதாம் நூற்றாண்டின் ஆரம்ப தசாப்தங்கள் வரை இடைக்காலப் புலவர் மரபைச் சேர்ந்த பல தமிழ்ப் புலவர் பெருமக்கள் ஈழத்தில்

வாழ்ந்தனர். இவர்களுள் சுன்னாகம் குமாரசுவாமிப் புலவர், க. மயில்வாகனப் புலவர், ஆசுகவி கல்லடி வேலுப்பிள்ளை, புலவர் சுப்பையனார், நவநீதக் கிருஷ்ண பாரதியார், அருள்வாக்கி அப்துல் காதிறுப் புலவர் முதலியோர் இங்கு மிகுந்த பிரசித்தி பெற்றவர்கள். இவர்களுட் பலர் பாரதியின் சமகாலத்தில் வாழ்ந் தவர்கள். எனினும், இடைக்காலப் புலவர் மரபின் பிரதிநிதிகளே யாவர். இவர்களது கவிதை பெரிதும் சமயச் சார்பானதாகவும், பிரபந்த வகை சார்ந்ததாகவுமே அமைந்தன. எனினும், புலவர் சுப்பையனாரின் கனகி புராணம் இக்காலத்தில் எழுந்த சமயச் சார்பற்ற தனித்துவமான அங்கதச் சுவைமிகுந்த கவிதை நூலாகும். இந்த இடைக்காலப் புலவர் மரபு பாரதி தோற்றுவித்த நவீன கவிதை மரபுக்குச் சமாந்தரமாக இலங்கையில் இன்றுவரை தொடர்வதைக் காணலாம்.

இந்நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்த, பாரதியின் சமகாலத்தவரான பாவலர் துரையப்பா பிள்ளை முதல், சமீப காலம்வரை இம்மரபின் தொடர்ச்சியாய் பல கவிஞர் பெரு மக்களும் வாழ்ந்தனர். சோமசுந்தரப் புலவர், சுவாமி விபுலாநந்த அடிகள், புலவர்மணி பெரியதம்பிப் பிள்ளை, புலவர் ஆ.மு. ஷரிபுத்தீன், பேராசிரியர் க. கணபதிப் பிள்ளை, கவிஞர் அப்துல்காதர் லெவ்வை முதலியோர் வெவ்வேறு அளவில் பழைய மரபின் தொடர்ச்சியாக அமைந்தனர். அதேவேளை நவீனயுகத்தின் சிந்தனைகளும் இவர்களிடம் வெவ்வேறு அளவில் காணப்பட்டன. அவ்வகையில், பழைய மரபுக்கும் நவீன மரபுக்கும் இடைப்பட்டவர்களாகவும் நாம் இவர்களை நோக்கலாம்.

பாவலர் துரையப்பாபிள்ளை முதல்முதல் ஈழத்துத் தமிழ்க்கவிதையில் சமூகச் சீர்திருத்தக் கருத்துக்களைப் புகுத்தியவர் எனலாம். இவரது யாழ்ப்பாணச் சுவதேசக்கும்மி இவ்வகையில் குறிப்பிடத்தக்கது. சோமசுந்தரப் புலவர் ஈழத்திலே சிறுவர் கவிதையின் முன்னோடிகளுள் முக்கியமானவர். இவரது சிறுவர் செந்தமிழ் என்ற நூலிலுள்ள பாடல்கள் இலங்கைப் பாட சாலைகளில் பிரசித்தி பெற்றவை. விபுலாநந்த அடிகள் தமது செந்நெறிப் பாங்கான கம்பீரமான செய்யுள் நடையிலே சொந்த மாகக் கவிதைகள் பல எழுதியதோடு ஷேக்ஸ்பியரின் நாடகப் பாடல்கள் சிலவற்றையும் மொழி பெயர்த்துத் தமிழுக்கு வளம் சேர்த்தவர். புலவர் மணி பெரிய தம்பிப் பிள்ளையின் பகவத்கீதை வெண்பாவும், இலங்கைமணித் திருநாடு என்னும் பாடலும் இலங்கையில் நன்கு புகழப்பட்டவை. புலவர்மணி ஆ.மு. ஷரிபுத்தீன், கவிஞர் அப்துல் காதர்லெவ்வை ஆகியோர் சிறந்த இஸ்லாமியக்

கவிஞர்களாக இலங்கை முஸ்லீம்கள் மத்தியில் பெருமதிப்புப் பெற்றவர்கள். சமகாலச் சமூகப் பிரச்சினைகள் சிலவற்றைத் தமது கவிதையில் கையாண்ட பெருமை பேராசிரியர் கணபதிப் பிள்ளைக்கு உண்டு. அவரது தூவுதும் மலரே, காதலி ஆற்றுப் படை முதலிய நூல்களில் இதனைக் காணலாம். எனினும், அவரது நவீன உள்ளடக்கத்துக்கும் அவர் கையாண்ட பழமைசார் செய்யுள் நடைக்கும் இடையே பெரிய இடைவெளி காணப்பட்டது.

பாரதி தமிழ்க் கவிதையில் தோற்றுவித்த நவீனத்துவத்தின் தொடக்கத்தை 1940களின் பிற்பகுதியிலேயே ஈழத்தில் காண்கிறோம். இந்த நவீன கவிதை மரபு உண்மையில் பாரதிதாசன் வழியாகவே இங்கு முதலில் அறிமுகமாயிற்று. நாவற்குழியூர் நடராசன், மஹாகவி, அ.ந. கந்தசாமி ஆகியோர் ஈழத்து நவீன கவிதை முன்னோடிகளுள் முக்கியமானவர்கள். நாவற்குழியூர் நடராசன் ஒருவகையில் மனோரதியப் பாங்கினையும், மஹாகவி யதார்த்த நெறியினையும், அ.ந. கந்தசாமி இடதுசாரிச் சிந்தனை யையும் தங்கள் கவிதைகளில் பிரதிநிதித்துவப்படுத்தினர் எனலாம். பிந்திய தசாப்தங்களில் ஈழத்துக் கவிதையில் இம்மூன்று போக்குகளும் முனைப்பாக வளர்ச்சி பெற்றன. மற்ற இருவரையும் விட மஹாகவி 1960களின் இறுதிவரை ஆற்றலுடன் செயற்பட்டு, தமிழில் மிகமுக்கியமான கவிஞர்களுள் ஒருவராகத் தன்னை நிலைநிறுத்திக் கொண்டார்.

1950, 60, 70களில் ஈழத்துக் கவிதைகளின் பிரதேச எல்லைகளும் பொருட் பரப்பும் விரிவடைந்தன. 1940களில் யாழ்ப்பாணத்தை மையமாகக் கொண்டிருந்த ஈழத்து நவீன கவிதை கிழக்கிலங்கை, மத்திய மலைநாடு, தென்னிலங்கை என விரிவடைகின்றது. முற்றிலும் மதச்சார்பு கொண்டிருந்த இஸ்லாமியரின் கவிதை முயற்சிகள் இக்கால கட்டத்தில் சமூகச் சார்பும் நவீனத்துவமும் பெறுகின்றன. இதுவரை யாப்போசையை இறுக்கமாகப் பேணிய ஈழத்துக் கவிதை யாப்பை மீறாமலே யாப்பின் எல்லைகளை விரிவுபடுத்திப் பேச்சோசைக்கு முதன்மை கொடுக்கத் தொடங்கியது. 1940களின் பிற்பகுதியில் எழுதத் தொடங்கிய மஹாகவி இக்காலப் பகுதியிலேயே முதிர்ந்த கவிஞராக முகிழ்த்தார். முருகையன், நீலாவணன், சில்லையூர் செல்வராசன், புரட்சிக்கமால், அண்ணல் ஆகியோர் 50களிலும், மு. பொன்னம்பலம், சண்முகம், சிவலிங்கம், பஸீல் காரியப்பார், பா. சத்தியசீலன், எம்.ஏ. நுஃமான், புதுவை இரத்தினதுரை, சி.சிவசேகரம் முதலியோர் 60, 70களிலும் முக்கிய கவிஞர்களாக வெளிப்பட்டனர்.

ஈழத்துக் கவிதை மனோரதியப் பாங்கில் இருந்து விடுபட்டு சமூக, அரசியல் பிரச்சினைகளில் காலூன்றி யதார்த்த நெறிக்குத் திரும்பிய காலகட்டமாக இதனைக் கொள்ளலாம். 1950களின் பின்பகுதி அரசியல் ரீதியாக இலங்கைத் தமிழ்க் கவிதையில் பெரிதும் செல்வாக்குச் செலுத்திய காலப் பகுதியாகும். இக்காலப் பகுதியை அரசியல் கவிதையின் தொடக்க காலம் என்றும் கூறலாம். தென் இலங்கையில் 'சிங்களம் மட்டும் ஆட்சிமொழி' என்ற கோசத்தின் எதிரொலியாகத் தமிழ் மக்கள் மத்தியில் மொழி உணர்வும் தமிழ்த் தேசியவாதமும் தீவிரம் அடைந்தன. பெரும்பாலான இலங்கைத் தமிழ்க் கவிஞர்கள் இதனால் ஈர்க்கப் பட்டனர். மொழி, இன உணர்வை உள்ளடக்கமாகக் கொண்ட நூற்றுக்கணக்கான எதிர்ப்புக் கவிதைகள் இக்காலப்பகுதியில் எழுந்தன. சுதந்திர பத்திரிகை இத்தகைய கவிதைகளின் பிரதான வெளியீட்டுக் களமாக அமைந்தது. செந்தமிழ்ச் செல்வம், உயிர் தமிழுக்கு, தமிழ் எங்கள் ஆயுதம் முதலிய தொகுப்பு நூல்கள் வெளிவந்தன. 50களின் இறுதியில் தமிழ் உணர்ச்சிக் கவிதைகள் ஒரு வகையில் முடிவுக்கு வந்தன. 1960, 70களில் இலங்கைத் தமிழ்க் கவிதையில் தமிழ் உணர்ச்சியின் இடத்தைச் சமூகப் பிரச்சினை களும், முற்போக்குச் சித்தாந்தமும் பிடித்துக் கொண்டன எனலாம். இக்கால கட்டத்தில் இலங்கை அரசியலில் இடதுசாரி இயக்கங்கள் வலுப்பெற்றமை இதற்கு ஒரு முக்கிய காரணமாக அமைந்தது.

கவிதை வடிவத்தைப் பொறுத்தவரை 1960களின் இறுதிவரை இலங்கைத் தமிழ்க் கவிதை பெரிதும் யாப்பு வழிக்கவிதையாகவே அமைந்தது. யாப்போசையும் சந்த லயமும் கவிதையின் பிரதான அம்சங்களாகக் கருதப்பட்டுவந்தன. 'யாப்புக்குள் இருந்து யாழ் மீட்டுபவள்' எனக் கவிதைபற்றி மஹாகவி ஒரு கவிதையில் எழுதினார். ஓசைநயம்மிக்க பல்வேறுவகையான யாப்பு வடிவங் களிலும் சந்தவிகற்பங்களிலும் ஈழத்துக் கவிஞர்கள் அக்கறை காட்டினர். எனினும், 60களில் இதில் ஒரு முக்கியமான மாற்றத்தைக் காண்கின்றோம். ஈழத்தின் முக்கியமான கவிஞர்கள் பலரும் யாப்பு வடிவத்தையே பயன்படுத்திய அதேவேளை, அதன் இறுக்கமான யாப்போசையைத் தளர்த்தி, அதன் இடத்தில் பேச்சோசையைப் புகுத்தினர். அதற்கேற்ப செய்யுளின் அமைப்பு முறையில், அதன் புறவடிவத்தில் பலமாற்றங்களை ஏற்படுத்தினர். அன்றாட வழக்குச் சொற்கள், இயல்பான சொற்சேர்க்கை, சிறுவாக்கிய அமைப்பு என்பன கையாளப்பட்டன. செய்யுளின் அடி அமைப்புக்கு ஏற்ற வகையில் அன்றி, கவிதையின் பொருள் அமைப்புக்கேற்ப, சீர் பிரித்து வரிகள் அமைக்கப்பட்டன. ஓசை

நிறுத்தத்துக்காக நிறுத்தக் குறிகளும், வரிகளுக்கிடையே இடைவெளிகளும் (space) பயன்படுத்தப்பட்டன. இவ்வாறு செய்யுளின் யாப்போசை குறைக்கப்பட்டு பொருட்புலப்பாட்டுக்கு ஏற்ப பேச்சோசை நிலை நிறுத்தப்பட்டது. ஒரு செய்யுளுக்குரிய சீர், தளை, எதுகை, மோனை வரையறைகளை இழக்காமலேயே பேச்சோசையின் சகல பண்புகளையும் ஈழத்துக் கவிதை பெற்றது. இது இக்காலப் பகுதியில் தமிழ்நாட்டுக் கவிதை மரபில் இருந்து ஈழத்துக் கவிதையை வேறுபடுத்திய ஒரு முக்கிய அம்சமாகும்.

1970 ஆம் ஆண்டுக்குப் பின்னர் இலங்கைத் தமிழ்க் கவிதையில் ஒரு புதிய அலை தோன்றியது. இக்காலப் பகுதியில் ஏற்பட்ட அரசியல், இலக்கிய விழிப்புணர்வும், தமிழ்நாட்டுப் புதுக்கவிதையின் செல்வாக்கும் காரணமாக ஏராளமான இளைஞர்கள் கவிதைத் துறையில் பிரவேசித்தனர். புதிய சமூக மாற்றத்துக்குக் குரல் கொடுக்கும் புரட்சிகரச் சிந்தனை உடையோரே இவர்களுள் அதிகமாகக் காணப்பட்டனர். இவர்கள் தங்கள் எண்ணங்களையும் உணர்வுகளையும் வெளியிடுவதற்குப் புதுக் கவிதை ஒரு இலகுவான ஊடகம் எனக் கண்டனர். 1970க்கு முன்னும் ஈழத்துக் கவிதை உலகில் புதுக்கவிதை அல்லது நவீன கவிதைப் போக்கு இருந்தது. இன்று தமிழகக் கவிதையின் பிரிக்க முடியாத அங்கமாக ஏற்றுக்கொள்ளப்பட்ட பிரமிள் (தருமு சிவராமு) ஈழத்தவரே. த. ராமலிங்கம் இக்காலத்தில் முன்னணிக்கு வந்த தனித்துவமான புதுக்கவிதையாளராவார். எனினும், 70க்கு முன்னர் இலங்கையில் புதுக்கவிதை சிறுபான்மைப் போக்காகவே காணப்பட்டது. அதற்குப் பரவலான இலக்கிய அங்கீகாரம் இருக்க வில்லை. ஆனால், 70க்குப் பின்னர் இலங்கைத் தமிழ்க் கவிதை வடிவரீதியில் பெரும்பாலும் புதுக்கவிதையாகவே மாறிவிட்டது எனலாம். ஆயினும் ஈழத்துப் புதுக்கவிதை தமிழ்நாட்டுப் புதுக்கவிதைப் போக்குகளில் இருந்து பெருமளவு வேறுபட்டிருப்பதை உணர முடிகின்றது. ஈழத்துப் புதுக்கவிதையை இங்கு வளர்ச்சி பெற்ற பேச்சோசைப் பாங்கான யாப்புவழிக் கவிதையின் செல்வாக்குக்குட் பட்ட பிறிதொருகட்ட வளர்ச்சியாகவே நோக்க வேண்டும்.

ஈழத்துத் தமிழ்க் கவிதை வளர்ச்சியில் 1980, 90கள் மிக முக்கியமான காலகட்டமாகும், இக்காலப் பகுதியில் மிக மோசமடைந்த இன முரண்பாடும், ஆயுதம் தாங்கிய விடுதலைப் போராட்டமும், உள்நாட்டு யுத்தமும், இவை ஏற்படுத்திய மனித அவலங்களும் ஈழத்துத் தமிழ் இலக்கியத்தைப் பொதுவாகவும் கவிதையைக் குறிப்பாகவும் பாதித்தன. 50களில் இங்குத் தோன்றிய தமிழ் உணர்ச்சிக்கவிதைகளில் இருந்து உருவத்திலும் உள்ளடக்கத் திலும் வேறுபட்டு அரசியல் போராட்டக் கவிதையாக ஈழத்துக்

கவிதை இக்காலப் பகுதியில் மாறியது. இத்தகைய அரசியல் போராட்டக் கவிதை அதன் பல்வேறு பரிமாணங்களுடன் தமிழில் ஈழத்திலேயே முதலில் தோன்றுகின்றது. இன முரண்பாடும் இன ஒடுக்குமுறையும் யுத்தமும், யுத்த அவலமும், கவிதையின் பிரதான பொருளாகின. அவ்வகையில், ஈழத்துக் கவிதை மூன்றாம் உலக விடுதலைப் போராட்டக் கவிதைகளுக்குச் சமாந்தரமாக இக்கால கட்டத்தில் வளர்ச்சியடைந்தது. மரணத்துள் வாழ்வோம் என்ற தலைப்பில் 1985ல் வெளிவந்த கவிதைத் தொகுதி இதை உறுதிப் படுத்தியது. வ.ஐ.ச. ஜெயபாலன், சேரன், சு. வில்வரத்தினம், சோலைக்கிளி முதலியோர் இக்காலக்கட்டத்தின் முக்கிய கவிஞர்களாக முன்னணிக்கு வந்தனர்.

இக்காலக்கட்டத்து ஈழத்துக் கவிதையைப் பொறுத்தவரை இன்னும் இரண்டு முக்கிய அம்சங்களைக் குறிப்பிட வேண்டும். ஒன்று பெண் கவிஞர்களின் வருகையும் பெண்ணிலைச் சிந்தனைகளின் கவித்துவ வெளிப்பாடும். மற்றது, ஈழத்தமிழ் இளைஞர்களின் புலப்பெயர்ச்சியும் புலம்பெயர்ந்தோர் கவிதை முயற்சிகளும்.

இலங்கைத் தமிழ் கவிதையில் பெண்களின் இருப்பு 1980களில்தான் முனைப்பாக வெளிப்படத் தொடங்கியது. கணிசமான இளம் பெண்கள் சுய பிரக்ஞையுடனும் அரசியல் விழிப்புணர்வுடனும் இக்காலப்பகுதியில் கவிதை எழுதத் தொடங்கினர். பெண் என்ற அடையாளம் இக்கவிதைகளில் தெளிவாகப் புலப்பட்டது. பெண்ணிலைவாதம் ஈழத் தமிழ்க் கவிதையில் பெண்களின் சொந்தக் குரலில் வெளிப்பட்டது இதுவே முதல் தடவை எனலாம். இக்குரலின் திரண்ட வடிவமாகச் 'சொல்லாத சேதிகள்' என்ற பல பெண் கவிஞர்களின் கவிதைகளைக் கொண்ட ஒரு சிறிய தொகுதி 1984இல் வெளிவந்தது. இதன் தொடர்ச்சியாகக் குறிப்பிடத்தக்க சில தொகுதிகள் பின்னர் வெளிவந்தன.

1983ல் நிகழ்ந்த இலங்கை வரலாற்றில் மிகமோசமான இன வன்செயலும், அதைத் தொடர்ந்து தீவிரமாக வளர்ச்சியடைந்த ஆயுதப் போராட்டமும், யுத்தமும் காரணமாக ஏராளமான தமிழ் இளைஞர்கள் மேற்குநாடுகளில் அகதிகளாகத் தஞ்சம் புகுந்தனர். இவர்களுள் கணிசமானோர் அரசியல் விழிப்புணர்வு பெற்றவர்கள். தமிழ் மட்டும் அறிந்தவர்கள். புகலிடச் சூழலில் இவர்கள் எதிர்நோக்கிய இன்னல்கள் பல. தாயகத்தின் யுத்தச் சுவடுகளும் புகலிடத்தின் அகதி நெருக்குதல்களும் இவர்களுட்

பலரைக் கவிஞர்களாக்கின. இவர்களுட் பலர் ஏற்கனவே நம்பிக்கை தரும் கவிஞர்களாக இருந்தவர்கள். புகலிடத்தின் கணினித் தொழில்நுட்பம் வழங்கிய வெளியீட்டு வசதிகள் இவர்களுக்கு வாய்ப்பாக அமைந்தன. ஐரோப்பிய நாடுகளிலும், கனடாவிலும், அவுஸ்திரேலியாவிலும் ஏராளமாகத் தமிழ்ச் சஞ்சிகைகளை இவர்கள் வெளியிட்டனர். அவற்றில் இவர்களது கவிதைகள் பிரசுரமாகின. பின்னர் சில தொகுப்புகளாக வெளிவந்தன. மேலைத்தேய பௌதிக, பண்பாட்டுப் பின்னணி இவர்களது கவிதைக்கு ஒரு புதிய பரிமாணத்தை வழங்கியது. களத்துக்கு வெளியே இருப்பது ஓரளவு அரசியல் சுதந்திரத்தையும் இவர்களுக்கு வழங்கியது. இவற்றின் சாதகமான அம்சங்களை இவர்களது கவிதைகளில் காணமுடிகின்றது. இளவாலை விஜேந்திரன், கி.பி. அரவிந்தன் முதலியோர் இவ்வகையில் குறிப்பிடத்தக்கவர்கள்.

## மலேசியா

**வி. சபாபதி**

மலேசியாவில் தமிழ்க்கவிதை பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தோன்றி வளர ஆரம்பித்தது. அந் நூற்றாண்டின் இறுதியில் இங்குக் கவிதைத் துறையில் பல்வேறு முயற்சிகள் நடந்தேறியுள்ளதனைக் காணமுடிகின்றது. இன்று மலேசியத் தமிழ்க் கவிதை இலக்கியம் ஒரு நூற்றாண்டைக் கடந்து, இரண்டாவது நூற்றாண்டில் நுழைந்து தொடர்ந்து வளர்ந்து வருகின்றது.

தொடக்கத்தில் தமிழக, இலங்கைக் குடியேறிகளே இங்குப் பத்திரிகைகளிலும் தனிப்பட்ட முறையிலும் கவிதை இயற்றும் முயற்சிகளை மேற்கொண்டும் தொகுப்பு நூல்களை வெளி யிட்டும் உள்ளனர். அவ்வகையில் இங்கு முதல் தமிழ்க்கவிதை கி.பி. 1866இல் சிங்கையைச் சார்ந்த நாராயணசாமி நாயகன் என்ற இசைப்புலவரால் இயற்றப்பட்ட 'இருந்தும் பயமென்ன' எனும் தலைப்பிலான இசைப்பாடல் என்ற குறிப்பு கிடைத்துள்ளது.[1]

**பாதக மைந்தும் புரிந்து – பொல்லாப்**
**படுகுழிக் காளாய்ச் சிறந்து,**
**ஓது கலையுண்மை கடந்து – ஐயையோ!**
**ஓரறிவு போலே கிடந்து,**

தீதறுங் கல்லுங்கட் டையால்,
செய்தபல சொரூபங்களைக்
காதலாய்ப் பணிந்தெழுவர்,
கர்த்தன் கழலைமறந்தே

எனினும், 'ஆறுமுகப்பதிகம்' என்ற கவிதைத் தொகுப்பே மலேசியத் தமிழ்க் கவிதை இலக்கியத்தின் முதற்தொகுப்பு என்ற பெருமைக்கு உரியதாக விளங்குகின்றது.[2] இந்நூல் நாகப்பட்டினம் மரு. வெங்கடாசலம் பிள்ளை என்பவரால் கி.பி. 1887இல் இயற்றப்பட்டுள்ளது. இவர் பினாங்கு தண்ணீர்மலை தண்டபாணி மீது பாடியுள்ள பாடல்கள் இந்நூலில் உள்ளன.

இதனையடுத்து, இலங்கையைச் சார்ந்த சிற்சதாசிவப் பண்டிதர் இயற்றி, கி.பி. 1887இல் வெளிவந்த 'வண்ணையந்தாதி', 'வண்ணை நகரூஞ்சல்', 'சிங்கை நகரந்தாதி', 'சித்திரக் கவிகள்' முதலான நான்கு பிரபந்த நூல்கள் சிங்கப்பூரிலிருந்து வெளி வந்துள்ளன. இந்நான்கு பிரபந்த நூல்களுள் முதலிரண்டும் காஞ்சி காமாட்சியின் மீது பாடப்பெற்றுவை. அடுத்த இரண்டும் சிங்கப்பூர் சுப்பிரமண்ய சுவாமியின் மீது பாடப்பெற்றவை.[3]

கரைபொரு வார்கடல் சூழ்தரு வார் சிங்கைக் காவலவ!
வரைபொரு வார்முலை மங்கையர் தம்மை மணந்திடினுந்
திரைபொரு கங்கைச் சிவமறை யாவுந் தெரிந்திடினு
முரைபொரு சண்முக வுன்னடிக் கீழ்வந் துறங்குவனே!

இதன்பின்னர், பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதிக்குள் மேலும் பல கவிதை நூல்கள் வெளிவந்துள்ளன. 'பதானந்த மாலை' (1890), 'பினாங்கு தண்ணீர்மலை வடிவேலன் மீது நவரத்தினமாலை' (1890), 'முருகவேள் பஞ்சரத்தினப் பாமாலை' (1890), 'அதிவினோதக் குதிரைப்பந்தய லாவணி' (1893), 'சிங்கை முருகேசர் பேரில் பதிகம்' (1893), 'மன்மதன் திவ்விய சரித்திர அதியுல்லாச லாவணி' (1893), 'கீர்த்தனைத் திரட்டு' (1896) முதலான கவிதை நூல்கள் வெளிவந்தன. இக்கவிதை நூல்களைக் காணும்போது சில செய்திகள் புலனாகின்றன. அவை:-

அ. இக்கவிதைகள் மிகுதியும் பக்தி, சமயம் ஆகியவற்றை முதன்மைப் பாடுபொருளாகக் கொண்டுள்ளன. இதனையடுத்து, நீதிநெறி, தனிமனித ஒழுக்கம், அறம் ஆகியவற்றை வலியுறுத்தும்போக்கும் இக்கவிதை களில் காணப்படுகின்றன.

ஆ. இவை அந்தாதி, பதிகம், மாலை போன்ற மரபு இலக்கிய வகைகளையே அதிகம் கொண்டு விளங்குகின்றன.

இ. இப்பாவடிவங்களும் பாடுபொருள்களும் தமிழகத்தின் தாக்கத்தினால் விளைந்தவை.

ஈ. இக்கவிதைகள் இந்நாட்டுப் பின்னணியைக் கொண்டுள்ளன.

## இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் மலேசியத் தமிழ்க் கவிதை

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் மலேசியத் தமிழ்க் கவிதைகளில் பத்தொன்பதாம் நூற்றாண்டில் மேலோங்கிக் காணப்பட்ட சமயம், தனிமனித ஒழுக்கம் முதலான போக்குகளின் ஆதிக்கமே தொடர்ந்து செல்லுகின்றநிலை காணப்பட்டது. இந்நிலை இருபதாம் நூற்றாண்டின் நாற்பதுகள் வரை நீடித்தது. அவ்வகையில் 'சீறாச்சதகம்' (1900), 'ஆனந்தக் கீர்த்தனை' (1901), 'பங்குனி உத்திரச் சிந்து' (1929), 'தண்ணீர்மலை சிவசண்முகநாதனின் பக்திரசக்கீர்த்தனை' (1929), 'பினாங்கு தண்ணீர்மலை முருகன் ஆடுமயில் பாடல்கள்' (1931), 'ஸ்ரீ மார்க்கண்டேஸ்வரர் மங்களாம்பிகை தோத்திரப் பாடல்கள்' (1932), 'ஜாலான்பாரு முனீஸ்வரர் திருவிளையாடல் என்னும் மருத்துவச் சிந்து' (1933), 'கோலாலம்பூர் பத்துமலை சக்தி வடிவேலர் பேரில் காவடி அலங்கார ஆசிரிய விருத்தம்' (1936), 'சிரம் பான் தண்டாயுதபாணி திருவருட்கோவை' (1941), 'ஆன்மநாயகன் அருள்வேட்டல்' (1941) போன்ற கவிதைநூல்கள் தக்க சான்றுகளாக உள்ளன.

## மலேசியத் தமிழ்கவிதைகளில் மறுமலர்ச்சிப் போக்கு

மலேசியத் தமிழ்க்கவிதை வரலாற்றில் மகாகவி பாரதியார் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வித்திட்ட மறுமலர்ச்சிச் சிந்தனை அந்நூற்றாண்டின் முப்பதுகளிலிருந்தே மெல்ல அரும்பத் தொடங்குவதனைக் காணமுடிகின்றது. நாற்பதுகளுக்குப் பின்னரே மறுமலர்ச்சிக் கவிதை உருவாக்கத்தில் இங்கு மிகுதியான நாட்டம் வளரத் தொடங்கிற்று. எனவே, முப்பதுகளில் கவிதைகளில் சமயப் போக்கோடு, பாரதியார் அறிமுகப் படுத்திய சமுதாயச் சிந்தனைகளும் இடம்பிடிக்கத் தொடங்கின. அவற்றுள் நாட்டுநடப்புகள் கவிதைகளின் பாடுபொருளாக இடம்பெற்றுள்ளதனை முதன்மையானதாகக் குறிப்பிடலாம். இப்புதிய போக்கிற்கு 'மலாயா நாட்டில் வெள்ளத்தால் விளைந்த விபத்தின் சிந்து' (1932), 'மலாயா நற்காலச் சிந்து' (1933), 'பாரத சமதர்ம கீதம்' (1935), 'பினாங்கு ஜெனரல் ஆஸ்பத்திரியில் வீரையா

செய்த பரிதாபக் கொலைச்சிந்து' (1941), 'நிப்பானியரின் வெற்றிக் கீர்த்தனைகள்' (1942), 'நிப்பானியர் வெற்றிமாலை' (1942), 'நிப்பானியர் ஜெயசிந்து' (1942), போன்ற கவிதை நூல்களைச் சில சான்றுகளாகக் குறிப்பிடலாம். இந்நூல்களிலுள்ள கவிதைகள் மலேசியத் தமிழ்ச் சமுதாயம் எதிர்நோக்கிய அன்றையப் பிரச்சினைகளையும் மலாயா நாட்டின் அன்றைய அரசியல் நிலவரங்களையும் இரண்டாம் உலகப்போரைப் பற்றியும் குறிப்பாக, ஜப்பானியர் மலாயாவை வெற்றி கொண்டதையும் அவர்களின் பராக்கிரமத்தையும் பதிவுசெய்து வைத்துள்ளதைக் காட்டுகின்றன. இக்கவிதைகளின் மலேசியப் பின்னணி அழுத்தமாக விழுந்துள்ளதனைக் காணமுடிகின்றது.

"உதயசூ ரியக்கொடி
ஓங்கிப் பறப்பதைப்பார்!
அதர்மஞ்செய் வெள்ளையரை – கிளியே!
அழித்த கொடியிதடீ!
. . . . . . . . . . . . . . . . . .
சிங்கப்பூர்க் கோட்டையெல்லாம்
சிதற வடித்துவந்தே
மங்காத சியோனவந்தே வென்றே – கிளியே
மகிதலம் அறியச் செய்தாரடீ!"[4]

"சீன மலாய்க்கார நேயர்களா – பெற்ற
தாய்மக்களா செல்வஞோஞாக்களா – மேனி
ரெத்தச் சிவப்புடையாள்; கன்னத்திலோர்
பச்சை மச்ச முடையாள்;
தேனே கண்ணால் காணீர்களா?
கண்டிருந்தால் விண்டிடுவீர் நீங்களே!"[5]

இருபதாம் நூற்றாண்டின் முப்பதுகளுக்குப் பின்னர் சீர்திருத்தக் கருத்துகளும் கொள்கைகளும் இங்கு வேகமாகப் பரவத் தொடங்கின. அவை அக்காலப்பகுதி கவிதைகளிலும் இடம்பெறத் தொடங்கின.

இருபதாம் நூற்றாண்டின் நாற்பதுகளில் மலேசியத் தமிழ்க் கவிதை வளர்ச்சியில் சில கூட்டுமுயற்சிகளையும் காண முடிகின்றது. இவற்றுள் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது ஜொகூர் மாநிலத்தின் பத்து பகாட் எனுமிடத்தில் இயங்கிய கவிதா மண்டலம் ஆகும். கவிதைக்காக அமைக்கப்பட்ட முதல் அமைப்பாக இதனைக் குறிப்பிட வேண்டும்.[6] நாடெங்கிலும் உள்ள எழுத்தாளர்களைக் கொண்டு கி.பி. 1943-இல் இம் மண்டலம் அமைக்கப்பட்டது. இவ்வமைப்பு கி.பி. 1946-இல் 'கவிதா

மண்டலம்' என்ற பெயரிலேயே ஒரு மலரையும் வெளியிட்டது. இதே காலப்பகுதியில் நாளிதழ்களான தமிழ்நேசனும் தமிழ் முரசுவும் வெளியிட்டுள்ள சில ஆண்டுமலர்களில் தரமான கவிதைப் படைப்புகள் இடம்பெற்றிருந்தது குறிப்பிடத்தக்கது.

இரண்டாம் உலகப் போருக்குப்பின் ந. பழநிவேல் என்பவர் 'கவிதை மலர்கள்' எனும் தொகுப்பு நூலை 1947-இல் வெளியிட்டார். முழுக்க முழுக்க மறுமலர்ச்சிக் கவிதைகளைக் கொண்டு வெளியான முதல் தொகுப்பு நூலாகவே இது கருதப்படுகின்றது. இந்நூலுக்குப் புரட்சிக்கவிஞர் பாரதிதாசன் வாழ்த்துரை வழங்கியிருப்பது குறிப்பிடத்தக்கது. இதனைத் தொடர்ந்து 'மங்கல மலேசியா' (1953), 'துடிக்கும் உள்ளம்' (1954), 'கவிப்பூஞ்சோலை' (1957) ஆகிய கவிதை நூல்கள் வெளிவந்தன.

விடுதலைக்கு முந்திய தனிப்பட்டவர்களின் கவிதைப் படைப்புகளில் மிகுதியான மலேசியத் தமிழர்களின் வாழிடமான தோட்டப்புறங்களோ அங்கு வாழும் சமுதாயமோ காட்டப்பட வில்லை. மாறாக, அக்கவிதைகளில் நகர்ப்புற கோயில்கள், அக் கோயில்களில் வீற்றிருக்கும் கடவுளர்கள், நகர்ப்புற நடப்புகள் போன்றவையே இடம்பெற்றுள்ளன. விடுதலைக்கு முந்திய மலேசியத் தமிழ்க் கவிஞர்களும் பெரும்பாலோர் நகர்ப்புற வாசிகளாதலால் தங்களுக்குச் சரிவரத் தெரியாத தோட்டப்புறச் சமுதாயத்தையும் அவர்களின் பிரச்சினையையும் கவிதைகளில் காட்டாததில் வியப்பேதுமில்லை.

### விடுதலைக்குப்பின் மலேசியத் தமிழ்க்கவிதைகள்

விடுதலைக்குப்பின் இலக்கிய அமைப்புகளும் இதழ்களும் கவிதை வளர்ச்சிக்குப் பெரும் பங்காற்றியுள்ளன. மலேசியத் தமிழ்ச் சமுதாயத்தின் பல்வேறு வாழ்வியல் பிரச்சினைகள் விடுதலைக்குப் பிந்திய கவிதைகளில் இடம்பெறத் தொடங்கின. அவற்றுடன் இயற்கை, காதல், இனஉணர்வு, மொழியுணர்வு, நாட்டுப்பற்று ஆகியவற்றைப் பாடுபொருளாகக் கொண்ட கவிதைகளும் வெளிவரத் தொடங்கின.

ஐம்பதுகள் தொடங்கித் தமிழ்நேசனும் தமிழ்முரசும் ஞாயிறு இதழில் கவிதைக்கெனத் தனிப்பக்கங்களை ஒதுக்கி கவிதை வளர்ச்சிக்கு உதவியுள்ளன. தமிழ் முரசு கி.பி. 1960-இல் வெண்பா எழுதும் போட்டியைத் தொடங்கிக் கவிஞர்களுக்கு ஊக்கமளித்தது. தமிழ் நேசன் கி.பி. 1962இல் 'நேசன் கவியரங்கம்' என ஓர் அங்கத்தைத் தொடங்கி, புதிய கவிஞர்கள் பலர் உருவாக வழிவகுத்துக் கொடுத்தது. இவ்விரு முக்கிய இதழ்களைத் தவிர்த்து, மாதவி, நவரசம், தமிழ் மலர், மலைநாடு, பொன்னி,

முத்தமிழ் முதலான இதழ்களும் கவிதை வளர்ச்சியைக் கருத்திற் கொண்டு பணியாற்றியுள்ளன.

### அறுபதுகளில் கவிதை இலக்கியம்

அறுபதுகளில் முப்பதுக்கும் மேற்பட்ட கவிதை நூல்கள் வெளிவந்துள்ளன. 'கவிதைத் திரட்டு' (1960), 'இதய ஓசை' (1960), 'மலாயாவில் தமிழ்க் கவிதைகள்' (1962), 'மலேசியப் போரொலி' (1964), 'இன்ப மலேசியா' (1964), 'நாட்டைக் காப்போம்' (1964), 'உரிமை முழக்கம்' (1964), 'செந்நெறிப் பாமாலை' (1966), 'சந்தனக் கிண்ணம்' (1966), 'மங்கள மலேசியா' (1966), 'மாயை' (1967), 'கவிதைப் பித்தன் கவிதைகள்' (1968), 'இளந்தளிர்' (1969) ஆகியன அவற்றுள் சில. இக்காலப் பகுதிக் கவிதைகள் நாட்டுப் பற்றையும் அறநெறியையும் வலியுறுத்திப்போகும் வகையில் அமைந்துள்ளன. இக்காலப் பகுதியில் பரபரப்பாகப் பேசப்பட்ட கவிதைத் தொகுப்புகளாகச் 'சந்தனக் கிண்ணம்', 'இதய ஓசை' ஆகியவற்றைக் குறிப்பிடலாம்.

தேன்பாயும் ரம்புத்தான் தித்திக்கும் மங்குஸ்தீன்
வான்தோய் டொரியான் வளமரங்கள் – மீன்பாயப்
பொங்கும் அலைகடல்கள் போர்வேழம் போல்மலைகள்
எங்கள் மலாயா இது[7]

வலிமைக்கு விஞ்சிய உழைப்படா – மக்கள்
வயிற்றுக்குப் போதாத உணவடா!
எளியோர்க்கு நல்வாழ்வு ஏதடா? – அவர்
இருக்கும் நிலைதன்னைப் பாரடா!

பாடுபட் டோய்ந்தவன் கதறுவான் – அவன்
பயனி லுயர்ந்தவன் சீறுவான்!
மாடுபோ லுழைப்பவன் மாளுவான் – இந்த
மண்ணை வளைத்தவ னாளுவான்![8]

அறுபதுகளில் மிக முக்கியமான ஒரு கவிஞர் சுவாமி இராமதாசர். மலேசியத் தமிழ்க்கவிதை வரலாற்றில் தவறாமல் குறிப்பிடப்பட வேண்டியவர் ஆவார். மலேசியாவில் கவிதை இலக்கண வகுப்புகளை முறையாக நடத்தி, பல கவிஞர்களை உருவாக்கிய பெருமைக்குரியவர் இவர். பினாங்கில் 'செந்தமிழ்க் கலா நிலையம்' என்ற பெயரில் ஓர் அமைப்பை நிறுவி, கவிஞர்களை உருவாக்கும் பணியில் ஈடுபட்டவர்.

அறுபதுகளின் இறுதியில் தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் ஆதரவுடன் நாடெங்கும் பல கவியரங்கங்கள் கூட்டப்பட்ட தனையும் கவிதை வளர்ச்சியில் குறிப்பிட வேண்டியுள்ளது.

## எழுபதுகளில் கவிதை இலக்கியம்

மலேசியத் தமிழ்க்கவிதை வளர்ச்சியில் பொற்காலமாக எழுபதுகளின் இறுதிப் பகுதியைக் குறிப்பிடலாம். ஏனெனில், மிகுதியான எண்ணிக்கையில் கவிதை நூல்கள் வெளிவந்ததுடன் இக்காலப் பகுதிக் கவிதைகள் தரத்திலும் உயர்ந்து காணப் பட்டன. இக்காலப்பகுதியில் கவிதை வளர்ச்சிக்கு உரமிட்ட ஒன்றாகத் தமிழ்நேசன் நாளிதழின் 'பவுன் பரிசுத்திட்டத்'தினைக் குறிப்பிடலாம். ஒரு மாதம் முழுவதும் இடம்பெறும் கவிதை களை ஆராய்ந்து சிறந்த ஒரு கவிதைக்குப் பவுன் பரிசு வழங்கியது.

இக்காலப்பகுதியில் கவிதை வளர்ச்சியையே நோக்கமாகக் கொண்டு கோலாலம்பூரில் இயங்கிய அமைப்புகளாகக் 'கவிதைக் களம்', 'கவிதைப்பண்ணை' ஆகியவற்றைக் குறிப்பிடலாம். இன்றளவிலும் இவ்விரு அமைப்புகளும் இளங்கவிஞர்களுக்குப் பயிற்சியினை வழங்குவதுடன் சிறந்த கவிதைகளைத் தேசிய மொழியில் (மலாய் மொழி) மொழிபெயர்த்தும் வருகின்றன.

எழுபதுகளில் ஐம்பதுக்கும் மேற்பட்ட கவிதை நூல்கள் வெளிவந்துள்ளன. அவற்றுள் 'ஒளி பிறந்தது' (1970), 'கூட்டுறவுக் கவிதைகள்' (1971), 'அலையோசை' (1975), 'கணைகள்' (1977), 'வண்ணங்கள்' (1977), 'உணர்வுகள்' (1977), 'மகிழம்பூ' (1977), 'அரங்கேறிய கவிதைகள்' (1977), 'கிணற்றுத் தவளை' (1978), 'புயல்' (1978), 'மறைமலையடிகள் பிள்ளைத்தமிழ்' (1978), 'தீப்பொறி' (1978), 'நயனங்கள்' (1979), 'கட்டைவிரல்' (1979), 'வெள்ளி நிலவு' (1979) முதலானவை குறிப்பிடத்தக்க தொகுப்புகள் ஆகும். இக்காலப்பகுதி கவிதைகளில் மிகுதியும் இயற்கை, இனப்பற்று, நாட்டுப்பற்று, பல்லின ஒற்றுமை, சீர்திருத்தம் போன்றவை பாடுபொருள்களாக இடம்பெற்றுள்ளன. 'கணைகள்', 'புயல்', 'தீப்பொறி' ஆகிய மூன்று தொகுப்புகளும் இக்காலப்பகுதியில் பரபரப்புடன் வாசகர் மத்தியில் பேசப்பட்டன. இம்மூன்று தொகுப்புகளும் மலேசியத் தமிழ்ச் சமுதாயத்தைக் கடுமையாகச் சாடும் கவிதைகளைக் கொண்டுள்ளன.

அன்றைக் கிருந்தே உழைத்துத் தேய்ந்த
அருமைத் தமிழா! நீபெற்ற
நன்றிக் கடனை நினைத்துப் பார்த்தால்
நாயும் பேயும் சிரித்திடுமே!"[9]

தெரியாத தமிழ னென்றால்
திருத்தலாம்! திமிர் பிடித்த
வெறியானைத் தமிழனை நாம்
வெட்டியே புதைக்க வேண்டும்"[10]

இக்காலப் பகுதியில் வெளியான சி. அன்பானந்தத்தின் ‘மறைமலையடிகள் பிள்ளைத் தமிழ்’ தமிழகத்தில் நடைபெற்ற ‘அனைத்துலக மறைமலை அடிகள் பிள்ளைத்தமிழ்ப் போட்டி’யில் முதற்பரிசு பெற்றது குறிப்பிடத்தக்கது.

எழுபதுகளில் பாநாடகங்களும் குறுங்காவியங்களும் கவிதை வளர்ச்சியில் முக்கிய இடத்தைப் பெற்றன. வானொலியில் கா. பெருமாளின் ‘கட்டைவிரல்’, ‘வாழ்வின் இறுதி’, ‘பரமேஸ்வரன்’, ‘தெய்வயானை’, ‘உரைசால் பத்தினி’ முதலான பா நாடகங்கள் இடம்பெற்று பாராட்டைப் பெற்றன. ஐ. உலகநாதனின் ‘தமிழன் கதை’, ‘அணையும் ஆணை’, ‘சி. அன்பானந்தத்தின் ‘நந்தா விளக்கு’, ‘கனிமொழி’, ‘கிணற்றுத் தவளை’, கரு. திருவரசுவின் ‘அழகின் அழைப்பு’, காரைக்கிழாரின் ‘அலையோசை’, ‘புரியாத புதிர்’, வெ. பழனியின் ‘அழகோவியம்’ ஆகியன சில குறிப்பிடத்தக்க குறுங்காவியங்கள் ஆகும்.

அறுபதுகளின் பிற்பகுதியில் அரும்பத் தொடங்கிய புதுக் கவிதை முயற்சிகள் எழுபதுகளில் வீறுகொள்ளத் தொடங்கின. இதற்கு எழுபதுகளில் தோன்றிய வானம்பாடி எனும் வார இதழ் புதுக்கவிதைகளுக்கு முதன்மை கொடுத்து வளர்த்ததுவே காரணம் எனலாம்.

### எண்பதுகளில் கவிதை இலக்கியம்

இக்காலப்பகுதியில் வாசகர்களின், எழுத்தாளர்களின் தீவிர நாட்டமும் கவனமும் புதுக்கவிதையின்மீது திரும்பத் தொடங்கியது. இக்காலப் பகுதியில் மரபுக் கவிதையாளர்களுக்கும் புதுக்கவிதையாளர்களுக்கும் இடையே கடுமையான விவாதங்கள் காணப்பட்டன.

எண்பதுகளில் நாற்பதுக்கும் மேற்பட்ட மரபுக்கவிதை நூல்கள் வெளிவந்துள்ளன. அவற்றுள் ‘முத்தாரம்’ (1980), ‘பூச்சரம்’ (1980), ‘உதிரிப்பூக்கள்’ (1980), ‘திருப்புமுனைகள்’ (1982), ‘முத்துச்சரம்’ (1983), ‘வேர்கள்’ (1983), ‘தோரணங்கள்’ (1985), ‘பத்துமலை முருகன் திருவந்தாதி’ (1987) முதலானவை குறிப்பிடத்தக்க தொகுப்புகள் ஆகும். இக்காலப்பகுதிக் கவிதைகளில் சமுதாயச் சீர்கேடுகள், சமுதாய உணர்வு, மொழியுணர்வு, நாட்டுப்பற்று, சீர்திருத்தப்போக்கு, இனவுணர்வு போன்றவை முதன்மைப் பாடுபொருள்களாகக் காணப்படுகின்றன.

**ஓரெட்டில் எட்டுவதை விட்டுவிட்டே**
**ஓயாமல் எட்டுபவர் தமிழர்; பேற்றை**
**ஈரெட்டில் வைத்தார்கள்; அறியா மையால்**
**இனப்பெருக்கில் அக்கணக்கைச் சேர்த்துக் கொண்டார்!**

மூவெட்டில் தொடங்கிவரும் வாழ்க்கை முற்றும்
முன்னேற்றம் எட்டாமற் சோர்வார்; வாயில்
நாலெட்டுப் பற்களையும் தெரியக் காட்டி
நாளெல்லாம் நடப்பதுதான் இவர்கள் வாழ்க்கை!"

## தொண்ணூறுகளில் கவிதை இலக்கியம்

எண்பதுகளில் மரபுக்கவிதைக்குப் பலத்த போட்டியாகப் புதுக்கவிதை உருவெடுத்திருந்தது. ஆனால், இந்தத் தொண்ணூறு களில் மரபுக்கவிதை, புதுக்கவிதை மிரட்டலாகப் புதிய வரவாகிய 'ஹைக்கூ' கவிதை தோன்றி வளரத் தொடங்கியுள்ளது. இச் சவால்களுக்கு மத்தியில் மரபுக்கவிதை தன் செல்வாக்கை இழந்துவிடாமல் தொடர்ந்து வளர்ச்சி கண்டது. புதுக்கவிதையும் பல்வேறு எதிர்ப்புகளுக்கு மத்தியில் வளர்ச்சி கண்டுள்ளது. இக்காலப்பகுதியில் மரபுக்கவிதை நூல்களும் புதுக்கவிதை நூல்களும் பரவலாக வெளிவந்துள்ளன. இக்காலப் பகுதியில் புதுக்கவிதைக்காக 'தாப்பா வாசகர் வட்டம்', 'வடமலேசிய பல்கலைக் கழகம்', 'தேசியப் பல்கலைக்கழகம்' ஆகியன தொடர்ந்து போட்டிகள் நடத்தி வந்துள்ளன. இப்போட்டிகள் இம்மண்ணில் புதுக்கவிதைக்குக் கிடைத்துள்ள அங்கீகாரத்தைக் காட்டுகின்றன.

## சிறுவர்களுக்கான கவிதைகள்

மலேசியத் தமிழ்க்கவிதை வளர்ச்சியில் தவறாமல் குறிப்பிட வேண்டிய ஒரு பகுதி குழந்தைகளுக்கான கவிதைகள் ஆகும். ஐம்பதுகளிலேயே சிறுவர்களுக்கான கவிதைகள் வெளி வந்திருந்தாலும் அறுபதுகளுக்குப் பின்னரே பெருமளவில் வெளிவரத் தொடங்கிற்று. குறிப்பாகக் கல்வி ஒலிபரப்பு மலேசிய வானொலியால் தொடங்கப்பட்டபோது நிறையக் கவிதைகள் சிறுவர்களுக்கு ஏற்ற நிலையில் இயற்றப்பட்டு இசைகூட்டி ஒலிபரப்பப்பட்டன. 1982-இல் அறிமுகப்படுத்தப்பட்ட புதிய பாடத்திட்டமும் குழந்தைப் பாடல்களுக்கு அதிகத் தேவையை ஏற்படுத்தித் தந்தது. அதனால் குழந்தைகளுக்கான கவிதைகள் அதிகம் தோன்றி வளரத் தொடங்கிற்று. இம்முயற்சியில் கவிஞர் சோமசன்மா, முரசு நெடுமாறன், தங்கா தமிழ்ப்பாணன், இரா. இராகவன், சி. வேலுசாமி, காரைக்கிழார், ந. மகேஸ்வரி, பொன்முடி, தமிழ்க்குயில் கலியபெருமாள், உஷா நாயர், சி. கமலநாதன் போன்றோர் ஈடுபட்டு நிறைய எழுதியுள்ளனர்.

## திறனாய்வு முயற்சிகளும் களஞ்சியமும்

மலேசியத் தமிழ்க்கவிதை வளர்ச்சிக்கு உறுதுணை செய்யும் வகையில் இருமுறை திறனாய்வுக் கருத்தரங்குகள் தேசியநிலையில் நடத்தப்பட்டுள்ளன. முதலாவது, மலாயாப் பல்கலைக்கழக இந்திய ஆய்வியல்துறையினர் 1988-இல் 'மலேசியத் தமிழ்க்கவிதைக் கருத்தரங்கம்' ஒன்றினை நடத்தினர். அடுத்தது, மலேசிய உலக ஆராய்ச்சி நிறுவனம் மலேசியத் தமிழ்ப் புதுக்கவிதையின் வளர்ச்சியைக் கருத்திற்கொண்டு 1996-இல் ஒரு கருத்தரங்கை நடத்தியது. இவ்விரு கருத்தரங்குகளும் மலேசியத் தமிழ் மரபுக்கவிதைகளின், புதுக்கவிதைகளின் வளர்ச்சிப் போக்கையும் குறைநிறைகளையும் அலசி ஆராய்ந்தன.

கவிஞர் முரசு நெடுமாறனின் பெருமுயற்சியில் உருவான ஒரு நூற்றாண்டுகால மலேசியத் தமிழ்க்கவிதைகளின் தொகுப்புக் களஞ்சியமும் மலேசியத் தமிழ்க் கவிதை வளர்ச்சிக்கு உதவுவதாகவும் மலேசியத் தமிழ்க் கவிதைகளின் சிறப்பை உலகுக்கு எடுத்துக்காட்டுவதாகவும் அமைந்துள்ளது.

### அடிக்குறிப்புகள்

1. முரசு நெடுமாறன் (தலைமைத் தொகுப்பாசிரியர்), மலேசியத் தமிழ்க்கவிதைக் களஞ்சியம், அருள் மதியம் பதிப்பகம், கிள்ளான் (முதற்பதிப்பு) 1998, ப. 153.
2. இந்திய ஆய்வியல் துறை, மலேசியத் தமிழ்க்கவிதைக் கருத்தரங்க மலர், மலாயாப் பல்கலைக்கழகம், கோலாலம்பூர், (முதற்பதிப்பு) 1988, ப. 31.
3. மலேசியத் தமிழ்க்கவிதைக் களஞ்சியம், ப. 265.
4. முன்னூல், ப. 707.
5. முன்னூல், ப. 507.
6. மலேசியத் தமிழ்க்கவிதைக் கருத்தரங்க மலர், ப. 33.
7. மலேசியத் தமிழ்க்கவிதைக் களஞ்சியம், ப. 291.
8. முன்னூல், ப. 590.
9. முன்னூல், பக். 359-360.
10. மலேசியத் தமிழ்க்கவிதைக் கருத்தரங்க மலர், ப. 50.
11. மலேசியத் தமிழ்க்கவிதைக் களஞ்சியம், ப. 424.

# சிங்கப்பூர்

சுப. திண்ணப்பன்
ஆ.ரா. சிவகுமாரன்

சிங்கப்பூர் குடியரசான பின்பு தோன்றிய கவிதை இலக்கியங்களை மரபுக் கவிதைகள், குழந்தைப் பாடல்கள், புதுக்கவிதைகள் எனப் பகுக்கலாம்.

## மரபுக் கவிதைகள்

மரபுக்கவிதைகள் என்பது யாப்பு இலக்கணத்திற்குட்பட்டு நடக்கக் கூடிய கவிதைகளே ஆகும். சிங்கப்பூர் குடியரசான பின்பு கவிஞர்கள் தங்கள் படைப்புகளைத் தமிழ்முரசு, வானொலி வழியாகத் தந்தனர். தற்பொழுதும் தந்து வருகின்றனர். இச்சாதனங்களின் வழி வந்த தம் படைப்புகளோடு புதிய படைப்புகளையும் சேர்த்துப் பல கவிஞர்கள் நூல்களாக வெளியிட்டனர். 1966ஆம் ஆண்டிலிருந்து 1999வரை 64 மரபுக் கவிதை நூல்கள் சிங்கைக் கவிஞர்களாலும் பதிப்பாசிரியர் களாலும் வெளியிடப்பட்டுள்ளன. இந்த 64 நூல்களில் 1966-1970 காலக்கட்டத்தில் ஒரு நூலும், 1971-1980 காலக்கட்டத்தில் எட்டு நூல்களும், 1981-1990 காலக்கட்டத்தில் 31 நூல்களும், 1991-1999 காலக்கட்டத்தில் 26 நூல்களும் வெளியாகியுள்ளன. இவற்றைப் பார்க்கையில் எண்பதுகளிலேயே சிங்கப்பூரில் கவிதை நூல்கள் மிகுதியாக வெளிவந்துள்ளன என்பது தெரிய வருகிறது. இதற்கு எண்பதுகளில் சிங்கப்பூர் மிகச் சிறப்பான வளர்ச்சி பெற்று பொருளாதாரத்தில் முன்னேறி இருந்ததும், இவ்வளர்ச்சியின் விளைவாகக் கவிஞர்கள் தங்கள் புத்தகங்களைத் தாங்களே பதிப்பிக்க முன்வந்ததும் காரணங்களாக அமைந்தன. மேலும் சிங்கப்பூரின் 25ஆவது ஆண்டுக் கொண்டாட்டத்தை ஒட்டி ஒரே நேரத்தில் 25 புத்தகங்களை வெளியிட்டதும் ஒரு காரணமாகும்.

இந்நூல்களுள் வானொலியில் முழுமையாக ஒலி பரப்பப்பட்ட பாடல்களின் தொகுப்பாக இரண்டு நூல்கள் உள்ளன. ஒன்று 'சிங்கப்பூர் பாடல்கள்' என்னும் தனிப் பாடல் களின் தொகுப்பு நூல். மற்றொன்று 'கண்ணம்மா' என்னும் கதைப்பாடல் நூல். இவை முறையே சிங்கப்பூர் வானொலியிலும் மலேசிய வானொலியிலும் ஒலிபரப்பப்பட்டவை. ஏனைய நூல்களிலும் வானொலியில் ஒலிபரப்பப்பட்ட பாடல்கள் இடம்பெற்றுள்ளன. இங்ஙனம் வானொலியிலும் செய்தித் தாளிலும் புத்தகங்களிலும் வெளிவந்த மரபுக் கவிதைகள் பல;

இக்கவிதைக்ளை இயற்றிய கவிஞர்களும் பலர். இவர்களில் ந.பழநிவேலு சிங்கப்பூரின் இலக்கிய வளர்ச்சிக்குப் பெரிதும் தொண்டாற்றியவர். சிங்கையின் தொடக்கக்கால இலக்கிய வாதியான இவர் சிங்கை, மலேசிய, இந்திய செய்தித்தாள்களில் தம் கவிதைகளை வெளியிட்டவர். இன்றைய சிங்கப்பூர் கவிஞர்களுக்கு முன்னோடியாக விளங்குபவர். கவிதை மலர்கள் என்னும் நூலை (1947) தமிழ் முரசு வெளியீடாக வெளியிட்டவர். சமுதாயச் சிந்தனையும் சீர்திருத்தக் கருத்துகளும் கொண்டவர். கலியின் நலிவு என்னும் கவிதை நாடகத்தை 1981இல் இவர் வெளியிட்டார். சிங்கப்பூர் அரசாங்கம் இவருக்குக் கலாசார விருது வழங்கிச் சிறப்பித்தது.

சிங்கைக் கவிதை இலக்கிய முன்னோடிகளுள் ஒருவரான சிங்கை முகிலன் மனிதச்சுவடு (1975), நல்லமுடிவு (1989) முதலிய கவிதை நூல்களைப் படைத்துள்ளார். சமுதாயச் சிந்தனையும் மனிதநேயமும் இவரது கவிதைகளில் வெளிப்படும். சிங்கப்பூரின் அரசாங்கத்தால் வழங்கப்படும் கலாசார விருதை இவர் பெற்றுள்ளார்.

க.து.மு. இக்பால் இயற்கையைப் பாடுவதில் ஈடுபாடு கொண்ட கவிஞர். மரபுக் கவிதைகளின் வழி அறிமுகமாகிய இவர் இன்று புதுக்கவிதைகளையும் படைத்து வருகிறார். இதய மலர்கள் (1975), முகவரிகள் (1984), வைரக்கற்கள் (1995) முதலிய நூல்களைத் தமிழ் உலகிற்கு அளித்துள்ளார். முகவரிகள் என்னும் இவரது நூல் மரபுக் கவிதைகளையும் புதுக் கவிதைகளையும் உள்ளடக்கியது. சிங்கப்பூர் தேசிய புத்தக மேம்பாட்டுக் கழக விருதையும், மொான்ந்பிளாங்க, (Mont Blance) விருதையும், தமிழவேள் விருதையும் பெற்ற பெருமை இவருக்குரியது. குடியரசில் இவரது கவிதை பெருவிரைவுப் போக்குவரத்துத் தொடர்வண்டியில் ஆங்கில மொழிபெயர்ப்புடன் பயணிகளின் பார்வைக்கு வைக்கப் பட்டது. சிங்கைக் குடியரசின் சிறந்த கவிஞர்களுள் இவர் ஒருவர்.

வே. பழநி என்னும் இயற்பெயர் கொண்ட முருகதாசன் திருமுருகன் காவடிச்சிந்து (1975) முருகதாசன் கவிதைகள் (1990), அழகோவியம் (1990), வாழ்வருளும் வடகாளி (1990), முருகதாசன் கவிதைகள் தொகுப்பு - 2 சூரியதாகம் (1997), முருகதாசன் கவிதைகள் தொகுப்பு - 3 நெற்றிக்கண் (1997), முருகதாசன் கவிதைகள் தொகுப்பு - 4 வானவில் (1997) முதலிய நூல்களை யாத்தவர். பக்தி உணர்வு விஞ்சி நிற்க இறையுணர்வுப் பாடல்களைப் பாடுவதில் வல்லவர். எளிமையும் சொல்லாட்சியும் இவரது கவிதைகளில் நாம் காணும் இயல்புகள். Mont Blance விருது பெற்ற சிறப்பு இவருக்கு உண்டு.

சிங்கையின் தொடக்கக் காலத்திலிருந்தே கவிதை எழுதி வரும் ஜமீலா என்னும் ஷம்சுத்தீன் பிறமொழி இலக்கியங்களில் உள்ள கருத்துகளைத் தழுவிக் கவிதைகள் படைக்கக் கூடியவர். கவிதை, உரைநடை இரண்டும் ஒன்றையொன்று அடுத்தடுத்து வருவதை இவரது நூல்களில் காண முடியும். ஜமீலாவின் கவிதைகள் (1975), புரட்சிப்பெண் (1984), ஆசை (1984) முதலிய நூல்களை எழுதியுள்ளார்.

மலேசியாவில் இருந்த கா. பெருமாள் பணியின் நிமித்தமாகச் சிங்கை வந்து சிங்கை வானொலி நிலையத்தில் பணி புரிந்தார். சிங்கப்பூர் உணர்வை ஊட்டக்கூடிய தேச பக்திப் பாடல்களை நிரம்ப எழுதி வானொலியில் ஒலிபரப்பியவர். இப்பாடல்களே சிங்கப்பூர் பாடல்கள் என்னும் பெயரில் 1979இல் நூல் வடிவம் கண்டது. இந்து சமயத்தைச் சார்ந்த இவர் இஸ்லாம் சமயக் கருத்துகளை உள்ளடக்கிய அன்பு என்னும் தத்துவம் (1978) என்னும் நூலை எழுதிச் சமய நல்லிணக்கதைப் பேணியுள்ளார். கட்டைவிரல் என்னும் கவிதை நாடகத்தையும் (1979) படைத்துள்ளார்.

மெ. இளமாறனின் கவிதைகளில் சமுதாயப் பார்வை வெளிப்படுவதைக் காணலாம். இறையுணர்வுப் பாடல்களையும் இவர் பாடி வருகிறார். 'பாத்தேறல்' என்னும் பட்டப்பெயரோடு அழைக்கப்படும் இவர் பாத்தேறல் (1981), முருகன் காவடிப் பாடல்கள் (1982), நினைக்க சுவைக்க-1 (1990), நினைக்க சுவைக்க-2 (1997) முதலிய நூல்களை இயற்றியுள்ளார்.

தமிழாசிரியராகப் பணியாற்றும் மு. தங்கராசன் ஒரு தலைப்பை ஒட்டி விளக்கமாகக் கவிதை எழுதுவதில் சிறந்து நிற்பவர். மாணவர்களுக்குக் கருத்துக்களை விளக்கமாகச் சொல்லுவது போன்று இவரது கவிதைகள் அமையும். விருத்த யாப்பில் மிகுந்த ஈடுபாடு உடையவர். அணிகலன் (1985), உதயம் (1988), மகரந்தம் (1988), மாதுளங்கனி (1989), பனித்துளிகள் (1992) முதலிய நூல்களைப் படைத்துள்ளார்.

சிங்கப்பூரில் மதிப்பு மிக்க விருதாகக் கருதப்படும் தென் கிழக்காசிய இலக்கிய விருது பெற்ற கவிஞர் பரணன் எதிரொலி (1982), தென்றல் (1985), தோணி (1985), முதலிய நூல்களை யாத்துள்ளார். ஓசைநயத்துடன் கவித்துவம் விளங்கக் கவிதை படைக்கும் ஆற்றல் மிக்கவர். சமுதாயச் சிந்தனை, மொழி உணர்வு முதலியவற்றை இவரது கவிதைகளில் பரக்கக் காணலாம். தேசியப் புத்தக மேம்பாட்டுக் கழகம் வழங்கும் விருதைப் பெற்ற பெருமையும் இவருக்கு உண்டு.

இசையில் ஆர்வம் உடைய முத்துமாணிக்கம் தமது பாடல்கள் பலவற்றை இசைப்பாடல்களாக அமைத்துள்ளார். 'பாத்தூரல்' என்னும் பட்டம் பெற்றவர். தெய்வ பக்தி உடைய இவர், இந்து, இஸ்லாம், கிறிஸ்துவம் ஆகிய இறை உணர்வுப் பாடல்களைப் படைத்துள்ளவர். சிங்கப்பூர்த் தெய்வங்களின் பக்திப் பாடல்கள் (1986), தெய்வத்தமிழ் இசைவிருந்து (1987), அருள்மிகு துர்க்கையம்மன் போற்றிப் பாடல்கள் (1991), முத்துமாணிக்கம் கவிதைகள் (1995), இந்துசமயக் கவிதைகள் (1995), இஸ்லாமியக் கீதங்கள் (1995), இயேசு கிறிஸ்து பாமாலை(1995) முதலிய நூல்களை வெளியிட்டுள்ளார்.

இளந்தலைமுறைக் கவிஞர் மணிவண்ணன் முத்திரை (1984), என்னும் நூல் வழி தம்மைக் கவிதை உலகிற்கு அறிமுகப்படுத்திக் கொண்டவர். சிங்கைக் குடியரசின் தொடக்கக் காலத்திலிருந்து கவிதைகள் எழுதி வரும் சித. பழனிச்சாமியும் செந்தமிழ்க் கவியமுது (1985), என்னும் நூலினைப் படைத்தவர்.

வெண்பாச் சிற்பி என்று புகழப்படும் வி. இக்குவனம் புலவர் இலக்கியமாக விளங்கும் சித்திரக் கவிகளைத் தற்போது சிங்கையில் படைத்து வரும் ஒரே கவிஞராவார். சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்றாகிய அந்தாதி இலக்கியம் படைப்பதிலும் வல்லவர். இறையுணர்வுப் பாடல்களை மிகுதியும் படைப்பவர். கவிதைக் கதம்பம் (1990), கவிதைக் கனிகள் (1990), சித்திரச் செய்யுள், இன்ப நலக்காடு, நாமகள் அந்தாதி, அன்னையைப் போற்றும் அருந்தமிழ் 1000, ஆறுமுகன் போற்றி 1000, வாரியார் இரங்கல் அந்தாதி, வாழும் கவியரசு வைரமுத்து, ருத்திரகாளி அந்தாதி, ஐங்கரன் போற்றி 1000 முதலிய நூல்களை வெளியிட்டுள்ளார், வேங்கடவன் பள்ளி எழும் பா என்னும் ஒலி நாடாவையும் வெளியிட்டுள்ளார்.

பெரி. நீல. பழநிவேலன் சிங்கையில் தொடர்ந்து கவிதை எழுதிவரும் கவிஞர்களுள் ஒருவர். இருபத்தைந்து (1990), நெருங்கினால் சுடும் நெருப்பு (1995), முதலிய நூல்களைத் தந்தவர். பாலியல் உணர்வையும் பக்குவமாகப் பாடுபொருளாக்குபவர். தமிழின உணர்வினை ஊட்டும் கவிதைகளும் இயற்றியுள்ளார்.

சமுதாயச் சிந்தனையோடும் துடிப்புடனும் கவிதைகள் யாக்கும் பெ. திருவேங்கடம் துளசிப்பூக்கள் (1990), சிறகுகள் (1998), முதலிய நூல்களைத் தந்துள்ளார். தத்துவப் போக்கில் இவரது கவிதைகள் அமையும்.

தமிழாசிரியராகப் பணி புரியும் ஆ. பழனி, திருமுருகன் வெண்பா மாலை (1992), கவிதைப் பூக்கள் (1999) முதலிய நூல்களை இயற்றியுள்ளார்.

ஏ.பி. சண்முகம் தாம் எழுதிய கவிதைகளைத் தொகுத்து 1999இல் 'கவிதைப் பூக்கள்' என்று நூல் வடிவம் காணச் செய்தார். சமுதாயச் சிந்தனை ஆங்காங்கு வெளிப்படுவதை இவர் கவிதைகளில் காணலாம்.

தமிழாசிரியர் மு.அ. முகுது உணர்வுகளின் ஊர்வலம் (1995), என்னும் நூல் வெளியீட்டின் வழி தம்மைக் கவிதை உலகத்திற்கு அறிமுகப்படுத்திக் கொண்டவர். புதிய மின்னல்கள் (1999), பிறைத் தோணி (1999), முதலிய நூல்களையும் இவர் படைத்துள்ளார்.

பெண் படைப்பாளரான பார்வதி பூபாலன் ஒரு தமிழாசிரியர். இவர் கவிதை இலக்கணம் கற்றவர். இளவேனிற் பூக்கள் (1997) என்னும் நூலின் வழி தம் படைப்பாற்றலை கவிதை உலகிற்கு வெளிப்படுத்தியவர். பழந்தமிழ் இலக்கியச் செல்வாக்கு இவர் கவிதைகளில் மிகுதியாக உள்ளது.

சிங்கைக் கவிஞர்களுள் தம் மரபுக் கவிதைகளை நூலாகப் பதிப்பித்தவர்களுள் நாராயண புதுமைப்பித்தன், சுகுமாறன் ஆகியோரும் அடங்குவர். நூல்களாகப் பதிப்பிக்காமல் அவ்வப்போது செய்தித் தாள்களிலும் மேடைகளிலும் தம் கவிதைகளை வெளிப்படுத்துபவர்களுள் முதன்மையானவர். தற்போது சிங்கைத் தமிழ் எழுத்தாளர் கழகத்தின் தலைவராக விளங்கும் கவிஞரேறு அமலதாசன் ஆவர். இவர் நீண்ட காலமாகக் கவிதைகள் படைத்து வருகிறார். இவரது கவிதை பெருவிரைவு போக்குவரத்துத் தொடர் வண்டியில் ஆங்கில மொழிபெயர்ப்புடன் பயணிகளின் பார்வைக்கு வைக்கப்பட்டது. இவரைப் போன்று நூல்களாகத் தமது கவிதைகளை வெளியிடாமல் செய்தித்தாள்களிலோ மேடைகளிலோ கவிதை படைப்பவர்களுள் மலர் மாணிக்கம், திரு சாந்தி, முத்தமிழன், அ. பெரியராமு, முதலியோரும் குறிப்பிடத்தக்கவர்கள்.

### தொகுப்பு நூல்கள்

தமிழவேள் சாரங்கபாணியைப் பாராட்டி எழுதிய பல கவிதைகளை ஒன்று திரட்டிக் 'கவிக்குலம் போற்றும் தமிழவேள்' என்னும் தலைப்பில் மு. தங்கராசன் ஒரு நூலாக 1982இல் வெளியிட்டுள்ளார்.

பொதுவாகச் சிங்கை மரபுக் கவிதைகள் இறையுணர்வு, காதல், சமூகம் முதலியவற்றுக்கு முக்கியத்துவம் கொடுத்துப் படைக்கப்பட்டுள்ளன.

## புதுக்கவிதைகள்

தமிழகத்தில் பாரதியாரால் தோற்றுவிக்கப்பட்ட தமிழ்ப் புதுக்கவிதை வடிவங்கள் சிங்கப்பூரில் 1970களின் இறுதியில் முகிழ்த்தன. சிங்கப்பூர்த் தமிழ்க் கவிஞர்கள் புதுக்கவிதையில் நாட்டம் செலுத்தாததோடு புதுக்கவிதை முயற்சியை எதிர்த்தனர். தொடக்க நிலையில் மரபுக் கவிதைகளே செல்வாக்குப் பெற்றிருந்தன. பிற்காலத்தில் சிங்கையிலேயே பிறந்து வளர்ந்த சிங்கை இளைஞர்கள் புதுக்கவிதை முயற்சிக்கு வித்திட்டனர்.

சிங்கப்பூரில் புதுக்கவிதையின் முன்னோடியாகத் திகழ்பவர் க. இளங்கோவன். விழிச்சன்னல்களின் பின்னாலிருந்து என்னும் இவரின் நூல் 1979ஆம் ஆண்டு வெளியாகியது. மௌனவதம் (1984), Trans Creations (1988) முதலிய நூல்களையும் இவர் படைத்துள்ளார். Trans Creations என்னும் இவரது நூலில் இவரே ஆங்கில மொழிபெயர்ப்பையும் கொடுத்துள்ளார். இவர் படிமக் கவிதைகளைப் படைப்பதில் வல்லவர். நையாண்டி, எள்ளல் முதலிய சுவைகளைத் தம் கவிதை வழி தருபவர். சிங்கை அரசியல் பற்றியும் சமூகத்தைப் பற்றியும் துணிவாகச் சாடி இருப்பதை இவர் கவிதைகளில் காணலாம். ஆங்கில இலக்கியப் புலமையின் வெளிப்பாடும் பிறமொழிக் கலப்பும் இவரது கவிதைகளில் இடம்பெற்றுள்ளன.

புதுக்கவிதை ஆசிரியர்களுள் குறிப்பிட்டுச் சொல்லக்கூடிய மற்றொருவர் க.து.மு. இக்பால். இவர் மரபுக் கவிதைகளோடு புதுக்கவிதைகளையும் படைத்து வருகிறார். தமது முகவரி என்னும் நூலில் மரபுக் கவிதைகளையும் புதுக்கவிதைகளையும் இடம்பெறச் செய்துள்ளார். இவரைப் பின்பற்றிப் பிச்சினிக்காடு இளங்கோ புதுக்கவிதைகளை எழுதி வருகிறார். இளந்தலை முறையைச் சார்ந்து இன்று புதுக்கவிதைகளைப் பலர் படைத்து வருகின்றனர். அமீருத்தீன், வி.எஸ். தாஜுதீன், முகமது அலி, அழகிய பாண்டியன், ராஜசேகர், ரவி, ஞானப்பிரகாசம் மொனிக்கா, சி. மீனாட்சி முதலியோரும் தங்கள் புதுக் கவிதைகளை நூல் வடிவம் பெறச் செய்துள்ளனர். லதா, ஷாகுல் ஹமீது, மலர்தமிழ், முதலியோரும் புதுக்கவிதைகள் படைத்து வருகின்றனர். ஞாயிறுதோறும் தமிழ்முரசில் பலரும் புதுக் கவிதைகள் எழுதிவருகின்றனர். வெளிநாட்டுத் தொழிலாளர் களைப் பற்றிய செய்திகள் இதில் இடம்பெறுகின்றன.

# சிறுகதை

## தமிழகம்

இராம. குருநாதன்

மேனாட்டு வரையறையை அடியொற்றிய சிறுகதைகள், பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் தோன்றின. உரைநடை வளர்ச்சியின் தொடக்க காலத்தில் வீரமாமுனிவர், பண்டித நடேச சாஸ்திரியார், திருமணம் செல்வகேசவராய முதலியார் முதலானோர் கதைகள் எழுதிவந்தனர்.

### பாரதி

பாரதியார் (1882-1921) தாகூரின் சிறுகதைகளை மொழிபெயர்த்ததோடு, மரபு வழியிலான சில சிறுகதைகளைப் படைத்து, அத்துறையில் முன்னோடியாகத் திகழ்ந்தார். அக்காலத்தில் நிலவிய சில சமூகப் போக்குகளைக் கண்டித்துப் புனைவியலான பாங்கில் காதல் மணம், பொட்டுக் கட்டும் வழக்கம், நாட்டுப்பற்று, சமூகம், மதம் தொடர்பான சில சீர்திருத்தங்கள் சுட்டிக்காட்டப்படுவதற்குக் கதைகள் எழுதினார். காதல் (ஆறில் ஒரு பங்கு), பொட்டுக்கட்டும் வழக்கம் (பூலோக ரம்பை), மதம் (வேணு முதலி) முதலிய சமுதாய உணர்வுகளைக் கருப்பொருளாக்கிப் பாரதியார் கதைகளாகப் படைத்தளித்தார்.

### முதல் சிறுகதை

முதல் சிறுகதை முயற்சி பாரதியிலிருந்து தொடங்கினாலும், வ.வே.சு.ஐயர் (1881-1925) எழுதிய 'குளத்தங்கரை அரச மரம்' ஏறக்குறைய முழுமையான சிறுகதை வார்ப்புக்கு உரிய இலக்கணத்தோடு பொருந்திய கதை எனலாம். தாகூர் கதை ஒன்றின் (காடேர் கதா) பாதிப்பால் விளைந்த இச்சிறுகதை, ஒரு குறிப்பிட்ட சமூகத்தினரிடம் அக்காலத்தில் காணப்பட்ட வரதட்சணைக் கொடுமை பற்றியதாக இருந்தது. மாதவையா (1872-1928) சற்றேறக்குறைய இதே காலகட்டத்தில் சிறுகதைகளை எழுதிவந்தார். குசிகர் குட்டிக் கதைகள் என்ற தலைப்பில் சமுதாயச் சீர்கேடுகள் பற்றிய சிறுகதை நூலை எழுதினார். தமிழ்ச்

சிறுகதை வரலாற்றின் தொடக்ககால முதல் மூவர்களாகப் பாரதி, வ.வே.சு.ஐயர், மாதவையா ஆகியோரைக் கருதலாம். இந்த மூவரில் முதலிருவர் விடுதலை எழுச்சிப் போராட்டத்தில் பங்கேற்றவர்கள் ஆவர்.

### தொடக்க கால இதழ்களின் பங்களிப்பு

விடுதலை காலகட்டத்திற்கு முன் தமிழ்ச் சமூகப்போக்கு பல்வேறு சிக்கல்களை உடையதாய் இருந்தது. உயர்மட்ட வகுப்பினரிடமும், தாழ்த்தப்பட்ட மக்களிடமும் காணப்பட்ட வாழ்க்கை முறைகளும், சமுதாய மரபுகளும் சடங்குகளும் எழுத்துகளில் பதிவு செய்யப்பட்டன. மக்களிடம் விடுதலை உணர்வு விழிப்புணர்ச்சி பெறவேண்டும் என்ற தீவிரமான சிந்தனை காணப்பட்டது. சமூகம், அரசியல், மொழி சார்ந்த சூழ்நிலைகளில் மாற்றங்களும் புதுமைகளும் தேவைப்பட்டன. இத்தகு பின்புலத்தில் இதழ்கள் தோன்றத் தொடங்கின. சுதேசமித்திரன், ஊழியன், காந்தி, தமிழ்நாடு, மணிக்கொடி, சுதந்திரச் சங்கு, கலைமகள், ஆனந்தவிகடன் முதலிய இதழ்கள் சிறுகதைகளை வெளியிட்டுவந்தன. இவற்றில் ‘மணிக்கொடி’ (1935-1939) சிறுகதைக்கு எனத் தனித்த பார்வையையும், நோக்கத்தையும் கொண்டிருந்தது. சிறந்த தமிழ்ச் சிறுகதை எழுதவல்ல கதாசிரியர்களின் கதைகள், பிற நாட்டவர்களால் போற்றப்படவேண்டும் என்பது அதன் நோக்கங்களில் ஒன்றாக இருந்தது. ஆங்கிலக் கல்விப் பயிற்சி மிக்க சிலர் மணிக்கொடியில் எழுதிவந்த காரணத்தால் உள்ளடக்கம், உத்தி ஆகியவற்றின் புதிய போக்குகள் மணிக்கொடிக் கதைகளில் காணப்பட்டன.

மணிக்கொடிக் காலத்திற்கு முன் நாரண. துரைக்கண்ணன், தி.ஜ. ரங்கநாதன், கல்கி, ராஜாஜி போன்றோர் எழுதிவந்தனர். சமூகத்தில் நிலவிய அன்றைய போக்குகள் இவர்களுடைய கதைக் கூறுகளாக இருந்துள்ளன. வடிவ நேர்த்தியோடும் ஒருமை யுணர்வோடும் எழுதப்பட்ட நாரண. துரைக்கண்ணன் எழுதிய சந்தேகம், நாகபிரம்மம் கதைகள் குறிப்பிடத்தக்கன. தி.ஜ.ர. மக்களிடம் காணப்படும் தனிமனித அவலம், நம்பிக்கைப் பொய்த்துப் போதல் முதலிய வாழ்க்கைக் கண்ணோட்டங்களைக் கதைப் பொருளாக்கியுள்ளார். தி.ஜ.ர.வின் நொண்டிக்கிளி என்ற கதை ஊனமுற்ற பெண் ஒருத்தியின் காதல் ஏக்கத்தையும், ஏமாற்றத்தையும் காட்டுவதாகும். சந்தனக்காவடி என்ற கதைத் தொகுதி மூலம் இவரது மரபு வழியிலான மண்ணின் மணம் கமழும் கதைகள் சிலவற்றை அறியமுடிகிறது.

### காந்தியச் சிந்தனைகளும் கல்கியும்

தேசிய எழுச்சிமிக்க காலகட்டத்தில் பங்கேற்ற கல்கி (1899-1953) காந்தியச் சிந்தனைகளைக் கருவாகக் கொண்டு கதைகள் பல படைத்தவர். கற்பனை மெருகோடு எல்லோரையும் ஈர்க்கும்படியாக எழுதிவந்தவர். காந்திய இயக்கம் வேரூன்றிய அக்காலத்தில் அதன் தாக்கம் பெற்ற பலருக்கும் முன்னோடியாக விளங்கியவர் கல்கி.

காந்தியின் கொள்கைகளான மதுவிலக்கு, தீண்டாமை ஒழிப்பு, நாட்டுப்பற்று, சாதிய எதிர்ப்பு, உப்பு சத்தியாகிரகம், கிராம முன்னேற்றம் கதரணிதல் முதலானவற்றைக் கதைப் பொருளாகக் கொண்டு படைத்தவருள் கல்கி முதன்மையானவர். கைம்பெண் நிலை (கேதாரியின் தாயார்), பொருந்தா மணம் (சுபத்திரை), கிராமச் சீர்திருத்தம் (கணையாழியின் கனவு), நாட்டு விடுதலை (அமர வாழ்வு, தூக்குத்தண்டனை) முதலியவை காந்தியச் சிந்தனையின் தாக்கம் பெற்றவை. ஆர்வம் தரும்படி யான கதைப் பின்னலும், தகுந்த உரையாடலும், எதிர்பாரா முடிவுகளும் இயல்பான மொழிநடையும், வாசக ரசனையும் இவரது கதைகளில் காணப்படுவன.

காந்தியச் சிந்தனைகளைத் தம் சிறுகதைகளில் பதித்துள்ளவர்களில் இராஜாஜியும் ஒருவர். மதுக் கொடுமையும், தீண்டாமை ஒழிப்புமே அவரது கதைகளின் பின்னணியாக உள்ளன. ஆண் ஆதிக்கத்தால் பாதிக்கப்பட்ட அபலை வாழ்வு (தேவானை), மதமாற்றம் (ராயப்பன்), தீண்டாமை (முகுந்தன்) முதலிய கதைகள் அவரது காந்திய எண்ணத்தின் பிரதிபலிப்பு களாகும்.

சமூகச் சீர்திருத்தம் என்ற நிலையில் தொடக்க காலச் சிறுகதைகள் அதனைப் பல்வேறு வகைகளில் காட்டின. மூடநம்பிக்கை, வரதட்சணைக் கொடுமை, கைம்பெண்துயர், கூட்டுக்குடும்பச் சிக்கல், பொருந்தாமணம், குழந்தை மணம் முதலியவை அக்காலகட்டத்தில் அழுத்தம் பெறும் வகையில் சிறுகதைக்கு உரிய கருப்பொருள்களாக அமைந்தன.

### மணிக்கொடியினர்

மணிக்கொடி இதழில், பி.எஸ்.இராமையா, ந.சிதம்பர சுப்பிரமணியன், புதுமைப்பித்தன், ந.பிச்சமூர்த்தி, கு.பா.ராஜ கோபாலன், மௌனி, ல.சா. ராமாமிர்தம், சி.சு. செல்லப்பா முதலியோர் சமூக உணர்வுடன் வடிவ நேர்த்தியோடும், உள்ளடக்கச்

செழுமையோடும் கூடிய சிறுகதைகளைப் படைத்தளித்தார்கள். இவர்கள் மணிக்கொடிக் குழுவினராக இருந்து தமிழ்ச் சிறுகதை வளர்ச்சிக்குத் தம் பங்களிப்பைப் பொறுப்போடு ஆற்றிவந்தவர் களாவர்.

விடுதலைக்கு முன்னுள்ள காலகட்டச் சமூகப் போக்குகளை மணிக்கொடிக் குழுவினர், தங்களின் தனித்த பார்வையில் கதைகளில் சொல்லிவந்தனர். நாட்டு விடுதலையைப் பி.எஸ். இராமையா, குங்குமப் பாணி என்ற கதையிலும், சி.சு.செல்லப்பா வந்தே மாதரம், பிரார்த்தனை, கனவு, சிப்பாய், இதயம் முதலிய கதைகளிலும், ந.பிச்சமூர்த்தி கிட்டாத ஜெயில் என்ற கதையிலும் வெளிப்படுத்தியுள்ளனர். தீண்டாமை ஒழிப்பு குறித்த பார்வை அந்தக்காலகட்டத்தில் அழுத்தமாக வெளிப்பட்டது. மேல் சாதியினர் தீண்டத்தகாத மக்களுக்கு இழைத்த கொடுமை, கோயில் நுழைவதற்குத் தடை, ஊர்ப் பொதுக் கிணறுகளில் தண்ணீர் எடுக்கத்தடை முதலியவற்றை மையமாக வைத்துக் கதைகள் எழுதப்பட்டன. புதுமைப்பித்தன் எழுதிய கடவுளின் பிரதிநிதி, புதிய நந்தன், தனி ஒருவனுக்கு, கி.ரா. எழுதிய கோயில் நுழைவு முதலியன சுட்டிக்காட்டத்தக்கன. காந்தி, அரிசனங்களைக் கோவில்களில் அனுமதிக்க வேண்டும்; அதைத் தடை செய்வதைப்போல் பாவம் எதுவும் கிடையாது என்று சொல்லியதைச் சங்கரர் என்னும் பாத்திரம் வழி அக்ரகார மக்களிடம் எடுத்துக் கூறுவதைப் புதுமைப்பித்தனின் கடவுளின் பிரதிநிதி என்னும் கதையில் காணலாம்.

கைம்பெண் கொடுமையை, பூச்சூடல், மலரும் மணமும், (பி.எஸ். இராமையா) கலியாணி, வாடா மல்லிகை (புதுமைப் பித்தன்) உயிரின் அழைப்பு (கு.ப.ரா) ஆகிய கதைகளில் பாடு பொருளாக்கினர். வரதட்சணைக் கொடுமை (ஆண்மை - புதுமைப்பித்தன்) போன்றோரால் எடுத்துக்காட்டப்பட்டுள்ளது.

மணிக்கொடியில் எழுதிவந்தவர்கள் ஒவ்வொருவருமே தனித்தன்மையோடு கதைகளைப் படைத்தவர்கள் ஆவர். புதுமைப்பித்தன், கு.ப.ரா. ஆகிய இருவரும் தம்மைத் தனியே அடையாளம் காட்டக்கூடிய அளவிற்கு முழுவீச்சோடு எழுதி யவர்களாவர். புதுமைப்பித்தன் மணிக்கொடியில் எழுதியதற்குப் பின்னரே சிறுகதை வடிவம் முழு வார்ப்போடு உணரப்பட்டது. மணிக்கொடி எழுத்தாளரிடையே அவர் தமக்கெனத் தனித்த தொரு போக்கைக் கொண்டிருந்தவர். எள்ளல் சுவைபடச் சமுதாயத்தை விமர்சிக்கும் போக்கும், கதை சொல்லும்

நேர்த்தியும் கைவரப் பெற்ற அவர், சிறுகதைகளில் பல பரிசோதனைகளை நிகழ்த்தியவர். புதிய மொழிநடை எதார்த்தம் கூடிய கதைச் சித்திரிப்பு, புராணக் கதைகளுக்குத் தம் நோக்கில் புது மெருகு ஊட்டி அவற்றைப் புதிய கண்ணோட்டத்தில் தருதல் புதுமையான கதைப் பின்னல் முதலியன அவரை மற்ற மணிக்கொடி எழுத்தாளரிடமிருந்து வித்தியாசப்படவைத்தன. செல்லம்மாள், சாப விமோசனம், கயிற்றரவு, கடவுளும் கந்தசாமி பிள்ளையும், சிற்பியின் நரகம், காஞ்சனை முதலிய கதைகள் சிறப்பாகக் குறிக்கத்தக்கன.

மணிக்கொடிக் காலத்தில் இனங்குறிக்கப் பெற்ற மற்றொரு எழுத்தாளர் கு.ப.ராஜகோபாலன். ஆண்-பெண் மன உணர்வுகளை மிக மெல்லிய இழைகளால் சித்திரித்துக் காட்டியவர். மௌனமாக மன உணர்ச்சிகளை ஆழமான உரை யாடலால் கையாளும் இவர், கலை நேர்த்திமிக்க சில கதைகளை எழுதியுள்ளார். ஆற்றாமை, விடியுமா?, சிறிது வெளிச்சம், புனர் ஜென்மம் முதலிய கதைகள் ஒவ்வொரு வகையில் சிறப்புற்றவை.

பி.எஸ். இராமையா மணிக்கொடி இதழின் தோற்றத்திற்குக் காரணமானவர்களுள் ஒருவர். சமூக உணர்வுபட எழுதிவந்தவர். மலரும் மணமும் என்ற இவரது கதை, விதவைச் சிக்கலை மைய மாகக் கொண்டது. மனித உணர்வின் பல்வேறு கோணங்களைச் செம்பூவரசு, போட்டிக்கதை முதலியவற்றில் காணலாம். இவரது 'நட்சத்திரக் குழந்தைகள், குழந்தையின் மன உணர்வைச் சித்திரிக்கும் கதையாகும்.

மௌனி, குறியீடுகளே கதையை நிகழ்த்திச் செல்லும்படி வடிவ அழகோடு கதை எழுதியவர். மனிதமன உணர்வுகளை அகவுலகப் பயணமாகக் காட்டத் தெரிந்த இவரது கதைகள், தத்துவப் பின்னணி கொண்டவை. ஏன் (இளம்பருவத்துக்காதல்), காதல் சாலை (மனைவியை இழந்ததன் சோகம்), நினைவுச்சுவடு (காதலி விலைமகளாகியது), மணக்கோலம் (வேறொருவனின் மனைவி எனத் தெரிந்தும் அவளைப் பற்றிய உணர்வில் ஆழ்தல்) முதலியன குறிப்பிடத்தகுந்தன. சாவில் பிறந்த சிருட்டியும், அழியாச் சுடரும் இவருக்குப் பெருமை சேர்க்கும் கதைகளாகும்.

காந்தியக் கொள்கையில் மிகுந்த நாட்டம் கொண்டு எழுதியவர் சி.சு. செல்லப்பா. இவர் நிகழ்ச்சியைக் காட்டிலும் எண்ணவழியே கதையை நடத்திச் செல்வதனைக் கதைப் போக்கில் காணலாம். இவரது சரஸாவின் பொம்மை குறிப்பிடத் தகுந்த கதை. சரஸாவைப் பொம்மையாகக் கருதிப் பழகிய ஒருவன்,

அவளது கைப்பொம்மையாகி விடுவதைச் சித்திரிக்கும்படியான கதை அது.

ந.பிச்சமூர்த்தி மணிக்கொடியிலும் கலைமகளிலும் எழுதிவந்தவர். தத்துவ விசாரணையும், குறியீடும் கொண்ட கதைகள் சிலவற்றைப் படைத்தவர். சிறுசிறு மன உணர்ச்சிகள் அழகிய கலை வார்ப்பில் அமையும்படியாக எழுதிவந்தவர். இரும்பும்புரட்சியும், மாயமான், வானம்பாடி, ஞானப்பால் முதலியன தேர்ந்த கதைகளாகும்.

அக்காலகட்டத்தில் மறுமணம், பொருந்தா மணம், கலப்பு மணம் ஆகிய நிலைகள் சிந்திக்கப்பட்டன. மறுமண உரிமை, ஆணாதிக்கப்போக்கில், தலை எடுத்தது. ஆண்களுக்குச் சமூகத்தில் வழங்கப்பட்ட உரிமை பெண்களுக்கு அன்று இல்லை. மறுமணத்தால் பெண்களுக்கு இழைக்கப்படும் இன்னல்களைப் பைத்தியக்காரி (தி.ஜ.ர) எனது மாஜிக் கணவர் (பி.எஸ்.இராமையா) முதலிய கதைகள் வெளிப்படுத்தின. இளம்பெண்களை முதியோர் மணத்தல் (கலியாணி, புதுமைப்பித்தன்) எவன் பிறந்திருக்கிறானோ (கு.ப.ரா) சர்மாவின் புனர்விவாகம் (கல்கி) முதலியனவும் எடுத்துக்காட்டின.

### காந்தியத் தொடர்ச்சி

காந்தியின் நெறிகளைக் கதைகளில் காட்டிய கல்கியைப் பின்தொடர்ந்து அகிலன், நா.பார்த்தசாரதி, ஜெகசிற்பியன் இராஜம்கிருஷ்ணன் முதலியோர் எழுதிவந்தனர். இவர்களின் கதைகளில் ஊடும் பாவுமாகக் காந்தியக் கருத்துகள் பின்னப் பட்டன. காந்தியக் குறிக்கோள் எழுத்தாளர்களாகவே இவர்கள் விளங்கியவர்கள். தேசிய நாட்டம், மரபு வழியிலான பார்வை, கற்பனைத் திறம், தார்மீகமான கோபம், அறஉணர்ச்சி முதலியன இவர்களின் கதைகளில் காணப்பெற்றன. அகிலனின் முதல் கதையான, 'காசுமரம்' ஓர் ஏழைச்சிறுமியின் விபரீதக்கற்பனையின் விளைவு; சுதந்திரப்பறவை, பசி, வழிப்போக்கன், சாதி, பூச்சாண்டி, எரிமலை, வெள்ளம் வந்தது போன்ற சிறுகதைகள் அகிலனது உணர்வைக் காட்டும் படைப்புகளாகும். நா. பார்த்தசாரதி வடிவமும், நடைத் தெளிவும்பட எழுதிவந்த காந்திய எழுத்தாளர் களுள் ஒருவர். காந்தியப்போலிகளை இனங்குறித்தல், சமூக அநீதிகளை எதிர்த்தல், சமூக எள்ளல் ஆகியவை சமூக, அரசியல் பின்னணிக் கதைகளில் இழையோடும். 'தெய்வத்தாலாகா தெனினும்', 'பூக்களை யாரும் மிதிக்கக்கூடாது', 'ஒரு புதிய ஆயுதம்' முதலியன சுட்டத்தக்க கதைகளாகும். சிறுவதை வடிவ

உணர்வைத் தாண்டி இவர் படைத்த நீண்ட நெடுங்கதைகளான மகாத்மாவைத் தேடி, இன்று புதிதாய்ப் பிறந்தோம், தூங்கும் நிழல்கள் முதலியன நா.பா.வின் படைப்பாக்கத்திற்குச் சான்றாவன.

## திராவிட இயக்கம்

திராவிட இயக்கத்தினர், தங்கள் கொள்கையை வலியுறுத்தப் படைப்புக் கலையையும், திரைப்படக் கலையையும் நன்கு பயன்படுத்திக் கொண்டனர். விடுதலைக்குப் பின், சமூக, அரசியல், பொருளாதாரச் சூழ்நிலைகளில் நாடு எவ்வாறு மாறி யுள்ளது என்பதை இவர்கள் பல்வேறான பாடுபொருள்களில் சிறுகதையாக வடித்தனர். சாதிய எதிர்ப்பு, மூடநம்பிக்கை ஒழிப்பு, தன்மான உணர்வு, இனப்பற்று, கடவுள் மறுப்பு, பகுத்தறிவு முதலிய பெரியார் ஈ.வே.ரா.வின் சிந்தனைகள் திராவிட இயக்கத்திற்குத் தூணாக விளங்கின. பிரச்சாரத்தின் வழியே திராவிட இயக்கக் கொள்கைகள் பரவத் தொடங்கின.

திராவிட இயக்கம் பேச்சிலும் எழுத்திலும் புதிய கருத் தோட்டங்களை வழங்கியது. கடவுள், மதம், சமயம், பார்ப்பனீயம், பண்ணையார்த்தனம், அபலைப் பெண்கள் பற்றியனவாகக் கதைகள் புனையப்பட்டன. சமூகத்தில் காணப்பட்ட சிக்கல் களும் முரண்பாடுகளும் கதைவழியே எடுத்துக்காட்டப்பெற்றன. இவ்வியக்கம் இலக்கியத்தைக் கருத்து விளக்கத்திற்காகவும், கொள்கை வெளியீட்டிற்காகவும் பயன்படுத்தியது. சிந்தனை வயப்பட்டதும், உணர்ச்சி மயமானதுமான கதைகளை இவ் வியக்கத்தினர் எழுதிவந்தனர். இவர்களிடத்து மொழிநடை எளிமையானதும் ஈர்ப்பதாயும் இருந்தது. பழைய புராணங்களி லிருந்து செய்தியை எடுத்துக்கொண்டு, தங்களின் பகுத்தறிவுப் பார்வைக்கு ஏற்பப் புதிய பொருள் கற்பித்தும் எழுதிவந்தனர். கல்கியின் கற்பனாவாதம், மணிக்கொடி இயக்கத்தினரின் இயல்பு நவிற்சி இவற்றிற்கிடையே திராவிட இயக்கத்தினர் தங்களுக்கெனத் தனிப்பார்வையில் இயங்கிப் படைப்புகளைத் தந்தனர். அண்ணா, மு.கருணாநிதி, தில்லை வில்லாளன், இராதா மணாளன், பண்ணன் முதலியோர் இவ்வகையில் கதைகளை எழுதிவந்தனர்.

அண்ணா உள்ளடக்கத்திற்கு மதிப்புத்தந்து எழுதியவர்; சாதிய வேறுபாட்டையும், மேலாதிக்க ஆணவப் போக்கையும் பொருளாதார ஏற்றத்தாழ்வையும், மூடநம்பிக்கையையும் கருப்பொருளாகக் கொண்டு கதைகள் படைத்தவர். சாதிய எதிர்ப்பு, 'குமரிக்கோட்டம்' என்ற சிறுகதை வழியே காட்டப்

படுகிறது. தன் மகன் வேறொரு சாதியைச் சார்ந்த பெண்ணைக் காதலிக்கக் கொதித்தெழும் சாதிவெறி கொண்ட தந்தையின் போக்கைப் படம்பிடிக்கும் இக்கதை, இறுதியில் மகனின் காதலுக்கு ஒப்புதல் தருவதோடு, அவரைப் பொதுத் தொண்டுக்கு உட்படுத்துகிறது. மூட நம்பிக்கைக்கு எதிர்ப்பான குரலை 'பலாபலன்', 'சுடுமூஞ்சி' ஆகிய கதைகள் எதிரொலிக்கின்றன. 'இருபரம்பரை' என்ற கதை மேலாதிக்கப் போக்கைக் காட்டுவதாகும். பேய் ஓடிப்போச்சு, தேடியது வக்கீலை முதலிய கதைகள் மதம் என்ற பேரால் அட்டூழியம் நடத்துவோரை இனம் குறிக்கும்படியானவை. ஏழைக் குழந்தையின் ஏக்கத்தைப் புலப்படுத்தும் 'செவ்வாழை' இவரது சிறந்த கதைகளுள் ஒன்று.

மு.கருணாநிதி நிகழ்ச்சியை உணர்வுபடச் சித்திரித்துக் கதை எழுதியவர். சமுதாயத்தில் தாம் கண்ட காட்சிகளை உணர்ச்சிமயமாகக் காட்டிக் கதை புனைந்தவர்; இவருடைய கதைகள் திராவிட இயக்கக் கருப்பொருள்களை நேர்த்தியாகச் சொல்லக் கூடியன. குப்பைத்தொட்டி என்ற இவரது கதை சிறந்த படைப்பு. இந்தி எதிர்ப்பு (சந்தனக்கிண்ணம்) மூடநம்பிக்கை (கண்ணடக்கம்) கடவுள் மறுப்பு (விஷம் இனிது) கையூட்டு (காசா லேசா) போலிமதவாதிகள் மக்களை ஏமாற்றிப் பிழைத்தல் (சங்கிலிச் சாமியார்) முதலிய பாடு பொருள்களில் கதைகளைப் படைத்துள்ளார்.

## பொதுவுடைமை இயக்கம்

காந்திய இயக்கம், திராவிட இயக்கம் ஆகியவற்றைத் தொடர்ந்து பொதுவுடைமை இயக்கப் பார்வை சிறுகதை வளர்ச்சிக்கு உரமூட்டியது எனலாம். காரல் மார்க்ஸ் சிந்தனைகள் கதைகளில் ஊடுருவத் தொடங்கின. முற்போக்குத் தளத்தில் சமுதாய உணர்வுகள் முன் எடுத்துச் செல்லப்பட்டன. வாழ்க்கை பற்றிய பார்வை எதார்த்தமானதோடு, சமூக விமர்சனமாகவும் அமைந்தது. இலக்கியத்தில் இடது சார்புக் கண்ணோட்டத்தோடு எழுதப்பட்ட கதைகள், பாமர மக்களின் அன்றாட நிகழ்வுகளை எடுத்துக்காட்டி வந்தன.

விந்தன், எதார்த்தத்தோடு கூடிய மக்களின் வாழ்க்கை அவலங்களைத் தார்மீகக் கோபத்தோடு எழுதிவந்தார். மாடும் மனிதனும், புது அடிமை, சந்தோஷ முடிவு., மாட்டுத் தொழுவம், முதல் தேதி முதலிய கதைகள் குறிப்பிடத்தக்க அவரது படைப்புகளாகும்.

தொ.மு.சி. ரகுநாதன், மிகுதியான கதைகளைப் படைக்கா விட்டாலும், சமூக விமரிசனமான கண்ணோட்டம் மிக்க சாராம்சம், ஊழல், ஜாதி வேற்றுமை, ஆனைத்தீ, மாயை மனைவி முதலிய கதைகளைப் படைத்தவர்.

ஐம்பதுகளில் எழுதிவந்த சுந்தரராமசாமி பொதுவுடைமைப் பார்வை கொண்டவராயிருந்தவர். அவரது கலை இலக்கிப் படைப்பு முற்போக்குத்தளத்தில் எழுதப்பட்டது. அதன்பின் அவரது பார்வை, உத்தி, மொழிநடை, கலைநேர்த்தி முதலிய வடிவச் செம்மையில் ஈடுபாடு கொள்வதாயிற்று. எனினும் புதுமையான கருப்பொருளோடு எழுதி வருபவர். அவரது படைப்புக்களில் பல்லக்குத் தூக்கிகள், சீதைமார்க் சீயக் காய்த்தூள், காளையும் உழவுமாடும், பள்ளம், பிரசாதம், அக்கரைச்சீமையில் முதலிய கதைகள் மனித மனத்தை நுட்பமாகச் சித்திரித்துக்காட்டுவன.

எதார்த்த உலகின் இன்னொரு பரிமாணத்தை விந்தனுக்குப் பின் ஜெயகாந்தனின் எழுத்தில் காணமுடிகிறது. நடைபாதை வாசிகளையும், உதிரித் தொழிலாளர்களையும் ஆழமாகக் காட்டியவர்; அவர்களின் அடிப்படைச் சிக்கல்களைப் படைப்பில் பதிவு செய்த முறை மிக மிக எதார்த்தமானது. தர்க்க ரீதியானதும், எதார்த்தமிக்கதுமான பார்வையில் சில காலம்வரை மார்க்சியக் கண்ணோட்டத்தோடு எழுதிவந்தவர்களில் அவர் முக்கியமானவராயிருந்தார். ஜெயகாந்தனின் தாக்கம் பெற்றுச் சிலர் சிறுகதை எழுத முனைந்தனர். வாழ்க்கை மீது கூர்மையான கண்ணோட்டம், உண்மைத் தன்மையான அசல் பாத்திர வார்ப்பு முதலியவற்றால் சிறுகதை உலகில் தமக்கென ஒரு தனிப்பாணியை மேற்கொண்டு தனித்த இடத்தைப் பெற்றிருந்தவர். புதுப்புதுக் கோணங்களில் தம் அனுபவச் செழுமையை நடைமுறை வாழ்க்கையோடு ஒட்டி எழுதியவர் இவர். புதிய கதை, உடன்கட்டை, உறங்கும்போதும், ஓவர்டைம், அக்னி பரிட்சை, தாம்பத்யம் முதலியவை தனித்தன்மை மிக்க கதைகளாகும். எழுபது முதல் இன்று வரையிலான பொதுவுடைமை இயக்கத் தளத்தில் நின்று மார்க்சிய சிந்தனை ஓட்டமும், எதார்த்தமும் மிக்க கதைகளை எழுதிவருவோர் தொடர்ந்து அப்பணியைச் செய்துவருகின்றனர்.

### பெண் எழுத்தாளர்கள் அன்று முதல் இன்று வரை

பெண்களும் சிறுகதை எழுதுவதில் தொடக்ககால முதலே ஈடுபட்டு வந்துள்ளனர். ரங்கநாயகி, கி.சரஸ்வதி, சாவித்திரி,

குமுதினி, கு.ப.சேது அம்மாள், கமலா விருத்தாசலம் முதலியோரைத் தொடர்ந்து குகப்பிரியை, அநுத்தமா, லஷ்மி, சூடாமணி ஆகியோர் ஐம்பதுகளிலிருந்து எழுதி வந்துள்ளனர். சூடாமணி இன்றுவரை ஆர்வம் குன்றாமல், சிறுகதைகள் பல எழுதிவருகிறார். தமிழ்ச்சிறுகதை உலகில் தமக்கென ஓரிடத்தைப் பெற்றுத் திகழ்பவர் அவர். பழைய மரபுகளிலிருந்து விலகிப் புதிய தளத்தில் பெண்கள் உலகம் சித்திரிக்கப்படவேண்டும் என்பதில் தீவிரமும் முனைப்பும் கொண்டவர்களாக அனுராதா ரமணன், அம்பை, ராஜம் கிருஷ்ணன், ஜோதிர்லதா கிரிஜா, வாசந்தி, திலகவதி, இந்துமதி, காவேரி, சம்யுக்தா (பா. விசாலம்), ஆண்டாள் பிரியதர்சினி முதலியோர் குறிப்பிடப்பட வேண்டியவர்களாவர். இவர்களில் பெரும்பாலோர் வெகுசன இதழ்கள் மூலம் அறிமுக மானவர்கள்.

ராஜம்கிருஷ்ணன் கதைகளில் ஊசியும் உணர்வும், பச்சைக் கொடி, களம் முதலிய கதைகள் சமூக உணர்வோடு படைக்கப்பட்டுள்ளன. சூடாமணி குடும்ப உறவுகளின் உணர்வை உளவியல் கண்ணோட்டத்தோடு அணுகியவர். சோகத்தில் அழுந்திய உணர்வுகளை ஆழமாக வெளிப்படுத்துபவர். நிகழ்ச்சிப் போக்குகளை விடத் துல்லியமான மன உணர்வினை இயல்பாகக் காட்டவல்லவர். ஒரு பதிலுக்காக,பணம் பறித்த செல்வம், ஓர் இந்தியன் இறக்கிறான், ஒளியின் முன் முதலியன குறிக்கத்தக்க கதைகளாகும்.

சிறிய வாக்கியங்களில் நுட்பமும் செறிவும் கொண்ட கதைகளை அம்பை எழுதிவருகிறார். ல.சா.ரா.வின் பாதிப்பை இவரது கதைகளில் ஓரளவு காணலாம். ஆணாதிக்கப் போக்கிற்கு எதிரான விதத்தில் அமைந்த இவரது ககைதளில் ஸஞ்சாரி, வல்லூறு, புனர் முதலியன சுட்டத்தக்கன. மற்றும் உடம்பு, சிறகுகள் முறியும், சமையலறையில் ஒரு பூனை, காட்டில் ஒரு மான் முதலியனவும் சிறந்த கதைகளாகும். அவலத்தன்மையும், தன் வரலாற்றுணர்வும், வாழ்க்கையைப் பற்றிய பல்வேறு புரிதலையும் கலந்து பெண்ணியச் சார்போடு எழுதி வந்தவர் செண்பகம் ராமசாமி. மதுரையும் மல்லிகையும், பறவைகளும் ரேஷன் கார்டும், பொருதகர் முதலியன சுட்டிக்காட்டத் தகுந்த கதைகள் ஆகும். பெண் அடக்குமுறைக்கு ஆளாகும் நிலை, பாது காப்பின்மை, சமூகத்தை எதிர் கொள்ளல் அல்லது எதிர்த்தல் முதலிய போக்குகளில் இன்றைய பெண் எழுத்தாளர்கள் சிலர் எழுதி வருகிறார்கள். சிவகாமி, திலகவதி, பாமா, பூமா, வாசுகி,

கிருஷாங்கினி முதலியோர் பெண்ணியப் பார்வையில் எழுதிவரும் குறிப்பிடத்தகுந்த பெண் எழுத்தாளர்கள் ஆவர்.

## இரண்டாம் கட்ட இதழ்கள்

வாழ்க்கை மீதான அக்கறையும், சமுதாயத்தின் மீது பரிவும், வார்த்தைகளைச் செதுக்கி நுட்பமாகக் கதை கூறும் மொழிநடையும் அறுபதுகளின் இறுதியிலும் எழுபதுகளிலும் எழுபதுகளுக்குப் பிறகுமே கவனிக்கப்படலாயின. செழுமையும் உள்ளடக்கமும் புதிய வீச்சில் சொல்லப்பட்டன. பொழுது போக்கு என்ற பெயரில் வணிக நோக்குடன் இதழ்களின் தேவைக் கேற்ப எழுதும் போக்கு, அக்காலக்கட்டத்திலும் வெளிவந்தது. வெகுசன இதழ்கள் வணிகத்தைப் பெருக்கிக்கொள்ள இவ்வகைக் கதைகள் காரணமாயிருந்துள்ளன. இலக்கியத் தரம் வாய்ந்த கதைகளும், உத்தி முறையிலான சோதனைக் கதைகளும் சிறுபத்திரிகைகளில் வெளிவந்தன. வெளியிடப்பெற்றும் வருகின்றன. எழுபதுகளில் இலக்கியவட்டம், நடை, கசடதபற, கணையாழி, எழுத்து, தீபம் முதலியன பல நல்ல தரமிக்க சிறுகதைகளை அளித்துவந்தன. காலச்சுவடு, ஆரண்யா, புதிய விருட்சம் முதலிய சிறுபத்திரிகைகளில் கதைகள் புதிய நோக்குகளில் எழுதப்பட்டுவருவது தொடர்கிறது. தொடக்க காலத்தில் மணிக்கொடி முதலானவை சிறுகதை வளர்ச்சிக்குப் பங்காற்றியதைப் போல, அண்மைக் காலத்தில் சிறுபத்திரிகைகள் தம்மாலான பங்களிப்பைச் செய்கின்றன.

### அறுபதுகளில்...

இயக்கச்சார்பில்லாமல் அறுபதுகளிலும் எழுபதுகளிலும் தொடர்ந்து எழுதிவந்தவர்களில் கு.அழகிரிசாமி, வல்லிக்கண்ணன், எம்.வி.வெங்கட்ராம், தி.ஜானகிராமன், இந்திரா பார்த்தசாரதி ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள். மரபு வழியாகவும், சில உத்திவகையிலும் கதை எழுதியவர் கு.அழகிரிசாமி, குழந்தை மனஉணர்வுகளை நன்கு படம்பிடிப்பவர். ராஜா வந்திருந்தார் இவருடைய கதைகளில் குறிப்பிடத்தக்கது. உருவகமாகவும் கதை சொல்லத் தெரிந்தவர். இயல்பான மொழிநடை இவருடையது. எம்.வி.வெங்கட்ராமின் தத்துப்பிள்ளை, சித்தக்கடல் முதலிய கதைகள் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவை. உணர்ச்சி செறிந்த உரையாடல்களாலும், கதை நேர்த்தியோடும் அழகிய வார்ப்பாகச் சிறுகதை படைத்தவர் தி.ஜா. ஆழமான மன உணர்ச்சி வழி இயங்கும் மாந்தர்களை, நுட்பமாகத் தமது படைப்பில் காட்டி

யுள்ளார். சமூக அமைப்பில் குடும்ப உறவுகள் சிதைவதற்குப் பொருளாதாரம் காரணமாக இருப்பதையும், மனித மேம்பாட்டினை விழையும் உள்ளத்தையும் ஒருங்கே இவரது கதைகளில் காண இயலுகிறது. 'ஜீவனாம்சம்' என்ற கதை கணவனை விட்டு வெளியேறிய ஒருத்தி அவனுக்கு ஜீவனாம்சம் தருவதைப் பொருளாகக்கொண்ட வித்தியாசமான கதை. 'கோபுரவிளக்கு' என்ற கதை வாழ்க்கையில் நெறி தவறிய ஒருத்தியின் இறப்பினை மனிதநேயத்தோடு அணுகுவதாகும். இந்திரா பார்த்தசாரதி கதைகளில் மெல்லிய எள்ளல் இழை யோடும். குடும்பஉறவுகளின் வேர்ப்பற்று ஆழமான உணர்வோடு புலப்படுத்தப்பெறும். நடுத்தர வர்க்க உணர்வுகள், நாகரிகப் போக்கின் சிதைவுகள் ஆகியவற்றை எள்ளல் சுவையோடு எழுதியவர் இந்திரா பார்த்தசாரதி. நடுத்தரக் குடும்பங்களின் சிக்கல்களையும், தனிமனித உணர்வுகளையும் ஆழமாகப் படைத்தவர் இவர். உச்சிவெயில், அற்றது பற்றெனில், நாசகாரக் கும்பல் முதலியன குறிப்பிடத் தக்கன.

### எழுபது எண்பதுகளில்...

எழுபதுகளிலும் எண்பதுகளிலும் வெகுசன இதழ்களில் கவர்ச்சியான கதைகள் வெளிவந்தன. மிகையானதொரு தளத்தில் நின்று வாசகரை ஈர்த்தன. எழுபதுகளில் பரபரப்பாகப் பேசப் பட்டார் வெகுசன எழுத்தாளர்களில் ஒருவரான சுஜாதா. இவர் படைப்புலகில் சில மாற்றங்களையும், புதுமையான நடை உத்திகளையும் கொண்டு வந்தவர். வெகுசன இதழ்கள் இவரைப் பயன்படுத்திக் கொண்டதைப் போல, இவரும் அவற்றைத் தம்வசப்படுத்தி ஒரு குறிப்பிட்ட காலம் வரை தமிழ் இதழ்கள் எல்லாவற்றிலும் எழுதி ஒரு பரபரப்பை ஏற்படுத்தினார். இவரது கதைகள் எழுத்தாளர்கள் சிலரிடம் பாதிப்பை ஏற்படுத்தி, 'சுஜாதா வகையிலான கதைகள்' என்ற எண்ணத்தைத் தோற்று வித்தன. நடை, வடிவம், உள்ளடக்கம், உத்தி, விறுவிறுப்புத் தன்மை முதலியவற்றால் வாசகர்களின் ஈர்ப்புக் கூடியது. சுஜாதா பாணியைப் பின்பற்றிச் சிலர் நடைபோக்கை மாற்றிக் கொண்டனர்.

பிராய்டிய உளவியல் செயகாந்தனிடம் ஒருவகையாக வெளிப்பட்டது போல, வேறுவிதமான சிந்தனைகள் குறிப்பாக, பாலுணர்வைத் தூண்டும்படியான கதைகள் சிலவற்றைச் சிலர் படைத்தனர். ஜி.நாகராஜன், பாலகுமாரன் இவ்வகையினர். ஜி.நாகராஜன் தனித்தன்மைப்பட எழுதியவர். மனிதனின்

உள்மனப்போக்கை வக்கிரத்தோடு படம்பிடித்தாலும், அதில் இயல்பாக நின்று எதார்த்தத்தோடு கதை சொன்னவர் இவர். இருண்மையான அக உலகை, நெறி பிறழ்ந்த வாழ்க்கைப் பின்னணியில் ஆழமான உணர்வோடு படைத்தவர். பாலகுமாரன், சுஜாதாவின் நடையையும் தி.ஜா.வின் உள்ளடக்கத்தையும் உள்வாங்கிக் கொண்டு எழுதியவர். வெகுசன இதழ்களில் தாமரைமணாளன், தாமரை செந்தூர்பாண்டி முதலியோர் எழுதி வந்திருப்பினும் சில நல்ல கதைகள் வழி அறியப்படுபவர்களாக வுள்ளனர். இவ்வகையில் குறிக்கத்தகுந்த எழுத்தாளர்களுள் வையவனும் ஒருவர். மனிதநேயம், இயற்கையின் மீது பரிவு, உயிர் இரக்கம் முதலான பார்வைகளில் அமைந்த பல கதைகளை எழுதியவர். கறவை, ஒழரி வீட்டு நிழல், மாடு, மனிதாபிமானி முதலிய கதைகள் எடுத்துக்காட்டத்தக்கன.

### கிராமியப் பார்வை

எழுபது எண்பதுகளில் சமூகம் பொருளாதாரம் அரசியல் ஆகிய தளங்களில் மாற்றங்கள் காணப்படலாயின. தனி மனிதரையும், குடும்ப உறவுகளையும் மாறுதலுக்கும் புதுமை யான போக்கிற்கும் உள்ளாக்கின. இது ஒரு சங்கிலித் தொடராக அறுபதுகளின் இறுதியிலிருந்து தொடர்ந்தது. நகரிய மாற்றம், கிராமப்புற மாறுபாடுகள், வர்க்கப் போராட்ட உணர்வுகள், சுரண்டலுக்கு எதிரான போக்கு முதலியன உள்ளடக்கத்தைத் தீவிரப்படுத்தின. கிராமிய மணத்தோடு அம்மக்களின் பல்வேறு சிக்கல்களை உயிர்த் துடிப்போடு காட்டும்படியான கதைகள் அழுத்தமான வார்ப்புகளில் கூறப்பெற்றன. கி. ராஜநாராயணன், பா. செயபிரகாசம், சு. சமுத்திரம், பூமணி, மேலாண்மை பொன்னுசாமி முதலியோர் கிராமப்புறப் பாணியை நன்கு கையாளத் தெரிந்தவர்களாவர். கரிசல் காட்டு மண்ணையும், அம் மண்ணின் மக்களையும் பதிவு செய்வதில் முனைப்புக் காட்டியவர் கி.ரா. கதவு, கிடை, வேட்டி முதலிய கதைகள் குறிப்பிடத்தக்கவை.

பா. செயபிரகாசம் கிராமியப் பாணியை மிக அழுத்தமாக வெளிப்படுத்தியவர். எதார்த்தப் பார்வையோடு நேர்த்தியாகக் கதை கூறியவர் இவர். இருளுக்கு அழைப்பவர்கள், மீண்டும் ஒரு ஜெருசலேம், அக்னி நட்சத்திரம் முதலியவை குறிக்கத் தகுந்த கதைகளாகும்.

சு. சமுத்திரம் கதைகளில் கிராமியப் பாங்கு பட்டவர்த் தனமாக இருக்கிறது. எளிய நடையோடும் எள்ளல் சுவையோடும் கதை எழுதிவருபவர். சமகால அரசியல் பார்வைகளை மிகத்

துணிவோடு எழுதுபவர். அங்கே கல்யாணம் இங்கே கலாட்டா, எதிர்ப்பரிணாமம் முதலியவற்றில் அரசியல் எள்ளல்களைக் காணலாம். இலவுகாத்த பலவேசம் போன்ற கதைகள் மானிட நேயத்தின் பிரதிபலிப்பு.

பூமணியின் படைப்புலகம் அழுத்தமும் ஆழமும் நிறைந்தது. கிராமப்புற அவலங்களை வலிமையான பின்னணியில் காட்டியவர். மானிடத்தின் சோக இழைகளைக் கலை ஆளுமையோடு பின்னத் தெரிந்தவர்; தனிப்பட்ட வட்டாரப் பாங்குடைய நடையில் எழுதும் இவர், மாற்றம், பெட்டை, பசை, நீதி முதலிய கதைகளால் தம்மை அடையாளப்படுத்தியவர்.

மேலாண்மை பொன்னுசாமி முழுக்க முழுக்கக் கிராமிய மணத்தோடு எழுதிவருபவர். கிராம மக்களின் அன்றாட வாழ்க்கைச் சிக்கல்களை இயல்பான கதை ஓட்டத்தோடும்; கதை மாந்தரோடும் நடப்பியல் உணர்வுபடப் படைத்துக் காட்டியவர். கணவன், மனைவியரிடையே நிலவும் அகப்புறப் போராட்டங் களையும், மகன் மகள் பாசவுணர்ச்சி, வறுமையில் உழலும் கிராம மக்களின் நிலை இவற்றை எதார்த்தமாய்க் காட்டுவதில் தனித்தன்மைமிக்க முற்போக்குவாதி இவர். பூவம்மா, பூ, அரும்பு, ரௌத்திரம், நாற்றல்ல அவள், புஞ்சை முதலிய கதைகள் சுட்டிக் காட்டத்தக்கவை. முற்போக்குத் தளத்தில் இருந்துகொண்டு கிராமிய மக்களின் உணர்வுகளையும், அவர்களது பன்முகச் சிக்கல்களையும் பரிவோடு எழுதிவருபவர்களில் குறிப்பிடத் தக்கவர்களாகப் பொன்னீலன், அசுவகோஷ், தனுஷ்கோடி இராமசாமி, ஜெயந்தன், சோ. தருமன், சி.ஆர். ரவீந்திரன், சோலை சுந்திரபெருமாள், பவா. செல்லதுரை, ச. தமிழ்ச்செல்வன், ராஜேந்திர சோழன், கந்தர்வன் முதலியோரைக் குறிப்பிடலாம்.

**எண்பதுகளின் தொடர்ச்சியாக**

நடுத்தர மக்களின் வாழ்க்கையைக் கலை நேர்த்தியோடு கூறவல்லவர்களாக மாலன், வண்ணதாசன், வண்ணநிலவன், பிரபஞ்சன், என்.ஆர்.தாசன், திருப்பூர் கிருஷ்ணன், விட்டல்ராவ் முதலியோர் விளங்குகின்றனர். இவர்கள் தத்தம் அநுபவங்களால் அழகியதாகக் கதைபின்னும் நேர்த்தியை அறிந்துவைத்திருப்பவர்கள். எண்பதுகளிலும் தொண்ணூறுகளிலுமாகத் தொடர்ந்து எழுதிவந்த இவர்கள் தம்மளவில் குறிப்பிடத்தக்க பங்களிப்பைச் செய்துள்ளனர்.

உத்திமுறைகளின் வழியே நேர்த்தியோடு அகமன உணர்வுகளைத் துல்லியமாக உணர்த்தும் போக்கு எண்பது

தொண்ணூறுகளில் மேலும் செழுமையுற்றது. அசோகமித்திரன், நீல.பத்மநாபன், சா. கந்தசாமி, கிருஷ்ணன் நம்பி, ஆதவன், மாதவன், சுப்ரமணிய ராஜு, நகுலன், சார்வாகன், காசியபன், கோபி கிருஷ்ணன், ஐராவதம், இரா. முருகன், நா. முத்துசாமி, திலிப்குமார், மா. ராஜேந்திரன், சங்கரநாராயணன், மா. அரங்க நாதன், நாஞ்சில் நாடன், நா. கிருஷ்ணமூர்த்தி, சுரேஷ்குமார் இந்திரஜித், இரா. முருகன், சுப்ரபாரதிமணியன், ஜெயமோகன், எஸ். இராமகிருஷ்ணன், விமலாதித்த மாமல்லன் முதலியோரை இவ்வகைப் போக்கிற்குச் சுட்டிக்காட்டலாம். இவர்களில் பெரும் பாலோர் முப்பது ஆண்டுகளாக எழுதிவருபவர்கள். இவர்களில் சிலர் இளைய தலைமுறையினர். தமிழ்ச் சிறுகதையுலகில் உருவ நேர்த்திக்கும், வடிவப்புதுமைக்கும் காரணமாக இருந்தவர்கள் இவர்கள்.

அசோகமித்திரன் எளிதில் பிடிபடாத வடிவத்தைக் கதையில் அழகுறச் செலுத்தி நுட்பமான உணர்வோடு படைத்தளிப்பவர். வடிவச் செழுமையுடன் தகவல்களை ஒன்று விடாமல் கூறிக் கதையை இயல்பாக நகர்த்திச் செல்பவர். புற உலகைச் செறிவோடு செதுக்கிக் காட்டும் இவர், நுணுக்கமான விவரங்களைத் தெளிவுடன் கூறும் பாங்கு கதைக்கு உண்மைத் தன்மை அளிப்பதாகும். மத்தியதர வர்க்கத்தையும், நகர்ப்புற வாழ்க்கையையும் சிறுசிறு வருணனையில் சிக்கனமான சொற் செட்டோடு உணர்த்தும் இவரது கதை கூறும் பாணி புறவயமானது. மஞ்சள் கயிறு, பார்வை, இந்திரா வீணைகற்றுக் கொள்ள வேண்டும், மணல் முதலியவை இவரது தனித்தன்மையைக் காட்டும். ஒரு குறிப்பிட்டதொரு சூழலில் தனிமனிதனின் உணர்வுகளை நினைவுச் சுழியில் காட்டுமாறு அமைவது நீல. பத்மநாபனின் கதைகள். புற உலகின் மெய்ம்மைகளை மனக் குகை ஓவியங்களாக வடித்துக்காட்டியவர் இவர். இயலாமையால் இற்றுப்போன உணர்வைச் சமூகஜீவி, விசாரணை ஆகிய கதைகளிலும், மரண பயத்தோடு கூடிய தனிமனித விரக்தியைக் காளியமர்த்தனம் என்ற கதையிலும், நம்பிக்கை வறட்சி நிலையைப் பதர், வீடு திரும்புதல் ஆகிய கதைகளிலும், வெளிப்படுத்திக் காட்டிய இவர், பன்முகப் பார்வையோடு பல கதைகளை எழுதி வருபவர்.

சமூகத்தில் தனிமனிதவுணர்வுகள் அகஉலக வட்டத்துக்குள் சுழன்று சுழன்று வருவதற்கு மன உளைச்சல், விரக்தி, சார்புத் தன்மையிலிருந்து அந்நியப்பட்டிருத்தல், பற்றுக்கடந்த நிலை, வாழ்க்கை நுகர்ச்சியில் கசப்பானவற்றை அசைபோடல் முதலிய

இயல்புகளைச் சிறுகதைப் பரப்பில் பரவலாகப் பதிவு செய்து வருபவர்கள் சா. கந்தசாமி, நகுலன், சார்வாகன் முதலியோர். சிறுகதைக்கு எளிமை ஒரு வடிவம் என்றால் புரிதல் என்பது அதோடு இணைந்த பார்வையுடையது. எளிமையும் புரிதலும் இல்லாமல் புதிராக உணர்த்தல் என்ற போக்குக் காணப்படுகிறது. இத்தகைய நிலையை அண்மைக்காலக் கதைகளில் சிலவற்றில் காணலாம்.

வடிவமற்ற வார்ப்பும், உள்ளடக்கத்தொனியும், இயற்கைக் காட்சியைச் சூழ்நிலையோடு ஒட்டித்தொடர்புபடுத்தும் துல்லிய இணைப்பும் கதை என்ற ஒன்று இல்லாத தன்மையும், சா.கந்தசாமியின் தனித்தன்மையாகும். நிகழ்ச்சியை ஒட்டியே சூழ்நிலையை அமைத்துச் செல்வதும், கடந்தகால எண்ணங்களை நினைவுச் சரமாகத் தொடுப்பதும் இவரது பாணியாகும்.

கிருஷ்ணன் நம்பி, அன்பு வயப்பட்ட நெஞ்சங்களில் நெகிழ்ச்சியை ஏற்படுத்தும் கதைகளை எழுதியவர். அகஉலகையும் புற உலகையும் தனித்தன்மையோடும் நேர்த்தியான பின்னணியில் உணர்த்தி இரக்கப்படவைப்பவர். காணாமல் போன அந்தோணி, மருமகள் வாக்கு, நைவேத்யம் முதலிய கதைகள் இவ்வகையின. வண்ணதாசன் கலையழகோடு எழுதிவருபவர். புறஉலகச் சித்திரிப்பை நுட்பமாகச் சொல்லும் திறம் தெரிந்த இவர், அதனைப் பாத்திர வார்ப்பில் மெருகோடு கூறுபவர். காட்சி வருணிப்பும் இவரிடம் உண்டு. தனிமை, பறப்பதற்கு முன் கொஞ்சம் முதலிய கதைகள் குறிக்கத்தக்கன. சொற்சிக்கனத்தோடு மென்மையான உணர்வுகளை மிக நுட்பமான முறையில் செழுமைப்படுத்தி உணர்த்தும் திறனை வண்ணநிலவனிடம் காணலாம். தொனிப் பொருள் இவரது தனிச்சிறப்பு.

ஆதவன், வடிவ நேர்த்தியோடு கதை சொல்லத் தெரிந்தவர்; கணபதி ஒரு கடை நிலை ஊழியன், ஒரு பழைய கிழவர் ஒரு புதிய உலகம் முதலியவை குறிப்பிடத் தகுந்த கதைகளாகும். மாதவன், நகுலன் ஆகியோர் திருவனந்தபுரத்தைக் களமாகக் கொண்டு எழுதி வருபவர்கள். நடுத்தரக் குடும்பங்களின் உணர்வுகளை வடித்துக் காட்டும் இவர்களிடம், மலையாள நடைமுறைச் சாயலைக் காணமுடிகிறது. மாதவனிடம், மனித வாழ்வின் எதார்த்தம் மானிட நேயத்தோடும் எளிமை கலந்த நடையோடும் சொல்லப்படுவதைக் காணலாம்.

மாலன் புதிய கதைக்களன்களைத் தேர்ந்து தனிமனித உணர்வுகளை இரக்கத்தோடு படைத்துக் காட்டியவர்.

வாழ்க்கைச் சிக்கலை எதிர்கொள்ள வேண்டிய இளைஞர்களைக் கண்ணோட்டம் செய்யும் போக்கு இவரது தனித்தன்மை. அழகியல் சார்ந்த தன்மையிலும் கதை எழுதத் தெரிந்தவர்.

மத்திய தர வாழ்க்கை முறைகளை உணர்வோட்டமாகப் படைத்துத் தமக்கென ஓர் அடையாளத்தைக் கொண்டுள்ளவர் திலிப்குமார். கதையின் ஒருமையுணர்வு சிறிதும் தடைபடாமல் எழுதும் இவரின் பாத்திரங்கள் மிக இயல்பானவை. மூங்கில், கடவு முதலிய தொகுதிகளில் காணப்படும் கதைகளைக் குறிப்பிடலாம். கோபி கிருஷ்ணன், அன்றாட வாழ்வின் நெருக்கடியில் மனிதன், எதிர் கொள்ளும் நிகழ்ச்சிகளை நுட்பமாக வெளிப்படுத்துபவர். மனப்பிறழ்ச்சி கொண்டோர் மீது தன்னிரக்கப் பார்வையை வெளிப்படுத்தியிருப்பது இவரது தனித்தன்மை. மதவுணர்வுகளை எள்ளல் சுவையோடு இழையோட விடும் இவரிடம் சமூக மதிப்பீடுகளுக்கு அப்பாற்பட்ட எண்ணங்களைக் காணலாம்.

மனித உறவுகளால் ஏற்படும் நெருடல்களைச் சுப்ரபாரதி மணியன் வெளிப்படுத்தத் தெரிந்தவர். அநுபவங்களைக் கதைப் படுத்தும் லாவகம், அகவுணர்ச்சியில் சித்திரிப்பு, இயல்பான வாழ்க்கைப் போக்கு, எதார்த்த தளம் இவற்றைப் பிரதிபலிக்கும் கதைகளை எழுதிவருபவர். மாறுதடம், வழித்துணைவன், வாக்கு, அப்பா, இன்னொரு முறை, மௌனம், பகல் முதலியன சுட்டிக் காட்டத்தக்கன. வட்டாரப் பாங்குடன் நிகழ்ச்சியைச் சொற் சித்திரமாகத் தீட்டுபவர் நாஞ்சில் நாடன். வேளாண்குடி மக்கள், தனிப்பட்ட மனிதர்கள் ஆகியோரது உணர்வுகளைப் படம் பிடிப்பவர். பேய்க்கொட்டு, விரதம் முதலிய கதைகள் சுட்டிக் காட்டத் தகுந்தவை. பல்வேறுபட்ட பரிமாணங்களோடு அகப்புற உணர்வைக் காட்சிப்பட எழுதுபவர் பாவண்ணன். இரவு, வதை, முள், கத்தி முதலிய் கதைகள் சுட்டிக்காட்டத்தக்கன.

மன உணர்ச்சிகளைக் குறியீடாகவும், காட்சிப்படிம மாகவும் விவரிப்பவர் ந.முத்துசாமி. பாலுணர்ச்சிச் சிக்கல், உள்மனத் தேடல், சுமையில் அழுந்தும் அவலம் ஆகியவற்றை உள்வியல் சார்ந்து எழுதக்கூடிய இவர், மனப்பதிவியல் முறையிலான தன்மையில் சிறுகதை படைத்தவர். இழப்பு, நீர்மை, யார் துணை, சப்பாத்திப் பழம் முதலியவை குறிப்பிடத்தக்க கதைகள். இவரது கதைகளில் நாடகப் பாங்கும் மிளிரும்.

மா. அரங்கநாதன், தனிப்பட்ட மனிதர்களின் அகவுணர்வை வித்தியாசமாகக் காட்டுபவர். புதிர்த்தன்மை ஊடுருவி நிற்கும் படியான கதைகள் சிலவற்றை எழுதியிருப்பினும், அவை புரிதல்

தன்மை உடையன. எல்லாக் கதைகளிலும் ஒரே பெயருடைய (முத்துக்கருப்பன்) பாத்திரம் வருவதும், பல்வேறு பரிமாணங்களில் அப்பெயரைச் சுற்றியே நிகழ்ச்சிகள் இடம்பெற்றிருப்பதும் இவரது தனித்தன்மையாகும். 'வீடுபேறு' என்ற கதைத் தொகுதி இவ்வகையினது.

ம. இராசேந்திரன் இயல்பாகக் கதை சொல்லத் தெரிந்தவர். கிராம, நகர்ப்புற வாழ்வோட்டங்களைக் காலத்திற் கேற்றவாறு மாற்றிக் கொள்ளும் மனிதர்களையும், மனத்தின் மறுதலையான போக்கை அகப்புறச் சித்திரிப்போடும், சமூக முரணியல் சூழ்நிலையோடும் எழுதும் திறன் கொண்டவர். சோகம், அந்திப்பொழுதில், பட்டா, ரத்தம் முதலிய கதைகள் நேர்த்திமிக்கன.

**தொண்ணூறுகளில்...**

தீவிரமான தளத்தில் சிறுகதை உலகம் இயங்கி வருகிறது. கதையைக் கதையாக எழுதாமல் அதனை நேர்த்தியானதொரு சிற்பம்போலச் செதுக்கும் பாணி பின்பற்றப்படுகிறது. உருவ அழகு கிடைத்த அளவிற்கு உள்ளடக்கம் பற்றிய சிந்தனை அரிதாயிற்று. படிப்பதற்கு எந்தளவிற்குக் காலம் ஆகிறதோ அதே அளவிற்குக் கதையின் புரிதல் தன்மைக்கும் ஆகிறது. கற்பனையும் போலிப்பூச்சுமற்ற கதைகள் ஒருபுறம். அதே சமயம் கதையில் கதையை வெளியேற்றல், தொன்மத்தை மீட்டுருவாக்குதல், கதைப் பின்னலை எளிதில் புலப்படாவண்ணம் பின்னுதல், கதையில் மையம் என்ற ஒன்று இல்லாமை, படிமங்களை அடுக்கிச் செல்லுதல் முதலிய பின் நவீனத்துவப் பாணிகள் கொண்ட சிறுகதைகள் அண்மைக்காலப் போக்காகும்.

புதிய அணுகுமுறைகளான இப்போக்கு அண்மைக் காலத்தில் மேல்நாட்டு வரவாகும். இடாலோ கர்ல்வினோ, லூயி போர்ஹே, காப்ரியல் கார்சியா மார்க்வஸ் முதலிய மேற்கத்திய படைப்பாளர்களின் பாதிப்பு, தமிழ்ச் சிறுகதை உலகின் அண்மைய பதிவாகும். சாருநிவேதிதா, கௌதம சித்தார்த்தன், கோணங்கி, ஸ்ரீராம், ரமேஷ் பிரேம், ச. ராசநாயகம் முதலியோர் படைத்துள்ள சிறுகதைகள் இவ்வகையின. இவர்கள்பின் நவீனத்துவ வார்ப்பில் தம் படைப்புகளைப் படைத்து வருபவர்கள். இவற்றில் புரிதல் தன்மை என்பது கேள்விக்குறியாக இருப்பினும், கதை கூறும் மரபிலிருந்து மாறுபட்டு, புதிய கோணங்களில் கதைகள் வெளிவரவேண்டும் என்ற வேட்கை நிறைந்தவர்களாக இத்தகைய படைப்பாளிகள் உள்ளனர். சாருநிவேதிதா, கௌதம சித்தார்த்தன்

பின் நவீனத்துவப் படைப்பாளிகள். மரபினைக் கட்டுடைத்தல், மாயாவாத நடப்பியல் ஆகிய தன்மைகளில் இயங்குவன பின் நவீனத்துவப் படைப்புகள். சாரு நிவேதிதா எழுதிய 'நேநோ' சிறுகதைத் தொகுதியிலும், கௌதம நீலாம்பரனின் 'பச்சைப் பறவைகள்' என்ற சிறுகதைத் தொகுதியிலும் இவ்வாறான தன்மையில் கதைகள் புனையப்பட்டுள்ளன. கோணங்கியின் பொம்மையில் இடைபடும் நகரம், உப்புக்கத்தியில் மறையும் சிறுத்தை முதலிய சிறுகதைகளும் குறிக்கத்தக்கன.

தொண்ணூறுகளின் இறுதியில் வாழ்க்கைப் போக்கின் பல சிக்கல்களும், அதீதமான மனவுணர்வுகளின் வெளிப்பாடும், மனப்பிறழ்வின் வியத்தகு மாயக் காட்சிகளும் வக்கிரமான பாலியல் சிதைவும் புதிய சூழ்நிலைகளால் இருப்பில் நிலை கொள்ளாத தவிப்பும், பரபரப்புமான போக்கும், தனிமனித கூட்டுக்குடும்பச் சிதைவும், இயந்திர நாகரிகத்தின்பாதிப்பும், ஆண் பெண் உறவுகளில் ஒருவரையொருவர் எதிர் கொள்ளும் ஆதிக்கவுணர்வும் சமூக, அரசியலின் மீதான விமர்சனங்களும், சாதியப் போக்கும் சிறுகதையின் கருப்பொருள்களிலும் பின்னலிலும் காணப்படுகின்றன.

தொண்ணூறுகளில் குறிப்பிடத்தக்க மாற்றங்களாகப் பெண்ணியம், தலித்தியம் தொடர்பான கதைகள் வெளிவந்தன. முற்போக்குத் தளத்தில் இடதுசாரி போக்குடைய இளைஞர் சிலர், உள்ளடக்கத்திற்கு அழுத்தம் கொடுத்துக் கதைகள் எழுதி வந்துள்ளனர். கந்தர்வன், தேனீ, சீருடையான், பரிணாமன், ஜீவகாருண்யன், வேல. இராமமூர்த்தி, தமிழ்ச்செல்வன் முதலியோர் முற்போக்குத் தளத்தில் எழுதி வருகின்றனர். தலித்தியப் பார்வையில் எழுதிவருபவர்களில் குறிப்பாகப் பெருமாள் முருகன், சிவகாமி, விழி. பா. இதயவேந்தன், சுதாகர், இந்திரன், பிரதீபா ஜெயசந்திரன், பாமா, அழகிய பெரியவன்; இமயம், அபிமானி முதலியோரைச் சுட்டிக்காட்டலாம்.

இசுலாம், கிறித்துவ மதத்தைச் சார்ந்த எழுத்தாளர்கள் சிலர் தொடர்ந்து எழுதிவருவதைக் காணமுடிகிறது. இவர்களின் பங்களிப்பும் குறிப்பிடத்தக்கது. இசுலாமியச் சிறுகதை உலகில் குறிப்பிடத்தக்க முன்னோடிகளாக மஹதி, மகுதூம், ஆர்.பி.எம். கனி, ஜே.எம். சாலி, நூர் முதலியோரைக் குறிப்பிடலாம். இவர்களைத் தொடர்ந்து ஏ.ஏ. ரஷீத் என்பவரும் சுட்டிக்காட்டத் தக்கவர் ஆவார். அடுத்த தலைமுறையினராகச் சிலரைக் கருதலாம். களந்தை பீர்முகமது, தோப்பில் முகமது மீரான்,

மல்லாரி, நத்தர்ஷா முதலியோர் தொடர்ந்து தம் கதைகளில் இசுலாமியப் பின்னணியை அடிப்படையாகக் கொண்டு ஆழமான சிறுகதைகளைப் படைத்துள்ளனர்.

கிறித்துவச் சமயப் பின்னணியைக் கொண்டு அதில் புதுமையும் மாற்றமும் விழையும் எழுத்தாளர்களாக ஆர்.எஸ்.ஜேக்கப், டேவிட் சித்தையா, ஐசக் அருமைராசன், கார்த்திக் ராஜ்குமார் முதலியோர் விளங்குகிறார்கள்.

அண்மைக்காலக் கதைகள் பெரும்பாலும் சமூகக் கண்ணோட்டத்தை எடுத்துரைத்தாலும், உருவ 'நேர்த்தியை விரும்பும் சிறுகதையாசிரியர்களின் போக்கைக் கவனத்தில் கொள்ள வேண்டியிருக்கிறது. செதுக்கிய சிற்பம் போன்ற நடையில் சுகமான உணர்வைக் காட்டுவதில் அக்கறை கூடியிருக்கிறது. மனிதநேயக் குரல் அவ்வப்போது ஓங்கிய குரலில் எதிரொலிக்கத்தான் செய்கிறது.

ஊடகங்களின் மூலமாகப் படைப்போர் படிப்போர் என்பது தற்போது காண்போர் என்ற அளவில் கதைகளைக் காட்சிப்படுத்தும் தொலைக்காட்சி, இணையம் போன்றவை கதைகளை ஒளிபரப்பத் தொடங்கியுள்ளன.

# இலங்கை

## துரை. மனோகரன்

தமிழ்நாட்டுக்கு அடுத்த நிலையில் சிறுகதை வளர்ச்சிக்கான பெரும் வாய்ப்பினைக் கொண்டதாக இலங்கை விளங்குகின்றது. தமிழ்நாட்டில் நாவல் தோன்றி வளரத் தொடங்கிய சில ஆண்டுகளுக்குள்ளேயே இலங்கையிலும் நாவல் தோன்றத் தொடங்கிவிட்டது. அதேபோன்று, சிறுகதையைப் பொறுத்த வரையிலும், தமிழ்நாட்டில் அவ்விலக்கியம் தோன்றி வளரத் தொடங்கிய சில ஆண்டுகளின் பின்னர், இலங்கையிலும் அது தோற்றம் பெறத் தொடங்கிவிட்டது. தமிழ்நாட்டில் சிறுகதைத் துறையில் ஏற்பட்ட வளர்ச்சி நிலைகள் இலங்கைச் சிறுகதையையும் பாதித்தன. குறிப்பாக, மணிக்கொடிக்கால எழுத்தாளர்கள் இலங்கைச் சிறுகதைப் படைப்பாளரிடத்திற் கணிசமான தாக்கத் தினை ஏற்படுத்தினர். இலங்கையின் சிறுகதை எழுத்தாளர் சிலர் அவ்விலக்கியத்தின் சில எல்லைகளைத் தொட முயன்றுள்ளனர். கதைப்பொருளிலும், கதை சொல்லும் முறையிலும் காலத்துக்குக்

காலம் இலங்கைத் தமிழ்ச் சிறுகதைகள் வளர்ச்சிநிலைகளை எட்டிவந்துள்ளன.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் இலங்கையில் பண்பாட்டுத் துறையிலே விழிப்புணர்வு ஏற்படத் தொடங்கியது. இதனோடு இணைந்ததாக, ஆங்கிலேய ஆட்சியின் காரணமாக ஆங்கிலமொழி முதன்மை பெற்றது. ஆங்கிலத்தின் மூலம் மேலைத்தேயப் பண்பாட்டு அம்சங்கள் பரவத் தொடங்கின. ஆங்கிலக் கல்வி முதன்மை பெறத் தொடங்கிய யாழ்ப்பாணத்தில் இந்த உத்வேகம் அதிகமாகக் காணப்பட்டது. ஆங்கிலத்தின்மூலம் மேல்நாட்டு இலக்கியப் பரிச்சயம் ஏற்படத் தொடங்கியதால், புனைகதைத் துறையிலும் ஈடுபாடு காட்டப்பட்டது.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியில் யாழ்ப்பாணத்தில் வெளிவந்த 'உதயதாரகை' என்ற பத்திரிகையின் ஆசிரியராக விளங்கிய ஆர்னல்ட் சதாசிவம்பிள்ளை நன்னெறிக் கதாசங்கிரகம் என்ற பெயர் கொண்ட சிறிய கதைகளின் தொகுதியை வெளியிட்டார். 1875இல் பண்டிதர் சந்தியாகோ சந்திரவர்ணம்பிள்ளையின் கதாசிந்தாமணி என்னும் கதைத் தொகுதி வெளிவந்தது. மரியாதை இராமன் கதை, கோமுட்டி கதை, மூடர் கதை போன்ற ஏழு கதைகளை அது உள்ளடக்கி யுள்ளது. தம்பிமுத்துப்பிள்ளை என்பவரின் நூற்றொரு கதைகள் அடங்கிய ஊர்க்கதைகள் என்னும் கதைத் தொகுதியும் பிரசுரமானது. ஐதுரூஸ் லெப்பை மரைக்காயரின் ஹைதர்ஷா சரித்திரம் என்ற கதைத் தொகுதியும் வெளியிடப்பட்டது. ஆயினும், இவற்றைச் சிறுகதைகள் என்று கூறுவதற்கில்லை.

இருபதாம் நூற்றாண்டில் ஆரம்பத்தில் தமிழ்நாட்டில் சிறுகதை எழுதும் முயற்சிகள் ஏற்பட்டதைத் தொடர்ந்து, 1930களில் இலங்கையிலும் அவ்வாறான முயற்சிகளில் எழுத்தாளர்கள் ஈடுபாடு கொள்ளத்தொடங்கினர். தமிழ்நாட்டு எழுத்தாளர்களின் பாதிப்பு, தமிழ்நாட்டுப் பத்திரிகைகள், சஞ்சிகைகளின் தாக்கம், அவை இலங்கை எழுத்தாளர்களுக்கு வழங்கிய களம் முதலானவை சிறுகதை எழுதுவதில் இலங்கை எழுத்தாளர்களுக்கும் உத்வேகத்தினை ஏற்படுத்தின.

இருபதாம் நூற்றாண்டில் இலங்கைத் தமிழில் சிறுகதையின் மூலவர்களாக நால்வரைக் குறிப்பிடலாம். கோ.நடேசய்யர், இலங்கையர்கோன், சி. வைத்தியலிங்கம், சம்பந்தன் ஆகிய இந் நால்வரில் காலத்தால் முந்தியவராக நடேசய்யர் விளங்குகின்றார். அவர் 'திரு. இராமசாமி சேர்வையின் சரிதம்' என்னும்

சிறுகதையை 1931இல் எழுதினார். அவரது ஒரேயொரு சிறுக்தையே இப்போது கிடைக்கின்றது.[1]

ஆரம்ப காலகட்டத்தில் வேறு சிலரும் சிறுகதை முயற்சிகளில் ஈடுபட்டனர். எனினும், இலங்கைத் தமிழ்ச் சிறுகதைகளின் ஆரம்ப வளர்ச்சியில் இலங்கையர்கோன், சி. வைத்தியலிங்கம், சம்பந்தன் ஆகியோர் முன்னோடிகளாக விளங்குகின்றனர். சிறுகதையின் உருவம், உள்ளடக்கம், தொடர்பான பிரக்ஞையோடு அவர்கள் எழுதினர்.

இலங்கையர்கோன் (ந. சிவஞானசுந்தரம்) ஏறத்தாழ முப்பது சிறுகதைகளை எழுதினார். கு.ப.ரா.வின் எழுத்துக்களால் மிகவும் கவரப்பட்டவர் இவர். புராண இதிகாசக் கதைகளையும், வரலாற்றுச் சம்பவங்களைக் கொண்ட கதைகளையும், சமூகச் சார்பான கதைகளையும் அவர் எழுதியுள்ளார். இலங்கையர் கோனின் உரைநடை தனித்துவம் வாய்ந்தது. கதையின் களத்துக்கும், பாத்திரப் போக்குக்கும் ஏற்பப் பேச்சுவழக்கைப் பயன்படுத்தும் திறனையும் அவர் பெற்றிருந்தார். அவரது வெள்ளிப் பாதசரம், வஞ்சம், மச்சான், கடற்கரைக் கிளிஞ்சல் முதலிய சிறுகதைகள் அவரின் குறிப்பிடத்தக்க படைப்புக்களாக விளங்குகின்றன. அவை அவரது எழுத்தாற்றலையும் சிறப்பாக இனங்காட்டுகின்றன.

சி. வைத்தியலிங்கம் ஆர்ப்பாட்டமின்றிக் கதைகூறும் திறன் வாய்ந்தவர். தமக்கென வாய்த்த மென்மையான ஒரு நடையினை அவர் பயன்படுத்தினார். ஏறத்தாழ இருபத்தைந்து சிறுகதைகளை அவர் எழுதியுள்ளார். வைத்தியலிங்கத்தின் பாற்கஞ்சி, நெடுவழி, மூன்றாம் பிறை, கங்காகீதம் முதலிய சிறுகதைகள் குறிப்பிடத் தக்கனவாக விளங்குகின்றன. சில விமர்சகர்கள் இலங்கையின் முன்னோடிச் சிறுகதை எழுத்தாளர்களில் சி. வைத்தியலிங்கத்தின் கதைகளைச் சிலாகித்துக் கூறுவர்.[2]

சம்பந்தன் (திருஞானசம்பந்தன்) ஏறத்தாழ இருபது சிறுகதை களையே எழுதினாலும், இலங்கைச் சிறுகதைத் துறையில் தமக்கெனக் குறிப்பிடத்தக்க இடத்தைத் தக்கவைத்துக் கொண்டுள்ளார். அவரின் கதைகளில், சம்பவங்களை விட மன உணர்வுகளே அதிக அழுத்தம் பெறுகின்றன. ஆழமான மன வுணர்வுகளைத் தமது எழுத்தில் கொண்டும் திறமை வாய்ந்தவ ராக அவர் விளங்குகின்றார். சம்பந்தனின் கதைகளில் ஓரிரு பாத்திரங்களே உலாவுகின்றன. ஆண்-பெண் உறவை வேறுபட்ட கோணத்தில் நோக்க முனைந்த ஓர் எழுத்தாளர், அவர். தமிழ்

நாட்டில் மௌனி, லா.ச. ராமாமிர்தம் ஆகியோரின் எழுத்துக்கள் பிரசுரமாவதற்கு முன்னரே சம்பந்தனின் சிறுகதைகள் தமிழ் நாட்டிற் பிரசுரமாகத் தொடங்கிவிட்டன என்பது குறிப்பிடத் தக்கது.[3] சம்பந்தனின் எழுத்துக்களின் சாயை மௌனியிடத்திலும், லா.ச.ரா. வின் நடையிலும் காணப்படுகிறது எனலாம். அவள், துறவு ஆகிய சிறுகதைகள், சம்பந்தனின் படைப்புகளில் தலைசிறந்தவையாகக் காணப்படுகின்றன.

மேற்குறிப்பிட்ட இலங்கையர் மூவரும் தேசியரீதியான சிந்தனையோடு தமது சிறுகதைகளைப் படைத்தவர்கள் என்று கூறுவதற்கில்லை. இம்மூவரும் தமிழ்நாட்டுப் பத்திரிகைகளான கலைமகள், கிராம ஊழியன் ஆகிய தமிழ்நாட்டுச் சஞ்சிகை களிலும் எழுதினர். அதனால், தமிழ்நாட்டு வாசகர்களுக்கும் ஏற்றவகையில் இவர்கள் தமது சிறுகதைகளை எழுதினர். ஆயினும், இலங்கையர்கோன், சி. வைத்தியலிங்கம் ஆகியோரின் சிறுகதைகள் சில 'இலங்கைச் சிறுகதைகள்' என்று சுட்டக்கூடிய முறையில் மண்வாசனையுடன் எழுதப்பட்டுள்ளன.

1930களில் இலங்கையில் அரசியல் ரீதியான தேசிய விழிப்புணர்வு தோன்றத் தொடங்கியது. சர்வசன வாக்குரிமையும் மக்களுக்கு வழங்கப்பட்டது. இந்தியாவில் வளர்ந்து வந்த காந்திய இயக்கம் இலங்கையிலும் தாக்கத்தை ஏற்படுத்தியது. தமிழ்நாட்டு டனான இலக்கியத் தொடர்பும் நவீன இலக்கியச் சிந்தனைகளை இலங்கையில் வளர்த்தது.

இந்நிலையில், 1930இல் தோன்றிய ஈழகேசரி என்னும் வார இதழ், 1938 முதல் நவீன இலக்கியங்களுக்கும் இடமளித்தது. அவ்வாண்டில் சோ. சிவபாதசுந்தரம் அப்பத்திரிகையின் ஆசிரியர் ஆகியதிலிருந்து, ஈழகேசரி சிறுகதைகளுக்கும் முக்கியத்துவம் கொடுக்க ஆரம்பித்தது. இலங்கையர்கோன், சி. வைத்தியலிங்கம், சம்பந்தன் ஆகியோரும் ஈழகேசரியில் எழுதினர். அப்பத்திரிகை பாடசாலை மாணவர்களுக்காகக் கல்விஅனுபந்தம் என்ற இணைப்பையும் வெளியிட்டது. அப்பகுதியிலே மாணவப் பருவத்திலிருந்து எழுதிவந்த சிலர், பிற்காலத்திற் பிரபல சிறுகதை எழுத்தாளர்களாக மலர்ந்தனர் அ.செ. முருகானந்தம், அ.ந. கந்தசாமி, தி.ச. வரதராசன், கனக. செந்திநாதன் முதலியோர் அத்தகையவர்கள். ஈழகேசரிப் பத்திரிகையில் சில சிறந்த சிறுகதைகளும் பிரசுரமாகின.

ஈழகேசரி இளைஞர் சங்கத்தில் உறுப்பினர்களாக இருந்த சிலரும், வேறு சில இலக்கிய நண்பர்களும் இணைந்து,

தமிழிலக்கிய மறுமலர்ச்சிச் சங்கம் என்ற பெயரில் 1943இல் ஓர் எழுத்தாளர் சங்கத்தை ஏற்படுத்தினர். இலங்கையில் உருவாக்கப் பட்ட முதலாவது எழுத்தாளர் சங்கம் இதுவென்றும் கருதப்படுகிறது. இவர்கள் மறுமலர்ச்சி என்னும் சஞ்சிகையையும் வெளியிட்டனர். ஆரம்பத்தில் கையெழுத்துச் சஞ்சிகையாக இருந்த மறுமலர்ச்சி, 1946முதல் மாத சஞ்சிகையாக அச்சுருவில் வெளிவர ஆரம்பித்தது. "தமிழகத்தில் சிறுகதைத் துறைக்கு மணிக்கொடி எப்படி புத்தூக்கம் அளித்ததோ அதேபோல ஈழத்தில் சிறுகதைத் துறைக்கு மறுமலர்ச்சி புதியதொரு உத்வேகத்தை அளித்துள்ளது"[4] இச்சஞ்சிகையில் இலங்கையர்கோன், சம்பந்தன், அ.செ. முருகானந்தம், சு. வேலுப்பிள்ளை, வரதர், சொக்கன், இராஜ நாயகன், தாழையடி சபாரத்தினம், அ.ந. கந்தசாமி ஆகியோர் சிறுகதைகள் எழுதி யுள்ளனர். தமிழக எழுத்தாளர் வல்லிக்கண்ணனும் இச் சஞ்சிகையில் சிறுகதையொன்றை எழுதியுள்ளார்.

"மறுமலர்ச்சி எழுத்தாளர்கள்" எனப் பெயர் சூட்டப்பட்ட இவ்வெழுத்தாளர்கள் யாழ்ப்பாணத்தைப் பகைப்புலமாகக் கொண்டு, அப்பிரதேச வாழ்க்கைப் பிரச்சினைகளைத் தமது சிறுகதைகள் மூலம் வெளிப்படுத்தினர். இலங்கையின் வாழ்வியலை இந்நாட்டுச் சிறுகதைகள் பிரதிபலிக்க வேண்டும் என்பதில் அதிக அக்கறை கொண்டவர்களாக இம் மறுமலர்ச்சி எழுத்தாளர்கள் விளங்கினர். அ.செ. முருகானந்தம், அ.ந. கந்தசாமி, வரதர் ஆகியோர் மறுமலர்ச்சிக் குழுவின் முக்கிய சிறுகதையாசிரியர்களாக விளங்கினர். பேராசிரியர் கா. சிவத்தம்பி குறிப்பிடுவது போன்று, "இலங்கைக்கெனத் தனிச் சிறுகதை மரபு தோன்றுவதற்கான வித்து இக்காலப் பிரிவில் இடப்படுகின்றது"[5] எனலாம்.

1948இல் இலங்கை சுதந்திரம் பெற்றதெனினும், 1950கள் காலகட்டத்திலிருந்தே புதிய மாற்றங்கள் தெரியத் தொடங்கின. வரவேற்கத் தகுந்த இம்மாற்றங்களினூடே பேரினவாதமும் இலங்கையின் அரசியலிலும், சமூகக் கொள்கைகளிலும் தலை தூக்கியது. அதேவேளை, சமூக ஏற்றத் தாழ்வுகள் தொடர்பான சமூக விழிப்புணர்வும் அக்காலகட்டத்தில் ஏற்படத்தொடங்கியது. சமூகத்தின் பல்வேறு மட்டங்களினின்றும் புதிய எழுத்தாளர்கள் தோன்றத் தொடங்கினர். அரசியல் சிந்தனையும், சமூக மாற்றத்தை விரும்பும் ஆர்வமும் கொண்டவர்களாக இவர்கள் விளங்கினர். சுதந்திரன், தேசாபிமானி போன்ற பத்திரிகைகள் இவர்களது இலக்கிய முயற்சிகளுக்குக் களம் அமைத்துக் கொடுத்தன.

ஏறத்தாழ, ஐம்பதுகளின் நடுப்பகுதியில் இருந்து, இலங்கைக்கெனத் தனித்துவமான இலக்கியப் பாரம்பரியத்தை வளர்த்தெடுக்க வேண்டும் என்ற உணர்வு வளர்ச்சிபெறத் தொடங்கியது. இத்தகைய காலகட்டத்தில் தினகரன் பத்திரிகையின் ஆசிரியராக க. கைலாசபதி பதவியேற்றார் (1959-1960). அவரது முயற்சியினால் தினகரன் இலங்கைச் சிறுகதை எழுத்தாளர் பலரை வளரச் செய்தது. புதியவர்கள் பலரும் சிறுகதைத் துறையில் ஈடுபடக் கைலாசபதி வழிகாட்டினார். பிற்காலத்தில் மலையகத்தின் சிறந்த சிறுகதை எழுத்தாளர்களில் ஒருவராக விளங்கிய என்.எஸ்.எம். ராமையாவைச் சிறுகதைத் துறையில் தினகரன் மூலம் அறிமுகப்படுத்தியவர், கைலாசபதியாவார்.

இத்தகைய காலகட்டத்தில் புதிய வீச்சுடன் சிறுகதைத் துறையில் பலர் புகுந்தனர். டொமினிக் ஜீவா, டானியல், எஸ். பொன்னுத்துரை, செ. கணேசலிங்கன், என்.கே. ரகுநாதன், நீர்வை பொன்னையன், வ.அ. இராசரத்தினம், நந்தி, அ. முத்துலிங்கம், மு. தளையசிங்கம், பித்தன், அ.ஸ. அப்துல்ஸமது, காவலூர் ராசதுரை, கே.வி. நடராசன் முதலானோர் இவ்வகையிற் குறிப்பிடத் தக்கவர்கள். இவர்களில் ஒருசாரார் மார்க்சீய அடித்தளத்தில் நின்று சிறுகதை எழுதியவர்கள். எஸ். பொன்னுத்துரை ஆரம்ப காலத்தில் மார்க்சீய ஆர்வலராக இருந்து, காலப்போக்கில் தம் போக்கை மாற்றிக் கொண்டார். மார்க்சீய அடிப்படையில் நின்று எழுதியோர் சமூக, பொருளாதாரப் பிரச்சினைகளுக்கு முக்கியத்துவம் வழங்கினர். இவர்களது படைப்புக்கள் பற்றி விமர்சகர் பேராசிரியர் கா. சிவத்தம்பி பின்வருமாறு குறிப்பிடுகின்றார்.

> "டானியல், ஜீவா ஆகியோர் சமுதாயத்தில் நிலவும் சாதிக் கட்டுப்பாட்டால் ஏற்படும் துன்ப நிலையினைக் காட்டும் அழகிய கதைகள் எழுதினர். ஜீவாவின் கதைகளில், சமுதாய அநீதியால் உண்டாகும் உணர்வுத் தாக்கம் சிறப்புற எடுத்துக் கூறப்படும். டானியலோ சமுதாய ஒழுங்கீனத்தை மிக நுண்ணிதமான முறையில் விவரித்துச் சீர்திருத்த உத்வேகத்தைக் கிளப்புவார். ரகுநாதனின் கதைகள் சமுதாய ஒழுங்கீனத்தையும் ஆத்திரமுற்ற ஆனால் அங்கதப் பண்பு மிகுந்த ஒருவரின் கண்ணோட்டத்தையும் காட்டிநிற்கின்றன. கீழ்நிலை மத்தியதர வாழ்க்கையிற் கிடந்த சோகத்தை

**மிகச் சிறப்பாக வெளியிட்டார் காவலூர் ராசதுரை. யாழ்ப்பாணத்து வாழ்க்கையிற் காணப்படும் இன்னல்களைக் காட்டினார் கணேசலிங்கன். இவ்வாறாக ஈழத்துச் சிறுகதை பொருளால் வளம் பெற்றது."[6]**

மார்க்சீயத்தை ஏற்றுக் கொள்ளாத மற்றையோர், இலக்கியவாதிக்குரிய மனிதாபிமானக் கண்ணோட்டத்தில் சமுதாயப் பிரச்சினைகளை நோக்கினர். வ.அ. இராசரத்தினம், எஸ். பொன்னுத்துரை, மு. தளையசிங்கம் போன்றவர்கள் மார்க்சீய எழுத்தாளர்களாக இல்லாவிடினும், இலங்கைச் சிறுகதை வளர்ச்சிக்கு வளம் சேர்த்தவர்களாக விளங்குகின்றனர். இராசரத்தினத்தின் தோணி, பொன்னுத்துரையின் தேர் போன்ற சிறுகதைகள் உயர்தரப் படைப்புக்களாக விளங்குகின்றன.

ஐம்பது அறுபதுகளில் இலங்கையின் சிறுக்கதைத்துறை ஒரு புதிய பரிமாணத்தைப் பெற்று வளரத் தொடங்கியது. இன நெருக்கடிகள், சமுதாய விழிப்புணர்வு, மார்க்சீயச் சிந்தனைகள் முதலியவற்றின் காரணமாகச் சிறுகதைத்துறையிலும் வளர்ச்சி நிலைகள் ஏற்பட ஆரம்பித்தன. இதிற் குறிப்பிடத்தக்க ஓர் அம்சம், அக்காலக்கட்டத்தில் மார்க்சீயத்தை ஏற்றவர்களிலும், எதிர்த்தவர்களிலும் சிலர் தரமான சிறுகதைகளை எழுதினர்.

ஐம்பது அறுபதுகளில் சிறுகதைத்துறையில் ஏற்படத் தொடங்கிய புதிய போக்கு அரசியல் விழிப்புணர்வும், சமுதாய நோக்கும் கொண்டதாக விளங்கியது. முற்போக்குச் சிந்தனை களோடு, தேசியம், மண்வாசனை ஆகியவையும் இணைந்து, சிறுகதையின் வளத்துக்கு உதவின. சிறுகதை வெறுமனே அழகியல் உணர்வை வழங்குவது மாத்திரமன்றி, அது சமுதாய விழிப்புணர்வை ஏற்படுத்தும் ஆக்க இலக்கியமும் ஆகும் என்னும் உணர்வு எழுத்தாளர் மத்தியில் அக்காலகட்டத் திலிருந்து உருவாகத் தொடங்கியது.

அறுபதுகளில் இலங்கைப் பல்கலைக்கழகங்களைச் சேர்ந்த படைப்பாளிகள் சிறுகதைத் துறையில் செலுத்திய ஆர்வமும் கவனத்துக்குரியது. 1960களில் பல்கலைக்கழகக் கல்வியைத் தமிழ்மொழி மூலம் பெறத் தொடங்கிய படைப்பார்வம் கொண்ட மாணவர் சிலர் சிறுகதைத் துறையிலும் ஈடுபடத் தொடங்கினர். செ. கதிர்காமநாதன், செங்கை ஆழியான், செ. யோகநாதன், யோ. பெனடிக்ற் பாலன், பவானி ஆழ்வார்ப் பிள்ளை, செம்பியன் செல்வன், குந்தவை போன்றோர் சிறுகதைத் துறையிற் பல்கலைக்கழகப் பங்களிப்பாளர்களாக விளங்கினர்.

அக்காலகட்டத்தில் பல்கலைக்கழகப் படைப்பாளர் சிலரின் சிறுகதைத் தொகுதிகள் சிலவும் வெளிவந்தன. இவர்களிற் சிலர் இன்றும் எழுத்துத்துறையில் ஈடுபட்டு வருகின்றனர்.

இதே காலகட்டத்தில் பல்கலைக்கழகங்களுக்கு வெளியிலும் குறிப்பிடத்தக்க சிறுகதை எழுத்தாளர் சிலர் சிறுகதையின் வளத்துக்கு உதவினர். தி. ஞானசேகரன், சண்முகம் சிவலிங்கம், மருதூர்கொத்தன், புலோலியூர் க. சதாசிவம், ஜோர்ஜ் சந்திர சேகரன் போன்றோர் இவ்வாறு சிறுகதைப் படைப்புத்துறையில் ஈடுபட்டவர்களாக விளங்கினர். அக்காலகட்டத்தில் பல்கலைக் கழகங்களுக்கு உள்ளேயும் வெளியிலும் சிறுகதைத்துறையில் ஈடுபட்டுவந்தவர்கள் புதியது படைக்கும் நோக்கும், தமது நெஞ்சங்களை நெருடிய சமுதாய அவலங்களையும், மன அவசங்களையும் சிறுகதை மூலம் வெளிப்படுத்தும் ஆர்வமும் மிக்கவர்களாக விளங்கினர். அறுபதுகளில் எழுதத் தொடங்கிய இவர்கள், எழுபதுகளில் மேலும் செழுமையுடன் எழுதினர்.

இலங்கையின் தமிழ்ச் சிறுகதை பற்றிக் கருத்துச் செலுத்தும் எவரும், அங்குள்ள மலையகப் பிரதேசத்தின் எழுத்து முயற்சிகள் பற்றி அக்கறை செலுத்தாதவராக இருக்கமுடியாது. பத்தொன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் இந்தியாவிலிருந்து கோப்பி, தேயிலை, இரப்பர் தோட்டங்களில் உழைப்பதற்காகக் கொண்டு வரப்பட்ட தொழிலாளர்கள், தமது கடினமான உழைப்பினால் இலங்கையின் பொருளாதார வளத்துக்கு உதவினர். அதேவேளை, அவர்களது வாழ்வியல் நிலைமை மிகவும் மோச மானதாக இருந்துவந்துள்ளது. அவர்களது பல்வேறு பிரச்சினைகள் பற்றி மலையகத்துக்கு உள்ளேயும் வெளியிலும் சில எழுத்தாளர்கள் எழுதி வந்துள்ளனர். ஆயினும், அறுபதுகளி லிருந்து ஆற்றல் வாய்ந்த புதிய எழுத்தாளர் பரம்பரையொன்று மலையகத்தில் தோன்ற ஆரம்பித்தது. சிறுகதை இவ்வெழுத் தாளர்களின் முக்கிய எழுத்து ஊடகமாக அமைந்தது. என்.எஸ்.எம். ராமையா, தெளிவத்தை ஜோசப், மலரன்பன், மாத்தளை வடிவேலன், மாத்தளை சோமு, மு. சிவலிங்கம் உட்படக் கணிசமான எழுத்தாளர்கள் சிறுகதைத்துறைக்குச் சிறந்த பங்களிப்பினை நல்கி வந்துள்ளனர்.

அறுபதுகளில் இலங்கையில் இடம்பெற்ற இலக்கியச் சர்ச்சைகளும் சிறுகதை வளர்ச்சி தொடர்பாகக் கருத்திற் கொள்ளத்தக்கவையாகும். அறுபதுகளின் ஆரம்பக்கட்டங்களில் பழமைபேண்வாதிகள் சிறுகதையை "இழிசினர் வழக்கு இலக்கிய" மாகக் கண்டனர். சிறுகதை தமிழுக்கு உரிய இலக்கியவகை

அன்று என்றும், பேச்சுவழக்கு இடம்பெறுவது மொழியை மலினப்படுத்துகிறது எனவும் அவர்கள் தமது கடும் எதிர்ப்பினைத் தெரிவித்தனர். அக்காலக்கட்டத்தில் முற்போக்குச் சிந்தனை கொண்ட இலக்கியவாதிகளும், விமர்சகர்களும் பழமை பேண்வாதிகளின் நவீன இலக்கியங்கள் பற்றிய கருத்துக்களை மறுதலித்து, சிறுகதை வளர்ச்சிக்கு மேலும் உரமிட்டனர்.

எழுபதுகளில் இலங்கையின் பல்வேறு பிரதேசங்களி னின்றும் புதிய புதிய எழுத்தாளர்கள் சிறுகதைத் துறையில் அறிமுகமாகினர். அதன் விளைவாகப் பல பிரதேசங்களின் வாழ்வியற் பின்னணிகள் சிறுகதைகளில் இடம்பெறத் தொடங்கின. தெணியான், முருகபூபதி, சிறீதரன், திக்குவல்லை கமால், டானியல், அன்ரனி, எம்.எல்.எம். மன்சூர், சட்டநாதன், உமா வரதராசன், நந்தினி, சேவியர் போன்ற பலர் சிறுகதைத் துறையிற் பிரவேசித்து, தமது எழுத்தாற்றலைப் புலப்படுத்தத் தொடங்கினர். இவர்கள் ஒவ்வொருவரினதும் சிறுகதைப் பாணிகளும் வெவ்வேறானவையாகவும், இலங்கையின் சிறுகதை வளர்ச்சியை இனங்காட்டக் கூடியவையாகவும் அமைந்துள்ளன. எடுத்துக்காட்டாக, சட்டநாதன் மென்மையான உணர்வுகளைக் கலைநயத்தோடும், மனிதாபிமான நோக்கோடும் வெளிப்படுத்தி வந்துள்ளார். உமா வரதராசனின் சிறுகதைகளில் சம்பவக்கோவை, மொழியாள்கை, கலைநேர்த்தி முதலியவை காணப்படுகின்றன.

எண்பதுகள், தொண்ணூறுகளில் இலங்கையில் ஏற்பட்ட பல்வகையான அரசியல் நெருக்கடிகள், பிரச்சினைகள், புலம்பெயர்வுகள் இலங்கைத் தமிழ்ச் சிறுகதையின் பொருட் பரப்பை விரிவுபடுத்தின. அரசியல் ரீதியான அடக்குமுறைகள், அவற்றுக்கு எதிரான போராட்ட உணர்வுகள், அடக்குமுறைகள், பொருளாதாரப் பிரச்சினைகள் தொடர்பான வெளிநாடுகளை நோக்கிய புலப்பெயர்ச்சிகள், வாழ்க்கை பற்றிய தடுமாற்றப் போக்குகள், பெண்ணியச் சிந்தனைகள் போன்றவை இக்காலக் கட்டத்து இலங்கைத் தமிழ்ச் சிறுகதையில் தாக்கத்தை ஏற்படுத்தத் தொடங்கின. இத்தகைய நிலைப்பாடுகளைச் சிறப்பாக நந்தி, செங்கை ஆழியான், தெணியான், ரஞ்சகுமார், சட்டநாதன், ச. முருகானந்தம், சுதாராஜ், க. தணிகாசலம், தாமரைச் செல்வி, கோகிலா மகேந்திரன் முதலியோர் தமது சிறுகதைகள் மூலம் வெளிக்கொணர்ந்துள்ளனர். எண்பதுகள், தொண்ணூறுகளின் சிறுகதைகள் யதார்த்தப் பாங்கிலிருந்து அகத்திறப் பாங்குக்கு மாற்றம் பெறுவதையும் காணமுடிகிறது. இலங்கையின் அரசியல், சமூக அனுபவங்களின் அடிப்படையில் தரமான சிறுகதைகள் சில இக்காலகட்டத்தைப் பிரதிபலிக்கும்

வகையில் வெளிவந்துள்ளன. ரஞ்சகுமாரின் மோகவாசல், உமா வரதராஜனின் உள்மனயாத்திரை, க. சட்டநாதனின் உலா, க. தணிகாசலத்தின் பிரம்படி, திருக்கோவில் கவியுவனின் வாழ்தல் என்பது, எஸ்எச்நிஃமத்தின் ஆளடையாள அட்டையும் ஐந்து ரூபாயும் போன்ற சிறுகதைத் தொகுதிகள் இதனை உணர்த்துகின்றன.

எண்பதுகள் முதலாக இலங்கைத் தமிழ்ச் சிறுகதைத் துறையில் காணத்தக்க ஓர் அம்சம், புலம்பெயர் எழுத்தாளர்களின் சிறுகதை ஆக்கங்கள் ஆகும். இலங்கையில் ஏற்பட்டுவந்துள்ள பல்வேறு அரசியல், சமூக, பொருளாதார நெருக்கடிகளினால் இலங்கையைவிட்டுப் புலம்பெயர்ந்து வெளிநாடுகளுக்குச் சென்றோர், அங்கிருந்துகொண்டு புதிய சூழ்நிலைகளில் தாய்நாடான இலங்கை பற்றிய ஏக்கத்துடன் இலக்கியம் படைத்து வருகின்றனர். இவர்களால் சிறுகதையும் புதிய பரிமாணத்தைப் பெற்று வருகின்றது. புகலிடச் சிறுகதைகளிற் பெரும்பாலும் கவனிக்கத்தக்க அம்சங்களாக விளங்குவன, தாய்நாட்டின்மீதான ஏக்கமும், புகலிட வாழ்வியல் பற்றிய அறிமுகமும் ஆகும். ஏறத்தாழ அறுபது சஞ்சிகைகள் வெளிநாடுகளிலிருந்து இலங்கையரால் வெளியிடப்பட்டு வருகின்றன. அவற்றில் ஏறத்தாழ நூற்றிருபது இலங்கை எழுத்தாளர் சிறுகதைகள் படைத்து வந்துள்ளனர்.

சிறுகதைத் துறையிற் பெண் எழுத்தாளர்களும் கணிசமான அளவிற் பங்களிப்புச் செய்து வந்துள்ளனர். பல்வேறு சமூகப் பிரச்சினைகள், தனிமனிதர்களுக்கு இடையிலான உறவுகள், பெண்களுக்கு எதிரான பல்வகை அடக்குமுறைகளுக்கு எதிரான விமர்சனங்கள், தலைமுறை இடைவெளி தொடர்பாக ஏற்படும் பிரச்சினைகள், பெண்ணியச் சிந்தனைகள் முதலானவை இலங்கைப் பெண் எழுத்தாளர்களின் சிறுகதைகளில் முக்கியத்துவம் பெற்றுள்ளமையைக் காணலாம். சில சிறுகதைத் தொகுதிகள் வெளிவந்துள்ளன.

சிறுகதைக்கான பிரதான பிரசுரக்களமாகப் பத்திரிகைகள் சஞ்சிகைகளே அமைந்தன. இலங்கையில் நீண்ட கால வரலாற்றைக் கொண்ட வீரகேசரி பத்திரிகையில் தமது சிறுகதைகள் வெளிவருவதை, எழுத்தாளர்கள் ஒரு கௌரவமாகவே கருதிவந்துள்ளனர். இப்போது நின்றுபோய்விட்ட தினபதி என்னும் பத்திரிகை, தனது ஆரம்ப காலத்தில் புதிய எழுத்தாளர்களின் சிறுகதைகளைத் தினமும் வெளியிட்டு, அவர்களுக்கு எழுத்துத்துறையில் உற்சாகமூட்டியது. இவற்றோடு தினக்குரல், சரிநிகர், ஆதவன், திசை முதலான பத்திரிகைகளும்

சிறுகதை வளர்ச்சிக்கு உதவி வந்துள்ளன. அவ்வப்போது இலங்கையில் தோன்றி மறைந்துள்ள பல்வேறு சஞ்சிகைகளும், புதிதாக வெளிவரத் தொடங்கியுள்ள சஞ்சிகைகளும், முப்பதாண்டுகளுக்கு மேலாக இலங்கையில் வெளிவந்து கொண்டிருக்கும் மல்லிகையும் சிறுகதை வளர்ச்சியில் தம்மாலான பங்கினை ஆற்றி வந்துள்ளன. இலங்கைத் தமிழ் எழுத்தாளர் சிலரின் சிறுகதைகள் தமிழ்நாட்டுச் சஞ்சிகைகள் சிலவற்றிலும் அவ்வப்போது வெளிவந்துள்ளன. அந்த வகையில், கலைமகள், கிராம ஊழியன், சரஸ்வதி, தாமரை, எழுத்து, தீபம், கணையாழி முதலான சஞ்சிகைகள் இலங்கைத் தமிழ்ச் சிறுகதை எழுத்தாளர்களுக்குக் களம் அமைத்துக் கொடுத்துள்ளன.

இலங்கையின் நவீன இலக்கியத்துறை வளர்ச்சியில் இலங்கை முற்போக்கு எழுத்தாளர் சங்கத்தின் பணிகளும் குறிப்பிடத்தக்கவை. 1946ஆம் ஆண்டில் கே. இராமநாதன், கே. கணேஷ் ஆகியோரால் தொடங்கப்பட்ட இச்சங்கம், இலங்கையின் நவீன இலக்கியங்களின் வளர்ச்சியில் தேசியம், மண்வாசனை, யதார்த்தச் சித்திரிப்பு என்பனவற்றை அழுத்தமாக வற்புறுத்தி வந்துள்ளது. இலங்கைச் சிறுகதை எழுத்தாளருடன் கணிசமானோர் சமுதாய நோக்குடன் எழுதுவதற்கு இச்சங்கமும் ஒருவகையிற் காரணமாக அமைந்தது எனலாம்.

இலங்கைத் தமிழ்ச் சிறுகதை இயல்பாகவே வர்த்தக நோக்கின்றியே வளர்ச்சிபெற்று வந்துள்ளது. சிறுகதை வளர்ச்சிக்கு இலங்கையின் விமர்சகர்களின் பங்களிப்பும் குறிப்பிடத்தக்கதாகும். பல எழுத்தாளர்களின் சிறுகதைத் தொகுதிகள் வெளிவந்துள்ளன. இலங்கைச் சிறுகதை எழுத்தாளர் சிலரின் சிறுகதைத் தொகுதிகள் தமிழ்நாட்டிலும் பிரசுரமாகி யுள்ளன. செ. யோகநாதன், யோ. சுந்தரலட்சுமி ஆகியோர் இணைந்து, இலங்கைத் தமிழ்ச் சிறுகதைகளைத் தொகுத்து, இரு பாகங்களாக வெளியிட்டுள்ளனர். இவர்களது இம்முயற்சி, இலங்கைச் சிறுகதைகள் பற்றித் தெரிந்துகொள்ள விரும்பும் அனைவர்க்கும் பயன்படத்தக்கதாக அமைந்துள்ளது. தமிழ்நாட்டைப் போலவே, இலங்கையிலும் சிறுகதைகள் மூலமாக இலக்கியப் பிரவேசம் செய்த பலர், காலப்போக்கில் நாவலாசிரியர்களாக மாறியுள்ளனர்.

***சான்றாதாரங்கள்***

1. கோ. நடேசய்யர் 1931இல் நீ மயங்குவதேன் என்னும் பெயரில்

நூல் ஒன்றை வெளியிட்டார். அதிற் பதினொரு கட்டுரைகள் உள்ளன. இந்நூலின் இறுதியில் இடம்பெற்றிருப்பது, 'திரு. இராமசாமி சேர்வையின் சரிதம்' என்பது. இதுவே அய்யர் எழுதிய ஒரேயொரு சிறுகதையாகக் கிடைக்கிறது. பார்க்க: ஜோசப், தெளிவத்தை (2000) **மலையகச் சிறுகதை வரலாறு**, சென்னை. பக். 17-21.

2. சிவத்தம்பி, கார்த்திகேசு (1967) **தமிழில் சிறுகதையின் தோற்றமும் வளர்ச்சியும்**, சென்னை, பாரி நிலையம், ப. 145.
3. செம்பியன் செல்வன் (1973) **ஈழத் தமிழ்ச் சிறுகதை மணிகள்**, திருகோணமலை, முன்னோடிகள், ப. 42.
4. செங்கை ஆழியான் (1997) **மறுமலர்ச்சிக் கதைகள்**, திருகோணமலை, கல்வி பண்பாட்டு அலுவல்கள், விளையாட்டுத் துறை அமைச்சு, ப. 5.
5. சிவத்தம்பி, கார்த்திகேசு, மு.கு.நூ. ப. 148.
6. மேலது. ப. 150.
7. இலங்கைத் தமிழ்ச் சிறுகதையின் வளர்ச்சி பற்றிய சில நூல்கள் பின்வருமாறு:

   செந்திநாதன், கனக. (1964) **ஈழத்து இலக்கிய வளர்ச்சி**, கொழும்பு, அரசு வெளியீடு.

   சிவத்தம்பி, கார்த்திகேசு (1967) **தமிழில் சிறுகதையின் தோற்றமும் வளர்ச்சியும்**, சென்னை, பாரி நிலையம்.

   செம்பியன் செல்வன் (1973) **ஈழத் தமிழ்ச் சிறுகதை மணிகள்**, திருகோணமலை, முன்னோடிகள்.

   மௌனகுரு, சி., சித்திரலேகா, மௌ., நுஃமான், எம்.ஏ. (1979) **இருபதாம் நூற்றாண்டு ஈழத்துத் தமிழ் இலக்கியம்**, கல்முனை, வாசகர் சங்கம்.

   சுந்தரராஜன், பெ.கோ., சிவபாதசுந்தரம், சோ. (1989) **தமிழில் சிறுகதை வரலாறும் வளர்ச்சியும்**, சென்னை, க்ரியா.

   மனோகரன், துரை (1997) **இலங்கையில் தமிழ் இலக்கிய வளர்ச்சி**, கண்டி, கலைவாணி புத்தக நிலையம்.

   தில்லைநாதன், எஸ். (1997) **இலங்கைத் தமிழ் இலக்கியம்**, கொழும்பு, தேசிய கலை இலக்கியப் பேரவை.

   ஜோசப், தெளிவத்தை (2000) **மலையகச் சிறுகதை வரலாறு**, கொழும்பு, துரைவி பதிப்பகம்.

# மலேசியா

கிருஷ்ணன் மணியம்

## வரலாற்றுப் பின்னணி

- மலேசியப் படைப்புலகை 'ரோஜாச் செடியிலிருந்து வெட்டி எடுக்கப்பட்ட கிளையொன்று வேறு ஒரு இடத்தில் நட்டு அது ஒரு புதிய செடியாகப் பூத்துக் குலுங்குவதைப் போன்றது' என்று டாக்டர் தண்டாயுதம் குறிப்பிடுவார். தமிழகத்தின் ஒரு கிளையாகவே மலேசிய இலக்கியங்களை அவர் மதிப்பீடு செய்கிறார்.

- சிறுகதை இலக்கியத்தைப் பொறுத்தவரையில் மலேசியாவில் 1930ல்தான் முதல் சிறுகதை வெளிவந்துள்ளது என்ற குறிப்புக் கிடைக்கின்றது. ஆனால் இது ஒரு சிறுகதையாக இல்லாமல், ஐந்து சிறுகதைகள் கொண்ட ஒரு தொகுப்பாக வெளிவந்தது. வெ. சின்னையா பிள்ளையின் 'நவரச கதாமஞ்சரி: இவை இனிய கற்பிதக் கதைகள்' என்ற தலைப்பில் இத்தொகுப்பு அமைந்தது.

- ஆனால், இக்காலப் பகுதிக்கு முன்பே தமிழ் நேசன், தமிழ்செல்வம், இன்பநிலையம், பாரத மித்ரன், மலாயா மலர், சமுதாய ஊழியன், சமரசம், புதுயுகம், திராவிட கேசரி, தேசாபிமானி, பாரத நேசன், மலாயா நண்பன், தமிழ்கொடி, செந்தமிழ்ச் செல்வி, தமிழ் முரசு முதலிய பத்திரிகைகள், 'இது ஒரு கதை', 'நமது சிறிய கதை', 'ஒரு கற்பனைக் கதை', 'ஒரு புதிய கதை', 'ஒரு நகைச்சுவை கதை' என்று சிறு தலைப்பிட்டு, தமிழக இதழ்களில் வெளிவந்த கதைகளை மறுபிரசுரம் செய்து வந்தன.

- அக்காலக்கட்டத்தில் மலாயாவிலேயே எழுதத் தொடங்கியவர்கள் யாவருமே தமிழகத்திலிருந்து வந்தவர்களே. இவர்கள் தமிழக அளவில் நிகழும் இலக்கியச் சிந்தனைகளை மலாயாவில் வெளிவரும் படைப்புகளில் கொணர்வதில் தவறுவதில்லை. அன்று தமிழ்நேசனில் துணை ஆசிரியராகப் பணியாற்றிய ஆர்.செ. நாதன் என்பவர் தனக்கு 'மணிக்கொடி' இயக்கத்தின் பாதிப்பு நிறைய இருந்தது என்று குறிப்பிடுகின்றார்.

- மலேசிய சிறுகதைகளைத் திறனாய்வு செய்த பூபாலன், 'தமிழ் நேசன் 1924இல் தோன்றியிருப்பினும், பின்னர் 1930இல் தமிழ் முரசு தோன்றியிருப்பினும் ஏறக்குறைய முப்பது ஆண்டுகளுக்குப் பின்னரே முழுமையான மலேசியத் தன்மையுடன் கூடிய கதைகளைப் பார்க்க முடிந்தது' என்று கூறுகிறார்.

- ஆனாலும், 1930களில் தமிழ்நேசனில் முழுமையாக மலேசியக் களத்திலேயே இயங்கக் கூடிய கதைகளும் படைக்கப்பட்டன. சுந்தரியின் துணிபு, மூக்கந்துரையைப் பாம்பு கடித்தது, மோல்மீன் அல்லது மோசக்கார டாக்டர், அக்டோபர் 2, கண்ணிழந்த கபோதி, கதிர்வேலு கங்காணியான கதை, வெல்வெட்டுக் குல்லாய், கோலாலம்பூர் கோகுல விலாசம், மனம் மாறுகிறது, பாத்திமாவின் தளுக்கு முதலிய கதைகள் மலேசியச் சூழலில் அமைந்த கதைகளாகும்.

- இதில் குறிப்பிடத்தக்க செய்தியாக விளங்குவது, மலேசியாவில் பல்லின மக்கள் வாழ்கிறார்கள். இவ்வகையில் 1930களிலேயே சீன, மலாய் கதாபாத்திரங்களைக் கதைகளில் இடம்பெறச் செய்துள்ளனர்.

- 1940களில் ஜப்பானியர் மலாயாவைக் கைப்பற்றினர். நாடெங்கும், பசி, பட்டினி, கொடுமைகள், வன்முறைகள், நோய்கள் பரவி மக்களைத் திண்டாட வைத்தன.

- ஜப்பானியர்களிடம் சீனர்கள் அவர்களிடையே நிலவிய பாரம்பரிய பகைமை உணர்வால் மிகுந்த கொடுமைகளை அனுபவித்தனர்.

- தமிழர்களுக்கு அரசியல் ரீதியாக ஒரு தோழமை ஜப்பானியர் களிடம் கிடைத்தது. நேதாஜி சுபாஷ் சந்திர போஸ், ஜப்பான், ஜெர்மனி இத்தாலி நாடுகளின் கூட்டமைப்பில் தோழமை கொண்டதால் இந்தத் தகுதி கிடைத்தது.

- நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ், இந்திய விடுதலை முன்னணி (Indian Independence League) மற்றும் இந்திய தேசிய இராணுவம் (Indian National Army) என்ற இரு அமைப்புகளை நிறுவி இந்தியாவின் சுதந்திரத்திற்குப் போராடினார். இதில் நில வழியாக இந்தியாவை அடைய தாய்லாந்து, பர்மா நாடுகளின் வழியாக இரயில் பாதை அமைக்க ஜப்பானியர் முயற்சி செய்தனர்.

இம்முயற்சியில் இலட்சக்கணக்கான தமிழர்களின் உழைப்பைப் பயன்படுத்தினர். இதில் கடும் பனியினாலும், கொடுமையினாலும் நோயினாலும் இலட்சக்கணக்கில் தமிழர்கள் உயிரிழந்தனர்.

இவ்வாறு பெரிய எண்ணிக்கையில் ஆண்கள் இறந்தது தமிழர்களின் சமூக அமைப்பில் பல்வேறான சிக்கல்களை ஏற்படுத்தியது. ஆண்களும் பெண்களும் சமுதாயத்தில் எண்ணிக்கை அளவில் சமநிலை அற்ற ஒரு சூழல் உருவாகியது. இது சமூகக் கட்டமைப்பில் சில சிக்கல்களை ஏற்படுத்தியது.

இக்காலப் பகுதியில் இலக்கிய உலகம் ஒரு புதிய சூழலை சந்தித்தது. ஜப்பானிய போர்க் கால அரசு ஜப்பான் மொழியைப் பரவலாக்கும் முயற்சியில் ஈடுபாடு கொண்டு விளங்கினாலும் தமிழிலும் இந்தியிலும் சில ஏடுகளை நடத்த அனுமதியளித்தது.

இதில் தமிழ் இதழ்களுக்குப் பொறுப்பாக இருந்தவர்கள் ஏனைய செய்திகளுள் படைப்பிலக்கியத்திற்கும் முக்கியத்துவம் கொடுத்தனர். சுதந்திர இந்தியா, சுதந்திர உதயம், யுவபாரதம் முதலிய ஏடுகள் சுமார் ஐம்பது சிறுகதைகளை இக்காலப் பகுதியில் வெளியிட்டன.

இக்கதைகள் பெரும்பாலானவைத் தமிழகத்தைப் பின்னணியாகக் கொண்டு இயங்கின. இக்கதைகளின் பாடுபொருளை நான்கு வகையாகப் பிரிக்கலாம்.

1. இந்திய நாடு எவ்வகையாலும் சுதந்திரம் பெற வேண்டும்.
2. ஜப்பானியர் மற்றும் நேதாஜியின் பெருமை பேசும் பிரச்சாரம்.
3. போர்க்காலப் பின்னணியில் காதல்.
4. சமூகப் பிரச்சினைகள்

எடுத்துக்காட்டாகச் சிவனின், 'வீரக்கட்டழகர்', ராஜகோபாலனின் 'தீபாவளி பரிசு', 'பாரத பாக்கி அல்லது புஷ்ப ரகுநாதம்', அமுதனின் 'எப்பொழுது காண்பேன்', பிச்சை முத்துவின் 'வீரையாவின் தியாகம்', சிங்காரத்தின் - 'கனகவல்லியின் தியாக சேவை', பாசமாணிக்கத்தின் 'மறதியால் இறுதி' முதலியன மேற்சொன்ன கதைப் பொருள்களைப் பேசின.

ஜப்பானியரின் வீழ்ச்சிக்குப் பின்னர் அப்பத்திரிகைகள் எல்லாம் நின்று போய்விட்டன.

இரண்டாம் உலகப் போர், மலாயாவில் வாழ்ந்த தமிழர்களிடையே ஒரு விழிப்புணர்வினைக் கொண்டு வந்தது. தமிழகத்தைத் தாயகம் என்று எண்ணியிராமல், மலாயாவைத் தங்களது தாயகமாக எண்ணத் தொடங்கினர். இந்த எண்ணமே 1946இல் 'மலேசிய இந்தியர் காங்கிரஸ்' என்ற அரசியல் கட்சி உருவாகக் காரணமாக அமைந்தது.

இவ்வாறு அரசியலில் ஏற்பட்ட உள்நாட்டுச் சிந்தனை இலக்கியத்திற்கும் பரவியது. இருப்பினும் இது முழுமையாகச் சாதிக்க முடியாத ஒன்றாகவே இருந்தது. இதற்கு முக்கிய காரணம், மலாயாவில் வெளிவந்த அத்துணை இதழ்களிலும் தமிழக இதழ்களில் வெளிவந்த படைப்புகள் மறுபிரசுரமாக வெளிவந்தன.

இந்தச் சூழலில் 1946இல் சுமார் பதினைந்து வருடங்களுக்குப் பின்னர் 'கடைச் சிப்பந்திகளின் கண்ணீர்' என்ற தலைப்பில் ஏ.எம்.எம். இப்ராஹிம் மலாயாவின் இரண்டாவது சிறுகதைத் தொகுப்பை வெளியிட்டார்.

இதற்கிடையே 1947இல் தமிழ் முரசு, சிறுகதைகளுக்கு முக்கியத்துவம் கொடுத்து தனது ஆண்டு மலரை வெளியிட்டது. இதில் 13 கதைகள் இடம் பெற்றிருந்தன. இதில் உள்நாட்டுப் படைப்பாளர்கள் சிறுகதைகளைப் பற்றிய தெளிவு பெற வேண்டும் என்ற எண்ணத்தில் தமிழகப் படைப்புகளையும் சேர்த்திருந்தார்கள். அதில் 'எது வேண்டும்' என்ற பாரதிதாசனின் கதையும், கலைஞர் மு. கருணாநிதியின் 'வெங்கண்ணா' என்ற கதையும் அடங்கும்.

தொடர்ந்து, எஸ். சண்முகத்தை ஆசிரியராகக் கொண்டு 'தமிழ்ச் சுடர்' என்ற இதழ் வெளிவந்தது. இவ்விதழ் உள்நாட்டு எழுத்தாளர்களின் படைப்பை மட்டுமே வெளியிடுதல் என்ற கொள்கையுடன் செயல்பட்டது. புதிய எழுத்தாளர்கள் பயன் பெற, 'சிறுகதைகளின் கூறுகள்' என்ற தலைப்பில் ராஜாஜி எழுதிய ஒரு கட்டுரையை முதல் இதழ் தாங்கி வந்தது.

இத்தமிழ்ச் சுடர் இதழைப் பைரோஜி நாராயணன் 'மலாயாவின் மணிக்கொடி' என்று குறிப்பிடுவார்.

1950இல் மலேசிய தமிழ்ச் சிறுகதை எழுத்துலகிற்கு முக்கிய நிகழ்வாக விளங்கியது 'கதை வகுப்பாகும்'.

கதை வகுப்பினைச் சுப. நாராயணனும், பைரோஜி நாராயணனும் இணைந்து எழுத்தாளர்களுக்காகச் சிறுகதைகளுக்கென உள்ள வடிவத்தில் கதை எழுதும் முறையினைக் கற்றுக் கொடுக்க முயற்சித்தனர்.

இம்முறையில் ஒவ்வொரு வாரமும் கிடைக்கப்பெற்ற சிறுகதைகளை வெளியிட்டு அதனுடன் குறைநிறைகளை வெளியிட்டு எழுத்தாளர்களுக்கு ஆர்வத்தைத் தூண்டி விட்டனர்.

இதற்குப் பிறகு சுப.நாராயணன் தமிழ் முரசுவிலும் தமிழ்ச் சிறுகதை எழுதுவதைப் பயிற்றுவிக்கும் முயற்சியாக 'ரசனை வகுப்பு' என்ற அரங்கத்தைத் தொடங்கினார்.

பிறகு 'தமிழ் முரசு' இதழ் மாணவர் மணி மன்றம் என்ற அரங்கத்தைத் தொடங்கிப் புதிய எழுத்தாளர்களை உருவாக்க முனைந்தது. இதன் மூலமாக ஒரு எழுத்தாளர் பரம்பரையே உருவானது. இதில் குறிப்பிடத்தக்கவர், கார்த்திகேசு, சைபீர் முகமது, க. கிருஷ்ணசாமி, அன்பானந்தம், அப்துல் லத்தீப், முருகையன், அன்புசெல்வன், மைதீ. சுல்தான், தீனரட்சகி முதலியோர்.

தமிழ் முரசு இதழ் அவ்வப்போது பரிசுப் போட்டிகளை நடத்தி வந்தது. இது எழுத்தாளர்களுக்கு ஊக்குவிப்பாக அமைந்தது.

1955இல் 'குடும்பப் பிரச்சினையைத் தீர்ப்பது எப்படி' என்று அமெரிக்க தம்பதியினரிடையே ஏற்பட்ட ஒரு குடும்ப பிரச்சினையை முன்வைத்து போட்டி ஒன்றை நடத்தியது. 'உன்னா' என்ற பெண் தன் கணவர் விமானப் போரில் கொல்லப்பட்டுவிட்டார் என்று உறுதியான பின்னர் ஆல்பர்ட் என்பவரைத் திருமணம் செய்து கொள்கிறாள். ஆனால் போரில் இறந்த கணவர் பின்னர் திரும்புகிறார். இவர்கள் பிரச்சினையைத் தீர்ப்பது எப்படி என்பதே போட்டி.

எழுத்தாளர்களின் முடிவின் படியே முதல் கணவரும் 'உன்னாவும்' சேர்ந்து வாழ்கின்றனர். இதில் சி. வடிவேலு, மா. இராமையா, மெ. அறிவானந்தன் ஆகியோர் பரிசு பெற்றனர்.

இதற்கிடையே, தமிழ் நேசனில் ஆசிரியராகப் பணியாற்ற மலாயா வந்த கு. அழகிரிசாமியின் பணியும் மிக இன்றியமையாததாகும். இவர் உள்நாட்டு எழுத்தாளர்களின் சிறுகதைகளைத் திருத்தி வெளியிட்டுச் சிறுகதைகளுக்குரிய இலக்கணங்களுடன் சிறுகதைகள் வெளிவர வேண்டும் என்று விரும்பினார்.

அதேவேளையில், 'எழுத்தாளர் வட்டம்' ஒன்றை உருவாக்கி நாடு முழுவதும் உள்ள எழுத்தாளர்களுடன் தொடர்பு கொள்ளும் முயற்சியையும் மேற்கொண்டார். இவர் மேலை நாடுகளின் எழுத்தாளர்களின் படைப்புகளை உள்நாட்டு எழுத்தாளர்களுக்கு அறிமுகப்படுத்தினார். இவர் அப்துல் லத்தீப், சுப்ரமணியம், முத்தையா, ராசஇளவழகு, மாயதேவன், தமிழ்ச்செல்வன், சி. வடிவேல், குணசேகர், வேலுசாமி, பரிதிதாசன், அன்பரசன் ஆகியோரை வளரும் தரமான எழுத்தாளர் என்று அடையாளம் காட்டினார்.

1960களில் மலேசியப் படைப்புலகம் தமிழகத்தைச் சார்ந்திருக்கின்ற சூழல் இல்லாமல் இருந்தாலும் தமிழகத்தில் ஏற்பட்ட திராவிட இனமான எழுச்சி மலேசிய எழுத்தாளர்களின் பால் தாக்கத்தை ஏற்படுத்தியது.

தமிழகத்தில் திராவிட முன்னேற்ற கழகம் இலக்கியத்திற்கு முக்கியத்துவம் கொடுத்து ஊக்குவித்தது. மலேசியத் தமிழ்ச் சிறுகதை எழுத்தாளர்கள் தமிழகத்தின் போக்கில் இணைய தூண்டுதலாக அமைந்தது. இவர்கள் திராவிட முன்னேற்றக் கழக எழுத்தாளர்களின் எழுத்து நடையில் பெரிதும் கவரப்பட்டனர்.

இதனுடன் மலேசிய எழுத்தாளர்களாகிய எம். குமரன், அன்புசெல்வன், ஆகியோரின் எழுத்துப் படிவங்கள் சி.என். அண்ணாதுரையின் 'காஞ்சி' இதழில் வெளிவந்தது.

தொடர்ந்து 'தீபம்' இதழில் ந. பார்த்தசாரதியின் முயற்சியில் மலேசிய எழுத்தாளர்களின் படைப்புகள் வெளிவந்தன. ஆறு. நாகப்பனின் தோட்டப்புற மக்களின் துன்பங்களை விவரிக்கும் கதைகள் தீபத்தில் வெளிவந்த போது மலேசியாவிற்கு வெளியிலுள்ள தமிழ் இனத்தவர் மலேசியத் தமிழர்களின் வாழ்க்கையைப் புரிந்து கொள்ள வகை செய்தது. 'தீபம்' மலேசிய சிறப்பு மலரையும் வெளியிட்டது.

சீ. முத்துசாமியும், சங்கு சண்முகமும் முறையே குமுதமும் ஆனந்த விகடனும் நடத்திய சிறுகதைப் போட்டிகளில் பரிசுகள் பெற்றனர்.

1970களில் தமிழகத்திலிருந்து மலாயாப் பல்கலைக்கழக இந்திய ஆய்வியல் துறைக்குப் பணியாற்ற வந்த டாக்டர் இரா. தண்டாயுதம் அவர்களின் பணி சிறுகதை எழுத்துக்குப் புதிய உத்வேகத்தை அளித்தது. அவர் மலேசியாவில் வெளிவந்த சிறுகதைகளைத் திறனாய்வு செய்து குறை நிறைகளைப் பத்திரிகைகளில் எழுதினார். ஆய்வுகள் நடத்திச் சிறுகதை வளர்ச்சிப் போக்கினைக் கண்டறிந்தார். இவை யாவும் எழுத்துக்கள் மேன்மேலும் சிறக்க வழிகோலின.

அதே வேளையில் தமிழ்நேசனின் ஆசிரியர் முருகு சுப்பிரமணியம் தமிழ்நேசன் வழி 'பவுன் பரிசுத்திட்டம்' ஒன்றை அறிமுகப்படுத்தினார். இத்திட்டத்தின் வழி ஒவ்வொரு மாதமும் எழுதப்பட்ட கதைகளை ஆய்வு செய்து ஒரு கதைக்கு ஒரு பவுன் பரிசாக வழங்கப்பட்டது. இந்த பவுன் பரிசுத் திட்டம் எழுத்தாளர்களின் எழுத்து ஆர்வத்தைத் தூண்டியதுடன் தரமான எழுத்துகள் வெளிவரவும் காரணமாயிற்று. அதனுடன் இது மற்றுமொரு எழுத்துப் பரம்பரையினரைத் தோற்றுவித்தது. இந்தத் திட்டத்தின்வழி, எம்.ஏ. இளஞ்செல்வன், எல். முத்து, அரு.சு. ஜீவானந்தன், சாமி மூர்த்தி, ந. மகேஸ்வரி, சீ. முத்துசாமி, துறவி போன்ற எழுத்தாளர்கள் சிறுகதைத் துறைக்குக் கிடைத்தனர்.

எழுபதுகளின் பிற்பகுதியில் மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் தலைவராக இருந்த எம். துரைராஜின் தலைமையில் நாடு முழுவதும் மாதாந்திர சிறுகதைத் திறனாய்வுகள் நடத்தப்பட்டன. பரிசுகளும் வழங்கப் பட்டன. இதுவும் சிறுகதைத் துறையின் வளர்ச்சிக்குப் பங்காற்றியது.

மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கத்தினர் 1977 ஆம் ஆண்டு மலாயாப் பல்கலைக்கழக இந்திய ஆய்வியல் துறையினருடன் இணைந்து மலேசியத் தமிழ்ச் சிறுகதைக் கருத்தரங்கை நடத்தினர். இக்கருத்தரங்கு மலேசியத் தமிழ்ச் சிறுகதை எழுத்துக்கு ஒரு உயரிய இடத்தைப் பெற்று தந்தது என்று சொல்லலாம். காரணம், தமிழ் எழுத்தாளர்கள்

மட்டுமே பங்கு கொள்ளாமல் மலாய், சீன எழுத்தாளர்களும் இதில் கலந்து கொள்ள ஏற்பாடு செய்யப்பட்டிருந்த வேளையில் தமிழ்ச் சிறுகதைகள் பற்றிய கட்டுரைகள் மலாய் மொழியிலும் படைக்கப்பட்டன.

தொடர்ந்து 1986ஆம் ஆண்டுத் தொடக்கம் மலாயாப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேரவையினர் பெரிய பரிசுத் தொகைகளுடன் ஆண்டுதோறும் நடைபெறக் கூடிய சிறுகதைப் போட்டியினை நடத்தத் துவங்கினர். இது மலேசியாவில் எழுத்துத் துறையில் சில அழுத்தமான சுவடுகளைப் பதித்துள்ளது. முதலாவதாக, பெரிய பரிசுத் தொகைகளைக் கொண்டு நடத்தப்பட்ட முதல் போட்டியாகவும் இது அமைகிறது. மேலும் பரிசு பெறும் எல்லாக் கதைகளும் தொகுக்கப்பட்டு அச்சிட்டுப் புத்தக வடிவிலும் தவறாமல் வெளியிடப்படுகிறது. அண்மைக் காலங்களில் மாணவர் பிரிவு என்ற புதிய பிரிவு ஏற்படுத்தப்பட்டுப் புதிய தலைமுறை எழுத்தாளர்களை உருவாக்கும் முயற்சியையும் தமிழ்ப் பேரவையினர் மேற்கொண்டுள்ளனர்.

இதைத் தவிர்த்து மற்ற போட்டிகளில் குறிப்பிடத்தக்க அளவிற்குச் சொல்ல வேண்டுமானால் தமிழ்நேசன் பத்திரிகையின் தலைவர் டத்தின்ஸ்ரீ இந்திராணி சாமிவேலு அவர்களின் இயங்கும் 'பாரதிதாசன் குழுவினர்' நடத்தும் சிறுகதைப் போட்டியாகும். இப்போட்டியும் பெரிய பரிசுத் தொகையுடன் அமைவதுடன் பரிசு வழங்கும் விழாவை, எழுத்தாளர்களைக் கௌரவிக்கும் பொருட்டு 'எழுத்தாளர் தின விழா'வாக ஏற்பாடு செய்து மலேசிய எழுத்துலகிற்கு உயர்வான இடத்தை வழங்குகின்றனர். இவர்களுடைய இதே பாணியைத் தேசிய நில நிதிக் கூட்டுறவுச் சங்கமும் பின்பற்றிப் பெரிய பரிசுத் தொகைகளைப் போட்டிகளுக்கு வழங்குவதுடன் இலக்கியப் பரிசளிப்பு விழாவைப் பெரிய அளவில் செய்து எழுத்தாளர்களைக் கௌரவிக்கின்றனர்.

தொண்ணூறுகளில் இப்போட்டிகள் யாவும் மேலும் ஒரு புதிய எழுத்துப் பரம்பரையை உருவாக்கும் ஒரு ஆரோக்கியமான சூழலை உருவாக்கியுள்ளது என்று துணிந்து கூறலாம். புதிய எழுத்தாளர்கள் பலரின் வரவுடன் மலேசியத் தமிழ்ச் சிறுகதையுலகு வளர்ச்சியை நோக்கி வெற்றி நடைபோட்டுக் கொண்டிருக்கிறது.

# சிங்கப்பூர்

சுப. திண்ணப்பன்
ஆ.ரா. சிவகுமாரன்

குடியரசுக்குப் பிந்திய காலப்பகுதியில் 1965இல் சிங்கை தனிநாடாக உதயங்கண்டது. 1965க்கு முன்பு சிறுகதை படைத்துக் கொண்டிருந்தவர்களோடு சிங்கை மண்ணின் மைந்தர்களான எம்.எஸ். வேலு, ஜி. ஜான்சன், நா. கோவிந்தசாமி, மா. இளங்கண்ணன் போன்றோரும், மலேசியாவிலிருந்து குடியேறிய பெரி. நீல. பழநி வேலனும், தமிழகத்திலிருந்து குடியேறிய எஸ். முகம்மது ரஃபீக் ஆகியோரும் சிறுகதைகள் படைக்கலாயினர். அறுபதுகளில் சிங்கப்பூர் அரசியல்நிலையில் குழப்பமுற்று இருந்தாலும், சிங்கப்பூர்த் தமிழ்ச் சிறுகதைகள் ஓர் உயர்நிலையை அடைவதற்கான இலக்கை நோக்கிச் செல்லத் தொடங்கின. சிறுகதைகள் வெறும் கதைகளாக இல்லாமல், சமுதாயத்தைப் பிரதிபலிப்பவையாக விளங்கின.

1970களில் சிறுகதைகளின் எண்ணிக்கை பெருகியது. எனவே தரமான கதைகளைக் கண்டறியும் பணியும் தொடங்கியது. இதனால் 1975இல் சிங்கப்பூர் தமிழ் எழுத்தாளர் கழகமும் 1976இல் சிங்கப்பூர் இலக்கியக் களம் என்னும் திறனாய்வு அமைப்பும் சிங்கப்பூரில் தோன்றின. சிங்கப்பூர் இலக்கியக் களம் தனது சிறுகதைத் திறனாய்வுகளை இரண்டு மாதத்திற்கு ஒரு முறை சிங்கப்பூர் மலேசியப் பத்திரிகைகளில் வெளியிட்டது. 1977இல் நடந்த சிறுகதைப் போட்டியில் 450 சிறுகதைகளிலிருந்து 17- சிறுகதைகள் தேர்வு செய்யப் பெற்றன. பின்னர் இவை நூல் வடிவம் பெற்றன. இது, சிங்கைத் தமிழ் எழுத்தாளர்களின் வளர்ச்சியைக் காட்டியது. 1982ஆம் ஆண்டு முதல் நான்கு மொழிப் (ஆங்கிலம், சீனம், மலாய், தமிழ்) பத்திரிக்கைகளின் ஆதரவோடு அரசாங்கம் தேசிய அளவில் சிறுகதைப் போட்டிகளை நடத்தத் தொடங்கியது. இது சிங்கப்பூர்ச் சிறுகதை வரலாற்றில் ஒரு மைல்கல் எனலாம். இப்போட்டிகள் எழுத்தாளர்களுக்கு ஊக்கமும் ஆக்கமும் அளித்தன. பல எழுத்தாளர்கள் தாங்கள் செய்தித்தாள்களிலும் வானொலியிலும் படைத்த சிறுகதைகளைப் புத்தகங்களாக வெளியிட்டு வருகின்றனர்.

1965க்குப் பின் சிங்கப்பூரில் சிறுகதைக்கு முன்னோடியாக விளங்கியவர் ந. பழனிவேலு. சிங்கப்பூர் குடியரசு ஆவதற்கு முன்பிருந்தே சமுதாயப் பிரச்சினைகளையும் சீர்திருத்தக் கருத்துகளையும் மையமாக வைத்துக் கதை படைத்து வரும் ஆற்றல் மிக்க படைப்பாளர் இவர். வானொலியில் தயாரிப் பாளராகப் பணி புரிந்த இவர் பல்வேறு கதைகளை வானொலி வழி உலவவிட்டவர். காதற்கிளியும் தியாகக் குயிலும் (1977) என்னும் நூலை எழுதியவர். இவரைப் போலவே சிங்கை குடியரசாக ஆவதற்கு முன்பிருந்தே கதைகள் படைத்து வந்த சிங்கை முகிலன் என்னும் அப்துல் ரஃமான் சிறந்த உருவகக்கதை எழுத்தாளர் ஆவார். சமுதாயத்திற்குச் சொல்ல வேண்டிய கருத்துக்களையும் சமுதாயப் பிரச்சினைகளையும் மிக அழகாக உருவகங்களின் வழி எடுத்துக்காட்டியவர். எளிய நடை, இனிய சொல்லாட்சி இவரது படைப்புகளில் எங்கும் மிளிரக் காணலாம். உருவகக் கதைகள் என்னும் நூலை (1976) இவர் படைத்துள்ளார்.

தாய்லாந்து மன்னரால் வழங்கப்பெறும் தென்கிழக்காசிய இலக்கிய விருதைப் பெற்றவர் இராம. கண்ணபிரான். இருபத்தைந்து ஆண்டுகள் (1980), உமாவுக்காக (1980), சோழன் பொம்மை (1981), வாடைக்காற்று (1981) முதலிய நூல்களைத் தந்தவர். சிங்கப்பூர்ச் சமுதாயப் பிரச்சினைகளை நன்கு உணர்ந்து அதனை நம் கண்முன் படைக்கும் ஆற்றல் மிக்கவர். ஆங்கில ஆசிரியராகப் பயிற்சி பெற்றிருப்பினும் தமிழ்மீது கொண்ட பற்றால் தமிழ் ஆசிரியராகவே பணிபுரிகிறார். அரசாங்கத்தின் கலாசார விருது, Mont Blanc விருது, தேசிய புத்தக மேம்பாட்டுக் கழக விருது முதலிய விருதுகளைப் பெற்ற இராம. கண்ணபிரான் குடியரசின் தலைசிறந்த படைப்பாளர்களுள் ஒருவர்.

சிங்கை. மா. இளங்கண்ணன் என்னும் பாலகிருஷ்ணன் வழிபிறந்தது (1975), குங்குமக் கன்னத்தில் (1977), கோடுகள் ஓவியங்கள் ஆகின்றன (1978) முதலிய கதைத் தொகுப்புகளைத் தந்தவர். தாம் காணும் சாதாரண நிகழ்ச்சிகளையும் தம் கைத்திறத்தால் அசாதாரணமான முறையில் கதைகளாக்கிக் காட்டுபவர். காட்சிகளைக் கண்முன் கொணர்வதில் வல்லவர். தனித்தமிழ்ப் பற்றாளரான இவரின் நடை மிகவும் விறுவிறுப்பானது. பல போட்டிகளில் கலந்து பல பரிசுகளைப் பெற்றவர். தென்கிழக்காசிய இலக்கிய விருதைப் பெற்றவர்.

தென்கிழக்காசிய விருதைப் பெற்ற சிறந்த சிறுகதை எழுத்தாளரான நா. கோவிந்தசாமி சிங்கப்பூர்ச் சிறுகதைகள் என்னும் தொகுப்பு நூலை (1981) வெளியிட்டவர். நல்ல பல கதைகளை எழுதியவர். தம் கவிதைகளின் வழி சமுதாயத்திற்குச் சாட்டை அடி கொடுத்தவர். தேசிய புத்தக மேம்பாட்டுக் கழக விருதையும் பெற்றவர். தம் எழுத்துகளில் உண்மை இருக்க வேண்டும் என்பதில் ஆர்வம் கொண்டவர். தேடி (1991), முதலிய நூல்களை ஆக்கித் தந்த இவர் சிங்கையிலே பிறந்து வளர்ந்தவர். சிறந்த சிறுகதைத் திறனாய்வாளரான இவர் உள்நாட்டுப் பின்னணியில் தம் கதைகளை உருவாக்கியவர்.

மு.சு. குருசாமி மலேசிய தோட்டப்புறத் தொழிலாளர்களின் பிரச்சினைகளையும் சிங்கப்பூரின் சமுதாயப் பிரச்சினைகளையும் மையமாக வைத்து வாடாத மலர் (1967), நெப்போலியன் காதலிகள் (1967), வானவில் (1968), அந்திவானம் (1969), அபலைப் பெண் (1972), புதுமைப்பெண் (1972) முதலிய கதைகளை வெளியிட்டுள்ளார். இவரது கதைகளில் பாலியல் உணர்வும் வெளிப்படுகிறது. மீன் வாங்கலையோ? (1968) சிங்கப்பூர்க் குழந்தைகள் (1989) முதலிய நூல்களை வெளியிட்ட சே.வெ. சண்முகம் பண்பட்ட எழுத்தாளர். வானொலியிலும் செய்தித் தாளிலும் தம் படைப்புகளை அடிக்கடி இடம்பெறச் செய்பவர். அங்கதச் சுவைபட கதைகளைத் தருவதில் வல்லவர். பல போட்டிகளில் கலந்துகொண்டு பல பரிசுகளைப் பெற்றதோடு தமிழவேள் விருதையும் பெற்ற பெருமைக்குரியவர்.

தமிழாசிரியரான மு. தங்கராசன் பூச்செண்டு (1985), சிந்தனைப் பூக்கள் (1988), மலர்க்கொத்து (1988) முதலிய நூல்களை வெளியிட்டவர். அறிவுரைகளை நயமாகத் தம் கதைகளில் கூறுபவர். மற்றொரு தமிழாசிரியரான பொன் சுந்தரராசு வானொலி, செய்தித்தாள் முதலியவற்றின் வழி தம் படைப்புகளை உலவ விடுபவர். என்னதான் செய்வது? (1981), புதிய அலைகள் (1984) முதலிய நூல்களை வெளியீடு செய்தவர். சமுதாயச் சிந்தனையோடு கதைகள் படைக்கும் இவர் எழுத்தாற்றல் மிக்கவர்.

தமிழ்மொழிப் பற்றாளரான சிங்கைத் தமிழ்ச்செல்வம் குறள் விளக்கக் கதைகள் (1996), கவரிமான் (1996) முதலிய நூல்களை எழுதியுள்ளார். தமிழக வாசகர்களுக்கு நன்கு அறிமுகமான ஜே.எம். சாலி நோன்பு, அந்தநாள் முதலிய நூல்களை எழுதியுள்ளார். இவரது விறுவிறுப்பான நடை

வாசகர்களைக் கவரக் கூடியது. சிங்கையின் தேசிய புத்தக மேம்பாட்டுக் கழக விருதைப் பெற்ற பெருமை இவருக்குண்டு.

பெண் எழுத்தாளராகிய சங்கரி இராமானுஜம் வசந்தத்தின் வாசலிலே (1976) என்னும் நூலை வெளியிட்டுள்ளார். குடும்பக் கதைகளை இவரது படைப்புகளில் காணலாம்.

எழுத்துச்செம்மல் என்னும் பட்டம் பெற்ற ஏ.பி. சண்முகம் குடியரசு சிங்கையின் ஆரம்பகால எழுத்தாளர். அகர ஓசை (1986) என்னும் நூலை எழுதியவர். தமிழக நிகழ்ச்சிகளைத் தம் கதைகளில் மிகுதியாகப் படைத்தவர். மற்ற எழுத்தாளர்கள் தங்கள் படைப்புகளை நூலாக்கப் பலவாறு உதவியவர். சிங்கையின் இளைய தலைமுறை எழுத்தாளர்களில் ஒருவர் ரெ. பாண்டியன். அழகிய மனம் (1986), என்னும் நூலை வெளியிட்டுள்ளார்.

சிங்கப்பூர்க் குடியரசின் வெள்ளி விழாக் கொண்டாட்டத்தின் ஒரு கூறாக 25 நூல்களை 1990ஆம் ஆண்டு இந்தியர் பண்பாட்டு நிகழ்ச்சி ஏற்பாட்டுக் குழு வெளியிட்டது. அப்போது பெண் எழுத்தாளரான கண்ணம்மா, உறவுகள் என்னும் நூலையும் பி.பி. காந்தம், மொழிப்பெயர்ப்புக் கதைகளாக மரகத தெய்வம் என்னும் நூலையும், தமிழாசிரியரான பெ. சிவகாமி, நவமணி என்னும் நூலையும், பெண் எழுத்தாளரான லெட்சுமி தனகோபால் நவமணி என்னும் நூலையும், தமிழாசிரியர் துரைமாணிக்கம், காலங்கடந்து விட்டது என்னும் நூலையும் ராஜாராம், ரத்தினாவதிபாலமலர் ஆகிய இருவரும் புதியவர்களின் சிறுகதைகள் என்னும் நூலையும் வெளியிட்டனர்.

புதுமைதாசன் என்னும் புனைபெயரைக்கொண்ட பி. கிருஷ்ணன் சிங்கை வானொலியில் மூத்த தயாரிப்பாளராகப் பணி புரிந்தவர். வானொலியிலும் செய்தித்தாள்களிலும் பல நல்ல கதைகளை வெளிவரச் செய்தவர். புதுமைதாசன் கதைகள் (1993), என்னும் நூலை வெளிட்டவர். தேசிய புத்தக மேம்பாட்டுக் கழக விருதையும், தமிழவேள் விருதையும் பெற்ற பெருமைக்குரியவர்.

நீண்ட நெடுங்காலமாகக் கதைகள் எழுதி வருபவரும் இலக்கிய ஆர்வலருமான எம்.எஸ். சக்கரவர்த்தி சோமசன்மா, 'செண்பக மலர்கள்' என்னும் நூலை வெளியீடு செய்தார். கவிஞரும் சிறுகதைகள் படைப்பவருமான நாரண புதுமைப்பித்தன், அவன் (1993), என்னும் சிறுகதைத் தொகுப்பை எழுதி வெளியிட்டார். சிங்கப்பூர்க் கல்வி அமைச்சின் தமிழ்ப்பிரிவு,

உயர்நிலைப் பள்ளித் தமிழ் மாணவர்களுக்காக 1988 ஆம் ஆண்டில் கதைப்போட்டிகளை நடத்தியது. அதில் பரிசு பெற்ற கதைகளை ஒன்று திரட்டி ஒரு புல்லாங்குழல் புயலை உச்சரிக்கிறது என்னும் பெயரில் நிலவு புத்தக நிலையம் ஒரு தொகுப்பு நூலாக வெளியிட்டது.

நா. கோவிந்தசாமியைத் தொகுப்பாசிரியராகக் கொண்டு வெளியிடப்பெற்ற The Fiction of Singapore என்னும் ஆங்கிலத் தொகுப்பு நூல் தமிழர்களுக்குப் பெருமை சேர்க்கக்கூடிய நூலாகும். செய்தித்தாள்களில் வெளிவந்த சிறந்த சிறுகதைகளைத் தேர்வு செய்து அவற்றைத் தொகுத்து இதனை வெளியிட்டுள்ளார். இந்நூல்கள் அரசு அங்கீகாரம் பெற்ற நிறுவனத்தால் தொகுத்து வெளியிடப் பெற்ற பெருமைக்குரியன. சிங்கப்பூரின் நான்கு அதிகாரத்துவ மொழிகளின் சிறுகதைகளும் இந்நூல்களில் இடம்பெற்றுள்ளன. இந்நூல்களில் இடம்பெற்ற அனைத்துச் சிறுகதைகளும் ஆங்கில மொழிபெயர்ப்புடன் விளங்குவன.

சிங்கைச் சிறுகதை எழுத்தாளர்களுள் தம் கதைகளை நூல்களாக வெளியிடாமல் அவ்வவ்போது செய்தித்தாள்களிலும் வானொலியிலும், இதழ்களிலும் வெளிவரச் செய்தவர்கள் பலர் இருக்கின்றனர். இவர்களுள் சீதாலட்சுமி, ஜோசபின் ஜோசப், ஒ.கே. மகேஸ்வரி, ராமராஜன், கா. சங்கையா, பி. ராஜாராம், லதா முதலியோர் குறிப்பிடத்தக்கவர்கள்.

# புதினம்

## தமிழகம்

இராம. குருநாதன்

தமிழில் முதல் புதினமே சமூகச் சீர்திருத்தத்தோடுதான் தொடங்கியது. சமூக அளவிலான சீர்திருத்தம் செய்யப்பட வேண்டும் என்பதை முன்னிலைப்படுத்திப் புதினங்கள் படைக்கப் படுதற்கு அக்காலத்தெழுந்த உணர்வுகளும் எண்ணங்களும் காரணமாய் அமைந்திருந்தன. ஆங்கிலக் கல்வி, சமயச் சீர்திருத்தம், புதியதொரு நாகரிகத்திற்கு மாறுதல் ஆகியவை மெல்ல மெல்லப் புதினங்களில் அரும்பத் தொடங்கின. சமூகக் குறைபாடுகளைச் சுட்டினாலும் மனிதர்களிடம் விழிப்புணர்ச்சி ஏற்படுத்த வேண்டும் என்ற நோக்கை இலக்காகக் கொண்டிருந்ததைத் தொடக்ககாலப் புதின வரலாற்றில் காணமுடிகிறது. அறவுரையாகவும், அறிவுரையாகவும் சமூகத்திற்குக் கருத்துக்களை வழங்கவேண்டும் என்பதில் தொடக்க காலப் புதின ஆசிரியர்கள் ஆர்வம் காட்டிவந்தனர். நீதியைச் சொல்வதையே புதினம் என்று சொல்லத்தக்க வகையில் அதன் தொடக்க காலப் போக்கு அமைந்திருந்தது. கதாநாயகனை அல்லது கதாநாயகியை மையப் படுத்திச் சமூக உணர்வைத் தனிமனித நோக்கிலும், கூட்டுக் குடும்ப உணர்விலுமாகப் புதினங்கள் புரியவைக்க முயன்றன.

### வசன காவியம்

கதையை உரைநடையில் சொல்லவேண்டும். அது மக்களைப் பற்றியதாக இருக்கவேண்டும்; அன்றாட நிகழ்வுகளைக் கொண்டிருக்க வேண்டும் என்ற சிந்தனைகளின் வார்ப்பில் புதியன காணும் ஆவலைப் புதின ஆசிரியர்கள் பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் உணர்த்தினர். இவ்வாறு தொடங்கிய இலக்கிய வகைக்கு 'வசன காவியம்' என வேதநாயகம் பிள்ளை பெயரிட்டார். ஆதியூர் அவதானி சரிதம் எழுதிய வித்துவான் சேஷையங்கார் தம் நூலிற்கு 'நாவல்' என ஆங்கிலத்திலும், 'கட்டுக்கதை' எனத் தமிழிலும் பெயர் சூட்டினார். நடேச சாஸ்திரியார் 'புதினம்' என்று அழைத்தார். மாதவையா நாவல் என்றே குறித்தார். 'புதுவது புனைந்த செந்தமிழ்க்கதை' எனத் தம் நூலான மதிவாணன் என்ற நூலில் சுட்டினார் சூரிய நாராயண சாஸ்திரியார்.

ஒருவரைப் பற்றிய வரலாறு என்ற போக்கில்தான் புதினங்களின் பெயர்கள் தொடக்க காலத்தில் அமைந்திருந்தன. அதனூடே நாவலின் மைய நிகழ்ச்சிகள் துணைத் தலைப்பாக இடப்பட்டன. சரித்திரம், சரிதம் என்னும் பெயர்களால் கதை மாந்தர் பெயரோடு சார்த்திக் கூறப்பட்டன. (பிரதாப முதலியார் சரித்திரம், பத்மாவதி சரித்திரம், ஆதியூர் அவதானி சரிதம்).

### முதல் புதினம்

தமிழில் முதல் புதினம் எது என்பதில் கருத்து வேறுபாடுகள் உள்ளன. வேதநாயகம் பிள்ளை எழுதிய பிரதாப முதலியார் சரித்திரம் (1879) எல்லோராலும் முதல் புதினம் என்று ஏற்றுக்கொள்ளப்பட்டது. நாவல் என்பது உரைநடையில் கதை சொல்வது என்ற கருத்து உடன்பாடாக இருக்க, 1875-இல் சேஷையங்கார் எழுதிய ஆதியூர் அவதானி சரிதம் செய்யுள் வழியே கதை கூறுகிறது. அம்மானைப் பாடல் வகையைப் போன்று இதில் கதை சொல்லப்படுகிறது. செய்யுள் வழியிலான இந்நாவலை முதல் தமிழ் நாவல் எனக் கூறுவாருமுண்டு. 1885இல் இலங்கையைச் சார்ந்த சித்திலெவ்வை மரைக்காயர் எழுதிய 'அசன்பேயுடைய சரிதம்' இலங்கையில் எழுந்த முதல் தமிழ்ப் புதினமாகும்.

### சமுதாய விமரிசனம்

தொடக்கக் காலப் புதினங்களில் குடும்ப நிகழ்வுகளும் மாந்தரின் குணச் சிறப்புகளும் மிகுதியாக எடுத்துச் சொல்லப் பட்டன. ஆங்கிலேயரின் கல்வித் திணிப்பும், அம்மொழியை உயர்வாக எண்ணிய போக்கும் நாகரிக மாற்றமும் தமிழ்ச் சமூகத்தை ஆட்படுத்தின. இவற்றின் விளைவுகளைத் தொடக்க காலப் புதினங்கள் கதைமாந்தர் வழியேயும், நிகழ்ச்சிப் பின்னணி யிலுமாகக் கூறின. தொடக்ககாலப் புதினங்கள் சமுதாய விமரிசன மாகவும் இருந்துள்ளன. தாம் வாழ்ந்த காலத்துச் சமுதாய, அரசியல் பின்னணிகளைப் புதினத்திற்குரிய பொருளாக ஆக்குவதில் அக்காலத்திய புதினங்கள் முனைந்திருந்தன.

முதன் முதலில் தமிழில் தொடர்கதையாக வெளிவந்த புதினம், ராஜம் ஐயரின் கமலாம்மாள் சரித்திரம் (1896). இது 1893 முதல் 1895 வரை விவேக சிந்தாமணியில் வெளிவந்ததாகும். இந்நாவல் இரட்டைத் தலைப்பு வைப்பதை அறிமுகப்படுத்தியது. (சில காலங்களாகப் புதினத்திற்கு இரட்டைத் தலைப்புகள்

இடுவதை வழக்கமாகக் கொண்டிருந்தனர்) கிராமிய வருணனையும், தத்துவ விசாரணையும், கலை நேர்த்தியும் கொண்ட புதினம் இது . இதற்குப் பின் வந்த மாதவையாவின் பத்மாவதி சரித்திரம் சமுதாயச் சீர்திருத்தத்தை வலியுறுத்திய புதினமாகும். பெண் சமுதாயத்தின் குரலை இந்நூல் எதிரொலிக்கிறது.

விடுதலைக்கு முன் உள்ள காலகட்டங்களில் குறிப்பாக, பத்து, இருபது, முப்பதுகளில் வெளிவந்த புதினங்கள் பல, அன்று நிலவிய சமூகப் போக்குகளைச் சரியான உணர்வோடு படைத்தளித்தன. கதை கூறும் போக்கில் மரபு நிலை காணப் பட்டது; ஆசிரியரே நம்மைக் கதைக்குள் அழைத்துச் செல்வது; சமூக மாற்றத்தைக் குறிப்பாகப் பிராமண மக்களிடையே காணப்பட்ட சடங்குகள், சில மூடநம்பிக்கைகள், கூட்டுக் குடும்பச் சிதைவுகள் முதலானவை. விரிவான தளத்தில் அன்றைய புதினங்களில் உணர்த்தப்பட்டன. பெண்கல்வியும், சாதிய மறுப்பும், பெருந்தா மணமும், குழந்தை மணமும் அன்றைய சமூகப் புதினங்களுக்குப் பாடுபொருளாக இருந்துள்ளன.

இந்த நூற்றாண்டுகளில் குறிப்பிடத்தக்க புதினங்களாக, பொன்னுசாமி பிள்ளையின் கமலாக்ஷி (1903) கோபால கிருஷ்ண பிள்ளையின் தனபாலன் (1912), மீனாட்சி சுந்தரம்மாளின் ஜயசீலன் (1912), வரகவி. அ. சுப்பிரமணிய பாரதியின் ஜடாவல்லவர் (1912), செ.மு. ராஜு செட்டியாரின் அன்பானந்தம் (1912), பனையப்ப செட்டியாரின் ஷண்முகநாதன் (1926), சீதாராமையாவின் இரட்டூர் சாமு (1934) என்பன அமைகின்றன. இருபதுகளின் இறுதியில் எழுதிவந்த மு.சு. பூரணலிங்கம் பிள்ளை, டி.என். சேஷாசலம், வேங்கடரமணி, நாரணதுரைக்கண்ணன் ஆகியோரும் தங்களை ஓரிரு புதினங்கள் மூலமோ, சில புதினங்கள் மூலமோ அடையாளப்படுத்திக் கொண்டனர்.

பெண்கள் பற்றிய சீர்திருத்தம் விடுதலைக்கு முன்பான கால கட்டங்களில் வலிமையாக அழுத்தம் பெற்றிருந்தது. விதவை மறுமணம், தொடக்க காலப் புதினங்களில் பெரிதுமாக வற்புறுத்தப்பட்டது. இதற்குக் காரணம் அக்காலச் சமூகத்தில் நிலவிவந்த உடன்கட்டை ஏறல், இளமை மணம், போன்றவையே. விதவை மறுமணத்தைச் சேஷையங்கார் (ஆதியூர் அவதானி சரிதம்) பாரதியார் (சந்திரிகையின் கதை) மாதவையா (முத்து மீனாட்சி) வ.ரா. (சுந்தரி; விஜயம்) முதலியோர் ஆதரித்து எழுதினர்.

## தழுவலும் துப்பறிதலும்

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் ஆங்கில மொழியாக்கங்களும், தழுவல்களும் தமிழில் இடம்பெற்றன. ஆங்கிலத்திலிருந்து தமிழில் மொழிபெயர்க்கப்பட்ட முதல் புதினம் 'உமறு பாஷா யுத்த சரித்திரம்' (1883) என்பதாகும். மகாவித்துவான் நாகூர் குலாம் காதிறு நாவலர் என்பவரால் மொழிபெயர்க்கப்பட்டது. ரெய்னால்ட்ஸ் எழுதிய ஓமர் என்ற புதினம் அவ்வாறு மொழிபெயர்ப்பாக வந்தது. கற்பனை, மருட்கை சுவையோடு கூடிய துப்பறியும் புதினங்கள் மெல்ல வளர்ச்சி அடையத் தொடங்கின. இவற்றால் பொழுதுபோக்குக் கூறுகள், விறுவிறுப்புத் தன்மை, எதிர்பாராத திருப்பம் போன்றவை தமிழ் வாசகர்களுக்கு அறிமுகமாயின. வெகுசன மக்களைப் பெரிதும் கவர்வனவாய் அப்புதினங்களின் போக்கு அமைந்திருந்தது. இப்போக்கினை முதன் முதலாகத் தொடங்கி வைத்தவர் பண்டித நடேச சாஸ்திரி ஆவார். இவரது தீனதயாளு (1900) குறிப்பிடத் தக்க புதினம் என்றாலும் இவர் எழுதிய தானவன் (1894) திக்கற்ற இரு குழந்தைகள் (1900) மிகவும் குறிப்பிடப்படவேண்டிய துப்பறியும் தன்மை கொண்ட புதினங்கள் ஆகும். தமிழில் எழுந்த துப்பறியும் புதினங்களுக்குத் 'தானவன்' முன்னோடியாகும். எஸ்.ஜி.ராமானுஜ நாயுடு, வடுவூர் துரைசாமி ஐயங்கார், ஆரணி குப்புசாமி முதலியார், டி.எஸ்.டி. சாமி, ஜே.ஆர். ரங்கராஜு ஆகியோர் நடேச சாஸ்திரியின் தாக்கம் பெற்று மர்மப் புதினங்களைப் படைத் தளித்தனர். ஒரு குறிப்பிட்ட காலம் வரை ஜே.ஆர். ரங்கராஜு புதினங்கள் வரவேற்பினைப் பெற்றன. இவர் எழுதிய ராஜாம்பாள் (1936) இருபத்தேழு பதிப்புகளைக் கண்டது, அக்காலத்தில் குறிப்பிடத்தக்க சாதனை எனலாம்.

## விடுதலை உணர்வு – காந்தியச் சிந்தனை

மர்மக்கதை, துப்பறியும் கதை என்ற போக்கிலிருந்து நாட்டு விடுதலை என்ற சிந்தனை அரும்பியது. விடுதலை உணர்வு இருபதுகளில் தோன்றத் தொடங்கியது. 1922-இல் வெளிவந்த சபேசன் அல்லது சுதந்திர ரட்சகன் (வி.என். ரங்கசாமி ஐயங்கார்) என்ற புதினமே தமிழில் விடுதலை உணர்வைத் தோற்றுவித்த முதல் புதினமாகும். இதற்குப் பின்னர் 1926-இல் வெளியிடப் பெற்ற காந்திமதி (பனையப்ப செட்டியார்) ராஜராஜம் அல்லது காதலின் வெற்றி ஆகியவை தேசிய உணர்வையும், காந்தியச் சிந்தனைச் சாயலையும் கொண்டவை. காந்தி விடுதலை வேள்வியில்

தம்மைப் பிணைத்துக் கொண்டதும் காந்தியக் கருத்துகள் தமிழ்ப் புதினங்களில் இடம்பெறத் தொடங்கின. காந்தியத்தையும் தேசியத்தையும் புதினத்தில் படைத்தளித்ததில் கே.எஸ்.வேங்கடரமணி குறிப்பிடத்தக்கவர். இவர் எழுதிய தேசபக்தன் கந்தன் (1928) என்னும் நூல் இதற்குச் சான்று. காந்தியின் சீர்திருத்தங்களை மனத்துள் கொண்டு கிராம மறுமலர்ச்சித் திட்டத்தில் மாணவர் ஈடுபடவேண்டும் என்பதை வலியுறுத்தியது. இவரது மற்றொரு நாவல் முருகன் ஓர் உழவன் என்பதாகும்.

விடுதலைக்கு முன் உள்ள காலகட்டங்களில் குறிப்பாக இருபதுகளிலும் முப்பதுகளிலும் சமூகச் சீர்திருத்தம் முதன்மைப் படுத்தப்பட்டது. ஆணாதிக்கச் சக்திகள் ஓங்கியிருந்ததோடு சமூகத்தின் எல்லா மட்டங்களிலும் பெண்களை அடக்கி அவர்கள் உரிமை பறிக்கப்பட்ட நிலை இருந்தது. ஆங்கிலேய ஆட்சியின் காலகட்டத்தில் விதவைத்துயர், சமூக மூடப்பழக்க வழக்கங்கள் இவற்றைப் புதினத்தில் பதிவு செய்து மாற்றுத் தேடினர் எழுத்தாளர்கள். இத்தகையதொரு காலகட்டத்தில் காந்தியத்தின் கருத்துகளில் ஈர்க்கப்பட்ட ஜீவா என்ற நாரண துரைக்கண்ணன் சமூகச் சீர்திருத்தத்திற்கு முக்கியம் கொடுத்து எழுதி வந்தவர். காந்தியக் கருத்துகளை உள்ளடக்கமாகக் கொண்ட புதினங்கள் அரும்பிய காலத்தில் கல்கிக்கு முன்பிருந்தே எழுதியவர் இவர். விதவையர் துயரம் (யான் ஏன் பெண்ணாய் பிறந்தேன்) இளைஞர்களின் கயமை (காதலனா! காதகனா) தேவதாசி ஒழிப்பு (தாசி ரமணி) அரசியல் போலிகள் (சீமான் சுயநலம்) முதலிய பாடுபொருள்களை மையமாக வைத்து எழுதிய முன்னோடி எழுத்தாளர்களில் ஜீவா.வும் ஒருவர். இவரது புதினங்களில் பலரின் பாராட்டுதலையும், பல பதிப்புகள் கண்டதுமான புதினம் உயிரோவியம் (1940), தெய்வீகக் காதலை அடிப்படையாகக் கொண்டது இது.

காந்திய நெறிகளைக் கடைபிடித்துத் தேசிய விடுதலையில் ஈடுபடும் கதாநாயகன் தேசபக்தன் கந்தனில் இடம்பெற்றதைப் போன்று மேலை நாட்டில் கல்வி பயின்ற பின், இந்திய விடுதலைப் போரில் தீவிரமாகப் பங்கேற்பதனைக் கொண்ட போக்கினைப் பின்னர் வெளிவந்த புதினங்களிலும் காணமுடிகிறது. விடுதலைக்காகப் படிப்பையும் பதவியையும் துறப்பது என்ற இத்தகைய போக்கு விடுதலைக்கு முன்னரும் பின்னரும் வெளிவந்த சில புதினங்களால் அறியப்படுகிறது. கா.சி.வேங்கட ரமணி காட்டிய வழித்தடத்திலும் பாடுபொருளிலும் ஈர்க்கப்

பட்டுக் கல்கி, அகிலன், எம்.எஸ். கல்யாணசுந்தரம், ந.சிதம்பர சுப்பிரமணியம், ர.சு. நல்லபெருமாள், ராஜம் கிருஷ்ணன், நா. பார்த்தசாரதி, மு.வ, கு. ராஜவேலு ஆகியோர் தேசிய உணர்வை முன்வைத்துப் புதினங்கள் படைத்தவர்களில் குறிப்பிடத்தக்கவர்கள். அகிலனின் பெண், தேச பக்தன் கந்தனின் வார்ப்பில் உருவானது. நாட்டு விடுதலைப் போர், காந்தியச் சிந்தனையால் ஈர்க்கப்பட்டு விடுதலை வேள்வியில் பங்கு பெறுதல், தலைமை வழிபாடு, ஒத்துழையாமை இயக்கம், கள்ளுக்கடை மறியல், தேசியத் தலைவர்களின் போக்கைத் திறனாய்தல், கிராமிய உருவாக்கத் திட்டங்கள், சமூகச் சீர்திருத்தம் போன்றவை விடுதலைக்கு முன்னும் பின்னும் உள்ள கால கட்டங்களில் இடம்பெற்றன. இருபதுகளில் தோன்றி எழுபதுகள் வரை தேசிய உணர்வு புதினங்களில் நீடித்தது. முப்பதுகளில் வை.மு.கோதைநாயகி எழுதிய ஸாரமதி (1931), தியாகக் கொடி (1934) முதலிய புதினங்களில் தேசிய உணர்வைக் காணலாம். அக் காலத்தில் நூறுக்கு மேற்பட்ட புதினங்களை எழுதியவர் இவர்.

கல்கியின் புதினங்கள் தியாகபூமி (1939), மகுடபதி (1942), அலைஓசை (1950) முதலியன தேசிய உணர்வை ஊட்டும் புதினங்களில் குறிப்பிடத்தக்கவை. இவரது புதினங்கள் மிகுந்த வரவேற்பை வெகுசன மக்களிடம் பெற்றிருந்தன. காந்திய நூற்றாண்டான அறுபதுகளின் இறுதியில் வெளிவந்த கல்லுக்குள் ஈரம் (ர.சு. நல்லபெருமாள்), மண்ணில் தெரியுது வானம் (ந. சிதம்பர சுப்பிரமணியம்), ஆத்மாவின் ராகங்கள் (நா. பா.), கால வெள்ளம் (இந்திரா பார்த்தசாரதி) முதலிய புதினங்கள் காந்தியக் கொள்கையையும், நாடு விடுதலை அடைந்த பிறகு ஏற்பட்ட அரசியல், சமூகப் பொருளாதாரச் சூழ்நிலைகளையும் மதிப்பீடு செய்தன.

காந்தியக் கருத்துகள் நன்கு தமிழில் வேரூன்றிய பிறகு காந்தியம் எதிர்நிலைத் திறனாய்வுக்கு உட்பட்டது. போலி காந்தியவாதிகளை விடுதலைக்குப் பின்னர் வெளிவந்த கண்திறக்குமா (1956), சுதந்திரப்போர் அல்லது உப்பள முற்றுகை (1957) முதலிய புதினங்கள் இனங்காட்டுவதாய் அமைந்தன. நாடு விடுதலை பெற்ற பின்னும், காந்தியத்தின் நிலை அவர் பிறந்து நூறாண்டுகள் கழிந்தபின்னும் எவ்வாறு மாறியுள்ளது என்ற மதிப்பீடு புதினங்களில் கண்ணோட்டம் செய்யப்பெற்றது. ராஜம் கிருஷ்ணனின் வேருக்கு நீர் (1972), அகிலனின் எங்கே போகிறோம்

(1973) முதலியவை இவ்வகையில் குறிப்பிடத்தக்கன. ஜெயகாந்தனின் ஜய ஜய சங்கர (1976) காந்திய நெறிக்கும்; நடைமுறை வாழ்க்கைக்கும் உள்ள வேறுபாடுகளைப் புதிய கோணத்தில் காட்டுவதாய் அமைந்தது. காந்தியக் கண்ணோட்டம், பொது வுடைமைச் சக்தியின் தீவிரத் தன்மையால் மதிப்பீடு செய்யப் பெற்றும், அதிலுள்ள முரண்பாடுகளைச் சுட்டுவதாயும் ரோஜா இதழ்கள் (ராஜம் கிருஷ்ணன்), போராட்டங்கள் (ர.சு. நல்ல பெருமாள்), குருதிப்புனல் (இந்திரா பார்த்தசாரதி) முதலிய புதினங்கள் அமைந்தன.

### புனைவியலும் பொழுதுபோக்கும்

தமிழ்ப் புதினத்தின் தொடக்ககாலப் போக்குகள் பொழுது போக்கிற்கும் சமூகச் சீர்திருத்தத்திற்குமாக இருந்த நிலை மாறி, விடுதலை உணர்வைப் பற்றிய சிந்தனையை வளர்க்கத் தூண்டின. விடுதலைப் போராட்ட கால அரசியல், சமூகநிலைப்பாடுகள் விடுதலைக்கு முன் அரும்பிக் காந்தியச் சிந்தனையில் வளர்ந்து கொள்கை விளக்கமாக மாறி எழுபதுகளின் இறுதி வரை தமிழ்ப் புதின உலகை ஆட்கொண்டிருந்தது.

தமிழில் குறிப்பிட்ட காலம் வரை கற்பனா வாதம் ஓங்கி வளரத் தொடங்கியதற்குக் காரணமாக இருந்த கல்கி காலத்திலும் அதன் பின்னரும் அவருடைய தாக்கம் பெற்றவர்கள் பலர். அவர்களில் அகிலன், நா. பார்த்தசாரதி, சாண்டில்யன், கோவி.மணிசேகரன் குறிப்பிடத்தகுந்தவராவர். கல்கியின் வரலாற்றுக் கற்பனைப் படைப்புக்களின் தாக்கத்தை இவர்களிடம் காண்பது போலவே செகசிற்பியன், விக்கிரமன், முதலியோரிடமும் காணமுடியும். தேவன், பி.எம். கண்ணன், ஆர்.வி, லக்ஷ்மி, அநுத்தமா முதலானோர் பொழுதுபோக்கும் குடும்பச் சூழலும் கொண்டு வெகுசனக் கதைகளைப் படைத்தனர்.

வெகுசன ஊடகங்களில் எழுதிவந்த அகிலன் முக்கோணக் காதலை மையப்படுத்தியும், காந்தியப் பின்னணியைக் கொண்ட கதை மாந்தர்களையும் தம் புதினங்களுள் படைத்தளித்தார். பாவை விளக்கு (1958), சித்திரப்பாவை (1968) குறிப்பிடத்தக்க புதினங்களாகும். தமிழில் ஞானபீடப் பரிசு பெற்ற ஒரே புதினம் சித்திரப்பாவையாகும். நா. பார்த்தசாரதி நல்ல தமிழ் நடையில், காந்திய நெறி நின்று எழுதியவர். குறிஞ்சி மலர் (1962), பொன் விலங்கு (1964), சமுதாய வீதி (1968) ஆகியவை சுட்டிக்காட்டத்தக்க புதினங்களாகும். ஏறக்குறைய இதே காலகட்டத்தில்

ஜெகசிற்பியன் எழுதிவந்தார். ஜீவகீதம் (1968), கிளிஞ்சல் கோபுரம் (1969) ஆகியவை குறிப்பிடத்தக்க படைப்புகளாகும். இம் மூவருமே சமூகப் புதினங்களோடு வரலாற்றுப் புதினங்கள் சிலவற்றைப் படைத்து அறுபது எழுபதுகளில் வெகுசன எழுத்தாளர்களாக இருந்துள்ளனர்.

## மொழிப்பெயர்ப்பும் தாக்கமும்

ஒரு குறிப்பிட்ட காலம் வரை மேல்நாட்டுப் புதினங்களும், தழுவல்களும் தமிழில் செல்வாக்கினைப் பெற்றன. இதற்கு அடிப்படைக் காரணம் பரிசோதனைக்காகப் புதினம் என்ற இலக்கிய வகையை அன்றைய காலகட்டத்தில் சிலர் எழுதிப் பார்த்ததே எனலாம். ஆனால் மொழிபெயர்ப்புப் புதினங்கள் வழியே சிலர் அறியப்பட்டனர். சுத்தானந்த பாரதியார், அ.கி. ஜெயராமன், த.நா.குமாரசாமி, கா.ஸ்ரீ.ஸ்ரீ., சு. சண்முக சுந்தரம், சரஸ்வதி ராம்நாத் முதலியோர் இந்திய மொழிகளில் குறிப்பாக வங்க, மராட்டிய மொழிகளில் எழுந்த புதினங்களைத் தமிழில் தந்தனர். வாசகர் விரும்பிப் படிக்கக்கூடிய அளவிற்குச் சுவை குன்றாமல் மூல மொழியிலிருந்து அவ்வாறு தந்தமை, தமிழ்ப்புதின ஆசிரியர்களுக்கு உந்து சக்தியாக விளங்கிற்று. பங்கிம்சந்திரரின் ஆனந்தமடம் வங்கமொழியிலிருந்து தமிழில் மொழிபெயர்க்கப்பட்ட பின், தமிழ்ப் புதினங்களின் பொருளும் வடிவமும் கலைநேர்த்தியும் புதுமை பெற்றன. மாறுதலான சமூகக் கதைகளைத் தர வேண்டும் என்பதைச் சிந்தித்தனர். கா.ஸ்ரீ.ஸ்ரீ. மொழிபெயர்ப்புக்களான காண்டேகரின் படைப்புகள், மு.வ.வின் புதினக்கலை ஈடுபாட்டிற்கு உந்துசக்தியாக இருந்துள்ளன. தம் வயமாகக் கதைமாந்தரைக் காட்டுவதும், கருத்துரை வழங்குவதும், குறிக்கோள் உலகை உணர்த்துவதுமான போக்கில் தெளிந்த தமிழ்நடையில் மு.வ. தம் புதினங்களைப் படைத்துள்ளார். கரித்துண்டு (1953), அகல்விளக்கு (1957) முதலிய புதினங்கள் இவரது குறிப்பிடத்தக்க படைப்புகளாகும். பேராசிரியர்கள் புதினங்கள் படைத்தமைக்கு முன்னோடிகளாக, பரிதிமாற் கலைஞரையும், (மதிவாணன்) மறைமலையடிகளையும் (கோகிலாம்பாள் கடிதங்கள்) கருதலாம். தமிழில் கடித உத்தியை முதன்முதலில் பயன்படுத்தி எழுதியவர் மறைமலையடிகள்.

ஒவ்வொரு காலகட்டத்திலும் மொழிபெயர்ப்புப் புதினங்கள் குறிப்பிடத்தகுந்த சிறப்பும் பெருமையும் அடைந்துள்ளன. அறுபது எழுபதுகளில் மேனாடுகளில் சிறந்த புதினங்களாகக் கருதப்பட்டவை தமிழில் பெயர்க்கப்பட்டன. நோபல் பரிசு

பெற்ற புதினங்கள் பல தமிழ் வடிவம் பெற்றன. ஆங்கில, உருசிய, ஜெர்மானிய, நார்வே நாட்டுப் புதினங்கள் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டன. மலையாளம், கன்னட, தெலுங்குப் புதினங்கள் தமிழில் வரவேற்பினைப் பெற்றன. இந்திய மொழிப் புதினங்கள் சிலவற்றைச் சரஸ்வதிராம்நாத், சௌரி முதலியோர் மொழி பெயர்த்துள்ளனர். அண்டை மாநில இலக்கியங்கள், குறிப்பாகப் புதினங்கள் மொழிபெயர்க்கப்பட்டு வந்துள்ளன. மொழிபெயர்ப்பு நூல்கள் அண்மைக்காலத்தில் தரமாக வந்துள்ளவற்றைக் கருத வேண்டும். சமீப கால மொழிபெயர்ப்பு நூல்களில் குறிஞ்சிவேலனின் ஒரு சில மலையாள மொழிபெயர்ப்பு நூல்களும், சதாசிவத்தின் கன்னட மொழிபெயர்ப்புச் சிலவும் குறிக்கத்தக்கன. சுந்தர ராமசாமி தகழியின் செம்மீனை மலையாளத்திலிருந்து மூலச்சுவை கெடாமல் மொழி பெயர்த்துள்ளமை மிகவும் குறிப்பிடத்தக்கது. தகழியின் தோட்டியின் மகன் என்ற புதினமும் அவரால் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. அண்மையில் அமரந்தா, சிங்கராயர் மொழிபெயர்த்த சிலுவையில் தொங்கும் சாத்தான் (ஆப்ரிக்கப் புதினம்) நல்லதொரு மொழிபெயர்ப்பாகும்.

### கிராமியமும் வட்டாரப்பாங்கும்

கிராமிய வாழ்க்கையைப் பின்னணியாகக் கொண்டு புதினங்கள் விடுதலைக்கு முன்பிருந்தே படைக்கப்பட்டிருப்பினும் அதன் முழுவீச்சினைச் சங்கரராமின் மண்ணாசை (1940) என்ற புதினத்தில் காணமுடியும். முற்றுமாக, கிராமிய மணம் வீசும் புதினங்களுக்கு இது முன்னோடியாகும். உழைக்கும் வர்க்கத்தை அடிப்படையாகக் கொண்ட இப்புதினத்தைப் போலவே, குறிப்பிடப் படவேண்டிய மற்றொரு புதினம் சு.சண்முகசுந்தரத்தின் நாகம்மாள் (1942). கிராமப்புற மனிதர்கள் வேர்ப்பிடிப்பாகப் பற்றியிருக்கும் மண்ணின் மீதுள்ள பாசத்தைத் தன் உயிரினும் மேலாக மதிக்கும் ஒருவனின் வாழ்க்கைப் போராட்டம் 'மண்ணாசை'யில் ஆழமாகவும், நடப்பியலோடும் சித்திரிக்கப்பட்டுள்ளது. கிராமிய நடைமுறை வாழ்க்கையைச் சித்திரிக்கும் 'நாகம்மாள்' புதினம், கொங்கு வட்டார வழக்கினைக் கொண்டு படைக்கப்பட்டது. நாகரிகத்தின் சுவடு படியாத கொங்கு நாட்டுக் கிராமம் ஒன்றைக் களமாகக் கொண்ட இப் புதினம், கைம்பெண்ணாகிய நாகம்மாளைப் பாகப்பிரிவினைக்கு உட்படுத்திக் கூட்டுக் குடும்பச் சிதைவை விளக்குவதாகும். க.நா.சு. படைத்த பொய்த்தேவு (1946) தனிமனிதன் படிப்படியாக முன்னேறி மிகுந்த பொருளீட்டி வாழ்வின் வெற்றி தோல்விக்குக் காரணமாவதைச் சோமு என்ற

கதைமாந்தர் வழியே காட்டுகிறது. இவருடைய படைப்புகளில் அசுரகணம், ஒருநாள் ஆகியவை குறிப்பிடத்தகுந்தவை. கிராமியப் புதினங்களில் குடும்ப உறவில் சிதைவுகள், மண்ணை நம்பியிருக்கும் போக்கு, பழைமையான வாழ்க்கை முறை, அம்மக்களின் உணர்வுகள், முதலியன நடப்பியலோடும் மண்வாசனையோடும் கூடியதாய்ப் படைக்கப்பட்டு வந்துள்ளன. வட்டாரப் புதினங்கள் என்ற ஒரு மரபு தோன்ற மேற்கூறிய புதினங்கள் காரணமாக இருந்துள்ளன. எம்.வி. வெங்கட்ராம், கும்பகோணத்து சௌராஷ்டிர இன மக்களின் வாழ்வு முறைகளையும், குடும்பச் சிக்கலையும் மையப்படுத்திய புதினம் வேள்வித் தீ (1966) ஆகும். இவருடைய புதினங்களில் குறிப்பிடத் தகுந்த மற்றொரு புதினம் அரும்புகள் (1964) ஆகும். நாஞ்சில் நாட்டுப் பகுதியைச் சார்ந்த நாடார் சாதி மக்களின் பழக்க வழக்கங்களையும், பண்பாடு, சடங்குகளையும் தம் குடும்ப வாழ்வின் அவலங்களையும் இயல்பான மன ஓவியங்களாகத் தீட்டிக்காட்டிய அழகிய நாயகி அம்மாளின் 'கவலை' (2000) குறிப்பிடத்தக்க புதினமாகும்.

கொங்கு வட்டாரப் பின்னணியைக் க. ரத்னம் (கல்லும் மண்ணும்), சூரியகாந்தன் (மானாவாரி மனிதர்கள்), சீ.ஆர். ரவீந்திரன் (அங்குத்தாய்; ஈரம் கசிந்த நிலம்) போன்றோர் புதினங்களில் காணலாம். கரிசல் பகுதி மக்களின் வாழ்க்கையை வட்டாரப் பின்னணியோடு காட்டுபவர்களில் கி.ராஜநாராயணன், மேலாண்மை பொன்னுசாமி, பூமணி முதலியோர் குறிப்பிடத் தக்கவர்கள்.

மதுரை வட்டாரக் கிராமப்புற மண்ணின் மணத்தை 'வாடிவாசல்' என்ற புதினம் மூலம் நுட்பமாகச் சித்திரித்துள்ளார் சி.சு.செல்லப்பா. மனிதன் விலங்கு என்ற எதிர்நிலையில் விலங்கினை வீழ்த்தும் பழியுணர்ச்சியை 'வாடிவாசலில்' காணலாம். ஜல்லிக்கட்டு நிகழ்ச்சியை அடிப்படையாக வைத்துத் தனிமனிதன் வெற்றிகொள்ளும் கதைக்களன் தமிழ்ப் புதின உலகில் புதிய முயற்சி. தஞ்சை மண்ணின் செழுமையைத் தி.ஜானகிராமனின் புதினங்களில் காணமுடியும். ஹெப்சிபா ஜேசுதாஸனின் புத்தம் வீடு (1964) தலைமுறை இடைவெளிகளால் ஏற்பட்ட கருத்து வேறுபாடுகளால் கூட்டுக்குடும்பம் சிதைவதை நாகர்கோவில் வட்டார நடையில் அருமையாக உணர்த்திய புதினமாகும். இவரது மற்றொரு புதினமான டாக்டர். செல்லப்பாவும் குறிப்பிடப்படவேண்டியது. நாஞ்சில் நாட்டு இரணியல் செட்டிமார்களின் மூன்று தலைமுறை சார்ந்த வாழ்க்கைச் சித்திரத்தை நனவோட்ட உத்திமுறையில் சிறப்புடன்

உணர்த்துகிறது நீல.பத்மநாபனின் 'தலைமுறைகள்' என்னும் புதினம். இவருடைய மற்றொரு படைப்பான பள்ளிகொண்டபுரம் கருப்பொருளால் வித்தியாசமானது. நனவோட்ட நடையில், தன்னை விட்டுப் பிரிந்தவளோடு வாழ்க்கை நடத்தியதை எண்ணிப்பார்க்கும் ஒருவனின் வெளிப்பாட்டைக் கூறுகிறது. வாழ்க்கை முழுதும் ஏமாற்றமடைந்த ஒருவன் தன் பிள்ளைகளை ஆளாக்கிவிட்டு இறுதியில் உயிர் துறக்கிறான். திருவனந்த புரத்தைப் பின்னணிக் களமாகக் கொண்டது இப்புதினம்.

நாஞ்சில் நாட்டு வட்டார மொழியையும், அந்நாட்டு மக்களின் சமூகப் பண்பாட்டு உணர்ச்சிகளையும் புதினமாகப் படைத்தவர்களுள் நாஞ்சில் நாடன் குறிப்பிடப்படவேண்டியவர். தலைகீழ் விகிதங்கள் (1977) என்ற இவரது புதினம், சாதாரண குடும்பத்தில் பிறந்து பணக்காரக் குடும்பத்தில் திருமணம் செய்து கொள்ளும் ஒருவன் எதிர்கொள்ளும் சிக்கல்களை மையமாகக் கொண்டது. 'என்பிலதனை வெயில் காயும்' என்ற புதினம் வறுமையால் வாடும் ஒருவன் படித்து முன்னேறத் துடிப்பதையும், அவனை வாட்டும் கொடுமையையும் சித்திரிப்பது. இவருடைய சதுரங்க குதிரை, எட்டுத்திக்கும் மதயானை ஆகியவை சுட்டிக் காட்டத்தக்கன.

## இனமக்கள் படைப்புகள்

அண்மைக் காலங்களில் குறிப்பிட்டதொரு சமூக இன மக்களின் வாழ்க்கையை அச்சமூகப் பின்னணியோடு காட்ட அவ்வினத்துப் படைப்பாளிகள் தீவிரமாகச் செயல்பட்டு வருகின்றனர். இவ்வகையில் தலித் இலக்கியப் படைப்புகள் சில குறிப்பிடத்தக்கன. தலித் இனமக்களின் வாழ்வோடு பின்னிப் படர்ந்த நிகழ்ச்சிப் பின்னலும், கிராமிய மணம் கமழும் நடப்பியலோடு வாழ்க்கையின் சிதைவுகளும் போலித்தனமில்லாத எழுத்தும் அவ்வின மக்களின் சமூகப் பார்வையும் அவ்வினம் சார்ந்த படைப்பாளர்களால் எடுத்துச் சொல்லப்பட்டுள்ளன. பழையன கழிதலும் (சிவகாமி), கருக்கு; சங்கதி (பாமா), கோவேறு கழுதைகள், ஆறுமுகம் (இமையம்) முதலியவை குறிப்பிடத் தகுந்தன. மள்ளர் இன மக்களின் சமூகப்பண்பாட்டைக் காட்டும் நூல், நொய்யாற்றாங் கரையினிலே (1999) என்பதாகும். தஞ்சைக் கிராமம் ஒன்றில் வாழும் மக்களின் யதார்த்த வாழ்வை, வயல்வெளிச் சித்திரிப்பிலும், அவர்களின் பண்புக் கூறுகளோடும் காட்டும் சோலை சுந்தரம் பெருமாளின் செந்நெல் (2000) 'குருதிப்புனலோடு' ஒப்புநோக்கும் வகையில் அமைந்த ஆழமான பதிவாகும்.

இனமக்களின் வாழ்வியலை எடுத்துக்காட்டுவனவாய் ம. அரங்கநாதனின் பிறவியாற்று மாந்தர்கள், பா. விசாலம் எழுதிய 'மெல்லத் கனவாய்ப் பழங்கதையாய்' ஆகிய புதினங்கள் விளங்குவன. நாஞ்சில் நாட்டு வேளாளர் வாழ்க்கையை இவர்கள் படம்பிடித்துக் காட்டியுள்ளனர்.

## பிறமாநிலப் பின்னணி

மற்ற மாநிலங்களிலிருந்து இங்கு வந்தோரும், இங்கிருந்து பிற மாநிலங்களுக்குக் குடியேறியவர்களும் சமூகப் பண்பாட்டு, பொருளாதார அரசியல் சூழ்நிலைகளை மையப்படுத்திப் புதினங்கள் படைத்துள்ளனர். அத்தகைய புதினங்களில் அவர்கள் வாழும் மாநிலத்தின் பண்பாட்டையும், சூழ்நிலையையும் காணலாம். குறிப்பாக நகுலன், நீல. பத்மநாபன், ஆ.மாதவன், சுப்ரபாரதி மணியன் போன்றவர்களின் படைப்புகள் இவ்வாறாமைந்தவை. ஆ.மாதவன், நகுலன், காசியபன் ஆகியோர் திருவனந்தபுரம் வட்டாரத்தைக் களமாகக் கொண்டு எழுதுபவர்கள். ஆ.மாதவனின் புனலும் மணலும், கிருஷ்ண பருந்து முதலிய நாவல்கள் சுட்டத்தகுந்தவை. காசியபனின் அசடு திருவனந்தபுரத்தைச் சார்ந்து வாழும் பிராமணக் குடும்பத்தில் உள்ள ஒருவனின் வாழ்க்கைப் போக்கு பற்றியதாகும். சுப்ரபாரதிமணியன் ஹைதராபாத்தைக் களமாகக் கொண்டு எழுதியவர். கொங்காணி மக்களின் வாழ்க்கைப் பிரதிபலிப்புகளை அம்மக்களின் சமூகப் பின்னணியோடு நதிமூலம் என்ற நாவலில் பதிவு செய்தவர் விட்டல்ராவ். அயலகத்திலிருந்து குறிப்பாக இலங்கையிலிருந்து புலம்பெயர்ந்தோருள் செ.கணேசலிங்கம், செ.யோகநாதன் எஸ்.பொ.முதலியோர் குறிப்பிடத்தக்கவர்கள். அயலகப் பின்னணியில் தமிழ் எழுத்தாளர் படைப்புகள் மிகக் குறைந்த அளவில் எழுதப்பட்டுள்ளன. (அகிலனின் பாய்மரக் காட்டினிலே மலேசியா மண்ணின் ரப்பர் தோட்டத் தொழிலாளிகளின் வாழ்க்கையைப் பற்றியது) அசோகமித்திரன் எழுதிய 'ஒற்றன்' அவருடைய நேரடி அநுபவ வெளிப்பாடு. வெளிநாட்டு அநுபவங்களையும், தாம் சந்தித்த சிலரின் குணாதிசயங்களையும் பற்றிய சித்திரம். இந்திரா பார்த்தசாரதி போலந்து நாட்டில் சில காலம் இருந்ததன் காரணமாக, அங்கு நிலவிய மதமும் பொதுவுடைமைக் கட்சியும் கூட்டாக இயக்கிய ஆட்சி பற்றியும், அங்கு இந்தியக் குடும்பம் தன் இருப்பியலை நிலைப்படுத்திக் கொண்டது பற்றியுமான புதினத்தைப் படைத்துள்ளார். லஷ்மி ஆப்ரிக்காவில் சில காலம் வாழ்ந்த

போது, அந்நாட்டுப் பின்னணியை வைத்துச் சில கதைகளை எழுதினார். வாஸந்தி 'மூங்கில் பூக்கள்' என்ற புதினத்தில் மிஜோரம் பின்னணியாக இடம்பெற்றுள்ளது. இரண்டாம் உலகப்போரில் பங்கேற்ற நேதாஜி, அவர் தொடங்கிய ஐ.என்.ஏ. இயக்கம், அதில் பங்கேற்ற ரங்கூன்வாழ் தமிழர்களின் அவ்இயக்க ஈடுபாடு ஆகியவற்றைப் போராட்ட உணர்வோடு, புலம்பெயர்ந்த தமிழர்களின் வாழ்வை வரலாற்று முறையில் இயல்பாகக் காட்டிய ப. சிங்காரத்தின் 'புயலிலே ஒரு தோணி' எழுபதுகளில் சுட்டிக்காட்டக்கூடிய புதினமாகும்.

**கள ஆய்வும் திணை மரபும்**

கள ஆய்வும், களம் சார்ந்த தொழில் முறையும், தொழில் சார்ந்த மக்கள் வாழ்க்கையையும் அவர்தம் சிக்கல்களையும் மையமாகக் கொண்ட புதினங்கள் ஒருவகையில் வட்டார வழக்குத் தொடர்பானவையே! இவற்றில் சமூக அக்கறையும் மண்ணின் மணமும் உண்டு. இத்தகைய புதினங்களைப் படைத்து வருபவர்களுள் குறிப்பிடத்தக்கவர் ராஜம் கிருஷ்ணன். படகர் வாழ்க்கை (குறிஞ்சித்தேன்), குழந்தைத் தொழிலாளர்கள் (மண்ணகத்துப் பூந்தளிர்கள்), மீனவர் மேம்பாடு (அலைவாய்க் கரையில்), விவசாயப் பெருங்குடி மக்களின் வாழ்வு (சேற்றில் மனிதர்கள்), உப்பளத் தொழில் (கரிப்பு மணிகள்) முதலியன கள ஆய்வாகக் கொண்டு ராஜம் கிருஷ்ணனால் படைக்கப்பட்டவை. கொ.மா. கோதண்டம் எழுதிய 'குறிஞ்ஞாம்பூ' என்னும் புதினம் பளியர் என்ற பழங்குடி மக்களைப் பற்றிய வாழ்வோவியமாகும். இதுவும் ஒருவகையில் கள ஆய்வுப் புதினமாகும்.

வட்டாரப் புதினங்களில் புதியதொரு மரபைத் தோற்று வித்தவர் கி.ராஜநாராயணன், கரிசல் இலக்கியம் என்ற வழக்கினை அறிமுகப்படுத்தக் காரணமாக இருந்தவர். இவருடைய கோபல்ல கிராமம் (1976) ஆந்திராவிலிருந்து தமிழகத்திற்குக் குடிபெயர்ந்து தெலுங்கைத் தாய்மொழியாகக் கொண்ட கம்மவார் நாயக்கமார்களின் சமூகப் பண்பாட்டினைச் சுவைபடக் காட்டுவதாகும்.

இடப்பின்னணியும் காலப்பின்னணியும் சேர்ந்து மண்ணின் மணத்தோடும், மனிதர்களின் உணர்ச்சிகளைச் சமூகம், பண்பாடு, பழக்க வழக்க, உறவுகளோடும் கூறும் புதினங்களில் வண்ணநிலவனின் கடல்புரத்தில் (1979) தோப்பில் முகமது மீரானின் ஒரு கிராமத்தின் கதை (1980) ஆகியவை சுட்டிக் காட்டத்தக்கன. மணப்பாடு என்னும் கடற்கரையை ஒட்டிய

இடத்தில் வாழும் பரதவ மக்களைப் பற்றிய சித்திரம், 'கடல்புரத்தில்', காட்டப்பெறுகிறது. இஸ்லாமியக் குடும்பத்தின் வாழ்க்கைப் போராட்டத்தைத் தேங்காய்ப்பட்டணம் என்ற கடற்கரையை ஒட்டிய பகுதியில் வாழும் இஸ்லாமிய குடும்ப உறவின் சிதைவுகளை வட்டாரப் பாங்கில் உணர்த்துகிறது, தோப்பில் முகமது மீரானின் ஒரு கடலோரக் கிராமத்தின் கதை. இவர் படைத்த புதினங்களில் துறைமுகம், சாய்வு நாற்காலி, கூனன் தோப்பு ஆகியவை குறிப்பிடத்தக்கவை.

## மாற்றமும் புதுமையும்

தமிழ்ப் புதின வரலாற்றில் அறுபது எழுபதுகளிலும் அதன் பின்னருமான காலகட்டங்களில் புதிய சோதனைகளையும் உத்தி முறைகளையும் புதுப்புதுக் கருப்பொருள்களையும் தமிழ்ப் புதின உலகம் கண்டது. புதினத்தின் வீரிய வெளிப்பாட்டினைப் பல்வேறு கோணங்களில் அறிதற்கு ஏதுவான இக்கால கட்டத்தைத் திசைமாற்றக் காலம் என்றழைக்கலாம். தேசிய இயக்க உணர்வு எழுபதுகள் வரை தொடர்ந்து வந்தாலும், இக்காலகட்டங்களில் திராவிட இயக்கம், பொதுவுடைமை இயக்கம் ஆகியன எழுச்சியோடு புதினங்களை நோக்கிய காலம் இது. புதினங்களின் பரிணாம வளர்ச்சியில் சில புதிய தடங்களை இக்காலம் பதித்தது. நாடு விடுதலை அடைந்த பதினைந்து ஆண்டுகளில் புதிய இயந்திர நாகரிகம், உற்பத்தித்திறன் கிராமத்திலிருந்து நகரியம் வருதல், பாலுணர்வுச் சிக்கல், ஆண், பெண் உறவு முறைகள், தத்துவ விசாரணை முதலியவற்றைக் கதைக்களம் கொண்டிருந்தது. ஒரே ஆசிரியரின் சில படைப்புகள் தொடர்ந்து வெளிவந்தன. புதின வளர்ச்சியில் உருவம், உள்ளடக்கம், உத்தி ஆகியவை இத்தகு காலத்தில் மாற்றமும் புதுமையும் காணலாயின. மேனாட்டு உத்திமுறைகளில் புதினம் படைப்பதும் இக்காலகட்டத்தில் ஓர் அங்கமாகச் செயல்பட்டு வந்தது. தனிமனித வெளிப்பாடு, பாத்திரங்களின் அதீத உணர்வு, மனமுறிவு முதலிய உளவியல் சிக்கல்கள் அறிவார்ந்த நிலையில் புதினமாக உருவெடுக்கத் தொடங்கின.

குடும்ப, சமூக உறவுகளின் பாதிப்பு, தனிமனிதனின் ஒழுக்கம் போன்றவற்றைக் கதைமாந்தர்களின் வழி அழுத்தமாக உணர்த்தவும், அவற்றால் எழும் சிக்கல்களை எடுத்துக்காட்டவும் புதின ஆசிரியர்கள் முயன்றனர். தனி மனித ஒழுக்கம் பலவகைகளிலும் விதந்தோதப்பட்டது. சமூக உறவோடு ஒட்டியும் ஒட்டாமலும் மனித ஒழுக்கம் கண்ணோட்டம் செய்யப்பட்டது.

அவ்வாறு கண்ணோட்டம் செய்யும் போது பாலுறவைத் தொடர்புபடுத்தியும் தொடர்புபடுத்தாமல் விலகி நின்றும் கதைமாந்தர் உருவாக்கத்திற்கு 'அழுத்தம் கொடுத்த போக்கினைச் சிலரிடையே காணலாம். ஜெயகாந்தனின் 'ஒரு நடிகை நாடகம் பார்க்கிறாள்', தி.ஜானகிராமனின் 'மோகமுள்', 'செம்பருத்தி'; 'அம்மாவந்தாள்' இந்திரா பார்த்தசாரதியின் 'நிலமென்னும் நல்லாள்', 'வேர்ப்பற்று' முதலிய நூல்கள் அத்தகைய பார்வைக்கு உட்பட்டன.

ஒரு காலகட்டம் வரை கதை சொல்லும் பாணியே மிஞ்சி நின்றது. நிகழ்ச்சிகளை வரிசை வரிசையாகப் பின்னும்போக்கும் இருந்தது. உணர்வோட்டம் இல்லாமல் நிகழ்ச்சிகளை நடைபெற்ற போக்கிலிருந்து சற்று மாறி, அக மனவுணர்வில் நிகழ்ச்சிகளை அடுக்கிச் செல்லும் போக்குக் காணப்பட்டது. உணர்வோட்டம் மூலமாகக் கதைமாந்தர் வெளிப்படுத்தப்பட்ட போது, நடப்பியல் தன்மையில் நிகழ்ச்சிகள் புலப்படலாயின. புதின உலகில் இவ்வாறு உருவம், உத்தி முறைகளில் மாற்றம் ஏற்பட ஆங்கிலப் புதினங்கள் காரணமாய் இருந்துள்ளன. உத்தி முறையில் மாற்றங்கள் காணவும் கூறவரும் பொருள், கதைமாந்தர் பண்பு, படைப்பு முதலியவற்றிலும் புதிய பார்வைகள் தோன்றின. உரையாடலிலும் கூடப் புதுமை வீச்சு புலப்பட்டது. அறிவு சார்ந்த நிலையில் அமைந்த உரையாடல், உணர்ச்சிக் குழைவானதும் கவித்துவமானதுமான சொல் புலப்பாடு ஆகியவை காணப் பட்டன. இந்திரா பார்த்தசாரதி, ஜெயகாந்தன், தி.ஜானகிராமன், நீல. பத்மநாபன், லா.ச.ரா. முதலியோர் இப்போக்கினர்.

### இயக்கப் புதினங்கள்

திராவிட இயக்கச் சார்பிலான படைப்புகளில் சமூகச் சீர்திருத்தமும், இயக்கக் கொள்கையும் வலியுறுத்தப்பட்டன. பெரியாருடைய கருத்துகளையும், அக்காலத்தில் நிலவிய தேவதாசி முறையை எதிர்த்த முத்துலட்சுமி ரெட்டி கருத்துகளையும் உள்ளிட்ட புதினமாக 1936இல் வெளி வந்த மூவலூர் ஆ. ராமாமிர்தத்தம்மாளின் தாசிகள் மோசவலை என்னும் புதினம் பகுத்தறிவு இயக்கவழியிலான புதினங்களுக்கு முன்னோடி எனலாம்.

திராவிட இயக்கத்தினர் ஆரியர் எதிர்ப்பு, வருணாசிரமம், கடவுள், மதம், மூடநம்பிக்கை, சாதி ஒழிப்பு, தன்மானம், பண்ணையார்த்தனம், தீண்டாமை, பொருந்தா மணம், விதவை

மணம் இவற்றை அடிப்படையாகக் கொண்டு புதினங்கள் படைத்தனர். மொழி இவர்களுக்கு நல்லதொரு கருவியாகச் செயல்பட்டது. அழகு தமிழ் நடை புதினத்திற்கு அணிகலனாகியது. பிரச்சாரத்திற்குரிய தன்மையும், திரைப்படச் சூழலுக்கு ஏற்ப அமைந்த கதைப்பின்னலும், சுவைபடக் கதை கூறும் முறையும் இவர் கதைக்கு இயல்பாய் அமைந்தன. அண்ணா, கருணாநிதி, தில்லை வில்லாளன், ஏ.வி.பி. ஆசைத் தம்பி, டி.கே. சீனிவாசன், கே.ஜி. இராதாமணாளன், எஸ்.எஸ். தென்னரசு, இராம. அரங்கண்ணல், பண்ணன் முதலியோர் குறிப்பிடப்பட வேண்டியவர்கள் ஆவர். அண்ணாவின் ரங்கோன் ராதா, பார்வதி பி.ஏ.; கருணாநிதியின் வெள்ளிக்கிழமை, ஒரே இரத்தம்; டி.கே. சீனிவாசனின் ஆடும் மாடும்; கே.ஜி. இராதா மணாளனின் இருளும் ஒளியும் முதலியன எடுத்துக்காட்டத்தக்கன.

### திராவிட இயக்கப் புதினங்கள்

அபலைப் பெண்களுக்கு மறுவாழ்வு, மேலாதிக்கம், பெண்களுக்கு இழைக்கும் கொடுமை முதலியவை திராவிட இயக்கப் புதினங்களில் அடிநீரோட்டமாகவுள்ளன. ஒருவகையில் பெண்கள் குறித்த சிந்தனைப் புரட்சி ஐம்பதுகளில் புதிய கோணங்களில் வெளிப்பட்டது. விந்தனின் பாலும் பாவையும் (1951) டி.கே. சீனிவாசனின் ஆடும் மாடும் (1959) முதலியவை குறிப்பிடத்தகுந்தன. வாழ்க்கையில் வழுக்கி விழுந்தவர்கள் மறுவாழ்வு பெறவேண்டும். அநீதியிலிருந்தும் கொடுமையி லிருந்தும் மீளவேண்டும் என்ற சிந்தனையை மையமிட்டனவாக இப்புதினங்கள் விளங்கின. பெண்கள் குறித்த அன்றைய நாள் பார்வை ஒரு புதிய திசையை உணர்த்தியது. இவ்வகையில் பாலும் பாவையும் என்ற புதினம், பால் திரிந்தால் பயன்படாது; பாவை கெட்டால் கடைத் தேறாள் என்ற வாழ்க்கை மீறிய சிந்தனைத் தெறிப்பினைக் கொண்டது. டி.கே.சி. எழுதிய ஆடும் மாடும் என்ற புதினம், ஓர் ஆண் சமுதாயம் அனுமதிக்கிற பெண்ணோடும் வாழமுடியும், அனுமதிக்காத பெண்ணோடும் வாழமுடியும். இது ஏன் என்ற கேள்விக்குத் தீர்வு சொல்வதாக அமைந்துள்ளது. மு.வ. படைத்த 'கரித்துண்டு' என்னும் புதினம் கற்புக்குரிய புதிய விளக்கம் தந்து எழுதப்பட்டதாகும். இவை போன்ற புதினங்கள் சில பெண் சமுதாயத்தைப் புதியபார்வையிலும், புதிய கண்ணோட்டத்திலும் உணர்த்திய படைப்புகளாகும்.

### உழைக்கும் வர்க்கமும் மார்க்சிய செல்வாக்கும்

மார்க்சிய செல்வாக்கு தமிழ்மண்ணில் கால் தொள்ளத் தொடங்கியபோது அதன் தாக்கம் பெற்ற படைப்பாளர்கள் புதினங்கள் வழி ஆழமான பொதுவுடைமைக் கருத்தியலைப் பதிவு செய்தனர். ஆண்டான்-அடிமை பாகுபாடு, ஆதிக்க சக்தியின் மேலாண்மைப் போக்கு, விவசாய மக்களின் சமூக அவலம்; சமூக அமைப்பில் மார்க்சியம் தீவிரப்படுத்தப்படல் முதலிய பார்வைகளில் பொதுவுடைமை இயக்கப் புதினங்கள் வெளிவரத் தொடங்கின. உழைக்கும் மக்களின் உணர்வுகள், பொதுவுடமை இயக்கப் படைப்பாளிகள் மூலம் நடப்பியலோடு வெளிப்படுத்தப்பட்டன. தொ.மு.சி. ரகுநாதன் எழுதிய பஞ்சும் பசியும் (1953) என்னும் புதினம் தமிழில் தோன்றிய முதல் சோசலிச நடப்பியல் புதினம் ஆகும். உழைப்பாளி வர்க்கம் தங்களைப் பாதுகாத்துக் கொள்ளவும், முதலாளித்துவ ஆதிக்க உணர்வைத் தட்டிக்கேட்கவும் ஒருமித்த சங்கம் தொடங்கிப் போராட வேண்டும் என்பதை வலியுறுத்துகிறது. தமிழில் தோன்றிய முதல் மார்க்சிய புதினம் என்பதோடு தமிழிலிருந்து அயல்நாட்டு மொழியில் மொழிபெயர்க்கப்பட்ட முதல் புதினம் என்ற பெருமையும் இதற்கு உண்டு.

பொதுவுடைமை இயக்கப் புதினங்களில் தொழிற்சங்க வளர்ச்சி, வர்க்கப் போராட்ட உயர்வு, தொழிலாளர் புரட்சி, பாட்டாளி மக்களின் வாழ்க்கைப் போராட்டம் முதலியவை மனிதநேயத்தோடும் நடப்பியல் பார்வையோடும் சிந்திக்கப் பட்டன. முற்போக்குச் சிந்தனை என்ற வகையில் இத்தகைய புதினங்களைக் கருதலாம். டி.செல்வராஜின் மலரும் சருகும் (1967), தேநீர் (1973) மூலதனம் (1978) கு. சின்னப்ப பாரதியின் தாகம் (1974) சங்கம் (1985) சர்க்கரை (1999) பொன்னீலனின் கரிசல் (1976) தனுஷ்கோடி ராமசாமியின் தோழர் (1985) முதலியன குறிப்பிடத்தக்கன. தலைமுறைகளுக்கிடையே ஏற்படும் சமூக மாற்றங்களைச் சமூக நடப்பியலோடு காட்டுவது மலரும் சருகும் என்ற புதினம். இது மூன்று தலைமுறைகளில் நிலவும் வாழ்க்கைப் போராட்டத்தைச் சித்திரிக்கிறது. தோட்டத் தொழிலாளர்களை முதலாளித்துவம் எவ்வாறு அடிமைப் படுத்திக் கொடுமை இழைக்கிறது என்பதை விளக்கும் புதினம் 'தேநீர்'. இது நிலபிரபுத்துவத்திற்கு எதிரான புதினம் ஆகும். சங்கம் என்ற புதினம் கொல்லி மலைவாழ் மக்கள் நாகரிகத்தில் சுவடு

பதியாமை, அறியாமை இவற்றைக்காட்டிச் சங்கம் போன்ற அமைப்பு மனிதர்களுக்குத் தேவை என்பதை வற்புறுத்தும். பொன்னீலன் முற்போக்குத் தளத்திலிருந்து கொண்டு கரிசல் கொள்ளைக்காரர்கள், புதிய மொட்டுகள், புதிய தரிசனங்கள் முதலிய புதினங்களை எழுதியிருந்தாலும் கரிசல் மூலம் அவர் அடைந்த வெற்றி குறிப்பிடத்தகுந்தது.

முற்போக்கு என்ற தளத்தில் இயங்கிவரும் எழுத்தாளர்களில் சு. சமுத்திரம் சமூக அக்கறையோடு எழுதுவதை அவர் படைத்த கிராமப் பின்னணிக் கதைகளில் காணலாம். 'ஒரு கோட்டுக்கு வெளியே' என்ற புதினம் பனையேறி வகுப்பைச் சார்ந்த ஒருத்தி, பணக்கார வர்க்கத்தைத் தனியளாக எதிர்த்து நின்று, தன்னை ஒதுக்கிய வர்க்கத்தை விலக்கி வைத்துச் சேரியில் பறையரோடு வாழச் செல்வதைப் படம்பிடிக்கிறது. தலித் மக்களின் வாழ்வில் ஏற்படும் சிக்கல்களையும், அதிகாரங்களையும் பயன்படுத்தி அம் மக்களின் உடைமைகளையும் உரிமைகளையும் பறிக்கப்போய் அவற்றை மக்கள் மீட்டுக்கொள்ளப் புரட்சியில் இறங்குவதை ஊருக்குள் ஒரு புரட்சி என்னும் புதினம் காட்டுகிறது. வாடாமல்லி (அலிகள் பற்றிய கதை) பாலைப்புறா (எய்ட்ஸ் நோயாளி பற்றிய கதை) ஆகிய சு. சமுத்திரத்தின் புதினங்கள் பரிவுணர்ச்சியோடு கூடிய மனிதநேயமிக்க புதினங்கள்.

பூமணி எழுதிய வெக்கை, பிறகு, நைவேத்யம் ஆகிய மூன்று புதினங்களுமே குறிப்பிடத்தக்கவை. வர்க்கப் போராட்டம் பற்றியது வெக்கை. வறுமையும் சாதியும் ஒரு கிராமத்தின் சிதைவிற்குக் காரணமாவதைக் காட்டும். பிறகு என்னும் புதினம், சக்கிலியக் குடிமக்களைக் கீழ்ச்சாதி என்று இழிவாகக் கருதியும், அவர்களை அடக்கியும் ஒடுக்கியும் தம் குலத்தொழிலிலிருந்து வேறு திசைகளை நாடும் போது அக்குலத்தோர் மறுக்கப்படுவதையும் சுட்டிக்காட்டுகிறது.

மார்க்சிய செல்வாக்கின் காரணமாகச் சமயச்சார்புடன் கூடிய எழுத்துக்களைக் கிறித்தவ எழுத்தாளர்களில் சிலர் மேற்கொண்டனர். இவர்களில் குறிப்பிடத்தக்க டேவிட் சித்தையா, ஜாக்கப், ஐசக். அருமைராசன் முதலியோர் சில நல்ல புதினங்கள் வழி அறியப்பட்டவர்கள். புரட்சிக்கார அரசியல் கைதியும், அவன் காதலி பற்றியுமான கதை டேவிட் சித்தையாவின் 'சிறைச்சாலை என்ன செய்யும்' என்ற புதினமாகும். டேவிட் சித்தையா எழுதிய குறிப்பிடத்தக்க மற்றொரு படைப்பு 'வெறும் சிலைகள்'. ஜாக்கப் தமது வாழ்க்கையின் பல்வேறான

கட்டங்களில் அநுபவித்த நிகழ்ச்சிகளை வாத்தியார் என்ற புதினத்தில் இயல்புபடச் சித்திரித்துள்ளார். ஐசக். அருமைராஜனின் கீறல்கள் (1975) பொதுவுடைமைப் பார்வையில் கிறித்தவ மதத்தின்பால் மாற்றம் தேவை என்பதைக் கிறித்தவ மக்களைப் பின்னணியாகக் கொண்டு படைக்கப்பட்ட புதினமாகும்.

ஜெயகாந்தன் கம்யூனிச பின்னணியில் வளர்ந்து திராவிடப் பார்வையில் கண்ணோட்டம் செலுத்தித் தேசிய நீரோட்டத்தில் கலந்தவர்; கரைந்தவர். அவர்க்கென்று தனியான சுயமுகம் ஒன்று உண்டு. அரசியல் கலாச்சார இயக்கங்களில் தம்மை ஈடுபடுத்திக் கொண்ட அவர், வாழ்க்கை நுகர்ச்சிகளை அறிவார்ந்த நிலையில் சிந்தித்தவர். அவற்றிற்கேற்பப் புதினங்களில் பாத்திர உருவாக்கத்தை அறிமுகப்படுத்தியவர். குறுநாவல்களில் சேரி மக்களின் நிச வாழ்க்கையை அசலான நடப்பியல் சூழ்நிலையில் காட்டிய அவர், நடுத்தர வர்க்கத்தின் மன உணர்ச்சிகளை உளவியல் அணுகு முறையில் நாவல்களில் உணர்த்தியவர். ஏழைத் தொழிலாளி சுரண்டப்படுவதை 'யாருக்காக அழுதான்' (1962) என்ற புதினம் வழி உணரலாம். ஏழைத் தாயையும் அவள் மகனையும் பற்றிய சித்திரம் 'உன்னைபோல் ஒருவன்' (1964). ஜெயகாந்தனின் பின்னைய படைப்புகள் பல உத்தியிலும் உள்ளடக்கத்திலும் வேறுபட்டவை. இசைக் கலைஞன் ஒருவன் யாரோடும் சமரசம் செய்துகொள்ள இயலாத அந்நியவயப்பட்டவனாக விளங்குவதைச் சித்திரிப்பது இவர் எழுதிய 'பாரிசுக்குப் போ' (1966). இவர் எழுதிய சில நேரங்களில் சில மனிதர்கள், கங்கை எங்கே போகிறாள்? முதலியவை குறிப்பிடத்தக்க புதினங்கள் ஆகும்.

**உத்தி மாற்றங்கள்**

எழுபதுகளில் புனைவியல் பாங்காகக் கதை கூறுவதில் சில மாற்றங்கள் தென்படலாயின. சமூக உளவியல் சிந்தனை குடும்பப் பின்னணியில் படைக்கப்பட்டது. உத்தியும் உள்ளடக்கமும் புதிய தளங்களில் சொல்லப்பட்டன. லா.ச.ரா., ஹெப்சிபா சேசுதாசன், நகுலன், அசோகமித்திரன், சா. கந்தசாமி, கிருத்திகா போன்றோர் புதின உலகைப் புதியதொரு தளத்தில் படைத்துக்காட்டினர்.

இயந்திரப் புரட்சிக்கும், அறிவியல் வளர்ச்சிக்கும் புதுப்புது உத்திகளுக்கும், சமூக மாற்றத்தின் அடையாளங் களுக்கும் புதின உலகம் தன்னை முழுமையாக ஒப்படைத்த காலம் என இக்காலங்களைச் சுட்டலாம். இடதுசாரி படைப்பாளிகளின் எண்ணங்கள் முழுமையானதொரு

நடப்பியல் தளத்தில் இயங்கின; சம கால அரசியல் வாழ்க்கையும், பொருளாதார நலிவும் கலை நேர்த்தியோடு கூடிய நடையும் உண்மைத் தன்மைக்கான பார்வையில் தர முயன்றன. இத்தகு சூழ்நிலையில் இரண்டு வகைகளிலான படைப்பாளிகள் தம் படைப்புகளை வடித்தனர். முற்போக்குவாதிகள் என்றொரு வகையில் இயங்கி வருவோர் ஒருபுறமாக மற்றொரு புறத்தில் தி.ஜானகிராமன், லா.ச.ரா., ஆ.மாதவன் அசோகமித்திரன், இ.பார்த்தசாரதி, வண்ணநிலவன் முதலியோர் இயங்கிவந்தனர்.

பொழுதுபோக்கு என்ற ஓரம்சத்தில் வெகுசன ஊடகங்களில் தம் பன்முகச் சரக்குகளை வாசகர் விரும்பும் வண்ணம் கவர்ச்சியான நடையில் எழுதிவந்த சுஜாதா, பாலகுமாரன், வேணுகோபாலன் முதலியோர் வேறு ஒரு திசையில் வாசகர் வரவேற்பைப் பெற்றிருந்தனர்.

மனித மன உணர்வுக்கு மதிப்புக் கொடுத்து மனிதனின் அகப்புற வெளிப்பாடுகளைக் காட்டுவதில் லா.ச.ரா. அசோக மித்திரன், வண்ணநிலவன், நகுலன், நீல.பத்மநாபன் குறிப்பிடத் தக்கவர்களாக இருந்து வந்துள்ளனர்.

புராணக் கதைமாந்தர்களுக்குப் புத்துயிர் கொடுத்துப் படைக்கப்பட்ட எம்.வி.வெங்கட்ராமனின் நித்திய கன்னி அறுபதுகளின் தொடக்கத்தில் வெளிவந்தது. இவருடைய இருட்டு, உயிரின் யாத்திரை, காதுகள் ஆகிய புதினங்கள் மனிதனின் ஆத்ம உணர்வோடும் அகமனத்தோடும் உரையாடிக் கொள்ளும் தனிமனித வாழ்க்கை நுகர்ச்சி, அக மெய்ம்மையின் பல கோண வெளிப்பாடுகள் ஆகும்.

‘கிருத்திகா’ புராண இதிகாசங்களை வேறுவகையில் மீட்டுருவாக்கமாக்கிப் புதினங்கள் படைத்தார். சமூக உள்ளடக்கத்திற்குரிய சில புதிய களன்களைப் புராண இதிகாச சாயலிலிருந்து மாறுபட்ட பார்வையில் தந்தவர் கிருத்திகா. தர்மஷேத்ரா (1969) சத்யமேவ(1971), நேற்றிருந்தோம் (1975) முதலிய புதினங்கள் குறிப்பிடத்தக்கவை. பெண்ணின் ஆளுமை உலகத்தைப் ‘புதிய கோணங்கி’ (1972) படம்பிடித்துக் காட்டுகிறது. தலைமுறை இடைவெளிமாற்றம், கூட்டுக் குடும்பச் சிதைவு இவற்றை ‘நேற்றிருந்தோம்’ (1975) என்ற புதினம் பதிவு செய்கிறது.

கதை சொல்வதில் நடப்பியல் தன்மையும், உண்மை வாழ்வின் பிரதிபலிப்பையும், கதாநாயகத் தன்மையற்ற பாத்திர வார்ப்பும் பின்னோக்கு உத்தியும் கொண்டு ஒரு நிகழ்ச்சியில்

ஒருவனது வாழ்க்கை எப்படி இருக்கிறது என்பதை வித்தியாசமான முறையில் காட்டுகிறது ஜி.நாகராஜனின் 'நாளைமற்றொரு நாளே!' என்னும் புதினம். மனிதன் ஒவ்வொரு கணத்திலும் வெவ்வேறு பண்புக் கூறுகளைக் கொண்டவன் என்பதை உணர்த்துகிறது.

உத்திமுறைகளில் குறியீடும் படிமமும் கையாளப்பட்டன. நனவோட்டம் ஒரு சில எழுத்தாளர்களிடம் காணப்பட்டதுபோல, குறியீடும் படிமமும் மிகச்சில புதினங்களில் முழுமையுமான பார்வையில் நோக்கப்பட்டன. 'சாயாவனம்' (சா.கந்தசாமி) இவ்வகையில் குறிப்பிடத்தக்க புதினமாகும். கரும்பு ஆலை நிறுவுவதற்காகக் காட்டில் உள்ள மரங்களை வெட்டி அழித்து நிலத்தைச் சமன்படுத்தும் முயற்சியில் இறங்கும் ஒருவனைப் பற்றிய கதை. இவ்வாறு அழிப்பது நிலபிரபுத்துவத்தை அழித்து வெற்றி கொள்வதாகவும் எதிர்த்துப் போராட வேண்டிய களனாகச் சமுதாயம் உள்ளதாகவும் கருத முடிகிறது. தனிமனிதப் போராட்டமே சாயாவனத்தின் கருவாகவும் கொள்ளமுடியும். மனிதனின் போராட்டமே புதுமையையும் மாற்றத்தையும் நிலத்தில் உருவாக்கியே தீரும் என்பது குறியீடாகக் காட்டப் படுகிறது. இவரது ஏனைய புதினங்கள் மாறுபட்ட போக்கினை உடையவை. கதை சொல்லும் பாணியில் தமக்கென ஒரு பாணியைக் கொண்ட இவரது தொலைந்து போனவர்கள் என்ற புதினம், நண்பர்களின் பழைய முகங்களைத் தேடும் முயற்சியை மேற்கொள்ளும் ஒருவன், அவர்களின் நட்பைப் புதுப்பிக்கும் முயற்சியில் ஈடுபடும் ஓர் அனுபவத் தேடலாகும். வாழ்வின் நடப்பியல் போக்கும், மனிதர்களின் தனிப்பட்ட குணாதிசயங்களும், இவரது படைப்பில் காணப்படும் நுட்பங்களாகும். கதை சொல்லும் உத்தியிலும் ஆழமான கலைத் திறனைக் காண இயலும். சாகித்ய அக்காதெமி பரிசு பெற்ற விசாரணைக் கமிஷன் என்னும் புதினம் சமகால உணர்வை வெளிப்படுத்துவதில் கூர்மையான பார்வை உடையது.

மனிதமன உணர்வுகளின் போக்கினை உளவியல் கூறுகளோடு சார்த்திப் பார்க்கும் போக்கு ஜெயகாந்தன், தி.ஜானகிராமன், லா.ச.ரா., இந்திரா பார்த்தசாரதி புதினங்களில் தனித்தன்மை பெற்றது. இவர்களில் தி.ஜானகிராமன் படைப்புலகில் பாலுறவு ஒரு சிக்கலாகவே காட்டப்பெறுகிறது. (மோகமுள், அம்மாவந்தாள், மரப்பசு) இவர் படைக்கும் பெண்களில் குடும்ப நெறியில் மாறுபட்டிருப்பவர்களும் உண்டு. கணவன்- மனைவி இவர்களுக்கிடையே பாலுறவின் தொடர்பில்

ஏற்படும் ஆதிக்கம் ஒரு மௌனப் போராட்டமாகவே இவரது கதைகளில் இயங்குகிறது.

உத்திமுறையில் நனவோட்டத்தைத் தம் புதினங்களில் பெரிதுமாகப் பயன்படுத்துபவர் லா.ச.ரா. கவித்துவமான உரைநடையில் உள்மனத்தின் உணர்வுச் சுழியை வெளிப்படுத்தும் படியான போக்கு இவரது தனித்தன்மையைக்காட்டும். ஒரு தாயின் சாபத்தால் ஏற்படும் மகன் குடும்பப் பாதிப்புகளைப் 'புத்ர' (1968) கூறுகிறது. நிறைவேறாக் காதலின் வெளிப்பாட்டில் பழைய நினைவுகள் அலைக்கழிப்பதை அழகிய வருணனையில் காட்டும் இவரது மற்றொரு புதினம் அபிதா.

அரசியல் வர்க்கத்தின் குறுக்கு வழியிலான தேட்டம், வேட்டை இவற்றோடு தலைநகரில் நடக்கும் போலி வாழ்வின் பகட்டுத் தன்மையை எள்ளல் கலந்த நடையில் காட்டும் இந்திரா பார்த்தசாரதியின் தந்திர பூமி (1969), சுதந்திர பூமி (1970) ஆகியவை குறிப்பிடத்தக்கவை. சம கால வரலாற்று உணர்வோடு வெண்மணி நிகழ்ச்சியை மையமிட்ட கதையாக, 'குருதிப்புனல்' புதினம் விளங்குகிறது.

உத்திமுறையில் சிறந்த குறியீட்டுத் தன்மை பெற்ற நகுலனின் நிழல்கள், நாய்கள் குறிப்பிட்டுச் சொல்லும்படியான படைப்புகள் ஆகும். அசோகமித்திரன் படைப்புகள் உண்மைத் தன்மையோடு வாழ்க்கை நுகர்ச்சிகளை உணர்த்துபவை. இவருடைய கரைந்த நிழல்கள் திரைப்படத்துறை தொடர்பானது. தண்ணீர் (1973) என்னும் புதினம், தண்ணீர்த் தட்டுப்பாட்டால் அவதியுறும் மக்களின் அன்றாட வாழ்க்கைச் சித்திரிப்பு; இந்திய விடுதலைக்கு முன்னும் பின்னுமான காலங்களை உள்ளிட்டது. 'பதினெட்டாவது அட்சக்கோடு' (1977), இது தனிமனித வாழ்வின் நுகர்ச்சியை உணர்த்துகிறது. எண்பதுகளில் இவர் எழுதிய ஆகாயத் தாமரை, ஒற்றன், மானசரோவர் ஆகிய மூன்று புதினங்களுமே குறிப்பிட்டுச் சொல்லக் கூடியவை. இவை மூன்றுமே மனித நடத்தையின் அகப்புறச் சித்திரிப்புகளை வித்தியாசமான பார்வையில் தருபவை. மானசரோவர் குறியீட்டுத் தன்மை கொண்ட புதினம்.

புதினங்களில் இடம்பெறும் நகர்நாகரிகம் பெரும்பாலும் தனிமனித வாதத்திற்கும் மேலாண்மைப் போக்கிற்கும் பகட்டு வாழ்விற்கும் போலி நாகரிகத்திற்குமான அடையாளங்களைக் காட்டியது. நகர வாழ்க்கையின் வெவ்வேறு வாழ்க்கைப் போக்குகள் பலநிலைகளில் வெளிப்பட்டன.

பெருநகர வாழ்க்கையையும் அங்கு வாழும் மனிதர்களின் அகப்புறப் போராட்டங்களையும் அநுபவ வெளிப்பாடாகப் புதினங்களில் சித்திரிக்கப்படுவதனைக் காணலாம். சுந்தர ராமசாமியின் புளிய மரத்தின் கதை, ஜே.ஜே. சில குறிப்புகள் முதலியவை சுட்டிக்காட்டப்படவேண்டிய புதினங்களாகும். சுற்றுப்புற இயற்கையின் சூழல் பாதிக்கப்படுவது கூட மனித உணர்வுகளைப் பாதித்துச் சூழ்நிலை மாற்றத்தைத் தோற்றுவிக்கும் என்பதை ஒரு புளியமரத்தின் கதை கூறுகிறது. மண்ணும் மனித உறவுகளும் ஒரு மரம் வெட்டப்படும்போது எத்தகைய பாதிப்படைகின்றன என்றவாறு இப்புதினத்தின் களம் பின்னப்பட்டிருப்பது புதுமை. தமிழ்ப்புதின வளர்ச்சியில் ஒரு புதிய போக்கு என்ற தளத்திற்கு எடுத்துச் சென்றவர்களில் இவரும் ஒருவர். இவரது ஜெ.ஜெ. சில குறிப்புகள் 'அறிவுஜீவி'களுக்கான புதினமாகக் கருதப்படுகிறது. ஜெ.ஜெ.யின் வாழ்க்கையை ஆசிரியர் கூறுவது ஒரு பகுதியாகவும், அவரைப் பற்றி ஏனையோர் என்ன நினைக்கிறார்கள் என்பதையும் பதிவு செய்யும் இப்புதினம் புதியதொரு முயற்சி. வாழ்வின் நடைமுறைக்கு அப்பாற்பட்டு அறிவும் சிந்தனையும் கொண்டவர்கள் தமக்கும் சமூகத்திற்கும் உள்ள உறவுமுறைகளையும் அறிவு சார் விசாரணையுடன் அலசும் இப்புதினம், இருத்தலியல் சாயலில் அமைந்தது.

ஒரு நகரம் தொழில் மயமாகும்போது அதனால் ஏற்படும் சமூக மாற்றம், மரபு மாற்றம், மனத்தளவில் தோன்றும் உணர்ச்சிகள், உறவுகளின் சிதைவு, புதிய நம்பிக்கை துளிர்த்தல் முதலியவற்றைப் பதிவு செய்துள்ளதை விட்டல்ராவின் போக்கிடம் (1977) என்னும் புதினத்தில் காணலாம். சேர்வராயன் மலைப்பகுதியில் உள்ள டேனி பேட்டையில் கிடைக்கும் 'மாக்னசைட்' கண்டுபிடிப்பால் அந்தப் பகுதி மக்களின் உறவுகளில் பாதிப்பு ஏற்படுவதையும், சமூக உறவுகளின் கட்டுமானம் தகர்ந்து போவதையும் அழுத்தமாகச் சொல்கிறது. இவரது குறிப்பிடத் தகுந்த மற்றொரு புதினம் 'நதிமூலம்'. மாத்வ சமூக மரபுகள் அவர்களின் உண்மை முகங்கள், ஆகியவற்றையும் விடுதலைக்குப் பின்னும் அச்சமூகத்தில் மாறுதலையடையாத போக்கையும் காட்டுகிறது அப்புதினம்.

மேலைநாட்டுத் தாக்கத்தையும், தமிழ் உரைநடையில் மாறுபட்ட நடையையும் கொண்டு புதினங்கள் படைத்தவர் சுஜாதா. குறிப்பிட்ட காலம்வரை இவருக்கும் வெகுசன வாசகர்கள் இருந்துள்ளனர். பெருநகர வாழ்க்கையைப் பல

கோணங்களில் கதையாக்கத் தெரிந்த இவர், அறிவியல் சார்ந்த புதினங்களைத் தமக்கே உரிய பாணியில், உருவாக்கி ஒருபுதிய மரபைத் தோற்றுவித்தவர். நைலான் கயிறு, கனவுத் தொழிற் சாலை, கரையெல்லாம் செண்பகப்பூ முதலிய புதினங்கள் குறிப்பிடத்தகுந்தவை. இவருடைய 'ஒன்று மற்றொன்று' என்ற புதினம் இந்திய, அமெரிக்க நாகரிகம், மக்களின் பொருளாதாரம் ஆன்மீகம் ஆகியவற்றில் எந்த அளவிற்குப் பாதிப்பினை ஏற்படுத்தியிருக்கிறது என்பதைச்சுட்டும்.

## நுண்கலைப் புதினங்கள்

நுண்கலை பற்றிக் கூறும் புதினங்கள் தமிழில் குறைவே. கொத்தமங்கலம்சுப்பு எழுதிய தில்லானா மோகனாம்பாள் நாதஸ்வரக் கலைஞனுக்கும், ஆடல் நாயகிக்கும் இடையே எழும் உணர்ச்சிப் போராட்டத்தைச் சித்திரித்தது. இது தொடர்பான கல்கியின் வரலாற்று நாவல்களில் ஒன்றான சிவகாமியின் சபதம் இங்குக் குறிப்பிடத்தக்கது. ந.சிதம்பர சுப்பிரமணியம் எழுதிய இதயநாதம் ஓர் இசைக்கலைஞனைப் பற்றியது. ஓவியக்கலையின் அருமையையும், நவீன ஓவியங்களின் பிரதிபலிப்பையும், கொண்டது, விட்டல்ராவ் எழுதிய காலவெளி என்ற புதினம். இவரது 'வண்ணமுகங்கள்' என்னும் புதினம், கன்னட நாடகக் கலை உலகம் திரைப்பட ஆளுமையால் மெல்ல மெல்ல மறைந்து வருவதையும், அந்நாடகக் குழுவினரிடையே அதனால் ஏற்படும் வாழ்க்கை மாற்றத்தையும் எடுத்துக்காட்டுகிறது.

தஞ்சைப்பாணியில் ஓவியக்காரர்களின் அகமும் புறமுமான உலகை இயல்பான நடைச்சித்திரிப்பில் செதுக்கிக் காட்டுகிறது தஞ்சை ப்ரகாஷின் 'கள்ளம்' என்னும் புதினம். கூத்துக்கலைகளில் ஒன்றான தெருக்கூத்து பற்றிய நுணுக்கமான விபரங்களையும் அக்கலையின் வழியே மாந்தரின் மனஉணர்ச்சியைக் காட்டியும் கூத்து நடத்தும் குழுக்களிடையே சாதியச் சிக்கல் இருப்பதை உணர்த்தியும் நடப்பியலோடு நடைபோடும் புதினம் ப.ஜீவகாருண்யனின் களரி என்னும் புதினம்.

திரைப்படக் கலையை மையமாக்கிய புதினங்களுள் முன்னோடியானது நாற்பதுகளில் வெளிவந்த கி.ரா. எழுதிய கந்தருவ உலகம். திரைப்பட உலகின் சிக்கல்களையும், அதன் செல்வாக்கையும் பின்னர்வந்த புதின ஆசிரியர்கள் சிலர் அந்த உலகச் சூழலைப் பல்வேறு வகைகளில் சித்திரித்துள்ளனர்.

அசோகமித்திரனின் கரைந்த நிழல்கள், நா.பா.வின் நீல நயனங்கள், சுஜாதாவின் கனவுத் தொழிற்சாலை முதலியன இவ்வகையின. கரைந்த நிழல் குறிப்பிட்டுச் சொல்லும்படியான புதினம். இதில் திரைப்படத் துறை ஒரு கனவுலகமாக உள்ளது என்பதைத் தம் அனுபவங்களின் உணர்வால் வெளிப்படுத்தி யுள்ளார் ஆசிரியர். ஜெயகாந்தன் எழுதிய சினிமாவுக்குப் போன சித்தாளு திரைப்பட உலகை மையமிட்டது அன்று. அது திரைப்பட நடிகரின் தலைமை வழிபாட்டுச் செல்வாக்கு பாமர மக்களிடம் எத்தகைய தாக்கத்தை ஏற்படுத்தியுள்ளது என்பதை உணர்த்துகிறது. பாமர மக்களின் அறியாமையால் அவர்களைக் கட்டுக்குள் வைத்திருக்கும் திரைப்பட உலகம் தமிழ் மக்களிடம் ஆளுமை செலுத்தியுள்ளதைக் காட்டிப் பண்பாட்டுச் சிதைவுக்கு அது காரணமாய் இருப்பதை உணர்த்தியுள்ளார் ஜெயகாந்தன்.

**தொடர்கதைகளில்**

இதழ்களுக்காகவே எழுதிவந்த மரபு விடுதலைக்கு முன்பும், விடுதலை காலகட்டத்தும், அதன்பின்னும் தொடர்ந்தது. தொடர்ந்தும் வருகிறது. எல்லாத் தரப்பினரையும் மகிழ்விக்கும் படியான திரைப்படத்தனமிக்க புதினங்களை வாசகர் விரும்பியபடி தருவதே இதழ்த் தொடர்க்கதை போக்கு. மரபு ரீதியான கதை கூறல், குடும்பப் பாங்கான நிகழ்ச்சிகள், திடீர் திருப்பங்கள், அந்தரங்க வருணனைகள், எல்லோர்க்கும் புரியும்படியான நடை, முதலிய போக்குகளில் தொடர்கதைகள் அமைவன. வரலாற்றுப் புதினங்களாயினும் இத்தகு போக்குகளில் தாம் இயங்கின. அரு. ராமநாதனின் வீரபாண்டியன் மனைவி என்ற வரலாற்றுப் புதினம் இதற்குச் சற்றே விதிவிலக்கு. சாண்டில்யன், கோவி.மணிசேகரன், மணியன், சுஜாதா, பாலகுமாரன், வேணுகோபால், மற்றும் பெண் எழுத்தாளர்களில் சிலர் குறிப்பாக, சிவசங்கரி, இந்துமதி, வாஸந்தி, லட்சுமி சுப்பிரமணியன், அனுராதா ரமணன், ஜோதிர் லதா கிரிஜா, முதலியோர் தொடர்கதைகள் வழி அறியப்பட்டவர்களே.

பிரபஞ்சன் தொடர்கதைகள் வழியே தமக்கென்று தனி இடம் பிடித்தவர். சந்தியா, ஆண்களோடு பெண்களும், காதல் என்னும் தோணியிலே முதலியவை குறிப்பிடத்தக்கவை. பெண்ணியச் சிந்தனை, இத்தகு கதைகளில் வெளிப்பட்டுள்ளது. இவர் எழுதிய சுகபோகத் தீவுகள் அரசியல் பற்றியது. இவருடைய 'வானம் வசப்படும்' என்னும் புதினம் பிரெஞ்சு ஆட்சியின் கீழ் நிலவிய புதுச்சேரியைக் களனாகக் கொண்டது. தொடர்கதைகள் வழியே அறியப்பட்ட வையவன் பல்வேறுபட்ட

பண்பு வார்ப்புகளில் குடும்பப் பாங்கான கதைகள் பல எழுதி வருபவர்.

## புதிய எதிர் மாற்றத் திசைகள்

தொண்ணூறுகளில் புதின உலகம் புதிய பரிமாணங்களைக் காணத் தொடங்கியது. புதிய எழுத்தாளர் பலர் உருவானார்கள். சமூகம் கூர்மையான பார்வைக்குட்பட்டது. கணினியின் பயன்பாடு புதிய நிகழ்ச்சிப் பின்னணிக்கு உதவியது; மேலை நாட்டு இலக்கிய உத்தி புதிய கோணங்களில் பரிசோதனை செய்து பார்க்கப்பட்டது; தமிழ் மொழிநடை கூர்மை பெற்றிருந்தது போய், ஒருவகையில் சிதைவையும் தேய்மானத்தையும் கண்டது. நவீனத்துவம் என்ற பெயரில் பிறழ்வுநிலை எழுத்துகள் உருவாகத் தொடங்கின. பின் நவீனத்துவம் என்ற பெயரில் கட்டமைப்பு, கட்டுடைத்தல், மாயா எதார்த்தவாதம் முதலிய மேலைநாட்டு அணுகுமுறைப் புதினங்கள் எழுதப்படலாயின. பிறழ்வு எழுத்துகள் பின் நவீனத்துவத்தின் ஒரு கூறாக அறிமுகமாகிய பிறகு, வாழ்க்கையின் நேர்க்கோட்டு எழுத்துகள் பரிசோதனை முறையில் புதின உலகில் நுழைந்தது. கால ஒழுங்கு முறையற்ற பாணியில் மூடி மறைக்கப்படுபவை நடப்பியலுக்கு அப்பால் காட்டப்படுகின்றன. சமூக நடைமுறையைப் புதிய கோணத்தில் 'மனவக்கிரத்தோடு' காட்டுவதாகக் கருதப்படும் பாணி இன்றைய படைப்புலகில் இடம்பிடிக்க முயல்கிறது. சாரு நிவேதிதாவின் எக்ஸிஸ்டென்சியலும் சில பேன்சி பனியன்களும், ஜீரோ டிகிரி முதலியன இத்தகையன.

சோதனை முறை எழுத்துகள் பெரும்பாலும் மேனாட்டுச் சரக்கே. அதை ஒரு புதிய முயற்சியாகச் செய்து பார்ப்பவர் களாகத் தமிழவன், சாரு நிவேதிதா, கௌதம நீலாம்பரன், கோணங்கி ச. ராசநாயகம், எம்.ஜி.சுரேஷ் முதலியோரைக் குறிப்பிடலாம். தமிழவனின் ஏற்கனவே சொல்லப்பட்ட மனிதர்கள், சரித்திரத்தில் படிந்தநிழல்கள், ஜி.கே. எழுதிய மர்ம நாவல் முதலியன இவ்வகையில் புதிய சோதனை முயற்சிகளாகும். நாகர்கோயில் வட்டாரத்தில் வாழ்ந்த குடும்பத்தின் மூன்று தலைமுறைகள் ஏற்கனவே சொல்லப்பட்ட மனிதர்களில் கூறப்படுகின்றன. தமிழவனின் அண்மைய புதின்மான 'ஜி.கே. எழுதிய மர்ம நாவல்' மேற்கத்திய நாவலொன்றின் பாதிப்பு. பின் நவீனத்துவத்தின் சாயலை இதில் காணலாம். இந்நூல் மர்ம

நாவலாக இருந்தாலும் அது அமைத்துக் கொண்ட களமும் பின்னணியும் கதை கூறும் முறையும் புதிது.

மார்க்சியம் கூர்மையான நோக்கில் செயல்பட்டது. இது முற்போக்குவாதிகளால் இன்றும் மாறாதிருக்கிறது என்ற கருத்து ஒருபுறமிருந்தாலும், மாறிவரும் காலச்சூழலுக்கு ஏற்ப மார்க்சியம் தன்னை ஒருவகையில் புதுப்பித்துக் கொண்டு வருகிறது. புதிய மார்க்சிய கண்ணோட்டம் என்ற சிந்தனைத் தளம் அண்மைக் காலத்தில் பேசப்படுகிறது. அண்மைக்காலத்தில் சோவியத் நாட்டில் நிகழ்ந்த கம்யூனிச வீழ்ச்சியை மையமாகக் கொண்டது. ஜெயமோகனின் 'பின்தொடரும் நிழலின் குரல்' என்னும் புதினம், சோவியத் நாட்டில் நிகழ்ந்த கம்யூனிசப் போக்கின் வீழ்ச்சியை மையப்படுத்த முனைகிறது. இவரது விஷ்ணுபுரம், தொன்மக் கற்பனையும், வரலாற்றுத் துணுக்குகளும், சமய தத்துவ ஆன்மத் தேடலுமான ஒரு புதினமாகும். இதில் மார்க்சியக் கண்ணோட்டம் பல்வேறு கோணங்களில் காட்டப்பெற்றுள்ளது. அண்மைக்காலப் புரட்சியில் மார்க்சிய வாதிகளைக் கடுமையாக விமர்சிக்கிறது. இதில் ஒரு புறம் மார்க்சியத்தின் கோட்பாடுகளில் ஒன்றான யதார்த்த பார்வை, இன்று திசைமாறி வேறு ஒரு தளத்தில், அதற்கு ஏதிரான போக்கில் செயல்பட்டு வருவதையும் காணலாம். நடப்பியல் என்ற ஒன்று மரித்துப் போய்விட்டது என்று சொல்வோர்க்கு மத்தியில், நடப்பியலை ஆழமாக உள்ளார்ந்து அணுகி எழுதப்பட்ட புதினங்களாகச் சீதளமாதாரி (2000) இரத்த உறவு (2000) ஆகியவற்றைக் கருதலாம். பெருமாள் முருகனின் சீதளமாதாரி ஆடு மேய்க்கும் சிறுவர்களைப் பற்றிய கதை. முல்லை நில மரபின் இயற்கைச் சூழ்நிலையோடு, ஆடுகளோடு மேய்ப்புத் தொழிலை நடத்தும் சிறுவர்களின் மனச்சித்திரிப்புகள் அழகியதொரு நடப்பியலில் காட்டப்படுகிறது. யூமா வாசுகியின் இரத்தஉறவு ஒரு குடும்பத்தையும் அதன் உறுப்பினர்களையும் சுற்றிய வன்முறையின் கொடூரம் அழுத்தமான நடப்பியல் பதிவுகளோடு கூறப்பட்டுள்ளது. நடப்பியலான நெறி மறைய இயலாது என்பதற்கு இவை எடுத்துக்காட்டாய்க் கொள்ளத்தக்கன.

யதார்த்தத்திற்கு எதிரான தளத்தில் நின்று, மேல்நாட்டு இலக்கியப் பாதிப்பைப் பெற்ற சிலர், அதனடிப்படையில் எழுதி வருவதும் ஓரளவு வளர்ந்து வருகிறது. இன்னும் முழுமையாகக் காலூன்றாத அமைப்பியல், பின் நவீனத்துவம் (Post modernism)

மாயா வாத நடப்பியல் (Magic Realism) பன்முகவியம் (cubism) போன்றவற்றில் இன்றைய படைப்புலகம் சென்று கொண்டு இருக்கிறது.

பன்முகவியல் பார்வையில் எழுதப்பட்ட எம்.ஜி. சுரேஸின் 'அட்லாண்டிக் மனிதனும் மற்றும் சிலருடன், 'அலெக்ஸாண்டரும் ஒரு கோப்பைத் தேநீரும்' ஆகியவை குறிப்பிடத்தகுந்தன. மேலைநாட்டு இலக்கியப் போக்குகள், தமிழ் மண்ணில் இன்றும் பக்குவப்படாத நிலையில் உள்ளன. சிலரால் மட்டுமே புரிந்து கொள்ளும் இத்தகைய புதினப் போக்குகள் நவீனத்துவம் என்றழைக்கப்படுகின்றது. காலனிய ஆதிக்கத்தின் எதிர்ப்புக் குரலாக நவீனத்துவம் மேல்நாடுகளில் விளங்கியது. இப்போது தமிழ் மண்ணில் இத்தகைய நவீனத்துவப் போக்குகள் பரிசோதனை முயற்சியில் இருக்கின்றன. இலத்தின் அமெரிக்கா, தன் இலக்கியப் படைப்புகளில் நவீனத்துவத்தைப் புகுத்தியது. இதன் தாக்கத்தைத் தமிழ்ப் படைப்புகளில் காணமுடிகிறது. நவீனத்துவம், மரபுகளையும், தொன்மங்களையும் இனத்தின் அடையாளங்களையும் புறக்கணிக்கும் போக்குடையது, என்பதனை அண்மைக் காலங்களில் எழுதப்பட்டு வரும் சிற்சில படைப்புகள் வழி அறிய முடிகிறது.

# இலங்கை

**நா. சுப்பிரமணியம்**

ஈழத்தின் தமிழிலக்கிய வரலாற்றிலே நாவல் என்ற புனைகதை வகைக்கான தொடக்க நிலை முயற்சிகள் தமிழகத்தின் தமிழிலக்கிய வரலாற்றில் நிகழ்ந்ததுபோன்றே. கி.பி. 19ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் முளை கொள்கின்றன. ஆங்கிலேயர் ஆட்சிச் சூழலில் சமூக-பண்பாட்டு நிலைகளில் நிகழ்ந்துவந்த மாற்றங்களின் விளைபொருளாக உரைநடை எய்தத் தொடங்கிய முதன்மையாக நாவல் என்ற புத்திலக்கியம் அமைந்தது. 1885இல் வெளிவந்த சித்திலெவ்வையின் **அசன்பேயுடைய கதை** என்ற புனைகதை ஈழத்துத் தமிழ் நாவலிலக்கிய முதல்முயற்சி எனக் கொள்வது மரபாகிவிட்டது. இவ்வகையில் ஈழத்தின் தமிழ் நாவலுக்கு நூறாண்டுகளுக்கு மேற்பட்ட வரலாறு உளது. இவ்வரலாற்றுச் செல்நெறியை இவ்விலக்கிய வகையின் வளர்ச்சி நிலை அடிப்படையில் முக்கியமான நான்கு கட்டங்களாக வகைப்படுத்தலாம்.

முதலாவது கட்டம் நாவல் என்பதை ஒரு ‘கதை கூறும் முறைமை’ என்ற அளவில் மட்டும் கருதிச் செயற்பட்ட கால கட்டம் ஆகும். சமுதாயத்துக்குப் பயன்படவல்ல கருத்துக்களைப் போதிப்பதற்கான ஒரு சாதனம் என்ற நோக்கில் இக்கதை கூறும் முறைமையைப் பலர் மேற்கொண்டனர். வீரம், காதல், பாசம், சூழ்ச்சி முதலிய சார்பான சம்பவங்களுக்கு முதன்மை கொடுத்துக் கதைகள் புனையப்பட்டன. மேற்சுட்டிய **அசன்பேயுடைய கதை** முதல் 1905இல் வெளிவந்த சி.வை. சின்னப்ப பிள்ளையின் **வீரசிங்கன் கதை அல்லது சன்மார்க்க ஜெயம்** வரையான சில ஆக்கங்கள் இவ்வாறு சம்பவச் சுவைபடக் கதைகூறும் முயற்சிகளாகவே அமைந்தன. இவற்றுள் **வீரசிங்கன் கதை...** மட்டுமே ஈழம்சார் கதையம்சம் கொண்டது; யாழ்ப்பாணப் பிரதேசம் சார்ந்த வீரசிங்கன் என்ற இளைஞனின் வீரசாகசங்கள், காதல் என்பவற்றைப் புனைந்துரைப்பது. அவ்வகையில் ஈழத்தைக் களமாகக் கொண்ட முதலாவது ஆக்கம் என்ற வரலாற்று முக்கியத்துவம் இதற்கு உண்டு.

மேற்சுட்டியவாறு சம்பவங்களைப் புனைந்துரைத்தல் என்ற நிலையினின்று விலகி, சமூக மெய்ம்மையை - யதார்த்தத்தைப் பிரதிபலித்தல் என்ற வகையில் ஈழத்து நாவல் எய்திய வளர்ச்சியை இனங்காட்டி நிற்கும் முதலாவது ஆக்கமாக அமைவது 1914ஆம் ஆண்டில் வெளிவந்த **நொறுங்குண்ட இருதயம்** ஆகும். மங்களநாயகம் தம்பையா என்பவரால் எழுதப்பட்ட இவ்வாக்கம் சமகால யாழ்ப்பாணப் பிரதேச சமூகப் பிரச்சினைகளைப் பிரதிபலிக்கும் கதையம்சம் கொண்டது. பொருளாசை, அந்தஸ்துணர்வு, ஆணாதிக்க மனப்பாங்கு என்பவற்றால் பெண்ணினம் எய்தும் ‘துன்ப-துயரங்களை விவரிக்கும் இப்படைப்பு, அத்துன்ப-துயரங்களிலிருந்து விடுபடத்துடிக்கும் பெண்மையின் வீறார்ந்த உணர்வெழுச்சியையும் பதிவு செய்துள்ள வகையில் சமூக மாற்றத்தை அவாவும் இயங்கியல் சார் படைப்பாகவும் திகழ்கிறது.

இந்நாவலை அடுத்து ஏறத்தாழ நாற்பதாண்டுக் காலப் பகுதியை ஈழத்து நாவலிலக்கியம் வாசகர் மட்டத்தை நோக்கிப் பரவலாக்கப்பட்ட காலப்பகுதி எனலாம். பத்திரிகைத் தொடர் களாகவும் நூல்வடிவிலும் நாவல்கள் மற்றும் குறுநாவல்கள் பல இக்காலப் பகுதியில் பிரசுரமாயின. **இந்துசாதனம், ஈழகேசரி, வீரகேசரி, தினகரன்** முதலிய பத்திரிகைகள் முக்கிய பிரசுரக் களங்களாகச் செயற்பட்டன. இவை பரந்த வாசகர் வட்டத்தை நோக்கி நாவல்களை இட்டுச் சென்றன.

படைப்பு நிலையிலே கதைகூறும் முறைமையினின்று படிப்படியாக விடுபட்டு அநுபவங்களைப் பதிவு செய்யும் நிலையை நோக்கிய ஈழத்து நாவல் வளர்ச்சியடைந்து வந்த காலகட்டமாக இதனைக் கொள்ளலாம்.

இக்காலகட்டத்திலே முதலில் எழுதப்பட்ட சில ஆக்கங்கள் மர்மப் பண்பு சார்ந்த, கதையம்சங்களுடன் அமைந்தன. நாளடைவிலே குடும்பப் பிரச்சினைகள், சமூகப் பிரச்சினை என்பன சார்ந்த கதையம்சங்கள் முதன்மை பெறலாயின. இவ்வாறான பிரச்சினைகளைப் பிரதேச கிராமியப் பகைப் புலங்களுடன் தொடர்புபடுத்திச் சித்திரிக்கும் முறைமையும் முதன்மை பெறலாயிற்று. க.தி. சம்பந்தனின் **பாசம்** (1947), வ.அ. இராசரத்தினத்தின் **கொழுகொம்பு** (1956) முதலியன இவ்வகைகளிற் குறிப்பிடத்தக்கனவாகும்.

பிறமொழிகளின் சிறந்த படைப்பாளிகளின் ஆக்கங்கள் சில குறிப்பாக ஐவன்துர்க்கனேவ், தாமஸ் ஹார்ட்டி முதலியவர்களின் நாவல்கள் - ஈழத்தவர்களால் தமிழாக்கம் செய்யப்பட்டமையும் இக்காலகட்ட நாவல் வரலாற்றில் குறிப்பிடத்தக்க அம்சமாகும்.

ஈழத்து நாவலிலக்கிய வரலாற்றின் அடுத்த வளர்ச்சிக் கட்டம் 1950களின் நடுப்பகுதியிலிருந்து தொடங்குகின்றது. சமுதாயத்தைப் பிரதிபலித்தல், அநுபவங்களைப் பதிவு செய்தல் ஆகிய நிலைகளைக் கடந்து சமுதாயத்தை விமர்சித்தல் மற்றும் சமுதாய மாற்றத்தை அவாவுதல் ஆகிய நோக்கு நிலைகளுடன் நாவல்கள் உருவாகத் தொடங்கிய காலப்பகுதி இது. ஈழத்துத் தமிழரிடையே நிலவும் சாதியுணர்வு மற்றும் பொருளியல் ஏற்றத் தாழ்வுகள் சார் பிரச்சினைகள் முதலிய பலவும் இக்காலகட்டப் படைப்பாளிகளின் விமர்சனத்துக்குள்ளாகின்றன. இவ் விமர்சனங்களில் ஒரு வகையின மார்க்சியத் தளம் சார்ந்தன; இன்னொரு வகையின பொதுவான மனிதநேய நோக்கில் அமைந்தவை. இவ்விருநிலை விமர்சனங்களுக் கூடாகவும் ஈழத்துத் தமிழர் சமூகத்தில் சமகால மற்றும் கடந்த சில தலைமுறைகளின் வரலாறுகள் இலக்கியப்பதிவு பெற்றன.

படைப்பு நிலையிலும் ஈழத்து நாவல்களுக்குப் பேர் சொல்லும்படியான - அடையாளம் காட்டும்படியான - ஒரு கணிப்பை இக்கால நாவல்கள் ஏற்படுத்தின. குறிப்பாகச் சாதிப் பிரச்சினையை மையப்படுத்தி செ. கணேசலிங்கன் மற்றும்

கே. டானியல் ஆகியோர் எழுதிய நாவல்கள் இவ்வகையிற் சுட்டிக் காட்டக்கூடிய தகுதி வாய்ந்தனவாகும். இவர்கள் மார்க்சியத் தளம்சார் உணர்வுநிலை நின்று சமுதாய விமர்சனம் மேற்கொண்டவர்களாவர். இவ்வுணர்நிலையினின்று நாவல்கள் படைக்கும் முயற்சியைத் தொடங்கிவைத்த முதல்வர் என்ற சிறப்பு இளங்கீரனுக்கு உரியது. அவரது **தென்றலும் புயலும்** (1955) இவ்வகையில் முன்னோடி முயற்சியாகும். சாதிப்பிரச்சினையை விட வர்க்கநிலை ஏற்றத்தாழ்வே வலுவானதும் சமரசம் காண முடியாததும் என்ற கருத்தை முன்வைத்து அவர் அந்நாவலைப் படைத்துள்ளார். கணேசலிங்கன், டானியல் ஆகியோரது படைப்புக்கள் சமகால மற்றும் கடந்த தலைமுறைகளின் வரலாற்றுப் பதிவுகள் என்ற வகையில் விரிவும் ஆழமும் கொண்டனவாகும்.

யாழ்ப்பாணப் பிரதேசத்தில் தாழ்த்தப்பட்ட சமுதாயத்தினர் தம் உரிமைகளைக் கோரி நிகழ்த்திவந்த போராட்டங்களின் சில கட்டங்கள் கணேசலிங்கனின் நாவல்களுக்குக் கதையம்சங்களாக அமைந்தன. **நீண்டபயணம்** (1965) **சடங்கு** (1966) **போர்க்காலம்** (1969) ஆகியன இவ்வாறான சமகால வரலாற்றுப்பதிவுகள் ஆகும். டானியலின் ஆக்கங்கள் கால அடிப்படையில் சற்றுப் பின்னோக்கிச் சென்றன. கடந்த சில தலைமுறைகளில் தாழ்த்தப்பட்ட சமூகத்தினர் அநுபவித்து வந்த துயர வாழ்வின் - ஒடுக்குமுறைசார்ந்த இன்னல்களின் - பதிவுகளாகவும் உயர்சாதியினர் எனப்படுவோரின் பண்பாட்டு விழுமியங்கள் பற்றிய விமர்சனங்களாகவும் அவை அமைந்தன. **பஞ்சமர்** (1972, 1982), **அடிமைகள்** (1984), **கானல்** (1986), **தண்ணீர்** (1989) ஆகியன இவ்வகையில் அவரது முக்கிய ஆக்கங்களாகும். கணேசலிங்கனது படைப்புக்களில் அவரது தத்துவச் சார்பு அழுத்தம் பெற்றுள்ளது. டானியலின் படைப்புக்கள் அநுபவச் செழுமை காரணமாகத் தரம் மிக்கனவாகத் திகழ்கின்றன. குறிப்பாக இவ்வகையில் **அடிமைகள், கானல்** ஆகிய இரண்டும் ஒட்டுமொத்த ஈழத்து நாவல் பரப்பில் முதன்மைக் கணிப்புக்கு உரியவாகின்றன.

சாதிப் பிரச்சினையை மனிதநேய நோக்கில் அணுகியவர்கள் சமுதாய மாற்றம் இயல்பாக நிகழ்வது என்ற கருத்தினர்; எதிர்காலச் சந்ததி மீது நம்பிக்கை கொண்டோர். இவ்வாறான கருத்தோட்டம் கொண்ட படைப்புக்களாக இக்காலகட்டத்தில்

எழுந்த பலவற்றுள் குறிப்பிடத்தக்கவை **பிரளயம்** (செங்கை ஆழியான் 1975) **புதிய சுவடுகள்** (தி. ஞானசேகரன் 1977).

பொருளியல் மற்றும் அரசியல் சார்ந்த பிரச்சினைகளை விமர்சிக்கும் நோக்கில் எழுந்த ஆக்கங்களில் கணேசலிங்கனின் **செவ்வானம்** (1967), **தரையும் தாரகையும்** (1968) என்பன குறிப்பிடத்தக்கவை. சமகால நடுத்தரவர்க்க உளப்பாங்குகளை மார்க்சிய நோக்கில் விமர்சிக்கும் கதையம்சம் கொண்ட ஆக்கங்கள் இவை.

இக்காலகட்டத்தில் குறிப்பிட்ட ஒரு 'சமூக-பொருளியல்-அரசியல்' சூழல்களை மையப்படுத்தி எழுந்த நாவல்கள் என்ற வகையில் மலையகத் தோட்டத் தொழிலாளர் சமூக நாவல்கள் ஈழத்து நாவலிலக்கியப் பரப்புக்குப் புதிய பரிமாணத்தைத் தருவனவாக அமைந்தன. தொழிலாளர் வாழ்வின் அவலநிலை, இனஒதுக்கல் அரசியற்சூழலில் 'குடியுரிமை' இழந்த நிலை மற்றும் பல பகை அடக்கு முறைகள் என்பவற்றால் அச்சமுதாயம் எய்திய பரிதாபங்கள் இவ்வகைப் படைப்புகளுக்குப் பொருளாயின. ஸி.வி. வேலுப்பிள்ளையின் **வீடற்றவன்** (1962) கோகிலம் சுப்பையாவின் **தூரத்துப் பச்சை** (1964) தி. ஞானசேகரனின் **குருதிமலை** (1979) என்பன இவ்வகையில் சுட்டிக்காட்டத்தக்க முக்கிய ஆக்கங்களாகும். இவை அச்சமுதாயத்தில் நிகழ்ந்துவரும் மாற்றங்களைச் சமகால வரலாறு என்ற வகையில் பதிவு செய்தவையாகும். இச்சமூகப் பிரச்சினைகளை மார்க்சிய நோக்கில் அணுகிய ஆக்கம் என்ற வகையில் யோ. பெனடிக்ற்பாலனின் **சொந்தக்காரன்** (1968) நாவல் குறிப்பிடத்தக்கது.

சமுதாய விமர்சன நோக்கு முதன்மைப்பட்டுநின்ற இக்கால கட்டத்தில் ஒரு புதிய கிளைப் பரிணாமமாக பிரதேச நாவல்கள் என்ற புதிய வகை ஈழத்தில் முளை விட்டது. 1970களில் உருவான இப்புதிய போக்கு ஈழத்தின் பல்வேறு கிராமப்புறங்களின் வாழ்வியற் கூறுகளை அவ்வம் மண்ணின் மணத்துடன் பதிவுசெய்த வகையில் வரலாற்று முக்கியத்துவமுடையது. அ. பாலமனோகரனின் **நிலக்கிளி** (1973) செங்கை ஆழியானின் **வாடைக்காற்று** (1973), **காட்டாறு** (1977) முதலிய ஆக்கங்கள் இவ்வகைளில் குறிப்பிடத்தக்கனவாகும்.

இக்காலப் பகுதியில் குடும்ப உறவுச்சூழல், இனஉணர்வுப் பகைப்புலம் என்பவற்றின் மத்தியில் தனிமனித உணர்வு நிலைகளைப் பொருத்திகாட்டி ஆக்கச் செம்மையுடன் வெளி

வந்த நாவல் என்ற வகையில் க. அருள்சுப்பிரமணியத்தின் **அவர்களுக்கு வயது வந்துவிட்டது** (1973) என்ற ஆக்கம் தனிக் கணிப்புக்குரியதாகிறது. இனம் மாறி மணம் புரிந்து கொண்ட ஒரு தமிழ் இளைஞனுக்கும் அவனது கோபக்காரத் தந்தைக்கும் நிகழும் மனப்போராட்டங்களை இயல்புடன் சித்திரித்த வகையில் இவ்வாக்கம் இக்காலப்பகுதி ஆக்கங்களில் தனித்துவ முடைய ஒன்றாகத் திகழ்கின்றது.

1970களின் பிற்பகுதியிலிருந்து ஈழத்துத் தமிழ் நாவலின் வரலாற்றில் இன்னொரு புதிய கட்டம் உருவாகத் தொடங்கியது. இது முக்கியமாக நாவலின் பொருண்மை சார்ந்த மாற்றம் ஆகும். பௌத்த சிங்கள பேரினவாத இனக்கொலைச் சூழலில் தமிழினம் எய்திய அவலங்கள் கவிதை, சிறுகதை, நாடகம் முதலிய இலக்கிய வகைகளில் முனைப்பாக வெளிப்படத் தொடங்கிய காலகட்டம் இது. இவற்றைத் தொடர்ந்து நாவலிலும் இப்பொருண்மை பதிவுபெறத் தொடங்கியது. இனக்கொலைச் சூழலின் துன்ப-துயரங்களின் விவரிப்புகளாகவும் விடுதலைப் போராட்ட உணர்வெழுச்சியை நியாயப்படுத்தும் பதிவுகளாகவும் உருவாகத் தொடங்கிய இவ்வகை நாவலிலக்கிய முயற்சி பின்னர் புலம் பெயர்சூழலின் வாழ்வியல் அனுபவங்கள் என்ற நிலை நோக்கிப் புதிய வளர்ச்சியைத் தொட்டுள்ளது.

தமிழர்கள் தம்மைத் தற்காத்துக் கொள்ள ஒரு தனிநாடு தேவை என்ற கருத்தை முன்வைத்து **ஒரு தனிவீடு** என்ற நாவலை மு. தளையசிங்கம் 1960களில் தொடர்கதையாக எழுதியிருந்தார் (**கலைச்செல்வி** இதழுக்காக எழுதப்பட்டது). இது 1985இல் நூல்வடிவம் பெற்றது. 1977இல் நிகழ்ந்த இனக்கொலையின் பகைப்புலத்தில் எழுதப்பட்ட அருளரின் லங்காராணி (1978) என்ற ஆக்கம் ஒரு விவரணமாக மட்டும் அமைந்தது. இதன் பின்னர் பல நாவல்களும் குறுநாவல்களும் எழுதப்பட்டுள்ளன. இவற்றுட் சில போர்க்காலச் சூழலின் விவரணங்கள்; வேறு சில ஆக்கங்கள் புலம் பெயர்ந்தோடும் அவலங்களின் பதிவுகள். சிலவற்றில் அகதிவாழ்வின் துயரங்கள் பேசப்படுகின்றன. புதிய புலம்பெயர் தளங்களில் நின்றுகொண்டு பாரம்பரியமான பண்பாட்டு மரபுகள் விழுமியங்கள் என்பவற்றை விமர்சிக்கும் வகையிலான ஆக்கங்களும் எழத் தொடங்கியுள்ளன. சான்று களாகத் தேவகாந்தனின் **கனவுச்சிறை**, பார்த்தீபனின் **ஆண்கள் விற்பனைக்கு** முதலியவற்றைச் சுட்டலாம். இவ்வகை ஆக்கங்களின் தகுதிப்பாடு பற்றிய மதிப்பீடுகள் இனிமேல்தான் மேற்கொள்ளப்பட வேண்டும்.

# மலேசியா

வி. சபாபதி

மலேசியாவில் தமிழில் நாவல் இலக்கியம் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் தோன்றியது. மலேசியத் தமிழ்ச்சமூக அமைப்பில் ஏற்பட்ட மாறுதல்கள், தமிழ்ப் பத்திரிகைகளின் பணி, தமிழகத்தின் தாக்கம் ஆகியன இங்கு நாவல் இலக்கியம் தோன்றுவதற்குரிய சூழலை உருவாக்கித் தந்தன. தொடக்கத்தில் தமிழகத்திலிருந்தும் யாழ்ப்பாணத்தி லிருந்தும் வந்து இங்குக் குடியேறியவர்களே தமிழில் நாவல்களை எழுதியுள்ளனர். தமிழகம், யாழ்ப்பாணம் ஆகியவற்றின் தமிழ் நாவல்களை அடியொற்றித் தமிழக, யாழ்ப்பாணப் பின்னணி யிலேயே அறிவுறுத்தலையே முதன்மை நோக்கமாகக் கொண்டு எழுதினர். மலேசியத் தமிழ் நாவல் இலக்கியத்தின் வளர்ச்சி நிலையை இரு பெரும் காலகட்டங்களாகப் பகுத்துக் காணலாம். அவை:-

அ. விடுதலைக்கு முந்திய காலகட்டம் (1910 - 57)

ஆ. விடுதலைக்குப்பிந்திய காலகட்டம் (1957 - 99)

## விடுதலைக்கு முந்திய மலேசியத் தமிழ்நாவல் இலக்கியம்

விடுதலைக்குமுன் சுமார் இருபத்துமூன்று நாவல்கள் வெளி வந்துள்ளன. அவற்றுள் எட்டு தொடர்கதைகளாகப் பத்திரிகை களில் வெளிவந்துள்ளன. பெரும்பாலான இந்நாவல்களின் தலைப்புகளைப் பார்த்த அளவிலேயே, அவற்றுள் பல துப்பறியும் நாவல்கள் என்றும், தமிழகத்திலும் யாழ்ப்பாணத்திலும் எழுதப் பட்ட சில நாவல்களைப் பின்பற்றி எழுதப்பட்டவை என்றும் தெரிந்து கொள்ளலாம். அக்காலப்பகுதியில் தமிழ்நாட்டில் துப்பறியும் நாவல்களின் ஆதிக்கமே ஓங்கியிருந்தது என்பதும், அவ்வாறு எழுதப்பட்ட நாவல்களில் பெரும்பாலும் இரட்டைப் பெயர்களைக் கொண்டு விளங்கின என்பதும் அறியக்கூடிய செய்திகளாகும். இவை விடுதலைக்கு முந்திய மலேசியத் தமிழ்நாவல் இலக்கியத்தில் தாக்கத்தினை ஏற்படுத்தியிருந்தன.

இங்கு, தமிழில் நாவல் இலக்கியம் இருபதாம் நூற்றாண்டின் முதல் இருபது ஆண்டுகளிலேயே தொடங்கி விட்டது. மலேசியா தனது முதல் நாவலை 1910-ஆம் ஆண்டிற்கும் 1920-ஆம் ஆண்டிற்கும் இடைப்பட்ட காலப்பகுதியில்தான்

பெற்றது. இக்காலப்பகுதியில் இரு நாவல்கள் வெளிவந்துள்ளன. அவை க. வெங்கடரத்தினம் எழுதிய 'கருணாசாகரன் அல்லது காதலின் மாட்சி' (1917), புலோலி க.சுப்ரமணியம் எழுதிய 'பாலசுந்தரம் அல்லது சன்மார்க்க ஜெயம்' (1918) ஆகியன. இவ்விரு நாவல்களும் இரண்டு பாகங்களால் ஆனவை என்பது குறிப்பிடத்தக்கது. இவ்விரு நாவல்களையும் நுணுகிப் பார்க்கும் போது மிக விரிவாக எழுதும் போக்கு, கதையோடு மிகுதியும் தொடர்பற்ற பகுதிகளை இணைத்தல், இரு பாகங்களாக அமைத்தல், இரட்டைப் பெயரிடும் போக்கு ஆகியவற்றைக் காணமுடிகின்றது. 'கருணாசாகரன் அல்லது காதலின் மாட்சி' எனும் நாவல் தமிழக ஜமீன்தார் குடும்பத்தில் நிகழ்ந்த ஒரு முக்கோணக் காதல் கதையை விவரிக்கின்றது. தமிழகப் பின்னணியில் அமைந்துள்ள இந்நாவல் வாழ்க்கைக்குத் தேவையான ஒழுக்கங்கள், அறிவுநெறிகள் போன்றவற்றை அறிவுறுத்தற்கென்றே எழுதப்பட்டுள்ளது. 'பாலசுந்தரம் அல்லது சன்மார்க்க ஜெயம்' எனும் நாவல் ஒழுக்கத்தாலும் நேர்மையாலும் வரும் உயர்வைப் பற்றி விளக்கும் வகையில் படைக்கப்பட்டுள்ளது. கதையின் பின்னணியாகப் பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதி மலாயா காட்டப்பட்டுள்ளது.

1921-லிருந்து 1940க்குள் வெளியான நாவல்கள் மிகுதியும் தமிழக, இலங்கைப் பின்னணியைக் கொண்டு வெளிவந்தன. இக்காலப் பகுதியிலும், தமிழக, யாழ்ப்பாணக் குடியேறிகளே நாவல்களை எழுதியுள்ளமையால், இந்நாவல்களின் கதைக்கரு, கதைக்களம், கதைப்பின்னல், கதைமாந்தர், உரையாடல், மொழி நடை ஆகிய அனைத்திலும் தமிழக, யாழ்ப்பாணச் சார்புகளே நிறைந்திருக்கக் காணலாம். இக்காலப்பகுதியில் வெளிவந்த நாவல்களுள் 'தோட்டக்கொலை மர்மம் அல்லது பத்துமலைக் கள்வன்' (1932). 'கோரகாந்தன் அல்லது தென்மலாயா கிரியில் வட இலங்கைத் துப்பாளி' (1934) ஆகியன குறிப்பிடத்தக்கன. 'தோட்டக்கொலை மர்மம் அல்லது பத்துமலைக் கள்வன்' நாளிதழில் (தமிழ் நேசன்) தொடர்கதையாக வெளிவந்துள்ளது. தமிழகத்திலும் மலாயாவிலும் நடப்பதாகக் காட்டப்பட்டுள்ளது. மலாயாவிற்குச் சுற்றுலா வந்த தமிழக ஜமீன்தாரைக் கடத்திச் சென்ற கொள்ளையனைக் கண்டுபிடித்து அழிக்கும் கதை இந்நாவலில் வருகின்றது. 'கோரகாந்தன் அல்லது தென்மலாயா கிரியில் வடஇலங்கைத் துப்பாளி' எனும் நாவல் துப்பறியும் போக்கில் அமைந்திருந்தாலும் சீர்திருத்தக் கருத்துகளை

உணர்த்தும் போக்கினையும் கொண்டிருப்பது குறிப்பிடத்தக்கது. யாழ்ப்பாணத்திலிருந்து மலாயாவிற்குத் தப்பியோடி வந்து கொள்ளைக்கூட்டத் தலைவனான கோரகாந்தனைத் துப்பறியும் நிபுணர், துரைராசா கண்டுபிடிக்கும் முயற்சிகளே கதையாக இந்நாவலில் அமைக்கப்பட்டுள்ளன. உண்மைக் காதலின் மாட்சியை எடுத்துரைக்கும் நாவல் 'நேசமலர் அல்லது கற்றோரின் கனா'. வேலைக்காரனின் மகன் எஜமான் வீட்டுப் பெண்ணைக் காதலித்து மணக்கும் கதையைக் கொண்டுள்ள நாவல் யாழ்ப்பாணப் பின்னணியைக் கொண்டுள்ளது. 'அழகானந்த புஷ்பம்' எனும் நாவல் மேனாட்டார் கொள்கைகளும் பழக்க வழக்கங்களும் யாழ்ப்பாணத்தவர்களுக்குத் தீமையே கொண்டு வரும் என்ற கருத்தை மையமாகக் கொண்டு படைக்கப் பட்டுள்ளது. மேனாட்டு மோகத்தால் சீரழிந்துபோன செல்வத்துரை என்பவனையும் யாழ்ப்பாணத்தில் பரம்பரைப் பழக்கவழக்கங்களைக் கைக்கொண்டு சிறப்படைந்த அழகானந்தன் என்பவனையும் ஒப்பிட்டுக்காட்டும் வகையில் அமைந்துள்ள இந்நாவலின் கதை யாழ்ப்பாணத்தில் நடக்கின்றது.

1941-லிருந்து 1945க்கும் இடைப்பட்ட காலப்பகுதியில் இரண்டாம் உலகப்போரின் சூழலும் அதனையொட்டி மலேசியாவில் ஜப்பானியரின் கொடுங்கோலாட்சியும் காணப்பட்டது. இக்காலப்பகுதியில் நாவல் எதுவும் இங்குக் காணப்படவில்லை. 1946க்கும் 1957க்கும் இடைப்பட்ட காலப்பகுதியானது மலேசிய நாடு சுதந்திரத்தை நோக்கி நடைபோட்ட ஒரு காலப்பகுதியாகும். இக்காலப்பகுதியில் வெளியான நாவல்கள் இதற்குமுன் வெளிவந்த நாவல்களை விடப் பக்க அளவால் மட்டுமல்லாது காட்டியுள்ள பிரச்சினைகளாலும் மாறுபட்டு விளங்குகின்றன. மலேசியத் தமிழ்நாவல் இலக்கிய வளர்ச்சியின் சில புதிய போக்குகளை இந்நாவல்களில் காண முடிகின்றது. சமுதாயத்தில் படிந்துள்ள குறைகளை நிவர்த்தி செய்யும் வகையில் இவை படைக்கப்பட்டுள்ளன. இக்காலப் பகுதியில் வெளிவந்த நாவல்களுள் 'நீர்ச்சுழல்' (1953). 'மல்லிகா' (1957) ஆகிய நாவல்கள் குறிப்பிடத்தக்கன. 'நீர்ச்சுழல்' எனும் நாவலை இரு நாவலாசிரியர்கள் இணைந்து படைத்துள்ளனர். இது மலேசியத் தமிழ்நாவல் இலக்கிய உலகில் மேற்கொள்ளப் பட்ட புதிய முயற்சியாகும். இந்நாவலின் கதையைக் கதைமாந்தரே கூறும் பாணியில் எழுத்தாளர் மா. இராமையா மல்லிகா என்ற

கதைமாந்தராகவும் மா.செ. மாயதேவன் கமலநாதன் என்ற கதைமாந்தராகவும் இருந்து மாறிமாறிக் கதைகூறுவது சோதனை முயற்சியாகும். உண்மைக்காதல் என்றும் அழிவதில்லை என்ற மையக்கருவை மல்லிகா, கமலநாதன் ஆகியோரின் போராட்டம் மிகுந்த காதலில் காட்டி நாவலில் விளக்கப்பட்டுள்ளது. 'மல்லிகா' எனும் நாவல் இளம்விதவைப் பிரச்சினை, வாழ்வில் வழுக்கி விழுந்தவர்களுக்குப் புனர்வாழ்வு என்ற சமுதாயச் சிக்கல்களை மையமாகக் கொண்டு படைக்கப்பட்டுள்ளது. வாழ்க்கையில் தவறிய மல்லிகா, இளம்விதவை மாதவி ஆகிய இரு பெண் களுக்குக் குரல் கொடுக்கும் நாவலாக இது அமைந்துள்ளது. மலேசியத் தமிழ்நாவல் இலக்கியத்தில் முதன்முதலாக ஆண்-பெண் இருட்டறை வாழ்க்கையைப் பேசும் நாவலாக இது அமைகின்றது.

விடுதலைக்கு முந்திய மலேசியத் தமிழ்நாவல்களை ஒட்டு மொத்தமாகப் பார்க்கும்போது புலப்படுகின்ற ஒன்று இந்நாவல் களில் மலேசிய மண்ணின் மணம் முழுமையாகக் கமழவில்லை என்பதாகும். இந்நாவல்களில் பெரும்பாலான மலேசியத் தமிழர்களின் வாழ்விடமாயுள்ள தோட்டப்புறச் சமுதாயம் அவ்வளவாகக் காட்டப்படவில்லை. ஏனெனில் இந்நாவல்களை எழுதியோர் நகர்ப்புற வாசிகளாதலால் தோட்டப்புறத்தைப் பற்றிய எண்ணம் இல்லாமல் இருந்திருக்கலாம். தவிர, தோட்டப்புறத் தமிழர்கள் இந்தியத் தமிழர்களாயிருக்க, நகர்ப்புறத் தமிழர்கள் மிகுதியும் யாழ்ப்பாணத் தமிழர்களாய் இருந்தனர். இவ்விரு சாராருக்குமிடையே கல்வி, பொருளாதார ஏற்றத்தாழ்வுகள் காணப்பட்டன. இந்நாவல்களுள் பல யாழ்ப்பாணத் தமிழர்களால் எழுதப் பெற்றமையால் தோட்டப்புறச் சமுதாயம் காட்டப்படவில்லை.

## விடுதலைக்குப்பிந்திய மலேசியத் தமிழ் நாவல் இலக்கியம்

விடுதலைக்கு முன்னர் எழுதிக்கொண்டிருந்த எழுத்தாளர்கள் எழுத்துத்துறையிலிருந்து விலகுகின்ற ஒரு நிலையினை விடுதலைக்குப்பின் காணமுடிந்தது. இந்நிலை விடுதலைக்குப் பின் நாவல் துறையில் ஒரு தொய்வுநிலையை ஏற்படுத்திற்று. எனினும், புதிய எழுத்தாளர்களின் வரவு புது வேகத்தினை நாவலில் ஏற்படுத்திற்று. பத்திரிகைகளின் போதிய ஆதரவின்மை, எழுத்து வழி எந்தவொரு வருவாயுமின்மை, எழுதுதலை முதன்மைத் தொழிலாகக் கொள்ளாமை போன்ற சில காரணங்களால்

விடுதலைக்கு முந்திய எழுத்தாளர்கள் எழுதுவதிலிருந்து ஒதுங்கிக் கொண்டனர்.

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் சில முக்கிய இலக்கிய நிகழ்வுகளும் முயற்சிகளும் நடந்தேறியுள்ளன. அவை மலேசியத் தமிழ் இலக்கியத்திற்கு இட்ட நல்லுரமாய் குறிப்பாக, நாவல் துறைக்குப் பல புதிய போக்குகளைப் பெற்றுத் தந்துள்ளது. அவ்வகையில் தமிழ்நேசனின் 'கதைவகுப்பு', 'இலக்கிய வட்டம்', 'பவுன் பரிசுத்திட்டம்', 'நாவல் எழுதும் போட்டிகள்'; தமிழ் முரசுவின் 'ரசனை வகுப்பு', 'எழுத்தாளர் பேரவை'; வானம்பாடி இதழின் 'மாதமொரு நாவல் திட்டம்'; இலக்கிய இதழ்களின் பெருக்கம், எழுத்தாளர் சங்கத்தின் தோற்றம் போன்ற முயற்சிகள் ஐம்பதுகள் தொடங்கிப் படிப்படியாக மேற்கொள்ளப்பட்டன.

## ஐம்பதுகளின் இறுதியில் மலேசியத் தமிழ் நாவல்கள்

ஐம்பதுகளின் இறுதியில் (1957க்குப்பின்) சில தொடர் கதைகள் இதழ்களில் தொடராக வெளிவந்துள்ளன. அவை 'துயரப்பாதை' (சங்கமணி), மலராத மலர்', 'கானல் நீர்' (மலைமகள்), 'கதாசிரியனின் கதை' (தமிழ்நேசன்) போன்றவை யாகும். இவற்றுள் 'துயரப்பாதை' பின்னால் நூல்வடிவில் வெளிவந்தது. இந்நாவல் தோட்டப் புற மக்களின் அவல வாழ்க்கையைக் காட்டுகின்றது.

## அறுபதுகளில் மலேசியத் தமிழ் நாவல்கள்

அறுபதுகளுக்குப்பின் மலேசியத் தமிழ் நாவல் இலக்கியத்தில் குறிப்பிடத்தக்க வளர்ச்சியைக் காணமுடிகின்றது. காதலும் துப்பறிதலும் இக்காலகட்ட நாவல்களில் முக்கிய இடம்பெற்றுள்ளன. 'வாடாத மலர்', 'அந்த நதியில் இரண்டு மீன்கள்', 'இதயவாசல்', 'மணமாலை', 'போக்கிரிராஜா' போன்ற நாவல்கள் இப்போக்கினைக் கொண்டுள்ள சில நாவல்கள் ஆகும். இக்காலப்பகுதியில் நாவல் எழுதியவர்களுள் பெரும்பாலோர் இளைஞர்களாக இருக்கின்ற காரணத்தினால் மிகுதியான நாவல்கள் காதல் கதைகளாக அமைந்துள்ளன.

இக்காலப்பகுதியில் வெளியான சில நாவல்களில் மலேசியப் பின்னணி காணப்படவில்லை. இதற்குச் சிறந்த எடுத்துக்காட்டாக 'மாலாவின் துறவு' (1965) எனும் நாவலைக் குறிப்பிடலாம். இந்நாவல் முழுக்க தமிழகப் பின்னணியைக் கொண்டு அமைந்துள்ளது. சீர்கெட்டுப் போயுள்ள தமிழகச் சினிமாவைக்

காட்டும் நாவலாக இது உள்ளது. இக்காலகட்டப் பின்பகுதியில் தான் மலேசிய மண்ணின் மணங்கமழும் படைப்புகள் பெருமளவில் வெளிவரத் தொடங்கின. மலேசியத் தமிழர்களின் வாழ்க்கைப் பிரச்சினைகளை அடிப்படையாக வைத்து எழுதப்பட்ட நாவல்கள் வெளிவந்தன.

அறுபதுகளின் இறுதியில் நடத்தப்பட்ட குறுநாவல் எழுதும் போட்டி (1969) மலேசியப் பின்னணி கொண்ட நாவல்கள் தோன்றுவதற்கு ஒரு தூண்டுகோலாய் அமைந்தது. மலேசிய எழுத்தாளர்களுக்கு முதன்முதலில் உந்துதல் கொடுத்த நிகழ்ச்சியாக இப்போட்டியினைக் குறிப்பிடலாம். இப் போட்டியில் முதற்பரிசு பெற்ற 'செம்மண்ணும் நீலமலர்களும்' எனும் நாவல் தோட்டப்பாட்டாளிகளின் அன்றைய வாழ்க்கைப் பிரச்சனையான தோட்டத்துண்டாடலின் பாதிப்பையும் கூட்டுறவின் அவசியத்தையும் வலியுறுத்தும்வகையில் படைக்கப் பட்டுள்ளது.

## எழுபதுகளில் மலேசியத் தமிழ் நாவல்கள்

எழுபதுகளுக்குப்பின் உள்ள காலப்பகுதியானது மலேசியத் தமிழ் நாவல் இலக்கியம் சிறப்பாக வளர்ச்சி பெற்ற காலம் எனக் குறிப்பிடலாம். இக்காலப்பகுதியில் வெளிவந்துள்ள நாவல்கள் மிகுதியும் நிகழ்காலச் சமுதாயத்தையும் சமகாலப் பிரச்சினைகளையும் கொண்டு நடப்பியல் சாயலோடு படைக்கப்பட்டுள்ளன. எழுபதுகளில் வெளியான நாவல்கள் மிகுதியும் தோட்டப்புற வாழ்க்கையைக் கதைப்பொருளாகக் கொண்டு அமைக்கப் பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது. 'அல்லிமலர்' (1971), 'இலட்சியப் பயணம்' (1973), 'அழுதால் உன்னைப் பெறலாமே' (1976), 'என்னதான் முடிவு' (1977), 'மரவள்ளிக் கிழங்கு' (1979), 'ஒரு தொண்டனின் பயணம் தொடர்கிறது' (1979) ஆகிய நாவல்கள் தோட்டப்புற வாழ்வைப் பின்னணியாகக் கொண்டு வெளிவந்தன. மலேசியத் தமிழர்களுள் பெரும்பாலோர் தோட்டப் புறங்களில் வாழ்வதால் அவர்களின் வாழ்வியல் பிரச்சினைகளை வெளிப்படுத்த வேண்டும் என்ற வேட்கையினால் இந்நாவல்கள் எழுந்துள்ளன.

இருப்பினும், இக்காலப்பகுதியில் வெளியான 'மஞ்சள் கயிறு' (1970), 'வண்ணத்துப் பூச்சி' (1972), 'உறவென்ன உறவோ' (1973), 'பழமுதிர்ச்சோலை' (1976), 'இமாவதி' (1977), 'அவள் ஒரு நவரச நாடகம்' (1979) போன்ற நாவல்கள் தோட்டப்புற

பிரச்சனைகளையோ அல்லது மலேசியத் தமிழர்கள் எதிர் நோக்கும் வேறுவகையான பிரச்சனைகளையோ கொண்டிராமல் காதலை அடிப்படையாகக் கொண்டு விளங்குகின்றன.

மலேசிய இளைஞர்களுள் சிறுபகுதியினரின் வாழ்க்கைப் பின்னணியில் போதைப் பொருளைப் பயன்படுத்தும் பழக்கத்தையும் அதனால் விளையும் தீமைகளையும் காட்டும் நாவலாகப் 'பசித்திருக்கும் இளங்கொசுக்கள்' (1978) அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது.

எழுபதுகளில் இருமுறை நாவல் எழுதும் போட்டிகள் (1973, 1979) நடத்தப்பட்டன. முதற்போட்டியில் முதற்பரிசு பெற்ற 'இலட்சியப் பயணம்' எனும் நாவல் தலைவிரித்தாடும் தோட்டப்புற நிர்வாகத்தைத் தட்டிக் கேட்டு வாழ்வில் உயரும் இளைஞன் ஒருவனைக் காட்டுகின்றது. இரண்டாம் போட்டியில் முதற்பரிசு பெற்ற 'சிறகுகள் முறியும் மானுடக் கனவுகள்' எனும் நாவலில் தோட்டப்புறத்தில் வாழும் ஓர் ஏழைக் குடும்பத்தின் அவலவாழ்க்கைக் காட்டப்படுகின்றது.

அறுபதுகளில் மலேசியாவின் முதல் வரலாற்றுக் குறுநாவலான 'அன்பின் வெற்றி' மலைநாடு பொங்கல் மலரில் (1962) வெளிவந்திருந்தாலும் நூல்வடிவில் வெளிவந்த முதல் வரலாற்று நாவல் 'இளந்தேவி' (1971) எனும் நாவல் ஆகும். இவ்விரு வரலாற்று நாவல்களின் பின்னணி மலேசிய வரலாற்றோடு தொடர்புடையதன்று; தமிழகத்து வரலாற்றுப் பின்னணியில் அமைந்தனவாகும்.

இக்காலப் பகுதியில் வெளிவந்த 'என்னதான் முடிவு' (1976) எனும் நாவல் சோதனை முயற்சியில் எழுந்த ஒரு நாவலாகும். நாவலின் கதை முடிப்பு சோதனை முறையில் அமைந்துள்ளது. கதை முடிவினை வாசகர்களின் முடிவிற்கே விடுகின்ற முறை காணப்படுகின்றது. இதனால் நாவலின் கதை முடிக்காமல் விடப் பட்டுள்ளது. "கதையின் சரியான முடிவைச் சொல்வோருக்கு நூறு வெள்ளி ரொக்கப்பரிசு காத்துக் கொண்டிருக்கிறது" என்ற வரியோடு கதை முடிக்கப்பட்டுள்ளது.

எழுபதுகளின் நாவலாசிரியர்கள் சமுதாயப் பொறுப்புணர்ச்சி கொண்டு, சமுதாயச் சீர்கேடுகளைத் தம் படைப்பில் வெளிப் படுத்தியுள்ளனர். சமுதாயக் குறைபாடுகளைச் சுட்டிக்காட்டி யுள்ளதோடு அவற்றுக்கான தீர்வுகளையும் கொடுத்துள்ளதனையும் காணமுடிகின்றது.

### எண்பதுகளில் மலேசியத் தமிழ் நாவல்கள்

எண்பதுகளில் மலேசியத் தமிழ் நாவல் இலக்கியத்தில் பல்வேறு புதிய முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. எண்பதுகளின் தொடக்கத்தில் வானம்பாடி வார இதழ் தொடங்கிய 'மாதமொரு நாவல்' எனும் திட்டம் மலேசியத் தமிழ் நாவல் வளர்ச்சியில் திருப்புமுனை தந்த ஒரு முயற்சியாகும். இத்திட்டத்தின்கீழ் 11 குறுநாவல்கள் வெளிவந்துள்ளன. இத்திட்டம் பிப்ரவரி, 1980ஆம் ஆண்டில் தொடங்கி மார்ச், 1981 ஆம் ஆண்டில் நின்றுவிட்டது. மலேசியத் தமிழ் நாவல் இலக்கியத்தை வளப்படுத்துவதே இத்திட்டத்தின் முக்கியக் குறிக்கோள் ஆகும். இத்திட்டம் தொடர்ந்திருந்தால் மலேசியத் தமிழ் நாவல் இலக்கியம் சிறப்பான வளர்ச்சி அடைந்திருக்கும் எனலாம்.

அடுத்ததாக, மலேசிய வரலாற்றுப் பின்னணியை மையமாகக் கொண்டு புனையப்பட்டுள்ள வரலாற்று நாவல்களைக் குறிப்பிடலாம். 'ஆடும் மஞ்சள் ஊஞ்சல்' (1985), 'தீமலர்' (1986) ஆகிய வரலாற்று நாவல்கள் மலேசிய வரலாற்று நிகழ்ச்சிகளைக் கதையாக்கியுள்ளன.

எண்பதுகளில் வெளிவந்த நாவல்கள் தனிமனித உறவு, நட்பு, பாசம், காதல் ஆகியவற்றின் அடிப்படையில் எழுந்த உணர்ச்சிப் போராட்டங்களுக்கு முக்கியத்துவம் தந்துள்ளன. இவ்வடிப்படையில் எழுந்துள்ள நாவல்களாகப் 'பாதை மாறிய பயணங்கள்' (1983), 'கோகிலா என் கோகிலா' (1983), 'சலங்கைக் கோலம்' (1984), 'மோகராகம்' (1984), 'கோயில் முழுவதும் கண்டேன்' (1986), 'வீணை தேடும் நாதம்' (1984) போன்றவற்றைக் குறிப்பிடலாம். தவிர, அரசியலைப் பின்புலமாகக் கொண்டு வெளிவந்த நாவல் 'பயணங்கள் முடிவதில்லை' (1988) என்பதாகும். இக்காலப் பகுதியில் நாவல்களில் பிரச்சினைகளை அறிவியல் நோக்கில் அணுகும் நிலைமாறிச் சமூகவியல் நோக்கில் அணுகத் தொடங்கும் நிலையினைக் காணமுடிகின்றது. இதனால் நாவல்களில் எதார்த்தப் போக்கு இயல்பாக இடம்பெற்றுள்ளது. இப்புதிய போக்கினை 'வானத்து வேலிகள்' (1981) தொடக்கி வைக்கின்றது. இந்நாவலில் பொருளாதார ஏற்றத்தாழ்வுகள், அதனால் தனிமனித உறவுகள் பாதிக்கப்படுதல் போன்றவை தோட்டப்புற இளைஞன் ஒருவன் மூலமாகக் காட்டப்படுகின்றன.

எண்பதுகளில் நாவல் இலக்கியத்தை வளர்ப்பதில் வார, மாத இதழ்கள் பங்காற்றியுள்ளமை குறிப்பிடத்தக்கது. குறிப்பாக,

1986-இல் தொடங்கப்பெற்ற 'மயில்' எனும் வார இதழ் தொடங்கப்பட்ட நாளிலிருந்து பதினைந்துக்கும் மேற்பட்ட தொடர்கதைகளை வெளியிட்டுள்ளது. அவற்றுள் சில நூலுருவம் பெற்றுள்ளன.

### தொண்ணூறுகளில் மலேசியத் தமிழ்நாவல்கள்

இக்காலப் பகுதியில் மருத்துவத்துறையைச் சார்ந்தவர்களும் பல்கலைக்கழகப் பேராசிரியர்களும் பரவலாக எழுத்துத்துறையில் நுழைந்து நாவல்கள் எழுதியுள்ளனர். அவ்வகையில் பல்கலைக்கழக வட்டாரத்திலிருந்து டாக்டர் கார்த்திகேசு, மருத்துவ டாக்டரான சி. சொக்கலிங்கம் போன்றோரைக் குறிப்பிடலாம். இக்காலப் பகுதியில் 'விலாங்குகள்' (1991), 'தேடியிருக்கும் தருணங்கள்' (1993), 'சுவடுகள்' (1994), 'மனிதப்பிறவியும்' (1995), 'பெண் குதிரை' (1997), 'கோடுகள் கோலங்களானால்' (1998), 'அந்திமக் காலம்' (1998), 'நெருப்புக் கொடிகள்' (1998), 'காதலினால் அல்ல' (1999) போன்றவை வெளிவந்துள்ள நாவல்களுள் சிலவாகும். இவற்றில் தனிமனித உணர்வும் பிரச்சினைகளும் முதன்மை பெற்றுள்ளன. தனிமனித உரிமைகள் பேசப்பட்டதன் விளைவே இந்நாவல்கள் தோன்றுவதற்கு வழிவகுத்துள்ளன. இக்காலப்பகுதியில் நிறைய நாவல்கள் வெளியீட்டு விழா கண்டுள்ளன. இவற்றினூடே மலேசியத் தமிழ் நாவல் இலக்கியம் தொடர்ந்து வளர்ச்சி கண்டு வருகின்றது.

### நாவல் திறனாய்வு

இலக்கிய வளர்ச்சியில் திறனாய்வின் பங்கு மிக முக்கியமானது. அவ்வகையில் மலேசியத் தமிழ் நாவல் இலக்கியம் தமிழகத்திலும் மலேசியாவிலும் பல்கலைக்கழக அளவில் ஆய்வுக்கு உட்படுத்தப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது. மலாயாப் பல்கலைக்கழக, இந்திய ஆய்வியல் துறை 'மலேசியத் தமிழ் நாவல் கருத்தரங்கு' எனும் தலைப்பில் ஒரு கருத்தரங்கை 1992-இல் நடத்தியுள்ளது. மலேசியத் தமிழ் நாவல் இலக்கியத்தைத் திறனாய்வு செய்து குறைநிறை அறியும் பொருட்டு நடத்தப்பட்ட இக்கருத்தரங்கு இலக்கிய ஆர்வலர்களிடையேயும் எழுத்தாளர் களிடையேயும் நல்ல வரவேற்பினைப் பெற்றது. இது மலேசியத் தமிழ் நாவல் இலக்கியம் வளர்வதற்கு உதவுவதாக உள்ளது.

# சிங்கப்பூர்

சுப. திண்ணப்பன்
ஆ.ரா. சிவகுமாரன்

சிங்கை குடியரசான பின்பு நாவல்களின் வளர்ச்சி சிறுகதைகளின் வளர்ச்சிபோல் அவ்வளவு சிறப்புடையதாக இல்லை. நாவல்கள் கால இடைவெளிவிட்டே வெளிவரத் தொடங்கின. 1965ஆம் ஆண்டிலிருந்து 1999வரை வெளிவந்த 22 நூல்களில் 26 நாவல்கள் உள்ளன. பெரும்பாலும் சிறுகதை ஆசிரியர்களே நாவல்களையும் எழுதி வந்தனர். நாவல்களின் பின்னணிகள் வரலாறு, சமூகம், மலேசியா, சிங்கப்பூர், தமிழகம் ஆகியவற்றின் அடிப்படையில் அமைந்தன.

மு.சு. குருசாமி அன்றைய மலேசிய ரப்பர் தோட்டப் பிரச்சினைகளையும் கம்யூனிச பிரச்சினைகளையும் மையமாக வைத்து நாவலை உருவாக்கினார். இவர் காகிதப்பூ (1970), சுமைதாங்கி (1971), ஓர் இரவு (1972) முதலிய நாவல்களை எழுதி வெளியிட்டார். ஏ.பி. சண்முகம் மலேசிய, தமிழகப் பின்னணியில் செல்வி (1975), நல்லகதி (1975), கலா (1979) முதலிய நாவல்களைப் படைத்தார். பெரி.நீல. பழநிவேலன் மின்னற்கீற்று (1978) என்னும் ஒரே புத்தகத்தில் மின்னற்கீற்று, உணர்வின் அலைகள், நீயும் என் மகள்தான், முறை மாப்பிள்ளை என்னும் நான்கு குறு நாவல்களையும் உள்ளடக்கி வெளியிட்டார். அந்தரத்தில் தொங்கும் உறவு (1987), செம்பருத்தி (1989) என்னும் நாவல்களும் இவரால் எழுதப்பட்டவையே. இக்கதைகள் மலேசியப் பின்னணியில் அமைந்ததோடு பாலியல் தொடர்பான செய்திகளையும் கொண்டு விளங்குகின்றன.

சிங்கப்பூரில் இந்திய தேசிய இராணுவத்தின் செயல்கள் குறித்தும் இரண்டாம் உலகப்போர் குறித்தும் வரலாற்றுப் பின்னணியில் மா. இளங்கண்ணன் வைகறைப் பூக்கள் (1990) என்னும் நாவலை எழுதினார். சிங்கப்பூரின் சீன இந்திய மக்களின் பின்னணியில் அலைகள் (1976) என்னும் நாவலை அமைத்தார். சிங்கப்பூரில் பிறந்து வளர்ந்த பெண்ணைத் தமிழ் நாட்டில் மணம்முடித்து வைப்பதால் ஏற்பட்ட சிக்கல்களை நினைவுகளின் கோலங்கள் (1993), என்னும் நாவலின் வழி சித்திரித்தார். 1977இல்

இந்நாவல் தொடர்கதையாகச் செய்தித்தாளில் வந்தாலும் இந் நாவலில் நடைபெறும் நிகழ்ச்சிகள் சிங்கப்பூரில் அறுபதுகளில் இடம்பெற்றவை.

ஜே. எம். சாலியின் மூன்றாவது கணை (1982), மஞ்சள் ரோஜா (1982), கை படாத ரோஜா (1982), வெள்ளைக் கோடுகள் (1994) முதலிய கதைகள் மலேசிய, இந்திய, சிங்கப்பூர் பின்னணியில் அமைந்தவை. இளம் எழுத்தாளர் ரத்னாவதி சுப்பிரமணியம் பெண் எழுத்தாளரும் ஆவார். மேற்கே உதிக்கும் சூரியன் (1989) என்பது இவர் வெளியிட்ட நாவல். எஸ்.எஸ்.சர்மா நீண்ட காலமாக எழுத்துத் துறையில் ஈடுபாடு காட்டி வருபவர். இவரது இனியவளே (1990) என்னும் நாவல் சமூகப் பின்னணியைக் கொண்டது.

நா. கோவிந்தசாமி சிங்கப்பூரில் ஆலயம் கட்டும் தமிழ் மக்களின் பிரச்சினையைத் தொட்டு, வேள்வி (1991) என்னும் நாவலைப் படைத்தார். இராம. கண்ணபிரான் குறியீட்டு அடிப்படையிலும் பழங்கால மன்னர்களின் வரலாறு அடிப்படையிலும் பீடம் (1992) என்னும் நாவலைப் படைத்தார். இக்கதை முதலில் செய்தித்தாளில் தொடர்கதையாக வந்தது. தமிழ்ச்செல்வம் வாழப்பிறந்தவள் (1998) என்னும் நாவலை வெளியிட்டவர்.

பெரும்பாலான நாவல்கள் நூல் வடிவம் பெற்ற காலமும் எழுதப்பெற்ற காலமும் வெவ்வேறானவையாகும்.

# நாடகம்

## தமிழகம்

இராம. குருநாதன்

தமிழ் நாடகம் காலத்தால் தொன்மையுடையது. நாடகம் என்ற சொல் மிக்க பழமையானதாகும். தொல்காப்பியம் 'நாடகம்' என்ற சொல்லை முதன்முதலாகச் சுட்டியுள்ளமை, அந்நூலுக்கு முன்னரே அச்சொல் வழங்கப்பட்டிருக்க வேண்டும் என்பதை உணர்த்துகிறது. தொல்காப்பியப் பொருளதிகாரத்தில் 'மெய்ப்பாட்டியல்' என்ற இயல் நாடகமாந்தரின் பல்வேறு உணர்ச்சிகளின் வகைகளை விரித்துரைக்கிறது. சங்க இலக்கியத்திலும் காப்பியங்களிலும் கூத்து பற்றிப் பயிலப்படும் செய்திகள் நாடகக் கூறுகள் சார்ந்தனவாய் உள்ளன. கூத்து நூல் என்று தனியே ஒரு நூலும் இருந்துள்ளது. நாடகக்காப்பியம் என்றே நவிலப்படும் சிலப்பதிகாரத்தினின்றும், அடியார்க்கு நல்லார் உரையினின்றும் நாடகம் பற்றிய விரிவான விளக்கமும், பண்டைய நாளில் இடம்பெற்றிருந்த மேடை அமைப்பு முறையும் பிறவும் காணக்கிடைக்கின்றன.

அந்தக் காலகட்டத்திற்குப் பின் பல்லவர் ஆட்சியில் நாடகம் பற்றிய குறிப்புகள் அருகியே காணப்படுகின்றன. பிற்காலச் சோழராட்சியில் நாடகம் குறிப்பிடத்தக்க நிலையில் இருந்தது என்பதனைக் கல்வெட்டுகள் வழி அறியலாம். இடைக்காலத்தே சிற்றிலக்கிய வளர்ச்சியில் குறிக்கப்பெறும் பள்ளு, குறவஞ்சி, நொண்டி நாடகங்கள் முதலியன நிலவுடைமைச் சமுதாயத்தின் பிரதிபலிப்பாகவும், அவ்வந்நில மாந்தர்களின் சமூக வாழ்க்கையின் பின்னணியாகவும் தோன்றலாயின. 17,18ஆம் நூற்றாண்டுகளில் நொண்டி நாடகம், கீர்த்தனை நாடகங்கள் எழுதப்பட்டும் நடிக்கப்பட்டும் வந்தமை, நாடக வளர்ச்சிக்கு நல்லதோர் ஆக்கமாக அமைந்தது.

1870ஆம் ஆண்டு அளவில் தமிழ் நாடகப் போக்கில் ஒரு திருப்புமுனை ஏற்பட்டது. தஞ்சை மராட்டியரின் கலை உணர்ச்சி தமிழ் மக்களுக்குப் புதுமையாக இருந்தது. கோவிந்தசாமி ராவ் என்பார் மராட்டிய மொழியில் சில நாடகங்களைத் தமிழகத்தில்

அரங்கேற்றினார். மனமோகன நாடகக் கம்பெனி என்ற பெயரில் ஒரு நாடக சபையை நிறுவி, அதன் வழி, தமிழ் மக்களறிந்த புராண நாடகங்களை நடத்திக் காட்டினார். பெங்களூர் அய்யாவுப்பிள்ளை என்பவர் எழுதிய நாடகங்கள் சில அப்பராயச்சார்ரி நாடகக் கம்பெனியால் மேடை ஏறின. சித்திராங்கி விலாசம், இந்திர சபா, பத்மினி சபா முதலியன அந்நாடகக் குழுவால் நடிக்கப்பெற்றன. புராண இதிகாசங்களை அடிப்படையாகக் கொண்டு எழுதி நடிக்கப்பட்டு வந்த நாடகங்கள் பெருமதிப்புப் பெற்றன.

இதற்கிடையே சமூகச் சீர்திருத்தத்தை அடிப்படையாகக் கொண்டு முதன்முதலாக நாடகம் எழுதப்பட்டது. காசி விசுவநாத முதலியார் (1806-1971) என்பவர் 1867இல் எழுதிய டம்பாச்சாரி விலாசம் தமிழில் எழுதப்பட்ட முதல் சமூக நாடகம் ஆகும். டம்பாச்சாரி என்ற பெயருக்கேற்ப, செல்வந்தனான அவன் மிக்க பொருளைத் தீய வழியில் இழந்து இறுதியில் திருந்துவதை இந்நாடகம் உணர்த்தியது. இது பாலாமணி நாடகக்குழுவால் பன்முறை அரங்கேறியது. 1877இல் திண்டிவனம் இராமசாமி ராஜா என்பவர் எழுதிய பிரதாப சந்திர விலாசம் (1877) என்ற நாடகம் நாடகப் பண்புக்கூறுகள் கொண்ட நாடகமாகும். இதன் பின்னர் தொன்மைக் கதைகள், சமய வரலாற்றுத் தலைவர்கள் என்பனவற்றை அடிப்படையாகக் கொண்டு நாடகங்கள் நடிக்கப்பெற்றன. ஞானத்தச்சன் (வேதநாயக சாஸ்திரியார்), ஞான சவுந்தரியம்மாள் (முத்து நாயர்), ஊதாரிப் பிள்ளை (தேவ சகாயம்), அர்ச்சிஷ்ட எஸ்தாக்கியர் (ஞானபிரகாசம் பிள்ளை), ஞானசவுந்திரி நாடகம் (சேவியர் குருசு) முதலிய கிறித்துவ நாடகங்களும், அலிபாதுஷா நாடகம் (வண்ணக் களஞ்சியம் புலவர்), அப்பாசு நாடகம் (இப்ராஹிம் சாயபு) போன்ற இசுலாமிய நாடகங்களும் பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் தோன்றின.

பேராசிரியர் சுந்தரம்பிள்ளை, பம்மல் சம்பந்த முதலியார், பரிதிமாற் கலைஞர் ஆகிய மூவரும் பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் செய்த பணிகள் இருபதாம் நூற்றாண்டில் பல வெற்றிகளுக்கு வழிகாட்டிகளாக அமைந்தன. 'மனோன்மணீயம்' நாடகத்தைப் பின்பற்றி நூற்றுக்கு மேற்பட்ட இலக்கிய நயமிக்க நாடகங்கள் தோன்றின. அவற்றுள் சி.எஸ். முத்துசாமி ஐயரின் விசுவநாதம், புலவர் குழந்தையின் காமஞ்சரி, நாராயணனின் துறவியின் புதையல், த.அ.சுந்தரராசின்

வேங்கையின் வேந்தன், புலவர் ஆ.பழநியின் அனிச்ச அடி முதலியன குறிக்கத்தக்கன. இவையனைத்தும் படித்தற்கே உரிய நாடகங்கள் ஆகும்.

பம்மலார் சுகுண விலாச சபையினை 1891-இல் தொடங்கிய பிறகு நூற்றுக்கு மேற்பட்ட குழுக்கள் தமிழகத்தில் தோன்றி ஆயிரக்கணக்கான நாடகங்களைத் தமிழகத்தின் எல்லாப் பகுதிகளிலும் நடித்துக்காட்டி இக்கலையை வளர்த்துள்ளன. உரைநடையில் அமைந்த சமுதாய நாடகங்களை எழுதுவதற்கும், மேடையேற்றுவதற்கும் முதல் வழிகாட்டியாக விளங்கியவர் அவர். தமிழ் நாடகத்திற்கும், நாடக ஆசிரியர்களுக்கும், நாடகக் கலைஞர்களுக்கும் அவரால் உயர்வும் மதிப்பும் கிடைத்தன. நாடகக் கலையின் மீதிருந்த களங்கமும் மாசும் அவர் பணியால் துடைத்தெறியப்பட்டன.

சங்கரதாஸ் சுவாமிகள் (1867-1922) தமிழகத்தின் பழமைமிக்க தெருக்கூத்துக் கலையைப் புதியதொரு நோக்கில் நாடகமாக்கிப் புகழ் பெற்றவர். சுமார் நாற்பது நாடகங்களை எழுதிய இவர், தெருக்கூத்துக் கலைஞர்களுக்குச் சமுதாயத்தில் இருந்த குறைமதிப்பைப் போக்கினார். புராண, இதிகாச, நாட்டுப்புறக் கதைகளிலிருந்து தம் நாடகத்திற்குரிய கருப் பொருளைத் தேர்ந்தார். உரையாடல்களைவிடப் பாடல்கள் மிகுதியாக இவரது நாடகங்களில் இடம்பெற்றிருந்தன. அதோடு கூடக் கதைமாந்தர்களின் தர்க்க வழியிலான பாடல்கள் காண்போரையும் கேட்போரையும் ஈர்த்தன.

பரிதிமாற்கலைஞர் (1870-1903) 'நாடகவியல்' என்னும் நாடக இலக்கண நூலைப் படைத்துத் தமிழிற்கு ஒரு புதுமை சேர்த்தார். அதுவரை தமிழ், ஆங்கிலம், வடமொழி, கிரேக்கம் முதலான மொழி நாடகக்கலை நுட்பங்களை அறியாதவர்களுக்கு அவருடைய நூல் ஒரு வழிகாட்டியாக அமைந்தது. நாடகத்தில் இன்ன கூறுகளை இன்னவாறு அமைத்து நடிக்க வேண்டும் என்பதற்கு அவர் நூல் வழிகாட்டியது. இவர் எழுதிய ரூபாவதி அல்லது காணாமல் போன மகள், கலாவதி, மானவிஜயம் போன்றவை அரங்கேறிய நாடகங்களாகும்.

'நாடகக் கலைஞர்கள் ஒழுக்கமுடையவர்களாக இருத்தல் வேண்டும்; அவர்கள் இறையுணர்வும், நாட்டுணர்வும், மொழி யுணர்வும், கலையுணர்வும் கொண்டவர்களாக இருத்தல் வேண்டும்' என்று கருதி, அவற்றை இளமை முதலே நெஞ்சில்

பசுமரத்தாணிபோல் பதியவைக்கவேண்டும் என்னும் நோக்கில் தவத்திரு சங்கரதாசு சுவாமிகள் 'சிறுவர் நாடகக் குழு' ஒன்றனைத் தொடங்கி ஒளவை தி.க.சண்முகம் போன்ற கலைஞர்கள் பலரை உருவாக்கினார். ஐந்து முதல் பதினாறு வயதிற்கு உட்பட்ட சிறுவர்களைக் கொண்டு வள்ளித் திருமணம், பவளக்கொடி, சுலோச்சனா சதி, சீமந்தனி, அபிமன்யு சுந்தரி, சதி அனுசுயா முதலான புராண நாடகங்களை எழுதி மேடையேற்றினார். சிறுவர்கள் ஆண், பெண் வேடங்களில் தோன்றி, அரிய பெரிய இசைப் பாடல்களைப் பல்வேறு பாவங்களில் பாடி நடித்து நாடகக் கலைக்குச் சிறப்புக்களைச் சேர்த்தனர். சுவாமிகளின் இனிமையான இசைப் பாடல்களும், அழகிய உரையாடல்களும் நாடகங்களுக்கு வெற்றி தேடித் தந்தன.

சங்கரதாசு சுவாமி வாழ்ந்த அதே காலகட்டத்தில் உடுமலை முத்துச்சாமி கவிராயர், பீஷ்மர் சபதம், போஜராஜன், ஞான சவுந்தரி, தயாநிதி முதலிய நாடகங்கள் எழுதிப் புகழ் பெற்றிருந்தார். மோலியர் எழுதிய நாடகத்தைத் தமிழில் லோபி என்ற நாடகமாகத் தழுவி எழுதினார். ஏகை சண்முகம் பிள்ளை சங்கரதாசு சுவாமிகளின் சம காலத்தவர். இவரது நாடகங்களான சம்பூர்ண இராமாயணம், கண்டி ராஜா, அரிச்சந்திரா ஆகியவை புகழ்பெற்ற நாடகங்களாகும்.

கிருஷ்ண விநோத சபா என்னும் நாடகக் குழுவினைத் தொடங்கி நடத்திய நாடக மேதை சி. கன்னையா மேடையில் புதுமை சேர்த்த கலைஞர்களுள் மிகவும் குறிப்பிடத்தக்கவர் ஆவார். இவர் நடத்தியவை புராண நாடகங்களே ஆயினும் அனைவரும் கண்டு வியக்கும் வண்ணம் அழகிய திரைகளையும், காட்சி களையும், இசையமைப்பையும் கையாண்டவர் என்னும் பெருமை இவருக்கு உண்டு. கிருஷ்ண லீலா, தசாவதாரம் முதலான நாடகங்களை ஆயிரக்கணக்கான முறை நடத்திய சிறப்பு இங்குக் குறிக்கத்தக்கது. வியக்கவைக்கும் வண்ணத்திரை, மேடைக்காட்சி, இசை ஆகியவற்றை அமைப்பதற்காக வடநாட்டிலிருந்து கலைஞர், பலரை வரவழைத்துப் புதுமைகளைச் சாதித்துக் காட்டியவர் கன்னையா ஆவார். மேடை உத்திகளை அந்தக் காலத்தில் மிகச் சிறப்பாகக் கையாண்டவர் இவர். 'பகவத்கீதை' என்ற நாடகம் மிகச் சிறந்த அற்புதக் காட்சிகளை மேடையில் மிளிரவைத்தது. அக்காலத்தில் அதிகப் பொருட்செலவில் நாடகத்தை நடத்தியும், மிகச் சிறந்த இசைப்பாடகர்களை உருவாக்கியும் வந்தார்.

பம்மல் சம்பந்த முதலியார் (1873-1964) நாடகத்துறையில் பெற்றிருந்த புகழ் அவரைத் தமிழ் நாடகத்தின் தந்தை என்ற அளவில் உயர்த்தியது. ஏறத்தாழ 94 நாடகங்கள் எழுதிச் சாதனை படைத்ததோடு, பல நாடகங்களை அரங்கேற்றியும் உள்ளார். தமிழில் முதன்முதலாக ஆங்கில நாடகங்களைப் பின்பற்றி அங்கம்/காட்சி என்று பிரித்து நாடகப் பண்புக் கூறுகளைக் கையாண்டு உரைநடை நாடகத்தை எழுதியவர். 'லீலாவதி சுலோசனா', என்பது இவரது முதல் நாடகமாகும். 1891இல் 'சுகுண விலாச சபா' என்ற பெயரில் ஒரு நாடகக் குழுவைத் தோற்றுவித்து நடிக்கவும் செய்தவர். நாடகக் கலைஞர்கள் சமூகத்தில் மதிப்புப் பெறவும் செய்தார். சர்.சி.பி. இராமசாமி ஐயர், சர்.ஆர்.கே. சண்முகம் செட்டியார், சத்தியமூர்த்தி போன்ற நாடறிந்த நன்மக்கள் இவரது நாடகத்தில் இணைந்து நடித்தவர்கள் ஆவர். தமிழ் மேடைநாடகங்களில் பாடல்கள் நிறைந்த நாடகங்களைக் கண்டு களித்த மக்களுக்கு, இவரது உரைநடை நாடகங்கள் புதுமையாக இருந்ததோடு நல்ல வரவேற்பினையும் பெற்றுத் தந்தன.

எஸ்ஜிகிட்டப்பா தம் உடன்பிறப்பினரான எஸ்.ஜி.செல்லப்பா, எஸ்ஜிசுப்பையா ஆகியோரோடும், திருமதி கேபிசுந்தராம்பாளோடும் சேர்ந்து தமிழ் நாடக இசைத்துறையில் மாபெரும் சாதனை புரிந்தார். இவர்களுடைய 'கந்தர்வ கான'த்தைக் கேட்பதற்காக நாடக மேடை நோக்கி மக்கள் திரண்டு வந்தனர். கிருஷ்ண லீலா, வள்ளித் திருமணம், அரிச்சந்திரா, நல்லதங்காள், பகவத் கீதை முதலான எண்ணற்ற நாடகங்களைத் தம்இசைப்பாடல் வண்ணத்தால் புகழ்பெறச் செய்தார் கிட்டப்பா. பாடியதோடு மட்டுமன்றித் தசாவதாரம் போன்ற நாடகங்களில் நடிக்கவும் செய்தார்.

அக்காலத்தில் தமிழகக் கிராமங்களில் தெருக்கூத்து நடைபெற்று வந்தது. அப்போது தொழில்முறை நாடகக் குழுக்கள் ஸ்பெஷல் நாடகங்கள் நடத்திவந்தன. ஸ்பெஷல் நாடகங்களில் எஸ்.ஜி.கிட்டப்பா புகழ்பெற்றவராக விளங்க அவரது குரல்வளம் ஒரு காரணம். தமிழகத்தில் அவர் நாடகம் நடக்கும் இடங்களில் 'கந்தர்வ கான கிட்டப்பா' என்றே சுவரொட்டி ஒட்டப்பட்டிருந்தது. ஸ்ரீவள்ளி, நந்தனார் முதலிய அவரது நாடகங்கள் முக்கியமானவை. அதேபோல கேபிசுந்தராம்பாள் தமது இசையாலும், நடிப்பாலும் நாடக மேடையை ஒளிரச் செய்தவர். அதேபோல் எஸ்.வி.சுப்பையா பாகவதரும் இசையால்

நாடக மேடைக்கு மெருகு ஊட்டியவர். ஒரு குறிப்பிட்ட காலம் வரை ஸ்பெஷல் நாடகங்களில் புகழ்பெற்றவராக விளங்கியவர் எம்.கே.தியாகராஜ பாகவதர் ஆவார். வள்ளி, கோவலன், நந்தனார், பவளக்கொடி முதலியன இவருக்குப் புகழ் சேர்த்தன. டி.எம்.மருதப்பா, எம்.எம்.சிதம்பர நாதன் முதலியோரும் இசை யாலும், நடிப்பாலும் புகழ் பெற்றிருந்தார்கள். நாடகங்களில் இசை ஆதிக்கம் பெற்றுத்திகழ இவர்கள் காலகட்டம் காரணமாக இருந்துள்ளது. ஸ்பெஷல் நாடகம் என்ற வகையில் 'கள்ளபார்ட்', நாடகங்களில் தனிக் கவனம் பெற்றிருந்தது. அதேபோல் அரிச்சந்திரா மயான காண்டமும் தனிச்சிறப்புப் பெற்றிருந்தது. சதாரம் அதிரூப அமராவதி நாடகத்தை மேடையில் ஆடிப் பாடியது அன்றைய கால ரசிகர்களுக்குப் பெருவிருந்தாக இருந்தது.

விசுவநாத தாஸ் என்னும் நடிகர் தம் வெண்கலக் குரலால் தேசபக்திப் பாடல்களைப் பாடி மக்களிடையே உணர்ச்சிவேகம் ஊட்டியவர். ஸ்பெஷல் நாடகங்கள் எனப்பட்ட அக்காலச் சிறப்பு நாடகங்கள் எவையானாலும், இடையிடையே கதைக்குப் பொருத்தம் இருந்தாலும் இல்லாவிட்டாலும் இத்தகைய பாடல்களை முழங்குவது இவரது வழக்கம். 'கொக்கு பறக்குதடி பாப்பா-வெள்ளை கொக்கு பறக்குதடி பாப்பா' முதலான பாடல்களை இவர் பாடியுள்ளார். இவரைப் பின்பற்றி வேறு பிற கலைஞர்களும் நாட்டு விடுதலை பற்றியும், அண்ணல் காந்தி அடிகள், பகத்சிங், பாலகங்காதர திலகர் முதலான தலைவர்கள் பற்றியும் உணர்ச்சி மிக்க பாடல்களைப் பாடி மக்களை மெய்சிலிர்க்க வைத்தனர்.

நாட்டுப்பற்றும், சமூகச் சீர்திருத்தமும் அன்றைய நாடகங்களின் கருப்பொருளாயிருந்தன. சமூக நாடகங்கள் மூலம் தேசிய எழுச்சி ஏற்பட்டது. கதரின் வெற்றி, தேசியக்கொடி, பதிபக்தி முதலான பெரும் தேசபக்தி நாடகங்களையும், பம்பாய் மெயில், கவர்னர்ஸ் கம் முதலான சமுதாய நாடகங்களையும் தீட்டியவர் தெ. கிருட்டிணசாமிப் பாவலர். இந்திய நாடெங்கும் விடுதலைக் கனல் மூண்டெழுந்தபோது தமிழகத்தில் தம் நாடகங்கள் மூலம் இந்தக் கனலைக் கொழுந்துவிட்டு எரியச் செய்தவர்களுள் இவர் குறிப்பிடத்தக்கவர் ஆவார். இவருடைய 'கதரின் வெற்றி' நாடகம் 1932ஆம் ஆண்டு இலண்டன் மாநகர் பொருட்காட்சி ஒன்றில் மேடையேற்றப்பட்டது என்பதோடு அங்குப் பலரையும் வியக்கவைத்தது. வலுவான துப்பறியும் சமூகக்

கதையுடன் காந்தியடிகளின் கொள்கைகளை நயமாக இணைத்துத் தம் நாடகங்களை நடத்திப் பாவலர் வெற்றி பெற்றார். 'கதரின் வெற்றி' தமிழில் எழுந்த தேசிய எழுச்சி ஊட்டிய முதல் நாடக மாகும். 1922இல் முதன்முதலாக அந்நாடகம் அரங்கேறியபோது பல எதிர்ப்புகள் தோன்றின. மதுரை பாய்ஸ் நாடகக்குழுவில் ஆசிரியராக இருந்து, நாடகங்களை இயற்றினார்.

இவர் தம் நாடகங்களைப் பின்பற்றி வேறு சில தேசபக்தி நாடகங்கள் நடத்தப்பெற்றன. அவற்றுள் வெ.சாமிநாத சர்மாவின் பாணபுரத்து வீரன், கோவை அய்யாமுத்துவின் இன்பசாகரன், எஸ்.டி.சுந்தரத்தின் கவியின் கனவு ஆகியன குறிப்பிடத்தக்கன.

அடுத்து, நாடக மேடையில் புதுமையை உருவாக்கிய பெருமை மயிலை கந்தசாமி முதலியாரைச் சாரும். சமுதாய நாடகங்கள் மேடையில் பெரும்வெற்றிபெறக் காரணமாக இருந்தவர்களுள் இவரை முதலாமவராகக் கருதலாம். அன்று புகழ்பெற்று விளங்கிய புதின ஆசிரியர் ஜே.ஆர். ரங்கராஜுவின் ஆனந்தகிருஷ்ணன், இராஜாம்பாள், இராஜேந்திரன், சந்திர காந்தா, மோகனசுந்தரம் ஆகிய துப்பறியும் நாவல்களை மேடைக் கேற்ற வகையில் மாற்றியமைத்து, நடிகர்களுக்குத் தக்க பயிற்சியும் தந்து வெற்றிகரமாக நடத்திக் காட்டியவர் இவர். கந்தசாமி முதலியார் அன்றைய வெற்றிப் புதினமான வடுவூர் துரைசாமி ஐயங்காரின் மேனகாவையும் மேடை நாடக மாக்கினார். சமூக நாடகங்கள் மேடையில் பரவலாக நடிக்கப் படுவதற்கு இவரது பணி வழிகாட்டியது எனலாம்.

இவ்வாறு அரசியல் சார்ந்த நாடகங்களும், துப்பறியும் கதை நாடகங்களும், சமுதாய நாடகங்களும் நடைபெற்றுக் கொண்டிருந்த அதே நேரத்தில் நவாப் டி.எஸ். இராசமாணிக்கம் பிள்ளை அவர்கள் மீண்டும் புராண நாடகங்களை மேடையேற்றிப் பெரும் வெற்றிகளைக் கண்டார். பக்த இராமதாஸ் நாடகத்தில் நவாப்பாக நடித்துப் புகழ்பெற்றதால், நவாப் இராஜமாணிக்கம் என்ற பெயர் நிலைத்தது. கிருஷ்ண லீலா, சம்பூர்ண ராமாயணம், தசாவதாரம், பக்த இராமதாஸ், ஐயப்பன் முதலான பல நாடகங்களைக் கண்கவர் காட்சிகளுடன் வியப்புறும் வகையில் தந்திரக் காட்சிகளை இணைத்து மேடை யேற்றினார். அவருடைய பெரும்பான்மையான நாடகங்கள் ஒவ்வொன்றும் ஆயிரம் முறைக்குமேல் நடிக்கப்பெற்றன என்பதே அவரது வெற்றியைப் பறைசாற்றும். இவரது மதுரை தேவி பாலவினோத சங்கீத சபா எண்ணற்ற கலைஞர்களைக் கொண்டு

இலங்கியது. கோவை சி.ஏ.ஐயாமூர்த்தி எழுதி இவர் நடித்த, இன்ப சாகரன் என்ற நாடகம், சென்னை ராயல் தியேட்டரில் ஆறு மாதங்கள் தொடர்ந்து நடந்தது.

கு.சா.கிருஷ்ணமூர்த்தியின் அந்தமான் கைதி, சீதரின் இரத்தபாசம், தி.க.முத்துசாமியின் குமாஸ்தாவின் பெண், கி.ஆ.பெ. விசுவநாதத்தின் தமிழ்ச்செல்வம், வடுவூராரின் மேனகா, பி.எதிராசுவின் ஒளவையார், அரு.இராமநாதனின் இராசராச சோழன், கல்கியின் கள்வனின் காதலி, எஸ்.டி.சுந்தரத்தின் கவியின் கனவு, நா.சோமசுந்தரத்தின் இன்ஸ்பெக்டர், மலையாளக் கதையைத் தழுவி ஆதிமூலம் படைத்த 'மனிதன்' முதலான பல வேறுபட்ட உணர்ச்சிகளையும் கருத்துக்களையும் வெளிப்படுத்திய எண்ணற்ற நாடகங்களை வெற்றிகரமாக மேடையேற்றித் தமிழ் நாடக மேடைக்கு ஏறத்தாழ ஓர் அரை நூற்றாண்டுக் காலம் சிறப்புச் சேர்த்தவர் 'ஒளவை' தி.க.சண்முகம் ஆவார். இவற்றில் ஒன்றுகூட வெறும் பொழுதுபோக்கு நாடகம் அன்று; அனைத்தும் மக்களுக்கு அறிவும் உணர்ச்சியும் ஊட்டும் நல்ல படைப்புகள் ஆகும் என்பது நினைவில் கொள்ளத்தக்கது.

தமிழின் பெருமை, தமிழரின் வரலாற்றுச் சிறப்பு, சமுதாயச் சீர்திருத்தம், மறுமலர்ச்சிக் கருத்துகள், விதவை மணம், நட்புச் சிக்கல், உடன்பிறப்பாளர் உறவு முறிவு முதலான எண்ணற்ற பிரச்சினைகளை அணுகும் புதுமை நாடகங்கள் இவை. உயிருக்கு உயிராக ஒருவனைக் காதலித்துப் பின்னர்ச் சந்தர்ப்ப சூழ்நிலைகளால் வேறொரு நல்லவனை மணந்து கொள்ளும் ஒரு பெண், கணவன் மனமார அனுமதி கொடுத்தும் பண்பாடு காரணமாகத் தன் காதலனைச் சேர இயலாத நிலையை விளக்கும் நாரண துரைக்கண்ணனின் உயிரோவியம் போன்ற சிறந்த நாடகங்கள் இக்காலகட்டத்தில் தோன்றின. உறவுப் பிரச்சினை களையும், உளவியல் பிரச்சினைகளையும் இந்த நாடகங்கள் அலசின; ஆராய்ந்தன. சிறந்த பாடல்கள், வளமான உரையாடல், முதிர்ந்த நடிப்பு, பொருந்திய காட்சிகள், உயர்ந்த இயக்கம் என நாடகம் படிப்படியே வளர்ந்தது. இராசராச சோழனில் தஞ்சைப் பெரிய கோயிலை உயிரோட்டத்துடன் மேடையில் கொண்டு வந்த கலைநுட்பம் இவற்றிற்குச் சிகரமாக அமைந்தது எனலாம்.

அடுத்து, நாடக உலகில் ஒரு புரட்சியையும் மறுமலர்ச்சி யையும் ஏற்படுத்தியது திராவிட இயக்கம் ஆகும். புராண இதிகாச நாடகங்களும், சமுதாய 'நாவல்' நாடகங்களும் மேடையேறிக் கொண்டிருந்த அந்தக் காலகட்டத்தில் திராவிட இயக்கத்தைச்

சார்ந்த பலர் நாடகம் இயற்றவும், மேடையேற்றவும் முனைந்தனர். பழமைச் சேற்றிலும், பக்திக் குழியிலும் அப்பாவித் தமிழ் மக்களைப் புராண இதிகாச நாடகங்கள் தள்ளிவிடுகின்றன என்ற உணர்வுடனும், ஆரியர்களின் அல்லது பார்ப்பனர்களின் சதியாலும் சூழ்நிலையாலும் தமிழினம் காலங் காலமாக வீழ்ந்து மீள வழியறியாது திகைக்கின்றது என்ற உணர்வுடனும் பகுத்தறிவு நாடகங்களைத் திராவிட இயக்கத்தினர் மேடையேற்றினர். கழகங்களின் ஆதரவாலும், தனிப்பட்டவர்களின் செல்வாக்காலும் இத்தகைய நாடகங்கள் பெரிய வெற்றிகளையும் சந்தித்தன.

இந்த வகையில் முதலில் குறிப்பிட வேண்டிய நாடகம் புரட்சிக் கவிஞரின் 'இரணியன் அல்லது இணையற்ற வீரன்' என்பதாகும். 1939-ஆம் ஆண்டு அச்சில் வந்த இந்த நாடகம், முன்னதாக 1934இல் மேடை ஏற்றப்பட்டது. வெற்றிகரமாக நடந்த 'பிரகலாதா' நாடகத்திற்கு மாறான இந்த நாடகம் அன்றைய அரசால் தடை செய்யப்பட்டது. இதில் நடித்தவர்கள் சிறை செல்லவும் நேர்ந்தது.

1943இல் அறிஞர் அண்ணா அவர்கள் 'சந்திரோதயம்' என்னும் ஒரு புரட்சிகரமான நாடகத்தை எழுதியதோடு நில்லாமல் தாமே முதன்மைக் கதைமாந்தராக வேடம் புனைந்து நடித்தார். ஒளவை தி.க.சண்முகம் உள்ளிட்ட நாடக மேதைகள் இந்த நாடகத்தைப் புகழ்ந்து பேசினர். மடாதிபதிகளின் தவறான செயல்கள் பற்றியும், வைதிகர்களின் வஞ்சகம் பற்றியும் இந்த நாடகம் தெளிவுபடுத்தியது.

அண்ணா தொடர்ந்து வேலைக்காரி, ஓர் இரவு, காதல் ஜோதி முதலிய சமுதாயச் சீர்திருத்த நாடகங்களைப் படைத்தார். ஒவ்வொன்றும் வெவ்வேறு வகையில் நாட்டுப் பிரச்சினைகளை அலசி வெளிப்படுத்தின.

மேடையேறிய சமுதாய நாடகங்களுள் புரட்சிகரமான சிந்தனைகளை மிகவும் ஆணித்தரமாக எதுகை மோனை கலந்த அழகிய தொடர்களால் எடுத்துச் சொன்ன சிறந்த நாடகம் 'வேலைக்காரி' ஆகும். சாதி மீது கொண்ட அளவற்ற பற்று, பண மிகுதியினால் பெற்ற ஆணவத் திமிர், பொருத்தமற்ற போலியான ஆண் பெண் வாழ்க்கை, உயர்ந்தோர் தாழ்ந்தோர் என வேறு படுத்திப் பார்க்கும் சமுதாய ஏற்றத்தாழ்வு, மடாலயங்களில் நடைபெறும் கொலை-கொள்ளை-கற்பழிப்பு எனப் பல செய்திகளை இந்த ஒரு சுவையான நாடகத்தில் அண்ணா வெளிப்படுத்தியிருக்கிறார்.

இதைப்போன்றே இவர் படைத்த ஓர் இரவு நாடகம், ஒரே இரவில் எழுதப்பட்டது என்றாலும், சமுதாயச் சீர்கேடுகளை விளக்கி, மக்களுக்குத் தெளிவினை ஏற்படுத்தும் வெற்றி நாடகம் ஆகும்.

அண்ணாவின் மற்றொரு குறிப்பிடத்தக்க நாடகம் 'சந்திரமோகன் அல்லது சிவாஜி கண்ட இந்து ராஜ்யம்' என்பது. மராட்டிய மாவீரன் சிவாஜியின் வரலாற்றை அடியொற்றியது இது. ஆரியரின் கொடுமையால் ஒரு மாவீரனும், அவனைச் சார்ந்த சமுதாயமும் வீழ்ந்துபட்ட ஒரு வேதனையான வரலாற்றைத் தமிழினத்தவர்க்கு எடுத்துக்காட்டி எச்சரிக்கும் ஓர் அரசியல், இனப்போராட்ட வரலாற்று நாடகம் இது.

அண்ணாவிற்குப் பின் அவர்தம் இயக்கத்தைச் சேர்ந்த கலைஞர் கருணாநிதி நச்சுக்கோப்பை, சாந்தா அல்லது பழனியப்பன், தூக்குமேடை, இரத்தக் கண்ணீர், ஒரே முத்தம், உதயசூரியன், சிலப்பதிகார நாடகம் முதலானவற்றை இயற்றினார்; சலகை ப.கண்ணன் தமிழ்வாழத் தலைகொடுத்தான், நந்திவர்மன், வீரவாலி, புரட்சிப் பாடகன் ஆகிய நாடகங்களையும், ஏ.கே. வேலன், கைதி, சூறாவளி, சாம்பாஜி, காவிரிக்கு அப்பால் முதலான நாடகங்களையும், கே.ஜி. இராதாமணாளன் அரக்கு மாளிகை, நீலமணி முதலான நாடகங்களையும், எஸ்.எஸ்.தென்னரசு அத்தான், சந்தன மழை முதலான நாடகங்களையும் எழுதினர்; இவற்றில் சில மேடையேற்றப்பட்டன.

கதைக்கருவில் மாற்றம், மொழிநடையில் மாற்றம், மேடை அரங்க அமைப்புகளில் மாற்றம் எனப் பல மாற்றங்களைக் கொண்டனவாக இந்நாடகங்கள் விளங்கின. சீர்திருத்தக் கருத்துகளும், பகுத்தறிவுச் செய்திகளும் இவற்றில் மிகுதியாகப் பேசப்பட்டன.

திராவிட இயக்கக் கலைஞர்களுள் நடிகவேள் எம்.ஆர்.இராதா, எஸ்.எஸ். இராசேந்திரன், டி.வி. நாராயணசாமி, கே.ஆர். இராம சாமி முதலானவர்கள் குறிப்பிடத்தக்கவர்கள். இடுக்கண்களையும் ஏசல்களையும் பொருட்படுத்தாமல் இவர்கள் இந்நாடகங்களை நடித்துப் புகழ்பெற்றனர். எம்.ஆர்.இராதாவின் 'இரத்தக்கண்ணீர்' தமிழகத்தில் புரட்சி ஏற்படுத்திய நாடகம் ஆகும். ஆயிரக் கணக்கான முறை மேடையில் நடிக்கப்பட்ட இது, தெலுங்கிலும் சிறப்புப் பெற்றது. ஜகந்நாதையரின் நாடக சபை, மதுரை ஒரிஜினல் பாய்ஸ் கம்பெனி முதலிய நாடகக்குழுவில் பணியாற்றிய எம்.ஆர். இராதா, தாமே ஒரு நாடகக்குழுவை நிறுவிப் புரட்சியான

முறையிலும், பகுத்தறிவு நோக்கிலும் மேடைகளில் நடித்தார். மு. கருணாநிதி எழுதிய தூக்குமேடை நாடகம் இராதாவால் நடிக்கப்பெற்றது. இவர் நடித்த இலட்சுமிகாந்தன்,கீமாயணம் முதலிய நாடகங்களும் பெயர் பெற்றவை. புராண இதிகாசங் களை மேடையேற்றிச் சமயவுணர்விற்குக் கருவியாக்கியது போல இராதா, பெரியாரின் பகுத்தறிவு கொள்கையைப் பரப்புதற்குரிய கருவியாக நாடகத்தைத் தேர்ந்தார். இராதா மேடை ஏற்றிய 'சம்பூர்ண ராமாயணம்' அரசால் தடை செய்யப்பெற்றது. எனினும், பன்முறை மேடையில் நடிக்கப்பெற்ற நாடகம் ஆகும்.

1960க்குப் பின் நாடகத்துறையில் பல்வேறு மாறுதல்கள் ஏற்பட்டன. எஸ்.வி. சகஸ்ரநாமம், ஆர்.எஸ்.மனோகர் ஆகியோர் தனித்தனி நாடகக் குழுக்கள் அமைத்துப் பல நல்ல நாடகங்களை நடத்தினர். பி.எஸ். ராமையாவின் போலீஸ்காரன் மகள், தி. ஜானகிராமனின் நாலுவேலி நிலம், ராஜகோபாலின் மல்லியம் மங்களம், என்.வி. ராஜாமணியின் கண்கள் முதலானவற்றை எஸ்.வி.சகஸ்ரநாமம் வெற்றி நாடகங்கள் ஆக்கினார்; துறையூர் மூர்த்தியின் இலங்கேசுவரன், மதுரை திருமாறனின் சாணக்கிய சபதம், ஏ.எஸ்.பிரகாசத்தின் விசுவாமித்திரன், இரா. பழனிச் சாமியின் சுக்கிராச்சாரியார் முதலான பல அரிய நாடகங்களும் மேடையில் வெற்றி பெற்றன.

சோவின் விவேகா ஃபைன் ஆர்ட்ஸ் கிளப், கேபாலசந்தரின் ராகினி ரிக்ரியேஷன்ஸ், சிவாஜி கணேசனின் சிவாஜி நாடக மன்றம், எம்.ஜி.ஆர் நாடக மன்றம், ஏ.வி.எம்.ராஜனின் லிட்டில் ஸ்டேஜ் முதலிய குழுக்கள் பல நல்ல நாடகங்களை மேடை யேற்றின. மனம் ஒரு குரங்கு, சம்பவாமி யுகே யுகே, சரஸ்வதியின் சபதம், முகமது பின் துக்ளக் முதலான பல நாடகங்களைச் சோ எழுதி மேடையில் நடித்தார். இவை அனைத்தும் அங்கத நாடகங்கள். கே. பாலசந்தர் மேஜர் சந்திரகாந்த், சர்வர் சுந்தரம், எதிர்நீச்சல், நீர்க்குமிழி முதலான நல்ல நாடகங்களைத் தந்தார். சிவாஜி கணேசன், மகேந்திரனின் தங்கப் பதக்கம், சக்தி கிருஷ்ணசாமியின் வீரபாண்டிய கட்டபொம்மன், நூர்ஜகான், சுந்தரத்தின் வியட்நாம்வீடு, தஞ்சைவாணனின் களம்கண்ட கவிஞன் முதலான நாடகங்களையும், எம்.ஜி.இராமச்சந்திரன் இன்பக்கனவு, சுமைதாங்கி, அட்வகேட் அமரன் முதலான நாடகங்களையும் வெற்றிகரமாக நடத்தினர். எஸ்.எஸ்.ஆர். நாடக மன்றம் மூலம் எஸ்.எஸ்.இராஜேந்திரன் மணிமகுடம் என்ற நாடகத்தை அரங்கேற்றினார்.

பூரணம் விசுவநாதன், ஒய்ஜிபார்த்தசாரதி, டிஎஸ்சேஷாத்திரி, வி.கோபாலகிருஷ்ணன், வி.எஸ். இராகவன், கோமல் சுவாமிநாதன், எஸ்.வி.சேகர், கிரேசி மோகன் முதலானோர் தனி நாடகக் குழுக்களை அமைத்துப் பல வெற்றி நாடகங்களை இருபதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தமிழகத்துக்குத் தந்தனர்.

வரலாற்று நாடகம், சமூக நாடகம், அங்கத நாடகம், பக்தி நாடகம், துப்பறியும் திகில் நாடகம் எனப் பலவகையான நாடகங்கள் இக்காலகட்டத்தில் மேடையேற்றப்பட்டன. எண்ணற்ற நாட்டியக் கலைஞர்கள் தம் குழுக்களின் வாயிலாகப் பல நாட்டிய நாடகங்களை வழங்கினர். பத்மினியின் ராமாயணம், வைஜயந்திமாலாவின் சங்கத் தமிழ், ஜெயலலிதாவின் காவிரி தந்த கலைச்செல்வி, ஜி.சகுந்தலாவின் சிலப்பதிகாரம் முதலிய பல நாட்டிய நாடகங்கள் பெருவெற்றி பெற்றன. இவர்களே அன்றி, பத்மா சுப்பிரமணியம், நடராஜ் சகுந்தலா, வழுவூர் சாம்ராஜ் முதலானவர்கள் தம் குழுக்களைக் கொண்டு பல நாட்டிய நாடகங்களை நடத்தினர்.

ஔவை தி.க.சண்முகம், எஸ்.வி.சகஸ்ரநாமம் முதலானோரின் மறைவுக்குப் பின்னரும், ஆர்.எஸ்.மனோகர், சோ முதலானோரின் ஓய்வுக்குப் பின்னரும் நாடக மேடை செயற்பாடுகள் பெரிதும் குறைந்தன. இன்று மேடையில் பொழுதுபோக்கு அம்சங்கள் மிகுந்த நகைச்சுவை நாடகங்களே பெரும்பாலும் நடத்தப்படுகின்றன. பொழுதுபோக்கு என்ற பெயரில் மலினப்படுத்தப்பெற்ற நகைச்சுவை நாடகம் என்ற பெயரின அண்மைக் காலங்களில் பெருவரவாயின. தரமற்ற நகைச்சுவைகள் உரையாடல்களில் இடம்பெற்றுள்ளன. வெறும் உணர்ச்சிக் குவியலான நாடகங்கள் எழுதவும்படுகின்றன. மேடையிலும் நடிக்கப்படுகின்றன. சமூக உணர்வோடு கூடிய பிரச்சனைகளை அலசுவதான போக்கு இடதுசாரிக் கொள்கை யாளர்களிடம் காணப்பட்டது. கோமல்சுவாமிநாதனின் தண்ணீர் தண்ணீர் இதற்கோர் உதாரணம். தண்ணீருக்காக அலையும் கிராமம் (அத்திப்பட்டு) ஒன்றின் அவலத்தை எதார்த்தமாக எடுத்துரைத்த நாடகம் இது.

நாடகம் வேறு வகையில் வளர்ந்து வருகிறது. மேற்குவங்கம், குஜராத், மராட்டியம், தில்லி முதலான இடங்களில் நடைபெற்று வந்த இளைஞர்களின் கோபதாபங்களை வெளிப்படுத்தும் 'வீதி' நாடகங்கள் தமிழிலும் வளரத் தொடங்கின. ஒன்றிரண்டு என

நடைபெற்றுக் கொண்டிருந்த இவ்வகை நாடக அரங்கம், இன்று ஐம்பதிற்கு மேற்பட்ட குழுக்களாக வளர்ந்து அரிய பல நாடகங்களைச் சிறிய அளவில் (அரை மணி தொடங்கி ஒன்றரை மணி கால அளவில்) நடத்திவருகின்றன.

தரம் வாய்ந்த நாடகங்கள் இல்லை என்று கருதிய சி.சு.செல்லப்பா அறுபதுகளில் 'எழுத்து' பத்திரிகையில் பிறமொழி நாடகங்களைத் தமிழில் வெளியிட்டு வந்தார். ந.முத்துசாமி, 'நாற்காலிக்காரர்கள்', 'காலம் காலமாக', 'அப்பாவும் பிள்ளையும்' ஆகிய புதுமை நோக்கிலான நாடகங்களை இதழில் எழுதலானார். நா. முத்துசாமி கதை கூறும் போக்கை விடுத்து, மனிதனின் உள்மன உலகங்களை வெளிப்படுத்தும்படியான நாடகங்களைத் தயாரித்தார். இவரது நாற்காலிக்காரர்கள் என்ற நாடகம், அரசியலின் கேலிக் கூத்தையும், மனிதன் அதில் கலந்து அல்லாடுவதையும் எள்ளல் சுவையோடு கூறுகிறது. உடைந்து போன உரையாடல்களிலும், மரபு வசனங்களிலிருந்து மாறுபட்ட வார்த்தைச் சிக்கனம் தரும் அழுத்தமான உணர்வுகளிலும் இவர் நாடகம் தீட்டிவருபவர். நாற்காலிக்காரர்கள் ஆங்கிலப் பாணியிலான ஒருவகை அபத்த நாடகம் போன்றமைந்தது. மாறுபட்ட கருத்தியலும், சிந்தனைகளும் கொண்ட நவீன நாடகத்தை அறிமுகமாக்கியவர்கள் ந.முத்துசாமியும், இந்திரா பார்த்தசாரதியும் ஆவர். மேற்கத்திய சூழலில் இவர்கள் நாடகம் புனைந்தனர். வடிவம், உள்ளடக்கம் போன்றவற்றில் புதிய அணுகுமுறையை வெளிப்படுத்தத் தொடங்கினர்.

1977இல் ந.முத்துசாமியின் கூத்துப்பட்டறை தொடங்கிய காலந்தொட்டு இத்தகைய வீதி நாடகங்கள் பாரம்பரியக் கலையின் மீட்டுருவாக்கத்துடனும், இன்றைய பிரச்சினைகளை எடுத்துக்காட்டும் வகையிலும் தனித்தன்மையுடனும் நடத்தப் பட்டு வருகின்றன. ஞாநியின் பரிக்ஷா, மு.இராமசாமியின் நிஜ நாடக இயக்கம், பிரளயனின் சென்னைக் கலைக்குழு, அ.மங்கையின் பல்கலை அரங்கம், 'கே.ஏ.குணசேகரனின் தன்னானே கலைக்குழு முதலான பல வீதிநாடகக் குழுக்கள் இப்பணியைத் தொடர்ந்து வெற்றிகரமாகச் செய்து வருகின்றன.

பலூன், மூர் மார்க்கெட், ஸ்பார்டகஸ், பிணம் தின்னும் சாத்திரங்கள், நந்தன் கதை, கொங்கைத்தீ, இராமானுசர், தீனிப்போர், சத்திய சோதனை, வெறியாட்டம், மீதி சரித்திரம், கலீலியோ, சுவரொட்டிகள் முதலான நூற்றுக்கு மேற்பட்ட நாடகங்கள் இக்குழுக்களால் சிறப்பாக நடத்தப்பெற்றிருக்கின்றன.

ந. முத்துசாமியின் கூத்துப்பட்டறையைத் தொடர்ந்து பரிக்ஷா நாடகக்குழு இந்திரா பார்த்தசாரதியின் போர்வை போர்த்திய உடல்கள், நந்தன் கதை, ஜெயந்தனின் மனுஷா ஆகிய நாடகங்களை நடத்தியது. பாதல் சர்க்கார், விஜய்டெண்டுல்கர் ஆகியோரின் நாடகங்களைப் பரிக்ஷா குழுவினர் அரங்கேற்றினர். எண்பதுகளின் தொடக்கத்தில் நாடகமும் மேடை அரங்கமும் இவ்வகையில் புதுநடை கண்டன. பாதல் சர்க்கார் மூலம் அறிமுகமான மூன்றாம் அரங்கு மேடைக்களத்தை மாற்றியமைத்தது. ப்ரெக்டின் காவியப்பாணி அரங்கையும் இங்கு நோக்கவேண்டும். மு. இராமசாமியின் நிஜ நாடக இயக்கம் 'ஸ்பார்டகஸ்' நாடகம் திறந்தவெளி அரங்கின் பரிமாணங்களைக் காட்டியது. இந்நாடகக் குழுவின் 'துர்க்கிர அவலம்' கிரேக்க நாடகமான 'ஆண்டிகோன்' என்ற நாடகத்தைத் தழுவி எழுதி நடிக்கப்பட்ட நாடகமாகும். இதில் காட்சிப்படிமங்கள் இடம்பெற்றிருந்தன. சங்கீத நாடக அகாதெமி மண்டல விழாக்களில் நாடகக்குழுக்கள் சில, புதுமையான நாடகங்களை அரங்கேற்றின. சாபவிமோசனம், கட்டியங்காரன், நற்றுணையப்பன், பகவதாஜ்ஜீதம், நாயைப் பறிகொடுத்தோம், கருஞ்சுழி முதலிய புதுவகை நாடகங்கள் அரங்கேற்றப்பட்டன.

தமிழில் மொழிபெயர்ப்பு நாடகங்கள் ஓரளவு வரவேற்பைப் பெற்றன. மொழியாக்கம் பெற்ற சேக்ஸ்பியர், மோலியர், இம்சன் முதலியோரின் நாடகங்கள்தவிர, புதுமையான முறையில் எழுதப்பட்ட அண்மைக் காலத்திய மேனாட்டு நாடகங்கள் தமிழுக்கு அறிமுகமாயின. ஜெர்மன் நாடகாசிரியர் ப்ரெக்ட், நெய்ஸர், ஸிக்ப்ரீட் லென்ஸ், மற்றும் பிரெஞ்சு தத்துவ ஆசிரியர் யூன் பால் சார்த்தர் முதலியோரின் நாடகங்கள் கூத்துப்பட்டறை வழியே அறிமுகமாயின. பல்கலை அரங்கம் வழி ப்ரெக்ட்டின் காவியப் பண்புகள் நிறைந்த 'ஒரு பயணத்தின் கதை' என்ற நாடகம் நடத்தப்பட்டது.

வங்க நாடகாசிரியரான பாதல் சர்க்காரின் ஏவம் இந்திரஜித் கோ.இராசாராம் மொழிபெயர்ப்பில் வெளிவந்தது. அந்நாடகம் அரங்கேற்றப்பட்டுப் பரபரப்பை ஏற்படுத்தியது. மராட்டிய நாடகாசிரியர் விஜய் டெண்டுல்கரின் 'கோர்ட் நடந்து கொண்டிருக்கிறது, அமைதி, கமலா முதலிய நாடகங்கள் தமிழக நாடகச் சூழலில் வரவேற்பைப் பெற்றன. கிரிஷ் கர்னாட் கன்னடத்தில் எழுதிய துக்ளக், ஹயவதனா முதலியன அறிமுகமாயின. சரஸ்வதி ராம்நாத் மொழிபெயர்ப்பில் மோகன்

ராகேஷின் 'அரையும்குறையும்' என்ற நாடகம் அரங்கேறியது. இந்தியில் சுதேந்திர வர்மாவின் 'சூரியனின் கடைசிக் கிரணத்திலிருந்து சூரியனின் முதல் கிரணம் வரை' அரங்கேறியது. சங்கரபிள்ளையின் மலையாள நாடகமான 'கறுத்த தெய்வத்தைத் தேடி' என்ற நாடகத்தை ராமானுஜம் தமிழில் அரங்கேற்றினார். மொழிபெயர்ப்பு நாடகங்கள் சில மிகுந்த வரவேற்பைப் பெற்றுத் தமிழகச் சூழலுக்கு ஏற்ப அமைந்து, தமிழ் நாடகங்களில் புதிய பரிமாணத்திற்கு ஓரளவு வழிவகுப்பதாயிற்று.

தமிழில் புதுப்பார்வையோடு எழுதப்பட்ட கொங்கைத்தீ, (இந்திரா பார்த்தசாரதி) சிலப்பதிகாரத்தைத் தழுவிய புதிய பெண்ணியப் பார்வை கொண்டது. பாரதிதாசனின் 'புரட்சிக்கவி' மு.ராமசாமியால் புதிய கோணத்தில் அரங்கேறியது. தென்னாற்காடு மாவட்டம் பூதங்குடியில் நடந்ததாக நம்பப்பட்ட தீப்பாய்ந்த நாச்சியார் கதையை நாட்டுப்புறப் பின்னணியோடு 'வெறியாட்டம்' என்ற நாடகமாக்கி இராமானுஜம் அரங்கேற்றினார். போர்க் களத்தில் தந்தை, கணவன் ஆகியோரை இழந்த நாச்சியாரின் அவலம் பல்வேறு ஒப்பாரிகளின் பின்னணியில் ஆழமாக உணர்த்தப்பட்டது. ஔவையாரைப் புதிய கோணத்தில் உணர்த்திய இன்குலாப், அதனைப் பல்கலை அரங்கத்தின் மூலம் நாடகமாக்கினார். ஞான. ராஜசேகரனின் 'வயிறு', ஜெயந்தனின் நினைக்கப்படும், பிரபஞ்சனின் முட்டை முதலிய நவீன நாடகங்கள் பெரிதும் சமூக உணர்வின் அடிப்படையில் எழுந்த நாடகங்களாகும். அவ்வப்போது சிற்றிதழ்களில் எஸ்.எம்.ஏ. ராம், அஸ்வகோஷ், தேவிபாரதி, எஸ்.இராமகிருஷ்ணன் மற்றும் பலர் நாடகங்களை வெளியிட்டு வருகின்றனர். இன்னும் குறிப்பிட்டுச் சொல்லுமளவுக்குப் பெரு வெற்றிகளை இத்தகைய நாடகங்கள் பெறவில்லை என்றாலும், இவற்றிற்கு மிகச் சிறந்த எதிர்காலம் உள்ளது என்பதில் ஐயமில்லை.

மாநில மைய அரசுகளும், பல்கலைக்கழகங்களும், கலைசார்ந்த நிறுவனங்களும் இப்புதிய நாடக முயற்சிகளுக்குப் பொருளுதவி தந்து ஆதரித்தால் தமிழ் நாடகம் புதுமையான முறையில் வளர்வதற்குப் பெரிய வாய்ப்புகள் உள்ளன.

கடந்த அறுபது ஆண்டுகளாகத் தமிழ்நாட்டில் வானொலி நிலையம் நூற்றுக்கணக்கான நாடகங்களை ஒலிபரப்பி இருக்கிறது. இவற்றில் பல அரிய நாடகங்கள் அடங்கும். அகில பாரத வானொலி நாடக விழாக்கள் மூலம் வேற்று

மொழி நாடக மொழிபெயர்ப்புகள் சிறந்த முறையில் ஒலிபரப்பப் படுவதுண்டு. 15 நிமிடம் முதல் ஒரு மணி வரை நீடிக்கும் பல நாடகங்களை நாள்தோறும் வானொலி ஒலிபரப்பி வருகிறது. அவற்றுள் சில அச்சிலும் வெளிவந்துள்ளன.

தொலைக்காட்சி இன்னொரு வகையில் நாடகத்தை வளர்த்து வருகிறது எனலாம். பொதிகை, சன், ராஜ், விஜய், ஜெயா முதலிய தொலைக்காட்சி அலைவரிசைகளில் ஓராண்டுக் காலத்தில் ஏறத்தாழ நூற்றுக்கும் மேலான தொடர்கள் ஒளிபரப்பாகியுள்ளன.

இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் நாடக வளர்ச்சி மிகவும் நல்ல முறையில் தொடங்கியது; பலவகைக்ளில் பன்முக வளர்ச்சியை நாடகத் துறையில் பார்க்க முடிகிறது; புராண இதிகாச நாடகம், சமுதாய நாடகம், வரலாற்று நாடகம், தேசபக்தி நாடகம், சீர்திருத்த நாடகம் எனப் பல பரிமாணங்களோடு நடை போட்டது; கண்கவர் பிரம்மாண்டமான காட்சி அரங்கம் தொடங்கி, ஒரு 'செட்' அரங்கம் என்றும், சுழல் நாடக மேடை என்றும், முப்பரிமாண நாடக மேடை என்றும் பலவகையில் மேடைகள் மாறுதல்கள் பெற்று, இறுதியாக, சந்திகளிலும் சதுக்கங்களிலும், வெட்ட வெளிகளிலும் வீதிகளிலும் நடத்தக் கூடிய வகையில் நாடகம் புதுக்கோலம் கொண்டது.

தொண்ணூறுகளில் பெண்ணியப் பார்வையிலான நாடகங்களும் (ஔவை) தலித்திய நாடகங்களும் (வார்த்தை மிருகம், பாறையைப் பிளந்துகொண்டு, பலிஆடுகள்) அரங்கேறி யுள்ளன. உத்திமுறையில் பின்நவீனத்துவப் போக்கில் அமைந்த நாடகங்கள் (அமீபாக்களின் காதல், ஆதியிலே மாமிசம் இருந்தது, உயிர்ச்சுருள், சைபீரிய நாரைகள், இனி இங்கு வரப்போவதில்லை) அரும்பத் தொடங்கியுள்ளன. இவற்றுக்குரிய வரவேற்பைப் பொறுத்திருந்து காணவேண்டும்.

தமிழ்ப் பண்பாட்டின் பழமை வேர்களிலிருந்து சிற்சில கூறுகளை எடுத்துக் கொள்வதுடன், புதிய காலகட்டத்தின் தேவைகளுக்கேற்ப உள்ளடக்க மாற்றங்களை மேற்கொண்டு, விரைந்து செல்லும் கணினியுக வளர்ச்சிகளையும் தன்னுள் அடக்கிக் கொண்டு ஒரு புதிய நாடக அரங்கினைத் தமிழ்மேடை எதிர்கொள்ளும் காலம் வெகுதொலைவில் இல்லை.

# இலங்கை

கா. சிவத்தம்பி

இலங்கைத் தமிழர்களிடையே மற்றைய ஆசிய சமூகங்களில் காணப்படுவது போன்று நவீன காலத்திற்கு முற்பட்டனவும் எழுத்தறிவு நிலைக்கு முற்பட்டனவுமான அரங்க மரபுகள் நவீன அரங்குகளுடன் ஒருசேர, ஒரே நேரத்தில் காணப்படுவதனை ஒரு முக்கியப் பண்பாக எடுத்துக் கூறலாம்.

இலங்கையின் மரபு வழி நாடக ஆற்றுகைகளை இரண்டு பெரும்பிரிவுகளாகப் பிரிக்கலாம்.

1. வழிபாட்டு இடங்களில் நடத்தப்பெறும் சடங்குகளின் மீள் நிகழ்த்துகை அல்லது செய்துகாட்டுகை - இவை ஒரே நாளில் செய்யப்படுபனவாகவோ அன்றேல் பல நாட்களில் செய்யப்படுபனவாகவோ அமையலாம். உதாரணம்: ஆகமக் கோயில்களில் நடைபெறும் வேட்டைத் திருவிழா (ஒருநாள் மாலை அல்லது இரவு, பஞ்சபாண்டவர் வனவாசம் போன்ற தொடர்நாள் நிகழ்ச்சிகள்).

2. இலங்கைத் தமிழர்கள் பாரம்பரியமாக வாழ்ந்து வரும் எல்லா மாவட்டங்களிலும் காணப்படும் கூத்து எனும் மரபுவழி அரங்கு. மட்டக்களப்பு, திரிகோணமலை, வன்னி, யாழ்ப்பாணம், மன்னார், புத்தளம், சிலாபம் ஆகிய இடங்களில் இதனைக் காணலாம். வணிகப் பெரும் தோட்டங்களில் வாழும் இந்திய வம்சாவழி 'மலையக'த் தமிழர்களிடையே காமன்கூத்து, அரிச்சந்திரன் தபசு எனும் இருவகை சடங்குசார் ஆட்டங்கள் உண்டு.

தமிழ்நாட்டின் தெருக்கூத்தினைப் பெரிதும் ஒத்த இக் கூத்துக்கள் பாரம்பரியமாக வட்டக்களரியிலே ஆடப்படும். ஆட்டவெளியின் நடுவில் நிற்கும் அண்ணாவியார் இசைக்கும் மத்தள இசைக்கும் இயைய ஒத்திசைப்பட்ட ஆட்ட அசைவுகளைக் கொண்ட இக்கூத்தில் இராமாயண மகாபாரதக் கதைகளும் பிற பாரம்பரிய ஐதீகக் கதைகளும் நடித்துக் காட்டப்படுவது உண்டு. இக்கூத்துக்களைப் பயில்வோர் தொழில்முறை நடிகர்கள் அல்லர். இலங்கைத் தமிழ்க் கூத்துக்கள் இருவகையின.

வடமோடி, தென்மோடி; இவை ஒவ்வொன்றுக்கும் அவ்வவற்றுக்கு உரித்தான ஆட்ட முறைமை, ஆடை, அணி ஆகியன உண்டு. ஆட்டக்கதை மரபும் வேறுபடும். இவற்றைவிட நொண்டி நாடகம் எனும் ஒருவகை உண்டு. இதுவும் பெரும்பாலும் கூத்து ஆட்டத்தையே கொண்டது. இதைவிட மகுடி என்னும் ஒருவகை நாடகமும் உண்டு. மேலாக "நாட்டை" எனும் நாடக வடிவத்தின் இருப்பும் அண்மையில் கண்டறியப்பட்டுள்ளது.

மரபுவழிவரும் இந்தப் பாரம்பரிய அரங்குகளைத் தவிர வளம்மிக்க ஒரு கத்தோலிக்க கிறித்துவ அரங்கும் இலங்கையில் உள்ளது. இலங்கையில் கத்தோலிக்கர்கள் நாடகத்தைச் சமூக ஒருமைப்பாட்டுக்கான ஒரு முக்கிய தொடர்பு வாயிலாகக் கொண்டனர். குறிப்பாக இலங்கையின் வடபகுதியின் மேற்குப் புறத்திலுள்ள மன்னாரில் இவை மிகச் சிறப்பாகக் காணப் படுகின்றன. யாழ்ப்பாணத்திலும் வளம்மிக்க ஒரு கத்தோலிக்க நாடகப் பாரம்பரியம் உண்டு. மன்னார்க் கத்தோலிக்க நாடகங்களை யாழ்ப்பாணப் பாங்கு, மாதோட்டப் பாங்கு எனப் பிரிக்கும் ஒரு வழக்கம் உண்டு. கதையை எடுத்துக் கூறி இடைக்கிடையே 'சித்திரிப்பு ஆட்ட'ங்களைக் கொண்ட வாசாப்பு (வாசகப்பா) என்ற ஒரு மரபும் உண்டு.

19ஆம் நூற்றாண்டின் பிற்கூற்றிலும் 20-ஆம் நூற்றாண்டின் தொடக்க ஆண்டுகளிலும் தமிழ்நாட்டிலிருந்து, பார்சி மரபு வழிவந்த ஸ்பெஷல் நாடகங்களை நடத்திய பலகுழுவினர் இலங்கையில் தமிழர் வாழும் பல பகுதிகளிலும் நாடகங்கள் நடத்தினர். அவற்றுள் யாழ்ப்பாணம், கொழும்பு, மட்டக்களப்பு, மலையகம் ஆகியவை முக்கியமானவை ஆகும். தென்னிந்தியச் செவ்விசையான கர்நாடக இசையைத் தளமாகக் கொண்ட இந்த நாடக மரபில் பாடலே (நாடகப் பண்பினைத் தரும்) அரங்காக அமைந்தது. தமிழகத்தில் இவ்வரங்கில் பெயரீட்டிய எஸ்ஜிகிட்டப்பா, எம்.ஆர். கோவிந்தசாமி, வி.ஏ. செல்லப்பா, கே.பி. சுந்தராம்பாள் முதலியோர் இலங்கையிலும் நடித்தனர். இந்த நாடக முறைமை தந்த ஊக்கம் காரணமாகவும் கிடைத்த வரவேற்பு காரண மாகவும் இலங்கைத் தமிழர்களிடையேயும் இந்த அரங்க முறைமையில் நடிக்கும் நடிகர்கள் தோன்றினர். அவர்களுள் முக்கியமானோர் எம்.வி. கிருஷ்ணாழ்வார், பொன்னாளை கிருஷ்ணபிள்ளை, ஜெயராஜா, எஸ்.எஸ். ரத்தினம் பிள்ளை ஆகியோராவர். தமிழ்ச்சினிமாவின் மேலோங்கு நிலை வரும்வரை இந்த அரங்கே, தமிழகத்திலும் இலங்கையிலும் சனரஞ்சக

அரங்காக விளங்கிற்று. இந்த மரபு ஏறத்தாழ 1980-கள் வரை (வி. வைரமுத்து) பிரபலமாக இருந்தது.

வரன்முறையான இலங்கைத் தமிழ் நவீன அரங்கு (1930-1940களில்) இரு செல்நெறிகள் வழியாக வந்து சேருகின்றது.

1. தமிழகத்தின் சம்பந்த முதலியாரைப் பின்பற்றி ஆங்கிலம் தெரிந்த மத்தியதர வர்க்கத்தினரின் ஈடுபாட்டைப் பெற்றதும் கலையரசு கா. சொர்ணலிங்கத்தை (1889-1983) முன்னுதாரணமாகக் கொண்டதுமான அரங்கு. இது ஆங்கிலத் தழுவல் நாடகங்களையும் "வசன நாடக"ங்களையும் கொண்டிருந்தது.

2. பேராசிரியர் கணபதிப்பிள்ளையின் (1903-1968) நாடகங்களை முக்கிய அளிக்கையாகக் கொண்ட பல்கலைக்கழக நாடக அரங்கு. கணபதிப் பிள்ளையின் நாடகங்களில் யாழ்ப்பாணப் பேச்சுவழக்கு இடம் பெற்றது. இலங்கைத் தமிழ் நாடக மரபின் அரசியல் அரங்கும் இவர் வழியாகவே வரும். 40-களின் பிற் கூற்றிலும் 50களின் தொடக்கத்திலும் வித்தியானந்தன், கணபதிப்பிள்ளையின் நாடகங்களைத் தயாரித்து அளித்தார். உடையார் மிடுக்கு, தவறான எண்ணம், துரோகிகள், சுந்தரம் எங்கே,? சங்கிலி என்பவை கணபதிப் பிள்ளையின் பெயர் பெற்ற நாடகங்கள் ஆகும்.

1950களின் பிற்கூற்றில் இலங்கைத் தமிழ் நாடக அரங்கில் ஒரு பெரும் திசைதிருப்பம் ஏற்படுகிறது. பழைய தமிழ்க் கூத்து மரபின் அடியாக வந்த சிங்கள "நாடகம்" என்னும் வகையினைத் தள அமைப்பாகக் கொண்டு செய்த புதிய தயாரிப்பு ஒன்றின் மூலம் (மனமே - 1956) சிங்கள நாடகத்தின் போக்கையே மாற்றியமைத்த தயாரிப்புகள் தமிழ் அரங்க வளர்ச்சிக்கும் பாரம்பரிய வேர்களை மீட்டும் கண்டறிவதற்கான உந்துதலை ஏற்படுத்திற்று. இக்காலத்தில் வித்தியானந்தன் (1928-1988) மிக முக்கிய தயாரிப்பாளர் ஆகிறார். ஏற்கனவே இலங்கைக் கலைக் கழகக் குழுவின் ஊடாகப் பாரம்பரிய அரங்கின் மீள் கண்டு பிடிப்பில் ஈடுபட்டிருந்த வித்தியானந்தன் அந்த நடைமுறையின் பெறுபேறுகளாகப் பல்கலைக்கழகத்துக்கு வந்த மௌனகுரு, பேரின்பநாயகம் உள்ளிட்ட அற்புத கூத்துக் கலைஞர்களைப் பயன்படுத்தி, ஏற்கனவே கணபதிப்பிள்ளையுடனும் தன்னுடனும் இணைந்து பணியாற்றி வந்த மாணவர்கள் சிலர் உதவியுடன் "கர்ணன் போர்" என்னும் கூத்தை அரங்கேற்றினார். இந்த

நடைமுறை பாடசாலைகளால் மேற்கொள்ளப்பட்டு கூத்து சனரஞ்சகமயப்படுத்தப்பட்டது.

இவ்வேளை கொழும்புப் பல்கலைக்கழக நாடக அளிக்கைகள் மூலமாக முன்னிலை எய்திய சுந்தரலிங்கம், சிவானந்தன் போன்றோரும் வித்யானந்தனுடன் இணைந்து பணியாற்றினர். இவ்வாறாகக் கூத்து அரங்கு மீள் கண்டுபிடிப்புச் செய்யப்பட்டது. இவை ஒரு புறமிருக்க, சனரஞ்சக நிலையில் பல இளைஞர்கள் தமிழ்ச் சினிமா வழிவந்த சமூகமாற்ற ஊக்கம் ஒருபுறமாகவும் டி.கே.எஸ். சகோதரர்கள், ஆர்.எஸ். மனோகர் போன்றவர்களின் நாடகத் தயாரிப்புகளால் கவரப் பெற்றமை மறுபுறமாகவும் இருக்க நாடகத் தயாரிப்புத் துறையிலும் நடிப்பிலும் ஆர்வம் காட்டினர்.

1970களில் பிரதானமாகக் கொழும்பை மையமாகக் கொண்ட இளம் நாடகத் துறையினர் 1960-முதல் ஐரோப்பிய அமெரிக்க அரங்குகளில் ஏற்பட்ட வளர்ச்சிகளை உள்வாங்கி, சில இடங்களில் சிங்கள நாடகவியலாளர்களுடன் இணைந்தும், நாடகங்கள் தயாரித்தனர். மௌனகுரு கூத்தினைச் சமகாலப் பிரச்சினைகளுக்கான வெளிப்பாட்டு முறையாக்க முனைந்தார். சுந்தரலிங்கம், தாசீசியஸ் தமக்கிருந்த மேற்கத்திய அரங்க மரபின் அறிவுடன் பார்வைக் கவர்ச்சியுள்ள தமிழ் நாடகங்களைத் தந்தனர். மேற்கத்திய அரங்க முறைமைகள் வெகுநேர்த்தியுடன் தமிழ்மயப்படுத்தப்பட்டன. கூத்து புத்துயிரும் புதுவடிவமும் பெற்றது. 1980களில் இலங்கையின் இனக்குழும மோதல் வரன்முறையான போராக மாறியது. தமிழ்ப் பிரதேசங்களில் வாழ்க்கை நிலை முறைமை மாறத்தொடங்கியது. யாழ்ப்பாணத்தைப் பொறுத்த வரையில் உள்ளூர் மகிழ்வளிப்பு நிகழ்ச்சிகள் நின்று போயின. சமூக அரசியல் பிரச்சினைகளை வெளியாக விவாதிக்க முடியாத நிலைமை ஏற்பட்டது. இந்தச் சூழலில் இந்தக் கருத்தாடலின் மையமாக விளங்கிய யாழ்ப்பாணப் பல்கலைக் கழகம் இலங்கையின் தமிழ்நாடக வளர்ச்சியின் ஒரு புதிய கட்ட வளர்ச்சிக்குத் தளமாயிற்று. யாழ்ப்பாணப் பல்கலைக்கழக மாணவர்களைக் கொண்டு சிதம்பரநாதனால் தயாரிக்கப்பட்ட குழந்தை ம. சண்முகலிங்கத்தின் 'மண் சுமந்த மேனியர்' இந்தப் புது வளர்ச்சி நெறிக்கான துலாம்பரமான முன்னுதாரணமாயிற்று. இக்காலக்கட்டத்தில் நாடகமும் அரங்கியலும் பல்கலைக்கழகப் புகுமுக வகுப்பிற்கான ஒரு பாடம் ஆயிற்று (1979). யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம் அரங்கியலைத் தனது கற்கைநெறிகளுள்

ஒன்றாக்கியது. சிவத்தம்பி, சண்முகலிங்கம், மௌனகுரு, சுந்தரலிங்கம், காரை சுந்தரம்பிள்ளை ஆகியோர் இக்கற்கை நெறியைப் பயிற்றினர். சண்முகலிங்கம், சிதம்பரநாதன், ரகுவரன் போன்றோரின் முயற்சியால் பாடசாலைகளில் ஒரு கல்விசார் அரங்கு வளரத் தொடங்கிற்று. இதே வேளையில் தீவிரவாத இளைஞர் இயக்கங்கள் தெருவெளி நாடகங்கள் ஊடாக, தங்கள் கொள்கைகளையும் செயல்களையும் பரப்பினர். இவையாவும் நாடக வளர்ச்சியில் ஒரு புதிய கட்டத்தைத் தோற்றுவித்தது.

இந்த நாடக எழுச்சியின் கலைநிலைசார் அம்சங்கள் மௌனகுரு கிழக்குப் பல்கலைக்கழகத்திற்குச் சென்ற பொழுது அங்கு வளர்க்கப்படத் தொடங்கின.

இனக்குழுமப் போராட்டம் ஏற்படுத்திய வாழ்க்கைச் சிதறுகையும் சனப் பெயர்ச்சியும் சமூக நிலைகுலைவும் நாடகத்திற்கு ஒரு புதிய பாணியை வகுத்தன. சிதம்பர நாதன் அரங்கச் செயற்பாடுகளைக் கொண்ட நாடகச் செயல் அமர்வுகளின் மூலம் உளப்பாதிப்புற்ற இளைஞர்களுக்கு உதவத் தொடங்கினார். இது இன்று உளவியல் பயன்பாட்டைத் தருகின்ற ஒரு பிரத்யேக அரங்கினை இலங்கைக்குத் தந்துள்ளது. இதனை நாடகம் என்னும் கலைவடிவம் என்பதிலும் பார்க்க நாடகம் என்னும் உத்திமுறை எனக் கூறலாம். இந்த நாடக உத்தி, மனம் சிதறுண்டு கிடக்கும் இளம் வயதினருக்குத் தங்களைத் தாங்கள் மீட்டெடுத்துக் கொள்ளுதற்கு உதவுகிறது.

இத்தகைய வளர்ச்சிகளினூடே இன்றும் தமிழ்ச் சினிமாவை மையமாகக் கொண்ட அரங்க அளிக்கைகளும் தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டேயிருக்கின்றன.

## சிங்கப்பூர்

சுப. திண்ணப்பன்
ஆ.ரா. சிவகுமாரன்

மேடை நாடகங்களாகவும் வானொலி நாடகமாகவும் நடிக்கப்பெற்ற பின் பல நாடகங்கள் நூல் வடிவம் கண்டுள்ளன. 1965க்கும் 1999க்கும் இடைப்பட்ட காலத்தில் நூல் வடிவம் கண்ட நாடக நூல்கள் 22 ஆகும். இவற்றுள் மேடை நாடகங்கள், வானொலி நாடகங்கள், வரலாற்று நாடகங்கள், கேலிக்கூத்து

வகையைச் சார்ந்த நாடகங்கள் எனப் பல வகை உண்டு. சமூகச் சீர்திருத்தம், தேசிய உணர்வு, குடும்ப ஒற்றுமை, முதியோர் பேணல், பெண்களின் அடக்கப் பண்பு முதலியவை நாடகங்களின் மையக்கருத்தாக உள்ளன. இவை பெயரளவிலேயே சிங்கையின் மணம் வீசி நிற்கின்றன. சமுதாயத்தை ஊடுருவிப் பார்த்து நாடகத்தின் மையக்கரு தேர்வு செய்யப்படவில்லை. இருப்பினும் நாடக இலக்கியம் ஏனைய சிங்கைத் தமிழ் இலக்கியங்களுடன் ஒப்பிடுகையில் சிங்கைச் சமுதாயத்தைக் கூடுதலாகப் பிரதிபலிக்கிறது எனலாம். இந்நாடகங்களை 17 ஆசிரியர்கள் படைத்துள்ளனர்.

ஏ.பி. சண்முகம் 'பயணம்' (1972) என்னும் நாடகத்தை எழுதியுள்ளார். இந்நாடகம் சமூக, சமயச் சீர்திருத்த நோக்கம் கொண்டதாகும். சே.வெ. சண்முகம் சிங்கப்பூர் மாப்பிள்ளை (1984), பழத்தோட்டம் (1990) முதலிய நாடக நூல்களை வெளியிட்டுள்ளார். பழத்தோட்டத்தை ஓர் உருவக நாடகம் என ஆசிரியர் குறிப்பிடுகிறார். 10க்கு மேற்பட்ட மேடைநாடகங்களை இதுவரை இவர் எழுதியுள்ளார்.

கலாசார விருது பெற்ற நாடகக் கலைஞர் ச. வரதன், உயர்ந்த உள்ளம் (1983) என்னும் நாடகத்தை எழுதி இயக்கியவர். பகுத்தறிவு நாடக மன்றத்தைத் தோற்றுவித்தவர். நாடக நடிகர். சிங்கப்பூர் இந்தியக் கலைஞர் சங்கத்தை நிறுவியவர். இரா. நாராயணசாமி நீரில் பூத்த நெருப்பு (1983), கோயில் கோபுரம் (1986), நெஞ்சில் ஆடும் நிழல்கள் (1990) முதலிய நாடக நூல்களை வெளியிட்டவர். சிறந்த நாடக நடிகர். பழிவாங்கல், கூட்டுக் குடும்பம், பெற்றோரைப் பேணல் முதலிய கருக்களைத் தாங்கிய மேடை நாடங்களை எழுதியவர்.

எஸ்.எஸ். சர்மா நகைச்சுவை நாடகங்களைப் படைப்பதில் வல்லவர். நாடக இயக்குனராகவும், நாடகம் படைப்பவராகவும் சுமார் 45 ஆண்டுகளாக இருந்து வருகிறார். 25க்கும் மேற்பட்ட மேடை நாடகங்களுக்குக் கதை வசனம் எழுதியுள்ளார். இந்திய கலைஞர் சங்கத்தைத் தோற்றுவித்தவர். அமளி துமளி (1981), மாப்பிள்ளை வந்தாரு (1983), எல்லாம் நன்மைக்கே (1986), முதலிய நாடகங்களை எழுதியவர். நாடக வளர்ச்சி பற்றிய கட்டுரைகளும் எழுதியுள்ளார்.

பெ. கோவிந்தராசு கல்லுக்குள் ஈரம் (1981) என்னும் நாடகத்தை எழுதியவர். எஸ்.வி. நாதன், தாலி எங்கே? (1986),

என்னும் நாடகத்தை அரங்கேற்றியவர். பலமேடை நாடகங்களை எழுதி இயக்கியவர். பொன் சுந்தரராசு உதயத்தை நோக்கி (1990), என்னும் நாடக நூலை வெளியிட்டவர். இதில் ஏழு நாடகங்கள் உள்ளன. தொலைக்காட்சி, வானொலி முதலியவற்றுக்குப் பல நாடகங்கள் எழுதி வருகிறார். சிங்கப்பூரின் பிரச்சினைகளைத் தொட்டு எழுதக்கூடியவர். புதுமைப்பித்தன் 'கூத்தரங்கப்பூக்கள்' என்னும் நாடக நூலை வெளியிட்டவர்.

இராமாயணக்கதையை நாடக வடிவில் தந்தவர் நா. ஆண்டியப்பன். வெற்றித்திருமகன் (1993) என்னும் பெயரில் அதனை வெளியிட்டுள்ளார். தற்போது சிங்கப்பூர்த் தமிழ் எழுத்தாளர் கழகத்தின் செயலாளராக உள்ளார்.

மனோன்மணீயக் கதையை நாடக வடிவில் படைத்து மனோன்மணீயம் (1990) என்னும் நாடகத்தைத் தந்தவர் எம்.கே. நாராயணன். இவர் மகாபாரதத்தை வானொலிக்கு ஏற்றவாறு எழுதி இயக்கித் தயாரித்து அளித்தவர். மர்ம மேடை என்னும் நிகழ்ச்சியின் வழி பல திகில் நிறைந்த வானொலி நாடகங்களைப் படைத்தவர். இவறுகிறாள் (2000) என்னும் நாடக நூலை வெளியிட்டவர்.

பல இலக்கியப் பகுதிகளை வானொலியில் ஒலி ஏற்றுவதற்குத் தக்கவாறு இலக்கியக் காட்சிகளாக்கி 'இலக்கியக் காட்சிகள்' என்னும் பெயரில் நூல் வடிவமாக வெளியிட்டுள்ளார் பி. கிருஷ்ணன். இவர் வானொலியின் வழி பல நாடகங்களைத் தயாரித்து அளித்தவர். மாறி வரும் சிங்கப்பூரின் சூழலைக் கருத்தில் கொண்டு இவர் தயாரித்து அளித்த மாடி வீட்டு மங்களம், அடுக்கு வீட்டு அண்ணாசாமி முதலிய நாடகங்கள் இன்றும் சிங்கப்பூர் மலேசிய மக்களின் மனத்தைவிட்டு அகலாதவை.

கவிஞரும், நாடக ஆசிரியரும், நடிகருமாகிய ந. பழநிவேலு வானொலிக்காகத் தயாரித்த நாடகங்கள் அண்மையில் அவர் மகன் பாலகிருஷ்ணனால் வெளியீடு கண்டது. 'கவிஞர் ந. பழநிவேலு படைப்புக் களஞ்சியம்' (1999) என்னும் நூலின் பதிப்பாசிரியரும் இவரே.

க. இராகினி தேவி, அன்பரசன், க. சத்தியநாதன், சே.வெ. சண்முகம் ஆகியோரின் கைவண்ணத்தால் தோன்றிய நூல் இளையரின் வெற்றி (1986). இதில் சே.வெ. சண்முகத்தைத் தவிர ஏனையோர் இளைய தலைமுறை எழுத்தாளர்கள் ஆவர்.

பிறமொழி நாடகங்களைக் குறிப்பாக ஆங்கிலத்திலிருந்து தமிழில் மொழிபெயர்த்துத் தந்தவர்கள் பி. கிருஷ்ணனும் சே.வெ. சண்முகமும் ஆவர். இலக்கியங்களை நாடக வடிவில் வானொலி வழி ஒலிபரப்பியவர்களில் அ. முருகையன், சே.வெ. சண்முகம், செ.பா. பன்னீர்செல்வம் குறிப்பிடத் தக்கவர்கள் ஆவர்.

**மேடை நாடகங்கள்**

சிங்கப்பூரின் தொடக்கக் காலத்திலிருந்து மேடை நாடகங்கள் நடத்தப்பட்டு வந்துள்ளன. பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்து ஸ்ரீ மாரியம்மன் கோவிலிலும் ஏனைய வழிபாட்டு இடங்களிலும் திருவிழாக்களின் போது மேடை நாடகங்கள் உள்ளூர்க் கலைஞர்களால் நடத்தப்பட்டு வந்துள்ளன. 1923, 1924ஆம் ஆண்டுகளிலிருந்து தமிழகத்திலிருந்து வந்த மேடை நாடகக் குழுக்களால் மேடை நாடகங்கள் நடத்தப்பட்டு வந்துள்ளன. 1925ஆம் ஆண்டு தமிழகத்திலிருந்து வந்த காதர் பாட்சா மொய்தூன் சாஹிப் கம்பெனியின் நாடகங்களுக்கு நல்ல வரவேற்பு இருந்திருக்கிறது. தமிழகத்தி லிருந்து வந்து இங்கேயே தங்கிச் சிங்கப்பூர்த் தமிழ் மேடை நாடகத்திற்குப் பெரும் தொண்டாற்றியவர் மதனவேல் பிள்ளை ஆவார். இவர் தேவிகான சபா மூலம் பல மேடை நாடகங்களை அரங்கேற்றியிருக்கிறார். அதனைத் தொடர்ந்து பல நாடகக் கம்பெனிகள் தமிழகத்திலிருந்து சிங்கப்பூர் வந்து நாடகங்களை மேடை ஏற்றின. 1966முதல் 1970வரை சிங்கப்பூர் நாடகத்துறை தொய்வு கண்டிருந்த காலத்தில் இசை, நடன, நாடகக் கலைகளை வளர்த்து வந்த ஏறத்தாழ 200 கலைஞர்களை ஒருங்கிணைத்துச் சிங்கப்பூர் இந்தியக் கலைஞர் சங்கம் 1970ல் தோற்றுவிக்கப் பட்டது. தற்போது சிங்கப்பூரில் 44க்கும் மேற்பட்ட நாடகக் குழுக்கள் உள்ளன. சிங்கப்பூர் அரசாங்கம் நாடகக் கலை வளர்ச்சிக்கு ஊக்கமளிக்கும் வகையில் நாடக விழா, கலைவிழா, இளையர் நாடக விழா முதலியவற்றை நடத்துவதோடு பொருளாதார உதவியும் செய்து வருகிறது.

தொடக்கக் காலத்தில் நாடகங்கள் புராணக் கதைகளை அடியொற்றி இருந்தன. பின்னர் சமுதாயத்தைப் பிரதிபலிக்கும் வகையிலும் திராவிட இயக்கக் கொள்கைகளைப் பரப்பும் வகையிலும் நாடகங்கள் அமைந்தன. 1936இல் ந. பழநிவேலுவின் சுகுணசுந்தரம் அல்லது சாதி பேதக் கொடுமை என்னும் நாடகம் சீர்திருத்தக் கருத்துக்களைத் தாங்கி மேடையேறியது. இவர் பல

நாடகங்களையும் பாடல்களையும் எழுதியதோடு தாமே அதில் நடித்தும் இருக்கிறார். அப்போது பெரும்பான்மையான நாடகங்கள் அலெக்சாண்ட்ரா மேடையில் அரங்கேறின. ச. வரதன் பகுத்தறிவு நாடகமன்றத்தை அமைத்து அதன் வழி பல சமூக நாடகங்களைத் தந்தவர். இவ்விருவரின் கலைச் சேவையைப் பாராட்டிச் சிங்கப்பூர் அரசு இவர்களுக்குக் கலாசார விருது அளித்தது. நாடகங்களையும் எழுதி இயக்கி மேடைப் பொறுப்பு ஏற்றுச் சிங்கப்பூர் நாடக வளர்ச்சிக்குத் தொண்டாற்றிய மற்றொருவர் இவர் ஆவார். இவரின் நாடகங்களில் நகைச்சுவைக் கூறுகள் நிரம்ப இருக்கும்.

1980களில் சிங்கப்பூர் ஒலிபரப்புக் கழகத்தின் உதவியோடு இலக்கிய நாடகங்கள் பல பெரிய அளவில் மேடையேறின. சிங்கப்பூரின் தேசியக் கலைகள் மன்றத்தின் பொருளாதார உதவியோடு பல உள்ளூர் நாடக மன்றங்கள் பல சமூக நாடகங்களை மேடையேற்றி வருகின்றன. 1990களில் அக்கினிக் கூத்து நாடகக் குழுவினரால் பல பரீட்சார்த்த நாடகங்கள் இளைஞர்களால் மேடையேற்றப்பட்டன. இவை பெரும்பாலும் சிங்கப்பூரை மையமாக வைத்துத் தயாரிக்கப்பட்டன. இன்றைய நிலையில் ரவீந்திரன் நாடகக்குழுவினர் மேடை நாடகங்கள் பற்றிய நாடகப் பட்டறைகள் பலவற்றை நடத்தி வருகின்றனர். 1990களின் பிற்பகுதியில் க. இளங்கோவன் பல புதிய உத்திகளைப் புகுத்தியும், புதிய கருத்துகளைத் தொட்டும், திடீர் திருப்பங்களை உள்ளடக்கியும் நாடகங்களைப் படைத்து இருக்கிறார்.

தமிழர் சீர்திருத்த சங்கம், சிங்கப்பூர்த் தமிழர் சங்கம், தமிழவேள் நாடக மன்றம், இந்திய கலை மன்றம், சிங்கப்பூர் இந்தியக் கலைஞர் சங்கம் முதலியவை நாடக வளர்ச்சிக்கு உதவிய அமைப்புகளாகும்.

# நாட்டுப்புறவியல்

## தமிழகம்

இராம. குருநாதன்

பாமர மக்களால் பெரிதும் விரும்பி ஏற்கப்பட்ட இலக்கியத்தை நாட்டுப்புற இலக்கியம் எனப் பொதுவாகக் கூறலாம். சாதாரணமானதும், இயல்பான நடையினதுமாக அமைந்த வாய்மொழி வாயிலாகப் பாடப்படுவதும், செவி வழியாகக் கேட்கப்படுவதுமான இம்மரபு மக்கள் இலக்கியம் என்று போற்றப்படும் சிறப்புக்குரியது. ஏட்டிலே எழுதப்பெறாமல் செவிவழியாக, ஒருவரிடமிருந்து மற்றவருக்குச் சென்றடையும் காரணத்தால் இதன் செல்வாக்கு, கிராமப்புற மக்களிடையே வரவேற்பைப் பெற்றதாகும். பழமரபையும் தொன்மையையும் அளவிட்டுக் கூற இயலாத பெருமையுடையது இது.

தமிழில் இதன் இயல்புகளையும் வகைகளையும் தொல்காப்பியம் முதன்முதலாகக் குறிப்பிட்டுள்ளது. மக்களின் பேச்சு வழக்கினை ஒட்டியே அமைந்த நாட்டுப்புற இலக்கியக் கூறுகளைப் பல வகைகளில் அந்நூல் சுட்டியுள்ளது. வாய்மொழி, பண்ணத்தி, சேரிமொழி, பிசி, முதுசொல், அங்கதம் முதலிய வழக்குகள் மக்கள் பேசும் சூழலுக்கும் பண்பாட்டிற்கும் ஏற்ற வகைகளில் அமைந்த இயல்பையும் சமூக இருப்பையும் கொண்டு தொல்காப்பியம் இலக்கணப்படுத்தியது.

சமூகத்தின் உள்ளார்ந்த உணர்ச்சிகளுக்கும் கிளர்ச்சிகளுக்கும் உரிய பாமரர் நெஞ்சில் நீங்காத இடம் பெற்ற இவ்வகை இலக்கியம் கிராமப்புறங்களில் இன்னும் தன் செல்வாக்கை இழக்கவில்லை. ஏட்டில் எழுதப்படுவதற்கு முன் வாய்மொழியாக வழங்கப்பட்ட பாடல்களிலிருந்தே வடிவத்தையும் வகைகளையும் இலக்கியம் பெற்றுக் கொண்டது. நாட்டுப்புறக் கதைகளி லிருந்தே காப்பியம் உருவாகத் தொடங்கியது. சமூகத்தையும் பண்பாட்டையும் இணைத்துக் கொண்டு காப்பிய உருவாக்கம் பெற்றதற்குக் கதைப்பாடலும், நாட்டுப்புறக்கலைகளும் காரணமாக இருந்திருப்பதைத் தமிழில் எழுந்த முதற்காப்பியமான

சிலம்பிலிருந்து அறியமுடியும். சிலம்பில் நாட்டுப்புற இயல் கூறுகளின் சாயலைக் காணலாம்.

சித்தர் பாடல்களில் அமைந்துள்ள பூடகமான செய்திகளுக்கு அப்பால், பாமரர்கள் ஏற்கும் வண்ணம் வடிவமும் ஓசையும் கொண்ட யாப்பமைப்பை நாட்டுப்புறப் பாடல்களோடு இணைத்துக் காணலாம். எளிமையான பாடல்களின் மெட்டுகளைச் சித்தர்கள் பின்பற்றினர். பொருள் ஆழமாக உணரப்படா நிலையிலும், சிவவாக்கியர், குதம்பைச் சித்தர், பாம்பாட்டிச் சித்தர் முதலியோரின் பாடல்களில் நாட்டுப்புறச் செல்வாக்கு காணப்படுகிறது. நாட்டுப்புறக் கலைகளுள் ஒன்றான சித்த மருத்துவக் கலையையும் இத்துறையோடு இணைத்துக் கூற வாய்ப்பு உள்ளது.

சிற்றிலக்கிய வகை வளர்ச்சிக்கு நாட்டுப்புறப் பாடல்கள் துணையாக இருந்துள்ளமையை எண்ணிப்பார்க்க முடியும். சில வகையான சிற்றிலக்கியங்கள், அடித்தள மக்களின் உள்ளார்ந்த உணர்வுகளை வெளிப்படுத்துவனவாய் உள்ளன. பள்ளு, அம்மானை, தாலாட்டு, ஏசல், ஏற்றம், ஒப்பாரி, ஊசல், கும்மி, நொண்டி நாடகம் முதலிய சிற்றிலக்கிய வகைகளோடு தொடர்புடையது, நாட்டுப்புற இயல்.

நாட்டுப்புற இயலின் செல்வாக்கு ஏட்டிலக்கியத்தில் ஏற்றம் பெற்றிருப்பதினை அதன் படிநிலை வளர்ச்சியிலிருந்து அறிந்தாலும், இலக்கியத்திற்குரிய மூலவேராக அதனை அணுக முடிகிறது. நாட்டுப்புறக் கலைகள், பிற பொழுதுபோக்குக் கூறுகள், சமுதாயத்திற்குரிய சில மரபுச் சடங்குகள், வழிபாடுகள் முதலிய இன்னோரன்ன இயல்புகளை உள்ளடக்கிக் கொண்டு பரவலான முறையில் நாட்டுப்புற இயல் ஒரு தனித்துறையாக இன்று வளர்ந்தோங்கியுள்ளது. நாகரிகம், பண்பாடு, வரலாறு முதலிய பல துறைகளிலும் இன்று அதன் பயன்பாடும், பங்களிப்பும் உணரப்படுகின்றன.

தமிழில் நாட்டுப்புறப் பாடல்களைத் தொகுக்கத் தொடங்கிய காலமே, அவை பற்றிய சிந்தனையின் தொடக்க காலமாகும். தொகுப்புப் பணியைத் தொடங்கிவைத்துப் பெரிய முயற்சியில் ஈடுபாடு செலுத்தியோர் பிற நாட்டினரே. தமிழகத்தில் நாட்டுப்புறஇயல் தொகுப்பிற்கு வித்திட்டோர் அவர்களே. இதில் அயல்நாட்டினரின் பங்களிப்பு முதல் தொடக்கமாகும். அவர்கள் பல்வேறு காலகட்டங்களில் வழங்கப்பட்டுவந்த நாட்டுப்புறப் பாடல்களையும், பழமொழிகளையும், கதைகளையும்

தொகுத்தளித்தனர். ஆங்கிலேயர் ஆட்சிக்கு முன்பு சீகன் பால்கு என்னும் ஜெர்மானியர் 1713இல் வெளியிட்ட 'மலபார் மக்கள் கடவுளரின் குடிவழிப்பட்டியல்', என்ற நூல் அவ்வகையில் முதல் முயற்சி யாகும். பீட்டர் பெர்சிவல் 'பழமொழி அகராதி'யை (1820) ஆங்கில மொழிபெயர்ப்போடு வெளியிட்டார். சாணார் வகுப்பைச் சார்ந்தோரால் வழங்கப்பட்ட நம்பிக்கைகள், சமயச் செய்திகள் முதலியன அவ்வகராதியில் இடம்பெற்றன. 1871இல் தோவர், 'தென்னிந்திய நாட்டுப்புறப் பாடல்கள்' என்னும் ஆங்கிலத் தொகுப்பு நூலை வெளியிட்டார். டேனிஷ்காரர்களான ஜான் லாசரஸ் (1894), ஹெர்மன் ஜென்சன் (1897) ஆகியோர் பழமொழியைத் தொகுத்தளித்தனர். ஜென்சனின் 'தமிழ்ப் பழமொழியின் வரையறுக்கப்பட்ட தொகுப்பு' என்ற ஆங்கில நூல் உள்ளடக்க அடிப்படையில் அமைந்தது; ஆங்கிலத்தில் தலைப்பையும் கொண்டுள்ளது.

நாட்டுப்புறவியலின் காலகட்டத்தை இந்திய நாட்டுப்புற வியல் குறித்த ஆய்வடங்கலில் அதன் தொகுப்பாளர் ஜவகர்லால் ஹண்டு மூன்று வகையாக வகைப்படுத்துகிறார். பாதிரிமார்களை உள்ளிட்ட மிஷினரி காலகட்டம், தேசிய காலகட்டம், கல்விப்புல காலகட்டம் என்பனவாக அவர் சுட்டுகிறார்.

19ஆம் நூற்றாண்டில் நாட்டுப்புற வழக்காறுகளை வேறு சில வெளிநாட்டவர் தொகுத்தளிக்கும் முயற்சியில் ஈடுபட்டனர். ஓயிட்ஹெட், மாத்வீன், எட்கர் தர்ஸ்டன் முதலியோர் இது தொடர்பாகக் குறிக்கத்தகுந்தவர்கள் ஆவர். ஏறக்குறைய இதே காலகட்டத்தில் பண்டித நடேச சாஸ்திரியார் நாட்டுப்புறப் பாடல்களைத் தொகுத்து வெளியிட்டார். இக்காலகட்டத்தே அச்சிடப் பெற்ற கதைப்பாடல்கள் குறிப்பிடத் தகுந்தன.

விடுதலை காலகட்டத்தில் நாட்டு மக்களைப் பாமரர் பாடல் வடிவில் எளிமையான மெட்டுகளால் ஈர்த்த பாரதியிடம் அதன் தாக்கம் படிந்திருந்தது.

'காற்றிலே மிதந்த கவிதை' என்னும் தலைப்பில் நாட்டுப்புறப் பாடல்கள் பற்றிய தொகுப்பு முயற்சியை 1943இல் மு. அருணாசலம் நூல்வடிவாக முதன்முதலாக வெளிக்கொணர்ந்தார். இவருக்குப் பின் கி.வா.ஜ. 'நாடோடி இலக்கியம்' (1944) என்ற நூலை விளக்கங்கள் தந்து வெளியிட்டார். பெர்சி மாக்வீன் தொகுத்த நாட்டுப்புறப் பாடல்களை மலையருவி (1958) என்ற தலைப்பில் கி.வா.ஜ. சில காட்சி விளக்கங்களோடு வெளியிடலானார்.

தமிழண்ணல், கி.வா.ஜ., சோமலெ, நா. வானமாமலை, ஆறு. அழகப்பன், மு.வை. அரவிந்தன், செ. அன்னகாமு, பெ. தூரன், பெ.நா. அப்புசாமி, மெ. சுந்தரம் முதலியோர் நாட்டுப்புறப்பாடல் தொகுப்புப் பணி முயற்சியில் ஈடுபட்டு நூல்களாகவும் கட்டுரை களாகவும் வடித்துத் தந்த முன்னோடிகளாவர். இத்தகைய முயற்சிகள் ஆய்வியல் அடிப்படையில் தொகுக்கப்படா விட்டாலும், ஆய்வுக்கான தோற்றுவாய்க்குக் கால்கோள் அமைத்துத் தருதற்குக் காரணமாகக் கொள்ளத் தக்கன. தமிழ் மாநிலத்தில் வழங்கிவரும் நாட்டுப்புற வழக்காறுகள் முழுமையும் தொகுக்கப்பட வேண்டும் என்ற உணர்வை மேற்கூறியோரின் முயற்சிகள் காட்டுகின்றன. அம்முயற்சிகள் தீவிரமாக்கப்பட வேண்டும்.

கல்விசார் நிறுவனங்களில் நாட்டுப்புற இயல் ஆய்வுகள் எழுபதுகளில் உருவாயின. நாட்டுப்புற இயல் பாடத்திட்டத்தில் சேர்க்கப்பட்ட பிறகே அது பற்றிய ஆய்வுப் போக்குகளும், தொகுப்புப் பணிகளும் விரிவடையத் தொடங்கின. 1973இல் சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில்தான் முதன்முதலில் விருப்பப்பாடமாகப் பேராசிரியர் அ.மு. பரமசிவானந்தம் அவர்களால் அறிமுகப்படுத்தப்பட்டது. அது தொடர்ந்து தமிழகத்தின் எல்லாப் பல்கலைக் கழகங்களிலும், சில கல்விசார் நிறுவனங்களிலும் நாட்டுப்புற இயல் செல்வாக்குப் பெறத் தொடங்கியது. கே.பி.எஸ். அமீது, என். சியாமளா, பரா. சுப்பிரமணியம், ஆறு. அழகப்பன், சரசுவதி வேணுகோபால், சு. சண்முகசுந்தரம், ஆறு. இராமநாதன், குருவிக்கரம்பை சண்முகம், மு. இராமசாமி, தனஞ்செயன், அறிவுநம்பி, ஆ. சிவசுப்பிரமணியம் முதலியோர் நாட்டுப்புறவியல் குறித்த சிறந்த ஆய்வாளர் ஆவர்.

எழுபதுகளுக்குப் பிறகு நாட்டுப்புற இயல் ஆய்வுகள் கல்விசார் நிறுவனங்களால் வளர்ச்சி அடைந்ததெனலாம். பரந்த தளத்தில் நாட்டுப்புற ஆய்வுகள் செய்தற்குக் கல்விசார் நிறுவனங்களே காரணமாயின. 'நாட்டுப்புற இலக்கியப் பார்வைகள்' என்னும் நூலை வி.பி. ஞானபிரகாசம், க.ப. அறவாணன் ஆகிய இருவரும் இணைந்து வெளியிட்டனர். பல்வேறு தலைப்புகளில் அமைந்த கட்டுரைகள் அந்நூலில் இடம்பெற்றுள்ளன.

கல்விசார் நிறுவனம் சாராது தம் ஆர்வ வெளிப்பாட்டால் நாட்டுப்புற இயலில் ஆர்வமும் ஈடுபாடும் கொண்ட சிலர் சுட்டிக் காட்டத்தக்கவர்களாவர். நா. வானமாமலை இப்பணியில்

மிகுதியும் சிரத்தை எடுத்துக்கொண்டு உழைத்தார். பொதுவுடைமைக் கண்ணோட்டத்தில் இடதுசாரிப் பார்வையோடு அமைந்த அவரது கருத்து விளக்கங்கள் ஆய்வாளர் பலருக்குப் பயன்பட்டன. முகவை ராஜமாணிக்கம், ரா. அய்யாசாமி முதலியோரும் இப்பணியில் தொடர்ந்து ஈடுபட்டு வந்தனர்.

கலை, சடங்கு, பொழுதுபோக்கு முதலிய பண்பாட்டுத் தளங்களில் நாட்டுப்புற இயல் ஆய்வு விரிந்தது. தொன்மையான புராணங்களை நாட்டுப்புற இயலோடு தொடர்புபடுத்திக் காட்டும் போக்கினை கே.பி.எஸ். அமீது மேற்கொண்டார். பா.ரா. சுப்பிரமணியம் மொழியியல் பார்வையில், கோவை மாவட்டத்தில் வழங்கப்பெற்றுவரும் தாலாட்டு, ஒப்பாரிகளை மையமாக வைத்து ஆய்வு செய்தவர். மாவட்டங்களில் வழங்கப்பெறும் நாட்டார் வழக்காற்றியலைத் தனித்தனியாகச் செய்வதற்கு உளப்படுத்திய தன்மை எண்பதுகளில் வளரத் தொடங்கியது. அந்தந்த மாவட்டங்களை/வட்டங்களைச் சார்ந்தோர் இதில் முனைப்பும் முயற்சியும் காட்டித் தொகுப்புப் பணியையும், ஆய்வுப் பணியையும் தொடர்ந்தனர். திருநெல்வேலி, தென்னார்க்காடு, குமரி மாவட்டம், கோவை முதலிய மாவட்டங்களில் களப்பணி நடத்தி ஆய்வு செய்தனர். இந்த மரபு பின்னர் பல்கியது. அந்தந்த இனங்களுக்குரிய சடங்குகள், குலமரபுகள் முதலியன பற்றியும் ஆய்வுகள் திளைக்கத் தொடங்கின. வேளாளர், செங்குந்தர், யாதவர், மீனவர், பறையர், நாயக்கர், மள்ளர் முதலிய சாதிகளில் வழங்கப்பெறும் குல இன மரபுகளின் வழக்காறுகளை வெளிப்படுத்தி ஆய்வுகள் வளர்ந்தன.

நாட்டுப்புற இயலைப் பிறதுறைகளோடு ஒப்பிடும் ஆய்வுகள் தொண்ணூறுகளில் வளரத் தொடங்கின. சமூகவியல், மானிடவியல், உளவியல், சூழ்நிலையியல், மொழியியல் முதலிய துறைகளோடு இணைத்துக் காணுவதன் வழியே பன்முகப் பார்வை துலங்கியது. நாட்டுப்புற இயலோடு ஏனைய துறைகளைச் சார்த்திக் காண்பது இன்றியமையாதது என உணர்ந்தனர். மேனாடுகளில் நாட்டுப்புற இயலை இவ்வகையில் ஃபிரேசர், டார்சன், ப்ராப், கோம்பே, ஆலன் டிண்டிஸ், டார்சன் முதலியோர் ஆய்ந்து நூலாக வெளியிட்டனர். இதனால் பிறதுறை சார்ந்த கோட்பாடுகளும் அணுகுமுறைகளும் வளர்ந்தன.

தமிழக நாட்டுப்புற இயலை ஏனைய துறைகளோடு தொடர்புபடுத்தியும், மேனாட்டுக் கோட்பாடுகளை உளப் படுத்தியும் கட்டுரைகளும் ஆய்வு நூல்களும் வெளிவரலாயின.

தமிழவன், தெ.லூர்து, சு. சண்முக சுந்தரம், ஆ. சிவசுப்பிரமணியம், ஆறு. இராமநாதன், தனஞ்செயன், அ. மார்க்ஸ் முதலியோர் இவ் வகையில் சுட்டத்தக்கவர்கள். தொடக்க காலங்களில் வெறும் விளக்கவியல், வரலாற்றுக் கண்ணோட்டம் ஆகியவற்றில் மட்டுமே கவனம் செலுத்தி ஆய்வுகளும், நூல்களும் வெளிப் பட்டது போய், அணுகுமுறை ஆய்வுகளிலும், பிறதுறைகளோடு தொடர்புபடுத்தி ஆய்வு நிகழ்த்துவதிலும் ஈடுபாடு வளர்ந்து வருவது நாட்டுப்புற இயல் ஆய்வு வளர்ச்சியை விரிவடையச் செய்துள்ளது.

அமைப்பியல் வழி ஆய்வு மேற்கொண்டோரில் கே.பி.எஸ் ஹமீது முன்னோடியாவார். தமிழக நாட்டார் வழக்காற்றியல் ஆய்வில் அமைப்புமுறை ஆய்வே முதன்முதலில் உளப்படுத்தப் பெற்றது. அவர் தாலாட்டு, ஒப்பாரிப் பாடல்களை அமைப்பியல் வழி ஆய்ந்துள்ளார். தமிழ்ப் பழமொழிகளை அமைப்பியல் வழி ஆய்ந்த தெ. லூர்து, ஆலன் டண்டிஸ் வகைப்படுத்திய போக்கில் பொருத்திக் காட்டியுள்ளார். லெவி ஸ்ட்ராஸின் அமைப்பியல் கோட்பாடுகளையும் கதைப்பாடல்களோடு தொடர்புபடுத்திக் காண்கிறார். இவ்வகையில் இவர் எழுதிய 'நாட்டார் வழக்காற்றியல்: சில அடிப்படைகள்' என்னும் நூல் மிகவும் குறிப்பிடத்தக்கது. உளவியலோடு தொடர்புபடுத்தி ஆய்வாளர்கள் சிலர் கட்டுரைகள், நூல்கள் எழுதியுள்ளனர். தென்னாற்காடு மாவட்ட மஞ்சக்கொல்லை என்ற ஊரில் தொகுத்த நாட்டார் கதை ஒன்றினைச் சமூக உளவியலோடு ஆறு. இராமநாதன் அணுகியுள்ளார். சமூக உளவியல் ஆய்வோடு தொடர்புபடுத்தி நிர்மலாபாய், எஸ்.ஆர். சாந்தகுமார், அரங்க. நலங்கிள்ளி, சா. வளவன் முதலியோர் கட்டுரைகள் படைத்துள்ளனர். மானிடவியல், சமூகவியல் ஆகியவற்றோடு மிகவும் நெருங்கிய தொடர்புடைய நாட்டுப்புற இயலை அத்துறைகளோடு இணைத்து நா. வானமாமலை, பி.எல்.சாமி, கிருட்டிணசாமி, ஆ. சிவசுப்பிரமணியன் முதலியோர் பல கட்டுரைகளை எழுதியுள்ளனர்.

வரலாற்றுணர்வோடு கூடிய நாட்டுப்புறப் பாடல்கள், கதைகள், கதைப்பாடல்கள் ஆகியவை மிகையும் உண்மையும் கலந்திருப்பன. அவற்றில் வரலாற்றுத் தகவல்களோடு கூடிய உண்மைகள் புறக்கணிக்கத்தக்கன அல்ல. இவ்வகையில் தொன்மக் கதைகளின் செல்வாக்கை மறுத்தற்கில்லை. அவற்றில் கொள்ளுவன கொண்டு காணும்போது மக்களிடையே அவை

மிகுந்த தாக்கம் பெற்றுள்ளதை அறிய முடியும். மக்கள் வாழ்க்கையில் ஏதேனும் ஒரு வகையில் தொன்மக் கதை பங்காற்றியிருப்பதை உணரலாம். தொன்மக் கதைகளுக்கும் மக்களின் வழக்காறு களுக்கும் உள்ள தொடர்பைப் பற்றிய கருத்துகள் கட்டுரை களாகவும் நூல்களாகவும் வெளிவந்துள்ளன. தொ. பரமசிவம், தெய்வநாயகி, இ. முத்தையா, தெ. லூர்து, சி. பொன்னுத்தாயி, தே. ஞானசேகரன் முதலியோரின் கட்டுரைகளும் ஆய்வு நூல்களும் இது தொடர்பான சிந்தனைகளை மேற்கொண்டவை ஆகும்.

சமூகவியல் அணுகுமுறையோடு கூடிய நாட்டுப்புறவியல் ஆய்வுகள், நாட்டுப்பாடல்கள், கதைகள், கதைப்பாடல்கள், கலைகள் முதலியவற்றை உட்படுத்திச் செய்யப்பட்டுள்ளன. மார்க்சிய அணுகுமுறைகளை மேற்கொண்ட நா. வானமாமலை சமூகவியல் கண்ணோட்டத்தோடு கூடிய நாட்டுப்புற இயல் ஆய்வுக் கட்டுரைகளுக்கு முன்னோடியாவார். நாட்டார் வழக்காற்றியலில் ஆய்வுப் போக்கான பல செய்திகளுக்கு அழுத்தமான அடித்தளம் அமைத்தவர்களில் இவரே முன்னோடி. நாட்டுப்புற இயல் வளர்ச்சியும் வகைகளும் பல்கிய நிலையில் அதன் வகைகள் பற்றிய கண்ணோட்டம் விரிவாகப் பலரால் எடுத்துக்காட்டப்பெற்றுள்ளன. நாட்டுப்புற இயல் வகைகளை ஆய்வாளர் சிலர், தத்தம் போக்கில் வகைப்படுத்தியுள்ளனர். இத்துறைக்கு வகைப்படுத்துதல் என்பது மிகத் தேவையானதாக உணரப்பட்டதால் வகை தொடர்பான பார்வையும் விரிந்தது. தொடக்ககாலத்தில் நாட்டுப்புறப் பாடல்களைத் தொகுத்தோர் வகைப்படுத்த முயன்றனர். மு. அருணாசலம், கி.வா.ஜ., செ. அன்னகாமு, ஆறு. அழகப்பன், மா. வரதராஜன், நா. வானமாமலை, ஆறு. இராமநாதன், சு. சண்முகசுந்தரம் முதலியோர் வகைப்படுத்தியுள்ளனர். குழந்தைப்பாடல்கள், விளையாட்டுப் பாடல்கள், தொழிற்பாடல்கள், வழிபாட்டுப் பாடல்கள், கொண்டாட்டப் பாடல்கள், ஒப்பாரிப் பாடல்கள் எனப் பொதுவாகப் பாடல்கள் பகுக்கப்பட்டுள்ளன. இவற்றின்கீழ் உள்ள பிரிவுகள் பல கிளைகளாகப் பிரிக்கப்படுகின்றன.

பாடல்களை வகைப்படுத்தியது போன்றே பழமொழிகள், கதைகள், கதைப்பாடல்கள், புதிர்கள், கலைகள் முதலியவற்றையும் பாகுபாடு செய்துள்ளனர். கதைகளை மனிதக் கதைகள், விலங்குக் கதைகள், மந்திரக் கதைகள் எனவும் கதைப்பாடல்களைப் புனைகதைப் பாடல்கள், சமூகக் கதைப்பாடல்கள், வரலாற்றுக் கதைப்பாடல்கள், புராண புனைகதைப் பாடல்கள் எனவும்

தே. லூர்து பகுத்துக் காண்கிறார். கதைகளையும் கதைப்பாடல் களையும் பொருண்மை அடிப்படையில் வகைப்படுத்தியிருப்பதோடு, அவற்றைத் தொகுத்தும், வகுத்தும், பதிப்பித்தும் ஆய்வுகள் செய்யப்பட்டன; செய்யப்பட்டும் வருகின்றன. சுவடிகளிலிருந்தும், செவிவழியாகக் கேட்டுப் பதிவு செய்தும் கதைப்பாடல்கள் பதிப்பிக்கப்பட்டு வந்துள்ளன.

நாட்டுப்புற இயலுக்கு மேனாட்டாரின் பங்களிப்பு ஆங்கிலேயர் ஆட்சி காலத்தில் தொடங்கியதோடு முடிவடைந்து விடாமல் பிற்காலத்தும் தொடர்ந்துள்ளது. பிரஸ்கா, ஹார்ட், பிரண்டா பெக், பிளாக்பேர்ன், ஜான்பேட்டன், பெஸ்விக், மேயர், பேக்கர், ஸ்பிரின் முதலியோர் கதைப்பாடல் தொடர்பாகக் கட்டுரைகளை வழங்கியுள்ளனர். டேவிட் சுல்மான் (இரு சகோதரர்களின் கதை), ஸ்மூவர்ட் பிளார்பன் (தெருக்கூத்து), மார்து ஆஸ்டன் (யக்ஷகானம்), ஹெலெஸ்டின் (பொம்மலாட்டம்) முதலியோர் கதைப்பாடல்களையும், கலைகளையும் பற்றிய ஆய்வில் முனைந்து ஆழமான பணிகளை மேற்கொண்ட வெளிநாட்டவராவர்.

கதைப்பாடல்கள் அவ்வக் காலகட்டத்தின் சமுதாய மற்றும் அரசியல் சூழ்நிலைகளை எதிரொலிப்பனவாக விளங்கிவந்துள்ளன. மக்களை உணர்ச்சி கொள்ள வைக்கும் அளவிற்குக் கதைப்பாடல் காட்சிகள் இருந்துள்ளன. நாட்டுப்புறக் கதைப்பாடல்களுக்குச் சமூக மக்களிடையே மதிப்பு இருந்தமைக்கு, மேலாதிக்கத்தை எதிர்க்கும் குரலாக அவை இயங்கியமை காரணமெனலாம். மற்றும் ஒரு நிகழ்ச்சியை அடிப்படையாகக் கொண்டு பின்னப் பட்டதாலும், கூத்துக்களாக அவை நிகழ்த்தப்பட்டதாலும் மிகுந்த வரவேற்பைப் பெற்றன. இலக்கியக் கதைப்பாடல்களைக் காட்டிலும் நாட்டுப்புறக் கதைப்பாடல்களில் சமூதாயத்திற்கான செய்திகள் பரவலாகக் காணப்படுகின்றன.

கதைப்பாடல்களைப் போன்றே நாட்டுப்புறக் கதைகளையும் அதன் செல்வாக்கிற்கு உட்படுத்தலாம். நாட்டுப்புறக் கதைகள் எண்ணிலடங்காதவை; பல்திறப்பட்டவை; அவை இன்னும் முற்றாகத் தொகுக்கப் பெறவில்லை; கற்பனையின் வீச்சு நாட்டுப்புறக் கதைகளில் அளவிட முடியாதது; எல்லை கடந்தது. ஆர்வத்தைத் தூண்டும் வகையில் இருப்பதாலும், வியப்புச் சுவையை அளிப்பதாலும் கதைகள், மிகுந்த பொழுதுபோக்குக் கூறுகளைக் கொண்டன. கதைகளை விரும்பிக் கேட்கும் ஆர்வம் தணியாததாக இருந்துவருகிறது.

நாட்டுப்புறக் கதைகள் மிகத் தொன்மையானவை; புராண இதிகாசக் கதைகளோடு மிக நெருங்கிய தொடர்புடையவை; செவிவழிக் கேட்கப்படும் கதைகளுக்கு நீண்ட நெடும் மரபு உண்டு. மக்களிடையே செல்வாக்கு இழக்காமல் இன்றளவும் மதிப்புப் பெற்றனவாய் உள்ளன. தமிழகத்தில் தெனாலிராமன் கதை, பட்டி விக்கிரமாதித்தன் கதை, மதன காமராசன் கதை, பாட்டி சொன்ன கதை முதலியவை மக்களிடையே இன்றும் வழங்கி வருவதே இதற்குச் சான்று. பண்டித நடேச சாஸ்திரியார் நாட்டுப்புறக் கதைகள் சிலவற்றை முதன்முதலாக அச்சேற்றினார். விநோதரச மஞ்சரி, நாடோடிக் கதைகள், தென்னாட்டுப் பழங்கதைகள், இன்சுவைக் கதைகள் முதலிய தலைப்புகளில் நாட்டுப்புறக்கதைக்ள் நூலாக வெளிவந்தன. கி. ராஜ நாராயணனின் தமிழ் நாட்டுக் கிராமியக் கதைகள் (1977) என்ற நூல் இவ்வகையில் குறிப்பிடத்தக்க நூலாகும். வீரவேலுசாமி 'தமிழ்நாட்டுச் சிறுவர் நாடோடிக் கதைகள்' என்ற பெயரில் கதைகளைத் தொகுத்து வெளியிட்டார். தமிழ்நாட்டு நாடோடிக் கதைகள் என்னும் இ.லெ. நடராசனின் தொகுப்பு நூலும் குறிப்பிடத்தக்கது.

கதைகள் எழுந்த சூழல் பெரும்பாலும் பண்டைய குழுமக்களிடையே தோற்றங் கொண்டதாகக் கொள்ளலாம். இயற்கையைக் கண்டஞ்சிய தொடக்கக்கால மனிதன் இரவு நேரத்தைக் கழிக்க, கதை கூறிய காலமே கதைகளின் தோற்ற காலமாகும். மக்களின் கேட்கும் ஆர்வம், மனவளர்ச்சி, விருப்பு வெறுப்பு முதலிய சூழல்களில் கதை கூறுவது வழக்கமாக இருந்து பிறகு வளர்ச்சி பெற்றது.

வாய்மொழிக் கதைகளில் கதைகளை வகுத்தும், தொகுத்தும், பகுத்தும் காணப்பட வேண்டியவை ஏராளமாக உள்ளன. மனிதர் பற்றிய கதை, கடவுளர் கதை, விலங்கு, பறவை, தாவரம் பற்றிய கதைகள், பேய்க் கதைகள், தேவதைக் கதைகள், மந்திரத் தந்திரக் கதை என்றெல்லாம் பொதுவாகப் பகுக்கப்பட்ட சூழ்நிலைகளைக் காணலாம்.

மனிதர் பற்றிய கதைகளில் சமூக உணர்வுகளும், குடும்ப உறவுகளும், முரண்களும் மிகுதியும் காணப்படுகின்றன. அந்தந்த வட்டாரங்களுக்குரிய மக்களின் வாழ்க்கைப் போக்குகள் உணர்த்தப்பட்டுள்ளன. கணவன்-மனைவி, மாமனார்-மாமியார், உடன்பிறப்புகள், சக்களத்தி முதலானோர் பற்றிய உறவுகள், மற்றும் சாதியப் போக்குகள், வர்க்க மோதல்கள் முதலியனவும்

நாட்டுப்புறக் கதைகளில் இடம்பெற்றுள்ளன. அந்தந்தப் பகுதிகளில் உள்ள தொழில்முறைகளை அடிப்படையாகக் கொண்டும் கதைகள் வழங்கப்படுகின்றன. கதைகளில் வரலாற்று உணர்வை விட, புனைவியலின் பங்கு மிகுதியும் உள்ளது எண்ணத்தக்கது.

நாட்டுப்புற இயல் கூறுகளில் ஒன்றான பழமொழிகள் தொன்றுதொட்டே மக்களின் வாழ்க்கையில் இடம் பெற்றிருப்ப தாகும். நாட்டுப்புற இலக்கியத்தில் பழமொழியின் தாக்கம் உண்டு. ஒவ்வொரு துறையிலும் வழங்கப்பட்டு வரும் பழமொழிகள் மிகுதி. முதன்முதலாகப் பழமொழிகளைத் தொகுத்துத் 'திருட்டாந்த சங்கிரகம்' (1843) என்ற பெயரில் பெர்சிவல் வெளியிட்டார். அகர வரிசையில் பழமொழிகளைத் தொகுத்து அவற்றிற்கு விளக்கம் தந்துள்ளார். ஆங்கிலத்தில் தமிழ்ப் பழமொழிகளை மொழிபெயர்த்துள்ளார். ஜான் லாசரஸ், ஹெர்மன் ஜென்சன், திருமணம் செல்வகேசவராய முதலியார் வேணுகோபால நாயுடு, அனவரத வினாயகம் பிள்ளை, கே.எஸ். இலட்சுமணன் முதலியோர் பழமொழிகளைத் தொகுத்த முன்னோடிகளாவர். பழமொழிகள் பயன்படுத்தப்பெறும் சூழ்நிலைகளைக் கொண்டு அவற்றின் இயல்புகளும், போக்குகளும் அறியப்பட வேண்டும். இவ்வகையில் ஆய்வுகள் தொடரப்படுகின்றன. வ. பெருமாள், சாலை. இளந்திரையன், தெ. லூர்து முதலியோரின் பழமொழி ஆய்வுகள் சிறப்பாகக் குறிக்கத்தக்கன.

கிராம மக்களின் பேச்சுகளில் இயல்பாக வெளிப்படுவன பழமொழிகள். பழஞ்சொல், முதுசொல் என்ற பெயர்கள் வழங்கப்பட்டு வந்தமை பழமொழியின் தொன்மையைச் சுட்டும். தொன்மக்கதைகள், புராண நிகழ்ச்சிகள் முதலியன வழியாகவும் பழமொழிகள் தோன்றியுள்ளன. எனவே பழங்கதைகளுக்கும் பழமொழிகளுக்கும் இடையே தொடர்பு நிலவுவதை உணரலாம். நீதிக்கதையாகவும் விரியும் வாய்ப்பு இதில் உண்டு. கதையின் நீதியாகச் சுருங்க உரைத்தலும் உண்டு. சில சாதிகள்/ இனங்களுக்கே உரியதான குணங்களை வெளிப்படுத்துவனவாய்ப் பழமொழிகள் உள்ளன. இவை நகர்ப்புறங்களை விடக் கிராம மக்களிடையே புழக்கத்தில் நிலவி வருகின்றன.

பழமொழிகள் போன்றே விடுகதையும் சமூக மக்களிடையே தொன்றுதொட்டு வழங்கப்படுகிறது. வேடிக்கையாகவும், அறிவு நுட்பத்தைக் காட்டுவனவாகவும், பொழுதுபோக்கு விளையாட்டுத்

தன்மை கொண்டனவாகவும் விடுகதைகள் அமைவன. சிந்தனை ஆற்றலைப் பெருக்குவதற்குரிய விடுகதைகள், மறைபொருள் சார்ந்திருப்பதால் எதிர்பார்ப்பும் ஆர்வமும் கூடுவதோடு விடை காணும் விரைவையும் பெற்றுச் சுவை தருவதாகும். விடுகதையின் சிறப்பே அதில் மறைந்திருக்கும் விடைதான் எனலாம். உரைநடையில் மட்டுமன்றிக் கவிதையாகவும் பயின்று வரும் இயல்பையும் இது பெற்றுள்ளது. சுருக்கமாக உரைநடையிலும், சற்றே நான்கைந்து அடிகளில் விரிவதாகக் கவிதையிலும் இடம் பெறுவது விடுகதை. விடுகதைகளைப் பற்றிப் பொருண்மை அடிப்படையிலும், அமைப்பியல் வழியேயும் ஆராய்ச்சிகளைச் செய்துள்ளனர். இயற்கை பற்றிய விடுகதைகள், காதலர் பற்றிய விடுகதைகள், வேடிக்கை விடுகதைகள் இவை தமிழில் மிகுதி. அறுபதுகளின் தொடக்கத்தில் வெளிவந்த களவுக் காதலர் கையாண்ட விடுகதைகள் (1962), தமிழ்நாட்டு விடுகதைகள் (1963) முதலியன சுட்டிக்காட்டத்தக்கன.

விடுகதை பற்றிச் ச.வே.சுப்பிரமணியம் எழுதிய தமிழில் விடுகதைகள் (1975), ஆறு..இராமநாதன் எழுதிய தமிழில் புதிர்கள் - ஓர் ஆய்வு (1978) ஆகியன ஆய்வு நூல்களாக வெளிவந்தன. விடுகதை கூறும் பழக்கம் மக்களிடையே எந்தச் சூழ்நிலைகளில் ஏற்பட்டது என்பதை வரலாற்றுக் கண்ணோட்டத்தில் கூறுகிறது ச.வே.சு. எழுதிய நூல். பொருண்மை அடிப்படையில் விடுகதைகளை நிரல்படுத்தி அவை எவ்வாறு சமூகப் பயன்பாடுடையனவாக உள்ளன என்பதை விரிவாக ஆய்கிறது ஆறு. இராமநாதனின் நூல்.

நாட்டுப்புறக் கலை விரிந்தது; பரந்தது, காலத்திற்குக் காலம் மாறுதல்களுக்கு உட்பட்டும், புதுமையை ஏற்றும், பழமையின் பிடிப்பை இழந்துவிடாமலும், தேய்மானத்தைப் பெற்று மறைந்தொழிந்தாலும், தன் இருப்பை உணர்த்திக் கொண்டு இருப்பது நாட்டுப்புறக் கலை. நாட்டுப்புற ஆய்வாளர்களுள் ஒருவரான சரஸ்வதி வேணுகோபால் நாட்டுப்புறக் கலைகளை ஆடல், பாடல், கூத்து, கைவினைக் கலைகள், வீரக்கலைகள் ஆகிய ஐந்து வகைகளாக உணர்த்துகிறார். இவ்வொவ்வொரு வகையையும் பல கிளைகளாகப் பகுக்க வாய்ப்புண்டு. ஆட்டங்களில் பல வகைகள் உள்ளன. அந்தந்த மாவட்ட மக்களுக்கென்று தனியாக ஆட்ட வகைகள் உள்ளனவெனினும், கரகம், காவடி, பொய்க்கால், கும்மி, கோலாட்டம், பொம்மலாட்டம் முதலியன பொதுவாகத் தமிழகத்தின்

அனைத்து மாவட்டங்களிலும் நிகழ்த்தப்பெறுவன ஆகும். கரகாட்டத்தின் இசையும் இன்றியமையாத பங்கு வகிக்கிறது. உறுமி மேளம், பம்பை, பறை, தமுக்கு, தவில் முதலிய இசைக்கருவிகள் இடம்பெறும். பெரும்பாலும் மாரியம்மன் திருவிழாக்களில் தான் இது பெரும்பங்கு வகிக்கிறது. சாமிக் கரகம் எடுப்போர் குறி சொல்வதும் உண்டு. நாட்டுப்புறங்களில் இன்றளவும் மாரியம்மன் திருவிழா நிகழ்வில் முக்கிய பங்கு பெறுவது கரகாட்டமே.

கரகாட்டம் பற்றிய நூலை மா. நவநீத கிருஷ்ணன், கே.ஏ. குணசேகரன் ஆகியோர் இணைந்து எழுதியுள்ளனர். அதில் ஆட்டம் பற்றிய நுணுக்கமான தகவல்கள் விரிவாக விளக்கப்பட்டுள்ளன. இவ் ஆட்டத்தின் வகைவேறுபாடுகள் கரகாட்டக் கலைஞர்களின் நிலைகள், கரகாட்டப் பாடல்கள் முதலிய செய்திகள் இவற்றில் இடம் பெற்றுள்ளன.

காவடி ஆட்டம் காவடியைத் தோளில் சுமந்து ஆடப்பெறுவதான ஆட்டமாகும். முருகனுக்குக் காவடி எடுத்தல் நாட்டுப்புற மக்களிடையே நிகழ்த்தப்பெறும். கரகம் போன்றே இதுவும் ஆடிக்கொண்டே நிகழ்த்தப்பெறும் கலையாகும். கார்த்திகை, பூசத் திருவிழாக்களில் முருகனுக்குக் காவடி எடுத்து வழிபடுவதை இன்றும் காணலாம். மிகத் தொன்மையான மரக்கால் ஆட்டமே பொய்க்கால் (குதிரை) ஆட்டமாகும். ஆண்பெண் இருபாலரும் தனித்தனியே எதிரும் புதிருமாகவோ, வட்டமாகச் சுற்றி வந்தோ ஆடுவர். கரகாட்டத்தில் பயன்படுத்தப் பெறும் இசைக் கருவிகளே இதற்கும் அமையும். ஆணும் பெண்ணும் தங்களை அலங்கரித்துக் கொண்டு ஆடுவர்.

கூத்துக்கலை இலக்கியத்தில் வெகுவாகக் கூறப்படுகிறது. சிலம்பு இதற்குச் சான்று. இளங்கோவடிகள் நாட்டுப்புறத் தெருக் கூத்திலிருந்தே காப்பியக் கதையைத் தெரிவு செய்து கொண்ட தோடு கூத்தின் பல்வேறு வகைகளையும் எடுத்தாண்டுள்ளார். கூத்துக் கலையின் அருமைப்பாடு, ஆட்டக்களம், கூத்து நிகழ்த்துநர், பின்னணி இசைக்கலைஞர்கள் அவர்தம் கருவிகள் முதலியன விரிவாக விளக்கம் பெறுகின்றன.

பிற்காலத்தில் கூத்து நிகழ்த்துவோர் தனிப் பிரிவாக வாழ்ந்து அக்கலையை வளர்த்தனர். கோயில் மற்றும் பிற திருவிழாக்களில் கூத்துக்கள் நடத்தி வந்தனர். தேவ அடியார்கள் என்று சமுதாயத்தில் அழைக்கப்பெற்றோர் கூத்தர்களாகவும்

விளங்கினர். தமிழ்நாட்டிற்கு மற்ற மாநிலங்களிலிருந்து ஆட்சி புரிய வந்தோர் தம் நாட்டுக் கூத்துக்கலையையும் பரப்பினர். இவ்வாறமைந்த கூத்துகளில் மராட்டியரால் அறிமுகப்படுத்தப்பட்ட தோல் கூத்து/நிழற்கூத்து/பொம்மலாட்டம் முதலியன தமிழ்நாட்டில் நிகழ்த்தப்பட்டு வருகின்றன. புராண இதிகாசக் கதைகள் இவற்றில் இடம்பெறுவன. தற்போது கலை நிகழ்ச்சிகளில் கருத்து விளக்கத்திற்காகவும் இத்தகைய கூத்துகளும், பொம்மலாட்டங்களும் நடைபெறுகின்றன. சமூக மக்களை விழிப்புணர்ச்சிக் கொள்ளத்தக்க வகையில் அரசு பிரச்சாரங்கள் இவ்வகையில் நிகழ்த்தப் பெறுவதுமுண்டு. பொம்மலாட்ட நிகழ்ச்சிகளை நடத்துவதற்கு என்றே குழுக்கள் உள்ளன. அவற்றுள் 'கும்பகோணம் மணி ஐயர் குழு' என்ற குழு குறிப்பிடத்தக்கது.

கிராமப்புறங்களில் தெருக்கூத்திற்கு ஒரு காலத்தில் மிக்க வரவேற்பிருந்தது. கிராமப்புற விழாக்களில் தெருக்கூத்து இடம் பெறும். குழுக்கள் குடும்பங்களாகக் கிராமத்திலேயே சில நாட்கள் தங்கிக் கூத்து நிகழ்த்தும். தெருக்கூத்துக் கலைஞர் கூத்து நிகழ்த்துமுன்னரும், கூத்து முடித்து ஊருக்குத் திரும்பும் முன்னரும் 'சம்பிரதாயமான' சில முறைகளைக் கடைபிடிப்பது மரபு. தெருக்கூத்து இரவு முழுதும் நடைபெறுவது ஆகும். கட்டியங்காரன் என்பான் கூத்தில் முக்கிய பங்கு கொள்வான். நடிப்பில் தேர்ந்த கலைஞர்கள் ஆடல் பாடல், இசை ஆகியவற்றிலும் தேர்ச்சி பெற்றிருப்பதுண்டு. பெரும்பாலும் கோடைக்காலத்தில் அறுவடை முடிந்த பிறகு கூத்து வயல்வெளியில் நிகழும். ஏதாவது ஒரு புராணக்கதையை மையமாகக் கொண்டிருக்கும். மிகுதியான தெருக்கூத்துகளாக இராமாயணம், அரிச்சந்திரன் கதை, கோபாலன் கதை, கர்ண மோட்சம், மன்மதன் கதை முதலியன அடிக்கடி நிகழ்த்தப் பெற்றுள்ளன. மு. இராமசாமியின் 'அன்று பூட்டிய வண்டி' என்ற நூல் தெருக்கூத்துக் கலை பற்றியது. அ. அறிவுநம்பி தெருக்கூத்துத் தொடர்பாக ஆய்வு மேற்கொண்டவர். ஆறு. இராமநாதன் மற்றும் ஆய்வாளர் சிலர் இக்கலை பற்றிக் கட்டுரைகள் பல எழுதியுள்ளனர்.

ஆட்ட வகைகளில் கும்மி, கோலாட்டம் முதலியன கோயில் திருவிழாக்காலங்களிலும் பண்டிகைக் காலங்களிலும் சமூகச் சடங்குகளிலும் நிகழ்வதாகும். கும்மியைப் பெரும்பாலும் பெண்கள் குழுமி ஆடுவது மரபு. சில கிராமப்புறங்களில் ஆடவரும் பங்கேற்பர். ஒயில் கும்மி ஆடவரால் மட்டுமே

நிகழ்த்தப் பெறும். கும்மி நாட்டுப்புற இலக்கிய வடிவமாகி ஏட்டிலும் திகழ்வதாகும். சிற்றிலக்கியங்களில் ஒன்றாகச் சிறப்பிக்கப் பெறுவதாகும். இறை வழிபாடு, சீர்திருத்தம், நாட்டுப்பற்று, அறிவூட்டல் முதலானவை இடம்பெற்றிருக்கும். வரலாறு, புராணம் தொடர்பான நிகழ்ச்சிகளைக் கொண்டு இயற்றப்படும் ஆட்டமாக நிகழ்த்தப்பெற்றும் வந்துள்ளன. கும்மிக்குரிய மெட்டுகள் எளிமையானவை, கலை இன்பம் பயப்பவை.

ஆட்டங்களின் வகைகளை அளவிட்டுக்கூற இயலா அளவு வளர்ந்திருந்தாலும், இன்னும் மாறாதும் மறைந்து போகாது மிருக்கும் ஆட்டங்கள் மிகச் சிலவே.

நாட்டுப்புறவியலில் சமயங்கள் முக்கிய இடம் வகிப்பன. இவற்றின் தொடர்பான நம்பிக்கைகள், வழிபாடுகள் முதலியன எண்ணத்தக்கன. பெரும்பாலும் சில்லறைத் தெய்வங்கள் என அழைக்கப்பெறும் நாட்டுப்புறச் சிறு தெய்வங்களும், குல தெய்வங்களுமே சிறப்பித்துப் போற்றப்படுகின்றன. காடன், சுடலை மாடன், சங்கிலி கருப்பன், எல்லைப்புறக் காவல் தெய்வம், மாரியம்மன் முதலான தெய்வங்கள் பற்றியும் அவைகளுக்குரிய சடங்குகள் பற்றியும் அவற்றோடு நெருங்கிய தொடர்புடைய தெய்வீக நம்பிக்கை, பழக்கவழக்கங்கள் முதலியனவும் எண்ணிப் பார்க்கத்தக்கன. சமயக் கடவுளர்களை வழிபடும் வகையில் சிறு தெய்வம், பெருந் தெய்வம் என்ற பாகுபாடு இருந்துள்ளது. மேலாதிக்கப் போக்கினர் சமூகத்தில் பெருந்தெய்வ வழிபாட்டை உண்டாக்கினர். இது சமூகத்தில் உள்ள வர்க்க முரண்பாட்டின் எதிரொலியாக இருந்துள்ளது. நாட்டுப்புறத் தெய்வ வழிபாடுகள் தொழில் சார்ந்தும், மண்ணின் மணம் சார்ந்தும், குலமரபு சார்ந்தும் இன்றளவும் நிகழ்த்தப் பெறுகின்றன. சமூகத்தில் ஆண்டான், அடிமை என்ற வேறுபாடுகளை உண்டாக்கியோர் வழிபாட்டிலும் சில வரன்முறைகளை ஏற்படுத்தினர். நாட்டுப்புறத் தெய்வங்களில் பூசாரி இடம்பெறுவதும், பெருந்தெய்வ வழிபாடுகளில் குருக்கள் இடம்பெறுவதும் இதற்குச் சான்றாகும். சிறு தெய்வ வழிபாடுகளில் இடம்பெறும் உயிர்ப்பலியும் இது தொடர்பாகக் கருதத்தக்கது.

நாட்டுப்புற வழிபாடுகளில் சமய ஆகம விதி முறைகள் கிடையாது. இயற்கை ஊறு விளைவிக்குமானால் அது தெய்வக் குற்றம் என்றெண்ணிக் கிராமத் தெய்வங்களுக்குத் திருவிழா

எடுப்பதும், நேர்த்திக்கடன் செலுத்துவதும் மரபு. நாட்டுப்புறச் சமயங்களிலும், விழாக்கள், சடங்குகள் முதலியவற்றிலும் நம்பிக்கை முதன்மை பெறுகிறது. தீமிதி, கடாவெட்டு, கோழி அறுத்தல், முதலானவை இது தொடர்பாக இடம்பெறுவதையும் காணலாம். தெய்வம் பற்றிய பல நம்பிக்கைகளும், சடங்குகளும், வழிபாட்டு முறைகளும் நாட்டுப்புறச் சமயங்களைத் தொன்மக் கதைகளுக்கு உட்படுத்துவனவாய் உள்ளன.

சமயம் தொடர்பான சிந்தனைகளில் தெய்வச் செயல்கள் என்றெண்ணி நல்வினை, தீவினை என்பதை ஏற்றுக் கொண்ட மக்கள் செய்வினை என்பதிலும் பெரிதும் நம்பிக்கை கொண்டிருந்தனர். மாந்திரீகம், மந்திரம், தீண்டல் முதலியவற்றில் மிகுந்த நாட்டம் செலுத்தினர். அச்சவுணர்வு, அதிலிருந்து மீள எண்ணுதல், பழிக்குப் பழிவாங்க நினைத்து அதற்கான செயலில் இறங்குதல் முதலியவற்றிற்காக அவற்றில் நாட்டம் கொள்ளுதல் மக்களிடையே இயல்பாகத் தோன்றியது.

நாட்டுப்புற மருத்துவம் கிராம மக்களிடையே காணப் பட்ட ஒன்றாகும். தெய்வத்தோடு தொடர்புபடுத்தி மந்திரித்தல், தாயத்துக் கட்டுதல், தீய காற்று தீண்டக்கூடாது என்பதற்காகச் சிலவற்றை அணிதல் முதலானவை நோயிலிருந்து தங்களைக் காத்துக் கொள்ள வேண்டும் என்ற மரபுவழி உணர்வை நாட்டுப்புற மக்களிடையே காணலாம்.

இயற்கையில் காணக் கிடைக்கும் பொருள்களைப் பக்குவமாகக் கையாண்டு நோய் தீர்த்தலுக்கும் பயன்படுத்தினர். இலை, வேர், பட்டை, காய், கனி என ஒவ்வொன்றின் மருத்துவக் குணங்களை நன்கறிந்து பயன்படுத்தத் தெரிந்திருந்தனர். நாட்டுப்புற மருத்துவ வகைகளால் நோய்கள் தீரும் முறைகளைக் கண்டறிந்தனர். இயற்கை மருத்துவம் இன்னும் போற்றப்படுவதற்கு நாட்டுப்புற மருத்துவமே முன்னோடியாகத் திகழ்கிறது.

நாட்டுப்புற மருத்துவம் சித்தர்கள் வழியே சிறந்து விளங்கியது. சித்தவைத்தியம் என்றே அழைக்கப்படுவதற்குக் காரணமாகச் சித்தர் பலர் இருந்துள்ளனர். நோய் தீர்க்கும் மூலிகைகளை நன்கு அறிந்து வைத்திருந்தும், அவற்றை இலைமறை காயாகவே மக்களுக்கு வழங்கிச் சென்றுள்ளனர்.

நாட்டுப்புற இயலில் பெரிதுமாக மக்கள் வாழ்க்கையில் இடம்பெற்றிருப்பது நாட்டுப்புறப் பாடல்களே ஆகும். நாட்டுப்புற ஆய்வியல் அறிஞர் பலரும் அது பற்றியே தொடக்க

காலத்தில் ஆராய்ச்சி மேற்கொண்டனர். நாட்டுப்புறப் பாடல்கள் ஆய்வுக்குப் பிறகே நாட்டுப்புற இயலின் பிற வகைகளுக்குத் தம் பார்வையை உட்படுத்தி ஆராய்ந்தனர். பாடல் வகைகள் பல இருப்பினும் தொழில், கொண்டாட்டம், இழப்பு, காதல், குழந்தைகள் தாலாட்டு தொடர்பான பாடல்கள் மிகுதியாக நிலவுகின்றன. இவற்றிலெல்லாம் ஆய்வு செய்தோர் தொகுப்புப் பணிகளையும் செம்மையாகச் செய்துள்ளனர். சமூகப் பண்பாட்டு நிலைகளில் பார்வை செலுத்திய ஆய்வுகள் தற்போது பரவலாகப் படர்ந்துள்ளன. பாடல் வகைகளை அளவிட்டுக் கூறுவது இயலாது. தொழில் சார்ந்த பாடல்களில் கொடிக்கால் பாடல்கள் (குருவிக்கரம்பை சண்முகம்), மீனவர் வாழ்க்கையில் காணலாகும் நம்பிக்கைகள், சடங்குகள், வழக்காறுகள் (இராஜகுமாரி, தனஞ்செயன் முதலியோர்) முதலியன தொழில் பாடல்கள் தொடர்பான ஆய்வுகளில் சுட்டிக்காட்டத்தக்கன.

நாட்டுப்புறப் பாடல் வழியாகச் சமூகப் போக்குகள் பண்பாட்டுச் செய்திகள் முதலியன எடுத்துக்காட்டப் பெறுகின்றன. சாதிக் கலவரங்கள், மதுவிலக்கு, வரதட்சணை, வறுமை முதலியன பாடல்களில் சிந்திக்கப்பட்டுள்ளன. மகிழ்வான சூழ்நிலைகளில் பாடப்பெறும் காதல், தெம்மாங்கு, திருமணச் சடங்கு, கொண்டாட்டம் ஆகிய பாடல்களினூடே சமூகச் சிந்தனைகள் ஆங்காங்கே சுடர்விடுகின்றன. அதே போல இழப்புப் பாடல், ஒப்பாரி ஆகியனவற்றிலும் சமூக உணர்வு மேலிடும் நிகழ்வுகளைக் க. நரசிம்மன் தமது ஒப்பாரி பற்றிய ஆய்வில் பதிவு செய்துள்ளார். ஒடுக்கப்பட்ட வர்க்கத்தின் எதிர்ப்புக் குரலாக நாட்டுப்புறப் பாடல்கள் இருப்பதை ஆய்வாளர்கள் எடுத்துக்காட்டியுள்ளனர்.

சமூகத்தின் பிரதிபலிப்பாக விளங்கும் நாட்டுப்புற வழக்காறுகள் மக்களோடு ஒன்றிக் கலந்தவை. புனைவுப் பாடலாக அல்லாமல் சமூகத்தில் காணப்படும் மகிழ்வையும் துயரத்தையும் உணர்ந்தபடியே வெளிப்படுத்தும் நாட்டுப்புறப் பாடல்களும் அவற்றோடு தொடர்புடைய ஏனைய வகைகளும் குடும்ப உறவுகள், முரண்கள், நாகரிகப் பண்பாட்டுச் சூழ்நிலைகள், மக்களின் வாழ்வு முறைகள், அவர்தம் உள்ளத்து உணர்ச்சிகள் முதலியனவற்றை ஆழமாக மண்ணில் விதைத்துள்ளன.

நாட்டுப்புறப் பாடல்கள் மக்களிடையே மிகுந்த வரவேற்பைப் பெற்றதற்கு அவற்றின் இசைவடிவமும் ஒரு காரணமாகலாம். சூழ்நிலைகளுக்கு ஏற்ப அவற்றின் இசை

ஆளுமை நாட்டுப்புறப் பாடல்களின் அருமையை உணர்த்தும். பழங்கால நாட்டுப்புற இசை வடிவங்கள், மெட்டுகள் முதலியன இலக்கியத்தில் மிகுந்த செல்வாக்கினைப் பெற்றுள்ளன. தாலாட்டும், காதல் தெம்மாங்கும், ஒப்பாரியும் காலத்தால் மறையாத இசைக்கலையின் வெளிப்பாடுகள் ஆகும்

இசை என்பது நாட்டுப்புற மக்களின் வாழ்வோடு இணைந்தது. மக்களைப் பற்றிய இலக்கியத்தில் அவர்தம் இசைப்பா வடிவத்திற்கு முதன்மையான இடம் உண்டு. சிலப்பதிகாரத்தில் இசைவடிவக் கூறுகளைக் காணமுடிகிறது. குரவை, வரிப்பாடல் முதலியன அந்நூலின் சிறப்பிற்குரிய காரணங்களுள் ஒன்று. மக்களிடத்து வழங்கிய இசைப்பா வடிவங்களை அதில் கையாளுகிறார் இளங்கோ அடிகள். பக்தி இலக்கியங்களிலும், சித்தர் பாடல்களிலும் நாட்டுப்புற இசை வடிவங்களைக் காணலாம். குறவஞ்சி, குறம், உழத்திப்பாட்டு, நொண்டி நாடகம், பள்ளு முதலிய சிற்றிலக்கிய வகைகள் உருவா வதற்கு இவ் இசைவடிவங்களும், பாமரர்களின் வாழ்வியலும் காரணங்களாகும். சிந்து, கும்மி, கண்ணி முதலிய இசைப்பா வடிவங்கள் குறிப்பிட்ட காலம் வரை பரவலாக மதிப்புப் பெற்றிருந்ததோடு பலரது நாவிலும் தவழ்ந்த இசை வடிவங் களாகும். இன்றைய திரைப்படங்களில் நாட்டுப்புறப் பாடல்களும் அவற்றின் இசை வடிவங்களும் ஆளுமை செலுத்திவருவதை உணரலாம். வானொலி, தொலைக்காட்சி முதலிய பொழுதுபோக்கு ஊடகங்கள் படித்தறியா மக்களிடம் தம் செல்வாக்கைப் பெறுகின்றன. இசைப்பா வடிவங்கள் பலவற்றையும் வானொலி, தொலைக்காட்சி ஆகியவை பிரச்சாரத்திற்குரிய கருவிகளுள் ஒன்றாக ஆக்கிக் கொண்டுள்ளன. தேர்தல் பிரச்சாரங்களுக்கு நாட்டுப்புறப்பாடல் மெட்டுகளும், கூத்துக்களும் இன்றைய சூழலில் பயன்பட்டு வருவதையும் காணலாம். அந்தளவிற்குச் சமூகத்தில் நாட்டுப்புறவியல் தாக்கம் இன்றும் நின்று நிலவுகிறது.

நாட்டுப்புற இயலில் ஆய்வுகளும், பயிற்சிப் பட்டறைகளும் பல்கலைக்கழக அளவில் நடைபெற்று வருவதையும் அதன் வளர்ச்சியில் காணலாம். கருத்தரங்குகளில் நாட்டுப்புற இயல் தொடர்பான பல்வேறு ஆய்வுக் கட்டுரைகள் படிக்கப்படு கின்றன. வெறும் தகவலாகவோ/செய்திகளாகவோ அமையாது இன்றைய இலக்கியப் பரிணாம வளர்ச்சியில் அறிவியல் மற்றும் பல்துறைக் கூட்டாய்வுகளுமாக நாட்டுப்புறவியல் மீது

கண்ணோட்டம் செலுத்தி ஆயப்படுகின்றன. பல்வேறு அணுகு முறை ஆய்வுகள், மேற்கொள்ளப்பட்டு வருவது சிறப்பாக வுள்ளது. நாட்டுப்புற இயலுக்கெனத் தனித்துறைகள் பாளையங் கோட்டை தூய சவேரியர் கல்லூரியிலும், தஞ்சைத் தமிழ்ப் ப்ல்கலைக்கழகத்திலும் ஏனைய சில இடங்களிலும் உள்ளமை அத்துறை வளர்ச்சி பெற்று வருவதைக் காட்டுகிறது.

நாட்டுப்புற ஆய்வாளர்களில் இன்றளவும் முழுக்கவனம் செலுத்திய ஆய்வாளர்களாகப் பலர் விளங்குகின்றனர். இளநிலை ஆய்வுகள், முனைவர் பட்ட ஆய்வுகள் இத்துறையில் பலராலும் செய்யப்பட்டு வருகின்றன. அந்தந்த வட்டாரங்களைச் சார்ந்தோர் தங்கள் பகுதி மக்களின், இனத்தின் பல்வேறு பழக்க வழக்கங்களை, நம்பிக்கைகளைப் பண்பாட்டுத் தொடர்பான பிற செய்திகளை, பல்வேறு வழக்காறுகளைக் களப்பணி செய்து திரட்டி ஆய்வு மேற்கொண்டு வருகின்றனர். கல்வி நிறுவனம் சார்ந்த ஆய்வுகளில் பதின்மருக்கு மூவர் அல்லது நால்வர் என்ற அடிப்படையில் நாட்டுப்புற ஆய்வில் ஈடுபாட்டு உணர்வு உள்ளது அத்துறையின் வளர்ச்சிக்குத் துணை செய்கிறது.

நாட்டுப்புற இயலுக்கெனத் தனி இதழ்கள் நடத்தப் பெறுவதையும் இங்கு எண்ண வேண்டும். தொடக்க காலங்களில் நாட்டுப்புறப் பாடல்களுக்கென வெகுசனப் பத்திரிகைகள் ஒருசில பக்கங்களை ஒதுக்கின. கலைமகள், மஞ்சரி, தாமரை, தீபம், ஆனந்த விகடன் முதலியன ஓரளவாவது அறிமுகம் செய்து வைத்தன.

நா. வானமாமலை 'ஆராய்ச்சி' என்ற இதழைத் தொடங்கி (1969) அதன்வழியாக நாட்டுப்புற இயலுக்குத் தனித்தன்மை அளித்து ஆய்வுக் கட்டுரைகள் பலவற்றை எழுதியும் எழுதுவித்தும் சிறப்புச் சேர்த்தார். பன்முக நோக்கில் அத்துறைச் சார்ந்த கட்டுரைகள் அதில் இடம்பெற்றன. அவரால் நாட்டுப்புற இயலில் ஆர்வமும் ஈடுபாடுமிக்க அறிஞர் பலர் உருவானார்கள்.

நாட்டுப்புற இயல் பற்றிய தகவல் செய்திகளைத் தாங்கி வந்தது கே.ஏ. குணசேகரனின் செய்திமடல். பெங்களூரிலிருந்து 'தெருக்கூத்து' என்ற இதழ் வெளிவந்து நின்றுபோனது. சு. சண்முக சுந்தரம் நடத்திவரும் 'தன்னானே' என்ற அரையாண்டு இதழும், தெ. லூர்து வெளியிடும் 'நாட்டார் வழக்காற்றியல்' என்னும் இதழும் பல்வேறு ஆய்வுக்கட்டுரைகளை அளித்துவருவது சிறப்பாகக் குறிப்பிடப்பட வேண்டியதாகும்.

# இலங்கை

அம்மன்கிளி முருகதாஸ்

### வாய்மொழி இலக்கிய ஆராய்ச்சிகளின் ஆரம்பம்

நாட்டார் வழக்காற்றியலின் வளர்ச்சிக்குத் தேசிய தாழ்வு மனப்பாங்கு அடிப்படைக்காரணமாக இருந்தது. அமெரிக்க ஐக்கிய நாடுகள், ஸ்கொட்லாந்து, ஜேர்மனி, பின்லாந்து போன்ற நாடுகள் பிறருக்கு அடிமைப்பட்டுக்கிடந்ததால் ஒருவகைத் தாழ்வுச்சிக்கலுக்கு அந்நாட்டினர் ஆட்பட்டுக்கிடந்தனர். ஆதலின் தங்களுக்குரிய அடையாளத்தை வழக்காறுகளில் தேடினர் (எஸ்.டி.லூர்து, 1995:பக்1).

### வாய்மொழி இலக்கிய வகைகள்

பரம்பரை பரம்பரையாக மக்களிடையே வாய்மொழி நிலையில் வழங்கி வாய்மொழிக் கையளிப்பின்மூலம் வழக்குத் தொடர்ச்சியைப் பெறும் பேணப்பட்டுவரும் பாடல்கள், கதைகள், பழமொழிகள், விடுகதைகள் என்பன வாய்மொழி இலக்கியம் என்ற வகைக்குள் அடங்கும். எழுதா இலக்கியங் களாகிய வாய்மொழி இலக்கியங்களே உலகில் முதலில் தோன்றின என்பதையும் எழுத்துமுறை வழக்கிற்கு வருமுன் எல்லா இலக்கியங்களும் வாய்மொழியாகவே விளங்கின என்பதையும் பழைய வீரயுகப் பாடல்கள் அனைத்தும் வாய்மொழியாகவே கொள்ளத்தக்கன என்பதையும் ஆய்வாளர் நிறுவியுள்ளனர் (கைலாசபதி, க. 1968: பக். 68-84).

தமிழில் நாட்டார் பண்பாட்டுக்கும் செந்நெறிப் பண்பாட்டிற்குமிடையே தெள்ளத்தெளிவான வேறுபாடு காட்டமுடியாத அளவுக்கு இரண்டுக்குமிடையே ஊடாட்டம் உண்டு.

நாட்டார் இலக்கியக்கூறுகளில் ஒன்றான பழமொழி இலக்கியப் பாரம்பரியத்தில் முக்கியம் பெற்றுள்ளது. பதினெண் கீழ்க்கணக்கில் பழமொழி நானூறு என்று ஒரு நூல் உண்டு. தொல்காப்பியர் செய்யுளியலில் கூறும் பண்ணத்தி, பிசி என்பவை நாட்டார் வழக்குச் சார்ந்தவையாகவே இருக்கவேண்டும் (கா.சிவத்தம்பி, 1995: பக். 287).

தமிழ்நாட்டு மரபில் காணக்கூடிய நாட்டுப்புற இலக்கியத் தன்மைகளைப் பாண்டுரங்கன் பின்வருமாறு காட்டுவார்.

தமிழ் நாட்டில் நாட்டுப்புற இலக்கியத்தின் அடிப்படைப் பண்புகளாகப் பின்வருவனவற்றைக் கூறமுடிகின்றது.

1. வாய்மொழியாகப் பரவுதல், செவிவழியாகக் கேட்டல்
2. தோன்றிய காலத்தைத் தெள்ளத் தெளிவாக அறுதி செய்ய இயலாமை
3. தலைமுறை தலைமுறையாக வழிவழியாகக் கொடுக்கப்பெறுதல்
4. ஒரே சமயத்தில் மாறும் வடிவிலும் நிலைத்த வடிவிலும் வழங்கப்பெறுதல்
5. அடிவரையறை இல்லை
6. எளிமையாகப் பொருள் புரியும் நிலை இருத்தல்
7. வட்டார வழக்குச் சொற்கள் கொண்டிருத்தல்
8. உள்ளதை உள்ளவாறு கூறல்
9. மறித்து வருதல்
10. எதுகைமோனை, அடுக்குத்தொடர், இரட்டைக்கிளவி

போன்ற இலக்கண அமைப்புகளைப் பெற்றிருத்தல். (பாண்டுரங்கன், அ., 1995: பக். 233). இந்தவகையில் இலங்கையில் பயிலப்படும் நாட்டார் கதைகள், பாடல்கள், பழமொழிகள், விடுகதைகள் நோக்கப்படல் வேண்டும்.

**இலங்கையில் நாட்டார் இலக்கியம்**

தமிழ் பேசும் மக்கள் வாழும் வடஇலங்கை, தென் இலங்கை, கிழக்கிலங்கை, மலையகப் பகுதிகள் எங்கிலும் நாட்டார் இலக்கியம் வழக்கில் உள்ளன.

இலங்கைத் தமிழ் நாட்டார் இலக்கிய வழக்கியல் ஆய்வுகள் பற்றிக் குறிப்பிடும் கைலாசபதி "இலங்கைத்தமிழ் நாட்டார் பாடல் வழக்கியல் ஆய்வுகளைப் பொறுத்த மட்டில் தொடக்கத்தில் ஆங்கிலேய மிசனறிமாரும், துரைத்தன உத்தியோகத்தரும் அவ்வப்போது எழுதிய குறிப்புகளைத் தொடர்ந்து இலங்கைத்தமிழர் சிலர் அத்துறையில் அக்கறை கொள்ளலாயினர்..............." 1885ஆம் வருடம் வில்லியம் குணதிலகா என்பவர் ஆசிரியராக இருந்து நடத்திய 'ORIENTALIST' எனும் சஞ்சிகை பம்பாயில் அச்சிடப்பட்டு வெளிவரத் தொடங்கியது.

அவ்வேட்டில் தமிழ், சிங்கள நாட்டார் வழக்கியற் செய்திகள் மிகுதியாகப் பிரசுரிக்கப்பட்டன என்று இலங்கை நாட்டாரியல் ஆராய்ச்சியின் தொடக்கம் பற்றிக் கூறுவதுடன் அச் சஞ்சிகையில் வெளிவந்த நாட்டார் இலக்கியம் பற்றிய குறிப்புகளைத் தருகின்றார் கைலாசபதி (1980:7-8). அடுத்து நாட்டார் இலக்கிய ஆய்வில் சி.வா. வேலுப்பிள்ளை பங்காற்றினார். பிற்காலத்தில் வேலப்பணிக்கன் ஒப்பாரி (1934), மட்டக்களப்பு வசந்தன் கவித்திரட்டு (1940), மலையக நாட்டுப் பாடல்கள், இலங்கை நாட்டுப் பாடல்கள் (1951), கிராமியக் கவிக்குயில்களின் ஒப்பாரிகள் (1960), வட இலங்கையர் போற்றும் நாட்டார் பாடல்கள் (1961), மட்டக்களப்பு நாட்டுப் பாடல்கள் (1960), ஈழத்து நாடோடிப் பாடல்கள், கிராமத்து இதயம் (1995), நாட்டுப் பாடல்கள் (1976), கிழக்கிலங்கை முஸ்லீம்களின் நாட்டார் பாடல்கள் (1997) எனப் பல நூல்கள் வெளி வந்துள்ளன. இந்த நூல்களைத் தொகுத்து நோக்கும்போது இவை பெரும்பாலும் பாடல்களைத் தொகுத்த நூல்களாகவே உள்ளதைக் காணலாம். நாட்டார் இலக்கியம் பாடல்களை மட்டும் கொண்டதல்ல; பாடல்களுடன் கதைகள், பழமொழிகள், நொடிகள் ஆகியவற்றையும் உள்ளடக்கியதாகும். இந்த நாட்டார் இலக்கிய வகைகள் யாவும் இலங்கையிலும் பயிலப்படுகின்றன. அவற்றைச் சற்று விரிவாக நோக்குவோம்.

### கதைகள்

கிராமப்புறங்களில் இவை உபகதைகள் என்றே வழங்கப்படும். இவ்வகையில் இலங்கையில் வழங்கும் நாட்டார் கதைகளைப் பின்வருமாறு வகுக்கலாம்.

### அற்புத, மாயாஜாலக் கதைகள்

இக்கதைகளுக்குச் சான்றாகக் கத்தி கொண்ட வள்ளி, எலுமிச்சம் பழம் பெண்ணான கதை, பனங்கொட்டைக் கதை போன்றவற்றைக் கூறலாம்.

### பேய் பிசாசுக்கதைகள்

இக்கதைகள் மக்களின் பேய்கள் பற்றிய நம்பிக்கை சார்ந்தவையாகும். மாலை ஆறுமணிப் பொழுதில் அல்லது நடுச் சாமத்தில், சுடலையோரமாக அல்லது சந்திவழியாக வரும்போது பேய்களைச் சந்திப்பதும், அவற்றின் கோபத்துக்கு இலக்காவதும், அவற்றுக்கான சாந்தியும் கதைகளின் பொருளாக இருக்கும். அல்லது பேய்கள் மனிதர்கள் போலக் குரல்கொடுத்து மனிதரை ஏமாற்றிய கதைகள் இருக்கின்றன.

**சமூகக் கதைகள்**

திருமணப்பிரச்சினைகள், மாந்திரீகம் போன்றன இவற்றுள் அடங்குவன. மேலும் சில கதைகளில் கணவனை ஏமாற்றும் மனைவி, மாமியாரை ஏமாற்றும் மருமகள் போன்றோர் பாத்திரமாக அமைவர். சாதாரணமாகச் செவ்விலக்கியப் பாத்திரங்களில் இல்லாத குணாதிசயங்களை இவர்கள் கொண்டிருப்பர்.

**கோவில்தோற்றம்/அற்புதம் பற்றிய ஐதீகக் கதைகள்**

இவை பெரும்பாலும் ஒவ்வொரு கோயிலைப் பற்றியும் வழங்கி வருகின்றன. கத்தோலிக்க, இந்து மதக்கோயில்கள் பற்றி இந்தக் கதைகள் காணப்படுகின்றன. உதாரணமாகத் தொண்டைமானாறு செல்வச்சந்நிதி, ஒட்டிசுட்டான் தான்தோன்றீசுவரம், நாகர்கோயில் நாகதம்பிரான், யாழ்ப்பாணம் பன்றித்தலைச்சி அம்மன் போன்ற கோவில்களின் தோற்றங்களுக்கான கதைகள், மட்டக்களப்பு அமிர்தகழி, கப்பலேந்தி மாதாகோயில் ஆகிய கத்தோலிக்க, கிறிஸ்தவ தேவாலயத் தோற்றக் கதைகள் போன்றவற்றைக் கூறலாம்.

**ஊர்களின் பெயர்க் காரணக்கதைகள்**

ஊர்களின் தோற்றம் பற்றிய கதைகளும் நாட்டார் கதைகளுக்குள் அடங்கக்கூடியன. யாழ்ப்பாணம், மட்டக்களப்பில் சத்துருக்கொண்டான், ஏறாவூர், வந்தாறுமூலை, நாககட்டு போன்ற இடப்பெயர்களுக்கான கதைகள் இவ்வகையில் கூறத் தகுந்தன.

**மிருகங்கள்–மனிதர்கள் பற்றிய கதைகள்**

இவற்றில் மிருகங்கள் மனிதர்களுடன் உறவாடி உதவிசெய்யும் (உதாரணம் வாளை மீன் கதை மட்டக்களப்பு மாவட்டத்தில் வழங்குவது).

**பாலியல் கதைகள்**

வயது வந்தவர்களுக்கு மட்டும் ஆன பாலியல் கதைகள் ஆண்களிடையே வழங்கி வருவதாக அறியமுடிகிறது.

**திருடர்கள், வீரர்கள் பற்றிய கதைகள்**

இவர்கள் பற்றிய கதைகள் மட்டக்களப்பு, யாழ்ப்பாணப் பகுதிகளில் வழங்குகின்றன.

## பாடல்கள்

### தாலாட்டுப்பாடல்கள்

தாலாட்டுப் பாடல்கள் இலங்கை எங்கணும் வழக்கில் உள்ள பாடல் வகையாகும். அண்மைக் காலங்களில் தொலைக் காட்சி, வானொலிப் பெட்டிகளின் செல்வாக்கு காரணமாகப் பாடல்களைப் பாடுவோர் தொகை குறைவடைந்து வருகின்றது. தாலாட்டுப்பாடல்கள் குழந்தையின் குடும்பநிலை, எதிர்காலம், குடும்பப் பிரச்சினை போன்றவற்றை உள்ளடக்கிப் பாடப்படுவன. அந்த அந்தப் பிரதேசத்தின் வாழ்க்கை முறைகள், வாழ்க்கை நிலைகள் என்பன இவற்றில் வெளிப்படும்.

### விளையாட்டுப்பாடல்கள்

கிராமங்களில் சிறுவர்களிடையே பல விளையாட்டுகள் விளையாடப்படுகின்றன. விளையாட்டுக்களை விளையாடும் போது பாடி விளையாடுவதைக் காணலாம். பாடல் முக்கிய இடம் பெறும், உதாரணமாக சில பாடல்களைக் காணலாம். அரப்பு உரப்பு, ஒரு குடம் தண்ணிவாத்தேன், கிட்டிப்புள்ளு, என்னவேலி அச்சுவேலி, பருப்பும் பருப்பும் பன்ரண்டாம், எவடம் எவடம் புங்கடி புளியடி, கிள்ளுப் பிராண், கண்ணாமூச்சி, பூப்பறிக்க வருகிறோம், இந்தாங்க வாப்பா தங்கடத்துண்டு, போடி போடி புத்தி கெட்ட சம்பந்திகா போன்ற பாடல்கள். அத்துடன் சில பாடல்கள் வாய்மொழி வாதமாக அமைவதைக் காணலாம். இருவர் பாடுவதாக இது அமையும். என்னசோறு பழஞ்சோறு, என்னபழம் வாழைப்பழம்...... , யார் சங்கிலி அப்பன் சங்கிலி எனவரும் பாடல்கள். சில பாடல்கள் சும்மா பாடுகின்ற பாடல் களாகவும் உள்ளன. மாமிவீட்ட போனேன் அரிசி பருப்புத் தந்தா.......... எனவரும் பாடல் இதற்கு உதாரணமாக அமையும்.

### காதல் பாடல்கள்

இலங்கையில் தொகுக்கப்பட்ட நாட்டார் பாடல் தொகுதி களில் காதல் பாடல்களே அதிகமாகத் தொகுக்கப்பட்டுள்ளன. அதிலும் மட்டக்களப்பு பிரதேசப் பாடல்களே அதிகம் தொகுக்கப்பட்டவையாகும். இங்குக் கவி எனப்படும் பாடல்களில் காதல் பாடல்கள் பிரசித்தி பெற்றவையாகும். மக்கள் தங்கள் துன்ப துயரங்களையும் "கவி"யாகப் பாடுவதுண்டு. கவிகள் பொதுக்கவியாகவும் அமையும். இவை இரண்டு ஆண்களாலோ, இரண்டு பெண்களாலோ மாறிமாறிப் பாடப்படும். இவற்றில் கிராம வாழ்க்கையின் பல்வேறு அம்சங்களும் பாடப்படும். காதல்

பாடல்கள் வெறும் காதல் பாடல்களாக இருப்பதில்லை. குடும்ப முரண்பாடுகளும் இவற்றில் வெளிப்படும்.

### தொழிற்பாடல்கள்

கப்பற்பாட்டு, அம்பாப்பாடல், தேயிலைத் தோட்டப் பாடல், அரிவிவெட்டுப்பாடல் போன்றன தொழிற் பாடல்களாக உள்ளன. இவை அந்தந்தத் தொழிலின் லயத்துக்கேற்ற வகையில் அமைந்திருக்கும். "கரைவலை" என்ற மீன்பிடி முறையில் குழுவாகச் சேர்ந்து வலை இழுக்கும்போது "அம்பா" பாடப்படும். இது இழுக்கும் லயத்துக்கு ஏற்றமுறையில் இழுப்போர் இரண்டு குழுவினராக நின்று பாடுவர். உதாரணமாக ஏலோம், ஏலோம் என மாறிமாறிப் பாடப்படும். இவை கடவுள் சம்பந்தமானதாக, அன்றாட வாழ்க்கை சம்பந்தமாக இருக்கும். இடையிடையே இணைவிளைச்சு பற்றிய ஆபாசமான சொற்கள் கலப்பதுண்டு. அரிவிவெட்டுப் பாடல் அரிவி வெட்டும்போது பாடப்படுவது, முல்லைத் தீவுப்பகுதியில் "பண்டிப்பள்ளு" எனப்படும் நீண்ட பாடல் ஒன்று அரிவிவெட்டின் போது பாடப்படுகின்றது எனக் கூறப்படுகின்றது (மு. இராமலிங்கம், 1961 : 43). தேயிலைத் தோட்டத் தொழிலாளர் தங்கள் அவலங்களை, துன்பத் துயரங்களைப் பாடல்களில் பாடியுள்ளனர். றப்பர் தோட்டப் பாடல்களிலும் இவ்வாறான தன்மைகள் காணப்படுகின்றன (பெ. வடிவேலன், 1997: 165). வயல் மிதிக்கும்போது பாடும் பாடல்கள், சூடுபோடும் போது பாடும்பாடல்கள் (எஸ். முத்துமீரான், 1997: 115 & 117). போன்றவை தொழிற்பாடல்களில் அடங்குகின்றன.

### வரலாற்றுப் பாடல்கள்

இதற்கு உதாரணமாகப் பறங்கியர் காலத்துப் பாடல்கள் (மு. இராமலிங்கம், 1961:10), எண்ணெய்ச் சிந்து (மு. இராமலிங்கம், 1961:24), கேம்புப் பாடல்கள் (எம்.ஏ. நுஃமான், 1980:) என்பவற்றைக் கூறலாம்.

### நையாண்டிப் பாடல்கள்

நையாண்டிப் பாடல்கள் மக்களின் குணாதிசயங்களை நையாண்டி செய்து பாடுவனவாகும். உம்பண்டிதின்னி, அட்டமுகறன் (எஸ். முத்துமீரான், 1997:97) போன்றவை.

### பிரார்த்தனைப் பாடல்கள்

நாடோடிப் பாடல்களில் பிரார்த்தனைப் பாடல்களும் முக்கியமானவை. இஸ்லாமியரிடையே வழங்கப்படும்

பிரார்த்தனைப் பாடல்களை எஸ். முத்துமீரான் விளக்குகின்றார் (எஸ். முத்துமீரான், 1977 : 179-192).

**கூத்துப் பாடல்கள்**

இலங்கையில் கூத்துக்கள் பாடல்களை அடிப்படையாகக் கொண்டன. இவை எழுதப்பட்ட பிரதிகளைக் கொண்டன. எனினும் அண்ணாவிமாரின் நினைவாற்றலிலும் கற்பனை யாற்றலிலும் தங்கியிருக்கின்றன. இந்தப் பாடல்கள் நாட்டார் நிலையிலேயே உள்ளன. அத்துடன் மட்டக்களப்பில் வசந்தன் கூத்து, கொம்புமுறி, பொல்லடி ஆகியவை அரங்கக் கலைகளாகும். இவற்றின் பாடல்களும் நாட்டார் பாடல்களே.

**உபகதைக்குள் வரும் பாடல்கள்**

உபகதைக்குள் வரும் பாத்திரங்கள் தமது உரையாடல்களில் பாடல்கள் மூலம் பேசுவதாகக் கதைகள் உள்ளன (பார்க்க : மட்டக்களப்பு மாநில உபகதைகள்).

**காவியங்கள்+ கோவில் சடங்குப் பாடல்கள்**

கண்ணகியம்மன் குளுத்திக் காவியம், மாரியம்மன் குளுத்திக் காவியம் போன்றனவும், கிறிஸ்தவக் கோயில்களில் இயேசு சிலுவையில் அறையப்பட்ட நிகழ்ச்சிகளின்போது பாடப்படும் ஒப்பாரியும் இவ்வகையைச் சேர்ந்தனவாகும்.

**சிந்து வகைகள்**

இவற்றில் வழிநடைச் சிந்து, எண்ணெய்ச் சிந்து, காவடிச்சிந்து என்பன முக்கியமாகின்றன. கோவில்களுக்குக் கால்நடையாகச் செல்லும்போது வழிநடைச் சிந்தும், காவடியுடன் செல்லும் போது காவடிச்சிந்தும் பாடப்படும். அண்மைக் காலங்களில் புதிய நிகழ்ச்சிகளைப் பார்க்கப் போகும்போது பாடுவதற்காகவும் வழிநடைச் சிந்துகள் இயற்றப்பட்டுள்ளன. கல்லடிப் பாலம், கல்லோயா அணைக்கட்டு போன்றவற்றைப் பார்க்கச் செல்வதற்காக வழிநடைச் சிந்துகள் பாடப்பட்டுள்ளன. எண்ணெய்ச் சிந்து மாணவருக்குக் கல்வி வேண்டி வீடு தோறும் எண்ணெய் பெற்று செலவை ஈடுகட்டுவதற்காகப் பாடப்பட்டது.

**பழமொழிகள்**

சமூகத்தின் அனுபவ அறிவையும், அறிவுக்கூர்மையையும் காலங்காலமாக விளக்கிவரும் சிறுவாக்கியங்களைப் பழமொழிகள் எனலாம். இப்பழமொழிகள் உவமை கூறவும், ஒரு விடயத்தை

விளக்கவும் மற்றவர்களைத் திருத்தவும் எனப் பல்வேறு காரணங்களுக்காகப் பயன்படுத்தப்படுகின்றன. இந்தப் பழமொழிகள் விவசாயம் சார்ந்ததாக (வாழையடியைத் தாழவை, தாழையை மேலவை), சோதிடம் சார்ந்தவையாக (பரணியில் பிறந்தவன் தரணியாள்வான்), இயற்கை சார்ந்தவையாக (மார்கழி மாதம் மரமும் கொடுக்கும்), பொதுவான அறக்கருத்துக்கள் சார்ந்தவையாக (பாவக்கொட்டை போடச் சுரை முளைக்குமோ), புத்தி சொல்லுவனவாக (தனக்கடாச் சிங்களம் தன் பிடரிக்குச் சேதம்), உவமை கூறுகின்றனவாக (சுண்டங்காய் காற்பணம், சுமைகூலி முக்காற்பணம்) அமைவதைக் காணலாம். சில விரசமான பழமொழிகளும் வழக்கில் உள்ளன. இவை ஆண்களிடையே மட்டுமே வழங்கிவருகின்றன.

**விடுகதைகள் (நொடிகள்)**

இவை நொடிகள் எனவே இலங்கையில் வழங்கப்படும். கிராம மக்களிடையே பொழுதுபோக்குச் சாதனமாகவும் சிந்தனையைத் தூண்டும் கருவியாகவும் விடுகதைகள் விளங்கி வருகின்றன. மக்களிடையே காணும் ஒழுக்கம், அவர்கள் வழிபடும் தெய்வம், தொழில் முறைகள், சாதி வேறுபாடுகள் போன்ற யாவும் விடுகதைகளின் பின்னணியில் உணர்த்தப்படுகின்றன. மனித இனத்தின் சிந்தனைத் திறன் அளவிட்டு அறிவிக்கும் கருவியாக நிற்பதோடு மட்டுமின்றி மக்களின் செயல் முறைகள், பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள், சிந்தனைப் போக்கு, கொள்கைகள், கோட்பாடுகள் ஆகியவற்றை வெளிப்படுத்துவதன் மூலம் வரலாற்றுச்சான்றாகவும் விடுகதைகள் விளங்குகின்றன. இந்த விடுகதைகள் ஒரு சிறு அடியிலும் அமையும். நீண்ட அடியிலும் அமையும்.

உதாரணம் :

1. முட்டுவீட்டுக்கு தட்டுப்பலகை – நாக்கு

2. ஏறேறு சங்கிலி
இறங்கிறங்கு சங்கிலி
எட்டாத கொப்பெல்லாம்
தட்டிவா சங்கிலி – அணில்

இந்த விடுகதைகளும் பாடல் அமைப்பில் அமைவது முக்கியமாகும். விடுகதை இடுபவர்கள் போட்டியாகப் பாடுவதும் உண்டு. விடுகதையை அவிழ்ப்பவருக்குக் கொடுக்கப்படும் சன்மானம் பற்றியும் விடுகதைகள் கேலியாகக் கூறும்.

உதாரணம் :

**இந்த நொடி அவிட்டதக்கு**
**எட்டுக்கட்டு வெற்றிலையும்**
**எண்ணாயிரம் பாக்கும்**
**தொட்டுத் தின்னச் சுண்ணாம்பும்**
**அதுவும் போதாவிட்டால்**
**செட்டியார் வீட்டுப் பெட்டை நாயையும் கட்டித்தரலாம்...**

என அமையும்.

இலங்கையின் பலபாகங்களிலும் வழங்கும் விடுகதைகள் இன்னும் தொகுக்கப்படவில்லை. பத்திரிகைகளில் மட்டும் ஆங்காங்கே சில விடுகதைகள் வெளியிடப்படுவதையும் காணலாம்.

**இன்றைய நிலை**

இலங்கையில் நாட்டார் இலக்கியம் பற்றிய ஆராய்ச்சிகள் மிகக்குறைவாகவே நிகழ்ந்துள்ளன. 1980இல் யாழ்ப்பாணப் பல்கலைக்கழகத்தில் நிகழ்த்தப்பட்ட இலங்கைத் தமிழ் நாட்டார் வழக்கியல் பற்றிய கருத்தரங்கே இலங்கையின் நாட்டார் வழக்கியல் பற்றிய ஓரளவுக்கேனும் முழுமையான கருத்தரங்காகும். அவ்வப் பல்கலைக்கழக முதல்வருட மாணவர்கள் மூலம் பிரதேசங்களின் வாய்மொழி வழக்காறுகளைத் தொகுக்கும் ஒரு மரபும் யாழ்- பல்கலைக்கழகத்தில் இருந்தது. 1995இல் இந்து கலாசாரத் திணைக்களத்தால் நிகழ்த்தப்பட்ட கருத்தரங்கு தமிழக, இலங்கை நாட்டாரியல் பற்றிய கருத்தரங்காகும். இவை இரண்டுமே நாட்டாரியல் பற்றிய முக்கியமான கருத்தரங்குகள் ஆகும். இவை இரண்டிலும் வாசிக்கப்பட்ட கட்டுரைகள் நூல்களாக வெளிவந்துள்ளன (இலங்கைத் தமிழ்நாட்டார் வழக்கியல் 1980, பதி. கா. சிவத்தம்பி, தமிழ்நாட்டார் வழக்காற்றியல் 1995, பதி. க. சண்முகலிங்கம்). இவ்வகையில் ஈழத்து நாட்டார் பாடல்கள் எனும் இ. பாலசுந்தரத்தின் ஆய்வு நூலும் குறிப்பிடற்குரியது. இது மட்டக்களப்பு மாவட்ட நாட்டார் இலக்கியங்களை அமைப்பு ரீதியாக ஆய்வு செய்கின்றது.

இன்று பிரதேச சபைகள் தமது வெளியீடுகளில் அவ்வப்பிரதேச நாட்டார் இலக்கியம் பற்றிய கட்டுரைகளை வெளியிடுகின்றன (நானிலம், தேனகம் போன்ற சஞ்சிகைகள்). சில ஆய்வாளர்கள் தமது முயற்சியினால் தொகுப்பு நூல்களை வெளியிடுகின்றனர். பாடசாலை நூல்களிலும் இவை பற்றிய அறிமுகங்கள் செய்யப்பட்டுள்ளன.

பல்கலைக்கழகங்களில் நாட்டாரியல் ஒரு பாடமாக வைக்கப்பட்டுள்ளதுடன், பல்கலைக்கழக மாணவரிடையே நாட்டாரியல் பற்றிய ஆய்வுகளும் ஊக்குவிக்கப்படுகின்றன.

## இனிச் செய்யவேண்டியவை

நாட்டார் பாடல்கள், செவ்விலக்கியங்கள், எழுத்திலக்கியங்கள், சொல்லாத பல செய்திகளைச் சொல்லுவனவாகும். இலட்சிய மயப்படுத்தப்பட்ட வாழ்க்கை முறை, மற்றும் இடக்கரடக்கல் போன்றவற்றில் எழுத்திலக்கியம் அதிக கவனம் செலுத்துவது போல் நாட்டார் இலக்கியம் கவனம் செலுத்துவதில்லை. உதாரணமாக ஆணாதிக்க சமூகச் சிந்தனை எழுத்திலக்கியத்தில் மேலாதிக்கம் செலுத்தி நிற்கும். எனினும் இந்த நிலைக்கெதிராகப் பெண்கள் எதிர்த்துக்குரல் கொடுத்தல் நாட்டார் இலக்கியத்திற் காணப்படுகின்றது.

நாடுகளின்/இனக்குழுமங்களின் எழுதாத வரலாறுகள், சிந்தனை முறைகள், பழக்கவழக்கங்கள், பண்பாட்டு நடைமுறைகள், மொழிநடைகள் என்பவற்றைப் புலப்படுத்தும் நாட்டார் இலக்கியங்கள் முழுமையாக ஆராயப்படவேண்டும். இலங்கை முழுவதும் வழங்கும் பழமொழிகளோ, விடுகதைகளோ, உபகதைகளோ, பாடல்களோ இன்னும் முழுமையாகத் தொகுக்கப்படவில்லை. இவை முதலில் கவனத்துடன் நாட்டாரியல் பற்றிய அறிவுடன் தொகுக்கப்படல் வேண்டும். அவை அவற்றுக்குரிய இசையுடன் ஒலிப்பதிவு நாடாக்களில் (கசட்டில்) பேணப்படல் வேண்டும்.

அவ்வாறு தொகுக்கப்பட்ட பின்னரே தமிழ்நாட்டில் வழங்கும் நாட்டார் இலக்கியங்களுக்கும் இலங்கையில் வழங்கும் நாட்டார் இலக்கியங்களுக்குமிடையிலான ஒப்புமைகள் ஆராயப் படுவதுடன் இலங்கைக்கேயுரிய தனித்துவமான பண்புகளையும் இனங்காணமுடியும். மேலும் பிரதேசவாரியாகத் தொகுக்கப்படும் போது இலங்கைப் பிரதேசத்தின் தனித்துவங்களையும் ஒப்புமை களையும் இனங்காணமுடியும். அதன் மூலம் இந்தச் சமூகத்தின் உளவியலையும், சமூகவியலையும் அறிந்துகொள்வதுடன் புதிய இலக்கியங்களைப் படைக்க இவற்றைப் பயன்படுத்த முடியும்.

## உசாத்துணை நூல்கள்

1. லூர்து 1995, தமிழ் நாட்டார் வழக்காற்றியல் கட்டுரைத் தொகுப்பு, (பதி.) க. சண்முகலிங்கம், இந்துசமய கலாசார அலுவல்கள் திணைக்களம், கொழும்பு.

2. சிவத்தம்பி. கா., 1995, மேற்படி.

3. கைலாசபதி. க., 1968, Tamil Heroic Poetry, Clarinton press, Oxford.

4. - - - - - 1981, இலங்கைத் தமிழ் நாட்டார் வழக்காற்றியல், (பதி.) கா. சிவத்தம்பி, யாழ்ப்பாணம்.

5. பாலசுந்தரம். இ., 1979, ஈழத்து நாட்டார் பாடல்கள், தமிழ்ப் பதிப்பகம், சென்னை.

6. வித்தியானந்தன், சு., 1962, மட்டக்களப்பு நாட்டுப்பாடல்கள்

7. ஜெமீல், 1995, கிராமத்து இதயம்.

8. முத்துமீரான், 1997, கிழக்கிலங்கை முஸ்லீம்களின் நாட்டார் பாடல்கள், கல்முனை.

## மலேசியா

**வி. சபாபதி**

வாய்மொழி இலக்கியங்கள் தாம் தோன்றிய சமுதாயத்தின் வளர்ச்சியைக் காட்டும் சிறந்த கண்ணாடிகள் என்பர். அவ்வகையில் மலேசிய வாய்மொழி இலக்கியம் மலேசியத் தமிழர்களின் மலேசியச் சூழலிலான பண்பாடு, பழக்கவழக்கங்கள், வரலாறு, நாட்டு நடப்பு போன்றவற்றை உள்ளபடியே படம்பிடித்துக் காட்டும் கண்ணாடிகளாக அமைந்துள்ளன. அவை சமுதாயத்தின் வாழ்வியல் கூறுகளையும் உணர்ச்சிப் போக்குகளையும் வெளிப்படுத்தும் சிறந்த வாயில்களாகவே அமைந்துள்ளன.

மலேசியத் தமிழர்களுள் பெரும்பாலோர் தென்னிந்தியாவைச் சார்ந்தவர்கள் ஆவர். இவர்களின் முன்னோர்கள் தமிழகத்திலிருந்து இங்குக் குடியேறியவர்கள் ஆவர். எனவே, மலேசியத் தமிழ் வாய்மொழி இலக்கியத்தில் தமிழக வாய்மொழி இலக்கியத்தின் தாக்கமும் சாயலும் காணப்படுகின்றன. தமிழகம், மலேசிய வாய்மொழி இலக்கியங்களிடையே ஒருமைப்பாட்டுக் கூறுகளே மேலோங்கிக் காணப்படுகின்றன. மலேசியப் பின்னணி, வாழ்வியல் பிரச்சனை, வரலாற்றுச் செய்தி, மலேசியத்திற்கே உரிய பிறமொழிச் சொற்கள் ஆகியனவே இவ்வாய்மொழி இலக்கியத் திற்கு மலேசியத் தன்மையைத் தந்து மலேசியத் தமிழ் வாய்மொழி இலக்கியமாக ஆக்கியுள்ளது எனலாம்.

தமிழகத்தில் வாய்மொழி இலக்கியத்தினை ஒட்டிய சிந்தனைகளும் ஆய்வுகளும் இருபதாம் நூற்றாண்டில் ஐம்பதாம் ஆண்டுகளுக்குப் பின்னரே மெல்ல அரும்பி, எண்பதாம் ஆண்டுகளில் மலராகி மணம் பரப்பி வருகின்றது.[1] மலேசியாவைப் பொறுத்தவரையில் வாய்மொழி இலக்கியத்தை ஒட்டிய சிந்தனைகளும் ஆய்வுகளும் இருபதாம் நூற்றாண்டின் எழுபதாம் ஆண்டுகளின் இறுதிப்பகுதியில் அரும்பியது. அம்முயற்சிகளும் தனிநபர் முயற்சிகளாய் அமைந்து, தொடர்ச்சியாக இல்லாமல் உதிரிகளாகவே அங்கொன்றும் இங்கொன்றுமாகக் காணப்படுகின்றன. முழுமையான நிலையில் ஆய்வுகளும் அதற்கான ஒருங்கிணைப்பு முயற்சிகளும் இதுநாள் வரையில் ஏற்படவில்லை என்பது வருத்தத்திற்குரிய செய்தியாகும்.

வாய்மொழி எனும்போது அதில் பல்வேறு கூறுகள் அடங்கி யுள்ளன. பாடல்கள், கதைகள், நம்பிக்கைகள், விளையாட்டுகள், மருத்துவம், பழமொழிகள், விடுகதைகள் என வாய்மொழி இலக்கியத்தின் கூறுகள் பலவாறாகப் படர்ந்து விரிகின்றன. இவ்வளவு கூறுகளும் மலேசியத் தமிழ் வாய்மொழி இலக்கியத்திலும் உண்டு. ஆனால், அவை இதுவரையில் முழுமையாக ஆராயப் படாத நிலையில் வாய்மொழியாக அமைந்துள்ள நாட்டுப்புறப் பாடல்கள் மட்டுமே தனிநபர் முயற்சியில் திரட்டப்பட்டு தொகுக்கப்பட்டுள்ளன.[2] எனவே, இங்கு மலேசிய நாட்டுப்புறப் பாடல்கள் மட்டுமே விளக்கப்படுகின்றன.

மலேசியத் தமிழ் இலக்கியத்தின் தொடக்கம் கல்வியறிவற்ற உடலுழைப்புத் தொழிலாள வர்க்கத்தின் வாய்மொழி இலக்கியமான நாட்டுப்புறப் பாடல்களாகவே அமைந்துள்ளன என்பர்.[3] கல்லாமல் கவிபாடும் திறன் பெற்றிருந்த தோட்டப்புற மக்கள் பல்வேறு சூழல்களுக்குப் பொருத்தமாகவும் ஏற்பவும் நிறைய நாட்டுப்புறப் பாடல்களைப் பாடியுள்ளனர். குடும்பம், சமுதாயம், அரசியல் உள்ளிட்ட பல நிலைகளிலும் தங்கள் அனுபவத்தை வெளிப்படுத்திப் பாடியுள்ளனர்.

### குடும்பம்

குடும்ப அளவில் காணும்போது காதல், தாலாட்டு, உறவுகள், ஒப்பாரி போன்றவற்றில் தங்கள் அனுபவங்களைப் பாடிவைத்துள்ளனர். காதலைப்பற்றிப் பாடும்போதுகூட மலேசியத் தமிழர்கள் இங்குப் பட்டபாட்டினை விளக்கி நிற்கின்றனர்.

"இந்தியர்கள் ஷியாமுக்குப்
போனதால அவர்
கண்கலங்கி வாடுகின்றார்
அடிப்பாக்க பகட்டுதடி
பம்பரம்போல சுழலுதடி
கேக்க பயம் ஆகுதடி
உன் கிளிமூக்கு மாம்பழத்தை
உன்னை எண்ணி நானே
உருகுகிறேன் மானே"

(மலேசிய நாட்டுப்புறப் பாடல்கள், ப. 64)

என்று ஜப்பானியர் ஆட்சியில் மரண ரயில் பாதை அமைக்கச் சயாம் சென்ற காதலன் அங்குக் காதலியின் பிரிவிலும் ஏக்கத்திலும் பாடுவதாக அமைந்துள்ள இப்பாடல் உள்ளத்தை நெருடுகின்றது.

குழந்தைகளுக்குப் பாடியுள்ள தாலாட்டுப்பாடல்களில் மிகுதியும் தமிழகத்தின் தாக்கமே வெளிப்படுகின்றது.

"ராரரா ராரிரோ கண்ணே ராரரோ
மதுரையில் நல்ல மலர்
மாதுளம் பூக்கு மரம்
மதுரை நகர் இருக்க
மருதி வந்த கானகமே!

.......................................................

பாட்டி அடித்தாரோ
பால் வார்க்கும் சங்கால
கண்ணே அழுத கண்ணுநீர் தளும்ப"

(மலேசிய நாட்டுப்புறப் பாடல்கள், ப. 94)

சமூகம்

தோட்டப்புறச் சூழ்நிலையில் தங்கள் மனத்துயர் சூழ்ந்த அவல வாழ்க்கையை வாய்மொழிப் பாடல்கள் வெளிப்படுத்தியுள்ளதனை அதிகமாகவே காணமுடிகின்றது.

"கரடிகள் புலிகள் வாசம் செய்யும்
மலாய் நாட்டில் – பெண்கள்
கட்டிய புருஷனை விட்டுப்பிரிந்து
கலங்குகிறார் மண்மேட்டிலே ....."

"பாலுமரம் வெட்டலான்னு
பழைய கப்பல் ஏறி வந்தோம்

நாப்பத் தஞ்சு காசுபோட்டு
நட்டெலும்ப கழட்டுறானே
முப்பத்தஞ்சு காசுபோட்டு
மூக்கெலும்ப கழட்டுறானே"

(மலேசிய நாட்டுப்புறப் பாடல்கள், ப. 7, 19)

**கங்காணிகள்**

தோட்டப்புற வாழ்வில் தோட்ட நிர்வாகத்தினரின் ஏஜென்டாகவும் கையாளாகவும் இருந்து தமிழ் மக்களைத் தமிழகத்திலிருந்து ஓட்டிவந்த பெருமை கங்காணிகளுக்கே உரியது. அந்தக் கங்காணிகளால் ஏமாற்றப்பட்டதையும் வஞ்சிக்கப்பட்டதையும் வாய்மொழிப் பாடல்களாகத் தோட்ட மக்கள் சொல்லிவைக்கத் தவறவில்லை.

"கங்காணி கங்காணி
கருப்புச்சட்டை கங்காணி
ஜோடிமட்டம் போட்டுக்கிட்டான்
திருட்டுக் கங்காணி
. . . . . . . . . . . . . . . . . .
சீம பக்கம் போகலாம்னு
சீனங் கப்பல்ல ஏத்தி வந்து
வெள்ளைக்காரன் கப்பல்ல
என் சின்ன கங்காணி
நீ வேடிக்கை பண்ணறீயே
. . . . . . . . . . . . . . . . . . .
வந்த வெளிச்சமாம்
வந்த இலக்கிலே
உங்கதை வெளிச்சமாயிடுச்சு. . . . "

"கங்காணிமார் செய்யும் கொடுமையிலே
கதறுகிறோம் கித்தா மரத்திலே!
மரத்தில் உடனே காயம் பட்டால்
அறைந்திடுவார் ஒரு அறையிலே"

"தாய்தகப்பன் தெரியாமலே
தந்திரமாக நம்மள கப்பல்ல ஏத்தி
கொண்டு வந்த பாவி – இங்க
கட்டிப்போட்டு அடிக்கிறான்டா பாவி"

(மலேசிய நாட்டுப்புறப் பாடல்கள், ப. 52, 55, 60)

**ஜப்பானியர் ஆட்சியின் அலங்கோலம்**

இரண்டாம் உலகப்போரின்போது ஜப்பானியரின் கொடுங்கோல் ஆட்சி அன்றைய மலாயாவில் தலைவிரித்தாடியது. அப்பொழுது மலாயாத் தமிழர்கள் குறிப்பாகத் தோட்டப்புறத் தமிழர்கள் பட்ட துன்பங்களுக்கு எல்லையே இல்லாமல் போயிற்று. 'சயாம் மரண ரயில்பாதை' அமைக்க அவர்கள் உற்றார் உறவினர்களையும் விட்டு, ஆடுமாடுகள் போல் சயாம் கொண்டு செல்லப்பட்டதும் அங்கு மோசமாக நடத்தப் பட்டதும் உணவின்றியும் நோயினாலும் லட்சக்கணக்கில் இறந்து போனதும் வரலாற்று ஏடுகளில் படிந்துவிட்ட கண்ணீர்க் கதைகளாகும். அவற்றை வாய்மொழியாகப் பாடல்கள் பலவற்றில் சொல்லி வைத்துள்ள பாங்கு மெய்சிலிர்க்க வைக்கின்றது.

"சீயாமுக்குப் போன இந்தியர்கள்
ஆறுலட்சம் பேரு
மீந்துமீதி இருப்பவங்க
ரெண்டு லட்சம் பேரு – அய்யா
ரெண்டு லட்சம் பேரு"

(மலேசிய நாட்டுப்புறப் பாடல்கள், ப. 30)

ஜப்பானியரின் கொடுமையான தோற்றமும் இரக்கமற்ற தன்மையும் நடவடிக்கைகளும் பல வாய்மொழிப் பாடல்களில் வெளிப்பட்டுள்ளன.

"கெட்டப்பய ஜப்பான்காரன்
எமநாதன் வந்துட்டான்
இந்த ஏழைமக்களைக் கொல்வதற்கு
. . . . . . . . . . . . . . . . . . . . . . .
மொட்டையை அடிச்சுகிட்டுக் கட்டையா
இருப்பான் கம்மனாட்டி ஜப்பான்காரன்"

(மலேசிய நாட்டுப்புறப் பாடல்கள், ப. 33)

என்று பாடும்போது ஜப்பானியர் மீதிருந்த அளவுகடந்த வெறுப்பை அறிய முடிகின்றது. சயாம் சென்ற தமிழ்மக்களின் கொடுமையான அனுபவங்கள் பல வாய்மொழிப் பாடல்களில் வெளிப்பட்டுள்ளன.

"மக்களைப் பிரிந்தோம்
துக்கமடையிறோம்
மாதா, பிதா மலாய் நாட்டிலே . . . .
தப்பித்துப்போக வழி தெரியாம

எப்படிப் பிழைப்போம் காட்டிலே - அங்குச்
குளிரறியோம் - சீயம் நாட்டிலே
கட்டத் துணியில்லாம கஷ்டப்படுகிறோம்
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
கல்லும் மண்ணும் கலந்த அரிசியும்
கழுவாமே போட்டாக்குவார் - அய்யா
சோத்தில் புழுவைப் பார்த்திடுவார் - சிலர்
சொல்லாம அள்ளி சாப்பிடுவார்"

(மலேசிய நாட்டுப்புறப் பாடல்கள், ப. 13)

ஜப்பானியர்கள் சயாமில் இந்தியர்களைக் கொல்வதை ஒரு விளையாட்டாகக் கொண்டிருந்த விபரீதத்தையும் வாய்மொழிப் பாடல்களில் அறிந்துகொள்ள முடிகின்றது.

"ஆத்து ஓரம் மரத்து மேலே
ஆளையும் ஏத்தி
ஜோடியாய் நின்று - ரம்பம்
வாளையும் கொண்டு
மரம் முறிந்து ஆத்தில்விழ
மாண்டு போகிறார் - இந்தியர்கள்
நீதப் போகிறார்
மதிப்புடனே நிப்பானியர்
மனங் களிக்குறார்"

(மலேசிய நாட்டுப்புறப் பாடல்கள், ப. 29)

## இந்தியப் பற்று

மிகுதியாக மலேசியத் தமிழர்கள் வாழ்வது மலேசியாவாக இருந்தாலும் தங்களின் பூர்வீக நாட்டைப் பற்றியும் அதன் உயர்வு தாழ்வு பற்றியும் மறவாமல் வாய்மொழிப் பாடல்களில் பாடிவைத்துள்ள பாங்கு சிறப்பிற்குரியது. தமிழ்நாட்டு அரசியல், இந்தியத் தந்தை காந்தி, அவர்தம் கனவு, நேதாஜி, இந்திய நாட்டின் விடுதலை போன்றவற்றைப் பரவலாகப் பாடி இந்திய நாட்டின் மீது அவர்களுக்கிருந்த அக்கறையையும் பற்றையும் புலப்படுத்தியுள்ளனர்.

"மாநிலத்தில் பிறந்த
மகிமனாம் காந்தி
மாநிலத்தார்க் குழைத்தார்
வன்மை சொல் காந்தி"

"எங்குச் சென்றார் நேதாஜி
ஏழை மக்களின் விசுவாசி
பங்கம் இல்லா சுதேசி
பாரதத் தாயைப் பூசி"

(மலேசிய நாட்டுப்புறப் பாடல்கள், ப. 283)

சமயம்

தமிழர்களின் வாழ்வியலோடு இரண்டறக் கலந்த ஒன்று சமயம். இதற்கு மலேசியத் தமிழர்களும் விதிவிலக்கன்று என்பதற்குச் சமயத்தை உள்ளீடாகக் கொண்டு வெளிவந்துள்ள வாய்மொழிப் பாடல்களே தக்க சான்றுகளாகும்.

"பிள்ளையார் எங்க பிள்ளையார்
அவங்க எங்க பிள்ளையார்
கத்தரித் தோட்டத்தில் களக்
கொத்துராறாம் எங்க பிள்ளையார்
வாழக்காத் தோட்டத்தில களக்
கொத்துராறாம் எங்க பிள்ளையார்
அங்கையும் போய்ப் பார்த்தா
எங்கேயும் பிள்ளையார்"

(மலேசிய நாட்டுப்புறப் பாடல்கள், ப. 273)

மகிழ்ச்சியான தருணங்கள்

வெறும் பிரச்சினைகள் மட்டுமே வாய்மொழிப் பாடல்களில் காணப்படவில்லை. வாழ்க்கையின் மகிழ்ச்சியான தருணங்களின் போது வேலையிடங்களிலும் வீடுகளிலும் கூட்டமாய்க்கூடி ஆடிப் பாடுகின்றநிலையில் வாய்மொழிப் பாடல்கள் பிறந்துள்ளதனைக் காணமுடிகின்றது. கும்மி, கூத்து, தொழிற்களம், விடுகதை என மலேசிய வாய்மொழிப் பாடல்கள் பரந்து விரிந்துள்ளன.

"கும்மியடி பெண்ணே கும்மியடி
இனிக் கோளாறு சொல்றன் கும்மியடி!
கோளாறு கேட்டுக் குனிஞ்சு நின்னு
கும்மியடி கோளாறு பண்ணிகிட்டு!
இன்னும் கேளுங்கடி!"

(மலேசிய நாட்டுப்புறப் பாடல்கள், ப. 242)

### முடிவுரை

மலேசிய வாய்மொழிப் பாடல்கள் பல்வேறு துறைகளையும் சூழல்களையும் உள்வாங்கிய நிலையில் தோன்றியுள்ளன. இவை மலேசியத் தமிழர்களின் வாழ்வியலை உள்ளபடியே அறிவிக்கும் அனுபவக் கருவூலங்களாகத் திகழ்கின்றன. உணர்ச்சிப் போக்கை மிகுதியாகக் கொண்டிருக்கும் இவ்வாய்மொழிப் பாடல்களில் இயல்பாக மலேசிய மண்ணின் மணம் வீசுவதை அனுபவித்து மகிழலாம்.

### அடிக்குறிப்புகள்

1. சக்திவேல். சு, நாட்டுப்புற இயல் ஆய்வு, மணிவாசகர் பதிப்பகம், சென்னை 1, (திருத்திய பதிப்பு) 1992, முன்னுரை
2. தண்டாயுதம். இரா, மலேசிய நாட்டுப்புறப் பாடல்கள், தமிழ்ப் புத்தகாலயம், சென்னை 17, (முதற்பதிப்பு) 1998.
3. இந்திய ஆய்வியல் துறை, மலேசியத் தமிழ்க்கவிதைக் கருத்தரங்க மலர், மலாயாப் பல்கலைக்கழகம், கோலாலம்பூர், (முதற்பதிப்பு) 1988, ப. 15.

## சிங்கப்பூர்

சுப. திண்ணப்பன்
ஆ.ரா. சிவகுமாரன்

சிங்கப்பூர் நகர்மய வளர்ச்சி கண்ட நாடாகையால் இங்கு நாட்டுப்புறச் சூழல் மறைந்தும் மறக்கப்பட்டும் வரும் நிலையையே காண முடிகிறது. தொடக்கக் காலத்தில் குடியேறிய மக்கள் ஆங்காங்கே தெருக்கூத்துகள் நடத்தியும், சிந்து போன்ற நாட்டுப்புறப் பாடல்களைப் பாடியும் வந்திருக்க வாய்ப்புண்டு. குதிரைப் பந்தய லாவணி, புத்தர் ரேசுகோர்ஸ் ரோட்டு வழிநடைச் சிந்து முதலிய நூல்கள் இவற்றை வலியுறுத்துகின்றன. மாரியம்மன் கோவில் தீமிதித் திருவிழாவின்போது ஆண்டுதோறும் பெரிய எழுத்து மகாபாரதம் படிக்கப்பட்டு வருவது ஒரு வழக்கமாகப் பல்லாண்டு களாக இருந்து வருகின்றது. மன்மதன் எரிந்த காட்சி, எரியாத காட்சி லாவணிப் பாடல்களும் ஒரு காலத்தில் பாடப்பட்டதாக அறிகிறோம்.

# குழந்தை இலக்கியம்

## தமிழகம்

இராம. குருநாதன்

குழந்தை இலக்கியம் உலக மொழிகள் எல்லாவற்றிலும் உண்டு. இவ்வகை இலக்கியம், தொன்மையான வரலாறு உடையது. வாய்மொழி இலக்கிய மரபில் இது தோன்றியது. குழந்தைகளுக்கு இனிமை ஊட்டும் கலைகளில் இதுவும் ஒன்று. குழந்தைகளின் உலகைப் புரிந்துகொண்டு அவர்களின் மன வளர்ச்சிக்கும் அறிவுத்திறத்திற்கும் நல்ல உணர்வுகளுக்கும் ஏற்ற வகையில் பயனுறுமாறு குழந்தை இலக்கியம் உருவானது. குழந்தை இலக்கியம் என்ற இலக்கிய வகை, தனி ஒரு துறையாகப் பிற்காலத்தில் தோன்றியதெனினும், அதற்கென்று உரிய கூறுகள் பண்டைய நூல்களில் உள்ளன.

குழந்தைக்கான பாடல்கள் வாய்மொழி மரபின, எனினும் தமிழின் முதல் நூலெனக் கருதத்தகும் தொல்காப்பியத்தில் இவ்வகை இலக்கியத்திற்கான ஆக்கக்கூறுகள் காணக் கிடைக்கின்றன. சங்க நூல்களிலும், பிற்கால நூல்களிலும் குழந்தைப் பருவத்தை முன்னிலைப்படுத்திய பாடல்கள் உள்ளன. சிற்றிலக்கியங்களில் ஒன்றான பிள்ளைத்தமிழ், மக்களுள் சிறந்தாரையும், தெய்வத்தையும் குழந்தையாகப் பாவித்துப் பாடும் மரபு கொண்டது. குழந்தைகளுக்கு அறம் உரைப்பதுபோலச் சிறுசிறு வாக்கியங்களில் பாடப்பெற்ற பழைய மரபும் இருந்துள்ளது.

குழந்தை, பள்ளியில் சேருவதற்கு முன்பாகவே கதை, பாட்டு முதலியவற்றைக் கேட்கும் பழக்கத்தைப் பாட்டி, தாத்தா, அம்மா, அப்பா வாயிலாகப் பெறுகிறது. குழந்தைகள் மகிழ்ச்சி யூட்டும் செய்திகளையும், வியப்பூட்டும் செய்திகளையும் விரும்புகிறார்கள். குழந்தைகளுக்கான கதைகளும் பாடல்களும் பாட்டிக் கதைகளாக, நாடோடிப் பாடல்களாக, குழந்தைகளுக்கு உணவு ஊட்டும்பொழுதும், உறங்கவைக்கும் பொழுதும் சொல்லப்பட்டு வந்த மரபு வாழையடி வாழையாக வளர்ந்து வந்திருக்கிறது.

சிறுவர்க்கான கவிதை, கதை, நாடகம், கட்டுரை ஆகியன தனித்தனியாக வளர்ச்சிகண்டன. இவை சிறுவர் உள்ளங்களைச் செம்மைப்படுத்தும் சீரிய பணியாகச் செழுமையுறத் தொடங்கின.

குழந்தைப் பாடல்களின் தொடக்கம் நாட்டுப்புறப் பாடல்களின் வழியே அரும்பியது. பண்டைக்காலத்தில் ஔவையாரின் ஆத்திசூடி, கொன்றைவேந்தன் முதலியனவும், அதிவீரராம பாண்டியரின் வெற்றிவேற்கையும், உலகநாதரின் உலகநீதியும் சிறுவர் பாடல்களுக்கான முன்னோடிகளாகும். இவை போன்ற நூல்களின் கருத்துகள், குழந்தை இலக்கிய உருவாக்கத்திற்குத் துணையாக இருந்துள்ளன. இவை சிறார்களுக்கும் பெரியவர்களுக்குமான அறிவுரைகளைக் கொண்டமைந்தவை.

சின்னஞ்சிறுவர்க்கென்று வயது குறிப்பிட்டு முதன்முதலில் பாடப்பட்ட பாடல் 'பால்ய பிரார்த்தனை' என்பதாகும். இது இரட்சண்ய யாத்திரிகத்தை இயற்றிய எச்.ஏ. கிருஷ்ணப் பிள்ளையால் 1879இல் இயற்றப்பட்டது. இது இயேசுவின் மலைச் சொற்பொழிவையும் விவிலியக் கருத்தையும் உள்ளிட்டதாகும். இரட்சண்ய மனோகரம் என்ற அவரது நூலில் பால்ய பிரார்த்தனை அந்நூலின் தொடக்கத்தே ஒரு பகுதியாக அமைந்துள்ளது.

> **"இந்தச்சிறு பாடல்கள் ஐந்து வயதுள்ள**
> **சிறு குழந்தைகள் உள்ளத்திலும் பதியத்தக்க**
> **இயற்சொற்களால் தெளிவான பொருளுள்ளதாகச்**
> **சிறுகவிகளால் இயற்றப்பட்டுள்ளன".**

எனச் சுட்டிக்காட்டியிருப்பது குழந்தைப் பாடல்களுக்கானத் தன்மையை உணர்த்துகிறது.

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளையும், பாரதியாரும் சிறுவர்க்கான பாடல்களை எழுதினார்கள். 1901இல் கவிமணி சிறுவர் பாடலை எழுதினார். இதன் பின்னர் சுமார் பதினான்கு ஆண்டுகள் கழித்துப் பாரதியார் 'பாப்பா பாட்டைப்' பாடினார். அதனை ஞானபானு இதழில் வெளியிட்டார். குழந்தைப் பாடல்களைத் தமிழகத்தே தொடங்கிவைத்த பெருமை கவிமணியைச் சாரும். கவிமணி தாம் எழுதிய சிறுவர்க்கான பாடல்கள் சார்ந்த மலரும் மாலையும் என்னும் நூலில்,

**'செந்தமிழ் நாட்டுச் சிறுவர் சிறுமியர்க்கு**
**இந்தநூல் உரியதாய் என்றும் வாழ்கவே'**

எனப் பாடியிருப்பது நோக்குதற்கு உரியது. குழந்தைகள் பாடி மகிழும் இலக்கியமாக அமைந்தது கவிமணி காலத்திலிருந்துதான் தொடங்கியது எனலாம். அவர் பணியாற்றிவந்த நாஞ்சில் நாட்டுப் பள்ளிக்கூடங்களில் மலையாளப் பாடல்கள் கற்பிக்கப்பட்ட காரணத்தால், நல்ல தமிழ்ப் பாடல்களைக் குழந்தைகளுக்குத் தரவேண்டும் என்ற சிந்தனை குழந்தைப் பாடல்களை எழுதத் தூண்டியது. குழந்தைகளோடு குழந்தையாக இருந்து இன்புற்றுப் பாடும் சூழ்நிலையை அவருக்குத் தந்தது. 'தோட்டத்தில் மேயுது வெள்ளைப் பசு -ஆங்கே துள்ளிக் குதிக்குது கன்றுக்குட்டி' போன்ற காட்சி அருமையுடன் எளிய நடையோடும் ஓசை நயத்தோடும் கூடிய பாடல்கள் பல அவரது தனித்தன்மையைக் காட்டும்.

பாரதி பாடிய பாப்பாப் பாட்டும் புதிய ஆத்திசூடியும் ஏனைய சில குழந்தைப் பாடல்களும் சிறியவர்களுக்கு அறிவுரை சொல்வது போன்று அமைந்த பாடல்கள். எனினும் பெரியவர்க் கான செய்திகளும் இவற்றில் அடங்கும். இளைஞர்கள் எழுச்சி கொள்வதற்கும், அறிவு பெறுவதற்குமான கருத்துகள் பலவற்றைப் புதிய ஆத்திசூடி உணர்த்துகிறது.

கவிமணி, பாரதி ஆகிய இருவரும் குழந்தை இலக்கியத்தைப் பரவலாக்கிய பெருமைக்குரியவர்கள். இத் துறையில் இவர்கள் முன்னோடிகள். பாரதிதாசன் பகுத்தறிவுக் கருத்துகள் வழிக் குழந்தைகளுக்கு அறிவூட்டும்படியான பாடல்களை எழுதியவர். கல்வியின் இன்றியமையாமை, மூடநம்பிக்கை ஒழிப்பு, சாதி எதிர்ப்பு முதலிய கருத்துகளை அவர் பாடிய மழலையர் பாடல்களில் காணலாம். அவர் பாடிய தாலாட்டுப் பாடல்கள் சமுதாயச் சீர்திருத்தத்தை உள்ளிட்ட தாகும். பாரதிதாசன் புதிய புதிய சந்தங்களில் சிறுவர் பாடல்களைப் பாடியவர்களுள் முன்னோடி. ஈற்றெதுகை முறையைப் பாடல்களில் முதன்முதலாகப் புகுத்தியவர் இவர். கீர்த்தனை போன்று இசைப்பாடல்களை அமைத்துத் தந்து சிறுவர் பாடல்களுக்கு மெருகு ஊட்டியவர்.

சுத்தானந்த பாரதி, நாமக்கல் கவிஞர், வாணிதாசன், தமிழ் ஒளி முதலியோர் குழந்தைக்கான பாடல்களை இயற்றியவர் களாவர். குழந்தை இலக்கியத்தை - குறிப்பாகக் கவிதைகளைப்

பாடநூல்களில், முதன்முதலாகப் புகுத்தி அம்மரபை வளர்த்தவர்களில் குறிப்பிடத்தக்கவர்களாகக் கா. நமசிவாய முதலியார், மணிமங்கலம் திருநாவுக்கரசு முதலியார், மயிலை சிவமுத்து ஆகியோரைக் கருதலாம். தனித்தனியாகக் குழந்தைப் பாடல்களை வெளியிடும் மரபு நாற்பதுகளில் தோன்றியது. குழந்தைப் பாட்டு (மு.வ.), இசையமுது (பாரதிதாசன்), மலரும் உள்ளம் (அழ. வள்ளியப்பா), குழந்தை இலக்கியம் (தமிழண்ணல்) ஆகிய நூல்கள் அக்காலகட்டத்தே தோன்றின.

பள்ளிகளிலும், கல்லூரிகளிலும் பணிபுரிந்துவந்த அந் நாளைய தமிழாசிரியர்கள் சிலர் பாடநூல்களில் குழந்தைப் பாடல்களை எழுதி வந்தனர். பாடப் புத்தகங்கள் வழிக் குழந்தைகளுக்கு அறிமுகமானவர்கள் பலர். இம்மரபு பின்னாளிலும் தொடர்ந்தது. இதற்கிடையே இதழ்கள் வழி மேலும் பலர் உருவாகிக் குழந்தை இலக்கிய வரலாற்றில் குறிப்பிடத்தகுந்த இடத்தைப் பெற்றனர். குழந்தைகளுக்கான இதழ்கள் வளர்ச்சி கண்டன. குழந்தைக் கவிஞர் என்று சுட்டிக்காட்டும் அளவிற்குப் புகழ்பெற்றிருந்தவர் அழ.வள்ளியப்பா. தமிழ்வாணன் 'அணில்' என்னும் குழந்தைக்கான இதழில், அழ.வள்ளியப்பாவைக் குறிப்பிடும்போது 'குழந்தைக் கவிஞர்' என்றே அழைத்தார். அழ. வள்ளியப்பாவிற்கு அச்சிறப்புப் பெயரே நிலைத்தது. குழந்தைக் கான கவிதைகள், கதைகள், நாடகங்கள் எனப் பல இலக்கிய வடிவங்களில் குழந்தைகள் இன்புற்று மகிழத் தொடர்ந்து எழுதிவந்தார். குழந்தை எழுத்தாளர் சங்கத்தைத் தோற்றுவித்த பெருமை இவரைச்சாரும். இவர் எழுதிய 'மலரும் உள்ளம்' என்ற கவிதைத் தொகுதி சிறப்பான நூலாகும்.

அழ.வள்ளியப்பா வழியில் குழந்தைப் பாடல்கள் எழுதியோர் பலர். இயற்கைக் காட்சிகள், வீட்டில் வளர்க்கும் அன்பு விலங்குகள், நாட்டுப்பற்று, மொழிப்பற்று, நாட்டுத் தலைவர்கள், அறிவியல் உண்மைகள், நல்ல பண்புகள், ஒழுக்கங்கள், திருவிழாக்கள் முதலிய பொருண்மைகளைப் பாடல்களில் அமைத்துப் பாடியுள்ளனர். குழந்தைக் கவிஞர் என்றழைக்கப்படும் மரபில் வந்த நாரா. நாச்சியப்பன் (சிறுவர் பாட்டு), பூவண்ணன், அ.கி. பரந்தாமனார் (எங்கள் தோட்டம்), பெ. தூரன் (ஆனையும் பூனையும்), மின்னூர். சீனிவாசன் (வண்ண வண்ண மீன்கள்), தமிழழகன் (மழலை அமுதம்), பூவை அமுதன் (நிலாப்படகு), தம்பி சீனிவாசன் (சிவப்பு ரோஜாப்பூ), புவனை கலைச்செழியன் (பாட்டுப் புதையல்), லெமன் (கொக்கரக்கோ),

குழ. கதிரேசன் (எலி கடித்த பூனை), திருச்சி வாசுதேவன் (பட்டுக்குடை) முதலியோர் குறிக்கத் தகுந்தவர் ஆவர். குழந்தைப் பாடல்களை எழுதுவதுமட்டுமன்றி, அவற்றை ஒலிநாடாவில் குழந்தைக்கு ஏற்ற வண்ணம் இசையமைத்து வெளியிட்டதில் முன்னோடியாகத் திகழ்பவர் குழ. கதிரேசன் ஆவார்.

கதை இலக்கியம் குழந்தை இலக்கியத்தில் பெரும்பங்கு வகிப்பதாகும். கதை கேட்கும் ஆர்வம் சிறுவர்களிடத்து மிகுதி. அவர்கள் கற்பனையில் மூழ்கித் திளைத்தற்குக் கதை நிகழ்ச்சிகள் காரணமாவன. 1788இல் கொழும்பு நகரில் சிறுபிள்ளைக் கதை என்னும் நூலைப் பிரோன்ஸ் வெல்ட் என்பவர் வெளியிட்டதாகத் தெரிகிறது. 'நாலுமந்திரி கதை', 'பன்னிரண்டு மந்திரி கதை' என்பவை 1853இல் வெளிவந்தன. இதே ஆண்டில் ஏ.திருவேங்கடம் பிள்ளை என்பவர் ஈசாப் கதைகளை மொழிபெயர்த்துக் கட்டுக்கதைகள் என்னும் பெயரில் வெளியிட்டார். கதாசிந்தாமணி என்ற கதைத் தொகுதி 1867இல் உசேன்கான் என்பவரால் தொகுக்கப்பட்டு நூலாக வெளிவந்தது. ஜான் மர்டாக் என்னும் பெரியார் 1890இல் தொடங்கிய கிறித்தவ இலக்கியச் சங்கம், விவிலியம் தொடர்பான கதைகள், வாழ்க்கை வரலாறுகள் முதலியவற்றைச் சிறுவர்க்காகத் தொடர்ந்து வெளியிட்டு வந்துள்ளது. ஆங்கிலம், தமிழ், தெலுங்கு, மலையாளம் ஆகிய நான்கு மொழிகளில் இக்கழகம் வெளியிட்ட சிறுவர் நூல்கள் வரவேற்பைப் பெற்றிருந்தன. இக் கழகம் குறைந்த விலையில் நிறைய படங்களை வெளியிட்டது. 1889இல் பண்ணுருட்டி சி.கோவிந்தராஜா என்பவர் 'சிறுவர்க்கான கதைகள்' என்னும் தொகுப்பை அளித்துள்ளார். பண்டித நடேச சாஸ்திரி, சென்னைப்பாடப் புத்தக இலக்கியக் கழகத்தின் வழி, 'திராவிட பூர்வ காலக் கதைகள்' என்னும் நூலை வெளியிட்டார். குமாரசாமி நாயுடு சன்ஸ் சிறுவர்க்கான கதை வரிசைகளை வெளியிட்டனர். புராண, வரலாற்றுத் தொடர்பான கதைகளைப் பலவேறான வடிவங்களில் வெளியிட்ட காலம் இது. 1917இல் அ. மாதவையா பால விநோதக்கதைகள் என்னும் தொகுப்பு நூலை வெளியிட்டார். சிறுவர்கள் விரும்பிப் படித்தற்கு ஏற்றவகையில் படங்களோடு கூடிய வியத்தகு கதைகளைச் சைவ சித்தாந்த கழகம் வெளியிட்டு வந்தமை குறிப்பிடத்தக்கது. கழகக் கதைக் கொத்து, இன்சுவைக் கதைகள், கதை இன்பம் முதலியன இவ்வகையில் குறிப்பிடத்தக்கன.

குழந்தை எழுத்தாளர் சிலர் கதை எழுதுவதில் தங்கள் திறமையைப் பல வகைகளிலும் வெளிப்படுத்திக் குழந்தைகளுக்குப் படிக்கும் ஆர்வத்தைத் தூண்டினர். வீரதீர செயல்களில் மருட்கைச்

சுவை தரக்கூடிய கதைகள் சிறுவர்களிடம் வரவேற்பைப் பெற்றிருந்தன. குழந்தைகளுக்கான கதைகளில் அஃறிணை உலகம் பேசும்; பறவைகளும், விலங்குகளும் எழுகடலைத் தாண்டிச் சென்று அற்புதங்களை நிகழ்த்தும்; நன்மை செய்வோருக்குத் துணை நின்று உதவி செய்வதும், தீங்கு புரிவோர்க்கு எவ் வகையிலேனும் தண்டனை அளிப்பதுமான போக்குகளைப் படித்து மகிழ்வதில் சிறுவர்களுக்கு ஆர்வ நாட்டம் இருந்தது. அரக்கர் உலகம், வேதாள உலகம், கடவுளர் காட்சி போன்றவை சிறுவர்களின் கதை படிக்கும் ஆர்வத்தை மேலும் வளர்த்தன.

அரபுக் கதைகள், ஆண்டர்சன் கதைகள், அப்பாஜிக் கதைகள், பீர்பால் கதைகள், தெனாலிராமன் கதைகள், மரியாதை ராமன் கதைகள் போன்றவை தழுவலாகவும் மொழிபெயர்ப் பாகவும் வெளிவந்து தமிழ்ச் சிறுவர் உலகை மகிழ்ச்சிக் கடலில் திளைக்கச் செய்தன. கற்பனை கடந்த அற்புதக் கதைகள் விரும்பிப் படிக்கப்பட்டன. மேலை நாட்டுக் கதைகள் சில மொழிபெயர்ப் பாகத் தமிழில் வெளிவந்தபோது வியத்தகு அருஞ்செயல்களும், தனிப்பட்ட சிறுவர் வாழ்வின் அவலங்களும் தங்களுக்குரியதென எண்ணியதால் அவை சிறுவரிடையே வரவேற்பைப் பெற்றன. டேனியல் டிபோ எழுதிய ராபின்சன் குருசோ, ஜொனாதன் ஸ்விப்ட் எழுதிய கலிவரின் யாத்திரைகள், லூயிஸ் ஸ்டீவன்சன் எழுதிய புதையல் தீவு மற்றும் சார்லஸ் டிக்கன்சன் எழுதிய ஆலிவர் டுவிஸ்ட் முதலியவை இதற்குச் சான்றுகளாக உள்ளன.

சிறுவர்க்குரிய சிறுகதைகள் நெடுங்கதையாக - புதினமாக மெல்ல அரும்பியது. பெரியவர்களுக்கு எழுதிவந்த புதின ஆசிரியர்கள் சிறுவர்களுக்காகவும் புதினம் எழுதிவந்தனர். தொடக்கத்தில் கட்டுக் கதைகளான விக்ரமாதித்தன் கதை, மரியாதை ராமன் கதை, பஞ்சதந்திரக்கதை, ஈசாப் கதைகள் முதலிய கதைகளில் ஆர்வம் செலுத்திய சிறுவர்கள் அவற்றில் வாழும் மந்திரவாதி, தேவதை, விசித்திர மனிதர்கள் போன்ற வற்றால் மகிழ்ச்சி அடைந்தனர். இந்த நிலை மாறி உண்மை உலகில் காணும் மனிதர்களை வைத்துப் புதினங்கள் தோன்றலாயின. தனிப்பட்ட ஒரு சிறுவன் தனது வீரத்தையும் விவேகத்தையும் பயன்படுத்தி நாட்டையும், மக்களையும் கொடுமைப்படுத்து வோரின் பிடியிலிருந்து மீட்கும் பாணியில் கதைகள் புனையப் பட்டன. அதன்பிறகு தற்காலச் சூழலையொட்டியனவாக, பள்ளிச் சிறுவர்களிடம் நல்ல பண்புகளை வளர்க்கும் விதத்தில் கதைகள் உருவாயின. அச்சம், பரபரப்பு, எதிர்பாராத திருப்பம், கொலை,

கொள்ளை செய்யும் குற்றவாளியைக் கண்டறியத் துப்பறிதல் முதலிய நிலைகளில் சிறுவர் கதைகள் பெருகின. இவற்றிற்கு வரவேற்பும் கூடியது.

இதழ்களும் போட்டிப் போட்டுக் கொண்டு இவ்வாறான கதைகளைப் பெருமளவு வழங்கின. சிறுவர்க்கான துப்பறியும் மர்ம நாவல்கள், சிறுவர்களின் நுண்ணறிவு, சுறுசுறுப்பு, செயல்திறன், சூழ்நிலையை உய்த்தறிந்து வேகமாகச் செயல்படும் சமயோசித புத்தி, அச்சமின்மை, இறுதியில் வெற்றி பெறுதல் முதலிய போக்குகள் நிறைந்தனவாக உருவாக்கப்பட்டன. அசட்டுப்பிச்சு (ஆர்.வி.), கறுப்புக் கண்ணாடி (பூரம்), மஞ்சள் மங்கை (கி.ஜெயராமன்), துப்பறியும் புலிகள் (வாண்டுமாமா), புதையல் தீவு இரகசியம் (பூவை.அமுதன்), நீலப் பெட்டி (ரேவதி), மரகதக் கண்ணன் (பூவண்ணன்), சி.ஐ.டி.சிங்காரம் (மண. அரங்க சாமி), மாந்தோப்பு மன்னர் (நாரா. நாச்சியப்பன்) முதலியவை இத்தகையன. வேகமும் விறுவிறுப்பும், இரகசியத்தை இறுதிவரை வெளிப்படுத்தாமல் கொண்டு செல்லும் விதத்தில் திகைப்பும் அச்சமும் கொண்டவையாக இத்தகு புதினங்கள் படைக்கப் பட்டதால் சிறுவரிடையே ஒரே மூச்சில் படிக்கத்தக்கனவாய் அமைந்தன. இதற்கிடையே அவ்வப்போது தேவதை, ராசா ராணி, மாயாசால மந்திர தந்திர வீரச் செயல்களை மையப் படுத்திய கதைகளும் வெளியிடப்பட்டன. இவை விந்தை, வீரம், அற்புதம், வேடிக்கை இவற்றை மிகுந்த கற்பனை கலந்து கொடுத்ததால் சிறுவர் மனத்தில் ரசனை உணர்ச்சியை வளர்த்தன. மாயக்கள்ளன் (பெரியசாமி தூரன்), இளவரசி சுகுமாரி (கே. ஜெயலட்சுமி), நீல அன்னம் (பூவை. அமுதன்), சந்திர மண்டலத்தில் மந்திரவாதி (ஆலந்தூர் கோ. மோகனரங்கன்), மங்களபுரி வீரன் (கே.பி.நீலமணி), குகை வழியே (பாலகுரு) முதலிய கதைகள் இத்தகையன.

பண்டைய இலக்கியங்களில் இடம்பெற்ற மன்னர் வாழ்வையும், அவர்தம் வீரத்தையும் இளைஞர்களுக்கு அறிமுகப் படுத்தும் வகையில் வரலாற்றுப் புனைகதைகள் எழுதி வெளி யிட்டனர். பண்டைக்கால வாழ்க்கை, மன்னர்களின் வீரச்செயல், அருங்குணம், புகழுக்குரிய அவர்தம் வாழ்க்கை, மதிநுட்பம் ஆகியவற்றைச் சிறுவர்கள் அறிந்து கொள்ளவேண்டும் என்ற உந்துதலை இத்தகைய வரலாற்றுப் புனைகதைகளில் காண முடிகிறது. தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ் செழியனையும், அவனைப் பாடிய குடபுலவியனாரையும்

மையமாகக் கொண்டு பின்னப்பட்ட கதையான புலவர் மகன் (பூவண்ணன்) என்ற கதை இதற்குச் சான்றாகும். வரலாற்றில் சுவடுகள் பதித்த தலைவர்களின் நிகழ்ச்சிகளை மையமாகக் கொண்டுள்ள வீரமகன் (பூவை அமுதன்), சிறைமீட்ட செல்வன் (ரேவதி) முதலிய கதைகளும் இத்தகையனவே. டச்சுக்காரர்களால் கொள்ளையடிக்கப்பட்டுக் கடலில் எடுத்துச் செல்லப்பட்ட திருச்செந்தூர் முருகன் சிலையை மீட்டுக் கொண்டுவந்த நிகழ்ச்சியை விறுவிறுப்பான நடையில் இப்புதினத்தில் காட்டியுள்ளார் ரேவதி.

சிறுவர்க்குரிய சமூகப் புதினங்கள் நல்ல பண்புகள் அவர்களிடத்தில் வளரவேண்டும் என்பதை மையமாகக் கொண்டவை. அன்பு, அடக்கம், அறிவு, அஞ்சாமை, இறைபக்தி, இன்சொல், இரக்கம், ஈகை, உண்மை, உழைப்பு, நேர்மை, நாட்டுப் பற்று, மொழிப்பற்று முதலிய பண்புகள் சிறுவர்க்கான சமூகக் கதைகளில் பெரிதும் இடம்பெறலாயின. சிறுவர்க்கான சமூகக் கதைகளைப் படைத்தவர்களில் பூவண்ணன் (ஆலம் விழுது), ராஜாமணி (அமுதாவின் ஆசை), பாண்டிமுத்து (அன்பு நிலையம்), அழ. வள்ளியப்பா (பர்மா ரமணி, மணிக்கு மணி), வாண்டு மாமா (மூன்று நண்பர்கள், பண்பு தந்த பரிசு), கே.பி. நீலமணி (மாஸ்டர் ராஜா), திருச்சி பாரதன் (அப்பாவின் ஆசை) போன்றோர் குறிக்கத்தக்கவர்.

சிறுவர்க்கேற்றவாறு கதை கூறுதலில் புதிய பாணி அமைந்துள்ளதைத் தெ.சி. தெய்வசிகாமணி புதினங்களில் காணலாம். இவரது 'சிப்பாய் சின்னசாமி' என்ற கதையில் தந்தைக்கும் மகனுக்குமிடையே நடக்கும் நிகழ்ச்சிகள் கடித வாயிலாக உணர்த்தப்படுவது ஒரு புதுமை. இவர் எழுதிய 'பளிங்கு மண்டபம்' என்ற கதையில், வீட்டைவிட்டு ஓடிப்போன சிறுவன் மனோகரன், மற்றொரு சிறுவன் மாதவனுடன் சேர்ந்து உழைப்பின் பெருமையை அறிந்து உயர்வதைக் காணலாம். கே. ஜெயலட்சுமி எழுதிய அன்புச் சுரங்கம் என்ற கதையும், அன்பின் வலிமை என்ற கதையும் குறிப்பிடத்தகுந்தவை. சினிமா ஆசை இளம்பிஞ்சு உள்ளங்களை எப்படிப் பாழாக்குகிறது என்பதை விளக்குவது அன்புச்சுரங்கம் என்னும் கதை. சித்தியிடம் வெறுப்பு ஏற்பட்டு வீட்டைவிட்டு வெளியேறிய சிறுவன், உடன்பிறந்தவளின் அன்பும் பாசமும் உள்ளத்தை உருக்க அவன் மனம் திருந்தி நல்வழிக்குத் திரும்புவதை உணர்த்தும் கதை அன்பின் வலிமை. செல்வகணபதியின் 'அண்ணன் அல்ல, அப்பா' என்ற புதினம், தம்பியின் ஊனத்தைக் குணப்படுத்தி அவனைச் சிறந்த

ஓட்டப்பந்தய வீரனாக்க உறுதி எடுத்துக் கொள்ளும் அண்ணனைப் பற்றியது. வெற்றிக்கு விடாமுயற்சியும் தன்னம்பிக்கையும் தேவை என்பதை வலியுறுத்துவது இக்கதை. கே.ஆர். மீனாட்சி எழுதிய 'வழிகாட்டி' என்னும் புதினம் 'பிச்சை புகினும் கற்கை நன்றே' என்ற கருத்தைச் சமூகச் சூழ்நிலையில் படம்பிடித்துக் காட்டுவதாகும். ஒரு வேலைக் காரப் பெண்ணின் உதவியுடன் படித்து முன்னேறித் தன்னை வஞ்சித்தவனுக்கு வழிகாட்டும் ஒருவனை இயல்பாகச் சித்திரிக்கிறது இக்கதை. 'ஒருமரத்துப் பறவைகள்' என்ற பூவை. அமுதனின்கதை, பள்ளிச் சிறாரின் மனநிலையை நன்கு எடுத்துக்காட்டும் வித்தியாசமான முயற்சியாகும்.

குழந்தைகளுக்கான கதை எழுதியோருள் மேலும் குறிப்பிடத்தகுந்தோராக, தங்கமணி (கோமாளி), ஆர்.வி. (புதிய முகம்) இனியவன் (பொன்மனம்), பூதலூர் முத்து (இதோ ஒரு மாணிக்கம்), எம்.பி.சுப்பிரமணியம் (தேக்கடி ராஜா), நீலம் (அபாயச்சங்கு) நாகப்ப.நாச்சியப்பன் (கோட்டை முனியப்பா), புவனை கலைச்செழியன் (உள்ளத்தால் உயர்ந்தவன்), கோ.ம. கோதண்டம் (உச்சி மலை ரகசியம்) முதலியோரைச் சொல்லலாம்.

பிறநாட்டு மக்களின் நாகரிகம், பண்பாடு பற்றி அறிதற்கு ஓர் அறிமுகமாகச் சிறுவர்க்கான மொழிபெயர்ப்பு நூல்களும், தழுவல் நூல்களும் படைக்கப்பட்டன. பாடத் திட்டங்களிலும் அவை துணைப் பாடங்களாகச் சேர்க்கப்பட்டுச் சிறுவர்களின் படிக்கும் ஆற்றலைத் தூண்டின. மரப்பாச்சியின் கதை (நாக. முத்தையா), மருத்துவர் மகன் (ஜான் துரைராஜ்), பரிசு (ஆ.மாதவன்), வைர வியாபாரி (வாண்டு மாமா), கலிவரின் யாத்திரை (என்.கே. வேலன்), அனாதைச் சிறுவன் (பூவை அமுதன்), ஏழைப்பங்காளன் (தெய்வ சிகாமணி) முதலியவை சுட்டிக்காட்டத்தக்கன. தென் மொழி புத்தக டிரஸ்ட்டின் ஆதரவில் மலையாளத்திலிருந்தும் (மிருகங்கள் நடத்தும் சர்க்கஸ்) தெலுங்கிலிருந்தும் (விஷமக் கோபுவின் விசித்திர யாத்திரை) பெயர்க்கப்பட்ட நூல்கள் குறிப்பிடத்தகுந்தவை.

அறிவியல் உணர்வை மாணவர்களுக்கு ஊட்டவேண்டும் என்ற அக்கறையால் உந்தப்பட்ட படைப்பாளர்கள் சிறுவர் களுக்கான அறிவியல் புதினங்களை வெளியிட்டனர். அறிவியல் உண்மைகளைக் கதைபோல் சொல்லி அவற்றை ஆர்வத்தோடு கற்கும்படியாகத் தூண்டினர். இயற்கையே தன் கதையைச் சொல்வது போல் அமைந்த கதைகள் வெளிவந்தன. காற்றின் கதை, மின்சாரத்தின் கதை, மலையின் கதை, ரப்பரின் கதை,

எறும்புகளின் அற்புத உலகம், காகிதத்தின் கதை, விண்வெளிக் குடும்பம் முதலியவற்றை இங்குக் குறிப்பிடலாம். ஆர். வி. எழுதிய 'காலக்கப்பல்' ஓர் அறிவியல் புதினமாகும். ஒரு புதிய வகையான ராக்கெட்டில் இரு சிறுவர்கள் ஏறிச் சென்று வானில் பறக்கிறார்கள். அந்த விண்வெளிப்பயண அநுபவங்கள் அந்நூலில் சுவைபடக் கூறப்பட்டுள்ளன. நா.கி.நாகராசன் எழுதிய பாபுவின் கனவு என்னும் கதை அறிவியல் சார்ந்த கதைகளுள் குறிப்பிடத் தகுந்தது. இடை இடையே வினா எழுப்பி விடை சொல்வது போன்ற பாணியைத் தெய்வ சிகாமணி எழுதிய அறிவியல் சார்ந்த கதைகளில் காணமுடிகிறது. இது ஒரு புதிய உத்தியாகும்.

சிறுவர்க்கான கதைகளை அளித்து வருவதில் இதழ்கள், வானொலி, தொலைக்காட்சி ஆகியவற்றின் பங்கு குறிக்கத்தகுந்தது. சிறுவர் இதழ்கள் கதைகளின் வளர்ச்சிக்குப் பெரும்பங்கு ஆற்றியுள்ளன. நாளிதழ்கள் சிறுவர்க்கெனத் தனி இணைப்பு இதழை வெளியிட்டுவருவது குறிப்பிடத்தக்கதாகும். வெகுசனப் பத்திரிகைகள், பல சிறுவர்க்கான படக்கதைகள் வெளியிட்டுச் சிறுவர்களின் கவனத்தை ஈர்த்தன. சிறுவர் இலக்கியத்தில் படக்கதைகள் பெரிதுமான வரவேற்பைப் பெற்றன. வாண்டு மாமாவின் கல்கியில் வெளிவந்த வீரவிஜயன் போன்ற படக்கதைகள் பெருத்த வரவேற்பைப் பெற்றிருந்தன. நூலாகவும் படக்கதைகள் வெளிவரத் தொடங்கின.

குழந்தைகளுக்கான நாடகங்கள் நடிப்பதற்காகவும், படிப்பதற்காகவும், எழுதப்பட்டன. எனினும், கவிதை, கதை ஆகியவற்றை நோக்க, சிறுவர்க்கான நாடகங்கள் குறைவே. நாடகம் காண்பதன் வழி நற்பண்புகளை அறிவுறுத்த எளிதில் இயலும் என்பதை அறிந்திருந்தாலும், தமிழில் சிறுவர்க்கான நாடகங்கள் பெரிய அளவில் வளரவில்லை. நூல் வடிவைக் காட்டிலும் வெகுசன ஊடகங்களான வானொலி, தொலைக்காட்சி ஆகியன சிறுவர் நாடகங்களுக்கு ஆதரவு தந்துவருகின்றன. நாடகங்கள் நல்ல நீதிகளை எடுத்துக்காட்டுதற்குப் பள்ளி ஆண்டு விழாக்களின்போது நடிக்கப்படுவதுண்டு. அவை நூல்வடிவம் பெற வாய்ப்பு இல்லை. பெரும்பாலும் புராண, இதிகாச, வரலாற்று உணர்வுடைய நாடகங்கள் சிறுவரிடையே வரவேற்பைப் பெற்றன. பிரகலாதன், துருவன், கண்ணன், திருஞானசம்பந்தர் போன்றோருடைய பக்தி வரலாறு நடிக்கப்பட்டதுண்டு.

சிறுவர்க்கான நாடகங்கள் நூல் வடிவம் பெற்றபோதும் அவை வரவேற்பைப் பெறவில்லை என்றே கூறலாம். எனினும்

சிறுவர்க்குரிய நாடகங்களை எழுதிப் புகழ் பெற்றோராக பூவண்ணன், கூத்தபிரான், தம்பி. சீனிவாசன், சௌந்தர், ஆலந்தூர் கோ.மோகனரங்கன், கே.ஜெயலட்சுமி, தங்கமணி, கி.மாபக்தவத்சலம் போன்றோர் விளங்குகின்றனர். பூவண்ணன் எழுதிய உப்பில்லாத பண்டம் என்ற நாடகம், பணமும் நடிப்பும் இருந்தால் போதாது பண்பு மேலோங்கி இருக்க வேண்டும் என்பதை மையமாகக் கொண்டது. 'உண்மைக்கு வெற்றி' என்ற நாடகத்தில் நாடகத்தை நடிப்பதற்கான நேரம், நடிப்போர் வயது முதலியவற்றைத் தந்திருப்பது புதுமையானது. பூவண்ணன் எழுதிய 'எழுத்து மாறாட்டம்' என்னும் நகைச்சுவை நாடகம் பள்ளி, வானொலி, தொலைக்காட்சி ஆகியவற்றில் பலமுறை நடிக்கப்பெற்றுப் பாராட்டுப் பெற்றதாகும். ஆலந்தூர் கோ.மோகனரங்கன் எழுதியுள்ள 'வெற்றி எங்கள் கையிலே' என்னும் நாடகம், மாணவரிடையே தன்னம்பிக்கையையும் உழைப்பையும் மேலோங்கச் செய்வதான நாடகமாகும். சமுதாயத்தில் உயர்ந்தவன், தாழ்ந்தவன், ஏழை, பணக்காரன் என்ற வேற்றுமைகள் களைந்து மக்கள் அனைவரும் ஒன்றே என்ற வகையில் வஜ்ரவேலு எழுதிய நாடகம் 'கண்ணன் எங்கள் சேவகன்' என்பதாகும். பாரதன் எழுதிய பலாப்பழம் என்னும் நாடகம் சிறுவர்க்காக எழுதப்பட்ட நீண்ட நாடகமாகும். சிறுவர்க்கான வானொலி நாடகங்களை எழுதிய கூத்தபிரானின் பங்கு மிகவும் குறிப்பிடத்தகுந்தது. வானொலி அண்ணா என்றழைக்கப்படும் ர. அய்யாசாமி வானொலி மூலம் பல நாடகங்களைப் படைத்தவர்.

சிறுவர்க்கான கட்டுரை நூல்கள் குறிப்பிடத்தக்க வளர்ச்சியடையவில்லை என்றே சொல்லலாம். பெரியவர்களுக்கு எழுதுவது போன்று சிறுவர்களுக்கு எழுதிவிட இயலாது. எளிதில் புரியாதவற்றைச் சிறுவர்கள் மனத்தில், அவர்கள் விரும்பியவாறு படைத்தளிப்பது என்பது கடினமானது. நுட்பமான கருத்துகள், சிறுவர்க்கு எளிதில் விளங்கும் வண்ணம் இருக்கவேண்டும். மாணவர்களின் அறிவுத்திறன், மனவளர்ச்சி, ஏற்றுக்கொள்ளும் பக்குவம் முதலியவற்றைக் கருத்திற்கொண்டு எழுதப்படும் கட்டுரைகள் வரவேற்பைப் பெறுவன. மாணவர்களின் ஆற்றலுக்குக் காரணமாயமைவன. வைத்தண்ணா (பூச்சி வாழ்க்கை, விநோதக் குருவிகள்), என்.கே.வேலன் (காற்றின் கதை, நிலவைச் சுற்றிய கதை), கல்வி. கோபாலகிருஷ்ணன் (பறக்கும் பாப்பா), ம. இராஜாராம் (எரி கற்கள்), எம்.எல். சபரிராசன் (மந்திரவித்தை), ஆழி.வே. ராமசாமி (காந்தத்தின் கதை), செ. எத்திராசன் (ஆவணத்தின் கதை),

நாக. முத்தையா (மரங்களின் கதை) முதலியோர் அறிவியல் செய்திகளைக் கட்டுரை நூலாக வெளியிட்டுள்ளனர்.

பிறதுறை அறிவு இளஞ்சிறார்களாகிய மாணவர்களுக்கு அவசியம் என்ற நோக்குடன் எழுதியோருள் குறிப்பிடத் தகுந்தவர் களாக நவராஜ் செல்லையா (விளையாட்டுக்கலை தொடர்பான நூல்கள்), வ. சுப்பையா (அஞ்சல்துறை தொடர்பான நூல்), வைத்தண்ணா (புட்டிப்பால்), தம்பி. சீனிவாசன் (பத்திரிகையின் கதை), பி.வி. கிரி (நில், கவனி, புறப்படு) முதலியோரைச் சுட்டலாம். இலக்கியவாதிகளை அறிமுகப்படுத்தும் நோக்கில் பாரதி பாடம் (ஜெயகாந்தன்), சிறுவர்க்குப் பாரதியார் (பூவை அமுதன்), மாணவர்க்குப் பாரதிதாசன் (பெரியண்ணன்) முதலியவற்றைக் குறிப்பிடலாம்.

குழந்தைகள் இலக்கியம் குறித்த கலைக்களஞ்சியத் தொகுப்பு வெளிவந்துள்ளமை பாராட்டுக்குரியது. பெரியசாமி தூரன், பூவண்ணன், மணவை முஸ்தபா முதலியோர் தனித்தனியாக இவ்வாறு களஞ்சியத் தொகுப்புப் பணியில் ஈடுபாடு கொண்டு பல தொகுதிகளாக வெளியிட்டுள்ளனர். பூவண்ணனின் சிறுவர் கலைக்களஞ்சியம் குறிப்பிடத்தக்கது. மணவை முஸ்தபா சிறுவர் கலைக்களஞ்சியம், இளைஞர் இஸ்லாமியக் கலைக்களஞ்சியம், இளைஞர் அறிவியல் களஞ்சியம் ஆகிய மூன்று தொகுதிகளையும் வெளியிட்டிருப்பது பாராட்டக்கூடியதாகும்.

வரலாற்றில் சிறப்பிடம் பெற்ற தலைவர்கள் பற்றிய வாழ்க்கை வரலாற்றைச் சிறுவர்க்கு அறிமுகப்படுத்தும் நோக்கில் பல கட்டுரைகள் வெளிவந்தன. தலைவர்களின் உண்மை வரலாற்றை உணர்த்துவதன் வழி மாணவர்கள் அவர்களைப் போலப் பண்பிலும் உயர்விலும் மதிப்பிலும் சிறக்கவேண்டும் என்பதை முன்நிறுத்தும்படியான வாழ்க்கை வரலாறுகள் வரவேற்பினைப் பெற்றன. அழ.வள்ளியப்பாவின் 'பெரியோரின் வாழ்வினிலே' என்னும் நூல் மேதைகளின் வாழ்வில் நடந்த அரிய நிகழ்ச்சிகளைச் சிறுவர்களுக்குக் கதைபோல் சொல்லிச் செல்லும் நூலாகும். விடுதலை வீரர்கள் பற்றிய முழுமையான வாழ்க்கை வரலாற்று நூல்கள் சிறுவரிடையே வரவேற்பைப் பெற்றுள்ளன. 'இந்திய நாட்டின் எரிமலைத் தியாகிகள்' என்னும் நூல் (சொ. பாரதிபித்தன்) இவ்வகையில் குறிப்பிடத்தக்கது. அழ.வள்ளியப்பா எழுதிய 'நேருவும் குழந்தைகளும்' இவ்வகையில் தனித்தன்மை பெற்ற நூலாகும்.

புவியியல், உடற்கூற்றுவியல், வேதியியல், இயற்பியல், வானியல், உளவியல், உயிரியல் முதலிய துறைகளில் சிறுவர்களின் அறிவு பெருகவேண்டியது இன்றியமையாதது. இன்றைய கணினி காலத்தில் மேலும் புதிய புதிய அறிவியல் நுட்பங்களும், கண்டு பிடிப்புகளும் வளர்ந்து வருகின்றன. இவற்றைச் சிறுவர்கள் உடனுக்குடன் அறியுமாறு செய்வதற்குக் குழந்தை இலக்கியப் படைப்பாளிகள் பொறுப்புணர்ச்சியோடும் விழிப்புணர்ச்சியோடும் கடமையுணர்வோடும் ஈடுபட்டுவருகிறார்கள்.

# சிங்கப்பூர்

சுப. திண்ணப்பன்
ஆ.ரா. சிவகுமாரன்

சிங்கையில் முதல் தமிழ் இலக்கியம் தோன்றிச் சுமார் 50 ஆண்டுகள் கழித்தே குழந்தை இலக்கியத்தின் தோற்றம் உருவாயிற்று. சிங்கப்பூரில் குழந்தை இலக்கியமும் 'செய்தித்தாள்கள்', 'வானொலி' இவற்றின் மூலம்தான் வளர்ந்தது. சிங்கப்பூரில் குழந்தை இலக்கியங்கள் வெளிவரத் தமிழ்முரசு நாளிதழ் முக்கிய களமாய் அமைந்தது. இதனை ந. பழனிவேலுவின் கவிதை மலர்கள் என்னும் நூலிலிருந்து அறியலாம். இந்நூலில் இடம்பெற்றுள்ள 'தாய்', 'தந்தை' என்னும் குழந்தைப் பாடல்கள் 1937இல் செய்தித்தாளில் வெளியானவை என்னும் குறிப்பு உள்ளது. இதிலிருந்து சிங்கையில் 1937லிருந்து குழந்தைப் பாடல்கள் செய்தித்தாள்களின் வழித் தோன்றியதையும் அதற்கு வித்திட்டவர் ந. பழநிவேலு என்பதையும் அறியலாம்.

1952இல் தமிழ் முரசில் மாணவர் மணிமன்றம் என்ற தனிப்பகுதி வெளிவரத் தொடங்கியபின் அது நான்கு பக்கப் பகுதியாக 1953, ஜூலை 6ம் தேதி விரிவடைந்தது. வாரம் ஒரு முறை மாணவர்களுக்காக மலரும் இம்மலரில், பாலர் பள்ளி மாணவர் முதல் அனைத்து நிலை மாணவர்களும் பங்கு கொண்டு கதை, கவிதை, கட்டுரை எனப் பல வடிவங்களில் எழுதினர். இவை சிறுவர்களால் சிறுவர்களுக்காகவும் பெரியவர்களால் சிறுவர்களுக்காகவும் படைக்கப்பட்டவை. தமிழ் முரசு நாளேடு போன்று அக்காலத்தில் 'தமிழ்நேசன்', 'தமிழ்மலர்' ஆகிய செய்தித் தாள்களும் தமிழ் பயிலும் பள்ளி மாணவ மாணவிகளுக்காக வாரந்தோறும் சிறுவர் பகுதியை வெளியிட்டு வந்தன. இதிலிருந்து

சிங்கப்பூரின் குழந்தை இலக்கிய வளர்ச்சிக்கு மலேசியா, சிங்கப்பூரில் தோன்றிய தமிழ் நாளேடுகளின் பங்கு அதிகம் என்பதை அறியலாம். ஓர் எழுத்தாளர் பரம்பரையையே மாணவர் மணிமன்ற மலர் தோற்றுவித்தது.

சிங்கப்பூர் வானொலி நிலையமும் குழந்தை இலக்கிய வளர்ச்சிக்கு ஆதரவு அளித்து எழுத்தாளர்களை ஊக்குவித்தது; அவர்களுக்குச் சன்மானமும் அளித்தது; "பாடிப் பழகுவோம்" என்னும் நிகழ்ச்சியின்வழிப் பல கவிதைகளைப் பொது மக்களுக்கு வழங்கியது; பல கவிதைகள் பிறப்பதற்கும், கவிஞர்கள் உருவாவதற்கும் வழிவகுத்தது. பல கவிதைகள் வானொலியில் ஒலிபரப்பப்பட்ட பின்னரே புத்தக வடிவம் பெற்றன.

குழந்தைகளுக்கெனக் கதைகளைச் செய்தித்தாள்களில் படைத்தவர் 'இராகி' (இரா. கிருஷ்ணன்) ஒருவரே. இவரது படைப்புகளில், சிறுவர் மனங்கள் பண்படும் கதை அம்சத்தைக் காணலாம். மொத்தம் இருபதுக்கும் மேற்பட்ட சிறுவர் கதைகளை இராகி தீட்டியுள்ளார்.

சிங்கப்பூரில் மாணவர்களுக்காக 'மாணவன்' என்னும் இதழ் முதன்முதலில் தோன்றியதாக அ.மு. மொய்தீன் என்பார் குறிப்பிடு கிறார். அது தவிர அவ்விதழைப்பற்றி வேறு எந்தச் செய்தியையும் தெரிந்து கொள்ள முடியவில்லை. 'மாணவர் பூங்கா' என்னும் இதழ் ஆர். துரைமாணிக்கம் என்பவரை ஆசிரியராகக் கொண்டு ஏப்ரல் 1972இல் சிங்கையில் வெளியானது. இதன் முதல் பிரதி தட்டச்சு செய்து வெளியிட்ட போதிலும் பின்னர் வந்த இதழ்கள் அச்சில் வந்தன. ஏப்ரல் 1972முதல் நவம்பர் 1973வரை மொத்தம் எட்டு இதழ்கள் வெளியாயின. இவ்விதழ்களில் கட்டுரைகள், செய்திகள், பள்ளிப் பாடல்கள்-பயிற்சிகள், போட்டிகள், கேள்வி பதில் அங்கங்கள், கவிதைகள், புதிர்கள், துணுக்குகள், முதலியன இடம்பெற்றன. மாணவர்களின் தேவை அறிந்து விருப்பம் அறிந்து வெளியிடப்பட்ட இதழ் இதுவாகும்.

சிங்கப்பூரில் 'தேன்கூடு' என்னும் மாணாக்கர் திங்கள் இதழ் மாணவர் பூங்காவை அடுத்து ஏப்ரல் 1973இல் வெளியாயிற்று. இதன் சிறப்பாசிரியராக இராசையா கணபதியும், ஆசிரியராக ச. சந்திரனும் இருந்தனர். மாணவர் பூங்காவைப் போல் இவ் விதழும் மாணவர்களுக்கு மிகவும் பயனளிக்கும் செய்திகளைத் தந்து உதவியது. மாணவர்களின் உள்ளம் கவரும் வண்ணம் ஒரு தரம் வாய்ந்த, சிறுவர் இதழாக இது விளங்கியது. இத்தகு சிறப்புக் குரிய இவ்விதழ் ஆறு இதழ்களுக்குப் பின் வெளிவரவில்லை.

சிங்கப்பூரில் குழந்தைகளுக்கெனக் கவிதைகள் எழுதியவர்களே மிகுதியாக இருக்கிறார்களேயொழிய உரைநடையில் கதைகள் எழுதி நூல்களாக வெளியிட்டவர் யாரும் இல்லை. புத்தகக் கடைகளின் உரிமையாளர்களாகிய இ.வி. சிங்கனும், காசி விசுவநாதனும் குழந்தைகளுக்கெனச் சிங்கப்பூரில் ஈசாப் நீதிக் கதைகள், ஈழநாட்டுக் கதைகள், சிறுவர்களுக்குரிய கதைகள், மொழிபெயர்ப்புக் கதைகள், அறிவியல் கதைகள் எனக் கதைகளை வெளியிட்டுள்ளனர். குழந்தைகளுக்கென்று தனியாக நாடகங்களோ அல்லது தலைவர்களது வாழ்க்கை வரலாற்றுக் கதைகளோ, கட்டுரைகளோ வெளிவரவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. சிங்கப்பூர் எழுத்தாளர்களில் ஒருவரைத் தவிர (இரா. கிருட்டிணன்) ஏனைய எழுத்தாளர்கள் அனைவரும் கவிதைகளையே படைத்துள்ளனர். அந்த ஒருவரும் தமது கதைகளைப் புத்தகமாக வெளியிடவில்லை. எனவே சிங்கப்பூர்க் குழந்தை இலக்கிய வளர்ச்சியைக் கவிதைகளை மையமாக வைத்தே பார்க்க வேண்டியுள்ளது.

குழந்தை இலக்கியப் பாடல்களாக வானொலியிலும் செய்தித்தாள்களிலும் வெளிவரச்செய்தவர்கள் பலராக இருந்தாலும் புத்தக வடிவில் அவற்றைக் கொண்டு வந்தவர்கள் ஒருசிலரே. அவர்களுள் முல்லைவாணன் 1981ஆம் ஆண்டு ஊஞ்சல், வீணை, கரும்பு என்னும் மூன்று நூல்களை ஒரே நேரத்தில் வெளியிட்டார். இருப்பினும் இப்பாடல்கள் சிறுவர்களின் நிலைக்கு ஏற்றதாக அமையவில்லை. கடினத்தன்மை யோடும் தனித்தமிழ் பற்றிய பிரச்சார நோக்கோடும் பாடல்கள் அமைந்துள்ளதால் சிறுவர்களைக் கவர்ந்திழுக்கவில்லை.

வானொலியில் 'பாடிப்பழகுவோம்' என்னும் நிகழ்ச்சியில் வெளியாகிய பாடல்களின் தொகுப்பை அன்னை என்னும் நூல் வடிவில் க.து.மு. இக்பால் 1984ம் ஆண்டு வெளியிட்டார். முருகதாசன் சிறுவர்களுக்குரியப் பாடல்களைத் 'தேன்மலர்கள் சிறுவர் பாடல்கள்' (1989) என்னும் பெயரில் வெளியிட்டார். தமிழில் இடம்பெற்ற பாடல்களுக்குப் பக்கத்திலேயே ஆங்கில மொழிபெயர்ப்பையும் கொடுத்திருந்தார். 'மழலை விருந்து' (1990) என்னும் பெயரில் மழலையருக்காக இவர் வெளியிட்ட பாடல் மழலையர் நிலைக்கு ஏற்றாற்போல் அமையவில்லை.

சிங்கையின் முன்னோடிக் கவிஞரான ந. பழநிவேலு பல காலகட்டத்திலும் எழுதிய பாடல்களின் தொகுப்பைப் 'பாப்பா பாடல்கள்' (1990) என வெளியிட்டார். இவரின் பெரும்பான்மையான

பாடல்கள் அறிவுரை கூறுவதாக அமைந்துள்ளதே தவிர குழந்தையின் மகிழ்ச்சிக்கு முக்கியத்துவம் கொடுப்பதாக இல்லை. மெ. இளமாறன் குழந்தைகளின் மகிழ்ச்சியை முன்னிறுத்தித் 'திங்கள்' மாணவர் பாத் தொகுப்பு, பனிக்கூழ் (1988) என்னும் இரு நூல்களைப் படங்களுடன் வெளியிட்டுள்ளார். இவரது பனிக்கூழ் நூலில் இடம் பெற்ற

"பனிக்கூழ் பனிக்கூழ் பார் பார் பலவகை
பழம்பால் கொக்கோ சேர்ந்தது சுவை சுவை!
ஆங்கில மொழியில் ஐசுக்ரீம் என்பார்
அதைநாம் தமிழில் பனிக்கூழ் என்போம்!"

என்னும் பாடலே நூலின் தலைப்பாகவும் அமைந்துள்ளது. இவர் தமது பாடல்களுக்கு இசை அமைத்து ஒலி நாடாக்களிலும் இசைவட்டுகளிலும் வெளியிட்டுள்ளார்.

பாணன் குழந்தைகளுக்காக இயற்றிய கவிதைத் தொகுதி 'மழை' (1984) என்பதாகும். முத்துமாணிக்கம் பொன்வண்டு (1983), தேன்சிட்டு (1987) என்னும் நூல்களை வெளியிட்டுள்ளார். கதைப்பாடல்கள் பொன்வண்டு என்னும் நூலில் ஓரளவு இடம் பெற்றுள்ளன. பெரி.நீல. பழநிவேலன் 'செவ்வானம்' சிறுவர் பாத் தொகுப்பு என்னும் நூலினைச் சிறுவர்களுக்காக யாத்துள்ளார். ஆ. பழனி 'முல்லைப் பூக்கள்' சிறுவர் பாடல்கள் என்னும் நூலினை வெளியிட்டதுடன் அந்நூலில் இடம்பெற்றுள்ள பாடல்களை இசையமைத்து ஒலி நாடாவாகவும் தந்துள்ளார். பொதுவாகச் சிறுவர் பாடல்களில் அறிவுரைக் கூறுகளே மிகுதியாக உள்ளன. மன மகிழ்ச்சிக்கு அதிக இடமில்லை.

# இஸ்லாமியத் தமிழிலக்கியம்

## இலங்கை

ரமீஸ்

ஈழத்து இலக்கிய வரலாற்றில் 19ஆம் நூற்றாண்டில் எழுந்த இலக்கியங்களுள் பெரும்பாலானவை சமய உள்ளடக்கம் கொண்டனவாகவே அமைந்திருந்தன. இவற்றுள் இஸ்லாமியப் பண்பாட்டின் அடியாக எழுந்த இலக்கியங்களை 'இஸ்லாமியத் தமிழ் இலக்கியம்' என்று தனியாக நோக்கப்பட்டது. தமிழகத்தை விட ஈழத்தில் இவ்வாறான தனியான நோக்குதலுக்கு அதிக அழுத்தம் கொடுக்கப்படுகின்றது.

இலங்கை முஸ்லிம்கள், சுதந்திரத்துக்குப் பின் தம்மை ஒரு தனி இனக்குழுமமாக (Ethnic Group) அடையாளங்கண்டு கொள்ள முனைந்தபோது தமது வரலாறு, அரசியல், இலக்கியம் என்று தனிநிலைகளாகச் சிந்திக்கத் தொடங்கியதன் விளைவாகவே இலங்கையில் இஸ்லாமியத் தமிழ் இலக்கியம் என்ற தனியான பிரிவும் அதிக கவனத்திற்குள்ளாயிற்று. இப்பிரிவினுள் முஸ்லிம்களின் மதத் தேவைகளைப் பூர்த்தி செய்கின்ற இலக்கியங்களையே நாம் கவனத்திற் கொள்ளவேண்டும். இந்த வகையில், குர்ஆன், ஹதீஸ் கருத்துக்களை விவரிப்பனவும் இறைவன் புகழ் கூறுவனவும் நபிகள் நாயகத்தின் வரலாறு, புகழ் பேசுவனவும், இறைநேசம் புகழ், தத்துவக் கருத்துக்களை கூறுவனவும் உள்ளடங்கும்.

தமிழகத்தில் 12ஆம் நூற்றாண்டில் எழுந்த பல்சந்த மாலையில் இருந்து இஸ்லாமியத் தமிழ் இலக்கியம் தோன்றுகின்றது என்பர். ஆனால், ஈழத்தில் 19ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் எழுந்த யாழ்ப்பாணம் பதுறுத்தீன் புலவரின் 'முகியித்தீன் புராண'த்துடன் இம்மரபு தொடங்குகிறது. 1816இல் யாழ்ப்பாணம் செய்கு மீரான் என்பவருடைய பொருளுதவியினால் இப்புராணம் பாடப்பட்டு அரங்கேற்றப்பட்டதாகவும் 1848இற்குப்பின் அச்சிலே வந்ததாகவும் அறியக் கிடைக்கின்றது.[1]

இப்புராணம் இறைநேசரான முகியித்தீன் அப்துல் காதர் ஜீலானி அவர்களைக் காவிய நாயகனாகக் கொண்டு பாடப்பட்டதாகும். இரு பாகங்களைக் கொண்டது. முதற்பாகம் 40 படலங்களையும் 200 விருத்தப் பாக்களையும் உள்ளடக்கியுள்ளது. இந்நூல் முழுவதிலும் பதுறுத்தீன் புலவரின் கவித்துவச் சிறப்பைக் கண்டு கொள்ளலாம். யாழ்ப்பாணத்துக்கே சிறப்பாக உரிய பல சொற்களையும் சொற்றொடர்களையும் இந்நூல் கொண்டுள்ளது எனப் பேராசிரியர் ம.மு. உவைஸ் குறிப்பிட்டுள்ளார்.[2]

இக்காலப் பகுதியிலே எழுந்த மற்றுமொரு இஸ்லாமியத் தமிழிலக்கிய நூல் 'காரணமாலை'. இந்நூலின் பொருள் பற்றி இரு கருத்துக்கள் நிலவுகின்றன. இந்நூலின் ஆசிரியர் சீறா சரிதத்தையே இசைத் தமிழால் பாடியுள்ளார் எனவும் நபிமார்களின் முஃஜிபொக்கள் அற்புதச் செயல்கள் - காரணங்கள் என்று அழைக்கப்படுவது உண்டு. அதனால், பல்வேறு அற்புதச் செயல்களை உள்ளடக்கிய காரணங்களாலான மாலை எனவும் குறிப்பிடப்படுகின்றது. இதனை இயற்றியவர் யாழ்ப்பாணம் சேகுத்தம்பி புலவராவார். இந்நூலின் காலம் சரியாகக் குறிப்பிடப்படவில்லை. 1878 என்றும் 1849 - 1889இற்கு இடைப்பட்டது என்றும் ஒரு குறிப்பு உண்டு என எம்.எஸ். அப்துல் ரஹீம் குறிப்பிடுவார்.[3]

19ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் தோன்றிய மற்றுமொரு புலவர் மட்டக்களப்புக்குத் தெற்கே உள்ள மருதமுனை எனும் கிராமத்தில் பிறந்த இன்ன ஆரிம் அப்பா. இவரது இயற்பெயர் மீராலெவ்வை. இப்புலவர் பாடிய முக்கியமான நூல் 'ஞானரை வென்றான்'. இந்நூலின் தோற்றம்,

> "காலந்தோறும் வேறு இடங்களிலிருந்து ஜெய்குமார் வருவதும், அவர்கள் பாமர மக்களிடமிருந்து பொருள் திரட்டும் நோக்கோடு அன்னாருக்கு நளீஹரத்து (தீட்சை) கொடுப்பதும் வழக்கமாய் விட்டன. அவர்களிடமிருந்து நளீஹரத்துப் பெற்றவர்கள் தாம் ஞானம் படித்தவர்கள் எனவும் ஏனையவர்கள் போன்று தாம் மார்க்க அனுட்டானங்கள் செய்ய வேண்டியதில்லை எனவும் கூறித் திரிந்தனர். சிலர் ஞானம் என்று எதையெல்லாமோ பேசிக் கொண்டு சமய ஒழுகலாறுகளை

அலட்சியம் செய்வதும், அவர்களைத் தொடர்ந்து மேலும் பலர் மார்க்க அனுட்டானங்களைத் தெரிந்து கொள்ள விழையாமலும் அனுஷ்டிக்காமலும் அஞ்ஞானிகளாகத் திரிவதும் சமய போதகராகிய நம் புலவருக்கும் கவலையைத் தரலாயிற்று. மக்கள் வழிதவறிச் செல்லக் காரணஸ்தர்களாகவிருந்த அந்த ஞானரை விழிப்படையச் செய்யவும் அவர்கள் செலும் வழி தவறானது என்பதை உணர்த்தவும் விழைந்தே இந்த ஞானரை வென்றான் என்னும் நூலை இயற்றினார். எனவே போலி வேடதாரிகளுக்கு வாய்ப் பாகவும், ஞானவழி அறிய விரும்புவோருக்கு முதற்பாடமாகவும் இந்நூல் அமைந்துள்ளது"[4]

என நவிலப்பட்டுள்ளது. இத்தகைய போலி ஞானிகளை வெற்றி கொள்ளும் வகையில் பாடப்பட்டமையினால் ஞானரை வென்றான் என்று இந்நூலுக்கு பெயரிட்டிருக்கலாம் என இ. பாலசுந்தரம் குறிப்பிடுகின்றார். சின்ன ஆலிம் அப்பா மழைக் காவியம் போன்ற நூல்களையும் இயற்றியுள்ளமை குறிப்பிடத்தக்கது.

ஈழத்து இஸ்லாமியத் தமிழ் இலக்கிய வரலாற்றில் குறிப்பிடத்தக்க மற்றுமொருவர் மு.கா. சித்திலெவ்வை. இவர் முஸ்லிம்நேசன், ஞானதீபம் ஆகிய பத்திரிகைகள் மூலம் முஸ்லிம் சமூகத்துக்குச் சிறப்பான பங்காற்றியுள்ளார். அஸ்றாறுல் ஆலம், சுறூதுஸ்ஸலாத் என்பன தமிழில் எழுந்த உரைநடையாயினும் இஸ்லாமிய சமய உள்ளடக்கத்தைக் கொண்டனவே. பெரும் பாலும் இருநூல்களிலும் அரபுச் சொற்கள் கலந்த தமிழ் நடையைக் கண்டு கொள்ளலாம். சித்திலெவ்வையின் அசன்பே சரித்திரம் ஈழத்துத் தமிழ்ப்பரப்பில் தொடங்கிய முதலாவது புனைவெழுத்து இலக்கியம் (நாவல்). சித்திலெவ்வையின் பணி இஸ்லாமியத் தமிழ் இலக்கியம் என்ற வகையில் குறிப்பிடப்பட வேண்டியதே. 1838இல் கண்டியில் பிறந்த இவர் 1898இல் அங்கேயே காலமானார்.

தமிழில் உள்ள 'மாலை' எனும் சிற்றிலக்கிய வடிவத்தைப் பயன்படுத்தி இஸ்லாமியத் தமிழ் இலக்கியம் படைத்தோருள் முக்கியமானவர் நாவலப்பிட்டியைச் சேர்ந்த அப்துல் ரகுமான் புலவர். இவரது காலம் 1846-1920. சமந்தீவு மாலை, நாச்சியார் மாலை, ஞான அகிதாக் கும்மி முதலியன இவர் இயற்றிய நூல்கள்.[6]

இவரது ஞான அகீதாக் கும்மியிலே வரும்,

"சத்திய நூலும் பகன்றிருக்க - மறை
சான்றவை நீங்கள் அறிந்திருக்க
முத்தி தரும் சித்தி மாதவத்தைத் - தள்ளி
முற்றுறவே விட்டவன் காபிரடி"

போன்ற பாடல்கள் இஸ்லாமிய ஞானக் கருத்துக்களை வற்புறுத்துவனவாகும்.

1862-1917 காலப்பகுதியில் வாழ்ந்த மன்னார் எருக்கலம்பிட்டி சரஸ்வதிப் புலவர் என்றழைக்கப்பட்ட பக்கீர்ப்புலவர் நபியுல்லாஹ் பேரில் பதிகம் பாடியுள்ளார். இதனோடு இறைவனை நாடி இஸ்லாமிய ஞானக் கருத்துக்கள் பொதிந்த பாடல்களையும் பாடியுள்ளார்.

19ஆம் நூற்றாண்டின் நடுக்கூறுக்குப் பின்னர் 1866-1918 காலப் பகுதியில் வாழ்ந்த கண்டி - தெல்தோட்டை அருள்வாக்கி அப்துல் காதிர் புலவரின் இஸ்லாமியத் தமிழ் இலக்கியப் பணி விதந்து குறிப்பிடத்தக்கது. அல்லாஹ்வின் 99 திருநாமங்களையும் இறுதியடிகளாகக் கொண்டு முடிகிற ஆண்டவனிடம் அடைக்கலம் தேடிப்பாடிய 'அடைக்கலமாலை' குறிப்பிடத்தக்க இவரது நூல். 'சந்தத் திருப்புகழ்' நபிகள் நாயகத்தைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு நூறு விதமான அழகிய வண்ணங்களில் பாடப்பட்டது. இதனோடு இவர் இறைநேசர்கள் மீது பதிகம், மாலை, பிள்ளைத்தமிழ், கும்மி முதலானவை பாடியிருப்பதும் குறிப்பிடத்தக்கது.

1870-1918ஆம் ஆண்டு காலப் பகுதியில் வாழ்ந்த சு. அசனார் லெப்பைப் புலவர் யாழ்ப்பாணத்தைச் சேர்ந்தவர். இவர் 'புகழ்ப் பாவணி' என்ற தொகுப்பைத் தந்தவர். நவரத்தினத் திருப்புகழ், இறைநெஞ்சர்கள் மீதான அந்தாதி, முனாஜாத்து, விருத்தம் முதலானவை இப்பாவணியில் உள. நவரத்தினத் திருப்புகழ் நபிகள் நாயகம் மக்காவில் இருந்து மதீனா சென்று தீன் (மார்க்கம்) பரப்பிய திரு மக்கா, திரு மதீனா தலங்கள் மீது புகழ் பாடியதாகும்.

19ஆம் நூற்றாண்டின் ஆரம்ப காலத்தில் வாழ்ந்தவராகக் கருதப்படும் புத்தளம் ஷெய்கு இஸ்மாயில் புலவரின் பாடல்கள் புத்தளம் முஸ்லிம்களின் பண்பாட்டினைப் புலப்படுத்துகின்ற சிறப்பான பாடல்கள்.[7] இவர் இறைவன் மீதும் நபிகளார் மீதும் இறை நேசம் மீதும் புகழ் பாடியமையும் குறிப்பிடத்தக்கது. இவரது கப்பற்பாட்டு, வழிநடைச் சிந்து என்பன இப்போதும் பலராலும் ஞாபகப்படுத்தப்படுவன.

ஷெய்கு இஸ்மாயில் புலவரின் கப்பற் பாடலின் பல்லவி இவ்வாறு அமைந்துள்ளது.

லாகிலாஹ இல்லல்லாஹ் - இல்லல்லாஹ்
முஹம்மதுர்ர சூலுல்லாஹ் - இல்லல்லாஹ்

இப்பாடலின் அனுபல்லவி இவ்வாறு வருகிறது.

ஆதி ஏனிர்வால் உதித்தோர் - இல்லல்லாஹ்
ஆல நா தனையுகந்தோர் - இல்லல்லாஹ்
நீதியுள்ள ஒலிமார்கள் - இல்லல்லாஹ்
நிறைந்த மலர் தாள் பணிந்து - இல்லல்லாஹ்

இவ்வாறு இவர் பாடல்கள் பலவற்றில் இஸ்லாமியப் பண்பாடு பல வழிகளிலும் வெளிப்படுகின்றது.

புத்தளம் கரைத்தீவு எனும் குக்கிராமத்தில் 1890இல் பிறந்தவர் வரகவி செய்கு அலாவுதீன் புலவர்.[8] இவர் ஓர் அந்தகர். இவர் இசைப்பா இயற்றுவதிலும் வழிநடைச் சிந்து, ஞானப் பாடல்கள் பாடுவதிலும் வல்லவர். செய்கு அலாவுதீன் புலவர் இருபதுக்கும் அதிகமான வழிநடைச் சிந்துகளைப் பாடியுள்ளார். இவற்றுள் அதிகமானவை இஸ்லாமியப் பொருளடக்கம் சார்ந்தவை. இப்புலவரிடம் இருந்த விசேடப் பண்பு புராணப் படனம் கூறுவதாகும். புராணப் படனம் பற்றி ஆறுமுகநாவலர் பின்வருமாறு கூறுவார்:

புராணங்களை நியமமாக விதிப்படி படித்தலும் அவைகளுக்குப் பொருள் சொல்லலும் கேட்டலும் சிறந்த புண்ணியங்களாகும்.[9]

இவ்வாறான புண்ணிய கருமத்தில் செய்கு அலாவுதீன் புலவரும் ஈடுபட்டுள்ளார். இஸ்லாமியத் தமிழ் இலக்கியங்களிலே அவர் இக்கருமத்தினைச் செய்துள்ளார்.

"புத்தளப் பிரதேசத்தில் பொருள் சொல்வதில் செய்கு அலாவுதீன் பெரும்புகழ் பெற்று விளங்கினார். கொண்டச்சு, முசலி, மறிச்சுக் கட்டி முதலிய மன்னார்க் கிராமங்கள் பலவற்றிற்கும் பலமுறை சென்று அவர் புராண விரிவுரைகள் ஆற்றியுள்ளார். சீறாப்புராணம், குத்பு நாயகம், இராஜ நாயகம் போன்ற காப்பியங்களுக்கு அவர்

> ஆற்றிய இலக்கிய உரைகளைக் கேட்டு ஆனந்தங் கொண்ட பலர் இன்றும் அவரது இலக்கிய ஆற்றலை வியந்து கூறுகின்றனர்."[10]

மருதமுனையில் தோன்றிய சின்ன ஆலிம் - அப்பாவுக்குப் பின்னர் கிழக்கிலங்கையில் பேர் பெற்றவர் அக்கரைப் பற்று வரகவி செய்குமதாநப் புலவர். இவரும் ஓர் அந்தகர். இறைவனை மனமுருகிப் பாடி, இறையருளால் ஞானம் பெற்று வரகவி ஆனார்.

> "காலக்கழிவில் இவர் ஒப்பற்ற பல பாடல்களைப் பாடலானார். அவற்றுள் ஹக்கு பேரில் முனாஜாத்து - நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் பேரில் முனாஜாத்தும் ஒருபாவொருபஃதும், குத்பு ஷாகுல் ஹமீது ஆண்டகை பேரில் ஒருபாவொருபஃதும், இன்னிசை, பதம், சிந்து, கும்மி முதலியனவும் பாடியுள்ளார்."[11]

இதனொடு நாட்டார் நிலைப்பட்ட பிள்ளைக்காவியம், புயற்காவியம் முதலானவும் பாடியுள்ளார்.

இப்புலவரின் மகன் முகம்மது நபிப் புலவர். இவரது நண்பரொருவரின் பிரிவுக்காகப் பாடிய 'முகையதீன் ஒப்பாரி' குறிப்பிடத்தக்கதாகும். மேலும் அக்கரைப் பற்றிலே ஹாசிம் ஆலிம் பாவலர், அப்துல் மஜீத் புலவர் முதலானோரும் நபிகள் நாயகத்தின் வரலாற்றினை விருத்தப் பாவிலே எழுதிய மீரா லெப்பை முகம்மதுத் தம்பி[12] முதலானோரும் இஸ்லாமிய தமிழிலக்கியப் பணி செய்துள்ளனர்.

1858இல் அட்டாளைச் சேனையில் பிறந்த அப்துல் ரஹ்மான் ஆலிம் புலவரின் 'மணமங்கள மாலை' தமிழுக்கு இஸ்லாமியத் தமிழிலக்கியத்தினூடு வந்த திருமண வாழ்த்துப் பாவாகும். இந்நூல் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் புதல்வி பாத்திமாவிற்கும் அலி (ரழி) அவர்களுக்கும் நடந்த திருமணச் சிறப்பினைப் பற்றிக் கூறுவதாகும். இப்போதும் இம்மணமங்கள மாலை பலராலும் பாடப்படுவதுண்டு.

பல நூல்களை எழுதிப் புகழ்பெற்ற மருதமுனை - புலவர்மணி ஆ.மு. ஷரிபுத்தீனின் இஸ்லாமியத் தமிழ் இலக்கியப் பணி விதந்து குறிப்பிடத்தக்கது. 'நபிமொழி நாற்பது' எனும் இவரது வெண்பா நபிகள் நாயகத்தின் நாற்பது ஹதீஸ்களைக்

(வாக்குகளை) கூறுவது. 'இசைவருள் மாலையும் மக்களுக்கு இதோபதேசமும்' இறைபுகழைக் கூறுவதோடு மக்களுக்கு அறவுரையும் கூறுகின்றது. இதுபோன்ற இஸ்லாமிய உள்ளடக்கம் சார்ந்த பல நூல்களை இவர் எழுதியுள்ளார். 1909இல் பிறந்த இவர் இன்றும் வாழ்ந்து கொண்டிருக்கின்றார்.

இவருக்குப்பின் குறிப்பிடப்பட வேண்டியவர் காத்தான்குடி கவிஞர் அப்துல்காதர் லெப்பை அவர்கள். இவர், இக்பால் இதயம், ருபய்யாத், செய்னம்பு நாச்சியார் மான்மியம், இறசூல் சதகம், தஸ்தகீர் சதகம், ஜாவீது நாமா, நான், பாதும்மா சரிதை, முறையீடும் - தேற்றமும், கார்வான் கீதம் எனப் பல நூல்களை எழுதியுள்ளார். 'முறையீடும்-தேற்றமும்' எனும் நூல் ஆண்டவனின் ஏகத்துவ ஆற்றலில் அசையாத நம்பிக்கை பூண்டு நமது தகுதியை அறிந்து காலப்போக்கையும் அதற்கேற்ப நம் தேவையையும் உணர்ந்து ஒன்றுபட்டு உழைக்கத் தூண்டுவது.[13] இவ்வாறு இவரது பல நூல்கள் இஸ்லாமிய உள்ளடக்கத்தை அடிப்படையாகக் கொண்டெழுந்தன.

ஈழத்து இஸ்லாமியத் தமிழ் இலக்கியப் பரப்பில் ஆய்வியலுக்கான பணியைச் செய்தவர் ம.மு. உவைஸ் அவர்கள். இலங்கையின் சிங்களப் பிரதேசமான பாணந்துறையிலுள்ள ஹேனமுல்ல என்னும் இடத்தில் பிறந்த உவைஸ் அவர்களின் இஸ்லாமியத் தமிழ் இலக்கியப் பணி பலராலும் வரவேற்கப் பட்டது. இத்துறை பற்றிய ஆய்வுச் சிரத்தை இலங்கைப் பல்கலைக்கழகத்து முதலாவது தமிழ்ப் பேராசிரியரான சுவாமி விபுலானந்தரிடத்துக் காணப்பட்டது. அவரைத் தொடர்ந்து பேராசிரியராக விளங்கிய க. கணபதிப் பிள்ளை, உவைஸின் ஆய்வினை முன்னின்று வழிநடத்தினார். உவைஸின் இப்பணியில் பேராசிரியர் சு. வித்தியானந்தனுக்கும் பெருத்த ஈடுபாடு இருந்தது. இவரது, 'தமிழிலக்கியத்தில் முஸ்லிம் காப்பியங்கள்' என்ற நூலைக் கண்ணுற்ற கலாநிதி ஆ. வேலுப்பிள்ளை,

> **"இன்றைய முஸ்லிம் அறிஞர்களும் தமிழ்க் கல்விமான்களும் அறிந்திராத துறை எனக் கூறத் தக்க தமிழிலக்கியத்தின் ஒரு முக்கிய பகுதி ஆராய்ச்சிக்கு எடுத்துக் கொள்ளப் பட்டுள்ளது."**

எனக் குறிப்பிட்டுள்ளார். ஆய்வியலோடன்றி, 'திருமக்கா ஆற்றுப்படை' எனும் இஸ்லாமியத் தமிழ் இலக்கியமும் இவர் படைத்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

தற்காலத்திலும் இஸ்லாமிய உள்ளடக்கம் சார்ந்த தனித்துவமான இலக்கியப் படைப்புக்கள் நமது கவனத்தைப் பெறுகின்றன. எம்.எச்.எம். புகாரியின் 'நாயகப் புகழாரம்' அ–ஔ வரையுள்ள 10 தமிழ் உயிர் எழுத்துக்கள் ஒவ்வொன்றிலும் 30 கவிதைகள் பாடி மொத்தமாக நபிகள் - நாயகம் பேரில் 300 கவிதைப் பூக்களைப் புகழாரமாகச் சூட்டியுள்ளது. அன்பு முகையதீன் 'நபிகள் வாழ்வில் நடந்த கதை' என்றதொரு கவிதைத் தொகுதியைத் தந்துள்ளார். நயீர் ஷரிபுத்தீனின் 'உத்தமத் தூதர்' அண்ணலாரின் வாழ்வைச் சிறுவர்களுக்காகப் பாடலில் சொல்லியுள்ள குழந்தை இலக்கியமாகும். ஜின்னாஹ் ஷரிபுத்தீன் 'மஹ்ஜபீன் காவியம்' பாடியுள்ளார். இதேபோல ஈழமேகம், புரட்சிக்கமால், எம்.ஸி.எம்.ஸீபைர் எனப் பலர் இஸ்லாமிய உள்ளடக்கம் கொண்ட கவிதைகளைப் படைத்துள்ளனர். இன்னும் பலர் இத்துறையில் எழுதி வருகின்றமையும் குறிப்பிடத்தக்கது.

இவ்வாறு 19ஆம் நூற்றாண்டின் முற்பகுதியிலிருந்து இன்று வரை ஈழத்து முஸ்லிம் புலவர்கள் பலர் தமிழில் குறிப்பிடத் தக்களவு இலக்கியப் பணி செய்து இஸ்லாமியத் தமிழ் இலக்கியத்துக்கு வளம் சேர்த்துள்ளனர். தமிழ் இலக்கிய வடிவங்களான புராணம், மாலை, பதிகம், திருப்புகழ், பிள்ளைத் தமிழ், மான்மியம், சதகம், ஆற்றுப்படை, வழிநடைச்சிந்து என பல்வேறு வடிவங்களையும் கொண்டு இஸ்லாமியத் தமிழ் இலக்கியம் படைத்துள்ளனர். மழைக்காவியம், பிள்ளைக் காவியம், புயற்காவியம் என நாட்டார் நிலைப்பட்ட இஸ்லாமிய உள்ளடக்கக் காவியங்களையும் தமிழில் தந்துள்ளனர். அரபு, பாரசீக மரபில் இருந்து வந்த முனாஜாத், நாமா வடிவங்களையும் இலக்கியம் செய்யப் பயன்படுத்தியுள்ளனர். குறிப்பாக இலக்கியங்களுக்கு உரை சொல்லப் பயன்படுத்திய 'புராணப் படன' மரபும் முஸ்லிம்களிடம் இருந்துவந்துள்ளது. இஸ்லாமிய தமிழிலக்கிய மீட்டெடுப்புக்கு இலங்கையில் கிடைத்த ஆய்வுப் புலமை வெளிக்குள்ளே தமிழகமும் இணைந்து கொண்டது. தமிழகத்தில் இஸ்லாமிய தமிழ்ப் பண்பாட்டுக்கென ஒரு முக்கியமான இடமிருந்ததால் தமிழகத்திலும் இக்கல்வித் துறையை வளர்ப்பதில் புலமை ஈடுபாடு காணப்பட்டது.

இஸ்லாமிய தமிழிலக்கியங்களின் பெயர்களைத் தொகுத்துத் தரும் ஒரு நூற்றொகையாக அமைவது 'எச்.எம். ஜெமீல் பதிப்பித்துள்ள நூற்றொகையாகும்.

ஈழத்தில் முஸ்லிம் புலவர்களின் இத்தகைய பங்களிப்பு ஈழத்துத் தமிழ் இலக்கிய வளர்ச்சியில் முஸ்லிம் சமூகம் பற்றிய இருப்புக்குத் தகுந்த சான்றாக விளங்குகின்றமை குறிப்பிடத்தக்கது.

**சான்றாதாரம்**

1. துரை. மனோகரன் (1997), இலங்கையில் தமிழ் இலக்கிய வளர்ச்சி, யாழ்ப்பாணம் - கண்டி. ப. 107.
2. துரை மனோகரன் (1997), மு.கு.நூ., ப. 108.
3. உவைஸ், எம்.எம். (1979), பிறைக் கொழுந்து, பாணாந்துறை, பக். 60, 61.
4. செய்யது ஹஸன் மௌலானா (1964), இஸ்லாமியத் தமிழ் இலக்கியச் சொற்பொழிவுகள், அரசு வெளியீடு, கொழும்பு, பக். 61, 62.
5. பாலசுந்தரம், இ. (1971-72), இளந்தென்றல், இலங்கைப் பல்கலைக்கழகம், கொழும்பு, ப. 114.
6. சதாசிவம், ஆ. (1966), ஈழத்துத் தமிழ்க் கவிதைக் களஞ்சியம், சாகித்திய மண்டலம், கொழும்பு, ப. 300.
7. அனஸ், எம்.எஸ்.எம். (1994), ஷெய்கு இஸ்மாயில் புலவர், இளம் பட்டதாரிகள் சங்கம், புத்தளம், ப. 19.
8. அனஸ், எம்.எஸ்.எம். (1994), வரகவி செங்கு அலாவுதீன், முஸ்லிம் சமய பண்பாட்டு நூல்கள், அமைச்சு, இலங்கை, ப. 19.
9. ஆறுமுகநாவலர் (1915), பாலபாடம், சென்னை, ப. ககஉ.
10. அனஸ், எம்.எஸ்.எம். (1991), மு.கு. நூ. ப.55.
11. சலீம், ஏ.ஆர்.எம். ( - ), ஈழத்து முஸ்லிம் புலவர்கள் பிறைப் பண்ணை வெளியீடு, அக்கரைப்பற்று, ப.12.
12. கந்தையா வி.சி. (1964), மட்டக்களப்புத் தமிழகம், ஈழகேசரிப் பொன்னையா நினைவு வெளியீட்டு மன்றம், யாழ்ப்பாணம், ப. 335.
13. அப்துல்காதர் லெப்பை, முறையீடும் தேற்றமும், முன்னுரை.

# வாழ்க்கை வரலாற்றிலக்கியம்

## தமிழகம்

ச. சிவகாமி

இன்று மிக விரைவாக வளர்ந்து வரும் உரைநடையுள் ஒன்றாக வாழ்க்கைவரலாறு அமைகிறது. உரைநடை இலக்கியத்தை அதன் பொருள் தன்மையில் மூன்று வகையாகப் பிரிக்கலாம். இயல்பியல், புனைவியல், இயல்புபுனைவியல் என அவற்றைச் சுட்டலாம். உண்மைநிகழ்வுகளின் தொகுப்பினை இலக்கியச் சுவைபட தருவன இயல்பியலாகும். படைப்பாளர் தம் கற்பனை நிகழ்வுகளால் ஒரு கதையைப் படைத்தல் புனைவிய லாகும். இரண்டும் இணைந்தவற்றை அல்லது உண்மை நிகழ்வுகளைப் படைப்பாளர் தம் புனைவாற்றலுடன் இலக்கியமாகப் படைத்தல் இயல்புபுனைவியலாகும். வாழ்க்கை வரலாறும் பயண இலக்கியமும் முதல்வகையைச் சார்கின்றன.

ஆங்கிலச் சொல்லான Biography என்பதன் நேர்பொருளைக் கொண்டதாக 'வாழ்க்கை வரலாறு' என்பது அமைகிறது. எனினும் இவ்வகை இலக்கியங்கள் வாழ்க்கைவரலாறு என்பதுடன் வரலாறு, சரிதை, சரிதம், சரித்திரம், வாழ்வு, வாழ்க்கை, வாழ்க்கைக் குறிப்புகள், வாழ்க்கைக் காவியம், விளக்கம், வைபவம், கதை, அனுபவங்கள், விஜயம், சிந்தாமணி, ஜீவியம், லீலை, தரிசனம், நினைவுகள், நிகழ்ச்சிகள், புராணம் போன்ற சொற்களாலும் தொடர்களாலும் குறிப்பிடப்படுகின்றன.

ஒருவர் வாழ்வில் நிகழ்ந்த முக்கிய நிகழ்வுகள் அனைத் தினையும் அவற்றின் சிறப்பு தெளிவாகப் புலப்படும்படியும் காலக்குறிப்புகளுக்குப் பெருமையளித்தும் உண்மைக்கு முதன்மை யளித்தும் கோவைப்படுத்தி, இலக்கிய நயம்பட உரைக்க வேண்டும். அவற்றினூடே வாழ்க்கை வரலாற்றுத் தலைவர் பண்பு மிளிரும்படியும் செயல்கள் விளக்கம் பெறும்படியும் படைக்க வேண்டும் என வாழ்க்கை வரலாற்றிலக்கியத்திற்கு விளக்கம் அளிக்கலாம். தன் பண்பாலும் பொருளாலும் வாழ்க்கை வரலாறு, அறவிலக்கியம் போன்றவற்றுடன் நெருங்கிய தொடர்பு

கொண்டமைகிறது. ஒருவர் வரலாற்றை மற்றவர் வரையும்பொழுது அது வாழ்க்கைவரலாறாகிறது. ஒருவரே தம் வரலாற்றைப் படைக்கும்பொழுது அது தன்வரலாறாகிறது. இரண்டுமே தமிழில் குறிப்பிடத்தக்களவு வளம் பெற்றுள்ளன.

இவ்வுலகில் வாழ்ந்த, வாழ்கின்ற மனிதர்களே இவ்விலக்கியத்துள் தலைவராகின்றனர். புகழ் பெற்றோர் (ஆறுமுக நாவலர் சரித்திரம் - த. கைலாசபிள்ளை) மட்டுமின்றிப் புகழுக்கு உரியோரும் (திருப்பத்தூர் திரு. கா. அ. ஷண்முக முதலியார் அவர்களின் வாழ்க்கை குறிப்பு - கா. அ.ஷ.பத்மனாபன், கா.அ.ஷ. ரகுநாதன்) தலைவராகின்றனர். குறிப்பிட்ட ஒரு பகுதியினர் மட்டுமே அறிந்த இவர்களைப் பிறரும் அவர் தம் பண்பு, சிறப்பு முதலியன குறித்து அறியவேண்டும் என்ற நினைவில் இவ் வாழ்க்கை வரலாறுகள் எழுகின்றன. எத்துறையைச் சார்ந்தவர் களாயினும் அவர்கள் தலைவர் ஆகின்றனர். சான்றாக,

1. அரசியல் - அமரர் சத்தியமூர்த்தி (வாழ்க்கைக் குறிப்புகள்) டி. பார்த்தசாரதி
2. சமயம் - தவத்திரு ஞானியார் அடிகள் - வெள்ளையாம்பட்டு சுந்தரம்
3. புலவர் - ஔவையார் சரித்திரம் - சித்தூர் சுப்பிரமணியாசாரியார்
4. அறிவியல் - தமிழ்நாட்டு விஞ்ஞானிகள் - எம்.எஸ். உதயமூர்த்தி
5. சமூகத்தொண்டு - நான்கண்ட பாரதம் - எஸ். அம்புஜம்மாள்
6. கலை - இரவிவர்மா - வித்தகன்
7. மருத்துவம் - டாக்டர் ரங்காசாமி வரலாறு - ராஜம்கிருஷ்ணன்
8. தொழில் - தொழில்மேதை ஜி.டி. நாயுடுவின் கதை - மெர்வின்
9. விளையாட்டு - கால்பந்து மன்னன் பிலே- ஜே.எம். சாலி
10. செயற்கரிய செயலாற்றியோர் - கடல் வீரன் கொலம்பஸ் - நாரா. நாச்சியப்பன்

எனப் பல துறைகளைச் சுட்டலாம்.

வாழ்க்கை வரலாற்றுத் தலைவர் மறைந்த பின் எழுதுதல் (புதுமைப்பித்தன் வரலாறு - ரகுநாதன்); வாழ்ந்துகொண்டிருக்கும் பொழுதே எழுதுதல் (அன்புப் பணிக்கு ஓர் அன்னை தெரசா - கே. பி. நீலமணி) எனும் இரு நிலைகளையும் காணலாம். தம் செயற்கரிய செயல்களால் மக்களின் சிந்தை கவரும் பொழுதும் சாதனைகள் பாராட்டுப் பெறும் பொழுதும் அவர்தம் வாழ்நாளிலேயே வரலாறுகள் எழுந்து விடுகின்றன.

ஒரு மொழியில் எழும் வாழ்க்கை வரலாற்றிற்குத் தலைவர் அம்மொழியைச் சார்ந்தவராகத்தான் இருக்க வேண்டும் என்பதும் தேவையில்லை. அவர் எந்நாட்டினராகவும் (அறநெறி பாடிய வீரகாவியம் - டாக்டர் மார்ட்டின் லூதர்கிங் - திலகவதி பால்), எம் மொழியினராகவும் (தாகூர் - மெய்யப்பன்), எம் மதத்தினராகவும் (காரைக்கால் மஸ்தான் சாஹிப் வலியுல்லாஹ் வரலாற்றுப் பேழை - காரை இறையடியான்- மு. சாயுபு மரைக்காயர்), எந்த இனத்தைச் சார்ந்தவராகவும் (டாக்டர் சண்முகம் செட்டியார் - சங்கரன்) இருக்கலாம். இவ் வேறுபாடுகள் கடந்த நிலையில் அவர்களின் பண்பும் திறமையும் பெருமையுமே இவ்விலக்கிய வகைக்குத் தலைவராகும் பெருமையை நல்குகின்றன.

இத்துறைகளில் அரசியல், சமயம், புலமை ஆகிய துறைகளைச் சார்ந்த அறிஞர்களே மிக அதிகமான நூல்களில் தலைவராகும் பெருமை பெற்றுள்ளனர். ஒருவரைப் பற்றிப் பலர் எழுதுவதற்கும் இத்துறைகளைச் சார்ந்தோர் அதிகமாக இடமளிக்கின்றனர். சான்றாக, பாரதியின் வரலாற்றை இருபதிற்கு மேற்பட்டோர் எழுதியுள்ளனர். காந்தி, காமராஜர், அண்ணாதுரை, ஈ.வெ.ரா. போன்றோர் அரசியல் துறையிலும், விவேகானந்தர் போன்றோர் சமயத்துறையிலும் பலரால் வரலாறு படைக்கப் படும் பெருமை கொண்டுள்ளனர். சமுதாயத்தில் அவர்கள் கொண்டுள்ள புகழின் உச்சமே இதற்குக் காரணமாகும்.

ஒரு நூலுக்கு ஒருவர்தான் தலைவர் (புரட்சி வீரர் நீலகண்ட பிரம்மச்சாரி - ரா. அ. பத்மநாபன்) எனும் பொது நிலை மட்டுமின்றிப் பலர் தலைவராக அமைதலும் உண்டு (எண் பெருந்தலைவர்களின் இளமை வரலாறுகள் - பூவை அமுதன்) இவ்வாறு பலர் இணைந்த நிலையில் வரும்பொழுது அவர்களுக் குள்ள ஒரு பொதுத்தன்மை அதாவது அவர்கள் சிறப்புப் பெற்ற துறை (உலகக் குத்துச்சண்டை வீரர்கள் - கே.எம். சாலி), செயல் (புதுமை கண்டவர் - ஜெயா அருணாசலம்) போன்றன அமைந்து

நூலை ஒருவழி இட்டுச் செல்கின்றன. இவையின்றி வெவ்வேறு துறையினைச் சார்ந்தோரும் ஒரே நூலில் இடம் கொண்டு தனித்தனியே நிற்றலும் (மேதைகள் வாழ்விலே - ர. சண்முகம்) காணப்படுகிறது. தமிழ் வாழ்க்கைவரலாற்று நூல்களில் இத்தகைய நூல்கள் பரவலான இடத்தைப் பெற்றுள்ளன.

இலக்கியத் தலைவருடன் எவ்வகையிலேனும் தொடர்பு கொண்டோர் நூலின் ஆசிரியராகும் சிறப்பினை இவ்விலக்கியம் கொண்டுள்ளது. தொடர்பு என்பது வாழ்க்கை வரலாற்றுத் தலைவரின் சுற்றமாக, நட்பாக அல்லது வேறு ஏதேனும் ஒருவகையில் உறவு கொண்டதாக அமைகிறது. சான்றாக, செல்லம்மா பாரதி (பாரதி சரித்திரம்), சீதாலட்சுமி குமாரசாமி (யோகாசன பேராசிரியர் வி.என். குமாரசாமி அவர்களின் வாழ்க்கை வரலாறு) போன்றோர் தம் துணைவரின் வரலாற்றைப் படைத்துள்ளனர். தம் தந்தையின் வரலாற்றை (மறைமலையடிகள் வரலாறு) மறை. திருநாவுக்கரசு எழுதியுள்ளமை குறிப்பிடற் பாலது. இது போன்றே தம் தந்தையார் வரலாற்றை (என் தந்தையார்) எஸ். அம்புஜம்மாள் எழுதியுள்ளார். தமையனாரைப் பற்றித் தம்பி எழுதுவதை மணி. திருஞானச் சம்பந்த முதலியாரின், 'வித்துவான் மணி திருநாவுக்கரசு முதலியார் சரித்திரச் சுருக்கத்துள்' காணலாம். 'தமிழிசைச் செல்வம் தந்த தமிழன்பன் ஆபிரகாம்' எனும் நூல் அவர் பேரன் ஆபிரகாம் தவப் பாண்டியனாலும், 'குணங்குடி மஸ்தான் வரலாறு' அவருடைய கொள்ளுப்பேரன் குணங்குடிதாசனாலும் வரையப்பட்டுள்ளன. சங்கரதாஸ் சுவாமிகள் வரலாற்றை அவர் மாணவர் டி.கே. சண்முகம் 'தமிழ் நாடகத் தலைமையாசிரியர்' எனும் பெயரில் இயற்றி யுள்ளார். தம் ஆசிரியர் மீனாட்சி சுந்தரம் பிள்ளை பற்றி உ.வே. சாமிநாதையர் எழுதியுள்ள நூல் இவ்வகையில் மிக்க புகழ் பெற்றதாகும். இளமை முதல் இறுதிவரை நட்புடன் பழகிய முருக. தனுஷ்கோடி தம் நண்பர் காமராசருக்குக் 'காமராஜ் சரித்திரம்' வரைந்து சிறப்பித்துள்ளார். பண்டிதமணியின் வரலாற்றை எழுதிய சோமலே அவருடன் நெருங்கிப் பழகியவராவார்.

நேரடியாக அறியாதவரைத் தலைவராகக் கொண்டு நூல் படைத்தலும் பரவலாகக் காணப்படுகிறது (கௌதம புத்தர் - அ.லெ. நடராஜன்). இவ்வகையில் நூல் எழுதும் பொழுது பரந்த ஆய்வின் பயனாகக் கற்பனை எது, உண்மை எது எனப் பிரித்தறிய வாய்ப்பு உண்டு. செவி வழிச் செய்திகளுக்கு முக்கியத்

துவம் அளிக்கும் பொழுது கற்பனை கலக்கவும் வாய்ப்பேற் படுகிறது. இதுபோன்றே தன்வரலாறு எழுதுவோரும் நம் நோக்கில் தமக்கு விருப்பமற்ற அல்லது வெறுப்பு தருகின்ற நிகழ்ச்சிகளை ஒதுக்கி விடுதல் கூடும் (க்ண்ணதாசன் - எனது சுய சரிதம்).

வாழ்க்கைவரலாற்றுத் தலைவர் சார்ந்த துறையில் உள்ளவரே அவரது வரலாற்றினைப் படைக்கும்பொழுது அத்துறை பற்றிய விரிந்த விளக்கங்கள் பெறல் ஏதுவாகிறது. ஓவியக் கலைஞரான இரவிவர்மாவைப் பற்றி ஓவியர் வித்தகன் எழுதியுள்ளமை சான்றாகும். அரசியல் ஈடுபாடு கொண்டோர் அரசியல் தலைவர் பற்றியும் இலக்கியத்துறை சார்ந்தோர் புலவர் பற்றியும் சமயநாட்டம் கொண்டோர் சமயத் தலைவர் பற்றியும் நூல்படைத்தல் ஓரளவு குறிப்பிடத்தக்க அளவில் காணப்படு கிறது. படைப்பாற்றல் கொண்டோரால் படைக்கப்படும் வாழ்க்கை வரலாற்று நூல்கள் பிறவற்றினின்றும் இலக்கிய நயத்தில் மிகுந்து நிற்றல் இயல்பு.

உடன்காலத்தவர் பற்றிய வாழ்க்கை வரலாறு படைக்கும் பொழுது, அவர் பற்றிய செய்திகளைத் தொகுத்தல் வரலாற் றாசிரியருக்கு எளிதாக இருக்கிறது. வரலாற்றுத் தலைவருக்கும் ஆசிரியருக்கும் உள்ள கால இடைவெளி அதிகரிக்க அதிகரிக்க இப்பணியும் கடினமுடையதாகிறது. கிடைக்கும் செய்திகளிலும் நம்பத்தகுந்தவை எவை, கற்பனை கலந்தவை எவை என்பதனை நன்குணர்ந்து பிரித்தல் இன்றியமையாததாகவும் சிக்கலான தாகவும் அமைகிறது. உடன்காலத்தவர் பற்றிய நூல்களே மிகுதியாக எழுவதற்கு இதுவும் ஓர் முக்கியமான காரணமாகும்.

தொல்காப்பியர் சுட்டும் 'நடுகல்' நமக்குக் கிடைக்கும் முதல் வாழ்க்கைவரலாற்றுக் குறிப்பு பற்றிய செய்தியாகும். இதனுள் மறைந்த வீரனது பெயரும் செயலும் பொறிக்கப்படுவதைச் சங்கப்பாக்களும் (அகம் 67), கிடைக்கும் நடுகற்களும் காட்டுகின்றன (கல்வெட்டு - ஓர் அறிமுகம், நடன. காசிநாதன், கு.மா. தாமோதரன் (தொகு), தமிழ்நாடு அரசு தொல் பொருள் ஆய்வுத்துறை, சென்னை, 1973). தொல்காப்பியர் உணர்த்தும் பாடாண்திணையையும் இங்குக் கருதலாம்.

சங்கத்தமிழில் புறப்பாடல்கள் பரவலாகத் தன் வரலாற்றுக் குறிப்புகளையும் பிறர் வரலாற்றுக் குறிப்புகளையும் தருகின்றன. பிசிராந்தையாரின் "யாண்டு பல ஆக நரைஇல ஆகுதல்" (புறம் 19) பாடல் தன் வரலாற்றிற்குச் சிறந்த சான்றாகும். பிறர் வரலாற்றுக்

குறிப்புகள் மிகப் பரவலாகக் காணப்படுகின்றன. புரவலரைப் போற்றுதலும் அவர் தம் செயல்களை விமர்சித்தலும் புறப்பாடல் களின் இயல்பாதலின் புரவலரின் வாழ்க்கைக் குறிப்புகள் இடம் பெறுதலுக்கு ஏதுவாகிறது (பொருநராற்றுப் படை 129-145).

சங்கப் பாடல்கள் பிறிதொரு நிலையிலும் வாழ்க்கை வரலாற்றிற்குப் பெரிதும் உதவுகின்றன. சங்கப் புலவர்கள் பலர் தம் புரவலர் என்ற நிலையிலும் மேலான ஒருவித பற்றுதலின் காரணமாகவும் ஒருவரைப் பற்றியே பல பாடல்களைப் பாடியுள்ளனர். இவற்றைத் தொகுத்து நோக்கும் பொழுது குறிப்பிட்டவரின் வரலாற்றுக் குறிப்புகள் பல கிடைக்கின்றன. அதியமான் பற்றிய ஔவையார் பாடல்கள், பாரி பற்றிய கபிலர் பாடல்கள், ஆய் அண்டிரன் பற்றிய முடமோசியார் பாடல்கள் போன்றவற்றைச் சான்றாக்கலாம். இக்குறிப்புகளைக் கொண்டு தற்காலத்தில் முழுமையான வாழ்க்கைவரலாற்றிலக்கியம் படைக்க முயன்றுள்ளமையும் இங்கு எண்ணத்தக்கது (ஔவையார் - பி.ஸ்ரீ.). இதுபோன்றே ஒரே புலவரின் பாடல்களைத் தொகுக்கும் பொழுது அவரின் தன் வரலாற்றுக் குறிப்புகளைப் பெற இயலும். பெருஞ்சித்திரனார், கபிலர் பாடல்கள் தக்க சான்றுகளாகும்.

சங்கப்பாடல்களில் 'பதிற்றுப்பத்து' வாழ்க்கை வரலாற்றுத் துறையில் குறிப்பிடத்தக்க சிறப்புப் பெறுகிறது. ஒரு குலத்தவர் (சேரர்) பற்றித் தொடர்ந்து அவர்காலப் புலவர் பத்துப் பாடல்களில் போற்றுதலையும், மாறாக அவர் இவருக்கு மிக உயர்ந்த பரிசில்களை நல்குவதையும் உணரும் பொழுது அன்றைய அளவில் இதனை வாழ்க்கைவரலாற்றின் ஒரு முயற்சியாகக் கொள்வதில் தவறில்லை எனத் தோன்றுகிறது. பிற்காலத்தில் எழுந்த மெய்க்கீர்த்திகளுக்கு முன்னோடியாகவும் இதனை ஏற்கலாம். பதிற்றுப்பத்துள் அமையும் பதிகங்களும் இங்குக் குறிப்பிடத்தக்கன. பாட்டுடைத் தலைவரின் பெற்றோர் மற்றும் அவரின் ஆட்சி சிறப்புப் போன்றவற்றைச் சுட்டும் இப்பதிகங்கள் தொடர்ந்துவரும் பத்துப்பாடல்களுக்கு முழு வடிவம் அளிக்கின்றன. பதிகத்தின் உரைநடைப் பகுதியில் பாடியோர், பெற்ற பரிசில், பாட்டுடைத் தலைவர் ஆட்சி செய்த மொத்த ஆண்டுகள் ஆகியனவும் அறிய வருகின்றன.

மெய்க்கீர்த்திகளின் பின் இராசராசன் காலத்தில் 'இராச ராசேச்சுர நாடகம்' என்ற நாடகநூல் ஒன்று இருந்ததாகக் கூறப் படுகிறது. அந்நூல் முதல் இராசராச சோழன் வெற்றி வரலாறு,

இராசராசேச்சுரம் என்னும் கோயில் எழுப்பித்த வரலாறு முதலானவற்றைத் தன்பாற் கொண்டதாகும் என்பர். இவற்றை நோக்கத் தமிழின் முதல் வாழ்க்கைவரலாற்றிலக்கியமாக இராசராசனின் வரலாறு கூறும் இந்நூல் அமைந்திருக்குமோ என எண்ண வேண்டியுள்ளது. மற்றும் வாழ்க்கைவரலாற்றைப் பிறகதை இலக்கியங்கள் போன்று அமைத்துத் தரும் பண்பிற்கும் இஃது முன்னோடியாகத் திகழ்கிறது எனலாம்.

வாழ்க்கைவரலாற்றிலக்கிய வரலாற்றுள் குறிப்பிடத்தக்க அடுத்த நூலாகச் சேக்கிழாரின் பெரியபுராணம் அமைகிறது. 15ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாகக் கருதப்படும் கடவுள் மாமுனிவரின் 'திருவாதவூரடிகள் புராணம்' இங்குச் சுட்டப்பட வேண்டிய பிறிதொரு நூலாகும். தெளிவான காலவரையறைக்கு இயலாத பிற்காலத்தில் தோன்றிய தமிழ் நாவலர் சரிதை முழுக்க முழுக்க, தமிழ்ப் புலவரின் வரலாற்றினை உலகிற்கு அளிக்க வேண்டும் என்ற நினைவில் எழுந்தது. 18ஆம் நூற்றாண்டில் எழுந்த ஆனந்தரங்கம்பிள்ளையின் நாட் குறிப்பு 1736ஆம் ஆண்டு முதல் 1760ஆம் ஆண்டு வரையிலான செய்திகள் பலவற்றைத் தருகிறது. பலரைப் பற்றிய அறிமுகங்களையும் காணமுடிகிறது. இதனுள் ஆனந்தரங்கம்பிள்ளையைப் பற்றிய செய்திகளை விட மிக அதிகமாக அக்கால அரசியலே இடம் பெறக் காணலாம். எனினும் வாழ்க்கை வரலாற்றிலக்கியத்தின் வளர்ச்சி நிலையில் இந்நூல் மிகச் சிறந்ததொரு இடத்தைப் பெறுகிறது.

இவற்றின் பின் பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற் பகுதியில் மணம் கமழ ஆரம்பித்த வாழ்க்கை வரலாற்றிலக்கியம் இந்நூற்றாண்டில் நன்கு வளர்ச்சி பெற்று வீறுடன் திகழ்கிறது. இம்முன் படைப்புகளை நோக்கும்பொழுது, ஆங்கிலக் கல்வியின் தாக்கத்தால் தான் தமிழில் வாழ்க்கை வரலாற்றிலக்கியம் தோன்றியது எனும் பொதுவான வழக்கு தவறுடையது என்பதும் தமிழின் வாழ்க்கை வரலாற்றிலக்கியத்தைச் சீர்படுத்தவும் அதிக அளவில் உருவாக்கவும் துணைநின்றது என்பது மட்டுமே உண்மை என்பதும் ஐயத்திற்கிடனின்றிப் புலனாகிறது.

1868இல் சோமசுந்தர அடியவர் எழுதிய **அச்சுதானந்த சுவாமிகள் வரலாறு** முதல் வாழ்க்கை வரலாற்றிலக்கியமாக அமைகிறது. தம் குருவின் வரலாற்றை இவர் படைத்துள்ளார். 86 செய்யுட்களைக் கொண்ட சுருக்கமான நூலாக இது அமைகிறது. தமிழின் முதல் தன் வரலாறும் செய்யுள் வடிவமே பெற்றுள்ளது. 1882இல், எண்ணற்ற பக்தியிலக்கியங்களைத்

தோற்றுவித்துள்ள வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் தம் வரலாற்றையும் **'குருபர தத்துவ நூல்'** ஆக வடித்துள்ளார். இது வரலாற்றுச் சருக்கம் முதலாகச் சமயாதீதச் சருக்கம் ஈறாக 29 சருக்கங்களில் 1240 பாடல்களால் இயன்றுள்ளது. பாயிரத்துடன் தொடங்கி வாழ்த்துடன் முடிந்துள்ளது.

1869இல் திருத்தணிகை சரவணப் பெருமாள் ஐயர், பல தனிப்பாடல்களை ஆதாரமாகக் கொண்டு 'திருவள்ளுவர் சரித்திரம்' எனும் உரைநடை நூலை வெளியிட்டுள்ளார். 1893இல் கிறித்துவக் கம்பர், 'பாளையங்கோட்டை எச். ஏ. கிருஷ்ண பிள்ளை கிறிஸ்தவரான வரலாறு' எனும் தன் வரலாற்றினை உரைநடையில் வரைந்துள்ளார். வாழ்க்கைவரலாறு, தன் வரலாறு எனும் இவற்றின் இரண்டாம் படைப்புகள் தம் படைப்பிற்கு உரைநடையைத் தேர்ந்துள்ளன. இது முதல் உரைநடை இவ்வகையில் பெருவழக்காயிற்று. சிறுகதை, புதினம் போன்று இவையும் பொதுமக்கள் இலக்கியமாக இன்று சிறப்புற்றுள்ளன. பொதுவாழ்வில் ஈடுபட்டுள்ளோர் மீதும், பல துறைகளிலும் புகழுடன் விளங்குபவரில் தம்மைக் கவர்ந்தவர் மீதும் மக்கள் கொள்ளும் அன்பும் அவர்தம் வரலாறு அறிய காட்டும் விருப்பமும் இப்பெருக்கத்திற்குக் காரணங்களாகும்

தன்னுணர்வின் வடிகாலாக, புலமையின் வெளியீடாக கற்பனையின் கருவூலமாக அமையும் இலக்கியங்களினின்றும் வாழ்க்கைவரலாறு மிகுதியும் வேறுபடுகிறது. வாழ்க்கை வரலாற்றைச் சுவைபட அமைப்பதிலும் நிகழ்ச்சிகளை முரணின்றித் தெளிவாகத் தருவதிலும், தலைவரின் பண்பினை இயல்பாக உணர்த்துவதிலும் வாழ்க்கைவரலாற்றாசிரியர் தம் திறமையைக் காட்ட வேண்டியுள்ளது. இதற்காக அவர், வாழ்க்கைவரலாற்றுத் தலைவர் பற்றிய ஒரு முழுமையான அறிவினைப் பெற வேண்டியுள்ளது. அதற்குத் துணை நிற்பனவற்றை வாழ்க்கைவரலாற்று மூலங்கள் எனலாம். அவை: 1. வாழ்க்கைவரலாற்றுத் தலைவர் தரும் குறிப்புகள், நாட் குறிப்புகள், அவரின் படைப்புகள், 2. உடன் உறைந்தோர் தரும் கருத்துகள், குறிப்புகள் போன்றன, 3. கல்வெட்டுகள், 4. வாழ்க்கை வரலாற்றுத் தலைவரின் கடிதங்கள், 5. வாழ்க்கைவரலாற்றுத் தலைவர் பற்றி மற்றோர் எழுதி வைத்துள்ள நூல்கள், 6. வாய்மொழி இலக்கியங்கள், 7. ஏனைய செய்திகள் என்பனவாகும்.

ஒரு சிறந்த வாழ்க்கைவரலாற்றிலக்கியம் உருவாவதற்கு ஆசிரியர் மேற்கொள்ளும் முன்னேற்பாடுகள் அதன்

படைப்பருமையை உணர்த்துகின்றன. பொன்னியின் புதல்வரைப் படைத்த சுந்தா பற்றி கி. ராஜேந்திரன், "அடுத்தபடியாக சுந்தா, கல்கியின் நூல்களையெல்லாம் படித்தார். ஏற்கனவே படித்திருந்தனவற்றை மீண்டும் புதுக் கண்ணோட்டத்தில் படித்தார். புத்தகங்களாக வெளிவராத கதை கட்டுரைகளையும் தேடிக் கண்டுபிடித்து ஆராய்ந்தார். அப்புறம் கல்கியின் பல்வேறு பணிகளுக்கும் தனித்தனி நோட்டுப் புத்தகங்கள் போட்டுக் கொண்டு குறிப்பெடுக்கத் தொடங்கினார். பிறகு கல்கியின் உறவினர்கள் நண்பர்கள் அனைவரையும் சந்தித்துப் பேசித் தகவல்கள் சேர்த்தார். இவ்வளவும் செய்த பிறகு நோட்டுப் புத்தகங்களில் குறிக்கப்பட்டுள்ள வாழ்க்கைவரலாற்று நிகழ்ச்சிகளைக் கல்கி தமது இலக்கியப் படைப்புகளில் எவ்வாறு கையாண்டிருக்கிறார் என்று ஆராயத் தொடங்கினார். அதற்குக் குறிப்பு எடுத்தார். இதன் பிறகுதான் எழுதத் தொடங்கினார்" என்று கூறியிருப்பது வாழ்க்கைவரலாறு எப்படி எழுத வேண்டும் என்பதற்கு ஓர் வழிகாட்டியாக அமைகிறது.

இவ்வகையிலக்கியங்களின் உள்ளடக்கத்தைக் கருத்துள் கொள்ளும்பொழுது அவற்றுள் சில வகைமைகளை உணர முடிகிறது.

1. வாழ்க்கைத் துணுக்குகள்: வாழ்க்கைவரலாற்றுத் தலைவர் பற்றிய அடிப்படைச் செய்திகள் (பிறப்பு, பெற்றோர், ஊர் போல்வன) யாதும் இருக்காது. அவர் வாழ்வில் நடந்த குறிப்பிட்ட ஒரு நிகழ்ச்சி மட்டும் இடம்பெறும். இத்தகையன தொகுப்பு நூலாகவே அமையும். இவை வாழ்க்கை வரலாற்றிலக்கியத்துள் மிகச் சிறுபான்மையாகவே உள்ளன. மெர்வின் எழுதிய மேதைகள் வாழ்விலே எனும் நூல் இதற்குச் சான்றாம். வாழ்க்கை வரலாற்றிலக்கியத்தின் நோக்கம் இங்கு நிறைவுபடாவிடினும் ஒருவரைப் பற்றி அவரின் வாழ்வில் நடந்த ஒன்றைக் கற்பாருக்கு அறிவித்தல் என்ற நிலையில் தொடர்புடையதாகிறது. இதழ்களில் இத்தகையன அதிகமாக இடம்பெறுகின்றன. அறிந்தவர் பற்றிய கூடுதல் அறிவினைப் பெற இவை உதவுகின்றன. தற்பொழுது மக்களிடையே புகழ்பெற்று விளங்குபவர் பற்றிய செய்திகளே அதிகமாகக் காணப்படினும் மறைந்தவர் பற்றிய செய்திகளும் காணப்படுகின்றன.

2. வாழ்க்கை அறிமுகம் : இத்தகையனவற்றிலும் ஒருவர் வாழ்வின் முழுமையை அறிய முடியாது. ஆயின் அவர் பற்றிய அடிப்படைச் செய்திகளுடன் அவரது வாழ்வின் முக்கிய

நிகழ்ச்சிகளில் ஒருசிலவற்றைக் கொண்டு, அவர் பண்பினை, மேன்மையினைச் சுட்டுவன இதன் பாற்படும். இவ்வகையின ஓரளவு குறிப்பிடத்தக்க அளவில் காணப்படுகின்றன. சான்றாகச் சி.பி. சிற்றரசுவின் மாபெரும் வீரர்கள், மு. உலகநாதனின் தமிழ்நாட்டின் தவப் புதல்வர்கள் போன்றவற்றைச் சுட்டலாம். இவ்வகையினவும் பல தலைவர் பற்றிய தொகுப்பு நூலாக அமைகின்றன.

3. **வாழ்க்கைக் குறிப்புகள் :** இதனுள் வாழ்க்கை வரலாற்றுத் தலைவரின் பிறப்புமுதல் நூல் எழுதுங்காலம் வரையிலான முக்கிய நிகழ்ச்சிகள் அனைத்தும் பெரும்பாலும் இடம்பெற்றிருக்கும். அவை விரிவான விளக்கங்கள் இன்றிச் சுருக்கமாகக் கூறப்பட்டிருக்கும். அதனுள்ளும் வாழ்க்கை வரலாற்றுத் தலைவரின் சிறப்பு, பண்பு போன்றனவற்றில் குறையேதுமின்றிக் காட்டப்படுதல் தேவையாகிறது. இவற்றை வாழ்க்கைச் சுருக்கங்கள் என்றும் கூறலாம். குறிப்பான வாழ்க்கை நிகழ்வுகள் அதிக விளக்கமின்றிக் குறிப்பாகச் சுட்டப்படுதலின் வாழ்க்கைக் குறிப்புகள் என இவண் நவிலப்பட்டுள்ளது. இவ் வகையில் தனி நூலாகவும் பலரின் வாழ்க்கையைத் தொகுத்துத் தரும் நூலாகவும் அமைகின்றன. பழனியப்பா பிரதர்ஸ் பதிப்பகம் வெளியிட்ட நாட்டுக்கு உழைத்த நல்லவர் வரிசை, அறிவியல் அறிஞர் வரிசை, சாகித்திய அக்காதெமி வெளியிடும் இந்திய இலக்கியச் சிற்பிகள் நூல்வரிசை போன்றவற்றைத் தனி நூலுக்குச் சான்றாக்கலாம். புரவலனின் பேராற்றல் பெற்ற பெண்கள், அ. குப்புஸ்வாமியின் தென்னிந்திய மஹாமஹோபாத்யாயர்கள் வரலாறு போன்றன தொகுப்பு நூல்களுக்குக் காட்டாகும். விரிந்த வரலாற்றினின்றும் எழும் சுருக்க வரலாறுகளையும் இங்குக் கருதலாம். மறை. திருநாவுக்கரசின் மறைமலையடிகள் வரலாறு விரிந்த நிலையிலும், சுருக்கமாகவும் வெளிவந்துள்ளது சான்றாகும்.

4. **ஒருமுக வரலாறு:** எந்த ஒரு மனிதனுக்கும் பல்வகை வாழ்க்கை நிலைகள் அமைகின்றன. அவை பருவ நிலைகளின் அடிப்படையில் அதாவது, ஏதாவது குறிப்பிட்ட காலக்கட்டத்தினை மட்டும் சிறப்பிக்கும் நிலையிலும் தோன்றலாம். எல்.எஸ். கரையாளரின் 'திருச்சி ஜெயில்' எனும் நூல் அவர் வாழ்வில் 1940 டிசம்பர் 12 முதல் 1941 மே 23 வரை நிகழ்ந்த சிறை வாழ்க்கையை மட்டும் நவில்கிறது. பூவை அமுதனின் 'எண்பெருந்தலைவரின் இளமை வரலாறுகள்' நூலையும் இதற்குச் சான்றாக்கலாம்.

சிலர் வாழ்வினைப் பலநிலைகளில் நோக்கி ஆராய்வதற்கு இடம் இருக்கையில் அவற்றுள் ஒன்றினை முதன்மைப்படுத்தி

அதனை நோக்கித் தம் நூலைச் செலுத்துதலும் உண்டு. இவை தலைவரின் இயல்பினை முழுமையாக அல்லாது குறிப்பிட்ட ஒரு நிலையில் மட்டுமே தருதலால் ஒருமுக வரலாறு ஆகின்றன. மணிமொழியின் கருணைத்தேவன் காந்திமகான், சி.ஞானமணியின் எழுத்தாளர் ம.பொ.சி போன்றன இவ்வகையின. இந்நிலை நூல்கள் சிறுபான்மையே எழுந்துள்ளன.

5. **முழுமை வரலாறு:** வாழ்க்கைவரலாற்றிலக்கிய வகையுள் இதுவே சிறப்பிடம் பெறுகிறது. ஒருவரைப் பற்றிய முழுமையான கண்ணோட்டத்தினை, அவரது வாழ்வின் முக்கிய நிகழ்ச்சிகள் எவையும் விடுபடாமல், அவரின் பண்புகள், வெற்றிகள், தோல்விகள், சாதனைகள் என எவையும் விடுபடாமல் கற்பாருக்கு அவர் பற்றிய முழுமையான ஓவியத்தை நல்குவன இதன்பாற்படும். இவர் பற்றிய பிறரின் கருத்துரைகளும் இடம் பெறலுண்டு. வாழ்க்கைத் துணுக்குகள், வாழ்க்கை அறிமுகம் போன்றவற்றைத் தனிப்பாடல்கள் என்றால் இதனைக் காப்பியங் களுடன் ஒப்பிடலாம். இவ்வகை நூல்கள் தமிழர் பெருமை கொள்ளும் அளவிற்குச் சிறப்பாகவும் மிகுதியாகவும் அமைந்துள்ளன. ரா. கணபதியின் சுவாமி விவேகானந்தர், அ.லெ. நடராஜனின் நெப்போலியன், சுந்தாவின் பொன்னியின் புதல்வர், உ.வே. சாமிநாதையரின் என் சரித்திரம், பரணிதரனின் கஸ்தூரி திலகம், சோமலேயின் பண்டிதமணி, கௌசிகனின் ராஜாஜி போன்ற பலவற்றை இதற்கு எடுத்துக்காட்டலாம்.

வாழ்க்கை வரலாற்றுத் தலைவரின் வாழ்க்கை இறுதிவரை நூல் அமைந்தால்தான் முழுமை வரலாறு என்பதில்லை. தன் வரலாறுகளில் இது இடம்பெற இயலாது என்பதுடன் திரு.வி.க. வின் 'திரு.வி.க. வாழ்க்கைக் குறிப்புகள்', ம.பொ.சி.யின் 'எனது போராட்டம்' போன்றன மிகச் சிறந்த முழுமையான வாழ்க்கை வரலாற்று நூல்களாக அமைந்திருத்தலும் சுட்டத்தக்கது.

6. **வாழ்க்கை ஆய்வுகள்** : ஒருவரின் வாழ்க்கை நிகழ்வுகளைத் தர வேண்டும் என்பதுடன் அவர் பற்றிய உண்மையினை ஆய்தலை நோக்கமாகக் கொள்வதும் இதன் பாற்படும். ம.பொ.சி.யின் 'ஔவையார்?', சோவின் 'காமராஜரை சந்தித்தேன்' போன்ற ஒரு சில நூல்கள் இவ்வாறு அமைகின்றன. ஒருவரைப் பற்றிப் பலவித எண்ணங்கள் நிலவுங்கால் அவற்றின் உண்மை நிலை அறிய வேண்டும் என்ற எண்ணம் எழும் பொழுதும் தன்னுடைய நோக்கில் ஒருவர் எவ்வாறு அமைகிறார் என்பதை உணர்த்த விரும்பி வாழ்க்கை வரலாற்றுத் தலைவருடன்

ஆசிரியர் தம்மையும் நூலில் உட்படுத்தும்போதும் இவை எழுகின்றன.

**7. வாழ்க்கை ஒப்பாய்வுகள் :** ஒவ்வொரு மனிதனுக்கும் ஒவ்வொரு நிலையில் வாழ்க்கை அமையினும் ஏதேனும் ஒரு சில கூறுகளில் ஒன்றுபடுகின்றனர் அல்லது ஒரே நோக்கில் இருவேறு பாதைகளை மேற்கொள்கின்றனர். இவற்றினை ஒப்பு நோக்கி அவர்களின் வாழ்க்கை வரலாற்றை ஒருங்கே பிணைத்துத் தருதல் இவ்வகையைச் சாரும். 'காந்தியும் விவேகானந்தரும் - ஒரு பரிசீலனை' என்று வெ. சாமிநாத சர்மாவால் இயற்றப்பட்ட நூல் இதற்குச் சான்றாகும். வாழ்க்கைவரலாற்றிலக்கியத்துள் வளர்ச்சியை உணர்த்தும் இவ்வகை மிக அருகியே காணப்படு கிறது. இவை ஏனைய நூல்களைவிட மிகுந்த சுவையை, வாழ்க்கை வரலாற்று இலக்கியத்தைப் படிக்க வேண்டும் என்ற ஆர்வத்தினைக் கற்பாருக்கு அளிக்கின்றன எனில் மிகையாகாது.

**8. வாழ்க்கைப் புனைவுகள் :** வாழ்க்கை வரலாற்றுத் தலைவரின் வாழ்வில் நடந்த உண்மை நிகழ்வுகளின் துணை கொண்டு, படைப்பாளர் தம் புலமைத் திறனையும் இணைத்து, கற்பனைப் பாத்திரங்கள், சூழல்கள், நிகழ்வுகள் போன்றவற்றைப் படைத்துப் படைப்பிலக்கியங்களுடன் ஒத்துத் திகழ்வன இதனுட் படுகின்றன. வாழ்க்கை வரலாற்றுத் தலைவரின் உண்மைச் சித்திரத்துடன் ஆசிரியர் தம் கற்பனையையும் இணைத்துத் தருவதனால் இவை வாழ்க்கைப் புனைவுகளாகின்றன. இரா. பழனிச்சாமியின் கவிச்சக்கரவர்த்தி கம்பன் போன்றன இதனுள் அடங்குகின்றன.

வாழ்க்கை வரலாற்றுத் தலைவரின் வெற்றி முகத்தினைப் படிப்படியாகக் காட்டிக்கொண்டே செல்லுதல் இவ்விலக்கியத்தின் உயிர்நிலையாக அமைகிறது. நூலின் பெரும்பகுதியைத் தன்னுட் கொண்டதாகவும் இஃதமைகிறது. வாழ்க்கை இலக்கியம் என்று இதனைக் குறிப்பிடலாம். வரலாற்றுத் தலைவரின் நோக்கம் அல்லது கொள்கை நிறைவேற, கொண்ட முயற்சியில் வெற்றி, தோல்வி 'என்பனவாக இது அமைகிறது. இதனைச் சுற்றியே இவர்தம் வாழ்வு நிகழ்வுகளும் நிகழக் காண்கிறோம்.

சமயப் பணியில் ஈடுபட்ட சுவாமி விவேகானந்தரின் வரலாறு, உலகில் இந்து சமயத்தின் பெருமையை நிலைநாட்டிய முயற்சியை முன்னிட்டே வளர்ந்து செல்கிறது. திரைப்படத் துறையில் வெற்றி கண்ட ஏ.வி. மெய்யப்பனின் வரலாறு இத்

துறையில் உயர்நிலை அடைய அவர் மேற்கொண்ட முயற்சிகளைச் சுற்றியே சுழல்கிறது. ஓவியக் கலைஞர் இரவிவர்மாவின் வரலாறு அவர் அத்துறையில் ஆற்றிய அரும்பெரும் சிறப்புகளையே காரணகாரியத்தோடு நவில்கிறது. புதுமைப்பித்தன் வரலாறும் இலக்கிய உலகில் அவர் புதுமைப்பித்தனாக மலர்ந்து மணம் வீசியதையே காட்டுகிறது. மாவீரன் நெப்போலியன் தன் கனவை நினைவாக்கக் கொண்ட பெருமுயற்சியே அவர் வரலாறாகக் கனிந்துள்ளது. உவே. சாமிநாதையரின் தமிழார்வத்தையும் தமிழ்ப் பணியையும் தவிரப் பிறவற்றை அவரின் வாழ்க்கை வரலாற்றில் பெறலரிது. இதுபோன்றே ஒவ்வொரு அறிவியல் அறிஞரும் தம் கண்டுபிடிப்புகளுக்கு நடத்தும் போராட்டமே அவர் தம் வாழ்வாக, வரலாறாக வடிக்கப்பட்டுள்ளது. இவ்வாறு வரலாற்றுத் தலைவர் எத்துறையைச் சார்ந்தவரோ அத்துறையில் அவர் பெற்ற வெற்றிகள், கண்ட முன்னேற்றங்கள், சிறப்புகள் போன்றவையே அவர்தம் வாழ்வில் முதன்மை பெற்றமையைக் காண்கிறோம். அத்துறையினின்றும் பிரிக்கவியலாதவாறு அவர் அதனுடன் கலந்து நிற்கின்றார்.

வாழ்க்கைவரலாற்றுத் தலைவர் எத்துறையில் வெற்றி அல்லது உயர்நிலை அடைந்தாரோ அத்துறையும் அவர்தம் வரலாறு உரைக்கும் நூலுள் சிறப்பு பெறுதல் தவிர்க்க இயலாததாகிறது. தலைவர், அவர் சார்ந்த துறை என இரண்டைப் பற்றியும் அறியும் நிலையில் வாழ்க்கை வரலாற்றிலக்கியம் இரட்டைப் பயனுடையதாகிறது. காவல் துறையைச் சார்ந்த எப்.வி. அருள் தம் 'ஒரு போலீஸ்காரரின் டைரி' நூலுள் காவல்துறை பற்றிய செய்திகளைத் தருகிறார். 'மலபார் விசேஷ போலீஸ் படை பிறந்த வரலாறே ஒரு தனிக்கதை. ஏர்காடு தாலுகாவில் மாப்பிளாக்கள் என்ற பிரிவினர் அதிகமாக வாழ்கிறார்கள். அந்தப் பகுதியில் கலவரங்கள் நடந்தவாறு இருந்தன. 1821 முதல் 1921 வரை ஒருநூறு ஆண்டுகட்குக் கணக்கு எடுத்தால் கிட்டத்தட்ட முப்பத்தாறு பெருங்கலவரங்கள் அந்தப் பகுதியில் நடந்திருக்கின்றன. 1921-இல் மிகப் பெரிய அளவில் நடந்த கலவரத்தையொட்டித்தான் மலபார் விசேஷப் போலீஸ் படையைப் பிரிட்டிஷ் அரசு அமைத்தது' என்பதைச் சான்றாக்கலாம். இது போன்றே ஒவ்வொரு துறையிலும் காணலாம்.

வாழ்க்கைவரலாற்றுள் தலைவரின் பிறப்பு மற்றும் வாழ்க்கை நிகழ்வுச் சூழல், அவரது பண்பு நலன்கள், பழக்க வழக்கங்கள், அனுபவம், அவர்தம் மொழிகள், அவரைப் பற்றிய

மதிப்புரைகள் என்பன இதனுள் சிறப்பிடம் கொள்கின்றன. இதன் உள்ளடக்கக் கூறுகளில் வாழ்க்கைவரலாறு, தன் வரலாறு எனும் இரண்டினுள் பெரிய வேறுபாடுகள் காண்பதற்கில்லை.

நூலின் முன் அல்லது பின் வாழ்க்கை வரலாற்றுத் தலைவரின் முக்கிய வாழ்க்கை நிகழ்ச்சிகள் தோற்றம் முதல் இறுதிவரை கால வரிசையில் தொகுத்தளிக்கப்படுகின்றன. வாழ்க்கைவரலாற்றுத் தலைவர் பற்றிய சுருக்கமான கண்ணோட்டத்தினை இவை நல்குகின்றன. வரலாற்றாசிரியர் தம் எண்ணத்திற்கு ஏற்ப நிகழ்ச்சிகளை முன்பின் அமைத்துக் கூறும்பொழுது இக்குறிப்பு வாழ்க்கைவரலாற்று நிகழ்வுகளை வரிசைக் கிரமமாக அறிய பெரிதும் துணை நிற்கிறது.

வாழ்க்கைவரலாற்று நிகழ்ச்சிகளுக்கு இடையிலேயே வரலாற்றாசிரியர் இடைபுகுதல், சூழ்நிலையைத் தெளிவுறுத்தல், பண்பு விளக்கம் செய்தல், நிகழ்ச்சியின் இயல்பினை உள்ளவாறு உணர்த்தல் போன்ற பயன்களை உடையனவாதல் வேண்டப் படுகிறது. 'நெப்போலியனைப் போல நெஞ்சுரம் படைத்த ஒரு சக்கரவர்த்தியைச் சரித்திரத்தில் காண்பது அருமை; எண்ணிய எண்ணியாங்கு எய்துவர் எண்ணியர் திண்ணியர் ஆகப் பெறின் என்னும் குறள் நெப்போலியன் வாழ்க்கையில் முழுக்க முழுக்கப் பொய்த்துவிட்டது. அடல் வீரனையும் விஞ்சிய முழு ஆற்றல் ஒன்று இருக்கிறது என்பது இதன்மூலம் தெரிகிறது. இத்தகைய நிலையையே நம் நாட்டுப் பெரியவர்கள் விதியென்று குறிப்பிடு கிறார்கள். ஊழின் பெருவலியாவுள என்பது நெப்போலியன் வாழ்வில் முழுவதும் பொய்யாகிவிட்டது' என்னும் குறிப்பு (மாவீரன் நெப்போலியன், அ.லெ. நடராஜன், ப. 320) நெப்போலியனைப் பற்றிய ஒரு பரிதாப உணர்வை உண்டு பண்ணக் காணலாம்.

காப்பு, கடவுள் வாழ்த்து (சி.வை. தாமோதரம் பிள்ளை அவர்கள் சரித்திரம் - தி.ஓ. ராஜரத்னம் பிள்ளை), நூற்பயன் (ஸ்ரீமணிய சிவனார் சரித்திரம் - வி.கோ. சூரியநாராயண சாஸ்திரியார், ப.60), நூலாசிரியர் - நூல் தலைவர் தொடர்பு (புதுமைப்பித்தன் வரலாறு - ரகுநாதன், ப.154), பிறந்த காலக்கணிப்பு (தணிகைமணி, டாக்டர். வ.சு. செங்கல்வராய பிள்ளை அவர்களின் வரலாறு), மரபுவழிப் பட்டியல் (பாகூர் சு. குப்புசாமி முதலியாரின் வரலாற்றுக் களஞ்சியம்), வாழ்க்கை வரலாற்றுத் தலைவருடன் தொடர்புடையோர் (இரவிவர்மா - வித்தகன், ப.95), வாழ்த்து (பொன்னாரம் - பி.எல். ராஜேந்திரன்) எனும் பொருட் கூறுகளும் இதனுள் அமைதலும் உண்டு. இதனுள் புதியன புகுத்தல் அரிது.

எனவே சோ. சிவபாத சுந்தரம் பயணத்தையும் வாழ்க்கை வரலாற்றையும் இணைத்துத்தரும் 'கௌதம புத்தர் அடிச்சுவட்டில்' என்பது போன்ற நூல்களை இத்துறைகளின் பெரிய வெற்றி எனத் துணியலாம். வாழ்க்கை வரலாற்று நூல்களுக்கு இன்றியமையாத, நிகழ்வுகளுக்கான காலக் குறிப்பு தமிழ்ப்படைப்புகளில் சிறப்புப் பெறவில்லை. தன் வரலாறுகளில் கூட இக்குறைபாடமைவது சுட்டத்தக்கது.

உரைநடை இதன் பொதுவான வெளியீட்டு அமைப்பாக இருப்பினும் காப்பியம் (அரங்க. சீனிவாசன்-மனித தெய்வம் காந்தி காதை), புதுக்கவிதை (வைரமுத்து-கவிராஜன் கதை) எனச் செய்யுள் வடிவங்களும் உள. தலைவரின் பிறப்பு முதல் நூல் எழுதுங் காலம் வரையிலான நிகழ்வுகளைக் கால வரிசையில் தொடர்ச்சியாக அமைத்துச் செல்லலும் உண்டு (டெய்சி இராசையா - ஹெலன் கெல்லர்). அவ்வாறின்றித் தலைவரின் பலவித பண்புகள் அல்லது பணிகள் என்பனவற்றை வரிசைப் படுத்திக் கொண்டு ஒவ்வொன்றாக அவற்றை விளக்கி வரலும் காணப்படுகிறது. (சுந்தா-பொன்னியின் புதல்வர்).

நூல் யாருக்காக எழுதப்படுகின்றது என்ற நோக்கில் அமைப்பில் வேறுபாடு காணப்படுகிறது. சிறுவர்களுக்கு என்று எழுதும் பொழுது அவர்களுக்குத் தேவையானதும் அவர்களால் புரிந்து கொள்ளக்கூடியதுமான நிகழ்வுகள் மட்டுமே இடம்பெறுகின்றன (தமிழ்முடி-குறள்வழி நடந்த பெரியோர்கள்).

நிகழ்வுகளின் தேர்விலும், நூலின் படைப்பு நோக்கம் அடிப்படையாகிறது. சுருக்கமான வரலாறுகளில் தேவையானவை மட்டுமே இடம் பெறுகின்றன. விரிந்த வரலாறுகளில் வாழ்க்கை வரலாற்று நூலுக்குத் தேவையானவை அனைத்தும் இணைந்து நிகழ்ச்சிப் பெருக்கம் காட்டுகின்றன. மற்றும் இரண்டிலும் இடம்பெறும் ஒரே நிகழ்வு கூடச் சுருக்கமாகவும், மற்றதில் போதிய அளவு விரிந்தும் அமைகின்றன. மற்றும் நூலாசிரியர் வரலாற்றுத் தலைவரின் வாழ்வில் நடந்த நிகழ்ச்சிகளுக்கு அளிக்கும் முக்கியத்துவத்தைப் பொறுத்தும் இவற்றின் இயல்பு அமைகிறது.

சில வாழ்க்கைவரலாறுகள் செய்திகளின் கோவையாகத் தனிப்பாடல்களின் தொகுப்பு போன்று அமைவதும் உண்டு. பி.கே.எஸ். ஜம்புநாதனின் கஸ்தூரிபா கதைகளைக் காட்டு ஆக்கலாம். நூல் தலைவரே தனித்தனியே நிற்கும் நிகழ்ச்சிகளின் இணைப்பு பாலமாக அமைகிறார். காப்பியக் கதை அமைப்பாக

அமையும் முகம், பிரதிமுகம், கருப்பம், விளைவு, துய்ப்பு எனும் வளர்ச்சிநிலை பொருந்துமாறும் வாழ்க்கை வரலாற்றிலக்கியங்கள் பல அமைகின்றன. இதனை அ.லெ. நடராஜனின் நெப்போலியன் வழிக் காட்டலாம். இதனுள் அமையும் போர்வீரன் எனும் பகுதி தொடக்க நிகழ்ச்சியாகவும், தலைமைக் குடிமகன் எனும் பகுதி திருப்பு மையம் அல்லது சிக்கலாகவும், சக்கரவர்த்தி எனும் பகுதி உச்சக்கட்டமாகவும், விதியின் விளையாட்டு எனும் பகுதி விளைவாகவும், இறுதிக்காலம் துய்ப்பாகவும் நிற்கக் காணலாம். பெரும்பான்மையான அறிவியல்துறை சார்ந்த அறிஞர்களின் நூல்களில் இவற்றைப் பொருத்தவியலும்.

உ.வே.சா.வின் 'என் சரித்திரம்' போன்ற பல நூல்களில் இத்தகு ஏற்ற இறக்கம், சிக்கல் போன்ற பெரும் மாற்றநிலைகளின்றித் தொடர்ந்து ஆற்றொழுக்காகச் செல்லும் முறைமை காணப்படுகிறது. இத்தகைய வரலாறுக்ள் படைப்பாளரின் திறமையால் சுவைபட நடத்திச் செல்லப்படுகின்றன.

காப்பிய மரபினைப் பின்பற்றி விரிவான நிலையில் வாழ்க்கைவரலாற்றுத் தலைவரின் நாடு, நகர்வளம் காட்டல் (வாரியார் வாழ்க்கை வரலாறு-திருமுருக கிருபானந்த வாரியார்), மாணாக்கர் வினவ ஆசிரியர் கூறுவதாகப் புராண மரபினைப் பின்பற்றல் (ஸ்ரீமணிய சிவனார் சரித்திரம் - சி.வை. தாமோதரம் பிள்ளை), காலச் சூழலைச் சுட்டுதல் (கவிராஜன் கதை-வைரமுத்து), வரலாற்றுத் தலைவருக்குப் புகழ் பெற்றுத் தந்ததனை முற்கூறல் (புதுமை கண்டவர் - ஜெயா அருணாசலம்), இளம் பருவ சிறப்புச் செயலைக் காட்டுதல், முடிவை முன்னிறுத்துதல் (மானங்காத்த மங்கையர், கௌசிகன்), சிறப்பியல்புகளை முன்னடுக்குதல் (உழைப்பால் உயர்ந்த ஜி.டி. நாயுடு - மெர்வின்), கற்பனை நயத்துடன் வருணித்தல் (ஹெலன் கெல்லர் - டெய்சி இராசையா) என இவ்வாறு பல்வேறுபட்ட உத்திகளுடன் வாழ்க்கை வரலாறுகள் தொடங்குகின்றன.

தன் வரலாறுகள் மிகுதியும் தன்மையில் அமைய கவிஞர் கண்ணதாசன் தம் வரலாற்றை 'அவன் மெதுவாக உள்ளே நுழைந்தான். பத்திரிகைக்கு அலுவலகமாக அமைந்திருந்த அந்த வீடு அமைதி தவழும் இடமாகக் காட்சியளித்தது. காலில் பழைய பூட்சும், கையில் தகரப் பெட்டியுமாக நின்ற அவன் 'சார்! சார்!' என்று குரல் கொடுத்தான். பதில் இல்லை. இன்னும் உள்ளே நுழைந்தான் அந்த எழுத்தாளன்' என்று படர்க்கையில் அமைத்திருப்பது ஒரு புதுமையே. முன்னுரையில் கவிஞர், 'நான் என்று

எழுதுவதற்குத் தகுதி போதாது, என்ற தன்னடக்கத்துடனேயே 'அவன்' என்று என்னைக் குறிப்பிட்டேன்' என்று அமைதி காட்டியுள்ளார்.

சிறுவர்க்காக வாழ்க்கை வரலாறுகள் படைக்கப்படும்பொழுது அதில் கதை கூறும் பாங்கினைக் காண்கிறோம். அவர்களுக்கேற்ற எளிய சொற்களில், தெளிந்த நடையே பின்பற்றப்படுகிறது. குறள், மற்றும் பிற படைப்பாளரின் கருத்துகளும் தேவைக்கேற்ப பொதுவாக வாழ்க்கை வரலாற்றிலக்கியங்களில் இடம்பெறுகின்றன. இடையிடையே வரலாற்றுத் தலைவரின் மொழிகளை கருத்துகளை இணைப்பதும் கூறவந்த கருத்துக்கு வலுவூட்டல், அதன் உண்மையை நிலை நாட்டல், நூலுக்குச் சுவை கூட்டல் எனத் துணை செய்கின்றன. சில நூல்களின் இடையே சிறியவர், பெரியவர் என்ற வேறுபாடின்றி நூலைக் கற்பார் அனைவருக்கும் பொருந்தும் வகையில் பொதுவான அறிவுரைகளைக் கூறிச் செல்லல் காணப்படுகிறது. 'உன் மேல் தவறா என் மேல் தவறா என்கிற வீண் சர்ச்சையில் இறங்காமல் எது தவறு என்பதைக் கண்டுபிடித்து அதைத் திருத்திக் கொண்டு ஒற்றுமைப்பட்டு விட்டால் உலகத்தில் எந்தப் பிரச்சினையையும் சுலபமாகத் தீர்த்து விடலாம் என்கிற மகத்தான உண்மையை அந்த நாடகம் உணர்த்தியது' என ஏ.வி. மெய்யப்பச் செட்டியார் தமது 'எனது வாழ்க்கை அனுபவங்களி'ல் கூறியிருப்பதைச் சான்றாக்கலாம்.

நூலின் இடையிடையே வரலாற்றுத் தலைவரின் பல்வகைத் தோற்றங்களைக் காட்டும் புகைப்படங்களையும் அவரோடு தொடர்புடையோரின் மற்றும் தொடர்புடைய இடங்களின் புகைப்படங்களையும் இணைத்தல் இவ்வகை நூல்களுக்குத் தனித்தொரு கவர்ச்சியைத் தருகிறது. அண்மைக் காலங்களில் வெளிவரும் நூல்களில் இதனைப் பரவலாகக் காணலாம் (ராசா சர். முத்தையா செட்டியார், ஆறு. அழகப்பன்). தற்கால இலக்கியங் களில் பிறமொழிச் சொற்களை அவ்வாறே கையாளுதல் பரவலாகக் காணப்படுகிறது. வாழ்க்கை வரலாற்றிலக்கியங்களும் அதற்கு விலக்காகாது உடன்படுகின்றன. தமிழறிஞரால் மட்டுமின்றிப் பல்துறை சார்ந்தோராலும் நூல் படைக்கப்படுதல் இப்பிறமொழிச் சொற்கலப்பிற்குரிய முதன்மைக் காரணங்களுள் ஒன்று எனலாம். எவ்வகையிலாயினும் இக்குறைபாடு களையப்பட வேண்டிய ஒன்றாகும்.

வரலாற்றுத் தலைவரைப் போற்றி அல்லது வாழ்த்தி நூலை நிறைவு செய்தல் பொதுநிலை. சமுதாயப் பணியில், அறிவியல்

துறையில் தம்மை ஈடுபடுத்திப் பெரும்புகழ் பெற்றோரின் வாழ்க்கை வரலாறுகள் பெரும்பாலும் அவர்கள் பெற்ற பட்டங்கள், பரிசுகள், பெருமைகள் போன்றவற்றைப் பட்டிய லிட்டுத் தருவதுடன் நிறைவடைகின்றன (அன்புப் பணிக்கு ஓர் அன்னை தெரேசா - கே.பி. நீலமணி). வரலாற்றுத் தலைவரின் வாய்மொழியைக் கொண்டே நூலை நிறைவு செய்யும் பாங்கும் சுட்டத்தக்கது (சுவாமி விவேகானந்தர் - ரா. கணபதி). "புதுமைப் பித்தன் யார்? இலக்கியத் திருடனின் பேய்க்கனவு, புத்தகாசிரியர் களுக்கு ஒட்டக்கூத்தன், வலுவற்றுக் கிடந்த தமிழ் வசனத்துக்கு வாலிபம் தந்த சஞ்சீவி, உலக இலக்கிய சத்சங்கத்திலே தாமாகவே இடம்பிடித்துக் கொண்ட மேதை, சிறுகதை இலக்கியத்தின் ஆசியஜோதி, இளம் எழுத்தாளர்களின் லட்சியம், யதார்த்த வாதிகளின் முன்னோடி, தமிழ்நாட்டில் எழுதிப் பிழைப்பது என்பது எத்தனை அபாயகரமானது என்பதைத் தமது உயிரைப் பணயம் வைத்துக்காட்டிச் சென்ற உதாரணம் - இவர் தான் புதுமைப்பித்தன்" (புதுமைப்பித்தன் வரலாறு - ரகுநாதன்) என்பது போன்று வரலாற்றுத் தலைவர் பற்றிய மதிப்புரையாக நூலை நிறைவு செய்தலும் உண்டு.

பல்துறை அறிவு தரல், பொது அறிவுக் களஞ்சிய மாதல் என்பனவற்றுடன் வாழ்க்கைவரலாற்றுத் தலைவர் எந்தக் காலக்கட்டத்தைச் சார்ந்தவரோ அக்காலம் பற்றிய அரசியல், சமுதாயச் சூழ்நிலைகளையும் இவ்வகை வழி அறிந்து கொள்ளவியலும். வரலாற்றுத் தலைவரைப் பற்றிப் பல புதிய செய்திகளின் இருப்பிடமாகவும் இவை அமைகின்றன. கல்கி மிகப் பெரிய எழுத்தாளர் என்பதே பொதுவாக அவரைப் பற்றிய அறிமுகமாகும். அவர் ஓர் கவிஞரும் கூட. ஒருசில திரைப்படப் பாடல்களும் இயற்றியுள்ளார் என்பது அவரது வரலாறு காட்டும் உண்மை. இலக்கியத்துறை சார்ந்தவர் தலைவராயின் அவரது படைப்புகள் பற்றிய பல செய்திகளும் அறிய வருகின்றன. அவ்விலக்கியத் திறனாய்விற்கு அவை மிகுந்த துணைபுரிகின்றன. வரலாற்றில் ஐயத்திற்கு இடமளிக்கும் அல்லது குழப்பம் தரும் செய்திகளின் தெளிவு பெறற்கும் உண்மை விளங்கு தற்கும் அரசியல் தலைவர்களின் வரலாறுகள் உதவுகின்றன.

ஒருவர் வரலாற்றைப் பிறர் எழுதுவதினும் அவரே எழுதும் பொழுது கற்பனைகளும் புனைந்துரைகளும் குறைவு படலுக்கு வாய்ப்புண்டு. மற்றும் சுவையாக அமைதலும் உண்டு. சான்றாக உ.வே.சா. அவர்களின் வரலாற்றை அறிய விழைவோர் அவரது

என் சரித்திரத்தில் பெறும் சுவையை அவரது வரலாறு தரும் பிறர் நூல்களில் பெற இயலவில்லை. ம.பொ.சி.யின் எனது போராட்டமும், கவிஞர் கண்ணதாசனின் தன் வரலாறும் இச் சிறப்புடையனவே.

எனவே வரலாற்றுச் சிறப்புடையோராயின் வரலாற்றுத் தெளிவு, பிறதுறைப் பெரியோராயின் அவர் துறை பற்றிய அறிவு, சாதாரண மானிடர் மீது எழுந்ததாயினும் மானிடவியல் ஆய்விற்கு என இவற்றையெல்லாம் உள்ளடக்கிய நிலையில் இலக்கிய இன்பமும் ஒருங்கமைய பன்முகப் பயனுடையதாக வாழ்க்கைவரலாற்றிலக்கியம் அமைந்து தனிச்சிறப்புறுகின்றது. பண்டிதர் இலக்கியமாக மட்டுமின்றிப் பொதுமக்கள் இலக்கிய மாகவும் மிளிர்ந்து கூடுதல் பெருமை கொள்கின்றது.

ஆண்டு, நாள் போன்ற காலக் குறிப்புகளுக்குச் சிறப்பளித்தல், மிகத் தெளிவாகத் தலைவரின் பண்புகளையும் செயல், படைப்பு முதலானவற்றையும் வெளியிடல், கற்பாருக்குச் சலிப்பு ஏற்படா வகையில் சுவை பொருந்த அமைத்தல், தன் விருப்பு வெறுப்பிற்கு இடமளிக்காது நடுநிலை நிற்றல், வெறும் புகழுரையாக அமைக்காது உண்மைத் தோற்றத்தை வெளிப்படுத்தல் முதலிய கூறுகளடங்கும் வாழ்க்கை வரலாறுகள் மிகச் சிறந்தவையாகும். 'இந்த நூலில் என் மதிப்பிற்குரிய தலைவர்களை, கட்சிகளை, சித்தாந்தங்களைத் தேவைப்படுமிடத்து தயவுதாட்சண்யமின்றி விமர்சித்திருக்கிறேன். அவர்களுடைய, அவர்கள்பால் பற்றுக் கொண்டவர்களுடைய மனங்கள் புண்படக் கூடாது என்று எச்சரிக்கையுடன் வார்த்தைகளைத் தேர்ந்தெடுத்துக் கையாண்டிருக்கிறேன்' எனும் ம.பொ.சி.யின் கூற்று (எனது போராட்டம், முன்னுரை) வாழ்க்கை வரலாற்று நூல்களின் இயல்பு எப்படி இருக்க வேண்டும் என்பதற்குச் சிறந்த சான்றாகும்.

இதுவரை தமிழில் இரண்டாயிரத்திற்கும் மேற்பட்ட வாழ்க்கை வரலாறுகள் வெளிவந்துள்ளன. தன் வரலாறுகளும் குறிப்பிடத்தக்களவு எழுந்துள்ளன. இலக்கிய மொழிபெயர்ப்பு களில் வாழ்க்கைவரலாற்றுத் துறை குறிப்பிடத்தக்க சிறப்புப் பெறுவதை அதனுள் எழுந்துள்ள முந்நூற்றுக்கும் மேற்பட்ட மொழிபெயர்ப்புகள் உணர்த்துகின்றன.

ஒருவரைப் பற்றிய பலரின் அனுபவங்களைத் தொகுத்துத் தருதல் (அண்ணாவின் கடைசி நாட்கள் - நாகைத் தருமன்),

சிற்றிலக்கிய வடிவம் (ம.பொ.சி. ஆற்றுப்படை - த. அமிர்தலிங்கம்), கற்பனையான நேர்காணல் (இயேசுவின் சீடர்கள்-மா. சேசையா), நினைவுக் குறிப்புகளாகத் தரல் (பழங்கணக்கு - சாவி) என்பன போன்ற சிறப்பு உத்திகளுடன் அவ்வப்போது வாழ்க்கை வரலாற்றிலக்கியம் தோன்றுகிறது.

வாழ்க்கை வரலாற்றிலக்கியம் முழுமை பெறத் தொடங்கிய காலத்தில் புலவர் வரலாறுகளே மிகுதியாக எழுந்தன. அவற்றில் கற்பனைகளும், செவிவழிச் செய்திகளும், வழக்குக்கதைகளும் உண்மை நிகழ்வுகளுடன் இரண்டறக் கலந்திருந்தன. இன்று அவை உண்மைக்கு வழிவிட்டு, அவற்றை முறைப்படி ஆராய்ந்து தருதலாக வளர்ச்சி காட்டுகிறது.

தொடக்கக்கால வரலாறுகள் சமயத்தலைவர், மறைந்த புலவர், அரசியலார் எனும் இவர்கள் மீது அதிகளவில் எழுந்தமையைக் காண்கிறோம். இதற்கு அக்காலச் சூழலே முதன்மைக் காரணம். இந்து, கிறித்தவம், இசுலாம் என்னும் மதங்களிடையே அன்று நிலவிய போராட்டநிலை சமயத் தலைவர்கள் மீது வரலாறுகள் எழக் காரணமாயிற்று. அவ்வம் மதப் பரப்புதலுக்குரிய உத்தியாக இது கையாளப்பட்டது. கிறித்தவர் நூல்களே இதில் முன்னிற்கின்றன.

விடுதலைக்குப் போராடிய இந்தியத் தலைவர்களில் குறிப்பாகக் காந்தியடிகளின் வரலாறும் அன்று ஆட்சி புரிந்த விக்டோரியா மகாராணியாரின் வரலாறும் குறிப்பிடத்தக்களவு அன்று அமைந்துள்ளமை சமுதாயப் பிரதிபலிப்பாக நிற்கக் காண்கிறோம். விடுதலை வேட்கையை மக்களிடையே பரப்ப விடுதலை வீரர்களின் வரலாறுகள் ஒரு கருவியாகப் பயன்படுத்தப் பட்டிருக்குமோ என்ற எண்ணமும் இங்கு எழுகிறது. இவர்களுக் கிடையே அந்நிய ஆட்சியின் அடிமைநிலையை வேண்டியவர்களும் இருந்தமை மட்டுமின்றி அவர்கள் பிறரையும் ஏற்கத் தூண்டினர் என்பதையும் அன்றைய ஆட்சியரின் வரலாற்று நூல்கள் உணர்த்துகின்றன.

தமிழ்ப் பழஞ்சுவடிகள் கண்டு பிடிக்கப்பட்டு, புலவர் பெருமக்கள் பேராதரவுடன் அவை வெளிவந்தபோது அவற்றைப் பாடிய புலவர்கள், அவர்களைப் போற்றிய தமிழ் வளர்த்த வள்ளல்களின் வரலாறுகளும் அறியப்பட வேண்டும் என்ற இயல்பான எண்ணம் எழ அவர்களின் வரலாறுகளும் வரவேற்கப்பட்டன.

இன்றெழும் வாழ்க்கை வரலாறுகள் உண்மையின் அடிப்படையில் எழுந்திருப்பினும் மிகுதியும் புகழ்ப்பூக்களாகவே அமைவதையும் காண்கிறோம். இதனால் தலைவரின் புகழுக் குரியன மட்டுமே காட்டப்படும் ஒருமுக வாழ்வே அமைகிறது. தலைவரின் குறைபாடுகளைத் துணிச்சலுடன் உணர்த்தும் நூல்கள் இவற்றுடன் ஒப்பிடுகையில் இல்லையென்றே கூறிவிடலாம்.

முழுமையான வரலாறுகளில் வரலாற்றுத் தலைவரின் குறிப்பிட்ட பருவம் வரை 'அவன்' என்றும் அதன்பின் 'அவர்' என மதிப்பு மொழியிலும் சுட்டுதல் அமைகிறது. இதே போன்று வரலாற்றுத் தலைவரின் இளமையை மட்டும் உணர்த்தும் நூல்களில் ஒருமையில் அழைத்தல் அமைகிறது. மற்றும் தம் பெருமதிப்பிற்குரியவரைச் சுட்டும்பொழுது அவரின் பெயரைச் சுட்டாது அவரைச் சிறப்பிக்கும் அடைமொழியால் உணர்த்து தலும் குறிப்பிடற்பாலது. சான்றாக உவே.சாமிநாதையர் தம் ஆசிரியர் மீனாட்சி சுந்தரம் பிள்ளையைப் பெயர் சுட்டாதே நூல் நெடுகிலும் 'ஆசிரியர்' என்றே அழைத்தலைக் காட்டலாம்.

வாழ்க்கை வரலாற்றில், வரலாற்றுத் தலைவருக்குத் துணை போனவர்களும் உண்டு; எதிர் நின்றோரும் உண்டு. அவ்வாறு எதிர் நின்றோரைச் சுட்டும் பொழுது அவர்தம் பெயர் சுட்டாது செல்லல் பலரிடம் காணப்படுகிறது. அவர் வாழ்ந்து கொண்டிருப்பவராயின் அவருக்கும் அவரைச் சார்ந்தோருக்கும் துன்பந்தருதலுடன் எழுதுபவருடன் மனக்கசப்பு கொள்வதற்கும் வாய்ப்புண்டு; மறைந்தவராயின் உலகை நீத்தாரைப் பற்றிக் குறை கூறுதல் ஏற்புடைத்தன்று என்பன இதற்குக் காரணங்களாகலாம்.

வாழ்க்கை வரலாற்றிலக்கிய வரலாற்றில் மாத, வார, நாளிதழ்களின் பணி குறிப்பிடத்தக்கது. அன்று முதல் இன்று வரை பல இனிய வாழ்க்கை வரலாறுகளை அவை தமிழுலகிற்கு அளித்துள்ளன. உ.வே.சாமிநாதையரின் என் சரித்திரம் உட்பட அவரின் பிற வாழ்க்கைவரலாற்று நூல்கள் பல கலைமகள், ஆனந்தவிகடன் முதலான இதழ்களில் வெளிவந்த பின்பே நூலாக்கம் பெற்றன. சுந்தாவின் பொன்னியின் புதல்வரும் முதலில் கல்கியில் தொடராக வெளிவந்ததாகும்.

வாழ்க்கை வரலாற்றிலக்கியப் படைப்பில் பெருவிருப்பம் கொண்டு பல நூல்களைப் படைத்தவர்களாக எம்.எஸ். சுப்பிரமணிய ஐயர், வெ. சாமிநாத சர்மா, இரா. இளங்குமரன், அ.லெ. நடராசன், ரா. கணபதி, நா. சண்முகம், ம.பொ.சி., சையத்

இப்ராஹீம் எனப் பலர் அமைகின்றனர். பாரதி, வ.உ.சி. போன்றோர் தம் வரலாற்றைக் கவிதையில் அளித்துள்ளமையும் கூறத்தக்கது.

நாட்டைத் தம்செயலால் பெருமைப்படுத்திய நல்லோர் தம் வாழ்வினை முறையாக வெளியிடுவதில் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், பழனியப்பா பிரதர்ஸ், வானதி பதிப்பகம் போன்ற பதிப்பகங்களும், சாகித்திய அக்காதெமி, தேசியப் புத்தக நிறுவனம் முதலிய நிறுவனங்களும் ஆற்றும் பணி பாராட்டற்குரியது. இந்நிறுவனங்களின் வழிப் பல சிறந்த வாழ்க்கைவரலாறுகள் மொழிபெயர்ப்புகளாகக் கிடைத்துள்ளன.

உ.வே.சாமிநாதையரின் 'என் சரித்திரம்', இந்தி, கன்னடம், மலையாளம், தெலுங்கு, ஆங்கிலம், செக் முதலான மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளமை தமிழுக்குச் சிறப்பளிக்கின்றது. அனந்தரங்கம் பிள்ளையின் நாட் குறிப்பும், ஜெயகாந்தனின் 'ஓர் அரசியல்வாதியின் அரசியலனுபவங்களும்' ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பெற்றுள்ளமையும் குறிப்பிடத்தக்கது. வேறு சிலவும் பிறமொழிகளில் மாற்றம் பெறும் சிறப்பெய்தியுள்ளன.

'யாதும் ஊரே யாவரும் கேளிர்' எனும் தமிழ்ப் பண்பாட்டின் விளக்கமாக இவ்வாழ்க்கைவரலாறுகள் திகழ்கின்றன. மொழி, நாடு, இனம் எனும் வேற்றுமைகளகன்ற நிலையில் உலகம் ஒரு குடும்பம் எனும் உணர்வினை, உலகத்தார் தம்முள் நெருங்கி வருதலை இவை காட்டுகின்றன. தமிழிலக்கியத்துள் இவை இன்று உயரிடம் கொண்டுள்ளன. எண்ணற்ற இனிய நூல்கள் இவ்விலக்கிய வகையை வளப்படுத்தியுள்ளன. புதிய புதிய உத்திகளால் இத்துறையை மேலும் வளப்படுத்தவியலும் என்பதற்குச் சான்றாகவும் பல நூல்கள் இன்று எழுகின்றன. இருபதாம் நூற்றாண்டில் எழுந்த இலக்கியங்கள் பலவற்றுள்ளும் இவ்வகையின பல காலத்தை வென்று நிற்கும் சிறப்புடையன என்பது உறுதி. எழுதுபவர் யார் என்ற வேறுபாடு அன்றிப் பிற நிலைகளில் வாழ்க்கை வரலாறும் தன் வரலாறும் ஒத்தே அமைவதால் இரண்டும் இங்கே ஒன்றாகவே அணுகப்பட்டுள்ளன.

திரு.வி.க.வின் வாழ்க்கைக் குறிப்புகள், கலைஞர் கருணாநிதியின் நெஞ்சுக்கு நீதி, நாமக்கல் கவிஞரின் என் கதை, அவ்வை டி.கே. சண்முகம் எழுதிய 'எனது நாடக வாழ்க்கை', சுத்தானந்த பாரதியாரின் ஆத்ம சோதனை, வைரமுத்துவின் இதுவரைநான், ராஜம் கிருஷ்ணனின் டாக்டர் ரங்காச்சாரி,

சோமலெயின் ஓமந்தூரார், முருக தனுஷ்கோடியின் காமராசர் ஒரு சரித்திரம், மது. ச. விமலானந்தத்தின் இலக்கிய ஜோதி, மெய்யப்பனின் தாகூர், திலகவதிபாலின் அறநெறி பாடிய வீர காவியம், மு.வ.வின் அறிஞர் பெர்னாட்ஷா என மற்றும் பல சிறந்த நூல்கள் தமிழில் இவ்வகையை வளப்படுத்தியுள்ளன (தமிழ் வாழ்க்கை வரலாற்றிலக்கியம், ச. சிவகாமி, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1985).

## சிங்கப்பூர்

சுப. திண்ணப்பன்
ஆ.ரா. சிவகுமாரன்

தங்கள் வாழ்க்கையில் நடைபெற்ற நிகழ்வுகளை வரலாற்று அடிப்படையில் சிலர் குறித்து வைக்க முயன்று அதைப் புத்தகமாகவும் வெளியிட்டுள்ளனர். ப. சுதர்மன், ச. வரதன், பெ. கோவிந்தராசு, அ.நா. மொய்தீன், சி. குமாரசாமி முதலியோர் இந்த அடிப்படையில் புத்தகங்கள் வெளியிட்டுள்ளனர். இலியாஸ், தமிழவேள் கோ. சாரங்கபாணி பற்றி ஒரு வரலாற்று நூல் வெளியிட்டுள்ளார். இலக்கியங்களின் அடிப்படையில் ஜமீலா, சித. பழனிச்சாமி, ஐ. உலகநாதன், எம்.கே. நாராயணன் முதலியோர் கட்டுரைகள் எழுதி வருகின்றனர்.

# பயண இலக்கியம்

## தமிழகம்

ச. சிவகாமி

இக்கால உரைநடையிலக்கிய வகையுள் வளர்ந்து கொண்டிருப்பதோர் புனைவிலி இலக்கியம், பயண இலக்கியமாகும். வாழ்க்கையின் எதிரொலியும் இலக்கியமாகச் சிறப்புறுவதை அறவிலக்கியம், வாழ்க்கைவரலாறு போன்று பயண இலக்கியமும் உணர்த்துகிறது. வாழ்வில் அனைவருக்கும் பொதுவான கூறுகளுள் பயணமும் ஒன்று. படைப்புத் திறனும் ஆர்வமும் கொண்டோர் அதனைப் பயண இலக்கியமாக வெளிப்படுத்துகின்றனர்.

ஏதேனும் ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட காரணங்கள் பற்றி ஒருவர் அல்லது குழுவினர் குறிப்பிட்டதோர் இடத்திற்குச் சென்று தன்னோக்கங்களை நிறைவேற்றித் (சிறுபான்மை நிறைவேறாமல்) திரும்புதல் பயணமாகிறது. அது பலரும் அறியும் வண்ணம் எழுத்தாக வெளிப்படும் பொழுது பயண இலக்கியமாகிறது. அவ்வாறு இலக்கியமாகும் பொழுது அதனுள் பயணித்தவர் கண்டவை, கேட்டவை, கவர்ந்தவை, சுவைத்தவை, அனுபவித்தவை, சென்ற இடத்தின் சிறப்புகள், வாழ்வோர் இயல்புகள், பண்பாடு, பழக்கவழக்கம், நாகரிகம் போன்ற கூறுகளில் பல இடம்பெறுகின்றன. இதனால் குறிப்பிட்ட அவ்விடத்தைப் பற்றிய நல்ல அறிமுகம் சுவைஞருக்குக் கிடைக்கிறது. அவ்விடத்திற்குச் செல்ல விரும்புவோர்க்குச் சிறந்த வழிகாட்டியும் துணைவனுமாகிறது. திறனுடைய படைப்பாளரால் மிக்க சிறப்பாக எடுத்தியம்பப்படும் பொழுது வாசகருக்குத் தாமே சென்று திரும்பிய உணர்வும் எழுகிறது. எனவே வாழ்வியல் பயனுடை இலக்கியங்களுள் இதுவும் ஒன்றாகச் சிறப்புறுகிறது.

மரபிலக்கிய வகைகள் பலவற்றிற்குத் தொல்காப்பியம் வழிகாட்டியுள்ளது போல் பயண இலக்கியப் பயணமும் அதனுள் கால் கொண்டிருக்கக் காணலாம். இன்றைய பயணம் அன்று 'செலவு' எனும் சொல்லால் பெருவழக்கில் இருந்தமையைத் தொல்காப்பியமும் சங்க இலக்கியமும் உணர்த்துகின்றன.

இடைக்காலத்தே செலவு, யாத்திரையாக மாற்றம் பெற்றதைப் பெருங்கதை தருகிறது. சேக்கிழார் முதன்முதலாகப் பயணம் என்ற இன்றைய வழக்கினைத் தந்த முதல்வராகிறார் (சேரமான். 129).

மனித இனம் நாடோடி வாழ்க்கையைத் தொடங்கியதிலிருந்து பயணம் அவனுடன் பிரிக்க இயலாதவாறு இரண்டற கலந்துவிட்டது. அன்று உணவு முதலான தன் வாழ்வியல் தேவைகளுக்காக ஓரிடத்திலிருந்து அவை கிடைக்குமிடம் நோக்கிப் பயணமானான். இன்று அவற்றுடன் சுற்றுலா முதலான பிற காரணங்களுக் காகவும் பயணம் தொடர்கிறது. கல்வி, தொழில் எனும் வாழ்வியல் தேவை மற்றும் முன்னேற்றம் நோக்கிச் சென்ற பயணங்களைத் தொல்காப்பியர் ஓதலிற்பிரிவு, பொருள்வயிற் பிரிவு, போர்வயிற்பிரிவு என வகைப்படுத்திக் காட்டுகிறார். புதிய வாழ்க்கையை எதிர்கொளத் தலைவி தலைவனுடன் மேற்கொண்ட உடன்போக்கும் கருதத்தக்கது. கடல்கடந்த பயணங்களும் அமைந்ததை 'முந்நீர் வழக்கம் மகடூஉவோடு இல்லை' எனத் தொல்காப்பியம் தருகிறது. இந்தியாவின் பிறபகுதிகளுக்கும் வெளிநாட்டிற்கும் சென்றதைச் சங்க இலக்கியம் 'மொழிபெயர் தேயம்' எனக் குறித்துள்ளது. சங்க இலக்கிய ஆற்றுப்படைகள் இங்குச் சிறப்பாகக் கூறத்தக்கனவாகும். புலவோர் தரும் வழிநடை வருணனைகள், அவ்விட மக்களின் விருந்தோம்பல் சிறப்பு, நம்பிக்கைகள், பழக்கவழக்கங்கள், இன்ன பிற சிறப்புக் கூறுகளுடன் புரவலனின் பல்வகைப் பெருமைகளையும் தந்து பெருமளவு பயண இலக்கியப் பாங்கு கொள்கின்றன. இவற்றைத் தன் பயண அனுபவத்தின் வழியே ஒருவன் மற்றொருவனுக்கு உணர்த்துகிறான் என்பதும் கருதத்தக்கது. பயணித்தவர், பயணம் செய்யவிருப்பவர் இருவரும் தம் கலைகள் வழி பரிசில் பெறுதல் என்ற நோக்கினர் என்பதும் எண்ணற்பாலது. திருமுருகாற்றுப் படையைச் சிறப்பு நிலையில் தலயாத்திரையாக அமையும் புனிதப் பயணத்துடன் ஒப்பு நோக்கலாம்.

இதனைத் தொடர்ந்து சிலப்பதிகாரம், மணிமேகலை முதலான காப்பியங்களிலும் பயணம் ஓர் இன்றியமையாக் கூறாகப் பல வகைமை காட்டியமைகின்றது. சான்றாகக் கம்பனில் அழைப்பின் பேரில் (விசுவாமித்திரர்) இராம இலக்குவர் மேற்கொண்ட பயணம், இராமர் சீதை மணவிழா காண தசரதன் முதலியோர் சென்ற பயணம், கட்டளையின் பேரில் இராமர் சீதை மற்றும் இலக்குவனுடன் காட்டுக்குப் பயணமாகியது, சீதையைத் தேடுதற்காக அனுமன் இலங்கை சென்றது, நல்லவர்

உயிர்காக்க மருந்துமலை சென்று கொணர்ந்தது எனப்பல அமைந்து அதனை ஒரு பயணக் காப்பியமாகச் சிறப்பிக்கின்றன.

ஆழ்வார்களும், நாயன்மார்களும் ஒவ்வொரு தலத்திற்கும் பயணம் செய்தே தம் அருட்கவிகளை இயற்றிப் பரப்பியதும் இங்குச் சுட்டத்தக்கது. குறிப்பிட்டதோர் இடத்தின் தனிச்சிறப்பு, அங்குவந்து வழிபட்டோர் பெற்ற பயன், வழிபடுமுறை என்பனவற்றை உள்ளடக்கிய தலபுராணங்கள் தலப் பயண இலக்கியத்துடன் நெருங்கிய தொடர்பு கொண்டமைவதும் இடைக்காலத்தில் மிகுந்த செல்வாக்குடன் திகழ்ந்ததும் குறித்தற்பாலன. மறைந்து போன தமிழ் நூல்களான செங்கோன் தரைச் செலவும் தகடூர் யாத்திரையும் இணைத்து நோக்கத்தக்கன. எனவே வாழ்க்கை வரலாற்றிலக்கியம் போன்று பயண இலக்கியமும் நீண்ட அடித்தளம் உடையதாகிறது.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் பின் பகுதியில் சில பயண அனுபவங்கள் நாட்டுப்புற இலக்கிய வடிவில் வெளிப்பட்டுள்ளன. தென்னிந்திய ரெயில்வே என்னும் கர்னாடகப் புகைவண்டிச் சிந்து, வேளாங்கண்ணி வழி நடைப்பதம் (1883), நாகூர் வழிநடை விளக்கத் தொடர் (1898), திருமயிலை அறுபத்து மூவர் வழிநடைச் சிந்து என்பன சான்றுகளாகும். வி. ராயப்பையரின் யாத்திரைக் கும்மி (1873) அவர் பயணம் செய்த இத்தாலி, பிரான்சு, வட இந்தியா ஆகிய இடங்களில் பெற்ற அனுபவங்களைப் பகர்கின்றது. 1888இல் சென்னை வந்த ஒருவர் தாம் கண்டுகளித்த பீப்பிள்ஸ் பார்க் பற்றி 'சின்ன காலேஜ் என்று வழங்கும் பீப்பிள்ஸ் பார்க் வழிநடைக் கும்மி' படைத்துள்ளார்.

புகைவண்டிகளின் புதுவரவால் அதில் பயணம் செய்தோர் தம் அனுபவங்களைக் கட்டுரைகளாக்கி அன்றைய இதழ்களில் வெளியிட்டுள்ளனர். 1891இல் ஜநாநந்தினியில் வெளிவந்த 'ரெயிலில் பிரயாணம் செய்தது', 1926இல் ஆனந்த குணபோதினியில் வெளிவந்த 'ரயில் பிரயாணம்' என்பவை சான்றுகள். எஸ். முத்து ஐயர் செய்யுள் வடிவில் 'புகைவண்டிக் காட்சி' படைத்துள்ளார். இக்காலப் பகுதியில் எழுந்த பயணக் கட்டுரைகள், பார்த்த இடங்களைக் காட்டிலும் பயணம் செய்த உந்துவண்டி, கப்பல், விமானம், எனும் ஊர்திகளில் கிடைத்த அனுபவங்களை மிகுதியாகப் பேசியுள்ளன. தொடக்ககாலப் பயண இலக்கியம் பற்றிய அறிவிற்கு ஏ.கே. செட்டியாரின் 'தமிழ்நாடு பயணக் கட்டுரைகள்' நூல் சிறந்த கையேடு ஆகும்.

பயணம் செய்த ஊர்தியில் கிடைத்த அனுபவம், குறிப்பிட்ட இடத்தைப் பற்றிய செய்திகள் (சென்னை மாநகர் கடற்கரை - வி. கோ. சூரிய நாராயண சாஸ்திரி - ஞான போதினி 1900), துணுக்குகள் போன்று தம் பயண அனுபவங்களில் ஏதேனும் ஒன்றை மட்டும் உணர்த்துதல் (லண்டன் பாரீஸ் நகரங்களின் வினோத சரித்திரம் - ஜி. பரமேஸ்வரம் பிள்ளை, 1899) என ஏதேனும் ஒரு கூறு பற்றியே ஆரம்பகாலப் பயண இலக்கியம் அமைந்தது. எனினும் இவற்றிலும் வளர்ச்சி காட்டி, பார்த்துக் களித்த இடத்தின் இருப்பிடம், செல்லும்முறை, இயற்கைச் சூழல், சிறப்பு, வரலாற்றுச் செய்திகள், வழக்குக் கதைகள், அறிந்த பிற குறிப்புகள் முதலானவற்றைத் தம் அனுபவங்களுடன் இணைத்துத் தரும் முறைமையினையும் சில கட்டுரைகளில் காணலாம். ஏ.வி.ஏ.யின் விவேக சிந்தாமணி இதழில் வெளிவந்த திருச்சிராப்பள்ளி மலைக் கோட்டை (மார்ச் 1978), சி.வி. சுவாமிநாத ஐயரின் கோயம்புத்தூருக்குப் போய்வந்தது (விவேக சிந்தாமணி, சூன் 1899) என்பன காட்டுகள்.

இத்தகு முன்முயற்சிகளின் விளைவாகப் பயண இலக்கியம் நன்கு மலர்ந்து மணம் பரப்பத் தொடங்கியது. 1832இல் எனுகுல வீராசாமி ஐயர் எழுதிய 'காசி யாத்திரை' இவ்வகையில் முதனூல் என ஏ.கே. செட்டியார் தம் நூலுள் (முன்சுட்டியது) குறிப்பிட்டுள்ளார். ஆயின் அந்நூல் இன்று கிடைக்கவில்லை. தொடர்ந்து 1899இல் வெளிவந்த சேலம் பகடாலு நரசிம்ம நாயுடுவின் 'ஸ்ரீஆரியர் திவ்யதேச யாத்திரை சரித்திரம்' இன்று கிடைப்பனவற்றுள் முதலாவதாக அமைகிறது. 'இந்த இகலோக யாத்திரையில் உத்தேசமெல்லாங் கூடி தேக சுகத்தையும், மனோ விஞ்ஞான விருத்தியையும் ஆத்மோன்னத ஸ்திதியையும் தெய்வ பக்தியையும் விருத்தியாக்கும் காரணமாயிருந்ததால் இதற்குத் திவ்ய தேச யாத்திரையென்று சொல்லப்பட்டது' என்று ஆசிரியர் நூன்முகத்தில் கூறியிருப்பது நூலின் தன்மையை ஓரளவு புலப்படுத்துவதாக உள்ளது.

முதல் காங்கிரஸ் சபை பம்பாயில் (1885, டிசம்பர்) கூடிய போதும், இந்து ஜன சமூக மகா சபை, ஆங்கிலேயர் ஆட்சியில் மேலும் சில உரிமைகளைப் பெற எண்ணிக் கல்கத்தாவில் (1886, டிசம்பர்) கூடிய போதும் அவற்றிற்குக் கோயம்புத்தூரின் பிரதிநிதியாக, கலாநிதி இதழின் ஆசிரியரான இந்நூலாசிரியர் சென்றபோது கிடைத்த அனுபவங்கள் இதன் பொருளாகின்றன.

பயணம் செய்ய முடிவெடுத்தது முதலாகத் தம் எண்ணங்களையும், நிகழ்வுகளையும் விளக்கிச் செல்கிறார். பயணத்தின்போது ஏற்படும் வழிநடை இடர்கள், உரையாடிய பெரியவர்கள், பார்த்த இடங்களின் விரிவான வருணனைகள், வரலாற்றுக் குறிப்புகள், சிறப்புச் செய்திகள், தமது செயல்கள், காட்சிகள் முதலான வற்றுடன் புவியியல், தொழில் பற்றிய விரிந்த விளக்கங்களும் தருகிறார். சமயம் பற்றிய செய்திகளுக்கு மிகுந்த முக்கியத்துவம் நல்கும் ஆசிரியர் பார்த்த இடங்களின் தல புராணங்கள் (காசி, ப. 28), வாழ்ந்த பெரியோர் வரலாறு (ஹரிதாசர், ப. 220), ஆண்டுதோறும் நிகழும் விழாக்கள் (ப. 237), இறைமகிமை (ப. 32) ஆகியவற்றையும் சிறப்பித்துள்ளார். தாம் செய்த வழிபாடுகளைக் கூட விடாது இணைத்துள்ளார் (ப. 23).

நேரம், காலம், தேதி குறிப்பிட்டுத் தம் கால உணர்வைக் காட்டும் ஆசிரியர் கற்பனை உரையாடல்களால் (பக். 69-74) இலக்கிய இன்பமும் தருகிறார். ஒவ்வொரு இடத்திற்கும் செல்லும் முறை, தங்குமிடம், ஆகக்கூடிய செலவுகள் முதலானவற்றையும் தந்து அங்குச் செல்ல விழைவோருக்குப் பயன்தரக் கூடியதாக அமைத்துள்ளார். தம் பயண நோக்கின் நிறைவேற்றத்தையும் ஆங்காங்கே உணர்த்தியுள்ளார். நூலின் தொடக்கத்தில் 'வடதேசத்தில் யாத்திரை செய்ய விரும்புவோருக்குச் சில விசேஷக் குறிப்புகள்', 'புகைவண்டி முதலானதுகளில் ஏறுவோருக்குச் சில விசேஷக் குறிப்புகள்' என்பன அமைத்துள்ளமை பயணம் செய்வோருக்குப் பயனுடையதாக அமைகின்றன. கிடைக்கும் முதல் பயண இலக்கிய நூலே இங்ஙனம் மிக்க சிறப்புடன் அமைவது போற்றற் குரியது. 1886இல் வீ. நீலமேக ஆச்சாரியார் மொழிபெயர்த்த சேலம் ராமஸ்வாமி முதலியாரின் இங்கிலாந்துப் பயணம் உரைநடையில் வந்த முதல் வெளிநாட்டுப் பயண இலக்கியமாகும்.

1995இல் வெளிவந்த 'பயண நூல்கள் வழிப் பண்பாடு' நூலின் ஆசிரியர், இருநூற்று ஐம்பது பயண இலக்கியங்களைத் தொகுத்துள்ளார். அவற்றை நூற்று அறுபத்தேழு பேர் படைத்துள்ளனர் என்பதும் அவர்களில் பதினைமர் பெண்பாலார் என்றுரைத்திருப்பதும் சுட்டத்தக்கன (ப.4). இவற்றைப் பொதுவாக இருவகையாகப் பிரிப்பது காணப்படுகிறது. ஒன்று இறை வழிபாட்டை முன்னிறுத்திச் செல்லும் தலப்பயணங்கள். ஏனையவை மற்றொன்றில் அடங்குகின்றன. சென்ற நோக்கங்களின்

அடிப்படையிலும் இவற்றைப் பகுத்துரைக்கலாம். பயணம் சென்றவர்களின் அடிப்படையில் கல்வியாளர் பயணங்கள், தொழில் வணிக இயலாளர் பயணங்கள், அரசியலாளர் பயணங்கள், காட்சி நோக்கர் பயணங்கள், இதழாளர் பயணங்கள், சமயவாணர் பயணங்கள், கலை-பண்பாட்டுத் துறையாளர் பயணங்கள் என ஏழாக இரா. ஞானபுஷ்பம் வகைமை காட்டுகிறார் (தமிழில் பயண இலக்கியம், ப.3). பயண இலக்கியப் படைப்பாளர் தம் இயல்பிற்கும், நோக்கிற்கும் ஏற்பவே அவர் செல்லும் இடங்களும், காட்சிகளும், பார்வையும் அமைகின்றன. இதனால் ஒரே சமயத்தில் ஒரே இடத்திற்குச் சிலர் சென்றாலும் அவர்தம் பயண அனுபவங்கள் மாறுபட்டு அமைகின்றன. எனவே இவ்வகைப்பாடு பயண இலக்கியத்திற்குப் பொருந்துவதாகவே அமைகிறது. தானே முயற்சித்துச் செல்லுதல், அழைப்பின் பேரில் செல்லுதல், நட்புறவு முதலான காரணங்களால் அரசு முதலிய பிறரால் அனுப்பப்படுதல் எனப் பயணம் செல்வோர் செல்லும் முறைமையிலும் மூவகைப்படுகின்றனர். எனினும் அவர் யார், சென்றதன் நோக்கம் என்ன என்பன பொறுத்தே பயண இலக்கியம் அமையும் என்பதில் மாற்றமில்லை.

சான்றுகளாகச் சிலவற்றைச் சுட்டலாம். சுற்றுலாப் பயணமாகச் சென்ற மீ.ப. சோமு (சோமசுந்தரம்) வின் 'அக்கரைச் சீமையில்', 'ரீமஸ் நகரத்திலே சுற்றிப் பார்த்து அனுபவித்த இடங்களில் மிக முக்கியமானது அங்குள்ள மாபெரும் கிறிஸ்து கோவில்தான். இங்கேதான் பழங்காலத்தில் ப்ரான்ஸ் மன்னர்களுக்கு மகுடாபிஷேகம் நடந்ததாம். 'ஜோன் ஆப் ஆர்க்' என்ற மாதரசியின் சோகக்கதை நினைவுக்கு வந்தது. அரச யோகமும் உல்லாசமும், சரித்திர முக்கியமும், கலைக் காதலும் நிரம்பிய பிரெஞ்சு மன்னர்களின் வரலாறுகளையெல்லாம் அந்தக் கோவில் எடுத்துச்சொல்லிக்கொண்டு நிற்கிறது. அதனுடைய கம்பீரமும், விசாலமும், பவித்திரமான தொழுகைக் கூடமும் உள்ளத்தைக் கவர்ந்தன' எனும் பகுதி காட்சி நோக்கத்தைத் தெளிவாக இயம்பக் காணலாம்.

'இன்றைக்கு ரஷ்யாவுக்கும் அமெரிக்காவுக்கும் பல துறைகளில் போட்டி ஏற்பட்டிருக்கின்றது. கல்வித் துறையில், தொழில் துறையில், விஞ்ஞான ஆராய்ச்சியில், வான்வெளிப் பயணத்தில் ஆக எத்துறையில் எடுத்துக் கொண்டாலும், ரஷ்யா அமெரிக்காவை மீறி விடலாம். ஆனால் விவசாயத் துறையில் மீற முடியாது என்பது மறுக்க முடியாத உண்மை. இதன்

காரணமாக என்றுமே அமெரிக்க நாட்டில் உணவுப் பஞ்சம் என்பது ஏற்பட முடியாது. அதோடு மட்டுமல்ல; பஞ்சம், பட்டினி மிகுந்திருக்கும் நாடுகளுக்கு உணவளிக்கக் கூடிய வாய்ப்பும் சக்தியும் அமெரிக்காவுக்குத்தான் மிகுதியாக உள்ளது' என அரசியல் அலசப்படுவதை அரசியலார் பயணம் (சி. சுப்பிரமணியம், உலகம் சுற்றினேன், விகடன் பிரசுரம், சென்னை, 1964) காட்டுகிறது.

எழுத்தாளர் பயணம் பிறநாட்டு எழுத்தாளருக்கு மிகுந்த சிறப்பளிப்பதை நா. பார்த்தசாரதியின், '1947ல் ஒட்டோஃபிராங்க் அன்னேயின் நாட்குறிப்புக்களை வெளியிட்டார். இப்படி முதலில் வெளியான டச்சுப் பதிப்பைத் தொடர்ந்து பிரெஞ்சு, ஜெர்மன், இங்கிலிஷ் மொழிபெயர்ப்புகளும் வெளிவந்தன. இன்று பல்வேறு நாடுகளைச் சேர்ந்த ஐம்பது மொழிகளில் அன்னேயின் நாட்குறிப்புக்கள் மொழிபெயர்த்துப் பிரசுரிக்கப் பட்டுள்ளன. ஆங்கிலத்தில் வெளியான ஓர் அமெரிக்கப் பதிப்பிற்கு எலினார் ரூஸ்வெல்ட் பிரமாதமான முன்னுரை ஒன்றை எழுதியிருக்கிறார். எல்லாப் பதிப்புகளுமாகச் சேர்த்து அன்னேயின் நாட்குறிப்புகள் இதுவரை பதிமூன்று மில்லியன் பிரதிகள் விற்பனையாகி இருப்பதாகக் கணக்கிட்டிருக்கிறார்கள். இந்நாட்குறிப்பின் அடிப்படையில் ஒரு மேடை நாடகமும் திரைப்படமும் கூட உருவாக்கப்பட்டுப் பிரபலமாயின. டைரியின் ஒரிஜினல் பிரதியை இன்று அன்னேஃபிராங்க் மியூசியக் கட்டிடத்தில் வைத்திருக்கிறார்கள்' எனும் கூற்றில் (ஏழு நாடுகளில் எட்டு வாரங்கள், சுந்தர நிலையம், சென்னை, 1985, பக். 97-98) காணலாம். இவ்வாறே பிறரின் பயண விளக்கமும் தம் இயல்பிற்கேற்ப அமைகின்றன.

ஒருவர் எங்கு எதற்காகச் சென்றாலும் அவரது சிந்தனையில் ஊறிக்கிடக்கும் எண்ணம் எப்படியேனும் அவர் எழுத்துகளில் வெளிப்படுவதைப் பார்க்கலாம். வாஸந்தியின், 'நள்ளிரவுச் சூரியர்கள்' இதற்கு நல்ல சான்றாகும். ஆஸ்லோ பல்கலைக்கழகம் நடத்திய கோடைகாலப் பள்ளியில் இரண்டரை மாதங்களுக்கு மாணவியாகப் பங்கேற்கச் சென்ற இவரின் இந்நூல் நெடுகிலும் பெண்ணியச் சிந்தனைகள், பார்வை விரவிக் கிடக்கிறது. சான்றாக, 'பெண்ணின் சுதந்திரம் என்பது இதில்தான் இருக்கிறது. சுதந்திரமான தெளிவான மனிதநேயம் மறவாத சிந்தனை, தான் என்று தனித்து நிற்காமல் மற்றவர்களுக்காக உருகும், கசியும் தன்மை, தனது தன்மானத்தையும் காத்து,

துணிவுடன் தனது உரிமைகளை நிலைநாட்டிக் கொள்ளும் தீர்மானம் - மாரின் மிக சுதந்திர மனுஷியாகவே எனக்குத் தெரிந்தார். ஆனால் நார்டிக்ஃபோரம்மில் பார்த்த பெண்களுக்கும் இவருக்கும் எத்தனை வித்தியாசம்! நான் சந்தித்த பெண்களின் நினைவாகவே பாரதத்துக்குப் பயணமானேன்' (பக். 149-150) என்பதைக் காட்டலாம்.

பொதுவாகப் பயண நூல்களில் ஒவ்வொரு இடத்தைப் பற்றிய வரலாற்றிற்கும் சமயத்திற்கும் முக்கியத்துவம் அளிக்கப் படுகிறது. நமது நாட்டுடன் ஒப்பிட்டுப் பேசும் நிலை (குரும்பூர் குப்புசாமி - கிழக்கே போன கிணற்றுத் தவளை), நம்மைப் பற்றிய அவர்களின் எண்ணம் (மணியன் - இதயம் பேசுகிறது), அங்கு வாழும் நம் நாட்டவர் பற்றிய செய்திகள் (சரோஜினி ஸ்ரீராம் - சிங்கப்பூரிலிருந்து சங்கநதிவரை), அந்நாட்டவரின் பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகள், பண்பாடு, கலாச்சாரம், சமூகப் பொருளாதார நிலைகள், யார் யாரிடம் 'எத்தகைய உதவிகள் பெற்றனர் என்ற தற்சார்புக் கருத்துகள் (சு.ந. சொக்கலிங்கம் - ஐப்பானில் நான் கண்டதும் கேட்டதும்) போன்றவற்றையும் அவர்களின் அனுபவங்களுடன் கூறக் காணலாம். சுவைக்காகக் கற்பனைப் பாத்திரங்களைப் படைத்துக் கொள்ளும்போக்கும் சிலரிடம் காணப்படுகிறது (சாவி - நான் கண்ட நாலு நாடுகள்). குறிப்பிட்ட தேதியுடன் காலம் காட்டலும் (அரு. சோமசுந்தரம் - வட இந்தியப் பயணம்) உண்டு (ச.வே. சுப்பிரமணியன், இலக்கிய வகையும் வடிவும், தமிழ்ப்பதிப்பகம், சென்னை, 1984, ப. 653).

ஒரு நாட்டின் புவியியல், வரலாற்றியல், தொழில், அரசியல், மக்கள் தொகை, வேளாண்மை, கனிப்பொருட்கள், பொருளாதார நிலை, பழங்குடிகள், கலைகள், வரலாற்றுச் சிறப்புமிக்க இடங்கள், அந்நாட்டிற்கேயுரிய தனித்த பெருமைக்குரியன, விலங்குகள், தாவரங்கள், விழாக்கள், பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள்.... எனப்பல செய்திகளைப் பயண இலக்கியப் படைப்பாளர் தருவது பயண இலக்கியம் பொழுதுபோக்கு இலக்கியமல்ல, பொது அறிவுக்களஞ்சியமுமாம் என்பதை உறுதி செய்கிறது. இது பயண இலக்கியத்தின் பெரும் பயனாகவும் அமைகிறது. வாழ்க்கை வரலாற்றிலக்கியங்களை விட இவற்றில் மிகுதியான புகைப்படங்கள் அமைவதும் தனிச்சிறப்பாகும். இவை வாசகர்க்குப் பெரும் விருந்தாகும். பிறர் பார்த்து அனுபவித்த இடத்தைத் தாமும் நேரில் சென்று பார்த்தது போன்ற உணர்வினை இவை தருகின்றன.

பயண இலக்கியங்களில் சிட்டியும் ஜானகிராமனும் இணைந்து படைத்த 'நடந்தாய் வாழி காவேரி' ஒரு புதுமைப் படைப்பாகும். காவிரியின் முகத்துவாரத்திலிருந்து அது கடலில் கலக்கும் இடம்வரைப் பயணம் செய்து, அதன் இரு கரைகளிலும் உள்ள சிறப்பான இடங்கள், வாழும் மக்களின் இயல்புகள், வழங்கும் கதைகள் போன்றவற்றைத் தந்துள்ளனர். புத்தர், சேக்கிழார், மணிவாசகர் போன்றோர் வரலாற்றை எழுத சோ. சிவபாத சுந்தரம் அவர்களுடன் தொடர்புடைய இடங்களுக்குப் பயணம் செய்து அவற்றை நேரில் கண்டு பழைய நிலையினையும் இன்றுள்ள நிலையினையும் சுட்டி, வரலாற்றுடன் தன்னுடைய பயண அனுபவத்தையும் இணைத்து எழுதியிருப்பதால் அந்நூல்கள் பயண இலக்கியத்துள்ளும் பெருமை கொள்கின்றன.

"பழைய இராஜகிருக நகரத்தில் வடக்குப் பக்கத்தில்தான் அந்தக் காலத்தில் புத்தருக்குப் பிம்பிசார மன்னன் உவந்தளித்த வேணுவனம் இருந்ததாக ஐதிகம். ஆனால் இப்போது அங்கே நாங்கள் மூங்கிலைக் காணவில்லை. வேணுவனத்தின் பக்கத்திலே 'கலந்தக நிவாசம்' என்ற ஓரிடமிருந்தது. அணில்கள் வசித்த இடம் அது. புத்தருக்கு அந்த அணில்கள் சேவை செய்தன என்று சொல்லப்படுகிறது. நாங்கள் தங்கியிருந்த ஸ்தலத்துக்கு எதிரிலேயிருந்தது வைபாரகிரி. அதன் அடிவாரத்திலேதான் வெந்நீர் ஊற்றுக்கள் பல காணப்படுகின்றன. பக்கத்திலே ஈஸ்வரன் கோயில் இருக்கிறது. அதைத் தாண்டி மேலே ஏறினால் ஒரு பெரிய குகை காணப்படுகிறது. இக்குகையின் மேலே செங்கற்களால் கட்டப்பெற்றிருந்த ஒரு கட்டிடத்தின் சின்னங்கள் காணப்படு கின்றன. இதிலேதான் புத்தர் பல சந்தர்ப்பங்களில் உட்கார்ந்து தருமோபதேசம் செய்தார் என்றும், கீழே குகையில் வசித்தார் என்றும், சப்த தாரை என்ற வெந்நீர் ஊற்றில் குளித்தார் என்றும் சொல்வார்கள்" (கௌதம புத்தர் அடிச்சுவட்டில், பக். 96-97) என்பது போன்று இதனுள் பயணமும் வாழ்க்கை வரலாறும் பின்னிப் பிணைகின்றன.

இவரின் இம்முயற்சியும் அதில் கிடைத்த வெற்றியும் சேக்கிழார் வழியில் சிவத்தலங்கள் (பு.மா. ஜய செந்தில்நாதன், 1983) எனும் நூல் எழ ஏதுவாயிற்று. இது நாயன்மார்கள் அவதரித்த - முத்தி பெற்ற - வழிபட்ட இடங்களைக் கண்டு வழிபட விரும்புவோர்க்கு ஓர் சிறந்த வழிகாட்டியாகும். மேலும், இவ்விடங்களுக்குச் செல்லுதற்குரிய பேருந்து - புகைவண்டி முதலிய வழிமுறைகளையும், தலச்சிறப்பு, அங்கு உய்தி பெற்ற

மற்றவர் வரலாறு - பாடல் பெற்ற தலமானால் அதற்குரிய சிறப்பு, ஆதீனத் தலங்களானால் அவற்றிற்குரிய குறிப்பு முதலிய சமயத் தொடர்புடைய அனைத்துச் செய்திகளையும் தாங்கி வருகின்றது. தல யாத்திரை செய்பவர்கள் இந் நூலின் துணை கொண்டு, பிறர் உதவியின்றியே இவ்விடங்களைப் பற்றிய அனைத்துச் செய்திகளையும் தாமே அறிந்து கொள்ளும் வகையில் எழுந்துள்ளது.

மிக விரிவாகவும், விளக்கமாகவும், தெளிவாகவும் சிறப்பாகவும் புனிதப் பயணங்களைத் தருவதில் பரணீதரன் சிறப்புப் பெறுகின்றார். (அருணாசல மகிமை, 3 பாகங்கள் 1972, புண்ணிய பாரதம் 1975, புனித பயணம் 1974, கேரள விஜயம் 1977) இத்துறையில் அதிகமான நூல்களைப் படைத்தவராகவும் பெருமையுறுகிறார். பொன் பாஸ்கரத் தொண்டைமானும் இவரைப் பின்பற்றி இத்தகு நூல்கள் சில படைத்துள்ளார் (இதழ்களில் வெளிவந்துள்ளன). தொ.மு. பாஸ்கரத் தொண்டைமானின் வேங்கடம் முதல் குமரி வரை எனும் தலைப்பிலான நான்கு தொகுதிகளும் இங்கு எண்ணத்தக்கவை. இராமேசுவரத்தில் இருந்து 17-2-1983 அன்று பாதயாத்திரையாகப் புறப்பட்டு 116 நாட்களில் 2000 மைல் நடந்து 12-6-1983 அன்று காசி யடைந்து வழிபட்ட வரலாற்றை அரு. சோமசுந்தரன் 'இராமேஸ்வரம் காசி நடைப்பயணம்' எனத் தந்துள்ளதும் குறிப்பிடத்தக்கது. பயண வசதிகள் நன்கு பலவாகப் பெருகியுள்ள இந்நாளிலும் திருத்தலப் பயணங்கள் பல வழிநடைப்பயணங்களாக (பழநி, திருச்செந்தூர்) அமைகின்றன.

பயண இலக்கியப் படைப்பாளரில் மற்றும் பலர் அதன் வளர்ச்சிக்கு வழிகாட்டியவராக அமைகின்றனர். சோமு, சாவி நூல்களில் நகைச்சுவை பரந்து கிடக்கக் காணலாம். சோமலெ நூல்களில் தன்னனுபவங்களைவிடச் சென்ற இடத்தைப் பற்றிய செய்திகள் நிறைந்திருக்கும். அறிஞர்களின் சொற்களை முன் பகுதியில் கொடுத்து அவற்றிற்கு விளக்கமாகத் தாம் கண்ட நிகழ்ச்சியை உணர்த்தலும், தனக்கு அறிமுகமானவரைப் பேட்டி கண்டு செய்திகளைத் தேடித் தருதலும் மணியன் நூல்களில் உண்டு. அரு. சோமசுந்தரத்தின் பயண நூல்கள் அவ்வந்நாடுகளைப் பற்றிப் பொது அறிமுகம் பெறுதற்குக் குறிப்பிடத்தகுந்த நூல்களாகும் (ச.வே. சுப்பிரமணியன், முன்சுட்டியது, ப. 654). எஸ். அருண் (இமயத்தில் நூறு மைல்), நெ.து. சுந்தரவடிவேலு (அங்கும் இங்கும், சோவியத் கல்வி முறை), பிலோ இருதயநாத்

(ஆதிவாசிகள் மறைந்த வரலாறு, ஊரும் சிறப்பும்), சிவசங்கரி (அனுபவங்கள் தொடருகின்றன) எனப் பிறரும் இங்குக் கருதத் தக்கவராவர். எழுத்தாளர் மட்டுமின்றித் தமிழறிஞர் பலரும் (திரு.வி.க., மு.வ., அ.மு. பரமசிவானந்தம், கி.வா. ஜகந்நாதன்) இத்துறையில் ஈடுபட்டிருப்பது நவிலத்தக்கது. பல துறைகளிலும் வெற்றிக் கொடி நாட்டிய பாரதியார் அவ்வப்போது பயணக் கட்டுரைகள் வழங்கியுள்ளமையும் குறிப்பிடத்தக்கது. 1982இல் பாரதியாரின் பயணக் க்ட்டுரைகள் எனும் பெயரில் அவை வெளியிடப்பெற்றுள்ளன.

இவ்வகையில் மணியனின் பங்கு தனித்துச் சிறப்பிக்கத்தக்க பெருமையுடையது. அதிக எண்ணிக்கையில் இதயம் பேசுகிறது எனும் தலைப்பில் பல நாடுகளிலும் பயணித்த அனுபவங்களைத் தந்துள்ளார். கதாசிரியர், இதழாசிரியராக விளங்கிய இவருக்குப் பெருமை சேர்த்தது இப்பயண இலக்கியங்களாகும். 'அமெரிக்கா, இங்கிலாந்து, ஜப்பான் ஆகிய சர்க்கார்களின் அழைப்பின் பேரில் அந்நாடுகளுக்குச் சென்ற நான், அந்நாட்டுக் கட்டடங்களில் அதிக கவனம் செலுத்தவில்லை. என் கவனமெல்லாம் அந்நாட்டு மக்கள் மீது சென்றது. அவர்களுடைய வாழ்க்கை முறைகளையும் அவர்களுக்குள்ள பிரச்னைகளையும் அறிய ஆவல் கொண்டேன். அவர்களுடைய சமூக வாழ்வு, பொருளாதாரப் பிரச்னை, குடும்பச் சூழ்நிலை, மண வாழ்க்கைப் பிரச்னை, அரசியல் நிலைமை, நிற வேறுபாட்டுப் பிரச்னை இவற்றைப் பற்றி அறிய விரும்பி, அந்நாட்டு எளிய மக்களுடன் நெருங்கிப் பழகினேன். அப்படிப் பழகியபோது அவர்களுடைய இதயம்பேசுவதைக் கேட்டேன். அதைத்தான் இந்தப் பயணக் கதையில் எழுதியுள்ளேன்' என்று அவர் தம் படைப்பு பற்றிக் கூறியிருப்பது இவ்வெற்றிக்குக் காரணமாகும்.

'பிரயாணக் கட்டுரை எழுதுவது என்பது ஒரு தனிக்கலை. அதில் காதல் கிடையாது, கதாநாயகி, வில்லன், கோர்ட், அடிதடி ஆகிய பரபரப்பு ஊட்டும் சம்பவங்கள் எதுவும் கிடையாது. எழுத்துத் துறையிலே மிகவும் சிரமமான பணி பிரயாணக் கட்டுரை எழுதுவதுதான்' என்று ஆனந்த விகடன் ஆசிரியர் எஸ்.எஸ். வாசன் (உலகம் சுற்றினேன் சி. சுப்பிரமணியம் - முன்னுரை) கூறியிருப்பது இதன் படைப்புப் பெருமையை உணர்த்தும். எனினும் தனித்த இலக்கிய வகையாக மலர்ந்த காலந்தொட்டு இன்று வரை குறிப்பிடத்தக்கப் பல நூல்களால்

(எனது பர்மா வழிநடைப்பயணம் - வெ. சாமிநாத சர்மா, 1979, என் பிரயாண நினைவுகள் - இலக்குமணச் செட்டியார், 1968, நான் கண்ட ரஷ்யா - சுத்தானந்த பாரதியார், 1955, நூலக நாட்டில் நூற்றிருபது நாட்கள் - திருமலை முத்துசாமி - 1967, சோவியத் நாட்டில் ஒரு தமிழ் மாணவி - கமலா, 1975, பிரயாண இலக்கியம்- கட்டுரைத் தொகுப்பு - வாசகர் வட்டம், 1966, புதிய கீதம் இசைக்கின்றனர் - ராஜம் கிருஷ்ணன், 1978, ஜப்பானில் நான் கண்டதும் கேட்டதும் - சு.ந. சொக்கலிங்கம், 1975) வளம் பெற்று வளர்ந்து கொண்டிருக்கிறது. பல மொழிபெயர்ப்புகளும் எழுந்துள்ளன.

தொடக்க காலத்தில் எழுந்தன பலவும் உள்நாட்டுப் பயணங்களாக அமைந்தன. போக்குவரத்து வசதி, கல்வி, தொழில், நாடுகளுக்கிடையேயான நட்புறவு, சுற்றுலா செல்வதில் ஆர்வம் என வாய்ப்பும் வசதியும் பெருகிய நிலையில் வெளிநாட்டுப் பயண அனுபவங்கள் பின் அதிகமாக இடம் பெறலாயின. பயணத்திற்கான ஏற்பாடு முதல் திரும்பி வந்து சேர்ந்தது வரையென ஒரே நேர் கோட்டில் அமையாது பலவகை உத்திகளைக் கையாண்டுப் பயண இலக்கியத்திற்குச் சுவையூட்டி வாசகரைச் சலிப்படையாது தொடரச்செய்யும் முயற்சிகளும் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

பயண இலக்கியம் பெரும்பான்மை உரைநடை வடிவமே கொண்டுள்ளது. முழுமையான, விரிந்த அமைப்பு மட்டுமின்றிச் சுருங்கிய கட்டுரை வடிவங்களும் உண்டு. பாரதிதாசன் 'மாவலிபுரச் செலவு' என்ற நீண்ட கவிதையொன்று படைத்துள்ளார். அதனைத் தொடர்ந்து வா.மு. சேதுராமன் தம் பயண அனுபவங்களைக் கதை நவில் காப்பியங்கள் போன்று தந்துள்ளார் (மலை நாட்டின் மீதினிலே). கே.பி.எஸ். மேனனின் 'மாஸ்கோ டைரி' எனும் மொழிபெயர்ப்பு நூல் நாட்குறிப்பு முறையில் அமைந்து சிறக்கிறது. மு.வ. யான் கண்ட இலங்கையைக் கடித வடிவில் தர அ.மு. பரமசிவானந்தம் அதனைப் பின்பற்றி 'தமிழன் கண்ட மலேயா'வைக் கடிதமாக்கியுள்ளார். முன்னாள் முதல்வர்கள் சி.என். அண்ணாதுரையும், எம்.ஜி. ராமச்சந்திரனும் அமெரிக்காவில் தங்கியிருந்த பொழுது உடனிருந்த எம்.எஸ். உதயமூர்த்தி, அவர்கள் அனுபவங்களை, 'அமெரிக்காவில் அண்ணா, எம்.ஜி.ஆர்' எனப் படைத்திருப்பது தனிப் பாங்கினதாகும். பல சூழல்களில் பல காலங்களில் சென்ற பயணங்களின் தொகுப்பாகச் சாலை இளந்திரையனின் எங்கள் பயணங்கள் அமைகிறது.

சென்ற நாட்டைக் குறிப்பிட்டு நூலுக்குப் பெயரமைதல் திருக்கயிலாய கிரி யாத்திரை (ஸ்ரீசித்பவானந்த சுவாமிகள்), புதிய ஜெர்மனி (எ. சங்கரன்) எனப் பொது இயல்பாகக் காணப் படுகிறது. பல நாடுகளுக்குச் செல்லும் போது உலகம் சுற்றி வந்தோம் (பன்னீர்தாஸ், சந்தோஷம்), ஐந்து நாடுகளில் அறுபது நாட்கள் (தேவன்), மாஸ்கோவிலிருந்து லண்டன் வரை (ம.பொ. சிவஞானம்) என்பன போன்று நூற்பெயரமைகிறது. நாடுகளின் பெயர்க் குறிப்பின்றி ஆனால் தலைப்பிலேயே பயண இலக்கியம் என்பதை உணர்ந்து கொள்ளும் வகையில், புதிய உலகம் புதிய பறவைகள் (சோலை) என்பது போன்றும் அமைவதுண்டு. இவற்றிலிருந்து மாறுபட்டு நூலுள் சென்றால் மட்டுமே பயண இலக்கியம் எனத் தெரிந்து கொள்ளக் கூடியதாகவும் தலைப்புகள் அமைகின்றன. சான்றாகப் பிலோ இருதயநாத்தின் பழங்குடிகள், நீலகிரிப் படகர்கள் போன்ற வற்றைச் சுட்டலாம். குட்டித் தீவை எட்டிப் பார்த்தேன் (குரும்பூர் குப்புசாமி) என்பது போன்று நயம்பட அமைதலும் உண்டு.

தனியொரு இடத்தின் பயண அனுபவம் நூலாக்கம் பெறும் பொழுது அமையும் விரிவும் விளக்கமும் பல இடங்களுக்குச் சென்றவற்றைத் தொகுத்துத் தரும் பொழுது கிடைப்பதற்கில்லை, சுருக்கமாக அவை அமைகின்றன. தனிமனிதப் பண்பினை, சிறப்பினை வாழ்க்கை வரலாற்றிலக்கியம் தர, ஒரு நாட்டின், இனத்தின் பண்பினை, சிறப்பினைத் தந்து பயண இலக்கியம் பெருமை கொள்கிறது. சமூகவியல், பண்பாட்டியல், வரலாற்றியல் ஆய்விற்கு இவ்வகை படைப்புகள் துணையாவதுடன் ஒப்பியல் கல்விக்கும் பயனாகிறது. ந. வேலுசாமியின் பயண நூல்கள் வழிப்பண்பாடு சிறந்த சான்றாகும். பயண அனுபவங்கள் கதை படைப்பிற்கும் காரணமாவதை அகிலனின் தாஷ்கண்டில் ஒரு தங்கை, சாவியின் தெப்போ 76 போல்வன இயம்புகின்றன.

பயண இலக்கிய வளர்ச்சியில் முன்னோடியான பிலோ இருதயநாத், தாம் மேற்கொண்ட பயணங்களின் வழி பெற்ற பட்டறிவைப் பிறரும் பயன்படுத்திக் கொள்ளும் வகையில் 'பயணம் ஒரு கலை, ஆனால்..........' எனும் நூலை (1978) எழுதி யுள்ளதும் இங்குச் சுட்டத்தக்கதாகும். அதனுள் பயணம் செல்லுமுன் செய்ய வேண்டிய ஏற்பாடுகள், பயணங்களில் ஏற்படும் இடையூறுகள், அவற்றை நீக்கும் வழிமுறைகள் என்பன

பற்றித் தெளிவாகவும், விளக்கமாகவும் அறிவித்துள்ளார். அந்நூல் முதன்முறையாகப் பயணம் மேற்கொள்வோர்க்குச் சிறந்த கையேடாகும்.

பலதரப்பினராலும் எழுதப்படுவதால் பயண இலக்கியங்களின் மொழிநடை மிகுதியும் எளிமையாகவே இருக்கின்றது. ஆங்கிலம் போன்ற பிற மொழிகளின் விரவலும் காணப்படுகிறது. பொதுவாகப் படைப்பாளர்களால் எழுந்துள்ள பயண நூல்கள் கூடுதல் சுவைபட அமைந்துள்ளதும் இயல்பேயாம்.

பயண இலக்கியத்தின் தொடக்கம் முதல் இன்று வரை இதழ்கள் இவ்வகைக்குத் தொடர்ந்து சிறப்பளித்து வருகின்றன. பெரும்பான்மையான பயண இலக்கியப் படைப்புகள் முதலில் இதழ்களில் தொடராக வெளிவந்தனவாம்.

## சிங்கப்பூர்

**சுப. திண்ணப்பன்**

**ஆ.ரா. சிவகுமாரன்**

பயண இலக்கியக் கட்டுரைகள் படைத்தவர்களுள் குறிப்பிடத்தக்கவர் எஸ்.எஸ். சர்மா. இவர் தமிழ்நாட்டில் எட்டு நாட்கள் (1980), ஈழத்தில் இனிய நாட்கள் (1982), சுமத்ரா ஒரு சுவர்க்கம் (1991), சீசெல்ஸ் நாட்டில் சில நாட்கள் (1991) முதலிய நூல்களை வெளியிட்டுள்ளார். சுதர்மன், பி.பி. காந்தம் முதலியோரும் பயண இலக்கியக் கட்டுரைகள் படைத்துள்ளனர்.

# கட்டுரையிலக்கியம்

## தமிழகம்

**ச. சிவகாமி**

ஆங்கிலமொழியின் தாக்கத்தினால் தமிழுக்குக் கிடைத்த புதியவரவுகளுள் இக்கட்டுரையிலக்கியமும் ஒன்றாகும். தொல்காப்பியம் புனைந்துரை எனும் பொருளில் கட்டுரை எனும் இச்சொல்லைக் கையாள்கிறது. சிலம்பின் பதிகம் 'கோட்டமில் கட்டுரை கேட்டனன் யானே' (54) எனப் பேசுங்கால் 'பொருள் பொதிந்த சொல்' என்று பொருள்படுகின்றது. பொருள் நிறைந்த சொற்களால் உலகக் காட்சிகளை, இயல்புகளை, தன்னுணர்வுகளை, கருத்துகளை அவரவர் கண்ணோட்டத்திற்கு ஏற்ப சுவையான நடையில், வெறும் பொழுது போக்காக மட்டும் அமையாது, சிந்திக்க வைப்பதாகவோ அறிவூட்டுவதாகவோ அமைவது கட்டுரையிலக்கியம் எனலாம்.

இலக்கிய, இலக்கண அறிமுகமாக, திறனாய்வாக அமையும் கட்டுரைகள், கலை, தத்துவம், அறிவியல் எனப் பிறதுறைகள் மீது வரையப்பட்ட கட்டுரைகள், ஏதேனுமொரு பொருள் குறித்து களஆய்வு செய்து தரப்படும் கட்டுரைகள் போல்வன இக்கட்டுரையிலக்கியத்தினின்றும் மாறுபட்டனவாகும். படைப்பிலக்கியங்கள் போன்று சிந்தனைகளைக் கற்பனை வளத்துடன் தரும்பொழுது இலக்கிய வகையுள் ஒன்றாக அமையும் கட்டுரைகள் தோன்றுகின்றன. கதை கூறிச் செல்லும் பாங்கிலும் இவை அமையினும் படைப்பிலக்கியங்களில் பெரிதும் போற்றப்படும் கதைமாந்தர் பண்பு நலன், கதை வெளியீட்டு உத்திகள், கதையமைப்பு, கதைக்கரு, கதைப்போக்கு என்பன இவற்றில் சிறப்பிக்கப்படுதல் இல்லை. அவற்றில் கதைக்கரு மையம் கொள்ள, இவற்றில் 'கருத்து' மையப்புள்ளியாகிறது. மருத்துவர் நோய் நீக்கக் கசப்பு மருந்தினை இனிப்பு உறையிட்டு வழங்குதல் போல் சமூகப்பிணி நீக்கும் சமூக மருத்துவரான இவ்வகை எழுத்தாளர் தம் எண்ணங்களை, கருத்துகளை இலக்கியச் சுவைபட, பிறபல செய்திகளுடன் இணைத்துத்தரல் இதன்பாற்படுகின்றது.

'கட்டுரை ஒரு நிகழ்ச்சிச் சித்திரிப்பாக அமையலாம். ஆனால் கதையாகி விடக்கூடாது. கட்டுரை ஓர் உரையாடலாக அமையலாம். ஆனால் அது நாடகமாகிவிடக் கூடாது. கட்டுரை ஓர் ஆசிரியனின் கோட்பாட்டை வலியுறுத்தி நிலைநாட்டுவதாக இருக்கலாம். ஆனால் ஆய்வுரையாகி விடக்கூடாது. எதிர்மறை யான இந்த வரையறை இறுக்கங்களுக்கு இடையேதான், கட்டுரை தனக்கென்று ஓர் வடிவத் தோற்றத்தைப் பெற்று, நமக்கு அதை மங்கலாக உணர்த்திக் கொண்டிருக்கிறது' எனச் சாலை இளந்திரையன் (புதுத்தமிழ் முதல்வர்கள், தமிழ்ப்புத்தகாலயம், சென்னை, 1972, ப. 29) இதனை விளக்குகிறார்.

'கட்டுரையின் அமைப்பும் கருத்தும் நடையும் நோக்கமும் பலவாறு இருத்தலின், அதன் தன்மையை வரம்பிட்டு வகுத்தறிதல் அரிது. ஒருவகையான கட்டுரை, விரித்து விளக்கப்படாத ஆழ்ந்த கருத்துகளை நெருக்கமாகக் கொண்டு சிலபக்கங்களுக்குள் அடங்குவதாய் இருக்கின்றது. மற்றொரு வகையான கட்டுரை, ஆக்கியோன் கருத்துகளையும் பலபல மேற்கோள்களையும் கொண்ட ஒரு கலவையாய் இருக்கிறது. வேறொருவகையான கட்டுரை கருத்தாழம் இன்றி, ஆக்கியோன் நுகர்ச்சி நவிற்சியாய் (தன்னுணர்வு வெளிப்பாடாய்) அமைந்திருக்கின்றது. பிறிதொரு வகையான கட்டுரை நீண்டு மெய்ப்பொருள் கோட்பாடுகளைப் பற்றியதாய் இருக்கின்றது. இன்னொரு வகையான கட்டுரை உண்மையில் ஒரு சிறு நூலாகவே அமைந்திருக்கின்றது' எனும் எம். பாலசுப்பிரமணியம் கருத்து (சொல்லும் பொருளும், ப. 72) கட்டுரைகளை அமைப்பிலும் பொருளிலும் வகைப்படுத்துவதில் உள்ள சிக்கலை வெளிப்படுத்துகிறது.

எந்த விதமானப் பின்னணியும் இன்றி ஆங்கில மொழியிலிருந்து எடுத்துக் கொள்ளப்பட்டு இருபதாம் நூற்றாண்டில் தோன்றி வளர்ந்து கொண்டிருக்கும் இதனைச் ச.வே. சுப்பிரமணியம் (தமிழ் இலக்கிய வகையும் வடிவும், பக் 657-658) இரண்டாகப் பிரித்துரைக்கிறார். தனிமனிதனின் உணர்ச்சிகளையும், உள்ளப்பாங்கையும் செயல்களையும் சுவையான நிகழ்ச்சிகளையும் சமுதாய நம்பிக்கை பழக்க வழக்கங்களின் வினோதங்களையும் பிரதிபலிக்கும் கட்டுரைகள், நகைச்சுவை உணர்வுடன் கிண்டல் செய்யும் பாங்குடன் அமைவது ஒருவகையாகும். தொடக்க காலக் கட்டுரைகளில் இது பெரும்பான்மையாகக் காணப்படுகிறது. புதினம், சிறுகதை உலகில் சிறப்பிடம் பெறும் கல்கி இவ்வகைக் கட்டுரை யிலக்கியம் படைத்தவர்களின் முன்னவர் ஆகிறார். இவரைப்

பின்பற்றித் துமிலன், தேவன், நாடோடி, அகஸ்தியன், சாவி முதலானோரும் இவ்வகையில் ஈடுபாடு காட்டியுள்ளனர்.

இரண்டாம் வகை, இலக்கியங்கள் வெறும் பொழுதுபோக்காக மட்டும் அமையாது நீதியை, அறநெறியைப் போதிப்பதாகவும், சிந்தனையைத் தூண்டுவதாகவும் இருக்க வேண்டும் என்ற கொள்கையைப் பின்பற்றுவதாகும். 'சிந்தனைக்குரிய உயர் செய்திகளைப் பல்வேறு கோணங்களில் விவரிக்கும் உண்மையான கட்டுரையிலக்கியம் இப்பொழுது சிறிது சிறிதாக உருவாகி வருகிறது' எனும் கூற்று (சாலை இளந்திரையன், உலகம் ஒரு குடும்பம்) இவற்றில் பொழுதுபோக்குக் கூறுகள் இணைவதைத் தடைசெய்கிறது.

இன்று சமூகச் சிந்தனையாளரிடையே பயன்பாட்டில் இருந்துவரும் 'உரத்த சிந்தனை' என்பதன் பொருளை இவண் எண்ணலாம். இதில் உணர்த்தும் கருத்துகள் நேரிடையாகவோ மறைமுகமாகவோ காணப்படுகின்றன. தூரன், மு. வரதராசனார் போன்றோர் மறைமுகமாகவும் அப்துற்றஹீம், எச்.எம். ஆர், கண்ணதாசன் போன்றோர் நேரிடையாகவும் தருகின்றனர். சமுதாய முன்னேற்றம், தனிமனிதனின் வாழ்க்கை நலம், உயர்வு, எப்படி வாழவேண்டும் என்பனவற்றிற்கு முக்கியத்துவம் அளித்தல் என்பன இத்தகைய கட்டுரைகளில் மேலோங்கி நிற்கின்றன. இக்கூறினை இக்கட்டுரையிலக்கியத்தின் வளர்ச்சி நிலையாகவும் கொள்ளலாம். சிவசங்கரியின் சின்னநூல்கண்டா உன்னைச் சிறைபிடிப்பது, எம்.எஸ். உதயமூர்த்தியின் உன்னால் முடியும், எண்ணங்கள் போன்ற பல நூல்கள் இவ்வகையில் வெற்றி பெற்றுள்ளன.

எழுதப்படிக்கத் தெரிந்த அனைவராலும் புரிந்துகொள்ளக் கூடிய எளிமைத்தன்மை இவ்விலக்கியத்தின் முக்கிய பண்பாக அமைகிறது. கட்டுரையாளர் நேரிடையாகத் தம்மை இதனுள் வெளிப்படுத்து கின்றனர். பொதுநிலையில் நடந்த அல்லது கற்பனை நிகழ்வுகள், மனிதரிடையே காணப்படும் தேவையற்ற பொதுப்பண்புகள் (சான்றாக மறதி போன்றவை), பெரியோர் வாழ்வு நிகழ்வுகளைத் தம் கூற்றுக்கு ஆதாரமாகக் கொள்ளல், பிறர் கூற்றுகளையும் சுட்டல், கற்பனைகளைத் தம் அனுபவமாகக் காட்டல், குறையுடையது என உணராது பலராலும் மேற்கொள்ளப்படும் தவறுகளை அவற்றைச் செய்பவர்களே படித்துக் களிக்கும் விதத்தில் சுட்டல் போன்றன கட்டுரையிலக்கியத்தின் சில பொதுப்பண்புகள் எனலாம். எதில்

தொடங்கி எதில் முடிப்பது என்ற நியதி இங்குத் தென்படவில்லை. தரும் செய்திகளில் நிகழ்ச்சிகளில் பொருள் தொடர்புடன், கால இடத்தொடர்பு காணல் அரிது. எழுதும்பொருள் பற்றிய கட்டுரையாளரின் எண்ணம் இறுதியில் எடுத்துரைக்கப்படுவதும் உண்டு.

சான்றாக, 'சில நாளைக்கு முன் ஒரு நண்பர் என்னிடம் பலமாகச் சண்டை பிடித்தார்.... ஏன் சொந்தப் பெயர் போட்டுக் கொண்டு எழுதக்கூடாது? சொந்தப் பெயரைச் சொல்லிக் கொள்ள வெட்கமாயிருக்கிறதா? ஏன் இந்தக் கோழைத்தனம்? என்று அவர் கேட்டார்– புனைபெயர் ஏன்? உலகத்தின் மனப்போக்கு தான் அதற்குக் காரணம்.... நம்மில் பெரும்பாலோர் பிறருடைய அபிப்பிராயங்களையே நம்முடைய சொந்த அபிப்பிராயமாகக் கொண்டு போராடுகிறோம்..... ஓர் இத்தாலிதேசத்துக் கதை சொல்கிறேன், கேளுங்கள்— இப்படித்தான் சாதாரண ஜனங்களாகிய நாம் சண்டை போட்டுக் கொண்டு சாகிறோம்... இலக்கியத் துறையில் மட்டுமல்ல.... பெரும்பாலும் எல்லாவற்றிலும் நாம் இரவல் பிழைப்பே பிழைத்து வருகிறோம்..... ஆனால் சங்கீதத் துறையில் நான் ஏமாந்த கதையைச் சொல்கிறேன் கேளுங்கள்..... சிற்பம், சித்திரம் ஆகிய கலைகளில் இரவல் பிழைப்பு இன்னும் அதிகம். அடையாற்றில் சித்திரக் கண்காட்சி ஒன்று நடந்தது..... ரவீந்திரநாத் தாகூரைப் பற்றி ஏதேனும் சொன்னால், நேயர்களே ஒரு வேளை என்னைஅடிக்கக் கிளம்பலாம். இருந்தாலும் சொல்லியே ஆகவேண்டும்...... அவருடைய கவிதைகளில் சில தெய்வீக சௌந்தரியம் பெற்று விளங்குகின்றன. ஆயினும் சில இடங்களில், அவர் பாட்டுக்கள் கூடப் பொருளற்ற வெறும் வார்த்தைப் பந்தலாக எனக்குத் தோன்றுகிறது. இதைப் பற்றி நான் ஒரு நண்பரிடம் பேசிக் கொண்டிருந்தேன். அவர் என்ன சொன்னார் தெரியுமா? 'அதில் ஏதேனும் உள்ளர்த்தம் இருக்கும். உமக்கு விளங்கவில்லை அவ்வளவுதான்' என்றார். இத்தகைய மனோபாவம் குடி கொண்டிருக்கும் இவ்வுலகத்தில் நான் சொந்தப் பெயர் போட்டுக் கொண்டு எழுதுவது உசிதமாகுமா சொல்லுங்கள் . . . முக்கால்வாசிப்பேர் ஏட்டைப் புரட்டிவிட்டுப் போய் விடுவார்கள்....... பெயரைப் போட்டுக் கொண்டால் சாமானியனாகி விடுகிறேன். ஆனால் 'கல்கி' எவ்வளவு பெரிய மனிதராய்த்தான் இருக்கக் கூடாது. மகா வித்வானாயிருக்கலாம், ஹைகோர்ட் ஜட்ஜாக இருக்கலாம்.... இன்னும் எவ்வளவோ பெரிய மனிதராயிருக்கலாம். இவ்வளவு மகோன்னதமான

பதவியை நான் ஏன் விடவேண்டும்?' எனும் கல்கியின் 'என் பெயர்' கட்டுரையைச் சுட்டலாம் (ஏட்டிக்குப் போட்டி, வானதி பதிப்பகம், சென்னை, 1998, பக் 89-94).

ஆழமான, உயரிய இன்றியமையாத சிந்தனைகளுக்கு இடம் கொடுக்கும் கட்டுரையிலக்கியத்திற்குப் பின்வரும் பகுதியைச் சான்றாக்கலாம். 'நாம் ஏன் வாழவேண்டும்? இந்தக் கேள்வி அறிவானது உலகில் பிறந்த ஒவ்வொருவருக்கும் தம்மைப் பார்த்துத் தாமே கேட்டுக் கொள்ளவேண்டிய வினாதான் இது. இதற்கு என்ன பதில் கூறுவது? கட்டாயம் நாம் இதற்கு விடை கூறத்தான் வேண்டும். காரணம், நாம் மனிதர்கள். வாழ்க்கையே நமக்காகத்தான் ஏற்பட்டது. இது நமக்குத் தெரிந்திருந்தாலும் அதனுடைய முக்கிய அமைப்பை அறியாமல் இருந்து விடுகிறோம்.... உடலில் உறுதி இல்லாமலும், மனதில் ஊக்கம் இல்லாமலும், புதிய கருத்துகள் தோன்றாமலும் உயிரில்லாத களிமண் உருண்டைகள் போல இருப்பதில் என்ன பயன்? 'காலமெல்லாம் அழுது கொண்டிருந்தது போதும், இனி அழுகை என்ற பேச்சே இருக்கக் கூடாது. சுயவலிமை பெற்ற மனிதர்களாக எழுந்து நில்லுங்கள்' என்கிறார் விவேகானந்தர். நாம் இந்த உலகிற்கு வளமுடன் வாழ வந்திருக்கிறோம். நாம் நன்றாக வாழ்ந்து மறைந்ததற்கு அறிகுறியாக எதையாவது விட்டுச் செல்ல வேண்டும். அப்படி இல்லா விட்டால் மரம், கல், பாறை இவற்றுக்கும் நமக்கும் என்ன வேறுபாடு இருக்க முடியும்? அணைபோட்டுத் தடுக்காவிட்டால் ஆற்றின் நீரைப் பெற முடியாது, நம்முடைய சக்தியை ஒழுங்கு படுத்தாவிட்டால், அதனுடைய ஆற்றலை அறிய முடியாது' (மெர்வின், பிறந்தது வாழ்வதற்கே, குமரன் பதிப்பகம், சென்னை, பக் 26-34).

கட்டுரை என்ற ஒருசொல் நீர்மைத்தாய சொற்றொடரில் கட்டு, உரை என்ற இரு சொற்கள் அடங்கியுள்ளன என்பது தெளிவு. 'உரை' என்ற சொல் அடையடுத்தே கட்டுரை ஆகிறது என்பது ந. சஞ்சீவியின் (ஆராய்ச்சிக் கட்டுரைகள், ப. 151) கருத்து. இது, இட்டுக்கட்டி, கற்பிதமாகப் புனைந்துரைத்தல் கட்டுரை எனும் நிலையில் மேற்கண்ட சான்றுகளை நோக்கத் தெளிவும் உறுதியும்படக் காணலாம்.

இக்கட்டுரையாசிரியர்களில் சில தனித்தன்மைகள் உண்டு. மனிதர்களின் தேவையற்ற பழக்கவழக்கங்களை, மனநிலைகளை நகைச்சுவையுடன் தருகிறார் கல்கி (ஏட்டிக்குப் போட்டி). கூற விரும்பும் கருத்தினைத் தாம் கண்ட நிகழ்ச்சிகளால் நகைச்சுவை

யுடன் விளக்குவதைப் புதுமைப்பித்தனிடம் காணலாம் (சின்ன விஷயம், இலைக்குணம்). தாம் காணும் இயற்கைக் காட்சியை வைத்து உணர்த்த விரும்பும் கருத்தினை உரையாடல் வடிவில் தரும் பாங்கு மு.வ.வில் சிறந்திருக்கிறது (குருவிப் போர்). பிறர் வாழ்வில் நடந்த நிகழ்ச்சிகள் மூலமும் நேரிடையாகவும் வாழ்வியல் அறிவுரைகளைத் தரல் அப்துற்றஹீம் நூல்களில் அமைகிறது (வாழ்க்கையில் வெற்றி). இயற்கையின் மூலம் மனிதனுக்கு அறிவு புகட்டுவதைத் தூரன் மேற்கொண்டுள்ளார் (தேன் சிட்டு). தம்முடைய அல்லது பிறருடைய அனுபவங்களின் மூலம் மனித இயல்புகள் ஏதேனும் ஒன்று இப்படி இருந்தால் எப்படி இருக்கும் எனும் கற்பனையை நகைச்சுவையுடன் அளிக்கிறார் துமிலன் (ஆனந்த ஓவியம்). ஏதேனும் ஒரு பாத்திரத்தின் (சான்றாக நாவலாசிரியர், தேர்தல் அபேட்சகர்)மூலம் அவற்றின் எண்ணங்களையும் செயல்களையும் நகைச்சுவைபடத் தந்து சிந்தனை விருந்தளிக்கிறார் சி.சு. செல்லப்பா (குறித்த நேரத்தில்). நேரிடையாக முறையீடுகளும், விண்ணப்பங்களுமாக அறிவுரைகளாகக் கவிஞர் கண்ணதாசன் தாம் உணர்த்த விரும்பும் கருத்துகளைத் தம் அனுபவத்தின் வாயிலாகவே உணர்த்தி மிகுந்த அழுத்தம் பெறச்செய்கிறார் (கடைசி பக்கம்). தனிப்பட்ட மனிதரிடையே காணப்படும் விந்தையான பழக்கவழக்கங்களைச் சிரிப்போடு சிந்திக்க வைப்பதாகவும் அமையும் நடைச்சித்திர வரைவில் அகஸ்தியன் சிறப்புறுகிறார்.

மனிதனின் பழக்கவழக்கம் எப்படி இருக்கவேண்டும் எனக் கூறும் நா. பார்த்தசாரதியின் 'சிந்தனை மேடை', ஏதேனும் ஒரு சமூகச் சிக்கல் பற்றிய தம் எண்ணத்தைப் பேசும் ஜெயகாந்தனின் 'சுதந்திரச்சிந்தனை', பலதரப்படும் மனிதர்களின் குணாதிசயங்களைத் தந்து சிந்திக்கும்படிச்செய்யும் விந்தனின் 'இதோ ஒரு மக்கள் பிரதிநிதி', ஆங்கில நகைச்சுவையாசிரியரைப் பின்பற்றித் தனித் தமிழில் புதிய நோக்கமும், புதிய அமைப்பும் கொண்ட மகிழ்நனின் 'வடக்கும் தெற்கும்' போன்ற நூல்களும் இங்குக் குறிப்பிடத்தக்கன. இந்த நாட்டுக்குத் தேவையானதொரு புதிய சிந்தனை எனும் அடிப்படை நோக்கில் எண் சுவைகளைக் கொண்டு எதைப் பற்றியும் நாம் ஆழமாக, நீளமாக, புதுமையாக, காலத்திற்கு ஏற்றதாகக் கனமாகச் சிந்திக்க வேண்டுமெனக் கோடிட்டுக் காட்டிச் சமுதாய முன்னேற்றத்திற்கு வித்திடுகிறது சாலை இளந்திரையனின் 'கூட்டின் அமைதி குலைகிறது' எனும் நூல். கவிஞர் குடியரசுவின் 'தத்துவச் சிந்தனைகள்' கடவுள், காலம், கற்பனை, காதல், சுதந்திரம், பொறாமை எனப் பல்வேறு

பொருள்களைத் தனித்த கண்ணோட்டத்தில் வடித்துள்ளது. இக்கட்டுரையிலக்கியத்திற்கு முன்னோடியாக வீராசாமி செட்டியாரை அவரின் 'விநோதரசமஞ்சரி' கொண்டு அறியமுடிகிறது.

உடன்கால நிகழ்வுகளுக்கு முதன்மை கொடுத்து, அதனைத் தம் எண்ணங்களுக்கு ஏற்ப, தம் மனப்பாங்கும் உணர்ச்சிகளும் சார்த்தி வெளிப்படுத்த கட்டுரையாசிரியர்க்குப் பெருமளவு இடமுண்டு. பிற படைப்பிலக்கியங்களில், தன் வரலாறு தவிர, ஏனையவற்றில் படைப்போன் இந்த அளவிற்கு நேரிடையாக இடம்பெறல் இயலாமை இக்கட்டுரையிலக்கியத்தின் மற்றொரு சிறப்பாகிறது. (ச.வே. சுப்பிரமணியன், முன்சுட்டியது, பக். 658-665).

தொலைக்காட்சி ஒளிபரப்புகளின் வரவால் இலக்கிய வாசிப்பு குறைவுபட்டுள்ளது என்ற பொதுவானதொரு குற்றச்சாட்டு இருப்பினும் இதுபோன்ற நூல்களின் வரவும் குறிப்பிடத்தக்களவு அமைவது, இவை பொதுமக்களிடையே பெற்றுள்ள செல்வாக்கை உணர்த்துகின்றன. தனிமனித முன்னேற்றம், சமூக முன்னேற்றம் எனும் இருவித நூல்களும் வெளிவரினும் முன்னது கூடுதல் வரவேற்பைப் பெற்றுள்ளது. பிற இலக்கிய வகைகளைப் போன்றே இக்கட்டுரையிலக்கியமும் ஆனந்தவிகடன், குமுதம் போன்ற வாரஇதழ்களால் வளம் பெறுகின்றது. தன் முன்னேற்றம் குறித்த நூல்களை வெளியிடுவதில் கண்ணதாசன் பதிப்பகம் போன்ற பதிப்பகத்தாரும் அக்கறை காட்டுவது சுட்டத் தக்கது. இவற்றால் பிற படைப்பிலக்கியங்கள் பொதுமக்களிடையே பெற்றுள்ள வரவேற்பினை இக்கட்டுரையிலக்கியமும் பெற்றுள்ளது புலப்படும். இன்று தமிழிலக்கியப் பரப்பில் வளர்ந்துவரும் துறையாக இது சிறப்புறுகிறது. மொழிபெயர்ப்புகளும் பரவலாக எழுந்துள்ளன.

கவிஞர் புவியரசுவின் புல்லாங்குழலே, சி. ஆர். ரவீந்திரனின் வாழ்வின் வெளிச்சங்கள், மெய்யப்பனின் முன்னேற்றச் சிந்தனைகள், அ. வசந்தகுமாரின் விண்ணைத் தொடுவோம், அப்துல் கலாமின் அக்னிச்சிறகுகள், ஞானமூர்த்தியின் விடாமுயற்சி வெற்றிதரும், சிவசூரியன் ஐ.ஏ.எஸ்.ஸின் நல்லன எண்ணுங்கள், தி. ராதாகிருஷ்ணன் ஐ.பி.எஸ்.ஸின் எங்கெங்கு காணினும் சக்தியடா, தென்கச்சி சுவாமிநாதனின் இன்றொரு தகவல், வலம்புரி ஜானின் இந்த நாள் இனிய நாள்... என இவ்வகையில் பல சிறந்த நூல்கள் தமிழை, தமிழரை வளப்படுத்தியுள்ளன. எம்.எஸ். உதயமூர்த்தியின் மனிதமனம், எண்ணங்கள் மற்றும் மருத்துவர் ருத்ரனின் வாழநினைத்தால் வாழலாம் என்பன ஒலிப்பேழைகளிலும் ஒலிப்பது நவிலத்தக்கது.

# கடித இலக்கியம்

## தமிழகம்

ச. சிவகாமி

திருமுகம், முடங்கல், சீட்டுக்கவி எனச் செய்யுள் இலக்கியங்களில் இடம் பெற்ற வடிவம் உரைநடையிலக்கியமாக உருமாறிய போது 'கடித இலக்கியமாக' மலர்ந்துள்ளது. தொல்காப்பியம் மற்றும் சங்கப்பாக்களில் அகத்தூது, புறத்தூது என வழங்கிய பொருண்மை மடலாக, கடிதமாக நாளடைவில் மாற்றங்கண்டது. ஒருவர் பிறிதொருவருக்கு மற்றொருவர் வழி அனுப்பும் தகவல் வாய்மொழியாக அல்லது எழுத்துருவில் அமைந்தபொழுது அது தூதாகநின்றது. எழுத்துருவாக மட்டுமே அனுப்பும்பொழுது கடிதமாக வளர்ச்சி கண்டது. சிலம்பு, சிந்தாமணி, கம்பன் எனக் கதைநவில் இலக்கியங்களில் இடம்பெற்ற இது பதினோராம் திருமுறையில் சிவபெருமானால் இயற்றப்பட்டதாகக் கூறி இடம்பெற்றுள்ள 'திருமுகப்பாசுரத்தின்' வழி தனி இலக்கியமாகக் கால்கோளிட்டது. தொடர்ந்து தனிப் பாடல்களில் சீட்டுக்கவியாகி இன்று உரைநடையிலக்கிய வகையுள் ஒன்றாக விளங்குகிறது. பாரதி, பாரதிதாசன் போன்றோர் கவிதை வடிவில் இதனைச் சிறப்பித்துள்ளனர். புதினம், சிறுகதை, பயணம் போன்ற பிற இலக்கியவகைகளும் அரிதாகக் கடித அமைப்பைத் தம் வடிவமாகக் கொண்டுள்ளதும் கூறத்தக்கது. மறைமலையடிகளின் கோகிலாம்பாள் கடிதங்கள், சிவகளை மு. சுப்பையாவின் ஸ்ரீகாசி வழித்துணை விளக்கம் எனும் நூல்கள் சான்றுகளாகும்.

கடித இலக்கியம் என்பது, ஒரு மனிதனுடைய உள்ளத்தில் உதிக்கும் எண்ணங்களையும், எழுச்சி மிக்க உணர்ச்சிகளையும் அவற்றை அறிய விழைவோர்க்கும், அளிக்க விரும்புவோர்க்கும் சுவைபடத் தெரிவிப்பதாகும். எனவே யார் உணர்த்துகிறார், யாருக்கு உணர்த்துகிறார் என்பன தெளிவாக முன்னிறுத்தப்படுகின்றன. இவற்றுள் இடம் பெறும் செய்திகளைக் கொண்டு இவ்விலக்கிய வகையைச் சமூகவாழ்வியல் பற்றியவை, அறிவியல் பற்றியவை, சமயம் பற்றியவை, காதல் பற்றியவை, பொதுப்பொருள்

பற்றியவை என ஐந்தாகப் பகுத்துரைப்பர் (ந. கடிகாசலம், கடித இலக்கியம், தமிழ் இலக்கியக் கொள்கை - தொகுதி 9, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1984, ப. 203).

இவற்றுள் பேசப்படும் பொருண்மைகளும், பேசப்படும் முறைமையுமே (வெளியீட்டு நிலை) இவற்றிற்கு, இலக்கியத் தகுதியைப் பெற்றுத்தருகின்றன. இக்கடிதங்கள் உண்மைக் கடிதங்களாகவோ அன்றி புனைந்துரையாகவோ அமையும். இருவருக்கிடையேயான அந்தரங்கமின்றிப் பிறரும் அதனைப் பயன்கொள்ளலாம், சுவைக்கலாம் என்ற கருத்தில் பலரது பார்வைக்காக அது வெளிப்படுத்தப்படும் பொழுது உண்மைக் கடிதங்கள் கடித இலக்கியமாக உருமாறுகின்றன. டி.கே.சி.யின் ரசிகமணி கடிதங்கள் (தொ.மு. பாஸ்கரத் தொண்டைமான்), பாரதியின் கடிதங்கள் (ரா.அ. பத்மநாபன்), மறைமலையடிகளார் கடிதங்கள் (அன்பு பழம் நீ) போல்வன இதற்குச் சான்றுகளாகும்.

கட்டுரையிலக்கியத்தின் மாற்றுரு எனக் கருதத்தக்கதாக புனைந்துரைக் கடிதங்கள் அமைகின்றன. கடிதம் எழுதுவோர் இயற்பெயரிலோ, புனைபெயரிலோ அமைய, பெறுவோர் அன்னை, தம்பி, தங்கை எனப் பொது விளியை இதில் பெறுகின்றனர். மு. வரதராசனாரின் தங்கைக்கு, சி.என். அண்ணா துரையின் தம்பிக்கு அண்ணாவின் கடிதங்கள் என்பன சான்றுகள். மொழிபெயர்ப்புக் கடிதங்களும் (டால்ஸ்டாய் கடிதங்கள், ஜவகர்லால் நேருவின் கடிதங்கள்) உள.

தமிழிலும் கடித இலக்கியம் தோன்றியுள்ளது எனக் கூறத்தக்க நிலையிலேயே இவ்வகை இன்று காணப்படுகிறது. மு. வரதராசனார், அறிஞர் அண்ணா, கலைஞர் கருணாநிதி என மிகச்சிலரே இத்துறையில் வெற்றி பெற்றுள்ளனர். இதனை, 'கடிதம் காந்தம் போல் கவர்ச்சிமிக்கது.... எண்ண ஊர்தியான இதனை இலக்கிய வண்ண ஊர்தியாக்கியவர் சிலர். தமிழிலக்கியத்தில் கடித இலக்கியத்திற்குக் கால்கோள் செய்தவர் மு.வ.; கட்டடம் எழுப்பியவர் அண்ணா; கைவண்ணம் காட்டுபவர் கலைஞர்' எனும் கூற்று (முத்து சண்முகம் மு. வ. கடிதஇலக்கியம்-கண்ணோட்டம், பக்.VIII) வலியுறுத்தும்.

மொழிப்பற்று, அரசியல், சமூக விழிப்புணர்ச்சி, அறிவியல், சமயம் என எப்பொருண்மையும் பொருள் வரையறையின்றி இதனுள் இடம் பெறுகின்றன. செய்திகள் கூறல், அறிவுறுத்தல், சீர்திருத்த நோக்கு போன்ற பல தன்மைகள் கடித இலக்கிய இயல்பாகும். பழமொழியாட்சி, உவமைகூறல், செய்யுள் மேற்கோள்

எனும் பாங்கும் ஆங்காங்கு உண்டு. அங்கதம், சீறிச்சாடுதல், எள்ளல் எனும் பண்பும், சொற்பொழிவுத் தன்மையும் கூட சில கடிதவியல்பாகின்றன. திட்டங்கள் வகுத்தலும், சிந்தனைகளை வெளியிடலும் பலவற்றின் பண்பாகின்றன என்பார் ச.வே. சுப்பிரமணியன் (தமிழ் இலக்கிய வகையும் வடிவும், ப. 673).

தனியொருவருக்கு என எழுதப்பட்ட கடிதம் பொதுவுடைமையாகிப் பிறருக்கும் பயன்படும் கடித இலக்கியமாதற்கு மு.வ. வின் கடிதம் ஒன்றைச் சான்றாக்கலாம்.

அன்புள்ள திரு. விசுவநாதம்,

சென்னை 30,
27-11-1959

கடவுள் நல்லவரிடமும் தீயவரிடமும் உள்ளார். 'குற்றம் குணம் யாவும் நீ' என்பது பெரியோர் கண்ட உண்மை- கடவுளே தருமனாகவும் துரியோதனனாகவும் காந்தியாகவும் கோட்சேயாகவும் வடிவெடுக்கிறார் என்பதை நம்பு. மனோன்மணீய சுந்தரம்பிள்ளையே சுந்தரமுனிவராகவும் குடிலனாகவும் நூலில் அமையவில்லையா? ஆனால் அறம் செயலற்றது அன்று, பாவிகளை எதிர்க்க கடவுள் அறவோரைப் படைக்கவில்லை. அவர்களைவிடப் பொல்லாத பாவிகளைப் படைத்தே, கடவுள் அவர்களை எதிர்த்து அழிக்கச் செய்வார். புலியைப் பசு அழித்து ஒழிக்க முடியாது. வேடனே ஒழிக்க முடியும். கடவுள் வேடர்களையும் படைக்கிறார் என்று நம்பு. அதை நினைத்தால் புலிகளிடமும் நமக்கு இரக்கம் உண்டாகும். . . .

மு. வரதராசன்

(மு.வ.வின் கடிதங்கள், ஈ.ச. விசுவநாதன், பாரிநிலையம், சென்னை, 1976, பக் 31-32).

1968 அக்டோபர் 22 ஆம் நாள் முதல் மறவன் மடல், நம்நாடு எனும் வாரஇதழ்களிலும் பின் நாளிதழான முரசொலியிலும் மு. கருணாநிதி 'கலைஞர் கடிதங்கள்' என விடாது தொடர்ந்து எழுதி சாதனை படைத்து வருகிறார். அவை 'கலைஞர் கடிதம்' எனத் தொகுத்து வெளியிடப்பட்டுள்ளன (அபிராமி நிலையம், சென்னை, 1986, பத்துத்தொகுதிகள்). 'உடன் பிறப்புக்களான கழகத்தினருக்குக் கூறவேண்டியவைகளையும், அவர்களை முன் வைத்து நாட்டுக்கு, சமுதாயத்துக்குச் சொல்ல

வேண்டியவைகளையும் ஒரு பாச உணர்வுடன் வெளியிட இந்தக் கடிதம் எழுதும் முறை எனக்கு மெத்தவும் பயன்படுகிறது. இந்தப் பத்து தொகுதிகளைத் தொடர்ந்து படிப்போர்க்குச் சுமார் ஒன்பதாண்டு கால அரசியல் வரலாற்றுக் குறிப்புகள், கூடுமான வரையில் தேதிவாரியாகக் கிடைக்கும்' என அதன் 'என்னுரை' நவில்வது எண்ணத்தக்கது. இங்ஙனம் தனியொருவருக்கின்றிப் பொதுநிலையில் எழுதப்படும் கடிதயிலக்கிய வகைக்கு இக் கடிதங்களினின்றும் ஒரு பகுதியைச் சான்றாகக் காட்டலாம்.

உடன்பிறப்பே,

பொங்கல் விழா......

எந்த ஒரு விழாவின் பெருமையும், உழைப்பின் விளைவாகத்தான் அமைய முடிகிறது. அந்த உழைப்பும் உறுதியும் பெருகிட இந்தப் பொங்கல் விழா ஊக்க மளிக்கட்டும்.... நாற்றாக இருந்து பயிராக மாறிய விளைச்சலில் நெல்மணிகளாகத் திகழ்ந்து பானைகளில் அழகாக அமர்ந்து, பின் உலைக்குள்ளே சென்று அமுதம் எனும் பெயரைத் தழுவிக் கொள்கிற பெருமையைப் பெறுகிறது அரிசி.... இந்தக் கடித வாயிலாக என் பொங்கல் வாழ்த்துக்களை ஏற்றுக் கொள். பொங்கலுக்கு மறுநாள் திருவள்ளுவர் நாளில் உன்னை உம்மிடியார் மண்டபத்துக் கூட்டத்தில் சந்திப்பேன்...

அன்புள்ள, மு.க.
13.1.77

(கலைஞர் கடிதம், தொகுதி 10, பக் 69-71).

இவற்றை நோக்க, படைப்பாளர் பற்றிய ஆய்விற்கு இக் கடிதயிலக்கிய வகை பெருமளவு துணை செய்யக் காணலாம். இங்கு அவரே நேர் நின்று தம்மை வெளிப்படுத்திக் கொள்வதால் அவரது உள்ளம், தகைமை, பண்புநலன், சூழல் எனப் பலவற்றைத் தெளிவாகப் பெருமளவு புரிந்து கொள்ளமுடியும். பிற இலக்கியவகைமைகளுக்கு இல்லாத தனிச்சிறப்பு என இதனைக் கொள்ளலாம். திராவிட நாடு, காஞ்சி இதழ்களில் சி.என். அண்ணாதுரை எழுதிய கடிதங்களின் தொகுப்பு தம்பிக்கு அண்ணாவின் கடிதங்கள் (20 தொகுதிகள்), சாலை - சாலினி இளந்திரையனின் களத்திலே கடிதங்கள், வ.சுப. மாணிக்கத்தின் தலைவர்க்கு, ந.சுப்புரெட்டியாரின் முத்திநெறி, சொ. சிங்கார வேலனாரின் 'புதுமைக்கு', வலம்புரி ஜானின் 'காதல் கடிதங்கள்' எனப் பிறவும் இங்குக் குறிக்கத்தக்கனவாகும்.

# சொற்பொழிவிலக்கியம்

## தமிழகம்

ச. சிவகாமி

கட்டுரையிலக்கியத்தின் பிறிதொரு மாற்று வடிவம் என இதனையும் ஏற்கலாம். கடிதஇலக்கியம் போன்று இதுவும் இன்னும் தோற்ற நிலையிலேயே உள்ளது. சொற்பொழிவு, பிரசங்கம், சொற்பெருக்கு, சிறப்புரை, உரை, உபன்னியாசம், மேடைப்பேச்சு எனப்பலவாறாக வழங்கப்படும் இவ்விலக்கியம் நாடகக் கலை போன்று மேடையினைத் தன் பிறப்பிடமாகக் கொண்டுள்ளது. ஏதேனும் ஒரு பொருள் பற்றித் தன் கருத்தினைக் குறிப்பிட்ட இடத்தில் குழுமியிருப்போரை முன்னிறுத்தி மொழிதல் சொற்பொழிவாகிறது. வள்ளுவரின் 'சொல்வன்மை' அதிகாரக் கருத்துகள் இவண் எண்ணத்தக்கன. அத்தகு சொல்வன்மை படைத்தோரின் சொற்பொழிவுகள் நூலாக்கம் பெறும் பொழுது சொற்பொழிவு இலக்கியமாகச் சிறக்கின்றன. திரு.வி.க. பற்றி மு. வரதராசனார் கருத்துரைக்கும் போது, 'அவருடைய உரைநடை நூல்களில் சில, அவ்வப்போது மேடையில் பேசிய பேச்சையே வடித்துக் கொடுக்கப்பட்டவை ஆகும். தமிழ்த்தென்றல் முதலான அத்தகைய நூல்களைச் சொற்பொழிவு இலக்கியம் என்று கூறலாம்' என்பார் (தமிழிலக்கிய வரலாறு, ப. 311). எனவே, தமிழ் உரைநடை யிலக்கிய வகையுள் ஒன்றாக இதனைக் கொள்வதில் தடையில்லை.

சமயத்தை வளர்க்கும் பாங்கில் புராணச்சொற்பொழிவுகள் சிலப்பதிகாரக் காலந்தொட்டே (10:156-163) வழங்கிவந்துள்ளதை உணர முடிகிறது. ஆனால் இன்று கட்டுரையிலக்கியம் போன்று சமயம், அரசியல், இலக்கியம், சமூகம் என எப்பொருளும் இதனுள் இடம்பெறக் காணலாம். பாரதியின் 'சத்ரபதி சிவாஜி' இங்குச் சுட்டத்தக்கக் கவிதை வடிவச் சொற்பொழிவாகும். இத் துறையில் தடம் பதித்தவர்களாகத் திரு.வி.க.வும் சி.என்.அண்ணா துரையும் பெருமையுறுகின்றனர். தொடர்ந்து மு. கருணாநிதி இப்புகழுக்குரியவராகிறார்.

அவையோரை விளித்தல், சொற்பொழிவிற்குக்களம் அமைத்தோரைப் பாராட்டுதல், அதே அவையில் முன் பேசியோரைப் புகழ்தல், பின் பேச இருப்போரையும் சிறப்பித்தல், தன் கருத்துரைத்தல், நன்றியுரைத்தல் என்பன இதன் பொதுப் பண்பாகின்றன. தன் கருத்துரைக்கும் பொழுது தான் அழுத்தமாக, உறுதிபடக்கூற விரும்புவனவற்றைத் திரும்பத் திரும்பக் கூறுதல் இதன் தனி நிலையாகும். 'இவை சொற்பொழிவுகளானமையால் ஒருபொருளைப் பலவகையில் விளக்கிச் செல்லவேண்டியது அவசிய மாயிற்று. உவமைகளும், உதாரணங்களும்கூட மேற்கொள்ளும் கருத்துகளை விளக்க உதவிபுரிகின்றன. வாழ்க்கை நிகழ்ச்சிகளி லிருந்து எடுத்துக்காட்டும் உவமைகளால் பொருள் விளங்குவதைப் போல் மற்ற எதனாலும் அவ்வளவு தெளிவாக விளங்குவதில்லை' எனும் கி.வா.ஜ. கூற்று (குறிஞ்சிக் கிழவன், ப.VII) இக்கருத்திற்கு அரணாகும். இலக்கிய, சமய, அரசியல் அரங்குகள் இதனை இன்று வளர்த்து வருகின்றன.

ஒருவரின் கருத்துகள் பலருக்கும் சென்றடையும் தன்மையில் அதுபற்றிக் கேட்போர் சிந்திக்கவும், தேவையெனில் செயல்படவும் சொற்பொழிவு பெருந்துணையாகிறது. மற்றும் எதைப்பற்றிப் பேசினும் அதோடு தொடர்புடைய பிறதுறை கருத்துகளும், பிறரின் எண்ணங்களும் இடம் பெறுதலால் நேரில் கேட்போரும், எழுத்துருவில் சுவைப்போரும் பல்துறையறிவும் பொதுஅறிவும் பெறுகின்றனர். எனவே பயனுடையிலக்கிய வகைகளுள் ஒன்றாகவும் இது மிளிர்கிறது. வானொலியும், தொலைக்காட்சியும் இதற்கு இன்று சிறப்பிடம் நல்குவது குறிப்பிடத்தக்கது.

இவ்விலக்கியவகைக்குச் சான்றாகத் திரு.வி.க. வின் 'தமிழ்த் தென்றல் அல்லது தலைமைப் பொழிவு எனும் நூலிலிருந்து (பூம்புகார் பதிப்பகம், சென்னை 1997) ஒரு பகுதியைக் காட்டலாம். "தோழர்களே! இம்மகாநாட்டுக்குத் தலைமை வகிக்கும் பேறு எனக்கு வழங்கப்பட்டுள்ளது. இப்பேற்றை எனக்கு வழங்கிய உங்கட்கு எனது நன்றியறிதல் உரியதாக..... உடம்பை நல்வழியில் ஓம்புதற்குரிய வழித்துறைகள் பல உண்டு. அவற்றுள் தலையாயது இயற்கை வாழ்வு..... இயற்கை இறையின் உடல். இறையை உயிரென்றும் இயற்கையை உடலென்றும் உண்மை கண்டோர் கூறியுள்ளார். இறையின் உடலாகிய இயற்கையுடன் இயைந்து வாழ்வது இறையுடன் இயைந்து வாழ்வதாகும். இயற்கையை விடுத்து 'இறை', 'இறை' என்று கூவுவது அறியாமை 'இயற்கை

யோடிசைந்த இன்பம் இன்பத்தோடிசைந்த வாழ்வு' என்றார் வன்தொண்டர்..... இயற்கையோடு இயைந்து வாழ்வோர்க்கு எவ்விதப்பிணியும் வாராது. அவர்க்கு எத்தகைய வைத்தியமும் தேவையில்லை..... இயற்கை வைத்தியமாவது இயற்கையோடு இயைந்து வாழ்வது. ஒளியாரும், காற்றாரும், நீராரும், மண்ணாரும் கனியாரும் கீரையாரும் இயற்கை வைத்தியராவர்.... இயற்கை வைத்தியத்துக்கெனப் பல சங்கங்கள் மேல்நாட்டில் காணப்படுகின்றன. அவற்றின் சார்பில் பல சஞ்சிகைகள் வெளி வருகின்றன. வேறுபல முயற்சிகளும் செய்யப்படுகின்றன. நமது நாட்டிலும் சங்கங்களும் சஞ்சிகைகளும் பிறவும் பெருகுதல் வேண்டும். அம்முயற்சியில் தலைப்படுமாறு அன்பர்களைக் கேட்டுக்கொள்கிறேன். இயற்கை வாழ்வே உரிமை வாழ்வு, இன்ப வாழ்வு, குற்றங்குறைகளை மன்னிக்க. 'வந்தே மாதரம்' " (பக் 55-62).

கவிமணியின் உரைமணிகள், மு. கருணாநிதியின் மேடையிலே வீசிய மெல்லிய பூங்காற்று, தங்கம்மா அப்பாக் குட்டியின், 'மலேசியா - சிங்கப்பூர் சுற்றுப்பிரயாணச் சொற்பொழிவுகள்' என்பன இவ்வகைக்கு வளம் சேர்க்கும் நூல்களுள் சிலவாகும்.

பொதுமக்களை முன்னிறுத்தி வழங்கப்படும் இலக்கியம் சார்ந்த சமயத்தொடர் சொற்பொழிவுகளும் நூலாக்கம் கண்டுள்ளன. அவ்வகையில் திருப்புகழ் மணி கிருஷ்ணசாமி ஐயரின் முருகன் பற்றிய 'அருள் மணித்திரள்', கி.வா.ஜ.வின் கந்தரலங்காரச் சொற்பொழிவுகள் (பத்துத்தொகுதிகள்), ஞானியாரடிகளின் கந்தர் சட்டிப்பொழிவுகள், சுப. அண்ணாமலையின் திருவாசகச் சொற்பொழிவு, கா. ஷெரீபின் சீறாச்சொற்பொழிவு என்பன நவிலத்தக்கன. இவ்வகையில் சிலம்பொலி சு. செல்லப்பனின் பணி குறிப்பிடத்தக்கது. (சீறாப்புராணம், சங்க இலக்கியம்).

ஆழ்ந்த சிந்தனையில் ஆய்வுத்திறனுடன் குறிப்பிட்ட அணுகுமுறையில் ஆய்வாளர் மற்றும் ஆர்வலர் இடையே நடைபெறும் ஆய்வுப் பொழிவுகள் பல அறக்கட்டளைகளாலும் கருத்தரங்குகளாலும் நிகழ்த்தப்படுகின்றன. அவை திறனாய்வுத் தமிழாக, குறிப்பிட்ட ஒருசாராரின் பயன்பாட்டிற்குரியதாக அமைகின்ற தன்மையால் இங்கு அவை விலக்கப்படுகின்றன.

# அறிவியல் தமிழ்

## தமிழகம்

ச. சிவகாமி

இயல்தமிழ், இசைத்தமிழ், நாடகத்தமிழ் என முத்தமிழாக முழக்கமிட்டது பழந்தமிழ். வளர்ச்சி என்பது மனிதனுக்கு மட்டுமல்ல. அவனால் கண்டுபிடிக்கப்பட்டு பயன்படுத்துவன வற்றிற்கும் உரியது என்பதை மொழியும் உறுதிப்படுத்துகிறது. இதனைப் பழந்தமிழ் இன்று அறிவியல்தமிழ், இதழியல்தமிழ், ஆய்வுத்தமிழ், கலையுலகத்தமிழ் (வெண்திரை, சின்னத்திரை, வானொலி, படைப்பிலக்கியம் போல்வன) மற்றும் கணினித்தமிழ் எனப் பலவாறாக விரிந்து பன்முகம் கொண்டுள்ள புதுத்தமிழாக மாறியுள்ளமை புலப்படுத்தும்.

இங்கு அறிவியல்தமிழ் என்றால் என்ன என்பது குறித்த விளக்கமளித்தல் இன்றியமையாததாகிறது. பொருளும், அதனை வழங்கும் மொழிநடையும் பிறவற்றினின்றும் இதனைத் தனித்து நோக்கச் செய்கின்றன. பொருளானது எவ்வகையிலும் கற்பனையோ, உயர்வு நவிற்சியோ கலவாது இயல்பாக அமையும். அதாவது உணர்த்தப்படும் செய்திகள் அனைத்தும் எவ் வகையிலும் கலப்படமற்ற உண்மை ஒன்றையே தருவனவாகும். எடுத்துக் கொண்ட பொருளின் இயல்பால் உயிரியல், வேதியியல், இயற்பியல், மருத்துவஇயல், பொறியியல் எனப்பலவாறாகப் பல துறைகளாக அமையும். பட்டறிவின் துணையுடன் பெருமளவு கல்வியறிவு வாயிலாகப் பெறும் அறிவுத்துறைகளாக இவை கருதப்படுகின்றன. கூறப்படும் கருத்துகள் பெரும்பாலும் துறையறிஞர் அனைவராலும் ஏற்றுக்கொள்ளப்பட்டவையாகும். மிகச்சிறுபான்மையே கருத்து முரண், மாறுபாடு, ஐயம் என அமைகின்றன. ஆனால் இவையே தொடராய்விற்கு வழிவகுத்து மற்றும் பல உண்மைகளைக் கண்டு அத்துறைக்கு வளர்ச்சி தருகின்றன.

பிறவற்றினின்றும் இதன் மொழிநடை மிகுதியும் மாறுபட்டது. அவ்வவ் துறைசார்ந்த சொற்கள் (Technical Terms) இதில் இன்றி யமையாத இடம் பெறுவது குறிப்பிடத்தக்கது. செய்திகளின்,

கருத்துகளின் விளக்கங்களாகவே அமைதலின் இங்கு உணர்ச்சிகளுக்கும், இலக்கிய நயங்களுக்கும் இடமில்லை. மாறாகக் கற்போர் தெளிவாகப் புரிந்து கொள்ளத்தக்க நிலையில் எளிமையாக அமைதல் இன்றியமையாச் சிறப்பாகும். படைப்பாளியின் படைப்புத்திறன் முற்றிலுமாக இங்குப் புறக்கணிக்கப்படுகிறது. இலக்கியங்களில் இடம்பெறும் அணிநலன்களோ, பல்பொருளோ, குறிப்போ இங்கு இடம் பெறா. சுருங்கக்கூறின் பல்துறை சார்ந்த உண்மைத் தரவுகளை அவற்றின் இயல்பாம் தன்மையில் ஐயமறத் தெளிவாக, எளிமையாக விளக்கும்போது அது அறிவியல்தமிழ் ஆகிறது.

'அறிவியலில் இடம்பெறும் சொற்களுக்கும் சொற்றொடர்களுக்கும் முன்பே குறிப்பிட்டது போல நிலையானபொருள் உண்டு. அறிவியல் மொழியானது சொல்ல வந்த கருத்தை நேரடியாகச் சுற்றி வளைக்காமல் தர வல்லதாக இருக்கவேண்டும்— கருத்துகள் தெளிவுடன் அமைவதில் சொற்கள் பெரும்பங்கு வகிக்கின்றன. அடுத்து தொடரில் இடம்பெறும் சொற்கள் ஒன்றையொன்று தொடரும் முறையும் முக்கியமானது. தொடர்கள் ஒன்றையொன்று தொடர்ந்து வரும் முறையும் கருத்தைத் தெளிவாக்கத்துணைபுரியும். ஒரு கருத்தை விளக்கும் பத்திகளின் வைப்பு முறையும் சிறப்புற அமையவேண்டும். எனவே சொற்கள், அவை தொடரும் முறை, தொடர்களின் வைப்புமுறை, பத்திகளின் அமைப்பு ஆகியவற்றில் கவனம் செலுத்த வேண்டும்' என்பர் (இராதாசெல்லப்பன், அறிவியல் தமிழ் இன்றைய நிலை, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1992, பக். 35-36).

அறிவியல் துறைகளாகக் கருதப்படுவனவற்றை வா.செ. குழந்தைசாமி, 'ஒரு காலத்தில் கணிதம், இயற்பியல், வேதியியல், உயிரியல் போன்ற துறைகட்கு மட்டுமே பயன்படுத்தப்பட்டு வந்த Science (அறிவியல்) என்ற சொல், இப்பொழுது Social Science (சமூக அறிவியல்), Political Science (அரசியலறிவியல்), Home Science (இல்ல அறிவியல்) என்று பல துறைகட்கும் சற்று தாராளமாகவே பயன்படுத்தப்படுகிறது. அதே போல் பொறியியல் அதைச் சார்ந்த தொழில்நுட்பம் ஆகியவற்றுக்குப் பயன்படுத்தப்பட்டு வந்த Technology என்ற சொல் இன்று அறிவுத் துறைகளைப் பயன்படுத்திச் செயலாற்றும் வினைமுறைகள் அனைத்திற்கும் பயன்படுத்தப்படுகிறது. வேளாண்மை, மருத்துவம் போன்ற துறைகளில் இச்சொல் பரவலாகப் பழக்கத்திலிருக்கிறது. நாம் அறிவியல் தமிழ் என்ற

சொற்றொடரைப் பரவலான அளவில், விரிந்த பொருளில் அறிவியல் (Science), தொழில் நுட்பம் (Technology) போன்ற அறிவுத்துறைகள் அனைத்தையும் உள்ளடக்கியதாகவே பயன்படுத்துகிறோம்' என விளக்குகிறார் (அறிவியல் தமிழ், வா.செ. குழந்தைசாமி, பாரதி பதிப்பகம், சென்னை, 1985, பக் 75-76).

அறிவியல் என்பதன் விளக்கத்தை இரா. இலக்குமணன், 'இயற்கை பற்றிய உண்மைகளையும் முறைமைகளையும் ஒழுங்குபடுத்தி ஆய்வது அறிவியலாகும். 'Men love to wonder and that is the seed of Science' என்பர். இயற்கையின் விந்தைகளை, அற்புதப் படைப்புகளைக் கண்ட மனிதர் அவை ஏன், எதற்காக, எப்படி ஏற்படுகின்றன எனச் சிந்திக்கத்தலைப்பட்டனர். சிந்திக்கும் உள்ளங்கள் செயலாற்றும் திறனைப் பெற்ற போது அயராத ஆராய்ச்சியில் ஈடுபட்டன. இவற்றின் விளைவாகப் பிறந்தது இன்றைய அறிவியலாம். நமக்கு முதியவர்கள் கண்டறிந்த உண்மைகளையும் கொள்கைகளையும் முறைப்படி தொகுத்துக் கூறி இவ்வாறு செய்வதன் மூலம் புதிய உண்மைகளையும் கொள்கைகளையும் கண்டறியும் முறை அறிவியல் எனப்படும். 'Scientia' என்ற இலத்தீன் சொல்லிலிருந்து Science என்ற சொல் பிறந்தது. இதன் பொருள் கற்றல் (learning) அல்லது அறிவு (knowledge) எனக் கொள்ளலாம்' எனத் தருகிறார் (வளர்தமிழ் அறிவியல் - முதலாவது கருத்தரங்கக் கட்டுரைகள், தமிழ்வழி அறிவியல் பரப்பல் - முறைகளும் உத்திகளும், அனைத்திந்திய அறிவியல் தமிழ்க்கழகம், தஞ்சாவூர், 1988, பக், 68-69).

அறிவியல் தமிழ் தனிச்சிறப்புடன் இன்று தளர்நடையிட்டு வளர்ந்து வரும் புதுமைத்தாயினும் அறிவியலறிவு பண்டைத் தமிழரிடமும் பொருந்தியிருந்ததை மறுத்தல் இயலாது.

ஒன்று அறிவதுவே உற்று அறிவதுவே
இரண்டு அறிவதுவே அதனொடு நாவே
மூன்று அறிவதுவே அவற்றொடு மூக்கே
நான்கு அறிவதுவே அவற்றொடு கண்ணே
ஐந்து அறிவதுவே அவற்றொடு செவியே
ஆறு அறிவதுவே அவற்றொடு மனனே
நேரிதின் உணர்ந்தோர் நெறிப்படுத்தினரே (1526)

புல்லும் மரனும் ஓர் அறிவினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே (1527)

நந்தும் முரளும் ஈர் அறிவினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே (1528)

சிதலும் எறும்பும் மூஅறிவினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே (1529)

வண்டும் தும்பியும் நான்கு அறிவினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே (1530)

மாவும் மாக்களும் ஐஅறிவினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே (1531)

மக்கள் தாமே ஆறு அறிவுயிரே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே (1532)

புறக்காழனவே புல் என மொழிப
அகக் காழனவே மரம் என மொழிப (1585)

எனவரும் தொல்காப்பிய நூற்பாக்களே இதற்குப் போதுமான சான்றுகளாகும். சங்ககால முதல் தொடர்ந்து வரும் இலக்கியங் களில் தமிழரின் உயிரியல், உளவியல், காலவியல் போன்ற அறிவுத் துறைகள் இடம்பெற்றுள்ளன. பி.எல். சாமியின் சங்கஇலக்கியத்தில் விலங்கின விளக்கம், சங்க நூல்களில் விந்தைப் பூச்சி, கி. மோகன குமாரியின் கம்பனில் தாவரங்கள், மே. பிளாரன்சு தாசுவின் கம்பன் கண்ட உயிரினங்கள் போன்ற ஆய்வு நூல்கள் இதனை உணர்த்தும். வேளாண்துறை சார்ந்த தமிழரறிந்த, அறிவியற் செய்திகள் தமிழில் பழமொழிகளாக நிறைந்திருப்பதும் இங்கு எண்ணத்தக்கதாகும்.

இலக்கியச் சார்பின்றித் தனித்த துறையாகத் தன் தனித்துவத்தை நிலைநாட்டி அறிவியல் தமிழ் முளைவிட்டது பத்தொன்பதாம் நூற்றாண்டின் இடைப்பகுதியிலாகும். 1832இல் இரேனியுஸ் பாதிரியாரின் பூமிசாஸ்திரம், 1849இல் இலங்கையில் வெளியான பாலகணிதம், 1855இல் கரோல் என்பாரின் இயற்கணிதம் (algebra) எனத் தமிழில் அறிவியல் வரலாறு தொடங்கியுள்ளது. 1938இல் 2000 பக்கங்களில் அனந்த வைத்தியநாதன் இயற்பியலில் மூலநூல் படைத்ததும் சுட்டற்பாலது. தமிழில் தொடக்கக் காலத்தில் மருத்துவமும், வேளாண்மையும் குறிப்பிடத்தக்க அறிவியல் துறைகளாக விளங்கின என்பார் சு. லதா (தமிழில் அறிவியல் நூல்கள் - ஓர் ஆய்வு - 1851-1950, முனைவர் பட்ட ஆய்வேடு, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1999). ஒரு நூற்றாண்டு அறிவியல் தமிழ் நூல்களின் தொகுப்பும் ஆய்வுமாக இவராய்வேடு அமைவது குறிக்கத்தக்கது.

அறிவியல் தமிழின் வளர்ச்சி அதில் எழுந்துள்ள நூல்கள் களஞ்சியங்கள், அகராதிகள், கருத்தரங்குகள் என்பனவாக ஒருபாலமைகிறது. மற்றொருபுறம் அதன் வெளியீட்டிற்கு இன்றியமையாத துறைச்சொற்களின் (கலைச்சொற்கள்) உருவாக்கம் மற்றும் தரப்படுத்தல் என்பனவாக அமைகிறது. அறிவியல் தமிழ் நூலாக்கப் பணியில் பலரும் முனைந்துள்ளனர். பெ.நா. அப்புசாமி, ஈ.த. இராஜேசுவரி அம்மையார், காப்டன் சேஷாத்திரி நாதன், சாமி. வேலாயுதம் பிள்ளை, சுப்புரெட்டியார், எஸ்.எஸ். இராமசாமி (இராதா செல்லப்பன், முன்சுட்டியது, ப. 46) என்.கே. வேலன், கு. சீனிவாசன், அ. நடராஜன், கு. ராஜாராம், கொண்டல் சு. மகாதேவன், த. சலாவுதீன், கு.வி. கிருஷ்ணமூர்த்தி (மது. ச. விமலானந்தம், தமிழ் இலக்கிய வரலாற்றுக் களஞ்சியம், பக். 1321-1346) நா.கி. நாகராசன், இராசம்மாள், தேவதாஸ், அ. கதிரேசன், கா.ரா. கிருஷ்ணன் எனச் சிலரைச் சான்றாக்கலாம்.

அறிவியல் தமிழ் வளர்ச்சிக்குப் பெரிதும் உழைத்தோரில் பெ.நா. அப்புசாமி, ஜி. தாமோதரன், வா.செ. குழந்தைசாமி, மணவை முஸ்தபா, சுஜாதா, இராம. சுந்தரம், சா. கிருட்டின மூர்த்தி, இராதா செல்லப்பன் போன்றோர் குறிப்பிடத்தக்கவராவர்.

1930களில் பள்ளிக்கல்வியிலும், 1959இல் கல்லூரிக் கல்வியிலும் தமிழ் பயிற்றுமொழியாக அறிவிக்கப்பட்டதன் காரணமாகப் பாடநூல்களாக, மாணாக்கரைக் கருத்தில் கொண்டு அறிவியல் தமிழ் நூல்கள் வெளிவரலாயின. அவற்றுள் பெரும்பான்மை மொழிபெயர்ப்பெனினும் மூல நூல்களும் உருவானமை குறிப்பிடத்தக்கது. இராம. சுந்தரத்தின் அறிவியல் தமிழ் வெளியீடுகள் (நூலடைவு) எனும் நூல் (தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், 1989) 1985 முடிய தமிழில் வெளிவந்த அடிப்படை அறிவியல், பொறியியல் - தொழில் நுட்பவியல், மருத்துவவியல் ஆகிய நூல்களின் பட்டியலைத் தருகிறது.

அறிவியல் தமிழ் வளர்ச்சியில் நிறுவனங்களின் பங்கு தனித்துச் சிறப்பிக்கத்தக்கனவாகும். தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் மைய அரசின் கல்வி, சமூக நல அமைச்சகத்தின் மாநில மொழியில் பல்கலைக்கழக நூல்களை வெளியிடும் திட்டத்தின் உதவியுடன் சுமார் ஆயிரம் நூல்களை வெளியிட்டது. எனினும் அதன் பணி 1978ஆம் ஆண்டோடு முடிந்தது (மு. ஆறுமுகம், வளர்தமிழில் அறிவியல் - முதலாவது கருத்தரங்கக் கட்டுரைகள், பக் 45-46). திட்டம் - தமிழ் வளர்ச்சி இயக்ககம் என்று இருந்த அமைப்பு, 1987இல் தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் 'அறிவியல் தமிழ்த் துறையாகத் தனித்து உருவாக்கப்பட்டது. இதனால் பொறியியல், மருத்துவம் தொடர்பான பாடநூல்களும், அறிவியல் தொழில்நுட்பம்

சார்ந்த தமிழ்க் கலைச்சொல்லகராதிகளும் உருவாயின. 'அறிவியல் களஞ்சியம்' என 13 தொகுதிகளைத் தமிழ்ப்பல்கலைக்கழகம் வெளியிட்டிருப்பதுடன் அப்பணியைத் தொடர்வதும் போற்றத்தக்கதாகும். அதன் ஆய்வியல் நிறைஞர், முனைவர் பட்ட ஆய்வுகளும் அறிவியல் தமிழைக் களமாகக் கொண்டிருப்பதும் கூறத்தக்கது.

பாரதிதாசன் பல்கலைக்கழகம், பூ.சா.கோ. நிறுவனம், தென்மொழிகள் புத்தக நிறுவனம், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், ஹிக்கின் பாதம்ஸ், சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம், வானதி பதிப்பகம், மீரா பப்ளிகேஷன்ஸ், தமிழக அறிவியல் பேரவை, தமிழ்நாடு அறிவியல் இயக்கம், அறிவியல் இலக்கியக்கழகம், வளர் தமிழ் மன்றம் எனப் பிறவும் அறிவியல் தமிழ் வளர்ச்சியில் தமக்குள்ள ஆர்வத்தை அறிவியல் தமிழ் நூல்களை வெளியிட்டுப் புலப்படுத்தியுள்ளன. தமிழக அரசு வெளியிட்ட கலைக்களஞ்சியத் தொகுதிகள், சிறுவர் கலைக்களஞ்சியத் தொகுதிகள், மணவை முஸ்தபாவின் இளையர் அறிவியல் களஞ்சியம், இராம சுந்தரமும் சா. கிருட்டினமூர்த்தியும் பொறுப்பேற்றுத் தொடர்ந்து நடத்திக் கொண்டுவரும் அறிவியல்தமிழ்க் கருத்தரங்கக் கட்டுரைத் தொகுப்புகள், அ.க. மூர்த்தியின் அறிவியல் அகராதி போன்ற பிற அகராதிகள் என்பன அறிவியல் தமிழின் வளர்ச்சியை, தேவையை எடுத்துரைக்கின்றன.

1978இல் மோகன் நமசிவாயம் 'புஞ்சைக் காளானின் நச்சுத்தன்மை' (Toxic nature of fungi) என்ற தலைப்பில் ஆய்வு செய்து தமிழில் அளித்து சென்னைப் பல்கலைக்கழக முனைவர் பட்டம் பெற்றார் என்பது சிறப்புச் செய்தியாகும்.

அறிவியல் தமிழ் வளர்ச்சியில் இதழ்களின் பங்கும் தவறாது எண்ணப்பட வேண்டியதாகும். அறிவியல் துறைகள் அனைத்திலும் தோன்றும் புதிய கருத்துகள், கண்டுபிடிப்புகள், வளர்ச்சிகள் முதலானவற்றை இவை உடனுக்குடன் பொதுமக்களுக்கு வழங்கி அறிவியல் தமிழ்த்தொண்டாற்றுகின்றன. தமிழ்ப்பத்திரிகை (1831), தினவர்த்தமானி (1855), ஞானவிநோதினி (1877), நல்வழி (1912), தமிழர் நேசன் (1917) ஆகியவை தொடக்கக்காலத்திய இதழ்களில் குறிப்பிடத்தக்கவையாகும். இவை இன்றைய கலைக்கதிர், விஞ்ஞானச் சுடர், இளம் விஞ்ஞானி முதலிய இதழ்களின் முன்னோடிகள் (இராமசுந்தரம், முன் சுட்டியது, பக்.VI) என்பர். சூரியர், களஞ்சியம், அறிவியல் எனப் பிறவும் இன்றைய குறிப்பிடத்தக்க அறிவியல் இதழ்களாகும் (விரிவிற்குக் காண்க. இராதா. செல்லப்பன், முன் சுட்டியது, பக். 56-58). தற்பொழுது ஆனந்த விகடன் மருத்துவம் தொடர்பான தொடர் கட்டுரைகளைத் தொடர்ந்து வெளியிட்டு வருகிறது.

அறிவியல் தமிழின் மற்றொரு பக்க வளர்ச்சியான துறைச் சொல்லாக்கத்திலும் முனைப்பு காட்டப்பட்டுள்ளது. ஒரு குறிப்பிட்ட பொருளை, ஒரு குறிப்பிட்ட துறையில் வழங்கும் சிறப்புச் சொற்கள் துறைச்சொற்களாகின்றன. இவை அத் துறையின் பெருமையினை, இயல்பினை வெளியிடும் அடிப்படைச் சொற்கள் எனவும் கொள்ளலாம். 'அறிவியல், கலையியல் முதலான துறைகளில் பயன்படுத்தப்பெறும் குறிப்பிட்ட பொருண்மையுடைய அதாவது, பொருண்மை வரையறையுடைய ஒரு சொல் அல்லது சொற்றொடரே கலைச்சொல் என்பது. இதற்குத் துறைச்சொல் என்ற மற்றொரு பெயரும் உண்டு. வரைவிலக்கணத்தினால் இச்சொல்லின் கருத்து நிலைநிறுத்தப் படுகிறது. அச்சொல் ஒரே கருத்திலேயே அனைத்து அறிவியல் துறைகளிலும் கையாளப்படும். கலைச்சொல் பொது வழக்குச் சொல்லைப் போலவே தொடரில் இயங்கும். பெயராகவோ, வினையாகவோ பிற இலக்கணக் கூறாகவோ இருக்கும், குறியீடாகவும் இருக்கும், எப்படி இருந்தாலும் அதனுடைய கருத்து செம்மையாக வரையறுக்கப்படும் போதுதான் அது கலைச்சொல் என்ற முழுமையைப் பெறுகிறது' என இராதா செல்லப்பன் (முன் சுட்டியது பக். 8-9) இதற்கு விளக்கம் அளிக்கிறார்.

அறிவியல் தமிழ்க் கலைச்சொல்லாக்கம் 1830இல் துவங்கியது. முதல் இதழான தமிழ் மேகசினிலேயே இதற்கான அடிக்கல் நாட்டப்பட்டது. 1857இல் மருத்துவ நூல்களை வெளியிட்ட பிஷ்கிரீன் தமது மொழிபெயர்ப்புக்குப் பயன்படும் நிலையில் அறிவியல் கலைச் சொற்களை உருவாக்கி அவற்றிற்குச் சில நெறிமுறைகளையும் அளித்தது அறியற்பாலது. இரண்டு கலைச்சொல்லகராதிகளையும் வெளியிட்டார். 1932இல் சென்னை மாநில அரசு பலதுறைகளுக்குரிய கலைச்சொற்களையும் வெளியிட்டது. அதற்குப் பல எதிர்ப்புகளும் இருந்தன. 1938இல் சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கத்தாலும் 1947இல் அரசு முயற்சியாலும் 1960இல் நிறுவப்பட்ட கல்லூரித் தமிழ்க் குழுவாலும் பல கலைச்சொல் தொகுதிகள் வெளிவந்துள்ளன. பூசாகோ நிறுவனம் 1968இல் இயற்பியல், வேதியியல் சொற்களை மட்டும் வெளியிட்டது. பின்னர் 1985இல் கலைக்கதிர் கடந்த 38 ஆண்டுகளாகப் பயன்படுத்தப்பட்ட கலைச்சொற்களைக் கொண்ட மூன்று தொகுதிகளை வெளியிட்டது. 1971இல் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் பல பட்டியல்களை வெளி யிட்டுள்ளது. இவற்றைத் தவிர தமிழகத்தில் பெ.நா. அப்புசாமி,

ஈ.த. இராசேசுவரி அம்மையார், காப்டன் சேஷாத்திரிநாதன் முதலான பல நூலாசிரியர்களும் பல்லாயிரக்கணக்கான கலைச் சொற்களை உருவாக்கித் தம்நூலில் பயன்படுத்தியுள்ளனர். இன்றும் கலைச் சொல்லாக்கம் தொய்வின்றி நடைபெற்று வருகின்றது. சொற்களைத் தரப்படுத்துதல் என்பதில் தான் சிக்கல் உள்ளது என்பர் ஆய்வாளர் (இராதா செல்லப்பன், மேற்படி, ப 6-7).

தமிழைப் பயிற்று மொழியாக்குதல் என்ற எண்ணத்தின் வேகத்தால் பலரும் அறிவியல் தமிழ் படைப்பில் முனைந்து செயல்பட அவற்றின் துறைச்சொற்கள் அவரவர்க்கேற்ப பல வாறாக உணர்த்தப்படுகின்றன. இச்சொற்களிடையே ஒருமைப் பாடு எளிமைக்கும் தெளிவிற்கும் தேவை என்ற நிலையிலும், அச்சொற்கள் தூயதமிழ்ச் சொற்களாக இருத்தல் வேண்டும் என்ற கருத்திலும் தரப்படுத்துதலில் சிக்கல் உள்ளது. இவற்றைத் தரப்படுத்தி ஒழுங்குபடுத்தும் முயற்சிகள் இப்பொழுது நடைபெறுகின்றன. எனவே அறிவியல்தமிழ் வளர்ச்சிப்பாதையில் இன்று விரைந்து செல்கின்றது எனத் துணிந்து கூறலாம்.

அறிவியல் தமிழ் வளர்ச்சியில் கணினியின் பயன்பாடும் அறியத்தக்கது. விரைந்து வள்ர்ந்துவரும் இத்துறைக்குத் துணையாக உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் வெளியிட்டுள்ள கு. சுப்பையா பிள்ளையின் இயற்கை மொழியாய்வு தமிழ் (1998) இவண் குறிப்பிடற்பாலது.

அறிவியல் தமிழ் வெளியீடுகளை நூலடைவு செய்த இராம. சுந்தரம் அதன்வழித் தமக்குக் கிடைத்ததாக நவிலும் செய்திகள் பலவற்றுள் (பக் VII-IX)

1. அறிவியல் செய்திகளைக் கட்டுரையாகவோ, துணுக்காகவோ, வெளியிட வேண்டும் என்கிற ஆர்வம் இலக்கிய இதழ்களுக்குக் கூட இருந்திருக்கிறது. செந்தமிழ், தமிழ்ப்பொழில், கலைமகள் முதலியவற்றில் வெளியான அறிவியல் செய்திகள் இதற்குச் சான்றாகும்.

2. அறிவியல் கண்டுபிடிப்புகள், வியத்தகு அறிவியல் சாதனைகள் முதலியவற்றை உடனுக்குடன், சுடச்சுடத் தருவதில் நமது அறிவியல் எழுத்தாளர்களும் இதழாசிரியர்களும் பதிப்பகத் தாரும் அக்கறை காட்டியுள்ளனர். ஏவுகணை, செயற்கைக் கோள், நிலவில் ஆராய்ச்சி, கணிப்பொறி, இயந்திர மொழிபெயர்ப்பு போன்ற பல அறிவியல் புதுமைகளைக் காலச் சுணக்கமின்றிப் பல இதழ்கள் தெரிவித்துள்ளன.

3. மனோன்மணி புத்தக நிலையம், சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், நியூசெஞ்சுரி புக்ஹவுஸ், ஹிக்கின் பாதம்ஸ், தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் முதலியன அறிவியல் நூல்களை அதிகமாக வெளியிட்டுள்ளன.

4. பொறியியல் - தொழில்நுட்பவியல் வெளியீடுகளைவிட மருத்துவ வெளியீடுகள் அதிகம்.

5. கலைக்கதிர் நுணுக்கம் நிறைந்த பல கட்டுரைகளை வெளியிட்டுள்ளது. 'விஞ்ஞானச் சுடர்' அடிப்படை அறிவியல் பற்றிய கட்டுரைகள் பலவற்றை வெளியிட்டுள்ளது. கலைமகள் பல்வேறு தொழிற்சாலைகள் தொழில் நிறுவனங்கள் பற்றிய கட்டுரைகளை வெளியிட்டிருக்கிறது. நியூசெஞ்சுரி புக்ஹவுஸ் வழி அறிவியல் மொழிபெயர்ப்பு நூல்கள் நிறைய வெளிவந்திருக்கின்றன.

6. கணிசமான அளவில் பெண் எழுத்தாளர்களும் அறிவியல் நூல்களும் கட்டுரைகளும் எழுதியுள்ளனர்.

என்பன இவண் எடுத்துரைக்கத்தக்கன.

## இலங்கை

### செல்வரஞ்சிதம் சிவசுப்பிரமணியம்

இலக்கிய வரலாற்றை எடுத்து நோக்கும்போது தமிழகத்திலோ, ஈழத்திலோ அறிவியல் என்ற பயில்நெறி மேல் நாட்டவருடைய வருகையின் பின்னரே ஏற்பட்டது. ஆனால் விஞ்ஞானம், கணிதம், சோதிடம், வானியல் பற்றிய அறிவு அனுபவ வாயிலாக இருந்து வந்துள்ளதை இலக்கியங்கள் காட்டுகின்றன. மேலைநாட்டவர் வருகையினால் அறிவியல் தொடர்புகள் ஏற்பட்டன. ஆரம்பத்தில் அறிவியற் கருத்துக்களை பயிற்றும் மொழியாக ஆங்கிலமே விளங்கியது. இலங்கையிலும் இந்தியாவிலும் பிரித்தானியரது ஆட்சியில் ஆங்கில மொழி அரசகரும மொழியானபோது சுதேச மொழியான தமிழ் தனது முக்கியத்துவத்தை இழந்தது. கல்விமொழியும் ஆங்கில மொழியாகவே இருக்க வேண்டுமென 1833இல் கோல்புறூக் குழுவினர் விதந்துரை செய்தனர். 1945ஆம் ஆண்டில் இலங்கையில் கல்வி நிறுவனங்களை நிர்வகிக்கும் பொறுப்பு பெரும்பாலும்

மிசனரிமாருக்கு வழங்கப்பட்டிருந்தன. இதனால் ஆங்கிலக் கல்வியின் முக்கியத்துவம் மேலும் அதிகரித்தது. அறிவியற் கருத்துக்களை ஆங்கிலம் மூலம் பயிற்றுவித்தனர். ஆரம்பத்தில் ஆங்கிலமொழிதான் தமிழர்களுடைய அறிவியல் மொழியாக இருந்து வந்ததை வரலாறு காட்டுகின்றது. தமிழ்மொழி மூலம் கற்கும் வாய்ப்பு நேரிட்டபோது அறிவியலில் பல மாறுதல்களும் வளர்ச்சியும் ஏற்பட்டன. ஈழத்தில் 1960ஆம் ஆண்டு தொடக்கம் பல்கலைக்கழக உயர்கல்வி தமிழில் பயிற்றப்படத் தொடங்கியது. இதனால் நிறைய மொழிபெயர்ப்பு நூல்களின் தேவையும் கலைச்சொல்லாக்கத்தின் பயன்பாடும் விரிவடைந்து சென்றதை ஈழத்து இலக்கிய வரலாறு காட்டும். ஈழத்தில் அறிவியல் எவ்வாறு வளர்ச்சியடைந்துள்ளது என்பதை நோக்குவோம்.

அறிவு, இயல் என்னும் சொற்கள் சேர அறிவியல் என்னும் கலைச்சொல் உருவாகியது. இங்கு அறிவியல் என்பது இயற்கையில் உள்ள பொருட்களைப் பற்றிய உண்மைகளைக் கண்டறிதல் பற்றிய அறிவாகவே தொடக்கத்தில் கருதப்பட்டது.

> **"அறிவியல் என்பதற்குப் பகுத்தறிவினாலும் சோதனையினாலும் இயற்கையில் அடங்கியுள்ள உண்மைகளைக் காணும் கல்வி விஞ்ஞானம்1"**

எனப் பெருஞ்சொல்லகராதி விளக்கம் தருகிறது.

கணிதவியல், பௌதீகவியல், இரசாயனவியல், உயிரியல், பொறியியல், மருத்துவம் என்ற பயில்நெறிகளை உள்ளடக்கிய கல்வி அறிவியல் (விஞ்ஞானம்) எனக் கருதப்பட்டது. காலப்போக்கில் அறிவியல் என்ற சொல்லின் பொருள் விரிவடைந்துள்ளதைக் காணலாம். சமூகம், அரசியல் என்பன தொடர்பான பயில்நெறிகளும் அறிவியல் என்ற சொல்லுடன் சேர்த்து சமூக அறிவியல் அல்லது சமூக விஞ்ஞானம் (Social Science), அரச அறிவியல் அல்லது அரச விஞ்ஞானம் (Political Science) எனப் பெயர் பெற்றுள்ளன. இக்கற்கை நெறிகளும் அறிவியல் நெறி சார்ந்தனவாகக் கொள்ளப்பட்டன. தொழில் நுட்பம், ஆராய்ச்சி என்பன வலுவடைந்ததனால் அவற்றைப் பிரித்து நோக்கும் தன்மை வலுப்பெற்றுள்ளது. ஆய்வை அடிப்படையாகக் கொண்ட கற்கைநெறிகளையும் அறிவியல் என்ற பதம் சுட்டுகின்றது (மொழியியல், மானிடவியல், உளவியல், சமூகவியல், அரசறிவியல்).

காலப்போக்கில் தமிழ்ச் சமூகத்திற்கு வழங்கும் கல்வியானது தாய்மொழியில் வழங்கப்படும்போதுதான் உரிய பயனைப் பெற்றுக் கொள்ளலாம் என்ற உண்மை உணரப்படலாயிற்று. இத்தகைய சிந்தனை வெளிப்பாடுகளே அறிவியல் தமிழாக்க முயற்சிகள் தமிழில் தோற்றம் பெறக் காரணமாயின.

1849ஆம் ஆண்டு இலங்கையிலிருந்து பாலகணிதம் என்ற நூல் வெளியானது. அதில் ஆங்கில, தமிழ்க் கணித இயல்புகள் 179 பக்கங்களில் விளக்கப்பட்டுள்ளன. 1855இல் Algebra பற்றிய ஒரு நூல் இயற்கணிதம் எனத் தமிழாக்கம் செய்து வெளிவந்தது. வீசகணிதம் என்ற இன்னொரு நூல் இதே ஆண்டில் வெளிவந்தது. இதுவும் Algebraவைப்பற்றித்தான் இருப்பதைக் காணலாம்.

ஆங்கில மருத்துவ நூல்களை முதன்முதலில் தமிழில் மொழிபெயர்த்தவர் ஈழத்தைச் சேர்ந்த சாமுவேல் கிறீன் ஆவார். கல்லின் கற்றரின் Anatomy, Physiology and Hygiene என்ற நூலை மொழிபெயர்த்துத் தமிழில் அங்காதி பாதம், சுகரணவாதம், உடற்பாலனம் என கிறீன் வெளியிட்டார். 1852இல் வெளியிடப் பட்ட இந்நூலே தமிழில் முதன்முதல் வெளிவந்த மேல்நாட்டு மருத்துவ நூலாகும். அதே ஆண்டில் வெலீஸ் என்பவர் எழுதிய Chemistry என்ற நூலை கிறீன் கெமிஸ்தா என்ற தலைப்பில் மொழிபெயர்த்தார்.

1967ஆம் ஆண்டில் துருதர் இயற்றிய (The Science and Art of Surgery) என்ற நூலினை மொழிபெயர்த்து இரணவைத்தியம் என்ற பெயரில் 1872ஆம் ஆண்டு வெளியிட்டார். கிறீன் தமது சொந்த அனுபவத்தில் கண்ட வைத்திய முறைகளையும் இந்நூலிலே சேர்த்து வெளியிட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது. இது விளக்க மொழிபெயர்ப்பு வகையைச் சேர்ந்தது எனலாம்.

டி. டபிள்யூ. சாப்மன் எழுதிய மனுஷ அங்காதிபாதம் (Human Anatomy) என்ற நூலையும், வைத்தியாகரம் (The Principles and Practice of Medicine), மனுஷ சுகரணம் ஆகிய நூல்களையும் மொழிபெயர்த்து வெளியிட்டார். கிறீன் அவர்களின் முயற்சியால் ஈழத்தை அறிவியல்தமிழின் தாயகம் என்று சொல்லுமளவிற்குப் பாரிய பங்களிப்பு செய்துள்ளார்.

கிறீன் வெளியிட்ட மொழிபெயர்ப்புக்களில் தமிழ், வடமொழி, ஆங்கிலச் சொற்கள் கையாளப்பட்டுள்ளதைக் காணலாம்.

**கலைச்சொற்கள்**

கலைச்சொல்லாக்க முயற்சிகளுக்கு முதலில் அடியெடுத்துக் கொடுத்தவர் சாமுவேல் பிஷ்கிறீன் ஆவார். அவர் மொழி பெயர்த்த மருத்துவ நூல்களில் அவர் கையாண்ட அருஞ் சொல்லாக்க முயற்சிகள் குறிப்பிடத்தக்கன. 1875ஆம் ஆண்டு அருஞ்சொல்லகராதி ஒன்றையும் வெளியிட்டார். கிறீன் அவர்களின் கலைச்சொல்லாக்க முயற்சி வரலாற்றுச் சிறப்புடைய தாகும். 1875ஆம் ஆண்டில் கிறீன் அவர்கள் டிடபிள்யூ. சாப்மன், எஸ். சுவாமிநாதன் ஆகியோருடன் சேர்ந்து கலைச்சொல் தொகுதிகளை வெளியிட்டு வைத்தார்.

1. Material medica and Pharmacy
2. Mid wifery
3. Diseases of woman and children.
4. Medical Juris Prudence.

என்ற நான்கு தொகுதிகளும் கிறீன் அவர்களின் முயற்சியால் வெளிவந்தன. இவற்றில் கிறீன் கலைச்சொல்லாக்க விதிமுறைகள் சிலவற்றை முன்வைத்துள்ளமை நோக்கத்தக்கது.

1. Prefer a term sanctioned by both an English and Sanskrit and a Sanskrit and English Dictionary.
2. Should no appropriate term be found adopt some word expressive of one or more characteristics of the object to be named.
3. Compound a word by writing roots, or a root and a particle.
4. Where there are several words of wider though similar meaning restrict one to specify the object.
5. If there be for any member of the English compound a good Tamil word combine it wlth the Sanskrit.

அதன் தமிழாக்கம் பின்வருமாறு அமைகின்றது.

1. ஆங்கிலம் - வடமொழி அகராதியிலும் வடமொழி - ஆங்கில அகராதியிலும் பொதுவாகக் காணப்படும் சொல்லை எடுத்துக் கொள்ள வேண்டும்.
2. சரியான சொல் கிடைக்காதவிடத்து குறிப்பிட வேண்டிய பொருளின் ஒன்று அல்லது பல பண்புகளைக் குறிக்கும் சொல்லைத் தேர்ந்தெடுக்க வேண்டும்.

3. வேர்ச்சொல்லைத் தனியாகவோ முன்னொட்டு - பின்னொட்டுடன் சேர்த்தோ வழங்கலாம்.

4. பரந்த பொருட்களை ஆனால் ஏறக்குறைய பண்பு ஒத்த பொருட்களைக் குறிக்கும் பல சொற்கள் இருப்பின் ஒரு குறிப்பிட்ட சொல்லைத் தேர்ந்தெடுக்க வேண்டும்.

5. ஆங்கிலக் கூட்டுச் சொல்லின் ஒரு பகுதியைக் குறிக்கும் ஒரு நல்ல தமிழ்ச் சொல் இருப்பின் அதை வடமொழிச் சொல்லுடன் சேர்த்துக் கூட்டுச்சொல்லாக உருவாக்கலாம்.

கிறீன் அவர்களுடைய கலைச்சொல்லாக்க கொள்கை இதில் வெளிப்படுகின்றது[2].

கலைச்சொல்லாக்கம் பற்றி ஈழநாட்டவரான சுவாமி விபுலானந்தர் அவர்கள் இருபதாம் நூற்றாண்டின் முப்பதுகளி லேயே சிந்தித்துள்ளார். 1936ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் கல்லூரி மண்டபத்தில் சென்னை மாகாணத் தமிழர் சங்க மண்டபத்தில் கலைச்சொல்லாக்கம் பற்றிய தம் கருத்துக்களை வெளியிட்டார்.

**1. மிகவுயர்ந்த நுண்ணிய கருத்துக்களைத் தூய தமிழிலே எழுதுதல் வேண்டும்.**

சொற்களைப் பொருள் பற்றுக்கோடாக வகைப்படுத்தி வழங்க முயன்ற நிகண்டு நூல்கள் புதுச் சொல்லாக்கத்திற்குப் பேருதவி புரிவன.

இலக்கண நூலார் ஆராய்ந்தமைத்த விதிகளுக்கு அமைவதாக சொற்களை ஆக்கிக் கொள்ளுதல் முறையாகும். உயிருள்ள மொழியானது பிறமொழித் தொடர்புகொண்டு தனக்குரிய சொற்களஞ்சியத்தைப் பெருக்கிக் கொள்ளுதல் வேண்டும்.[3]

அடிகளார் தெரிவித்த கருத்துக்கள் தொடக்க காலத்தில் ஈழத்தில் கலைச் சொல்லாக்கத்தில் ஈடுபட்டவர்களாலே பெரிதும் பின்பற்றப்பட்டன.

1955ஆம் ஆண்டு இலங்கை அரசாங்கம் தன்மொழி அலுவலகம் என ஒன்றை அமைத்துக் கலைச்சொல்லாக்கத்திற்கு ஆக்கப்பூர்வமான முயற்சிகளை மேற்கொண்டது. மேலும் கல்வி வெளியீட்டுத் திணைக்களம் அரச கரும மொழித் திணைக்களம்

என்பனவும் கலைச்சொல்லாக்க நடவடிக்கையில் பல செயற்பாடுகளைத் திட்டமிட்டுச் செயற்படுத்தின.

கணிதம், இரசாயனவியல் தொகுதி 1, தொகுதி 2, பௌதீக விஞ்ஞானம் தொகுதி 1, 2, விலங்கியல் தொகுதி 1, 2, பயிர்ச் செய்கையியல், அளவையியல், மின்னெந்திரவியல், மோட்டார் பொறிநுட்பவியல், இரசாயன எந்திரவியல் முதலிய பல பாடங்களுக்கும் உரிய கலைச்சொற்றொகுதிகள் இவ்விரண்டு நிறுவனங்களின் முயற்சியினாலும் உருவாக்கப்பட்டன.

அரச கரும மொழி அலுவலகத்திலிருந்து தமிழ் அறிஞர் திரு. அ.வி. மயில்வாகனம் தலைமையில் கலாநிதி பொன்னையா, திரு. பொ. சங்கரப்பிள்ளை, திரு. கோ. வன்னியசிங்கம், அருட்கலாநிதி எஸ். தனிநாயகம் அடிகள், திரு. கு. நேசையா ஆகியோருடன் பேராசிரியர் க. கணபதிப்பிள்ளை, பேராசிரியர் க. கைலாசபதி, பேராசிரியர் கா. சிவத்தம்பி ஆகிய மூவரும் பல ஆங்கிலச் சொற்களின் பொருண்மைகளைத் தமிழுக்கு அறிமுகம் செய்துள்ளனர். 1992 முதல் பேராசிரியர் க. குணரத்தினம் தலைமையில் யாழ்ப்பாணப் பல்கலைக் கழகத்தில் ஒரு குழு கணினிக்கலைச் சொல்லாக்க முயற்சியில் ஈடுபட்டது. பேராசிரியர் அ. சண்முகதாஸ், பேராசிரியர் சு. சுசீந்திர ராஜா, கலாநிதி க. கந்தசாமி, கவிஞர் இ. முருகையன் ஆகியோர் இக்குழுவில் இருந்தனர். கணினி விஞ்ஞானச் சொற்கள் என்னும் தலைப்பில் கலைச்சொல்லாக்கம் வெளியிடப்பட்டது.

கலைச்சொல்லாக்க முயற்சி பற்றி கா. இந்திரபாலா குறிப்பிடும்போது பெருமளவிற்கும் தூய விஞ்ஞானத் துறையிலே குறைந்த அளவிற்கும் சொல்லாக்க அறிஞர்கள் சிலர் குறுகிய மனப்பான்மையுடையோராய்த் தூய தமிழ்ச் சொற்களை மட்டுமே ஏற்று அவற்றின் அடிப்படையில் கலைச் சொற்களை ஆக்க முயற்சிக்கின்றமை முற்றிலும் விரும்பத்தக்கதன்று என்று கூறியமை இங்குக் குறிப்பிடத்தக்கது.[4]

பேராசிரியர் அ. சண்முகதாஸ் அவர்கள் 'கலைச் சொல்லாக்கமும் பயன்பாடும் ஒருமித்த தன்மையுடையதாக அமைய வேண்டும் எனவும் ஆங்கிலம் வடமொழி என்ற தலையீடுகளை முடிந்த அளவு நீக்கிய தமிழ் மொழியாக அமைய வேண்டும்'[5] எனவும் குறிப்பிடுவார்.

**"Scientific & Tamil Pioneer"** Dr. Samuel Fish Green என்ற ஆங்கில நூலை அம்பிகைபாகர் 1998இல் எழுதி வெளியிட்டார். அதில் மருத்துவத்தமிழ், மருத்துவப் பாடசாலை, விஞ்ஞான இலக்கியத் தமிழ், மருத்துவ நூல்கள் தமிழில் ஆக்கல், கலைச் சொற்கள், கலைச்சொற்களின் தரப்படுத்தல், மொழிபெயர்ப்பு, தமிழின் நவீனம்[6] என்ற தலைப்புக்களில் கிறீன் ஆற்றிய சேவை பற்றியும் கிறீன் கொண்டிருந்த கருத்துக்களையும் நூலாக அம்பிகைபாகர் வெளியிட்டுள்ளார்.

டாக்டர். ஏ. சந்திரசேகரம் மாரடைப்பு தடுப்பதற்கான வழிமுறைகளும் மருத்துவமும் என்ற நூலை 2000இல் எழுதி வெளியிட்டார். இந்நூல் மாரடைப்பு ஏற்பட்ட ஒருவருக்கு சிறந்ததொரு கைநூலாக விளங்கக்கூடியது. இந்நூலில் அத்தகைய ஒருவருக்கான உணவு, அன்றாட வாழ்க்கை முறைகள் பற்றிய விரிவான குறிப்புகள் எளிய தமிழ் நடையில் அனைவரும் புரிந்து கொள்ளும் வகையில் தரப்பட்டுள்ளன. தமிழ்மொழியில் ஆங்கில நூல்களுக்கு இணையாகச் சர்வதேச தராதரத்தில் நவீன ஆய்வுகளைத் தொகுத்து இவ்ஆசிரியர் வழங்கியுள்ளார். மருத்துவ ஆய்வுக்களைத் தமிழிலும் தெளிவாக வெளியிடலாம் என்பதை நிரூபிக்கும் முன்மாதிரியாகவும் இது அமைவது குறிப்பிடத்தக்கது.

பாடசாலை மாணவர்களுக்கான கைநூல்கள் தமிழிலே வெளியிடப்படுகின்றன. பௌதிகவியல், இரசாயனவியல், உயிரியல், விஞ்ஞானமும் தொழில்நுட்பமும் என்ற நூல்கள் தமிழ் மொழியில் வெளியிடப்படுகின்றன. புதிய கல்விச் சீர்திருத்த நிகழ்ச்சித் திட்டத்தின்கீழ் தேசிய கல்விக் குறிக்கோளை இலக்காகக் கொண்டு மாணவர்கள் இலகுவாகவும் தெளிவாகவும் விளங்கிக் கொள்ளக்கூடிய விதத்தில் இந்நூல்கள் எழுதப்படுகின்றன.

1977ஆம் ஆண்டு யாழ்ப்பாணப் பல்கலைக்கழகத் தமிழ்த் துறையினர் அறிவியலையும் இலக்கியத்தையும் இணைக்கும் முயற்சியாக ஒரு கருத்தரங்குத் தொடரினை நடத்தினர். கருத்தரங்குத் தொடர் கட்டுரையினைப் பேராசிரியர் அ. சண்முகதாஸ் அவர்கள் ஆக்க இலக்கியமும் அறிவியலும் என்ற பொருளில் பதிப்பித்துள்ளமை இங்குக் குறிப்பிடத்தக்கது. ஆக்க இலக்கியமும் மானிடவியலும் என்ற பொருளில் பேராசிரியர் சோ. கிருஷ்ணராசா அவர்களும், ஆக்க இலக்கியமும் சமூகவியலும் என்ற பொருளில் பேராசிரியர்

க. கைலாசபதியும் ஆக்க இலக்கியமும் மொழியியலும் என்ற பொருளில் பேராசிரியர் அ. சண்முகதாஸ் அவர்களும் ஆக்க இலக்கியமும் நடையியலும் என்ற பொருளில் பேராசிரியர் எம்.ஏ. நுஃமான் அவர்களும் ஆக்க இலக்கியமும் வரலாறும் என்ற பொருளில் பேராசிரியர் சித்திரலேகா மௌனகுரு அவர்களும் ஆக்க இலக்கியமும் அழகியலும் என்ற பொருளில் என். சண்முக ரத்தினமும் ஆக்க இலக்கியமும் அரசியலும் என்ற பொருளில் மு. நித்தியானந்தனும் ஆக்க இலக்கியமும் நாட்டுப் பண்பாட்டி யலும் என்ற பொருளில் சி. மௌனகுருவும் ஆக்க இலக்கியமும் பாலியலும் என்ற பொருளில் என்.கே. ரகுநாதனும் எழுதிய கட்டுரைகள் இத்தொகுப்பில் அமைகின்றன. அறிவியல் என்ற துறையினுள் மானிடவியல், சமூகவியல், அழகியல், அரசியல், உளவியல், மொழியியல் என்ற துறைகள் நோக்கப்பட்டுள்ளதை இங்கு அவதானிக்க முடிகின்றது.

பேராசிரியர் வைத்திய கலாநிதி தயா. சோமசுந்தரம் அவர்கள் ஆங்கிலமொழி மூலமும் தமிழ்மொழி மூலமும் பல நூல்களை எழுதி வெளியிட்டுள்ளார். வைத்திய சேவை முழுதாகப் பொதுமக்களிடம் சென்றடைய வேண்டுமென்பதில் தீவிர அக்கறை கொண்டவர். மனவடு நெடுக்கீட்டின் உளவிளைவு களும் அவற்றை எதிர்கொள்ளும் முறைகளும் என்ற நூலைத் தமிழ்மொழியில் எழுதி 1993இல் வெளியிட்டுள்ளார். ஈழத்தில் உளமருத்துவம் சார்ந்த தமிழில் வெளிவரும் முதல் நூல் இதுவே. இலகுவான தமிழில் எல்லாருக்கும் விளங்கும் வகையில் எழுதப் பட்ட நூல் இது. மேலும் தமிழ்ச் சமுதாயத்தில் உளநலம் என்ற நூலைப் பேராசிரியர் தயா சோமசுந்தரம், வைத்திய கலாநிதி சா. சிவயோகன் ஆகிய இருவரும் சேர்ந்து எழுதி வெளியிட்டுள்ளனர். ஆராய்ச்சிகளுக்கும் பொதுமக்களுக்கும் பயன்படக்கூடிய நூல், தமிழ்மொழிமூலம் அறிவியல் செய்திகளை வெளியிடலாம் என்பதை இவை நிரூபித்துக் காட்டுகின்றன. இவ்விருவரும் பல அறிஞர்களின் கட்டுரைகளைத் தொகுத்து 'முதுமை' என்ற நூலை 2001ஆம் ஆண்டில் வெளியிட்டனர். அந்நூலில் கட்டுரை எழுதியவர்களாகப் பேராசிரியர் செ. சிவஞானசுந்தரம், வைத்திய கலாநிதி ந. சிவராஜா, பேராசிரியர் கா. சிவத்தம்பி, வைத்திய கலாநிதி ஆர். அரியரட்ணம், வண பிதா. சூ. டேமியன், வைத்திய கலாநிதி சா. சிவயோகன், கலாநிதி என். சண்முகலிங்கன், வைத்திய கலாநிதி செ.சு. நச்சினார்க்கினியன், திரு. ஆர் அமர

சிங்கம்; பேராசிரியர் தயாசோமசுந்தரம் ஆகியோரின் கட்டுரைகள் இத்தொகுப்பில் இடம்பெறுகின்றன.

சித்தமருத்துவ கலாநிதி சே.சிவசண்முகராஜா இருபதாம் நூற்றாண்டில் ஈழத்துச் சித்த மருத்துவம் (2002), சித்தமருத்துவ மூலதத்துவம் (2002), உளநெருக்கீடுகளும் மனநலனும் (1998), ஈழத்துச் சித்த மருத்துவ நூல்கள் (1993), கட்டு வைத்தியம் (2000) எனப் பல நூல்களை எழுதி வெளியிட்டுள்ளார். சித்த வைத்திய முறை தமிழ்மொழியில் எழுதப்பட்டுள்ளது.

பேராசிரியர் கா. சிவத்தம்பி அவர்கள் 'விஞ்ஞானத்துக்கான தமிழ் உரைநடை'[7] என்ற தலைப்பில் ஒரு கட்டுரை எழுதியுள்ளமை இங்குக் குறிப்பிடத்தக்கது. விஞ்ஞானத்திற்கான தமிழ் நடை எவ்வாறு பயிலப்பட்டு வந்தது என்பதையும் விஞ்ஞானத் தமிழ் எழுதுவதில் ஏற்படும் சிக்கல்கள் பற்றியும் காலப்போக்கில் விஞ்ஞானத்திற்கான தமிழ்நடை தானாக அமையும் எனவும் குறிப்பிட்டுள்ளார்.

கலாநிதி நா. சுப்பிரமணியம் அவர்கள் 'அறிவியல் தமிழ் - தமிழ்மொழி பயில்நிலையில் புதிய எல்லைகள்'[8] என்ற தலைப்பில் ஒரு கட்டுரை எழுதியுள்ளார். அறிவியல் என்றால் என்ன என்பது பற்றியும் அறிவியலின் வளர்ச்சி பற்றியும் குறிப்பிட்டுள்ளார்.

இக்கட்டுரை ஆசிரியரால் 'அறிவியல் தமிழ் - பண்பும் பயனும்'[9] என்னும் பொருளில் கலாநிதிப்பட்ட ஆய்வு மேற்கொள்ளப்பட்டது.

அறிவியலை முறையாக ஆய்வு ரீதியாகக் கற்றவர்களுக்குக் கவி இயற்ற அல்லது கதை எழுதத் தெரிந்தால் அவற்றினூடாக அறிவியல் கருத்தினை வெளிப்படுத்த முயலலாம். இன்று உலகம் எங்கும் எதிலும் அறிவியல் என்று சொல்லும் காலமாக மாறிவிட்டது. அறிவியல் செய்திகளை இலகுவாக மாணவர்களும் பொதுமக்களும் விளங்கிக்கொள்ளும் வகையில் அதனைக் கதை வடிவில், கலை வடிவில் அமைக்க வேண்டும். விஞ்ஞான அறிவும் கலைரசனையும் கலைத்தேர்ச்சியும் ஒருங்கே உடையவர்களால் தான் விஞ்ஞானக் கதைகளை எழுதமுடியும். அத்தகைய தேர்ச்சி பெற்ற எழுத்தாளர்கள் மிகச்சிலரே காணப்படுகின்றனர். நவீன தமிழ் இலக்கியத்திலும் அறிவியல் செய்திகள் இடம்பெறுவதைக் காணலாம்.

முற்காலக் கவிஞர்கள் பாடாத வானவில், மின்னற்கடத்தி, ஒலிபரப்பி, ஈர்ப்பு மையம், ஒலி இயக்கம், அமுக்கம், டைனமோ கிறாமபோன், வெப்பமானி, மின்கலன் என்பவற்றைக் கவிப் பொருளாகக் கொண்டு இ. சிவானந்தன் கண்டறியாதது என்ற கவிதை நூலை ஆக்கியிருக்கின்றார். கண்டறியாதது என்னும் நூல் எழுதப்பட்டதன் நோக்கத்தைப் பின்வருமாறு கவிஞர் கூறுகிறார்.

> 'வீட்டிலே வேலையின்றி விறாந்தையில் தூங்கும் தாய் தன்
> பாட்டிலே கிடக்கும் நூலைப் படித்திடல்கூடும் அன்றே
> ஏட்டிலே இங்கிலீசில் இதுவரை இருந்த சேதி
> வீட்டிலே பரவல் கூடும் விளைந்திடும் நன்மையின்று'[10]

விஞ்ஞானத்தைப் பாமர மக்களுக்குப் பரவச் செய்ய வேண்டும் என்ற கவிஞனின் நோக்கத்தை இங்குப் புலப்படுத்து கின்றது. சிவானந்தன் டைனமோ என்ற தலைப்பில் அமைந்த கவிதை கந்தையா, வடிவேலு என்ற இருபாத்திரங்கள் உரையாடும் முறையில் அமைந்துள்ளது. டைனமோ என்றால் என்ன என்பதையும் அது எவ்வாறு மின்குமிழை ஒளிர வைக்கிறது என்பதையும் இலகுவான இலங்கைத் தமிழ்ப் பேச்சோசையால் அமைந்த கவிதையூடாகப் புலப்படுத்துகிறார்.

நந்தி மருத்துவத்துறையோடு ஆக்க இலக்கியப்பணியையும் செய்வர். மருத்துவத்தின் பல்வேறு கூறுகளையும் சமூகத்துடன் இணைத்துக் காட்டும் படைப்பாளியாக நந்தி விளங்குகின்றார். நந்தியினுடைய கதைகளில் மனிதநேயம் அடிப்படையாக அமைகின்றதையும் நோக்கலாம். 'நூலைப்போல' என்ற சிறு கதையிலே தயிலம்மாவின் வறுமையினையும் அவளது பச்சிளங் குழந்தை, தாய் என்ற பாத்திரங்களின் ஊடாக அவர்களின் மன உயர்வுகளையும் சமூகத்தினையும் மருத்துவ சிகிச்சை முறையின் முக்கியத்துவத்தையும் எடுத்துக்காட்டுகின்றார்.

நந்தியின் மலைக்கொழுந்து நாவல் ஒரு முக்கியமான படைப்பு முயற்சி. சமூக அவலம், மனஉணர்வுகள், உளவியல் ரீதியான அணுகுமுறைகள், மருத்துவம் சம்பந்தமான ஆலோசனைகள் என்பன அவரது நாவலில் காட்டப்படுகின்றன.

> 'இளம்பிள்ளைவாதம் என்னும் போலியோ நோயைப் பற்றி அறிக்கைகள் ஒட்டப்பட்டன. முற்றிய போலியோ கால்களிலோ, கைகளிலோ பாரிச வாதத்தை உண்டாக்குகின்றதாம். போலியோவின்

வேலை அவ்வளவு தானே என்று முணுமுணுத்தான் மலையப்பன். ஆனால் கடிதங்களில் போலியோ... ஆமாம், போலிக்கடிதங்கள் இதயத்தில் அல்லவா பாரிசவாதத்தை உண்டுபண்ணுகின்றன."[11]

ஒரு இலக்கியவாதி சமூகத்தைப் பார்க்கும் முறையும் ஒரு மருத்துவ நிபுணன் இலக்கியத்தைப் பார்க்கும் பார்வையும் வேறுபட்டன. ஆனால் நந்தியின் எழுத்துகளில் மருத்துவ நிபுணனின் பார்வை ஒரு ஆராய்ச்சியாளன் பார்க்கும் பார்வையாகவே படுகின்றது. நந்தியின் மலைக்கொழுந்து நாவல் மலையகத்துத் தொழிலாளர்களின் போராட்டத்தைச் சித்திரிக்க வந்த நாவல். ஆனால் அந்த நாவல் பல்வேறு தளங்களில் ஆய்வாளர்களால் பார்க்கப்பட வேண்டிய ஒன்று. நாவல் இலக்கியமும் மானிடவியலும், நாவலிலக்கியமும் உளவியலும், நாவலிலக்கியமும் மருத்துவமும், நாவலிலக்கியமும் சமூகவியலும் என்ற பொருளில் நந்தியின் நாவல்கள் நோக்கப்பட வேண்டியன.

கோகிலா மகேந்திரன் எழுபதுகளிலிருந்தே எழுத்துலகில் தடம் பதித்தவர். இவர் ஒரு விஞ்ஞான ஆசிரியர். அதே வேளை சீர்மியக்காரருமாவார். கோகிலா மகேந்திரன் சிறப்பான கதாசிரியர். அவரது கதைகளினூடாக ஏதோவொரு செய்தி சமூகத்திற்குச் சொல்லப்படுகின்றது. விஞ்ஞான உண்மைகளை இலகுவில் தெளிவுபடுத்தும் நோக்கில் விஞ்ஞானக் கதைகள் என்ற நூலை வெளியிட்டுள்ளார். விஞ்ஞான உண்மைகளைக் கதை வடிவில் எழுதப்பட்ட முதல் நூல் இது என்று சொல்லலாம். விஞ்ஞான உண்மைகளைக் கதைமூலம் சொல்லலாம் என்பதை இதனூடாக நிறுவியுள்ளார். ஏனைய படைப்பாளிகளுக்கு இந்நூல் முன்னுதாரணமாக அமைகின்றது. ஈழத்தைப் பொறுத்த வரையில் இந்நூலை ஒரு முன்னோடி முயற்சி என்றே கொள்ள வேண்டும். மாணவர்களுக்கு விஞ்ஞான உண்மைகளை விளக்கும் வகையில் விஞ்ஞானக் கதைகளைத் தந்திருக்கிறார். விஞ்ஞான உண்மைகள் சில கதைகளாகவும் சில நாடகங்களாகவும் இந் நூலில் இடம்பெறுகின்றன. நாட்டைக் காத்த குழிவாடி, இலவச பற்சிகிச்சை, கூட்டுறவு, புதிய வீடு, உரேக்கா, கானல் நீர் என்ற கதைகள் சிறுகதைகளாக இந்நூலில் படைக்கப்பட்டுள்ளன. மேலும் வந்ததுமின், விவேகம், விவாதிப்பதில் இல்லை விளங்கிக் கொள்வதில் உண்டு, வான்வெளியில், பறவைகள் பலவிதம், வளரும் பயிருக்கு என்ற கதைகளை ஆசிரியர் நாடக வடிவில்

நகர்த்திச் செல்கின்றார். கடினமான செய்திகளை வாசகர்கள் இலகுவாக விளங்கிக்கொள்ளும் வகையில் கதையை எடுத்துச் செல்கின்றார். அவை அறிவியல் செய்தியைத் தருவனவாகவும் விளக்குவனவாகவும் சிந்திக்க வைப்பனவாகவும் அமைகின்றன.

எழுத்தாளரான சாந்தன் குறுகிய வடிவத்தில் பல செய்திகளைத் தந்துள்ளார். மனித வாழ்க்கையின் விழுமியங்களைக் கதைகளின் உள்ளடக்கமாகத் தருபவர். பாத்திரங்கள் வாயிலாகவும் நிகழ்வுகளின் வாயிலாகவும் உரையாடல் மூலமாகவும், மறைமுகமாகவும், நேரடியாகவும் கருத்துக்களை முன்வைப்பவர். நேரடியாக விஞ்ஞானக் கதைகள் என்றுகூற முடியாவிட்டாலும் இந்தச் சிறுகதைகளை ஒரு விஞ்ஞானியின் கலைப்பார்வை என்றோ ஒரு கலைஞனின் விஞ்ஞானப் பார்வை என்றோ கூறலாம். இருகோடுகள், அஸ்பெஸ்ரஸ், இசைவாக்கம், நிழல், உயிர்ப்பு, பொறிவடிகால், பூகோளம் போன்ற தலைப்புகள் விஞ்ஞானப் பார்வையை எமக்குக் காட்டுகின்றன.

அ. முத்துலிங்கம் அவர்களும் ஒரு விஞ்ஞானப் பட்டதாரி. தனது சிறுகதைகளில் தான் சந்தித்த மனிதர்களையும் நடந்த சம்பவங்களையும் தருவாகக் கொண்டு கதையை நடத்திச் செல்கின்றார். கிராம மக்களின் பிரச்சினைகளை நேரடியாக யதார்த்தத்துடன் பேசுபவர். இவரது கதைகளின் பின்புலத்தில் விஞ்ஞானப்பார்வை இழையோடுவதை நாம் காணமுடியும். சுற்றுச்சூழல் அறிவு, விலங்கினங்களின் பராமரிப்பு, மனிதனுக்கும் கணினிக்கும் இடையேயுள்ள தொடர்பு போன்றனவற்றைத் தொட்டுச் செல்வதைக் காணலாம்.

### சஞ்சிகை பத்திரிகையில் அறிவியல்

அறிவியல் இதழ்கள் ஆழ்ந்த அறிவுடையோருக்கும் மாணவர்களுக்கும் பயன்படும் வகையில் வெளிவருகின்றன. மருத்துவ இதழ்கள், சித்தமருத்துவ இதழ்கள், அரசறிவியல், சமூகவியல் முதலான துறைகளை உள்ளடக்கிய இதழ்கள் இலங்கையில் துறைசார்ந்த நிறுவனங்களின் ஊடாக வெளி வருகின்றன. அறிவுக் களஞ்சியம் என்ற இதழ் ஈழத்தில் மாதாந்திர வெளியீடாக வெளிவருகின்றது. மாணவர் சமூகத்திற்கு வழி காட்டும் நூலாக விளங்குகின்றது. இவ்விதழில் வெளியான அனைத்துச் செய்திகளும் அறிவியல் சார்ந்தனவே.

1972ஆம் ஆண்டு முதல் இலங்கையில் உள்ள யாழ்ப்பாணத்தில் ஊற்று நிறுவனத்தால் ஊற்று என்ற மாத இதழ் வெளியிடப் படுகின்றது. பாடசாலை மாணவரின் சிந்தனை ஆற்றலையும் எழுத்துவன்மையையும் ஊக்கி வளர்த்தற் பொருட்டு பொது அறிவுப் போட்டியை வருடாவருடம் ஊற்று நிறுவனம் நடாத்தி வருகின்றமை குறிப்பிடத்தக்கது.

ஈழத்தில் விஞ்ஞானமுரசு என்ற சஞ்சிகை இலங்கை விஞ்ஞான முன்னேற்றச் சங்க வெளியீடாக வெளிவருகின்றது. இது குறிப்பிட்ட மட்டத்தினர்க்கு மட்டுமன்றி எல்லாத்தர மக்களினது தேவைகளையும் ஆர்வங்களையும் பூர்த்தி செய்யும் முகமாக எழுதப்பட்டுள்ளது. வாழ்க்கைத்தரத்தையும் வாழும் வகையையும் வளமாக்க அவசியமான நவீன விஞ்ஞானத்தினதும் தொழில் நுட்பத்தினதும் பயன்பற்றிப் பொதுமக்கள் அறிந்து கொள்வதற்கு உதவும் சஞ்சிகையாக இது விளங்குகின்றது.

சுகமஞ்சரி ஆய்வு இதழ் சமுதாய மருத்துவத்துறை, யாழ்ப்பாணப் பல்கலைக்கழக வெளியீடாக வெளிவருகின்றது. இந்நூல் ஆராய்ச்சி மாணவர்களுக்கும் பொதுமக்களுக்குமான ஒரு கையேடாக வெளிவருகின்றது. எளிய தமிழில் செய்திகள் சொல்லப்படுகின்றன. அறிவியல் செய்திகளைத் தமிழில் சொல்ல முடியும் என்பதை இது நிரூபிக்கின்றது.

பத்திரிகைகளும் அறிவியல் செய்திகளை வெளியிட்டு வருகின்றமை குறிப்பிடத்தக்கது. ஒவ்வொரு நாளும் எங்கே? என்ன? நடக்கின்றது என்பதைப் பத்திரிகைகள் வெளியிடுகின்றன. உள்ளூர்ச் செய்திகளில் இருந்து உலகச் செய்திவரை பத்திரிகை வெளியிடுகின்றது. அறிவியல் தமிழை வளர்ப்பதில் ஈழத்தில் உதயதாரகை, வீரகேசரி, தினக்குரல், தினகரன், ஈழநாடு, உதயன் போன்ற பத்திரிகைகள் அக்கறை கொண்டுள்ளன.

தகவல் தொடர்புச் சாதனங்களும் அறிவியல் செய்திகளை வளர்த்துவருவதில் பெரும்பங்கு வகிக்கின்றன. மக்கள் தகவல் தொடர்புச் சாதனங்களில் வானொலி சிறப்பானதோர் இடத்தைப் பெற்று விளங்குகின்றது. வானொலி ஒலிபரப்பில் செய்திகள் ஒரே நேரத்தில் பலவகைப்பட்ட மக்களிடம் சென்று சேர்கின்றன. விளம்பரம், கல்வி, மருத்துவம், குடும்பநலம், வேளாண்மை, வானிலை ஆராய்ச்சி தொடர்பான நிகழ்ச்சிகளின் ஊடாக இலங்கை வானொலி அறிவியல் விழிப்பினை ஊட்டி

வருகின்றது. பொதுமக்கள் தொடர்புச் சாதனங்களில் தொலைக்காட்சி முக்கியமான இடத்தை வகிக்கின்றது. அரசுச் செய்திகள், குடும்பநலம், வைத்திய ஆலோசனை, அறிவியல் செய்திகள், கல்வி ஒலிபரப்பு, வேளாண்மை முதலான அறிவியல் செய்திகளை இலங்கை ரூபவாகினி, சக்தி.எவ்.எம்., யாழ்.எவ்.எம். என்பன வெளியிட்டு வருகின்றன. தொலைக்காட்சியின் மூலம் கண்ணால் பார்த்தும் காதால் கேட்டும் அறியமுடிகின்றது.

ஆரம்பத்தில் கணினியின் மொழியாக ஆங்கிலமே கையாளப்பட்டு வந்தது. ஆனால் இன்று தமிழ்மொழியும் கணினியுடன் உரையாடத் தொடங்கியுள்ளது. அறிவுத் துறையினை வளர்க்கும் சாதனமான கணினி வழியாக மாணவர்களைக் கவர்ந்திழுக்கும் வகையில் கற்பித்தல் நடைபெறு கின்றது. பாடசாலைகள், பல்கலைக்கழகங்கள், பொது நிறுவனங்களில் கணினி வழிக் கற்பித்தல் நடைபெறுகின்றது.

கணினி தொழில்நுட்பத்தின் கண்டுபிடிப்பான இன்றநெற் தகவல் பரிவர்த்தனை, உலகத்தினை ஒரு புதிய சகாப்தத்திற்கு இட்டுச் சென்றுள்ளது. மொழி, விஞ்ஞானம், தொழில்நுட்பம், அறிவியல், மானுடவியல், கணிதவியல் எனப் பல்வேறு கற்கை நெறிகள் தொடர்பான விடயங்களைத் (Worldwide web) தகவல் களஞ்சியத்தில் பெறக்கூடியதாக உள்ளது. வீரகேசரி, தினக்குரல், தினகரன், உதயன் என்ற ஈழத்துப் பத்திரிகைகளும் இன்றநெற்றில் வெளிவருகின்றன.

அறிவியல் இலக்கியம் காரண காரியத் தொடர்பு மூலம் பரிசோதனை மூலம் என்ன ஏன் எப்படி என்ற வினாக்களை உண்டாக்குவதாயும் அதற்கான தீர்வினைச் சொல்வதாகவும் அமையும். கூறவந்த கருத்தைத் தெளிவாக, செப்பமாக இயலுமளவு சிக்கலில்லாமல் கூறுவது விரும்பத்தக்கது. அறிவியலில் பொருள் மயக்கம் உள்ள சொற்சேர்மானங்களைத் தவிர்த்தல் வேண்டும்.

மேல்நாட்டவருடைய வருகையின் பின்னரே அறிவியல் வளர்ச்சியடைந்தது. கிறீன் அவர்களின் முயற்சியால் ஈழம் அறிவியலின் தாயகம் என்று சொல்லுமளவிற்கு அறிவியல் வளர்ச்சி ஏற்பட்டது. ஈழத்து இலக்கிய வரலாற்றில் அறிவியல் இலக்கிய வளர்ச்சிக்குத் தனியான இடம் இருக்கின்றது என்பது தெளிவாகின்றது.

## அடிக்குறிப்பு

1. பெருஞ்சொல்லகராதி தொகுதி ஒன்று, ப. 500.
2. கிறீன் கெமிஸ்தம் (மொ.பெ.) ப. 542.
3. விபுலானந்தர் "கலைச்சொல்லாக்கம்" இலக்கியக் கட்டுரைகள், ப. 154, 1993.
4. இந்திரபாலா "கலைச்சொற்கள்" **சிந்தனை** - சமூக விஞ்ஞான காலாண்டுச் சஞ்சிகை இதழ், 1967.
5. சண்முகதாஸ், அ., "இருபதாம் நூற்றாண்டுக்கான தமிழ் மொழி" **கலப்பை** இதழ், 1987.
6. See Ambihaipahar R., **Scientific Tamil Pioneer** (Dr. Samuel Fish Green) Dhuhlasi Publications, Colombo, 1998.
7. சிவத்தம்பி, கா., "விஞ்ஞானத்துக்கான தமிழ் நடை" விமர்சனச் சிந்தனைகள், 2001, மக்கள் வெளியீடு, சென்னை.
8. சுப்பிரமணியம், நா., அறிவியல் தமிழ் - "தமிழ் மொழி பயில் நிலையில் புதிய எல்லைகள்" எஸ்.ஜே.வி. செல்வநாயகம் நினைவுப் பேருரை, 1997.
9. செல்வரஞ்சிதம் சிவசுப்பிரமணியம் "அறிவியல் தமிழ் பண்பும் பயனும்" கலாநிதிப்பட்ட ஆய்வேடு 2001.
10. சிவானந்தன், கண்டறியாதது, ப. 8., 1969.
11. நந்தி 'நூலைப்போல' ஒருகூடைக் கொழுந்து, ப. 206, 1994, இந்நூற்றாண்டின் ஈழத்துச் சிறுகதைகள் தொகுதி II, சென்னை.

# சுவடித்தமிழ்

## தமிழகம்

ச. சிவகாமி

இக்காலப்பகுதியை ஏற்றமுறச் செய்த செயற்பாடுகளுள் சுவடித்தொகுப்பும் பதிப்பும் முன்னிற்கின்றன. ஐரோப்பியர் வருகையால் கிடைத்த மொழி வளர்ச்சிக் கூறுகளுள் இது தனிச் சிறப்புறுகிறது. பழந்தமிழ் நூல்கள் அனைத்தும் பனை ஓலைகளில் எழுதப்பட்டு, ஓலைச்சுவடிகளாகப் பாதுகாக்கப் பட்டன. தமிழ்க்கல்வியின் பயிற்சிக் குறைவு, படியெடுத்தலில் பெரும் பொருட்செலவு இவற்றின் காரணமாக ஒவ்வொரு நூலும் மிகக் குறைந்த படிகளே இருந்தன; அவையும் ஒரே இடத்தில் கிடைப்பதில்லை. இப்பணியில் ஆர்வமுடையோரும், தமிழாசிரியப் பணியில் ஈடுபட்டோரும் தம் தேவைக்கேற்ப தொகுத்து வைத்திருந்தனர். யார் யாரிடம் என்னென்ன சுவடிகள் உள்ளன என்பதை அறிதற்கு வாய்ப்பும் மிகக் குறைவு என்பதுடன் அவர்களின் இருப்பிடமும் அங்கும் இங்குமாகப் பரவிக் கிடந்தது. இக்காலப்பகுதியின் முன்வரை தேவைப்படுவோர் அரிதின் முயன்று அவற்றைத் தேடிச் சென்று கற்க வேண்டும். அச்சுப்பொறி கண்டுபிடிப்பு இக்குறையை மாற்றியமைத்தது.

இராமநாதபுரம் சேதுபதிகள், எட்டையபுரக் குறுநில மன்னர்கள், சேற்றூர் சிற்றரசர்கள், ஊற்றுமலைக் குறுநில மன்னர்கள், அதிவீரராமபாண்டியர் போன்ற அரசர் பரம்பரையினர், திருவாவடுதுறை ஆதீனம், தருமபுரமடம், திருப்பனந்தாள் காசி மடம், திருக்கோவிலூர் ஞானியார் மடம் போன்ற சைவ மடங்களும் சுவடித் தொகுப்பில் மிகுந்த ஈடுபாடு காட்டினர். பின்னால் இம்மடங்கள் சுவடிப் பதிப்பிலும் செயற் பட்டன. 1772இல் கிழக்கிந்தியக் கம்பெனியின் பணிக்காக இந்தியா வந்த மெக்கன்சி சுமார் 30 ஆண்டுகள் பிறமொழி களுடன் தமிழ்ச் சுவடிகளையும் தேடித் தொகுக்கும் பணியிலும் முனைந்தார். இவரின் இவ்வரிய பணியால் கிடைத்த எண்ணற்ற சுவடிகளை இவரது மறைவின் பின் ஆங்கில அரசு விலைக்கு வாங்கிக் கல்கத்தா ஆசிய சங்கத்தாரிடம் ஒப்படைத்தது. 1828இல்

தென்னிந்திய மொழிகளின் சுவடிகள் சென்னைக் கல்விச் சங்கத்திடம் ஒப்படைக்கப்பட்டன. 1830இல் இவை சென்னை இலக்கியச் சங்கத்திற்கு வழங்கப்பட்டன. பின் இவற்றுடன் பிற தொகுப்புகளும் இணைய 'அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூலகம்' உருப் பெற்றது. மிதிலைப்பட்டி அழகிய சிற்றம்பலக் கவிராயர், திருப்பாற்கடல்நாத கவிராயர், அம்பலவாணக் கவிராயர், எ.தே. இலட்சுமண கவிராயர், உ.வே.சா. எனப் பிறரும் சுவடித் தொகுப்பில் மிகுந்த ஆர்வம் காட்டினர். உ.வே.சா. தொகுப்பு முழுமையும் இன்று அவரது பெயரிய நூலகத்தில் பாதுகாக்கப் பட்டுள்ளன. தஞ்சை சரசுவதி மகால், மதுரைத் தமிழ்ச்சங்கம் போன்றன சுவடித் தொகுப்பிலும் பதிப்பிலும் ஈடுபட்ட பழம் பெருமையுடையன. இன்று உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், தமிழ்ப் பல்கலைக்கழகம், ஆசியவியல் நிறுவனம் என்பனவும் இதில் முனைந்துள்ளன.

தமிழ்ச் சுவடிகள் தமிழகத்தில் மட்டுமின்றிக் கேரளப் பல்கலைக்கழகம், கல்கத்தா தேசிய நூலகம் எனப் பிற மாநிலங்களிலும் வெளிநாட்டு நூலகங்களிலும் கிடைக்கின்றன. பொதுவாக நிறுவனங்களிலும், நூலகங்களிலும் உள்ள சுவடிகளுக்கு விளக்க அட்டவணைகள் எழுந்துள்ளன. உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் 1979 முதல் சுவடியியல் பட்டய வகுப்பினை நடத்தி வருகிறது. இதனால் இன்று பல சுவடிப் பதிப்பாளர் உருவாகியுள்ளனர்.

1835இல் கிடைத்த அச்சு உரிமை பலரையும் பழந்தமிழ் நூல்களைப் பதிப்பிக்கவும், புத்துரையுடன் வெளியிடவும், ஏடுகள் தேடித் தொகுக்கவும் தூண்டியது. அவர்களில் உ.வே. சாமிநாதையர் தலையாயவர். அவரது வாழ்நாள் சுவடிகளைத் தொகுப்பதிலும், தூய தெளிந்த பதிப்பினை வெளியிடுவதிலுமே கரைந்தது. சுவடிப்பதிப்புப் பணிக்கு இலக்கணமாக நின்ற அவரால் பழந்தமிழ் புதிய தலைமுறையினரிடையே செல்வாக்கு பெறலாயிற்று. 1878இல் 'வேணுவனலிங்க விலாசச் சிறப்பு' எனும் நூல்வழி பதிப்புத் துறையில் கால்பதித்தார். சிலப்பதிகாரம் (1892), சிந்தாமணி (1887), மணிமேகலை (1898), பெருங்கதை (1924), பத்துப்பாட்டு (1889), புறநானூறு, ஐங்குறுநூறு (1903), பதிற்றுப் பத்து (1904), பரிபாடல் (1918), குறுந்தொகை (1935) என அவர் தம் அயரா கடும் உழைப்பால் பதிப்பித்த நூல்கள் தொன்னூற்று ஒன்று ஆகும். தாம் பதிப்பிக்கத் துணிந்த நூலை ஐயமற உணர்ந்து தெளிந்த பின்பே பதிப்பிக்க முற்படுவார்; இதற்காக எத்தனை

காலம் சென்றாலும், எத்தனை பேரிடம் விளக்கம் கேட்க நேர்ந்தாலும் அசரமாட்டார்; அந்நூல் பற்றித் தமக்குக் கிடைத்த சுவடிகளையெல்லாம் ஒப்புநோக்கிப் பாட வேறுபாடுகளைக் குறித்துக் கொண்டு அவற்றில் சரியானப் பாடத்தைப் பலகால் பல வகையாகச் சிந்தித்தே முடிவெடுப்பார்; ஒரு பதிப்பு முடிந்த பின்னும் தமக்குக் கிடைத்த தரவுகளைத் தொகுத்து அடுத்தடுத்த புதிப்புகளை விளக்கம் பெறச் செய்வதுடன் முன் பதிப்பில் ஏதும் தவறு நேர்ந்திருப்பின் மறுக்காது அதையும் திருத்தம் செய்வார்; நூலுக்கு முன்னும் பின்னும் அமைக்கும் இணைப்புகள் நூலைப் பயன்படுத்துவோர்க்கும், ஆய்வு செய்வோர்க்கும் மிக்க பயனுடையதாக அமையும் எனும் இது போன்ற சிறப்புகளால் பதிப்புலகில் இன்றும் அவரே மாபெரும் ஞானியாக வழிகாட்டியாகத் திகழ்கிறார்.

தமிழ்ச் சுவடிகளைத் தேடித் தருவதிலும் பதிப்பிப்பதிலும் அவர் காட்டிய பேருழைப்பும் செம்மையும் அவரைத் தமிழ்த் தாத்தா ஆக்கின. ஐங்குறுநூறு போன்ற பழம் நூல்களுக்கு உரையாசிரியருமானவர். அவரது முற்றுப் பெறாத என் சரித்திரம் இவற்றைத் தெளிவுப்படுத்தியுள்ளது. அவரது இப்பெருஞ்சிறப்பே அவரது மறைவின் பின் 1948இலேயே மாநிலக் கல்லூரியில் முழுஉருவச் சிலை அமைய காரணமாயிற்று. அவரது கடின உழைப்பு அவருக்குப் பின்னும் அவரது வழித் தோன்றல்களால் அவரது குறிப்புகளுடன் (கம்பராமாயணம், நற்றிணை, அகநானூறு) பல நூல்களைப் பதிப்பிக்கத் துணை நின்றுள்ளது. நூல் பதிப்பினைத் தவிர அவர் நான் கண்டதும் கேட்டதும், நினைவு மஞ்சரி, நல்லுரைக்கோவை, பௌத்த மும்மணிகள், புதியதும் பழையதும் முதலான பல உரைநடை நூல்களையும் யாத்துள்ளார். தமது ஆசிரியர் வரலாறு முதல் பல வரலாறுகளையும் வரைந்துள்ளார். தமது இருபதாம் வயது முதல் எண்பத்தேழாம் வயதுவரை தமிழ்ப் பணியிலேயே ஒன்றியிருந்த அவருக்கு, திராவிட வித்யாபூஷணம் (1917), தக்ஷிணாத்திய கலாநிதி (1925), சென்னைப் பல்கலைக்கழகத்தால் டாக்டர் (1932), மகாமகோபாத்தியாயர் எனும் பட்டங்கள் வழங்கப்பட்டுள்ளன.

இப்பணியில் அடுத்துச் சிறப்பிக்கத்தக்கவராக வையாபுரிப் பிள்ளை விளங்குகின்றார். ‘சைவ சித்தாந்த மகாசமாஜப் பதிப்புகளாகிய சங்க இலக்கியம், சிந்தாமணி, திருமந்திரம்

முதலிய நூல்கள் நன்முறையில் வெளிவர ஏட்டுப் பிரதிகளை ஒப்பு நோக்கியும் பாடபேதங்களை ஒழுங்கு செய்தும் பிழை திருத்தியும் உதவி புரிந்தவர் வையாபுரிப்பிள்ளை என்பதை நான் நன்கறிவேன். யான் பெரிய புராணம் இரண்டாம் பதிப்பு முயற்சியில் தலைப்பட்டபோது தமிழ்நாட்டிலுள்ள பல ஏட்டுப் பிரதிகளைத் திரட்டி என்னிடம் சேர்ப்பித்தது வையாபுரியின் தமிழன்பேயாகும்' எனத் திரு.வி.க. பாராட்டியிருப்பது (திரு.வி.க. வாழ்க்கைக் குறிப்புகள், ப. 208) சுட்டத்தக்கது. வ.உ.சி.யின் தொல்காப்பியப் பதிப்பிற்கும் துணை நின்ற இவர் சிந்தாமணி, புறத்திரட்டு, களவியல் காரிகை, அரும்பொருள் விளக்க நிகண்டு முதலான நாற்பதற்கு மேற்பட்ட நூல்களைப் பதிப்பித்துள்ளார். சென்னைப் பல்கலைக்கழக அகராதிப் பணியும் இவருக்குப் பெருமை சேர்ப்பதாகும். வழக்குரைஞரான இவர் கம்பராமாயணப் பதிப்பிற்குப் பெருங்கட்டுரையொன்றையும் வரைந்து (கம்பன் காவியம்) வழிகாட்டியுள்ளார். இவரது பதிப்புகளின் ஆராய்ச்சி முன்னுரைகள் பெரிதும் போற்றப்படுகின்றன. தமிழின் மறுமலர்ச்சி, தமிழ்ச் சுடர்மணிகள், இலக்கிய தீபம், இலக்கிய உதயம், இலக்கிய மணிமாலை முதலான ஆய்வு நூல்களைப் படைத்த இவர் ராஜி எனும் புதினத்தையும் தந்துள்ளார்.

பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் (நற்றிணை), குறுந்தொகைக்கு உரை தந்த இரா. இராகவையங்கார் (தொல்காப்பியம் - செய்யுளியல் - நச்சினார்க்கினியர், நேமிநாதம், பன்னிருபாட்டியல், முத்தொள்ளாயிரம்), பரிதிமாற்கலைஞர் (கலிங்கத்துப்பரணி, நளவெண்பா), களத்தூர் வேதகிரி முதலியார் (யாப்பருங்கலக் காரிகை, நாலடியார்), புதுவை நயனப்ப முதலியார், மழவை மகாலிங்கையர், கா. நமசிவாய முதலியார் (தொல்காப்பியம் எழுத்து, சொல், பொருள், இறையனார் களவியல், திருவாசகம், சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரம், தணிகைபுராணம்), வ.உ. சிதம்பரம்பிள்ளை (திருக்குறள்-மணக்குடவர், தொல் பொருள் - இளம்பூரணர்), பூவை கலியாண சுந்தர முதலியார், வே. இராஜகோபாலையங்கார் எனப் பிறரும் அன்று பதிப்புத்துறையில் சிறந்து விளங்கினர். மு. சண்முகம்பிள்ளை, பூ. சுப்பிரமணியம், வே.இரா. மாதவன், தி. மகாலட்சுமி, கு. நிர்மலாதேவி, ஆ. தசரதன், பூமிநாகநாதன் மற்றும் பலர் இன்றைய சுவடிப் பதிப்பாசிரியர் களாகச் சிறந்துள்ளனர்.

இலங்கையிலிருந்து தமிழகம் வந்து தமிழ்நூல் பதிப்பில் பெரும்புகழ் பெற்று விளங்கியவர்களாக ஆறுமுக நாவலரும்,

சி.வை. தாமோதரம் பிள்ளையும் அமைகின்றனர்; உ.வே. சாமி நாதையரின் பதிப்புப்பணிகளுக்கு முன்னோடிகளாகவும் சுட்டப் பெறுவர். பிறதுறை வளர்ச்சியில் இதழ்கள் பங்கேற்றது போன்று சுவடிப்பதிப்பிலும் செந்தமிழ், தமிழ்ப்பொழில் எனத் தொடக்க கால இலக்கிய இதழ்கள் பங்கேற்றன. கலாநிலயம் வார இதழில், 1930 ஏப்ரல் முதல் டிசம்பர் வரையிலாகக் குறுந்தொகையை இராம ரத்தின ஐயர் உரையுடன் பதிப்பித்துள்ளதைச் சான்றாக்கலாம்.

பழம்பெரும் நூல்கள் பதிப்பில் முதற்கண் மூலம் மட்டும் அல்லது உரையுடன் பதிப்பித்தல் எனும் நெறி காணப்படுகிறது. பின் ஒரே நூலுக்கு ஒன்றுக்கு மேற்பட்ட உரைகள் இருப்பின் இணைத்துத்தரல் (சிலப்பதிகாரம் - உ.வே.சா.), உரையில்லாத நூல்களை உரையுடன் பதிப்பித்தல் (குறுந்தொகை - திருமாளிகைச் சௌரிப் பெருமாளரங்கன்), உரையிருப்பினும் தன்னுரை தருதல் (தொல்காப்பியம் - பொருட்படலம் - அகத்திணையியல், புறத்திணையியல் - ச. சோமசுந்தர பாரதியார்), விளக்கத்திற்காகத் தம் குறிப்புரைகளை இணைத்தல் (பத்துப் பாட்டு - நச்சினார்க்கினியர் உரை - உ.வே.சா.) என்பனவாக வளர்ச்சி காட்டியுள்ளது. 1812இல் திருக்குறளும் நாலடியாரும் மூலம் மட்டுமாக ஞானப்பிரகாசன் என்பவரால் பதிப்பிக்கப்பட்டு தமிழின் பழம்பெரும் நூல்களின் வெளியீட்டிற்குத் தோற்றுவாயாயின.

தொடக்ககாலப் பதிப்புகளில் அறநூல்கள் ஆங்கில மொழிபெயர்ப்புடன் அமைந்தது போன்று (ஆசாரக்கோவை, தி. செல்வகேசவராய முதலியார்) ஆசியவியல் நிறுவனச் சுவடிப் பதிப்புகளும் ஆங்கில மொழிபெயர்ப்புடன் வெளிவருகின்றன என்பது குறிப்பிடத்தக்கது (The Wandering Voice, The dateless Muse).

சுவடிப் பதிப்புலகின் தொடக்க காலத்தில் படைப்பாளரும் இதில் ஈடுபாடு காட்டினர் (இராமலிங்க சுவாமிகள் - தொண்டை மண்டல சதகம்). நூலாசிரியரை விடப் பதிப்பாசிரியர் அன்று பெரும்புகழ் பெற்றதைப் பதிப்பு நூல்கள் பெற்றுள்ள சாற்றுக் கவிகள் உணர்த்துகின்றன. இராமலிங்க சுவாமிகளும், மீனாட்சி சுந்தரம்பிள்ளையும் சாற்றுக்கவியைப் பலருக்கும் வழங்கி யுள்ளனர். பதிப்பில் ஆழங்கால்பட்ட முன்னோடிகள் யாவரும் முதலில் எளிய சிறு நூல்களைப் படைத்த பின்பே பழந்தமிழ் நூல்களைப் பதிப்பிக்கும் பணியில் ஈடுபட்டனர். இன்று நாட்டுப்புறவியல், மருத்துவ இயல் சுவடிகள் பதிப்பே மிகுதியாகக் காணப்படுகிறது.

தமிழில் நிறுத்தற் குறிகளின் பயன்பாட்டினை வெளிப்படுத்திப் பலரும் அதனைப் பின்பற்றச் செய்தவர் ஆறுமுக நாவலர். சங்க இலக்கியத்தைக் கலித்தொகை வழி முதன் முதல் உலகிற்கு அறிமுகப்படுத்திய (1887) பெருமைக்குரியவர் சி.வை. தாமோதரம்பிள்ளை. நூல், நூலாசிரியர், பதிப்பு முதலானவற்றின் வரலாறு, நூல் நுவலும் செய்திகளைத் தொகுத்துப் பகுத்துத் தரல் எனும் முன்னிணைப்புகள்; பாடற் முதற் குறிப்பகராதி, அருஞ்சொற்பொருள் அகராதி, மேற்கோள் விளக்க அகரவரிசை முதலான பின்னிணைப்புகள்; மூலமும் உரையும் தொடர அந்தந்தப் பக்கத்தின் அடிக்குறிப்பிலேயே பாடவேறுபாடு, மேற்கோள், குறிப்புரை முதலானவற்றைத் தருதல் எனப் பதிப்பிற்கு ஒரு முழுமைத் தன்மையை அளித்தவர் உ.வே.சா. தமிழில் தேர்ந்தோர் மட்டுமின்றித் தமிழறிந்த அனைவரும் பயன் கொள்ளும்படிப் பாடல்களைச் சந்தி பிரித்துப் பதிப்பிக்க முற்பட்டவராக வையாபுரிப்பிள்ளை சிறப்பிக்கப்படுகிறார். மர்ரே ராஜம் பதிப்புகள் இதில் முன்னிற்கின்றன. இன்றைய பழந்தமிழ் பதிப்புகள் இந்நெறியைப் பின்பற்றியமைவது குறிக்கத்தக்கது.

# மொழிபெயர்ப்புத் தமிழ்

## தமிழகம்

**ச. சிவகாமி**

தனித்துறையாக இன்று வளர்ந்தோங்கி நிற்கும் மொழிபெயர்ப்பு நூல்களையும் உள்ளடக்கும் பொழுதுதான் தமிழ் இலக்கிய வரலாறு முழுமை பெறும். இதனைத் தமிழ் வளர்க்கும் ஊடகங்களுள் ஒன்றாகக் கொள்வதும் பொருந்தும். தமிழ் மொழிபெயர்ப்புகள் இருநிலைகளில் அமைகின்றன. தமிழுக்குப் பிறமொழிகளிலிருந்து வந்துள்ள மொழிபெயர்ப்புகள், பிறமொழிகளுக்குத் தமிழிலிருந்து சென்றுள்ள மொழி பெயர்ப்புகள் என்பன அவை. அவை பற்றிய கருத்துகளை இவண் மிகச் சுருங்கக் காணலாம்.

பெருவாயின் முள்ளியார் படைத்த 'ஆசாரக்கோவை' கிடைக்கும் நூல்களுள் முதல் மொழிபெயர்ப்பு நூல் எனும் பெருமைக்குரியதாகிறது. தொடர்ந்து பதினெட்டாம் நூற்றாண்டு வரை வடமொழி வாயிலாக எண்ணற்ற சமயநூல்கள் மொழிபெயர்க்கப்பட்டன. அக்கால அரசியல், சமூகச் சூழல்கள் இதற்கு அடிப்படையாகும். ஆங்கிலேயரின் வரவு மூலம் கிடைத்த கல்வியறிவு பிறதுறை, பிறமொழி சார்ந்த நூல்களின் மொழிபெயர்ப்புக்கு இடனாயிற்று. கவிதை, புனைகதை முதலான தற்கால இலக்கியங்களும் அறிவியலின் பல்வேறு துறை சார்ந்த நூல்களும் மொழிபெயர்ப்பில் சிறப்பிடங் கொண்டன. மொழிபெயர்ப்புக்கெனக் கல்வியும் புகுத்தப்பட்டது. உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் பட்டய வகுப்பும், அது வெளியிட்ட மொழிபெயர்ப்பியல் (சு. சண்முகவேலாயுதம்) பாடநூலும் குறிப்பிடத்தக்கவை. இக்காலத்தில் மொழிபெயர்ப்பு வீறு கொண்டு வளரத் துணையான இதழ்களின் பங்கும் சுட்டத்தக்கது. அவை புனைகதை மொழிபெயர்ப்புக்கும் அறிவியல் மொழிபெயர்ப்புக்கும் களமமைத்துத் தந்தன. உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், தமிழ்ப் பல்கலைக்கழகம், ஆசியவியல்

நிறுவனம், சாகித்திய அக்காதெமி, தேசிய புத்தக நிறுவனம் போன்றனவும் தமிழ் மொழிபெயர்ப்பு வரலாற்றில் குறிக்கத்தக்கனவாகும்.

இதுவரை சுமார் ஐம்பது மொழிகளின் ஐயாயிரத்திற்கு மேற்பட்ட நூல்கள் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. அவற்றுள் ஆங்கிலம், வடமொழி, வங்காளம், ரஷியன் ஆகிய மொழி நூல்களே மிகுதியாகக் காணப்படுகின்றன. இவற்றுள் ஆங்கிலம் பரவலாக எல்லாத் துறைகளிலும் மொழிமாற்றம் அடைந்துள்ள சிறப்பினைப் பெறுகின்றது. வடமொழி சமய, பக்தி இலக்கியங்களிலும் வங்காளம் புதினம், சிறுகதை போன்றவற்றிலும் ரஷ்யமொழி புதினம், சிறுகதை, அரசியல் ஆகியவற்றிலும் மிகுதியாக மொழிமாற்றம் பெற்றுள்ளன.

காந்தியடிகள், விவேகானந்தர், ரவீந்திரநாத் தாகூர், காண்டேகர், சரத் சந்திரர், பங்கிம் சந்திரர் போன்றோர் படைப்புகள் ஏறக்குறைய முழுமையாகத் தமிழ் மொழிமாற்றம் பெற்றுள்ளன எனலாம். தநா. குமாரஸ்வாமி தாகூரை முழுமையாக மொழிபெயர்த்துள்ளார் என்பர். சேக்ஸ்பியரின் படைப்புகளில் பல நூல்கள் பலராலும் பல வகையாகவும் மொழியாக்கம் பெறும் சிறப்பினைக் கொண்டுள்ளன. ரஷ்ய இலக்கியத்தில் டால்ஸ்டாய், புஸ்கின் படைப்புகள் மிகுதியாக மொழிபெயர்க்கப் பெற்றுள்ளன.

இலக்கியம் தவிரப் பிறதுறைகளில் அறிவியல், அரசியல், வரலாறு ஆகியன மிகுதியாக மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. இன்றைய தமிழிலக்கியப் படைப்பாளர் பலரும் மொழி பெயர்ப்புகளிலும் அக்கறை கொள்வது நவிலத்தக்கது. தெசிணியின் தமிழாக்கப் பாடல் திரட்டு, சிற்பியின் அக்னிசாட்சி, தி.சா. ராஜூவின் மங்கியதோர் நிலவினிலே எனப் பல சான்றுகளைக் காட்டலாம்.

மொழிபெயர்ப்பு நேரிடையாக மூலமொழியிலிருந்து அமையாமல் ஊடுமொழியாக ஆங்கிலம் போன்றவற்றின் மூலம் தோன்றுதல் மிகுதியான நூல்களில் காணப்படுகிறது. இதற்கு ஆங்கிலமே மிகுதியும் பயன்பட்டுள்ளது. தொடக்ககாலத்தில் காணப்பட்ட கரடுமுரடான மொழிநடை இன்றைய மொழிபெயர்ப்பில் தவிர்க்கப்பட்டு எளிய இனிய தமிழுக்கு மாற்றம் பெற்றுள்ளதும் குறிப்பிடத்தக்கது.

கா. அப்பாத்துரைப் பிள்ளை, வி.எஸ்.வி. இராகவன், கா. திரவியம், எஸ். மகராஜன், பூ. சோமசுந்தரம், பெ.நா. அப்புசாமி, கா.ஸ்ரீ.ஸ்ரீ., அ.கி. ஜெயராமன், சரஸ்வதி ராம்நாத், த.நா. குமார சுவாமி, ந. கடிகாசலம்.... என மிகப்பலர் மிகச் சிறப்பான மொழிபெயர்ப்புகளைத் தந்துள்ளனர்.

உலக மொழிகளில் தமிழ்மொழி பெற்றுள்ள செல்வாக்கினை அதன் மொழிபெயர்ப்புகள் உணர்த்துகின்றன. தொல்காப்பியம் முதல் தற்கால இலக்கியம் வரை பிறமொழிகளில் தமிழ் ஏற்றம் பெற்றுள்ளது தமிழருக்குப் பெருமைதரும் ஒன்றாகும். உலகளாவிய நிலையில் சுமார் நாற்பது மொழிகளில் ஆயிரத்திற்கும் மேற்பட்ட நூல்கள் தமிழை மூலமாகக் கொண்டுள்ளன. கிறித்துவப் பாதிரிமார்கள் மூலமே தமிழ் இலக்கியம் உலகத்தினருக்கு அறிமுகமாயிற்று என்பது பொதுவாகப் பலரும் ஏற்றுக் கொண்ட கருத்தாகும்.

தொல்காப்பியத்தின் முதல் மொழிபெயர்ப்பு 1927இல் பி.எஸ். சுப்பிரமணிய சாஸ்திரியால் ஆங்கிலத்தில் ஏற்பட்டது. சங்கப்பாக்கள் ஆங்கிலத்தில் உள்நாட்டு வெளிநாட்டு அறிஞரால் பலவாக மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. ஜி.யு. போப் (புறநானூறு), ஜியார்ஜ் எல் ஹாட் மற்றும் ஹாங் ஹெய்பெட்ஸ் (புறநானூறு), ஜே.வி. செல்லையா (பத்துப்பாட்டு), ஏ.கே. ராமானுஜன் (The Interior Landscape), வி. முருகன் (கலித்தொகை), வி. தட்சிணாமூர்த்தி (அகநானூறு), ஏ.வி. சுப்பிரமணியன் (நற்றிணை) போல்வன சான்றுகளாகும். பிரான்சுவா குரோ, ழான்ஃபிலியோசா, கமில்சுவலபில் ஆகியோர் பிரெஞ்சிலும், அலெவ் இப்ராகிமோவ் ரஷ்யமொழியிலும், ஹெர்மன் திகென் ஜெர்மன் மொழியிலும் சங்கத்தமிழை மொழிபெயர்த்துள்ளனர். பலரால் இந்திய மொழிகளிலும் அறிமுகப்படுத்தப்பட்டுள்ளது.

உலக மொழிகளில் பைபிளுக்கும், குரானுக்கும் அடுத்த நிலையில் அதிகமாக மொழிபெயர்க்கப்பட்ட நூல் திருக்குறள் என்பது தமிழுக்குக் கிடைத்த பெரும்பேறு ஆகும். சுமார் முப்பது மொழிகளில் சுமார் நூற்றைம்பது மொழிபெயர்ப்புகளைக் கொண்டது; ஆங்கிலத்தில் மட்டும் ஐம்பதிற்கு மேலுள. இதன் முதல் மொழிபெயர்ப்பு மலையாளத்தில் 1595இல் நிகழ்ந்துள்ளது. லத்தீன் மொழியில் 1730இல் மொழிபெயர்த்த வீரமாமுனிவர் குறளை ஐரோப்பிய மொழியில் முதன்முதலில் தந்த ஐரோப்பியர் என்ற பெருமைக்குரியவராகிறார். 1767இல் பிரெஞ்சு, 1794இல்

கிண்டர்ஸ்லேயால் ஆங்கிலம், 1803இல் ஜெர்மன் எனச் சில நூற்றாண்டுகளுக்கு முன்பே உலக மொழிகளில் திருக்குறள் வலம் வந்துள்ளது. தொடர்ந்து உலக, இந்திய மொழிகளில் இதன் மொழிபெயர்ப்புகள் தோன்றிக் கொண்டே உள.

காப்பியங்களில் முதல் காப்பியமான சிலப்பதிகாரமும், தனிப்பெருங்காப்பியமான கம்பராமாயணமும் பிற காப்பியங்களை விட மிகுதியாக மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. 1900இல் ஜுலியன் வின்சனின் பிரெஞ்சு மொழிபெயர்ப்பு சிலம்பின் முதல் மொழி பெயர்ப்பாகும். அலெய்ன் டேனியல், வி.ஆர். ராமச்சந்திர தீட்சிதர் மொழிபெயர்ப்புகள் சுட்டத்தக்கன. 1812இல் கம்பனுக்கு ஆங்கிலத்தின்வழி (எல்லீசு பாதிரியார்) முதல் பிறமொழி அறிமுகம் கிடைத்துள்ளது. இதுவரை சுமார் 30 மொழிபெயர்ப்புகள் கம்பனுக்கு எழுந்துள்ளன. பி.எஸ். சுந்தரம் தமிழக அரசு உதவியுடன் (1999) முழுமையாகச் செய்யுள் வடிவில் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துள்ளது குறிப்பிடத்தக்கதாகும். டி.என். ராமச் சந்திரனின் பெரியபுராண ஆங்கிலவாக்கமும் இங்குச் சுட்டற்பாலது.

திருவாசகம் (ஜி.யு. போப் 1897, ஹில்கோ வியார்டோ ஷோமரூஸ் - பிரெஞ்ச் - 1923), தேவாரம் (கே.எம். வெங்கட ராமையா, சோ. ந. கந்தசாமி), திருவருட்பா (பி. முத்தரசு, 1964), திருமந்திரம் (பி. நடராசன், 1958, மலையாளம் - பாஸ்கரன் நாயர்), கந்தபுராணம் (ஆர். டெஸிக்னே & பட்டாபிராமன், பிரெஞ்சு 1967), திருவிளையாடற்புராணம் (படிகோர்ஸ்கிஸ் - ரஷ்யன், 1963), நாலாயிர திவ்விய பிரபந்தம் (சமஸ்கிருதத்தில் வேதாந்த தேசிகர், முழுமையாகக் கன்னடத்தில் ஜி.என். ராமபிரசாத்) எனப் பக்தியிலக்கியங்களும் மொழிபெயர்ப்புச் சிறப்பைக் கொண்டுள்ளமைக்குச் சில சான்றுகளாம். 1672இல் கன்னடத்தில் சிக்கோபாத்யாயா நம்மாழ்வார் திருமொழிகளைத் தந்திருப்பதும் அறியத்தக்கது. ஆண்டாளின் திருப்பாவை பலரால் பல மொழிகளுக்குச் சென்ற பெருமையுடையதாகும்.

தற்கால இலக்கியப் படைப்பாளர்களில் கவிதையில் பாரதியார் படைப்புகள் மொழிபெயர்ப்பில் முன்னிற்கின்றன (ஆர். சேஷாத்திரி, ஆர்டெஸிக்னே - பிரெஞ்சு, ஹில்கோ வியார்டோ ஷோமரூஸ் - ஜெர்மன்). ஆங்கிலத்தில் மட்டுமே இருபதிற்கு மேற்பட்டன எழுந்துள்ளன. பாரதியார் கவிதைகளை ஆங்கிலத்தில் மொழி பெயர்ப்பதில் 1958 முதல் தனி ஈடுபாடு காட்டிவரும் பிரேமா நந்தகுமாரின் சாகித்திய அக்காதெமி

வாயிலாக வெளிவந்த 'Poems of Subramania Bharati' *(1977)* யுனெஸ்கோவின் இந்திய இலக்கியக் களஞ்சியத்துள் இடம் பெற்று பாரதிக்கும் தமிழுக்கும் உலகளாவிய புகழ் சேர்த்துள்ளது. தமிழ்ப் பல்கலைக் கழகம் பாரதிக்கு முழுமையான ஆங்கில மொழிபெயர்ப்பை அளித்திருப்பதும் கூறத்தக்கது.

பாரதிக்கு அடுத்த நிலையில் பாரதிதாசன் மொழிபெயர்ப்பில் சிறப்புறுகிறார். பாரதிக்குப் பிரேமா நந்தகுமார் போன்று பாரதிதாசனுக்கு எம்.எஸ். வெங்கடாசலம் மொழிபெயர்ப் பார்வலராக அமைகிறார். வாணிதாசன், தமிழ் ஒளி, புதுவை சிவன், சுத்தானந்த பாரதியார், வெ. இராமலிங்கம் பிள்ளை, வைரமுத்து, நிர்மலா சுரேஷ் போன்ற பலரின் கவிதைகளும் மொழிபெயர்க்கப்பட்ட பெருமையுடையன.

சாகித்திய அக்காதெமி வெளியிட்டுள்ள **Ancient Indian Literature - Vol. III** மற்றும் **Medieval Indian Literature - An Anthology Vol. IV** என்பன இங்குக் குறிக்கத்தக்கன. சங்க இலக்கியம் முதல் நாட்டுப்புறக் கதைப்பாடலான ராஜா தேசிங்கு கதை வரை தமிழிலக்கியப் பரப்பின் முதன்மை இலக்கியங்களும், முன்னோடிப் படைப்புகளும், பிற சிறப்புச் சிற்றிலக்கியங்களும் இவற்றில் ஆங்கிலப் பெயர்ப்பு கண்டுள்ளன.

கல்கி, அகிலன், ஜெயகாந்தன், மு.வ., நீல. பத்மனாபன், இந்திரா பார்த்தசாரதி, தி. ஜானகிராமன், ரகுநாதன் புதுமைப்பித்தன், லா.ச. ராமாமிர்தம், கு. அழகிரிசாமி, ந. பிச்சமூர்த்தி, ஆதவன் எனப் பல புனைகதையாளர் படைப்புகளும் பிற மொழியேற்றம் பெறும் சிறப்புப் பெற்றுள்ளன. உ.வே.சாமிநாதையரின் என் சரித்திரம், ம.பொ.சி.யின் விடுதலைப் போரில் தமிழ் வளர்ந்த வரலாறு, கமலாவின் சோவியத் நாட்டில் ஒரு தமிழ் மாணவி, ஆனந்தரங்கம் பிள்ளையின் நாட்குறிப்பு என உரைநடையின் பல வகைமைகளும் மொழிமாற்றம் கண்டுள்ளன.

தமிழிலிருந்து பிறமொழிகளுக்குச் சென்ற நூல்களில் மிகுதியானவை ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. ஆங்கிலேயர் ஆட்சி, மதப்பரப்புதலுக்காக வந்த ஐரோப்பியர் தமிழின் பால் பெற்ற ஈடுபாடு, ஆங்கிலக்கல்வி, உலகளாவிய மொழி எனப்பல காரணங்கள் இதற்கு அடிப்படையாகின்றன. அடுத்து இந்திய மொழிகளான மலையாளமும் தெலுங்கும் முன்னிற்கின்றன.

குறிப்பிட்ட மொழிகளில் குறிப்பிட்ட சிலர் மொழி பெயர்ப்பில் மிகுந்த அக்கறை காட்டுகின்றனர். ஜி.யு. போப், ஏ.கே. ராமானுஜன், கே.எம். வெங்கட்ராமையா, பிரேமா நந்தகுமார், டி.என். இராமச்சந்திரன், வி.முருகன், அ. தட்சிணாமூர்த்தி எனப் பலர் ஆங்கில மொழிபெயர்ப்பில் சிறப்புற்றுள்ளனர். கமில்சுவலபில் தமக்குத் தமிழின்பால் உள்ள ஈர்ப்பினை ஆங்கிலம், செக், பிரெஞ்சு மொழிகளில் மொழிபெயர்ப்புகளைத் தந்துள்ளதன்வழிக் காட்டுகிறார். ஞானு தியாசோ பிரெஞ்சு மொழியிலறியப்படும் பிறிதொரு தமிழன்பராவார். வங்காளத்தில் யதிந்திர ராமானுஜதாஸ், இந்தியில் சரஸ்வதி ராமநாதன், ஆர். வீழிநாதன், கன்னடத்தில் எல். குண்டப்பா, சி. உருத்திரபதி, மலையாளத்தில் பி. நாராயணன் நாயர், சி.ஏ. பாலன், தெலுங்கில் பூதலப்பட்டு ஸ்ரீராமலுரெட்டி, மு. ஜகந்நாத ராஜா, சமஸ்கிருதத்தில் எஸ். என். ஸ்ரீராமதேசிகன் எனப் பிறரைச் சுட்டலாம்.

அறஇலக்கியங்கள் மற்றும் பக்தியிலக்கியங்களின் மொழிபெயர்ப்புகள் குறிப்பாக ஆங்கில மொழிபெயர்ப்புகள் தமிழ் மூலத்துடன் அமைகின்றன. சு. ந. சொக்கலிங்கத்தின் அறவிலக்கிய மொழிபெயர்ப்புகளையும், கே.எம். வெங்கட ராமையாவின் தேவார திருவாசக மொழிபெயர்ப்புகளையும் சான்று காட்டலாம். அண்மைக்காலச் சங்க இலக்கிய மொழிபெயர்ப்புகளிலும் இந்நிலை காணப்படுகிறது. அ. தட்சிணாமூர்த்தியின் நற்றிணை மொழிபெயர்ப்பு சான்றாகும்.

தமிழாக்கம் போல் தமிழ் மொழிபெயர்ப்புகளிலும் ஊடுமொழியாக ஆங்கிலம் மிகுதியாகவும், இந்தி போல்வன சிறுபான்மையாகவும் காணப்படுகின்றன. செய்யுள் இலக்கியங்கள் முழுமையாக அன்றித் தொகுப்பாகவும் அமைகின்றன (A Tamil Reader - J. Vacek & S.V. Subramanian, Ancient Poems of Love and War, George. L. Hart). கதை இலக்கியங்களின் மொழிபெயர்ப்பு உரைநடையிலும் உரைநடை இணைந்த செய்யுள் வடிவிலுமாக (**The Tale of an Anklet: An Epic of South India - R. Barthasarathy, Kambaramayanam - A condensed in English verse & Prose, V.S. Mudaliar**) அமையக் காண்கிறோம்.

பெ.நா. அப்புசாமி, சி.ஏ. பாலன், ஹா.கி. வாலம், பிரேமா நந்தகுமார், மு.கு. ஜகந்நாத ராஜா, சு. கிருஷ்ணமூர்த்தி எனச் சிலர் தமிழிலிருந்து பிற மொழிகளுக்கும் பிற மொழிகளிலிருந்து தமிழுக்கும் என இருவழிகளிலும் மொழிபெயர்த்துத் தமிழைச் சிறப்பிப்பதில் முன்னிற்கின்றனர் (மொழிபெயர்ப்புத் தமிழ், ச. சிவகாமி, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 2004).

# ஊடகங்களில் தமிழ்

## தமிழகம்

இராம. குருநாதன்

### இதழ்கள்

மக்களுக்குச் செய்தியையும், நிகழ்ச்சிகளையும் தெரிவிக்கும் முறைகளில் ஊடகங்களின் சாதனை பெருமளவில் வளர்ச்சி கண்டு வருகிறது. தொன்மைக் காலத்தில் இருந்தே தகவல் பரிமாற்றம், செய்தித் தொடர்புக்கு உரிய பல நிலைகளில் அவ்வக்காலங்களுக்கு ஏற்ப மாற்றத்தையும், புதுமையையும் கண்டது. மரமும், களிமண்ணும், உலோகமும் எழுத்துகளின் வளர்ச்சிக்கு உரிய கருவிகளாக இருந்திருப்பினும் அச்சுப் பொறியை உருவாக்கிய பின்னரே தாள் வழியிலான தகவல் பரிமாற்றம் மிகு வளர்ச்சியைக் காணத் தொடங்கியது. செய்தித் தாள்களின் தொடக்கம், தமிழில், பத்தொன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியிலிருந்தே அமைகிறது. தமிழ் இதழ்களின் தொடக்க காலம் என்பது சமய உணர்வினாலான சிந்தனையில் முகிழ்த்து, விடுதலை வேள்வியிலும், சமூகச் சீர்திருத்தத்திலுமாக அடையாளப் படுத்திக் கொண்டு வளர்ச்சி காணத் தொடங்கியது. கிறித்தவ சமயம் தொடர்பான இதழ்கள் ஆங்கிலேயர் ஆட்சியின்போது வெளிவரத் தொடங்கின. சமயக் கருத்து முழக்கமே குறிக்கோளாகக் கொள்ளப்பட்ட நிலையை அத்தகு இதழ்களில் காணலாம்.

தமிழில் முதல் இதழ் எது என்பதில் சில கருத்து முரண்கள் உள்ளன. பலரும் 1812இல் வெளிவந்த 'மாசத் தினச் சரிதை' என்ற இதழையே தமிழில் தோன்றிய முதல் இதழாகக் குறிப்பிட்டுள்ளனர். இலங்கையில் கி.பி. 1802இல் வெளிவந்த அரசு செய்தித்தாளான 'சிலோன் கெசட்டு', 'அரசாங்க வர்த்தமானி' என்ற பெயரில் தமிழ்ப் பதிப்பு கொண்டு வரப்பட்டதையும் இங்கு எண்ணவேண்டும்.

19ஆம் நூற்றாண்டின் தொடக்க கால இதழ்கள் தமிழ் வளர்ச்சிக்கு எனத் தனிப்பட்ட வகையில் தொண்டாற்றவில்லை. ஆயின் கிறித்தவ இதழுக்கு ஆதரவு தந்த அன்றைய ஆங்கிலேய

அரசு, ஆக்கமும் ஊக்கமும் தந்தது. சுஜநரஞ்சினி (1824), தமிழ் மேகசின் (1831), சத்தியநாதன் (1835) முதலிய இதழ்கள் உதவி பெற்றுவந்தன. இவையும், இவற்றிற்குப் பின்வந்த இதழ்களான பால தீபிகை (1840), நற்போதகம் (1840) ஆகிய இதழ்கள் இளைஞர்க்காகவும், சமயப் பரப்புதலுக்காகவும் நடத்தப்பட்டு வந்த இதழ்களாகும்.

அரசின் செய்திக் குறிப்புகளையும், அன்றாட நிகழ்வுகளையும் உள்ளிட்ட இதழ்களாக இராசவிருத்திபோதினி (1833), மெட்ராஸ் கிரானிக்கல் (1833) ஆகிய் இதழ்களும், பொது ஜன பிரசாரனி (1840)யும் வெளியிடப்பெற்றன. அரசுத் துறையின் விளக்கமாகவும், பொதுமக்களின் கருத்தறியும் களனாகவும் இவை விளங்கின.

இதழியலின் அவசியத்தையும், அதன் கருத்துப் பரப்பலின் இயல்பையும் உணரத்தலைப்பட்ட சிலர் குறிப்பாகச் சமுதாயத்தில் அக்கறை கொண்ட மேல்தட்டு மக்கள், சென்னை மகாஜன சபை (1852) என்ற அமைப்பைச் சீர்படுத்தி அதன்வழி இதழ்ச் செய்திகள் வெளியிட்டு வந்தனர். 'கிரெசண்ட்' என்னும் பெயரிடப்பட்டு அச்சபை இவ்விதழை உருவாக்கி வளர்த்தது. சில காலங்களுக்குப் பிறகு இந்து முன்னேற்ற வளர்ச்சிக் கழகம் (1852) என்ற ஒன்றைச் சீனிவாசப் பிள்ளை, வெங்கடராயுலு நாயுடு ஆகியோர் தொடங்கி 'ரைசிங் சன்' (1853) என்ற இதழைக் கொண்டு வந்தனர். பெரும்பாலும் இந்து சமயத்திற்கும், அதன் பாதுகாப்புக்குமாக இவ்விதழ் அமைந்திருந்ததோடு, கிறித்தவ மதத்திற்கு ஒரு மாற்றாகவும், அந்நாளில் விளங்கியது; இந்துத்துவத்தின் கருத்து முழக்கமாகவும் அமைந்தது.

அன்றிருந்த ஆங்கில அரசு பத்திரிகைச் சுதந்திரத்தைக் கட்டுக்குள் வைத்திருந்தது. இதழியல் சட்டங்களைத் தளர்த்திய சூழ்நிலைகளைவிட, அடக்குமுறைகளாலும், தடைகளாலும் ஒடுக்கும் சட்ட திட்டங்களைக் கடுமையாகத் தீட்டியது. 1857 சிப்பாய்க் கலகம் 'இதழ்களுக்குரிய சட்டத்தை மேலும் ஒடுக்கியது. '1857ஆம் ஆண்டு 15ஆவது சட்டம்' என்னும் பெயரில் கேனிங் பிரபு இதழ்களின் சுதந்திரத்தை ஒடுக்குமாறு சட்டத்தைப் பிறப்பித்தார். பத்தொன்பதாம் நூற்றாண்டின் மத்தியில், சிப்பாய்க் கலகம் காரணமாக, இதழ்களை ஆங்கிலேய அரசு கண்காணிக்கத் தொடங்கியது. 1841 முதல் 1860 வரையிலான காலகட்டங்களில் இருபத்தெட்டு இதழ்கள் வெளிவந்தன. அவற்றுள் பாதிக்குமேல்

பாதிரிமார்களின் பிரச்சார இதழ்களாகும். இந்துமதத்தை எடுத்துக் கூற வேண்டிய கடப்பாட்டுக்குச் சென்றன, இந்துமதம் பற்றிய இதழ்கள். கிறித்தவ மறுப்பு (1855), விவேக விலாசம் (1856) முதலியன இந்து மதத்திற்கு ஆதரவு தந்தன.

சமூகம், பொது அறிவு, அறிவியல், நாட்டு நடப்பு, இலக்கியம் உள்ளிட்ட பார்வைகளில் சில இதழ்கள் இக்கால கட்டத்தில் உலா வந்தன. வர்த்தமான தரங்கிணி (1842), மதியம் (1844), விவேக சிந்தாமணி (1860), அமிழ்த வசனி (1860) முதலியன மேற்கூறிய பார்வைகளைக் கொண்டிருந்தன. 1841-1860களின் காலகட்டம் இதழியல் வளர்ச்சியின் சமூகச் செய்திகளின் அரும்பு நிலைக் காலம் எனலாம். இந்து சமய எழுச்சி, இசுலாமிய விழிப்புணர்ச்சி, ஆதி திராவிடர் நலம், பிரம்ம ஞான சபை தோற்றம், சன்மார்க்க உணர்வு முதலியன சிந்திக்கப்பட்டன. இந்து மதம் பற்றிய சிந்தனைகளைத் தமிழக மக்களிடையே விதைத்த காலகட்டம் இது. இதழ்கள் வழி மதக்கருத்துகளின் போராட்ட நிகழ்வு இக்காலகட்டத்தே தோன்றிற்று. அதே சமயம் சமயப் பொதுமையைப் பெரிதும் வலியுறுத்தி வந்த வள்ளலார் சன்மார்க்க விவேக விருத்தி என்ற மாத இதழை 1867இல் கொண்டுவந்ததை இங்கு எண்ணலாம். இந்து-கிறித்துவக் கருத்து மோதல்கள் இதழ்களில் கவனம் பெறத் தொடங்கியதுபோல், ஆரிய-திராவிடக் கருத்துப் போர்கள் பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதிக்கால கட்டங்களில் நிகழ்ந்தன. மதக் கருத்து மோதலும் தொடர்ந்து கொண்டுதான் இருந்தன. கிறித்துவ இதழ் ஒன்றின் தலைப்பே "போர்ச்சத்தம்" என்பது. இது இக்காலத்தே வந்த இந்துசமய எதிர்ப்பு இதழாகும். 1885இல் தோலையிலிருந்து இவ்விதழ் வெளிவந்தது. இந்து-கிறித்தவச் சமயப் போரின் வன்மையை அன்றைய காலகட்ட இதழ்கள் கண்டிக்கவில்லை. சமயப்பொறையைப் பொதுவாக ஏற்றுக் கொண்டு இருந்தாலும் மோதலின் முனைப்பு சற்றும் குறைந்த பாடில்லை. கிறித்தவச் சமய இதழ்களை மிக வன்மையாகக் கண்டித்த சிறிலோக ரஞ்சனி (1887),

> இந்த ரஞ்சனியில் வெளிவரும் இந்துமத தாபனம், கிறித்துவமத நிராகரணம், முதலிய விஷயங்களை நான்கு பக்கமாய் பக்கந்தோறும் அனுபந்தமாக வெளியிட்டு வருகிறது. இதனை வாங்கி 'சத்திய தூதன், போர்ச்சத்தம் என்னும் பேய்களையோட்டி வாழக் கோருதும்

எனக் குறிப்பிட்டுள்ளமை சமய இதழ்களின் கருத்துப் போரினை ஒருவாறு விளங்கிக் கொள்ள உதவும். இதே போன்று ஆரியர், திராவிடர் கருத்துப் போருக்கு இடங்கொடுத்ததாய்ப் பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதிக் காலகட்டம் இருந்துள்ளது. இதனால் சில இதழ்களின் பெயர்கள் ஆரிய ஜன பரிபாலனி (1889), ஆரிய ஜன ரட்சனி (1889), ஆரிய பாலபோதினி (1895), ஆரிய ஜனப் பிரியன் (1896), ஆரிய தூதன் (1897) என அமைந்தன. இதற்கு எதிரணியில் திராவிட தீபிகை (1847), திராவிட வர்த்தமானி (1882), திராவிட மித்திரன் (1895), திராவிட பாண்டியன் (1895), திராவிட நேசன் (1891), திராவிட பாநு (1895) முதலிய பெயர்களில் வெளிவந்த இதழ்களைச் சுட்டலாம். இயக்கவழியிலான பார்வைக்கு முன்பாக இனவழியிலான போக்கில் இதழ்கள் தலைதூக்கிய காலத்திற்கு இக்காலகட்டம் தொடக்க வாயிலாக அமைந்தது.

ஆதிதிராவிடர், விசுவகர்மா, சத்திரியர், மீனவர், வைசியர், நாடார், யாதவர் முதலிய இன இதழ்கள் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வெளிவந்தன. பத்தொன்பதாம் நூற்றாண்டு இறுதியில் வெளியான இதழ்களான ப்றையன் (1894), பூலோக வியாசன் (1900), பண்டிதர் அயோத்தி தாசர் நடத்தி வந்த ஒரு பைசாத் தமிழன் (1907), திராவிடன் (1916) முதலியன ஆதிதிராவிடர் இதழ்களாகும். விசுவபிரம்ம புராணம் (1891) என்னும் மாத இதழ் ஆசாரி இனத்தின் மேம்பாடு பற்றியது. சாதிய இதழ்கள் சென்ற நூற்றாண்டின் தொடக்கத்தே வெளிவரத் தொடங்கின.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்க காலமுதல் பல்வேறு பார்வைகளில் இதழ்கள் வெளியாயின. தேசிய அளவில் நடைபெற்ற நிகழ்வுகள், தமிழகத்தில் ஏற்பட்ட பிராமணர் பிராமணர் அல்லாதார் பிரிவினை, கட்சிகளின் தொடக்கம், சமூகநீதிப் போராட்டங்கள், சமயம் பற்றிய கருத்தியல் வளர்ச்சி, விடுதலை வேட்கை, மொழி, இன உணர்வு, தனித்துறைகளின் மேம்பாட்டு வளர்ச்சி, அறிவியல், ஆன்மீக நாட்டம் முதலிய போக்குகளின் பின்புலத்தில் இதழ்கள் வெளிவந்தன. தமிழகத்தில் இக்காலகட்டத்தே தேசிய உணர்வே மேலோங்கியிருந்தபடியால் அதற்கேற்ப இதழ்களின் நாட்டுப்பற்றும் தீவிரமாயிருந்தன. இருபதுகள் தொடங்கி நாற்பதுகளின் இறுதி வரையிலும் இதழ்களில் காந்தியின் செல்வாக்கு ஓங்கி வளர்ந்த நிலையையும் இவண் எண்ணவேண்டும். தமிழகத்தின் பல இதழ்களும் காந்திய

நெறி நின்று வளரத் தொடங்கின. இதழ்களின் வரலாற்றில் சுமார் முப்பத்தைந்து, நாற்பது ஆண்டுகள் அச் செல்வாக்கு நீடித்தது. காந்தியின் ஒத்துழையாமை இயக்கமும், சட்ட மறுப்பு இயக்கமும் இதழ்கள் வழியே தீவிரமான நிலையை மேற்கொண்டன. அதற்குத் தகுந்தாற் போன்று ஆங்கிலேயரின் இதழ்ச் சட்டங்களும் கெடுபிடியாயின. அன்றைய நாளில் அனைவரின் ஒருமித்த கருத்தாக இந்திய விடுதலை உணர்வு தலைதூக்கியது. நாட்டுமக்களை ஈர்த்த நல்ல செய்திகளையும் விளக்கங்களையும் பல வகைகளில் உணர்ந்துகொள்ள வைத்தன இதழ்கள். விடுதலை பற்றிய விழிப்புணர்ச்சிக்கு வித்திட்ட பல இதழ்கள் பல சோதனைகளையும் அடக்குமுறைகளையும் கண்டன.

### விடுதலை உணர்வும் இதழ்களும்

அன்றிருந்த இதழ்களில் சுதேசமித்திரனின் விடுதலைக்கான பணி குறிப்பிடத்தக்கது. இந்திய தேசிய காங்கிரஸ் இயக்கத்தில் தமிழ்நாட்டுத் தலைவராய் இருந்த க. சுப்பிரமணிய ஐயர் தொடங்கி வைத்த சுதேசமித்திரன் (1882) என்ற வார இதழ் நாட்டுப்பற்றில் மக்களுக்கு ஆர்வத்தை ஏற்படுத்தியது. இப்பத்திரிகை வழித் தமிழ்மக்களைத் தட்டி எழுப்ப இயலும் என எண்ணினார் ஐயர். தமிழ்மக்களுக்கு அறிவெழுச்சி காட்ட வேண்டும். அவர்களை நாட்டுப்பற்றில் தீவிரமாக ஈடுபடுத்த வேண்டும் என விரும்பினார். 'இப்பத்திரிகையை விருத்தி செய்து தமிழ் ஜன சமூகத்தாரின் அறிவை வளர்ப்பதே மேன்மை என்று கருதினேன்' என ஜி. சுப்பிரமணிய ஐயர் குறிப்பிட்டுள்ளதை அறிய அப்பத்திரிகையின் நோக்கம் புலனாகிறது. சுதேசமித்திரனின் அந்நோக்கத்தோடு, 'தேசபாஷைப் பத்திரிகைகளும் தேசபாஷை நூல்களும் அதிகம் தோன்றி ஜனங்களுக்குச் சகாயம் செய்யாவிட்டால் இந்த நவீன ஜனநாயக முறை நிறைவேறுதல் கஷ்டமாகும்' என்ற அவரது கருத்து மக்களாட்சியை மேம்படச் செய்ய இதழ்களால் இயலும் என்பதைக் காட்டிநிற்கிறது. வார இதழாகத் தொடங்கிய சுதேச மித்திரன், வாரம் மும்முறையாக மாறிய பின் 1899இல் நாளிதழாக வெளிவரத் தொடங்கியது. பாரதியார் சுதேசமித்திரனில், 1904ஆம் ஆண்டு பணியாற்றத் தொடங்கினார். பல வகைகளில் தமிழக மக்களுக்கு நாட்டுப்பற்றை ஊட்டும்படியான கட்டுரைகளையும், கவிதைகளையும் எழுதி வந்தார். சிறுகதைகளும் அவரால் அதில் எழுதப்பட்டு வந்தன. பாரதி நீண்ட இடைவெளிக்குப் பின்னர் 1920இல் மீண்டும் அப்பத்திரிகையில் பணியாற்றினார். 1928க்குப்

பின் சுதேசமித்திரனின் வளர்ச்சியில் அக்கறை கொண்டு ஆசிரியராகப் பணியாற்றிய சி. ஆர். சீனிவாசன் அவ்விதழுக்குப் பல வகைகளிலும் பெருமை சேர்த்தார்.

விவேகசிந்தாமணி 1892இல் வெளிவந்தது. சுதேசமித்திரனில் ஆசிரியராகப் பத்தாண்டுகள் பணியாற்றிய சி.வி. சாமிநாதையர் இவ்விதழைத் தொடங்கினார். அன்று வெளிவந்த இதழ்கள் அறிவை விரிவு செய்யும் பணியில் ஈடுபட்டதுபோல, இவ்விதழும் அப்பணியைச் செய்தது. இது மாத இதழாக வெளிவந்தது. இப்பத்திரிகையின் அடிப்படையான நோக்கம் அறிவூட்டுவதாக அமைந்தது. பல்வேறு செய்திகளும் தகவல்களும் இப் பத்திரிகையில் இடம்பெற்றன. சமூகச் சீர்திருத்தத்தை வலியுறுத்து வதையும் நோக்கமாகக் கொண்டது. அன்றைய காலகட்டத்தில் வாழ்ந்த புகழ்பெற்ற படைப்பாளர்கள் தம் படைப்புகளை இதில் எழுதிவந்தமை குறிப்பிடத்தக்கது. கதை இலக்கியங்கள், மொழிபெயர்ப்புகள் தரமிக்கவையாக இருந்தன.

அன்றிருந்த காலகட்டத்தில் தேசிய உணர்வையும், அறிவு வளர்ச்சியையும், மொழிச்சிந்தனையையும் ஊட்டி, விழிப்புணர்ச்சி ஏற்படுத்துவதைக் கடமையாகக் கொண்டிருந்தன இதழ்கள்.

1895இல் வெளிவந்த லோகோபகாரி வி. நடராஜ ஐயரால் தொடங்கப்பட்டுக் கிட்டத்தட்ட ஐம்பது ஆண்டுகளுக்கு மேலாக வெளிவந்தது. பண்டிதை விசாலாட்சி அம்மாள், கோ. வடிவேலு செட்டியார், பரலி. சு. நெல்லையப்பர், சாமி சிதம்பரனார் போன்றோர் பல்வேறு காலங்களில் அதன் ஆசிரியராக இருந்துள்ளனர். அன்று வெளிவந்த ஆங்கில இதழ்கள் எல்லாவற்றிலுமான செய்திகளையும், தகவல்களையும், ஏனைய பிறவற்றையும் ஆங்கிலமறியாத சாதாரணமானவர்களும் படித்து மகிழவேண்டும் என்ற ஆதங்கத்தை அவ்விதழ் வெளிப்படுத்தியது. மொழிநடையில் பண்பாட்டுக் களன்களைத் தருவதில் கவனம் செலுத்தியது. கோ. வடிவேலு செட்டியார் இப்பத்திரிகையின் வழி சிறந்த தொண்டாற்றினார். இவர் லோகோபகாரியின் ஆசிரியராகப் பணிபுரிந்துகொண்டே, 'சக்கரவர்த்தினி' இதழுக்கும் ஆசிரியராக இருந்துவந்தவர். பரலி. சு. நெல்லையப்பர் ஆசிரியராகவும், உரிமையாளராகவும் பொறுப்பு வகித்தபோது லோகோபகாரியின் பெருமை மேலும் உயர்ந்தது. நாட்டுப்பற்று, மொழிப்பற்று, மதப்பற்று ஆகியவற்றால் அவ்விதழின் சிறப்பும் கூடியது. பாரதியாருக்குப் பெருமை சேர்த்த அன்றைய

இதழ்களில் இதுவும் குறிப்பிடத்தக்கது. அவருடைய 'ஆறில் ஒரு பங்கு' என்ற சிறப்புமிகு கதை இதில்தான் வெளிவந்தது.

அன்றைய இதழ்கள் பெரும்பாலும் ஏதாவதொரு சங்கத்துடன் தொடர்பு கொண்டிருந்தன. அல்லது சங்க அமைப்புச் சார்பாக இதழ்கள் வெளியிடப்பட்டன. அவ்வாறு வெளிவந்த இதழ்களில் ஒன்று தமிழர்நேசன் (1917), தமிழர் கல்விச் சங்கத்துப் பத்திரிகை என்ற முத்திரையுடன் இது வெளி வந்தது. இதன் ஆசிரியராக இருந்தவர் அ. மாதவையா. 'இங்கிலீஸ் தெரியாத தமிழ் நாட்டவர்க்குத் தற்காலத்து நவீன அறிவைப் பரவச் செய்வதுதான் சங்கத்தின் நோக்கம் என்ற கருத்தில் தமிழர்நேசன் வெளியிடப்பட்டது. தமிழ்ப் பயிற்சியும், ஆங்கில இலக்கிய, அறிவியல் கருத்துகளும், சமூகச் சீர்திருத்த முயற்சி களும் நிறைய இடம்பெற்றன. அ. மாதவையா அடிப்படையில் இலக்கிய வாதியாகவும் சமூகப்புரட்சியாளராகவும் இருந்தது இவ்விதழுக்கு வலிமை சேர்த்தது. அறிவியல் கட்டுரைகள் பல ஆங்கிலம் நன்கு அறிந்த பலரால் எழுதப்பட்டு வந்தன. அறிவியல் இதழ் என்று சொல்லும் அளவிற்கு அதில் பெ.நா. அப்புசாமி கட்டுரைகளை எழுதிவந்ததும் குறிக்கத்தக்கது.

தமிழ்நாடு என்னும் இதழ் (1919) வார ஏடாக வெளிவந்தது. விடுதலை இயக்கத்தில் மிக முனைப்போடு செயல்பட்ட டாக்டர் வரதராசலு நாயுடு என்பவர் இதனை நடத்திவந்தார். இந்திய விடுதலை இயக்கத்தில் தீவிரமாகச் செயல்பட்ட இதழ்களுள் ஒன்றான இவ்விதழ் நாளேடாக 1926இல் தொடங்கி வெளிவந்தது. தமிழ்மரபில் செய்திகளையும் பிறவற்றையும் எழுத வேண்டும் என்பதைக் கடைப்பிடித்தும், வலியுறுத்தியும் வந்தது. இதழியல் வளர்ச்சிக்குப் பெருமை சேர்த்த இதன் ஆசிரியர் 'தமிழ்நாடு' இதழ் மட்டுமன்றிப் பிரபஞ்சமித்திரன், இந்தியன் எக்ஸ்பிரஸ் முதலிய இதழ்களையும் நடத்திவந்தார். இதழியல் துறையில் மாற்றங்களையும் சீர்திருத்தங்களையும் செய்த இவர், அதன் வழியே நாட்டுப்பற்றுக்கும் மொழிப்பற்றுக்கும் உயிர் ஊட்டியவர். 'தென்னாட்டுத் திலகர்' என வ.உ.சி.யால் புகழப்பட்ட இவரது விடுதலை இயக்க உணர்வு அதிரடியாக விளங்கியது. 'விடுதலைப் போரின் வெடிகுண்டு', என இவரைச் சுட்டுவதுண்டு. எழுத்திலும் பேச்சிலும் தீவிரம் காட்டிய இவரது கருத்து, தலையங்கங்களில் இடம்பெற்றபோது, பலரின் கவனம் பெற்றது. 1930 வரை தமிழ்நாடு இதழ் வெளிவந்தது.

விடுதலை உணர்வில் தம்மை ஈடுபடுத்திக் கொண்ட திரு.வி.க.வால் நடத்தப்பெற்ற இதழ்கள் தேசபக்தனும், நவசக்தியும் ஆகும். 1917இல் நாளேடாகத் தேசபக்தன் வெளிவந்தது. நவசக்தி 1920இல் வார இதழாகத் தொடங்கப்பட்டது. 'தேசிய உணர்ச்சிகளை நேரிய முறையில் தமிழ்ப் பண்போடு கலந்து ஊட்டிய இதழ்' எனத் தேசபக்தனைச் சிறப்பித்துள்ளார் வெ. சாமிநாத சர்மா. 'தேசபக்தன் சுதந்திரத்தை விரும்புகிறான்; சுய ஆட்சி கேட்கிறான்' எனத் திரு.வி.க. தம் கருத்தை வலிமையாக இவ்விதழில் எடுத்துக் கூறியுள்ளார். இவ்விதழ் விடுதலை உணர்வை ஊட்டியதோடு சமயம், சமுதாயம், மொழி உணர்வுக்கும் இடம் தந்தது. இவ்விதழ் தொழிலாளர் நலனுக்கெனத் தனிப் பார்வை செலுத்தி எழுதிவந்ததும் குறிப்பிடத்தக்கது. மொழித் தூய்மையைத் தேசபக்தன், நவசக்தி ஆகிய இரு இதழ்களிலும் போற்றி வந்தார் திரு.வி.க. காந்தியக் கொள்கைகளை ஏற்றுப் போற்றி இவ்விரு இதழ்களும் நேர்மை திறம்பாத முறையில் வெளிவந்து கொண்டிருந்தன.

விடுதலை இயக்கச் சூழல் ஒருபுறம்; சமூக விழிப்புணர்ச்சி மறுபுறம். இவை இரண்டுக்குமான காலகட்டத்தில் தமிழக மக்களிடம் காணப்பட்ட இன உணர்வு பிராமணர், பிராமணர் அல்லாதார் ஆகிய போக்குகளை உருவாக்கியது. சென்னை மாகாண சங்கம் என்பதனைத் தோற்றுவித்து, பிராமணரல்லா தார் அரசியல், சமூக உரிமைகளுக்காகத் தீவிரமாகச் செயல்பட்ட காலகட்டத்தில் நீதிக்கட்சி போன்றவை பெரும்பங்கு கொண்டு செயலாக்கத்திற்கு வலிமை சேர்த்தன. இவ்விழிப்புணர்ச்சியை இக்காலகட்ட இதழ்கள் வெளிப்படையாகவே தெரிவித்தன. இதன் காரணமாக இருபது முப்பதுகளில் இதழ்கள் சில வெளி வந்தன. மக்களிடம் மண்டிக் கிடக்கும் அறியாமையை வெளிப் படுத்திச் சமூக உணர்விலும், நாட்டு நலனிலும் அக்கறைகாட்ட வேண்டும் என்று அறைகூவல் விடுத்தன. தமிழ்ச் சமுதாயத்தை மீட்டெடுக்க வேண்டும் என்ற உணர்வோடும், தமிழ்ச் சமூகமும் தமிழர்களும் தங்களைச் சரியாக இனம் காண வேண்டும் என்ற தீவிரமான சிந்தனையோடும் தொடங்கப்பட்ட இதழ்களில் குறிப்பிடத்தக்கது குடியரசு இதழ். இவ்விதழ் ஈ.வே. ராமசாமி, தங்கப்பெருமாள் ஆகியோரை ஆசிரியர்களாகக் கொண்டு 1925 ஆம் ஆண்டு தொடங்கப்பெற்றது. இதனைத் தொடக்கிவைத்தவர் ஞானியாரடிகள் ஆவார். வார இதழாக வெளிவந்த இவ்விதழ் நாடு, மொழி, சமயம் ஆகியவற்றைப் பற்றி எடுத்துக்கூறி மக்களிடையே விழிப்புணர்ச்சி ஏற்படுத்தியது. தமிழ்ச் சமூக

மேம்பாட்டுக்கான சிந்தனைகளைக் கட்டுரைகளாகத் தாங்கிவந்த இவ்விதழ், பகுத்தறிவை மக்கள் நெஞ்சில் பதியவைக்க முயன்ற இதழாகும். எழுத்துச் சீர்திருத்தத்தை முதன்முதல் வலியுறுத்திய இதழாகவும் விளங்கியது. பெரியார் 'சித்திரப்புத்திரன்' என்ற பெயரில் பகுத்தறிவுச் சிந்தனைக் கட்டுரைகளை எழுதிப் பரபரப்பு ஊட்டிவந்தார். பெரியார் பின்னர்த் தொடங்கிய இதழ்களுக்கு இது முன்னோடியாகும். ரிவோல்ட் (1928), சமதர்மம் (1934), பகுத்தறிவுப் புரட்சி (1934), விடுதலை (1935), உண்மை (1970) ஆகிய இதழ்களை நடத்திவந்தார்.

பெரியார் தொடங்கிய இதழ்களில் இன்றளவும் வெளிவந்து கொண்டிருக்கும் நாளேடு விடுதலையாகும். இதன் முதல் ஆசிரியராக டி.ஏ.வி. நாதன் பொறுப்பேற்றார். இது பகுத்தறிவுக் கருத்துகளையும், கடவுள் மறுப்புக் கொள்கைகளையும் இடைவிடாது வற்புறுத்திவரும் இதழாகும். அண்ணா, குருசாமி, மணியம்மையார், வீரமணி ஆகியோர் ஆசிரியராக விளங்கியவர்கள். அண்ணாவின் எழுத்தாற்றல் வன்மைமிக்கதாகவும், அவரைப் புகழின் உச்சிக்குக் கொண்டு செல்லக் காரணமானதாகவும் அமைந்திருந்தது. தமிழ் எழுத்துச் சீர்திருத்தத்தை முதன்முதலில் நாளேட்டில் புகுத்திய பெருமை இதற்கு உண்டு. பெரியாரின் கருத்துகள், நிகழ்ச்சிகள், பயணங்கள் ஆகியவற்றை வெளியிட்டு அவருடைய கொள்கை முழக்கத்திற்குச் சிறந்ததொரு கருவியாக இருந்தது விடுதலை.

இராஜாஜி தொடங்கிய இதழான விமோசனம் (1929) மாத இதழாக வெளிவந்தது. இது இராஜாஜி மக்களை நல்ல நெறிக்குத் திருப்ப முயற்சி எடுத்துக்கொண்ட இதழாகும். பொழுது போக்கை நோக்கமாகக் கொள்ளாமல் குறிக்கோளை அடிப்படையாகக் கொண்டு காந்தியக் கருத்துக்களைத் தாங்கி வந்தது. அதிலும் மதுவிலக்கை முழுதுமாக ஏற்றுக் கொண்டு அது குறித்த செய்திகளுக்கே மிகுதியான முக்கியத்துவம் தந்தது. இதனை மதுவிலக்குக்கு என்றே நடத்திய இதழ் எனலாம். இதில் வெளிவந்த கருத்துப் படம் மக்களிடையே தனிக்கவனம் பெற்றது. திரு.வி.க.வின் நவசக்தியில் சில காலம் பணியாற்றிய கல்கி, இவ்விதழின் பொறுப்புகளை ஏற்றார். மதுவினால் வரும் கேட்டை இவ்விதழ் போல எவ்விதழும் எடுத்துக்காட்டியதில்லை.

**காந்திய இதழ்கள்**

தேசியம் வளர்க்க வேண்டி நாட்டுப்பற்றில் தம்மை ஈடுபடுத்திக் கொண்ட இதழ்கள் இருபதுகளிலும் முப்பதுகளிலும் மிகுவரவின. இவை நாற்பதுகளிலும் தொடர்ந்தன. சட்ட மறுப்பு

இயக்கம், உப்புசத்தியாகிரகம், காந்தி இர்வின் ஒப்பந்தம், சைமன் கமிஷன் அறிக்கை முதலான ஆங்கில ஆட்சியின் சூழல்கள் இந்திய மக்களிடையே போராட்ட அலைகளைத் தொடரச் செய்தன. இந்திய அரசியலில் அந்நியருக்கு எதிராகக் கிளர்ந்த புரட்சிகளும் போராட்டங்களும் இந்த முப்பதாண்டுக் கால எல்லையில் பரவலாக இருந்தன. காந்தியக் கொள்கைகளையும், விடுதலை வேள்வியையும் மக்களிடம் கொண்டு செல்ல வேண்டும் என்ற துடிப்புணர்ச்சி இதழ்களுக்கிருந்தன. ஊழியன் (1920), சுதந்திரச் சங்கு (1930), காந்தி (1931), தினமணி (1934), கிராம ஊழியன் (1937), பாரதமணி (1939), பாரத சக்தி (1940) முதலிய இதழ்கள் விடுதலை வேள்விக்களத்தில் குதித்தன.

ஊழியன் செட்டிநாடாகிய காரைக்குடியிலிருந்து வெளி வந்தது. முதலில் தனவைசியஊழியன் என்ற பெயராயிருந்து பின் மாற்றம் செய்யப்பட்டது. இதன் ஆசிரியர் தமிழ்க்கடல் ராய. சொக்கலிங்கம் ஆவார். காந்தியக் கொள்கைப்பிடிப்புக் கொண்ட இவர் தீவிரமான விடுதலை முழக்கத்தை எழுத்து வழியே புலப்படுத்தியவர். சுதந்திரச் சங்கு சென்னையைச் சேர்ந்த எஸ். கணேசன், எஸ். சுப்ரஹ்மணியன் ஆகியோரை ஆசிரியர்களாகக் கொண்டு வெளிவந்தது. வாரம் இருமுறை இதழாகவும், மும்முறை இதழாகவும், நாளிதழ் போல அடுத்தடுத்த நாள்களிலுமாக வெளிவந்தமை அதற்குரிய வரவேற்பையும், வளர்ச்சியையும் காட்டுகிறது. பல்வேறு அந்நிய அடக்குமுறைகளைக் கண்ட இதழ் அவற்றை எதிர்கொண்டு தம் விடுதலை முழக்கத்தை முடுக்கியது. காந்திய நெறியைப் போற்றிய ஆசிரியர்கள் இருவருமே இதழ்ப்பணியைச் செய்துவந்தனர். காந்தியக் கருத்து முழக்கத்தைத் தம் இதழ்களில் சிறக்க வெளியிட்டனர். ஊர்கள் தோறும் முகவர்களை உருவாக்கி இதழ்களை விற்பனை செய்து வந்த முதல் தமிழ் இதழ் என்ற தனிப்பெருமை இவ்விதழுக்கு உண்டு. சென்னையிலிருந்து மாதமிருமுறையாக, மும்முறையாக வெளிவந்த இவ்விதழின் ஆசிரியர் தெ.ச. சொக்கலிங்கம் ஆவார். அரசியல், கலை, இலக்கியம் தொடர்பான செய்திகள் வெளி வந்ததோடு, மேனாட்டுக் கருத்துப்படங்களும் இடம்பெற்றன.. அவ்வப்போது காந்தி மலர்களையும் வெளியிட்டு வந்தது. இவ்விதழ் மணிக்கொடியோடு மிக்க தொடர்புடையது.

தினமணி, இந்திய விடுதலைக்காகப் பாடுபட்ட இதழ்களில் குறிப்பிடத்தக்கதாகும். காங்கிரஸ் இயக்கத்துக்கு ஆதரவுக் கரங்கள் நீட்டிய இதழ்களுள் இதுவும் ஒன்று. ஏ.என். சிவராமன்

இதன் ஆசிரியராக இருந்து அரசியல், சமூகப் பொருளாதாரக் கட்டுரைகளைத் தொடர்ந்து எழுதிவந்தார். சதானந்த் என்பவர் முயற்சியால் இவ்விதழ் பாரதியின் நினைவு நாளில் (11-9-1934) தொடங்கப்பட்டது. தினமணி பொதுநிலை வாசகர்கள், கல்வியாளர்கள் மத்தியில் பேரும் புகழும் பெற ஏ.என். சிவராமன் அவ்விதழுக்குத் தம்மை ஒப்படைத்துப் பணியாற்றியது எண்ணுதற்கு உரியது.

தினமணியின் தொடக்க காலங்களில் அதன் வளர்ச்சிக்கு அரும்பாடுபட்டவர் அதுபோழ்து ஆசிரியராக இருந்த தெ.ச. சொக்கலிங்கம் ஆவார். 'பாரதியின் பாதையே தினமணியின் பாதை', என்பதை அதன் தொடக்க நாள் விழாவில் கூறிய வ.ரா.வின் வாழ்த்துச் செய்தி அவ்விதழ் அப்பாதையில் சென்றதற்கான அடையாளமாகும். ஹிந்துஸ்தான் என்னும் இதழ் 1938இல் வெளி வந்தது. வார இதழான இவ்விதழ் எம்.எஸ். காமத் என்பவரால் தொடங்கப்பட்டது. திரு.வி.க.வை இதழ் உலகுக்கும் அரசியலுக்கும் அறிமுகப்படுத்தியவர் இவர். காமத் இவ்விதழை நாட்டுப்பற்றில் மக்கள் ஆர்வங்கொள்ளவேண்டி நடத்திவந்தார். வாரம் பதினெட்டாயிரம் படிகள் அக்காலத்திலேயே விற்றது என்ற செய்தி வியப்புக்குரியது. பாரதி பற்றிய கட்டுரைகள், வ.ரா.வின் கட்டுரைகள், சுத்தானந்த பாரதியின் படைப்புகள் முதலியன இதில் வந்தன.

கிராம ஊழியன், வல்லிக்கண்ணனை ஆசிரியராகக் கொண்டு வெளிவந்த இதழாகும். காந்திய விளக்கங்களையும், நாட்டு நலனையும் முன்னிருத்தி வெளிவந்த இவ்விதழ், கிராம முன்னேற்றத்திற்கும், அம்மக்களின் நல்வாழ்வுக்குமான கருத்துகளைத் தொடர்ந்து வெளியிட்டது. 1939இல் வை. கோவிந்தனை ஆசிரியராகக் கொண்டு வெளிவந்த சக்தி குறிப்பிடத்தக்க விடுதலைப் பணி ஆற்றிய இதழ்களுள் ஒன்று. பாரதி பாடல்களை முதன் முதலில் வெகுசன மக்களிடையே பரப்ப எண்ணி மலிவு விலையில் கொணர்ந்தவர் வை. கோவிந்தன் ஆவார். படைப்பாளரான கே.எஸ்.வேங்கடரமணி ஆசிரியராக இருந்து நடத்திய இதழ் 'பாரத மணி'யாகும். இவ்விதழ் காந்திய நெறியாளரான ஆசிரியரால் வெளியிடப்பட்டதால், அதனை மையப்படுத்திய கருத்துகள் மிகுதியும் இடம்பெற்றன. இக்கால கட்டத்தே முழுக்க முழுக்கக் கருத்து முழக்கத்தை முதன்மைப் படுத்திச் சில ஆண்டுகளே வெளிவந்த காந்திய இதழ்கள், கதர் (1932), களிராட்டை (1935) முதலியன.

தேசியப்பற்றிலும் தமிழக மக்களின் பொழுதுபோக்கு முதலிய கேளிக்கையிலும் ஈடுபட்டு வெகுசன மக்களின் ஆதரவைப் பெற்ற இதழ்களாக முப்பதுகளின் தொடக்கத்தில் ஆனந்த விகடன், கல்கி, கலைமகள் முதலியன விளங்கின. கதை, கட்டுரை, கவிதை, பொழுதுபோக்கு அம்சங்கள், துணுக்குகள், திரைப்பட விமர்சனம் ஆகிய அனைத்துத் துறைகளிலும் சிந்தை செலுத்தி மக்கள் மனத்தில் இடம்பிடித்தன. அக்காலத்தில் இவை போன்றே ஆனந்தபோதினி, பிரசண்டவிகடன் முதலிய இதழ்களும் பொழுதுபோக்கு என்ற பெயரில் வெகுசன இதழ்களாக வெளிவந்தன.

### திராவிட இயக்க இதழ்கள்

தேசிய உணர்வில் ஈடுபட்டு மக்களுக்கு விடுதலை வேட்கை ஊட்ட எழுந்த இதழ்களிடையே குறிப்பிட்டதொரு வளர்ச்சியைக் காணமுடிந்தது. அதேபோல அரசியல் இயக்கத்தின் மாறான போக்கிலிருந்தும் இன உணர்வு முரண்பாட்டுப் போக்கிலிருந்தும் முகிழ்த்தெழுந்த கருத்துகள் புதிய எழுச்சியையும் புதிய சிந்தனை களையும் மக்கள் நெஞ்சில் விதைக்க முயன்றன. காந்திய இயக்கத் திலிருந்தும், காங்கிரஸ் என்னும் பேராயக் கட்சியிலிருந்தும் புறப்பட்ட எதிர்வினையான கருத்தாக்கங்களில் சிந்தை செலுத்திய காரணங்களினால் தன்மான உணர்வும், இனமான உணர்வும் தோன்றத் தொடங்கின. பெரியார் முன்னின்று தன்மான இயக்கம், பகுத்தறிவு இயக்கம் முதலானவற்றில் தமிழ்மக்களின் கவனத்தைத் திருப்பினார். முப்பதுகளின் தொடக்க முதலே பெரியாரிடம் இவ்வெண்ணம் தோன்றியதற்கு அவர் மேற்கொண்ட உருசியப் பயணம், பின்னர் காந்தி, இராஜாஜி ஆகியோருடன் மறுதலையான கருத்து கொண்டது முதலியவை காரணமாயின. தமிழ்ச் சமூகம் பற்றிய சிந்தனைத் தளத்தில் பெரியார் அக்கறை கொண்டு முப்பதுகளின் இறுதியில் திராவிடர் இயக்கம் கண்டார். திராவிட இயக்க இதழ்கள் தோன்றத் தொடங்கின.

மொழியுணர்வு, இனஉணர்வின் இன்றியமையாமையை உணரத் தலைப்பட்ட காலகட்டமும் திராவிட இயக்கம் வேரூன்றக் காரணமாக அமைந்தது. முப்பதின் இறுதியில் இந்தி எதிர்ப்புப் போராட்டத் தொடக்கம் அடிப்படை அமைத்துத் தந்தது. இவற்றின் அடிப்படையில் திராவிட இயக்க இதழ்கள் வளர்ச்சி கண்டன. சண்ட மாருதம், புரட்சி, சமதர்மம், பகுத்தறிவு, புதுஉலகம், விடுதலை, அறிவு முதலிய இதழ்கள் முப்பதுகளில் உருவாயின.

சண்டமாருதம் 1931இல் வெளியாயிற்று. மிகவும் குறைந்த பக்கங்களைக் கொண்ட இந்நாளிதழின் ஆசிரியர் சொ. முருகப்பா ஆவார். இவ்விதழ் தன்மானக் கருத்துகளுக்கு இடம் தந்த வகையில் அமைந்த இதழாகும். புரட்சி என்னும் இதழ் பெரியாரால் தொடங்கப்பட்டது. இது வார ஏடாக வந்தது. இதன் ஆசிரியராக ஈ.வே. கிருஷ்ணசாமி இருந்தார். வெடிகுண்டு (1933) என்ற இதழ் அதன் பெயருக்கு ஏற்ப, திராவிட இயக்கக் கொள்கை முழக்கத்தை அதிரடி நிலையில் வெளியிட்டு வந்தது. சமதர்மம் 1939இல் பெரியாரின் கருத்துகளைத் தாங்கியும், சம தருமக் கொள்கைகளுக்கு மதிப்புத் தந்தும் வெளிவந்த இதழாகும்.

பகுத்தறிவு (1934) பெரியார் நடத்தி வந்த இதழாகும். பெரியார் ஏற்கனவே நடத்திவந்த புரட்சி (1938) இதழுக்குத் தடை விதிக்கப்பட்ட பின்னர் இதனைத் தொடங்கினார். முதன்முதல் எழுத்துச் சீர்திருத்தத்தை இவ்விதழ் அறிமுகப்படுத்தியது. இடையில் இவ்விதழ் நிறுத்தப்பட்டு மீண்டும் 1935இன் மத்தியில் வெளிவரலாயிற்று. பெரியார் நிகழ்த்திய சொற்பொழிவுகளையும், சீர்திருத்தக் கட்டுரைகளையும் தாங்கி வந்தது.

அண்ணாவும், காஞ்சி மணிமொழியாரும் இணைந்து செயல்பட்ட இதழ் 'நவயுகம்' ஆகும். இது குறைந்த மாதங்களே வெளிவந்துபின் நின்றுவிட்டது. விடுதலை இதழும் இக்கால கட்டத்தில் வெளிவந்தது. இதுபற்றி முன்னரே விளக்கப்பட்டது. பாரதிதாசன் 1940இல் 'குயில்' என்னும் கவிதை இதழைக் கொண்டுவந்தார். திராவிட இயக்கக் கருத்துகளும், சமூகச் சீர்திருத்த கருத்துகளும் கவிதை வாயிலாக இடம்பெற்றன. புதுவை முரசு (1930) என்ற இதழைச் சில காலம் நடத்திவந்தார்.

1942இல் அண்ணா திராவிட நாடு என்ற இதழைத் தொடங்கினார். இது காஞ்சியிலிருந்து வெளிவந்தது. வார இதழாகிய இவ்விதழில் அண்ணா பல்வேறு கட்டுரைகளைத் தம் இயக்கம் தொடர்பாக எழுதிவந்தார். 1963 வரை இவ்விதழ் வெளி வந்தது. இந்திய அரசு பிரிவினைத் தடுப்புச் சட்டத்தைக் கொண்டு வந்தபோது காஞ்சி என்னும் இதழைத் தொடங்கினார். அண்ணாவின் கடிதங்களும், கட்டுரைகளும் இவ்விதழுக்குப் பெருமை சேர்ப்பனவாய் இருந்தன. தம்பிக்கு எழுதிய கடிதங்கள் வழியே திராவிட இயக்கக் கருத்து முழக்கத்தை வெளியிட்டு இளைஞர்க்கும் இயக்கத்தவருக்கும் உணர்ச்சி ஊட்டினார். பாலபாரதி (1936), மாலை மணி (1949), ஹோம் லேண்ட் (1958) ஆகிய இதழ்களின் ஆசிரியராகவும் இருந்துள்ளார்.

1954இல் கருணாநிதி முரசொலி இதழைத் தொடங்கினார். வார இதழாக வெளிவந்த இவ்விதழ், பின்னர் நாளிதழ் ஆனது. திராவிட இயக்கக் கருத்து முழக்கத்திற்குச் சிறந்த கருவியாக இதனைக் கருணாநிதி உருவாக்கினார். 'உடன்பிறப்புக்கு' என்ற கடிதப்பகுதி கட்சியினரை ஈர்க்கும் விதத்தில் அமைந்திருப்பதை அறியலாம். 'முத்தாரம்' என்ற இதழ் கருணாநிதியின் பல்வேறு இலக்கியக் கட்டுரை, கதைகளைத் தாங்கி வந்துள்ளது.

திராவிட இயக்கத்தின் முன்னணியில் இருந்த ஒவ்வொரு வரும் ஏதாவதொரு வகையில் இதழியல் பணியில் ஈடுபட்டு வந்துள்ளனர். ஏனைய இயக்கங்களை விடத் திராவிட முன்னேற்றக் கழகமே இயக்கச் சார்பான இதழ்களை மிகுதியும் வெளியிட்டு வந்துள்ளது. நெடுஞ்செழியன் நடத்திய மன்றம், ப. இளஞ்செழியனின் போர்வாள், காஞ்சியில் மலர்ந்த மறவன் மடல், தி.மு.க.வில் எம்.ஜி.ஆர். இருந்தபோது வெளிவந்த சமநீதி, முதலியன திராவிட இயக்கத்தின் இதழியல் பங்களிப்பாகும்.

### பொதுவுடைமை இயக்க இதழ்கள்

இருபதுகளின் தொடக்கத்தில் பொதுவுடைமை இயக்கம் பரவியபோது, தமிழகத்தில் எம். சிங்காரவேலு அதனைப் பேணி வளர்க்கக் காரணமாயிருந்தார். ப. ஜீவானந்தம், ஏ.எஸ்.கே. ஐயங்கார், பி. ராமமூர்த்தி முதலியோர் இவ்வியக்கத்தில் பங்காற்றிவந்தனர். முப்பதுகளின் பிற்பகுதியில் ஜனசக்தி (1937) இதழ் வெளிவந்தது. ஜனசக்தி பொதுவுடைமை இயக்கத்தின் போர்வாள் என்று கருதக் கூடிய அளவிற்கு அதன் ஆசிரியர் ப. ஜீவானந்தம் கட்டுரைகள் தீட்டி வந்தார். வார இதழாக இது தொடங்கப்பட்டுப் பின் நாளிதழாக வெளிவந்தது.

> **விவசாயிகளின் நலனை அறுவடை செய்யும் அரிவாளாகவும் தொழிலாளர் சிக்கலை ஓங்கியடித்து உடைக்கும் சுத்தியலாகவும் ஜனசக்தி வளர்ந்திருக்கிறது.**

என்று இவ்விதழின் வளர்ச்சி குறிப்பிடப்பட்டிருக்கிறது. புதுமை இலக்கியம் என்ற இதழ் 1948இல் வெளிவந்து நின்றுபோன முற்போக்கு இலக்கிய இதழாகும். இதே போல 1949இல் வெளிவந்த 'முன்னணியும்' நின்றுபோனது. எழுத்தாளர் விந்தன் 1954இல் சென்னையிலிருந்து 'மனிதன்' என்னும் மாத இதழை வெளியிட்டார். முற்போக்குக் கொள்கையை வலியுறுத்தி அதில் கட்டுரைகள்/கதைகள் வெளிவந்தன.

பொதுவுடைமை இயக்கம் வழியே இலக்கியப் பணியையும், கட்சிப் பணியையும் ஆற்றிவந்த ப. ஜீவானந்தம், ஜனசக்தி இதழுக்கு ஆசிரியராக இருந்துவந்ததோடு தாமரை என்ற மாத இதழுக்கும் ஆசிரியராக இருந்துவந்தார். செம்மலர் இதழும் பொதுவுடைமை இதழாக வெளிவந்து கொண்டிருக்கிறது.

இந்திய கம்யூனிஸ்ட், மார்க்சிய கம்யூனிஸ்ட் ஆகிய இரு கட்சிகளாகப் பிரிந்த நிலையில் இதழ்கள் வெளிவந்து கொண்டிருந்தன. தீக்கதிர், புதிய கலாச்சாரம் முதலிய இதழ்கள் பொதுவுடைமைக் கருத்துகளையும் படைப்புகளையும் வெளியிட்டன. பொதுவுடைமை இயக்கத்தோடு தொடர்பு கொண்டிருந்த நா. வானமாமலை 'ஆராய்ச்சி' இதழ் ஆசிரியராக இருந்து இலக்கியக் கட்டுரைகள் பலவற்றை வெளியிட்டு வந்தார். 'ஆராய்ச்சி' இதழ் தமிழ்ப் பண்பாட்டுக் கலை இலக்கியம் தொடர்பான கட்டுரைகளைத் தாங்கிவந்தது.

### இலக்கிய இதழ்கள் - ஒரு கண்ணோட்டம்

காந்திய நோக்கங்களையும், சமூகச் சீர்திருத்தங்களையும் அடிப்படையாகக் கொண்டு இதழ்கள் வெளிவந்தது போல, மொழி, இலக்கியம் தொடர்பான இதழ்கள் இருபதின் தொடக்கத்தில் வளர்ச்சி கண்டன. தமிழன் (1907) என்ற பெயரிலேயே (ஒரு பைசாத் தமிழன்) அயோத்தி தாச பண்டிதர் நடத்தி வந்த இதழ் அழகிய தமிழ்ப் பெயரைக் கொண்டிருந்தது. அன்றைய காலகட்டத்தில் வடமொழிப் பெயரைத் தூய தமிழில் பெயர்த்து எழுதியும், தனித்தமிழில் எழுதவும் பேசவும் வேண்டுமென்ற கொள்கையோடு இயக்கம் கண்டும் மொழி உணர்ச்சிக்கு வித்திட்டனர். மறைமலையடிகளின் செயற்பாடு இது தொடர்பாகச் சிந்திக்கத்தக்கது. வணிகநோக்கில் வளர்ந்த இதழ்களுக்கு மத்தியில் கலை, இலக்கியம், பண்பாட்டுச் செய்திகளைக் கொண்ட இலக்கிய இதழ்கள் வெளிவரலாயின. தமிழ் மக்களுக்கு மொழியின் சிறப்பையும், பண்பாட்டுச் சிறப்பையும் பரப்ப எண்ணிய இதழ்கள் ஏற்கனவே வெளிவந்தாலும், இலக்கிய இதழ்கள் என்று சொல்லத்தக்க வகையில் அவை இல்லை. தமிழ்மொழி வளர்ச்சிக்குத் தம்மால் ஆன பங்கை ஆற்றிய இதழ்களாக அவற்றைக் கருதலாம். அவை 'பாஷாபிமானம்' என்பதனை ஓரளவு நோக்கமாகக் கொண்டிருந்தன. முழுதும் இலக்கியம் என்ற அளவில் வெளிவந்தவை செந்தமிழ், ஞானபானு, தமிழபிமானி, தமிழ்உலகு, அறிவுக்கடல் (ஞான சாகரம்), செந்தமிழ்ச் செல்வி, தமிழ்ப்பொழில் முதலியவை

பழந்தமிழ் இலக்கிய, இலக்கண வளர்ச்சிக்குப் பாடுபட்டு வந்த இதழ்களாகும்.

செந்தமிழ், பாண்டித்துரைத் தேவர் தொடங்கிய தமிழ்ச் சங்கத்தின் ஆதரவில் வெளிவந்தது. இலக்கியத் திங்களான இவ் விதழ், தமிழ்மொழி, இலக்கியக் கட்டுரைகளைத் தாங்கிவந்தது. ஞானபானு தனித்தமிழ்ப் போட்டியை முதன்முதலாக இதழ்களில் நடத்திய பெருமை கொண்டது. இவ்விதழை 1913இல் விடுதலை வீரர் சுப்பிரமணிய சிவா தொடங்கி நடத்திவந்தார். தமிழில் பத்தி இலக்கியத்திற்கு முதன்மை கொடுத்து வெளிவந்த இதழ் தமிழபிமானியாகும். ஸ்ரீமான் தமிழ்ப் பூஷணம் வாசுதேவ ராவ் என்பவரை ஆசிரியராகக் கொண்டு 1921இல் தொடங்கப் பட்ட இதழாகும். காந்தியப் படைப்பாளரான கா.சி. வேங்கட ரமணி தமிழ் உலகு என்னும் இதழை 1922இல் வெளியிட்டார். மறைமலையடிகள் ஞான சாகரத்தை 1923இல் வெளியிட்டார். தனித்தமிழ் இயக்கம் கண்டபோது அதன் பெயரை அறிவுக்கடல் என மாற்றிக் கொண்டார். தமிழ்மொழி, இலக்கியம், சமயம் தொடர்பான கட்டுரைகள் வெளிவந்தன. 1923இல் செந்தமிழ்ச் செல்வி சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தால் வெளியிடப் பட்டு இன்றுவரை தொடர்ந்து வெளிவரும் இலக்கிய இதழாகும். இத்திங்கள் இதழ், அரசியல் தவிர ஏனைய கலை, இலக்கியம், மொழி, வரலாறு, பண்பாடு முதலியவற்றுக்குச் சிறப்புத் தந்து வெளியிட்டு வருகிறது. இதன் நிறுவனர் தாமரைத்திரு வ. சுப்பையா பிள்ளை ஆவார். தமிழ் இலக்கண இலக்கிய, சமயம் குறித்த ஆராய்ச்சிக் கட்டுரைகள் குறிப்பிடத்தக்கன. இதழாசிரியர் குழுவின் கீழ் இயங்கிவரும் இது, இரா. முத்துக்குமாரசாமி அவர்களைப் பதிப்பாசிரியராகக் கொண்டு வெளிவருகிறது.

கரந்தைத் தமிழ்ச் சங்கத்தாரால் 1925இல் வெளியிடப்பட்ட இலக்கிய மாத இதழ் தமிழ்ப்பொழில். தொன்மை இலக்கிய, இலக்கணக் கட்டுரைகளை வெளியிட்டு வந்த இதழ், அண்மைக் காலங்களில் புத்திலக்கியத்திலும் தன் பார்வையைச் செலுத்தி வருகிறது.

பழந்தமிழ் இலக்கிய ஆர்வலர்களுக்கும், ஆய்வாளர்களுக்குமான உரைகளையும், விளக்கங்களையும், விரிவாகவும், ஆழமாகவும் வெளியிட்டுவந்த இதழ் கலாநிலயம் (1928). இவ்விதழ் டி.என். சேசாசலம் என்பவரால் வெளியிடப்பட்டு 1934 வரை வெளி வந்தது. இலக்கியத்திற்கென்றே தம்மை ஒப்பளித்த அதன்

ஆசிரியர், சேக்ஸ்பியர் நாடகங்களைத் தமிழில் விரிவான விளக்கங்களோடு தொடர்ந்து வெளியிட்டு வந்தார். கம்பராமாயணம், நளவெண்பா முதலியவற்றிற்கு விரிவான உரை விளக்கம் எழுதப் பட்டுள்ளது. தலையங்கத்திலும் 'வர்த்தமானம்' என்ற பகுதியிலும் பொதுச் செய்திகள், அறிவார்ந்த கருத்துகள் இடம்பெற்றன.

புதுவகை இலக்கியங்களிலும், இலக்கிய வடிவ, உத்தி சோதனைகளிலும் புதிய கருத்தோட்டங்களிலும் முதன்மை தந்த இதழ்களில் குறிப்பிடத்தக்க மணிக்கொடி (1933) இலக்கியப் படைப்பாளர்களுக்கு முன்னுரிமை தந்தது. வ.ரா., பி.எஸ். இராமையா, ப. இராமசாமி முதலியோர் தொடக்ககால மணிக்கொடி இதழ்களில் பொறுப்பேற்றவர்கள் ஆவர். புதுமைப்பித்தன், கு.ப.ரா. மௌனி, ந.பிச்சமூர்த்தி முதலியோர் மணிக்கொடியில் எழுதி வந்தனர். மணிக்கொடி தமிழ்ச் சிறுகதை வரலாற்றில் ஆற்றிய பங்கு மிகவும் சுட்டிக்காட்டத்தக்கது. தொடக்க காலத்தில் விடுதலை உணர்வை விதைத்த இதழாகவும் திகழ்ந்தது. அன்றிருந்த முன்னணிப் படைப்பாளர் பலர் இதில் எழுதிவந்தனர்.

மணிக்கொடி அதே காலத்தில் வெளிவந்த சில இதழ்களுக்கும், அதன் பின்னர் வெளிவந்த சில இதழ்களுக்கும் முன்னோடியாக விளங்கியது. சூறாவளி (1939), கலாமோகினி (1942) முதலிய இதழ்கள் இத்தகையன. சூறாவளி கநா.சு. தொடங்கிய இதழாகும். மாதம் இருமுறையாக வெளிவந்த இந்த இதழ் இலக்கிய இதழாகவே கருதத்தக்கது. மணிக்கொடியில் எழுதிவந்த பலரும் இதில் எழுதிவந்தனர். வசன கவிதை பற்றிய தொடர் விவாதத்தை அன்றைய காலத்தில் தொடக்கிவைத்த பெருமை இவ்விதழுக்குண்டு.

கலாமோகினி வி.ரா. ராஜகோபாலனால் தொடங்கப்பட்டது. இலக்கியம், கலை தொடர்பான படைப்புகளை வெளியிட்டு வந்தது. படைப்பாளர்களை அட்டைப் படத்தில் வெளியிட்டுப் பெருமைப்படுத்திய இதழ் என்ற பெருமை இதற்கு உண்டு. அவர்களின் படைப்புகளையும் அந்தந்த இதழ்களிலேயே வெளியிட்டுப் பெருமைப்படுத்தியது.

எம்.வி. வெங்கட்ராம் 1948இல் தேனீ என்ற இலக்கிய இதழைத் தொடங்கினார். ஐம்பதுகளில் வெளிவந்த இலக்கிய இதழ்களில் சரஸ்வதி, சாந்தி, ஹனுமான் முதலிய இதழ்கள் குறிப்பிடத்தக்கன. இலக்கிய இதழ்களை வணிகநோக்கு இன்றி நடத்த இயலாத காரணத்தால் அவை புற்றீசல் போலக்

கிளம்பினாலும் அவற்றின் ஆயுளும் குறைவாகவே இருந்துள்ளது. வெறும் இலக்கியத்தை மட்டுமே முதலாகக் கொண்டு நடத்திய இலட்சியப் போக்கு பரவலாக அறியப்படவும், சாதாரண வாசகர்களைச் சென்றடையவும் வாய்ப்பில்லாமல் போனதால் பல்வேறு இடையூறுகளுக்கும் இன்னல்களுக்கும் தாக்குப் பிடித்து நடத்த முற்பட்டு இறுதியில் நின்றுபோன இலக்கிய இதழ்கள் மிகுதி. நாற்பது ஐம்பதுகளில் இவ்வாறு நின்றுபோன இதழ்கள் நடுவே ஓரளவு தாக்குப்பிடித்த இதழ்களில் முற்போக்கு இயக்கத்தைச் சார்ந்த சாந்தி, சரஸ்வதி, தாமரை போன்றவை குறிக்கத்தக்கன. தொ.மு.சி. ரகுநாதனை ஆசிரியராகக் கொண்டது சாந்தி. 1954இல் தொடங்கப்பட்ட இவ்விதழ் முற்போக்குத் தளத்தை மையமாகக் கொண்டு வெளிவந்தது. சரஸ்வதியும் அவ்வாறே. வா. விஜய பாஸ்கரன் இதனை 1955 இல் தொடங்கினார். இலக்கியத் தரமான படைப்புகளும் விமர்சனங்களும் இதில் வெளிவந்தன. சுமார் எட்டாண்டுகள் வெளிவந்தது இவ்விதழ்.

ஐம்பதுகளின் இறுதியில் சி.சு. செல்லப்பா எழுத்து (1959) இதழைக் கொண்டுவந்தார். இலக்கிய ஆர்வலர்களைப் புதுமை வேட்டலில் ஈடுபடுத்திப் பல இலக்கிய வகைகளைப் 'புதுமை இலக்கிய மாத ஏடு' என்ற விளம்பரத்தோடு அறிமுகப்படுத்தியது. இலக்கிய விமர்சனக் கட்டுரைகளுக்குச் சிறப்பிடம் தந்த இவ்விதழ், புதுக்கவிதைக்கு விரிந்த இடம் தந்தது குறிப்பிடத்தக்கது. எழுத்தாளர் பலரை உருவாக்கியது. சுமார் பன்னிரண்டாண்டுக் காலம் வெளிவந்தது. சிற்றிதழ்களுக்கு அன்றைய காலகட்டத்தில் பெருமை சேர்த்த இதழ்களில் இது முக்கியமானது. அதேபோல, அறுபதுகளில் சுட்டிக்காட்டத்தக்க இலக்கிய இதழ்களான தீபமும் (1965) கணையாழியும் (1965) குறிக்கத்தக்கன. தீபம் நா. பார்த்தசாரதி தமிழ் இலக்கியங்களுக்கும், இந்திய இலக்கியங் களுக்கும் முக்கியத்துவம் தந்து நடத்திய இதழ். எழுத்தாளர்கள், பேராசிரியர்கள், ஆய்வாளர்கள் மத்தியில் வரவேற்பைப் பெற்றதோடு, அதில் வந்த கதைகளை எல்லோரும் விரும்பிப் படிக்குமாறும் செய்தார். இருதரப்பினர்க்கும் உரியதாக ஆக்கினார் நா.பா. இதில் இதழ்கள் பற்றிய கட்டுரைகள், நேர்காணல்கள், பிற இலக்கிய அறிமுகம் போன்றவை சிறப்பாகக் குறிக்கத்தக்கன.

கணையாழி 1965இல் தில்லியில் வெளியிடப்பட்டது. தில்லி வாழ் எழுத்தாளர்களால் தனிக்குழுவாகச் செயல்பட்ட இவ்விதழ், ஒருசார்புத் தன்மையில் அறிவுஜீவிகளுக்கான இதழாக இருந்த நிலை மெல்ல மெல்ல மாறியது. முன்னணிப் படைப்பாளர்கள் குழு உணர்வோடு படைத்தளித்த நிலைமையும் மாறியது.

அரசியல், உலகச் செய்திகள், விமர்சனங்கள், கதைகள் எனப் பல்வேறு பொருண்மைகளில் கணையாழி மாதம் இருமுறை இதழாகவும், அதன்பின் மாத இதழாகவும் வெளிவந்து கொண்டிருக்கிறது. கணையாழியில் இடம்பெறும் கடிதங்கள் ஒரு விவாத அரங்கமாகப் பகிர்தலுக்கு இடம்தருவதால் சிறப்பான மதிப்பு அதற்குண்டு.

எழுபதுகளில் குறிப்பிடத்தக்க இலக்கிய இதழாக ஞானரதம் (1970), வானம்பாடி (1970), கசடதபற (1970) முதலியனவற்றைக் கருதலாம். அவ்வப்போது நின்றுபோய் மீண்டும் வெளிவந்து கொண்டிருந்த ஞானரதமும், கசடதபறவும் படைப்பாளர்களையும், படைப்புகளையும் போற்றி வந்தன. ஜெயகாந்தனைச் சிறிது காலம் ஆசிரியராகக் கொண்டு வெளிவந்தது ஞானரதம். 'கசடதபற' - 'ஒரு வல்லின மாத இதழ்' என்ற தலைப்போடு உருவானது. நா. கிருஷ்ணமூர்த்தி இதன் ஆசிரியராக இருந்தார். இலக்கியம் தொடர்பான அனைத்துப் படைப்புகளும் இதில் வெளியாயின. ஞானக்கூத்தன், சா. கந்தசாமி, அசோகமித்திரன், ந. முத்துசாமி முதலியோர் இவ்விதழை வெளிக்கொணர்வதில் கூடுதலான பங்காற்றியவர்கள். மூன்றாண்டுகள் இவ்விதழ் வெளிவந்ததோடு நின்று போயிற்று.

எழுபது, எண்பது, தொண்ணூறுகளில் பல இலக்கிய இதழ்கள் வெளிவந்தபோதிலும் நின்று நிலை பெற்ற இதழ்கள் சிலவே. குழுவாக இருந்து தற்சார்புடன் வெளிவந்த இலக்கிய இதழ்கள் தம்போக்கைக் காலத்திற்கு ஏற்றவாறு மாற்றிக் கொண்டன. குழுமனப்பான்மை முற்றிலும் மாறவில்லை என்பதையும் உணர்ந்துகொள்ளலாம். உயர்சாதிக்காரர்களாக இருந்த படைப்பாளர்கள் / ஆசிரியர் பொறுப்பினர் சமுதாயத்தின் கீழ்மட்டத்துள்ளோரையும் அரவணைத்துச் செல்ல வேண்டிய அவசியம் இலக்கிய இதழ்களுக்கு நேர்ந்துள்ளது. வீறு கொண்ட எழுத்துக்கள் அங்கிருந்தும் வெளிவருவதை ஏற்றுப்போற்ற வேண்டிய நிலைக்கு இன்றைய இலக்கிய இதழ் உலகம் ஆகியிருக்கிறது. மாறுதலான போக்குகளில் இலக்கிய இதழ்கள் பரவலாக வெளிவந்து கொண்டிருந்தாலும் அவற்றைக் கண்டு கொள்ளாத கல்வியாளர்களும் உள்ளனர். இதனால் அறிவுஜீவிகளுக்கான இதழாக அவற்றை எண்ணிக் கொள்வோரும் உண்டு. அவ்வாறான சிற்றிதழ்களில் வரும் செய்திகள், கட்டுரைகள், கதைகள், நீண்ட பேட்டிகள், விவாதங்கள், கடிதங்கள் உயர்கல்வி

மட்டத்தில் இன்னும் உணரப்படாமல் இருப்பதையும் அறிய முடிகிறது. ஆயின் இந்நூற்றாண்டின் தொடக்கம் அத்தகைய இதழ்களை ஓரளவு பரவலாக்கி வருவதற்கான சாத்தியப்பாடுகள் தெரியவருகின்றன. காலச்சுவடு, கணையாழி, காலக்குறி, ஆரண்யம், கவிதாசரண், பன்முகம், கதைசொல்லி முதலான இதழ்கள் மேலே கூறிய கருத்துகளுக்கு இடம்தரும் வகையில் வெளிவந்து கொண்டிருப்பவை. இவற்றிலும் குழு மனப்பான்மை, அறிவுச் ஜீவித்தனம், ஒரு சார்புத் தன்மை முழுதுமாக நீங்கிற்று என்று கூற இயலாது. ஆயின் கனமான சிந்தனைகள், அடர்த்தியான விஷயங்கள், மேலை நாட்டுச் சரக்குகளின் இறக்குமதிகள் முதலியன விளக்கமாக இடம்பெறுகின்றன. இவை வெகுசன இதழ்களை விடப் பன்மடங்கு கூடுதலான விலை உடையவை. மாத, காலாண்டு இதழ்களாக இவை வெளிவருகின்றன. வெகுசன இதழ்களின் எதிர்த் துருவங்களாக இவை இருப்பினும், இலக்கியம், கலை, பண்பாடு முதலியவற்றில் புதிய அணுகுமுறைகளைக் கொண்டு இலக்கியத்திற்கும் ஏனைய கலைகளுக்கும் புதிய வெளிச்சத்தைத் தொடர்ந்து தருபவை என்பதை மறுத்தற்கு இல்லை. இவை யாவுமே இலக்கியத் தளத்தை உயர்த்திப் பிடிப்பவை.

### வெகுசன இதழ்கள்

முப்பதுகளில் தொடங்கப்பட்டு மக்களின் செல்வாக்கு பெற்ற வெகுசன இதழ்களில் ஆனந்த விகடன், கலைமகள், ஆனந்தபோதினி, பிரசண்ட விகடன் முதலானவை குறிப்பிடத் தக்கன. ஜெமினி எஸ்.எஸ். வாசன் ஆனந்த விகடனை (1928) வெகுசன இதழ்களில் முதன்மையாகக் கொண்டு வர முயன்றார். கல்கி அதில் ஆசிரியராக இருந்தவர். கலைமகள் 1932இல் தொடங்கப்பட்டது. ஆர். நாராயணசாமி ஐயர் இதனைத் தொடங்கினார். ஆரணி குப்புசாமி முதலியார் ஆனந்தபோதினி (1932) இதழையும், நாரண. துரைக்கண்ணன் பிரசண்ட விகடன் இதழையும் (1932) ஆசிரியராக இருந்து நடத்திவந்தனர். கல்கி (1941) இதழை ரா. கிருஷ்ணமூர்த்தி (கல்கி) ஆசிரியராக இருந்து நடத்திவந்தார். இவை யாவும் முப்பதுகள் தொடங்கித் தமிழக மக்களின் பெரும் ஆதரவைப் பெற்றன. கதைகள், கட்டுரைகள், கவிதைகள், திரைப்பட விமர்சனம், துணக்குகள் முதலான இதழியலின் கூறுகளோடு பல்வேறு பொழுதுபோக்கு அம்சங்களும் இடம்பெற்றதால் தொடர்ந்து வெளிவரும் வாய்ப்பினைப் பெற்றிருந்தன.

தமிழ் வாசகர்களைப் பெரிதும் கவர்ந்த இதழான குமுதம் 1947இல் மாதமிருமுறையாகத் தொடங்கப்பட்டது. இவ்விதழ் ஆசிரியராக எஸ்.ஏ.பி. அண்ணாமலை இருந்தார். மாநில அளவில் விற்பனையில் முதலிடம் வகிக்கிறது. பொழுதுபோக்குக் கூறுகளைப் புதிது புதிதாக அறிமுகப்படுத்தியது. சில வார இதழ்கள் இவ்விதழின் சில கூறுகளைத் தமது இதழ்களுக்கு முன்மாதிரியாகக் கொண்டன. ஏனைய இதழ்களை விட விலை குறைவாக இவ்விதழ் விற்பனை செய்வது இதற்கு இருக்கும் பேராதரவைக் காட்டும். அந்த அளவிற்கு விரும்பிப் படிக்கப்படும் வார இதழ்களில் இன்றளவும் முன்னோடியாக விளங்குகிறது. குமுதம் அலுவலகத்தின் வளாகத்திலேயே தமிழ்வாணன் நடத்திய கல்கண்டு (1948) வெளிவருகிறது. பிறை இதழாகத் தொடங்கப் பட்டுப் பின்னர் வார இதழாக ஆன இவ்விதழ், கேள்வி-பதிலுக்கு எனத் தமிழில் அமைந்த ஒரே இதழ். லேனா தமிழ்வாணன் ஆசிரியர் பொறுப்பு ஏற்றபின் புதிய புதிய கருத்தோட்டங்களைக் கொண்டுள்ளது இவ்விதழ்.

தமிழகத்தில் கிராம மக்களையும் தன் செல்வாக்கால் கவர்ந்துள்ள இதழ் ராணி (1952) ஆகும். வாராந்தர ராணி என்ற பெயர் பூண்டு வாரந்தோறும் வெளிவரும் இவ்விதழ் மிகமிகச் சாதாரண மக்களையும் சென்றடையுமாறு செயல்பட்டு வருகிறது. படிப்போரன்றியும் பாமரரும் விரும்பிப் படிக்கும் வாசகத் தன்மை கொண்ட இவ்விதழை அ.மா. சாமி ஆசிரியர் பொறுப்பேற்று நடத்தி வருகிறார்.

எழுபதுகளில் எழுத்தாளர்களான மணியன், சாவி போன்றோர் தம் இதழ் அனுபவ முதிர்ச்சியால் இதழ்கள் தொடங்கினர். பொழுதுபோக்கு என்பதை மையப்படுத்தி இவர்கள் ஆசிரியராக இருந்து நடத்திய இதழ்கள் முறையே இதயம் பேசுகிறது, குங்குமம் ஆகியவையாகும். சாவி தம் பெயரால் 1978இல் வார இதழைக் கொண்டுவந்தார்.

எழுபதுகளுக்குப் பிறகு வந்த வார, மாத இதழ்கள் யாவும் பொழுதுபோக்கு என்ற தளத்தில் நின்று இதழ்களைக் கொண்டு வந்தன. அரசியல் கட்சிப் பின்னணியில் தாய் இதழ் வெளிவந்தது. எழுபதுகளின் தொடக்கத்தில் இதழ்களின் போக்கில் சில மாறுதலான தடம் அறிமுகமாகியது. அறுபதுகளின் இறுதியில் வெளிவந்த துக்ளக் அரசியல் உலகில் ஓரளவு பரபரப்பு ஏற்படுத்தியதற்குப் பிறகு, அரசியலை வைத்தே அரசியல் நடத்தும்படியான 'உண்மைச் செய்திகள்' என்ற வகையில் அது

தொடர்பாகவும் சமூக மக்களின் குறைகள், அரசியல் தலைவர்களின் போக்குகள் முதலியன குறித்தும் கடந்த இருபது ஆண்டுகளில் சில இதழ்கள் வெளிவந்தன; இன்றளவும் வந்து கொண்டு இருக்கின்றன. புலனாய்வு இதழ்கள் என்ற வகையில் இவற்றை அடக்கலாம். நக்கீரன், ஜுனியர் விகடன், தராசு முதலியன அரசியல் சலசலப்பு, சமூகமக்களின் அன்றாட பிரச்சினைகள் ஆகியவற்றை அந்தந்தச் சூழ்நிலை நிகழ்வுகளை மையமாகக் கொண்டு செய்திகளை வெளியிட்டு வருகின்றன. தேர்தல் காலங்களில் இவற்றின் கவனம் பரபரப்பு ஊட்டும்.

**நாளிதழ்கள்**

அன்று தொட்டு இன்று வரை நாளிதழ் படிக்கும் பழக்கம் இருந்துவந்துள்ளது. வணிக நோக்கத்தை முதன்மையானதாகக் கொண்டாலும் வெகுசன ஊடகங்களின் வகைகளில் நாளிதழ் தனக்கென்று ஓர் இடத்தைக் கொண்டதாகும். மக்களுக்குச் செய்திகளை முந்தித் தருவதில் நாளிதழின் பங்கு தொடர்ந்து கொண்டுதான் இருக்கிறது. நாளிதழ்களில் தினமணி, தினத்தந்தி, மாலை முரசு, தினமலர், தினகரன் முதலியவை இன்று வரை வெளிவந்து கொண்டிருக்கும் நாளிதழ்களாகும்.

திரு. சதானந்தத்தின் முயற்சியால், டி.எஸ். சொக்க லிங்கத்தை ஆசிரியராகக் கொண்டு 1934இல் வெளிவந்த தினமணியில் 1943க்குப் பிறகு ஏ.என். சிவராமன் ஆசிரியரானார். அண்மைக் காலமாக அதன் ஆசிரியர் பொறுப்பை ஏற்றிருப்பவர் இராம. சம்பந்தம். செய்திகளை நடுநிலையோடு அணுகிவரும் இந்நாளேடு படித்தோர் மத்தியில் வரவேற்பைப் பெற்றுள்ளது.

தினத்தந்தியின் மூலவர் சி.பா. ஆதித்தனார். தந்தி என்ற பெயரில் 1942இல் வெளியிடப்பட்ட இதழே, நாளடைவில் மாற்றம் பெற்றுத் 'தினத்தந்தி'யாக மலர்ந்தது. செய்திகளைப் பாமரரும் படிக்கக் கூடிய நடை எளிமை கொண்டது. கருத்துப்படம், படக்கதை போன்றவற்றால் வெகு சனங்களை ஈர்த்தது. திரைப்படங்கள் தொடர்பான செய்திகள். அவற்றின் விளம்பரங்கள் தந்தியில் தனித்த சிறப்புப் பெறும் வகையில் அமைந்துள்ளமை படிக்காதோரையும் சென்றடையும் படியான திறன் கொண்டது. தினத்தந்தி தமிழகமெங்கும் நன்கு அறிமுகமான இதழாகவுள்ளது.

தினத்தந்திக்கு இணையாகப் படங்களையும், செய்திகளையும் தந்து வணிகத்திலும் அதற்குப் போட்டியாக அமைந்த பத்திரிகை

தினமலர். இதன் நிறுவனர் டி.வி. இராமசுப்பையர். 6-9-1951ஆம் ஆண்டு தொடங்கப்பட்டது. திருவனந்தபுரத்திலிருந்து வெளி யிடப்பட்டது. 1957 முதல் திருநெல்வேலியிலிருந்து வெளிவர லாயிற்று. நாளிதழ்களின் விற்பனையில் முன்னணியில் இருக்கும் பத்திரிகைகளில் இதுவும் ஒன்று. புதிய உத்திகளைக் கையாண்டு இதழ்களின் விற்பனையைப் பெருக்கிற்று. புகைப்படங்களைப் பெரிய அளவில் துல்லியமாகவும் தெளிவாகவும் வெளியிட்டு வருவது அதற்குப் பக்க பலமாக இருந்துள்ளது. குறுகிய காலத்திற்குள்ளாகவே தமிழகத்தின் பெரிய நகரங்களில் பதிப்புகள் கண்ட பத்திரிகை இதுவாகும்.

தினகரன் கே.பி. கந்தசாமியை ஆசிரியராகக் கொண்டு வெளிவந்த நாளேடாகும். திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்புடைய பத்திரிகையாதலால், இயக்க அன்பர்களிடம் வரவேற்பு பெற்றது. முரசொலி 1954இல் தொடங்கப்பட்ட திராவிட முன்னேற்றக் கழக இதழாகும். கலைஞர் கருணாநிதி இதன் நிறுவனர். முரசொலி மாறனை ஆசிரியராகக் கொண்ட இந்நாளேடு கழகக் கண்மணிகளுக்கு ஏற்றவகையில் அரசியல் செய்திகளையும் கருத்துக் கருவூலங்களையும் வெளியிட்டு வருவதோடு, கலைஞர் எழுதிவரும் 'உடன்பிறப்புக்கு' என்ற பகுதி முக்கியத் துவம் பெறும் வகையில் தொடர்ந்து இடம்பெற்று வருகிறது. அனைத்து இந்திய அண்ணா தி.மு.க.வின் கொள்கைகளைத் தாங்கிவரும் நமது எம்.ஜி.ஆர். என்ற நாளேடும் குறிப்பிடும் படியான இதழாகும். புரட்சித் தலைவி ஜெ. ஜெயலலிதா இதன் நிறுவனராவார். இயக்கவழியிலான நாளேடுகள் இயக்கத் தோழர்களுக்காகவும் இயக்கக் கொள்கைகளைப் பரப்புவதற் காகவும் வெளியிடப்பட்டு வருவதால் அவர்களுக்கு என அமைந்த இதழ்களாகவே உள்ளன.

**மகளிர் இதழ்கள்**

மகளிரின் மேம்பாட்டுக்கான எண்ணங்கள் 19ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தோன்றத் தொடங்கின. மகளிர்க்குரிய உரிமை, கல்வி, சமூகச் சீர்திருத்தம் முதலியன வற்புறுத்தப்பட்டன. 1860இல் திருச்சியிலிருந்து அமிர்தபாபு என்ற பெண்மணியை ஆசிரியராகக் கொண்டு 'அமிர்த வசனி' என்னும் இதழ் வெளிவந்தது. தமிழ் இதழியல் வரலாற்றில் முதல் பெண் ஆசிரியை என்ற பெருமை இவருக்கு உண்டு. 1870இல் விவேக விளக்கம் என்ற இதழ் வெளிவந்தது. இதில் வெளிவந்த கட்டுரைகள் பெண்களின் முன்னேற்றம் குறித்தவை. பெண்கல்வி,

குழந்தை மணம் போன்றவை தொடர்பான கட்டுரைகள் இடம்பெற்றிருந்தன.

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் மாதர் மனோரஞ்சனி (1901) வெளிவந்தது. 1905இல் பாரதியாரை ஆசிரியராகக் கொண்டு சக்கரவர்த்தினி என்னும் இதழ் வெளியாயிற்று. தமிழ் மாது (1906), பெண்கல்வி (1912), கல்பதரு (1917) ஆகிய இதழ்கள் இக்காலகட்டத்தில் வெளியான மகளிர் இதழ்களாகும். பெண்கல்விக்கு முக்கியத்துவம் அளித்துவந்த இதழ்களில் குறிக்கத்தக்கனவாய் சிந்தாமணி (1924), தமிழ்மாது (1928) ஆகியன வெளிவந்தன. தமிழ்ப்பெருமாட்டி (1931), கிரகலட்சுமி (1937), மாதர் மறுமணம் (1936) ஆகிய இதழ்கள் குறிப்பிடத்தக்கன.

மகளிர் இதழ்கள் மகளிராலேயே நடத்தப்பட்டதாகவும் தெரிகிறது. 1921இல் வெளிவந்த இந்தியத் தாயும் 1924இல் சிந்தாமணியும் முறையே சு. லட்சுமி அம்மாள், வி. பாலாம்பாள் ஆகியோரால் நடத்தப்பட்டன. இந்தியத்தாய் என்ற பெயருக்கு ஏற்ப, அதில் நாட்டுப்பற்றும் சமூக நலம் பற்றிய செய்திகளும் வெளிவந்தன. சிந்தாமணி இதழில் பெண்களின் முன்னேற்றம் குறித்த கட்டுரைகள் மிகுதியும் இடம்பெற்றன. மாதர் மறுமணம் என்னும் இதழை மு. மரகதவல்லி தொடங்கினார். பெண் உரிமை, மகளிரின் மறுமண உரிமை ஆகியன பற்றிய செய்திகள் இடம்பெற்றன. பொது வாசிப்புக்குரிய வகையில் மகளிர் தொடர்பான செய்திகள் கிரகலட்சுமி இதழில் வெளிவந்தன.

காலந்தோறும் மகளிருக்கான முன்னேற்றம் இதழ்களில் வற்புறுத்தப்பட்டன. விடுதலைக்கு முன்னும்பின்னும் உள்ள கால கட்டங்களில் பெண்கள் ஆண்கள் போலவே பல துறைகளில் பணியாற்ற வேண்டும் என்ற கருத்து வெளிப்பட்ட நிலையில் பல இதழ்கள் மகளிர்க்குரிய தனிப்பகுதி தொடங்கின. உழைக்கும் பெண்களின் வறுமையும் துயரமும் பற்றி எழுதின. மகளிர்க்குரிய பொதுச் செய்திகளும், பொழுதுபோக்குக் கூறுகளும் மகளிர் இதழ்களில் எழுதப்பட்டன மங்கை, பெண்மணி, மங்கையர் மலர், ராஜம், குமுதம் சிநேகிதி, அவள்விகடன் முதலானவை இவ்வகையில் சுட்டத்தக்கன. இவை தவிர மகளிர் சிந்தனை, மகளிர் குரல் போன்றவையும் உலா வரத் தொடங்கின. ஆங்கிலப் பெயரைத் தமிழில் தலைப்பாகக் கொண்டு வெளிவரும் 'லேடிஸ் ஸ்பெஷல்' முதலிய இதழ்கள் இன்றைய இதழ் உலகில் இடம்பெற்றுள்ளன.

## சிறுவர் இதழ்கள்

சிறுவர்க்கான இதழ்கள் மிகப் பயன்பாடுடைய கல்வியையும் படிக்கும் ஆர்வத்தையும் உண்டாக்கவல்லன; அறிவுத்தேடலையும், பண்பாட்டையும் வளர்ப்பதற்கான ஆக்கக் கூறுகளோடு பொழுதுபோக்குத் தன்மையையும் அளித்து வருவதில் சிறுவர்க்கான இதழ்களின் பங்களிப்பு மிகுதியாகும். 1840இல் வெளிவந்த பாலதீபிகை என்னும் இதழ்தான் முதன்முதல் வெளிவந்த சிறுவர் இதழாகும். காலாண்டு இதழான இவ்விதழ், நாகர்கோவிலிலிருந்து வெளிவந்தது. கிறித்துவ சமயத்தார் சார்பில் வெளியிடப்பெற்றது. பாலியர்நேசன் (1859) யாழ்ப்பாணத்திலிருந்து வெளிவந்த சிறுவர் இதழாகும். சென்னை பள்ளிக்கூடப் புத்தக சங்கத்தார் விவேக சிந்தாமணி (1891) என்னும் சிறுவர் இதழை வெளியிட்டனர். இது அறிவியல், பொது அறிவு பற்றிய சிறுவர்க்கான செய்திகள் கொண்ட இதழாகும். ஜனவிநோதினி, பாலர் தூதன், பாலியர் மித்திரன், பாலிய மஞ்சரி முதலானவை ஏறக்குறைய இதே காலகட்டத்தில் (19ஆம் நூற்றாண்டு) வெளிவந்தன.

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் சிறுவர் பகுதியைச் சில பத்திரிகைகள் தொடங்கின. தமிழ்நேசன், பால விநோதினி, பால வித்யா போன்றவையும், கலைமகள், ஆனந்த விகடன், கல்கி ஆகிய இதழ்களும் சிறுவர் பகுதியைத் தொடங்கி வெளியிட்டுவந்தன. வரகவி அ. சுப்பிரமணிய பாரதி, சிறுவர் பகுதியை இதழ்களில் கொண்டுவந்தவர்களில் முன்னோடி ஆவார்.

பாப்பா மலர் (1924), அணில் (1944) முதலியவை அன்றைய காலகட்டங்களில் பரவலாக அறியப்பட்ட சிறுவர் இதழாகும். அதன் பின்னர் இருபது ஆண்டுகளுக்குள் பல்வேறு சிறுவர் இதழ்கள் தோன்றின. குருகுலம், கண்ணன், டமாரம் முதலியன சுட்டிக்காட்டத்தக்கன.

பெருஞ்சித்திரனார் அறுபதுகளில் தொடங்கிய தமிழ்ச் சிட்டு சிறுவர்களுக்கு நல்ல தமிழில் இலக்கியத்தையும், பிற செய்திகளையும் அளித்தது.

எழுபது, எண்பதுகளில் சிறுவர் இதழ்களில் மாறுதலான போக்குகள் காணப்பட்டன. அரும்பு, அம்புலிமாமா, இந்திர ஜால காமிக்ஸ் போன்ற இதழ்களில் சிறுவர்களின் ஆர்வம் பெருகும்படியான கதைகள் வெளிவந்தன. தொண்ணூறுகளில்

சிறுவர்க்கான பகுதியைத் தனி இதழாக வெகுசன இதழ்கள் கொண்டுவந்தது ஒரு மாற்றமாகும். இவ்வகையில் தினமலர், தினமணி, தினத்தந்தி முதலிய இதழ்கள் வாரந்தோறும் சிறுவர் இதழ்களான இணைப்பு இதழை வெளியிட்டு வருகின்றன.

கோகுலம், பூந்தளிர், துளிர், பாலமித்ரா, ரத்னபாலா, சுட்டி விகடன் முதலிய சிறுவர் இதழ்கள் குறிப்பிடத்தக்க அளவில் பொழுதுபோக்கு என்றளவில் மட்டுமின்றி அறிவியல் செய்திகளையும் உலகச் செய்திகளையும், பொது அறிவு போன்றவற்றையும் படைத்தளிக்கின்றன. சிறுவர் இதழ்களில் படக்கதைகள் வழியே கதைகளையும், வரலாற்று நிகழ்ச்சி களையும் சுவையூட்டும்படி தருவதைக் காணமுடிகிறது. வண்ணப் படங்களும் பயிற்சிக்கான பகுதிகளும், போட்டிகளும் இடம் பெற்று மாணவர்களை ஈர்த்துவருவதையும் அறியலாம். பொழுதுபோக்குக் கூறுகளாக இவற்றில் சிறுவர்கள் பெரிதும் சிந்தை செலுத்துவதால் சிறுவர் இதழ்களை அவர்களுக்கு ஏற்றவாறு பத்திரிகையும் வடிவமைத்துத் தருகிறது.

### பிற இதழ் வகைகள்

சாதி சங்கங்களுக்கு முன்னுரிமை தந்து பல இதழ்கள் இருபதுகளிலும் முப்பதுகளிலும் வெளிவந்தன. இதழுலகில் அவை இற்றை நாளில் பெரிதும் ஆதிக்கம் செலுத்தவில்லை. இருப்பினும் ஒவ்வொரு சாதிக்கும் ஒரு பத்திரிகை இருக்கத்தான் செய்கின்றது.

தொழில்துறை சார்ந்த இதழ்கள் பல்கி வருகின்றன. இவ்வகையில் தலைமை வகிப்பது சோதிட இதழ்களே. சோதிட இதழ்கள் கடந்த பத்தாண்டுகளில் பல வடிவங்களில் உருவெடுத்துள்ளன. இதற்கு அடுத்த நிலையில் மருத்துவ இதழ்கள் பெருகியுள்ளன. சித்த மருத்துவம், ஆயுர்வேதம், யுனானி, ஆங்கில மருத்துவம், ஹோமியோபதி முதலிய மருத்துவத் துறைகள் ஒட்டு மொத்தமாகவும் தனியாகவும் இதழ்களாக வருகின்றன. இதுபோல் விளையாட்டுத் துறை, வேளாண் துறை முதலிய துறை சார்ந்த இதழ்கள் வெளிவருகின்றன.

## வானொலி

ஊடக வளர்ச்சியில் வானொலியின் பங்கு இன்றியமையாதது. இருபதுகளின் தொடக்கத்தில் (1920) அறிவியலின் துணையால்

வானொலி உருவாயிற்று. அந்நியர் ஆட்சியின்போது இந்தியாவில் வானொலி நிலையங்கள் தொடங்கப்பட்டன. 1930இல் அரசு ஒலிபரப்பு வானொலிக் கழகம் ஆங்கில ஆட்சியில் தொடங்கப் பட்டாலும் அதன் பிறகு 1936இல்தான் 'அகில இந்திய வானொலி நிலையம்' என்று அழைக்கப்பட்டுத் தனி நிறுவனமாக அரசு கட்டுப்பாட்டின்கீழ் வந்தது. 1947க்குப்பின் இந்திய அரசு பல இடங்களில் வானொலி நிலையத்தைத் தொடங்கியது. சென்னை வானொலி நிலையம் அப்போதுதான் உருவானது. 1957இல் அகில இந்திய வானொலி நிறுவனம் 'ஆகாசவாணி' என்று அழைக்கப் பட்டு வந்தது. ஆகாசவாணி பின்னர் தமிழாக்கம் செய்யப்பட்டுச் 'சென்னை வானொலி நிலையம்' எனத் திருத்தம் பெற்றது.

செவியால் கேட்டு நுகரும் செய்திகளும் பிறவும் மக்களைச் சிந்திக்கவும், செயல்படவும் செய்ததோடு, சிறந்ததொரு பொழுதுபோக்குத் தன்மைகளைக் கொண்ட மிகச் சிறந்த ஊடகமாக விளங்கியது. வானொலி ஒலிபரப்பு நிகழ்ச்சிகள் பல பயன்பாடுடையனவாயும், மிகத் தேவையானவையாயும் உள்ளன. சின்னத்திரை அறிமுகமாவதற்கு முன் வானொலியே எல்லாத் துறையினர்க்கும் ஈர்ப்புடையதாயிற்று. நாட்டு நடப்புகளை அறிந்து கொள்ள, இசை நிகழ்ச்சிகளைக் கேட்டு இன்புற, பொழுதுபோக்கான பிற கூறுகளைச் செவிமடுத்து இன்புறச் செய்யும் வானொலி, வீட்டுக்குள்ளும் வெளியிலுமாக மக்களோடு நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தது; கொண்டிருக்கிறது.

ஒருகாலகட்டத்தில் இலங்கை வானொலி தமிழகத்தில் மிக்க வரவேற்பைப் பெற்றிருந்தது. தமிழ்த் திரைப்படப் பாடல்கள் விளம்பரங்களூடே ஒலிபரப்பப்பட்டதால் இலங்கை வானொலி சுமார் நாற்பது ஆண்டுகளுக்கு மேலாகத் தமிழ் மக்களின் நெஞ்சங்களில் நீங்காத இடம்பிடித்தது. தமிழகத்தில் விவித பாரதி என்னும் பிரிவான 'வர்த்தக ஒலிபரப்பு' (1969) தொடங்கப்பட்டபோது அதுவும் மக்களுக்குப் பிடித்தமாக இருந்ததோடு, வானொலி, வணிகநோக்கிலான வளர்ச்சியையும் கண்டது.

பல்வேறான மக்களுக்குப் பயன்படும் வகையில் அதன் ஒலிபரப்புப் பணி அமைந்துள்ளது. இசை, கல்வி, வேளாண்மை, இலக்கியம், நாட்டு நடப்பு குறித்த ஒலிபரப்புகள் பல வகைகளில் ஒலிபரப்பப்பட்டு வருகின்றன. இவற்றோடு பன்னாட்டு ஒலிபரப்பு உலக அளவில் மக்களை ஒருங்கிணைக்க ஏதுவாக

உள்ளது. வானொலிச் செய்திகள் உடனுக்குடன் மக்களுக்குத் தெரிவிக்கப்படும்போது நாட்டுநடப்புகளை அறியவும் முடிகிறது. கல்வி ஒளிபரப்பில், சிறுவர் முதல் முதியோர் வரையிலான பாடங்கள், இடம்பெற்று அவற்றைக் கற்பிக்கும் பணியினை ஆற்றுகின்றது வானொலி. சென்னை போன்ற தலைமை வானொலி நிலையங்கள் கல்வி ஒலிபரப்புகளைத் தயாரித்து வழங்குகின்றன. பள்ளிமாணவர், கல்லூரிக் கல்வி, அஞ்சல்வழிக் கல்வி, முதியோர் கல்வி ஆகியவற்றை ஒளிபரப்புவதன் மூலம் அதன் பங்களிப்பு அளப்பரிதாகவுள்ளது. கல்வி ஒலிபரப்பினைத் தயாரிக்கத் தனிக்குழு உண்டு. இன்று பெருகி வரும் அஞ்சல் வழிக் கல்வி ஒலிபரப்பு கடல் கடந்து வாழும் தமிழர்களுக்கும் பயனளித்துவருகிறது.

வானொலியின் பயன் ஒரு காலத்தில் மிகவும் கிராம மக்களால் போற்றப்பட்டு வந்தது. அகில இந்திய வானொலி நிலையம், கிராம வானொலி மன்றங்களை உருவாக்கி, பண்ணை, வேளாண்மை குறித்த செய்திகளையும் நாட்டுநலன் பற்றிய தகவல்களையும் வழங்கிவந்தது. முதியோர் கல்வியும் கிராம மக்களுக்கு வழங்கப்பட்டது. பசுமைப் புரட்சிக்கான முன்னேற்றம் குறிப்பாக வேளாண்மைத் திட்டங்கள், புது ரக விதைகளை அறிமுகம் செய்தல் முதலிய செய்திகள் 1966 இல் வானொலியில் தொடங்கப்பட்டன. மற்றும் கால்நடை வளர்ப்பு, கிராமக் கைத் தொழில், சுற்றுச்சூழல் முதலியவற்றை மக்களுக்கு வழங்கி வருகிறது. கிராம மக்களின் எதிர்பார்ப்புகளுக்கு ஏற்ற வண்ணம் அது இன்றும் செயல்பட்டுவருகிறது. குறிப்பாக அணைகளின் நீர்மட்டம், வேளாண்மைக்குத் தண்ணீர் திறந்து விடுவது, பண்ணைப் பராமரிப்பு போன்றவை இன்றளவும் கிராம மக்கள் ஆவலோடு எதிர்நோக்கும் செய்திகளாகும்.

இளைஞர்க்கான செய்திகளை வழங்கும் இளைய பாரதம், பெண்கள் பகுதியான மகளிர் நிகழ்ச்சி மற்றும் நேயர் கடிதம் முதலியனவும் வானொலியில் இடம்பெறுகின்றன. வானொலி நாடகங்கள், தொழிலாளர்க்கான நிகழ்ச்சிகள், குழந்தைகளுக் கான நிகழ்ச்சிகள் முதலியனவும் பாராட்டத்தக்க வகையில் வானொலியில் இடம்பெறுகின்றன. திரைப்படப் பாடல்கள் அலைவரிசை 1இல் நேயர்விருப்பமாகவும், வர்த்தக ஒலிபரப்பில் தேன்கிண்ணம் என்ற பெயருடனும் ஒலிபரப்பப்பட்டு வந்துள்ளன.

தமிழகத்தில் உள்ள வானொலி நிலையங்களில் பழமையானவை சென்னை, திருச்சி வானொலி நிலையங்களாகும். 'ப்ரச்சார் பாரதி மசோதா' என்று 1989இல் கொண்டுவரப்பட்டு அதன் பின்னர் தன்னாட்சி பெற்றுள்ளன. மின்னணுத் தொடர்பியல் சாதனங்களான வானொலியும் தொலைக்காட்சியும் அத்தன்னாட்சிக் குழு மூலம் கண்காணிக்கப்படுகின்றன.

## தொலைக்காட்சி

தொலைக்காட்சி தகவல் தொடர்பில் இன்று அசுர வளர்ச்சி அடைந்துள்ளது. ஒலியும் ஒளியும் இணைந்த ஊடகமாக விளங்கும் இது, இல்லத்திற்குள் திரையரங்காகச் செயல்படுவதால் சின்னத்திரை என்றே அழைக்கப்படுகிறது. எனவே, மக்கள் தகவல் தொடர்பில் திரைப்படம் என்ன பங்காற்றி வருகிறதோ, அதைப் போலச் சின்னத்திரையும் மக்களுக்குப் 'பெரிய' பொழுதுபோக்கு அம்சமாக உள்ளது.

முப்பதுகளின் மத்தியில் (1936) தொலைக்காட்சி வழி இங்கிலாந்தில் தகவல் ஒளிபரப்பு நடைமுறையில் இருந்துள்ளது என்பர். கறுப்பு வெள்ளையிலிருந்து வண்ணத்திரையில் ஒளிபரப்பை நிகழ்த்திய முதல் நாடாக (1953) அமெரிக்கா திகழ்கிறது. 1959இல் சோதனை முயற்சியாகத் தொலைக்காட்சி ஒளிபரப்பு டில்லியில் மேற்கொள்ளப்பட்டது. அறுபதுகளின் இறுதியில் தொலைக்காட்சி ஒளிபரப்பில் குறிப்பாக வட மாநிலங்களில் வேளாண்மைச் செய்திகள் இடம்பெற்றிருந்தன. எழுபதுகளில் வட மாநிலங்கள் சிலவற்றில் தொலைக்காட்சி மையங்கள் ஏற்பட்டன. 1975இல் தமிழ்நாட்டில் தொலைக்காட்சி ஒளிபரப்பு தொடங்கியது. 1976இல் 'தூர்தர்ஷன்' எனப் பெயரிடப் பட்டுத் தனி நிறுவனமாக அகில இந்திய வானொலியிலிருந்து பிரிக்கப்பட்டு இயங்கி வருகிறது.

மின்னணுவின் பல்வேறு தொழில் நுட்பங்களின் துணையால் இன்று தொலைக்காட்சி நிகழ்ச்சிகள் பல கிளைகளில் வளர்ச்சியடைந்த வண்ணம் உள்ளன. படிக்கின்ற பழக்கம், பார்க்கின்ற பழக்கமாக ஆனபோது, படித்தோரும், பாமரரும் கண்டு களிக்கக் கூடிய தகவல் தொடர்பு ஊடகமாகி இன்று இந்தியாவின் மூலை முடுக்குகளிலெல்லாம் 'வாமன வடிவிலும்' விசுவரூபமான வளர்ச்சி பெற்றுள்ளது. அதில் இடம்பெறும் நிகழ்ச்சிகள் எல்லாத் துறைகளையும் சார்ந்ததாக

உள்ளன. தொலைக்காட்சி ஒளிபரப்பில் முதன்மை இடம்பெறும் நிகழ்ச்சிகள் திரைப்படம் தொடர்பானவையும் (ஒளியும் ஒலியும்), தொடர் நாடகங்களும்தாம். தொலைக்காட்சி விளம்பரங்கள் தனிக்கவனம் பெறுவன; வணிக நோக்கின. எனவே, அதன் ஆளுமையும் தொலைக்காட்சியை நிறைத்து வருகிறது. தனியார் நிறுவனங்களான தொழில்வழி நிறுவனங்கள் செலவேற்பு விளம்பரங்களை மிகுந்த பொருட்செலவுகளில் போட்டிப் போட்டுக் கொண்டு வணிகத்திற்கான பெருக்கத்திற்கு வழிவகுத்துக் கொண்டுள்ளன.

தொலைக்காட்சிச் செய்தி அறிக்கைகள் பல நேரங்களில் ஒளிபரப்பப்படுகின்றன. உடனுக்குடன் செய்தியை நிகழ்ச்சிகளோடு காட்ட அறிவியல் வழியிலான செயற்கைக் கோள் பயன்பட்டு வருகிறது. ஒரு நிகழ்ச்சியை நாடு முழுவதும், உலகம் முழுவதிலும் காட்டக்கூடிய அளவிற்குத் தகவல் ஒளிபரப்பு மிகு வளர்ச்சி பெற்றிருக்கிறது.

கலை, இலக்கியம், மொழி, பண்பாடு ஆகியவை ஒளிபரப்பு நிகழ்ச்சிகளில் அவ்வப்போது இடம்பெறுகின்றன.

தொலைக்காட்சி அலைவரிசை (Channel) பலவாக உள்ளன. கம்பிவடத் தொலைக்காட்சி பகிர்வு வழி (Cables) பல நிறுவனங்கள் ஒளிபரப்புகின்ற நிகழ்ச்சிகளில் போட்டி மனப்பான்மை இடம்பெறக் காணலாம். தமிழகத்தில் மைய அரசின் கீழ்வரும் பொதிகை, தனியார் ஒளிபரப்பின் கீழ்வரும் சன் டி.வி., ராஜ் டி.வி., ஜெயா டி.வி., விஜய் டி.வி. முதலியன தத்தம் செயல்திறனால் நிகழ்ச்சிகளை முனைப்போடு வழங்குவதில் முனைந்துள்ளன. இவை வழங்கும் ஒளிபரப்புகளால் பொதிகை டி.வி.யும் அவற்றுக்கு இணையாகச் செயல்பட்டுவருகிறது.

தொலைக்காட்சி ஒளிபரப்பில் மக்களின் நுகர்ச்சிக்குத் தகுந்தவாறு நிகழ்ச்சிகள் வழங்கப்படுகின்றன. பொழுதுபோக்கு அம்சங்களையே மையமாக வைத்துச் செயல்பட்டு வருவதால், ஏனைய பயன்பாடு நிகழ்ச்சிகளைத் தருவதில் குறிப்பிட்ட கால வரையறையையும், நாள் வரையறையையும் பின்பற்றி வருவதைக் காணலாம். இந்திய மக்களின் நுகர்ச்சி முறை திரைப்பட வயப்பட்டிருப்பதால் அதற்கு முக்கியத்துவம் அளிக்கப்படுகிறது. இது ஒரு நுகர்வுப் பண்பாடாக மாறித் திரைப்படத்தில் பங்கேற்று நடிப்போரையும்/நடித்து வந்தோரையும் ஆட்கொண்டுள்ளது.

பிற மாநிலங்களிலும் தமிழகத்திலும் ஒளிபரப்பப்படும் தொலைக்காட்சிகளில் திரைப்பட ஆளுமை பெரிதாக இருந்தாலும், தொடர் நாடகங்களுக்கு மிகுந்த வரவேற்பு உள்ளது. கிராம, நகர்ப் புறங்களிலும் இது செல்வாக்கு பெற்று வருகிறது. எதிர்பார்ப்பும், ஆவலும் கூடிய கதைப்பின்னல் நிகழ்ச்சிகளைக் கொண்டும், பாத்திர வார்ப்புகளை மனத்தில் இருத்தியும் உருவாக்கப்படும் தொடர் நாடகங்கள் வெற்றி பெற்றிருப்பதோடு மிகுந்த ஆதரவும் அவற்றிற்கு இருந்துவந்துள்ளது. மிக நீண்ட தொடராக வெளிவந்த இதிகாசங்களான மகாபாரதம், இராமாயணம், சமூகத் தொடரான ஜூனூன், மற்றும் ஹம்லோக் முதலியன பெருத்த வெற்றி அடைய அவற்றுக்கு மக்களிடையே இருந்துவந்த செல்வாக்கே காரணம் எனலாம். தமிழில் தொடர் நாடகமான மங்கை முதலானவை மிகுந்த வரவேற்பைப் பெற்றன. இந்தியில் ஒளிபரப்பாகும் 'சக்திமான்' புகழ் பெற்ற சிறுவர் நாடகமாகத் தொடர்கிறது. சன் தொலைக்காட்சியில் ஒளிபரப்பப் படும் விசுவின் அரட்டை அரங்கம் பலரும் பாராட்டும்படியான விவாத மேடையாகும். தொலைக்காட்சியில் இடம்பெறும் பயனுள்ள அறிவியல் செய்திகள் 'டிஸ்கவரி' சானலில் காட்டப் பெறுகின்றன. அவை மொழிமாற்றம் செய்யப்பட்டுத் தமிழிலும் ஒளிபரப்பப் பெறுகின்றன. குறட்கருத்துகள் நாள்தோறும் இடம்பெற்றுள்ளன.

## திரைப்படம்

திரைப்படம் ஏனைய தகவல் தொடர்புகளை விட மிகவும் சக்தி வாய்ந்தது. முதன்மையான ஊடகமாக இதனைக் கருது வதற்குக் காரணமே அது மக்களை எளிமையாகவும், பரவலாகவும், விரைவாகவும் சென்றடையக் கூடியதாக இருப்பது தான். அதே சமயம் மக்களை எந்த வழியிலும் திசை திருப்பக் கூடிய ஆற்றல் அதற்கு உண்டு. காட்சிப்புலனைச் சார்ந்து இருப்பதால் கண்களுக்கு விருந்தாகிக் கருத்தால் ஈர்க்கவல்லதும், சிந்தனை இழந்து சிதைவுக்கு வழிவகுப்பதும் இத்தகைய ஊடகத்தால் நேர்ந்துவிடக்கூடும். மக்கள் மிகுதியான எண்ணிக்கையில் காணக்கூடிய ஊடகமாக இருப்பதால், இது ஊடகங்களில் தனி நிலை வகிக்கிறது. இது இன்றளவும் கனவுகளைத் தயாரித் தளிக்கும் நுகர்வுக் கலாச்சாரமாகவும் செயல்பட்டு வருகிறது.

19ஆம் நூற்றாண்டின் இறுதியில் முதல் திரைப்படம் மௌனப் படமாக மும்பையில் திரையிடப்பட்டது. இந்தியாவில்

தாதா சாகிப் பால்கே முதல் திரைப்படத்தைத் தயாரித்தவர். 'இராஜா அரிச்சந்திரா' (1912) இந்தியாவில் முதன்முதலாகத் திரைப்படமாக வெளியானது. நடராஜ முதலியார் என்பவர் இந்தியா பிலிம் கம்பெனியைத் தொடங்கி 'கீசகவதம்' (1916) என்ற படத்தைத் தயாரித்து வெளியிட்டார். தென்னகத்தில் தயாரிக்கப் பட்ட முதல் திரைப்படமும் இதுவே. 1922இல் பர்த்ஹேரி என்ற மௌனப்படம் வெளியிடப்பட்டுச் சிறப்பாக ஓடியது. மௌனப் படங்களின் காலகட்டங்களில் (1916-1931) திரைப்படங்களின் கதையமைப்பு வெறும் செயல் திறனுக்கே மதிப்பளிப்பதாய் இருந்தது. காட்சிகள் வழியிலான புரிதல்கள், சண்டை நிகழ்ச்சிகள், மலை ஏறுதல், தாவுதல், குதித்தோடல் மூலமாகவே கதைமாந்தர்கள் வெளிப்படுத்தப் பெற்றனர். முகங்களின் உணர்ச்சி பாவம், மெய்ப்பாடுகளை ஓரளவே காட்டியது.

மக்களுக்குத் தொன்மையான கதைகளையே வழங்கி வந்தனர். கதையமைப்பும் பெரும்பாலும் புராணம் தழுவியே இருந்தது. மக்களிடம் புழக்கத்தில் நன்கு தெரிந்த கதைகளே தொடக்க காலத்தில் செல்லுபடி ஆயின. இருபதுகளின் இறுதியில் 'ஜெனரல் பிக்சர்ஸ் கார்ப்பரேஷன்' கோவலன் கதையைத் திரைப் படமாக்கியது. மௌனப் படங்களின் இத்தகைய காலகட்டத்தில் பாட்லிங் மணி, ஸ்டண்ட் ராஜு முதலியோர் மக்களிடையே பிரபல நடிகர்களாகச் செல்வாக்கு பெற்றிருந்தனர்.

இந்தியாவில் பேசும்படமாகத் தயாரிக்கப்பட்ட ஆலம் ஆரா (1931) சென்னையிலும் திரையிடப்பட்டது. இந்தியாவின் முதல் பேசும் படம் என்ற மதிப்பைப் பெற்றது. தமிழில் முதல் பேசும்படம் காளிதாஸ் (1931) ஆகும். இப்படத்திற்குப் பின்னர் வெளிவந்த காலரிசி (1932) என்னும் படம் மொழிக்கலப்பு மிகுதியும் இல்லாமல் தமிழ் உரையாடலைக் கொண்டிருந்தது. முப்பதுகளிலும் நாற்பதுகளிலும் தமிழ்த் திரைப்பட உலகின் முடிசூடா மன்னர்களாக நடிகர்கள் தியாகராச பாகவதர், பி.யூ. சின்னப்பா முதலியோரும், நடிகைகளில் பி.பி. ராஜலட்சுமி, கண்ணம்மா முதலியோரும் திகழ்ந்தனர். தியாகராசர் நடித்த ஹரிதாஸ் போன்ற படங்கள் நீண்ட நாட்கள் ஓடின. அவர் காலத்தில் பாடலுக்கென்றே படங்களும் ஓடின. நடிகர்களே சிறந்த பாடகர்களாகவும் விளங்கினர்.

தமிழகத்தில் சேலம் மாடர்ன் தியேட்டர்ஸ், ஜெமினி முதலிய திரைப்பட இயக்ககம் தொடங்கப்பட்டபின் தமிழ்த் திரைப்படங்கள் பல தயாரிக்கப்பட்டன. ஏ.வி.எம். நிறுவனம்,

விஜயா வாகினி திரைப்பட இயக்ககம் போன்றவையும் அப்பட்டியலில் இடம்பெறுகின்றன. ஜெமினி ஒரு காலத்தில் பிரம்மாண்டமான படங்களைத் தமிழிலும் இந்தியிலும் தயாரித்துப் புகழ்பெற்றது.

தமிழில் பல படங்கள் சாதனை நிகழ்த்தியுள்ளன. வசனங்கள் அக்காலத்தில் வரலாறு படைத்தன. இளங்கோ, அண்ணா, கருணாநிதி ஆகியோர் திரைப்பட வசனத்தில் கொடிகட்டிப் பறந்த காலங்கள் மறக்கமுடியாதவை. கலைவாணர் என்.எஸ். கிருஷ்ணன் நகைச்சுவை நடிகராக விளங்கிப் புகழ்பெற்றவர். மக்களைக் கவரும் வேடங்களில் நடித்து மிகுதியான ரசிகர்களைப் பெற்றிருந்தவர் எம்.ஜி.ஆர். உலகின் மிகச்சிறந்த நடிகராகப் புகழ் பெற்ற சிவாஜி, விடுதலை வீரர்களையும், வரலாற்றுக் காவியத் தலைவர்களையும் அப்படியே நேரில் நம் நெஞ்சுக்குள் புகுத்திக் காட்டியதில் வெற்றி பெற்றவர்.

ஐம்பதுகள் தொடங்கி எழுபது வரையிலான தமிழ்த் திரைப்பட வரலாற்றில் நடிப்பு, வசனம், பாடல், காட்சியமைப்பு முதலியவை மிகுந்த கவனிப்புக்கு உள்ளாயின. தமிழ்த் திரைப்பட உலகில் இவ்விருபது ஆண்டுகளில், திராவிட இயக்கம் சார்ந்தோர் தம் பங்களிப்பை ஆற்றிவந்தனர். எம்.ஜி.ஆர்., எஸ்.எஸ். ராஜேந்திரன், கே.ஆர். இராமசாமி முதலியோர் அவ்வகையில் குறிப்பிடத்தக்கவர்கள். தன்மானத் தலைவர் பெரியார் கருத்துகளைத் திரையில் முழங்கிய எம்.ஆர். ராதாவும் குறிப்பிடவேண்டிய நடிகராவார். பாரதிதாசன், கம்பதாசன், சுரதா, பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம், கண்ணதாசன் முதலியோர் சிறந்த பாடலாசிரியர்களாகவும் திகழ்ந்தனர். இவர்களில் பாரதிதாசன், சுரதா, கண்ணதாசன் ஆகியோர் வசனங்களும் தீட்டியுள்ளனர். இவர்கள் தவிர அவ்விருபது ஆண்டுகளில் பாடல்கள் எழுதிவந்த தஞ்சை இராமையாதாஸ், உடுமலை நாராயணகவி முதலியோர் குறிப்பிடப்பட வேண்டியவராவர். வசன கர்த்தாக்களில் சக்தி கிருஷ்ணசாமி, ஏ.பி. நாகராஜன், சோலை மலை, ஏ.எஸ்.ஏ. சாமி, ஆரூர்தாஸ் முதலியோரும் குறிப்பிடத்தக்க பங்காற்றியவர்கள் ஆவர்.

எழுபதுகளுக்குப் பிறகு திரைப்பட உலகம் புதிய மாற்றங்களைக் கண்டது. கால மாற்றத்திற்கு ஏற்ப, தூய தமிழ் உரையாடல்களின் ஆதிக்கம் குறைந்து, இயல்பான பேச்சு மொழிக்கு மாறியது; நடிகர்களின் ஆளுமை வேறு

கோணங்களில் திசை திரும்பியது; அழகான தோற்றம் கொண்டிருப்போரே, கதாநாயகத் தகுதி பெறலாம் என்பதில் மாற்றம் காணத் தொடங்கியது. இயக்குநர்களின் செயல்திறமும், முனைப்பும், கூர்மைப் பார்வையும் கூடின. தொழில்நுட்பக் கருவிகளின் உதவியும் அவற்றின் பயன்பாடும் மிகுந்த அளவில் பங்கேற்றன. மிகுந்த பொருட்செலவில் படம் எடுப்பது என்பது வேறு திசைக்கு மாறியது. வெளிநாட்டில் படப்பிடிப்பு, பிரம்மாண்டமான காட்சி அமைப்பு, மின்னணுச் சாதனங்களின் பயன்பாடு முதலிய வகைகளில் பொருட்செலவு கூடியது. ஒரு நடிகர் நடித்த படங்கள் முன்பெல்லாம் அதிக அளவில் ஒரே ஆண்டில் வெளிவரும். அந்த நிலை மாறியது.

கடந்த இருபது ஆண்டுகளில் மேலே கூறிய வகைகளில் திரைப்பட வுலகம் இயங்கி வந்துள்ளது. தொழில் நுட்ப வளர்ச்சி காரணமாக வளர்ந்திருந்தாலும், பண்பாட்டுச் சிதைவுக்குத் தன்னை அவ்வுலகம் ஆக்கிக் கொண்டு மக்கள் நலனுக்கு ஊறு செய்யும் ஊடகமாகவும் மாறிவருகிறதோ என்ற ஐயப்பாட்டையும் எழுப்பியுள்ளது. வசனங்களின் இரட்டைப் பொருளும், ஆபாசப் பாடல்களும், இசை ஆதிக்கத்தில் அமுழ்ந்தும் பாடல் வரிகளும், கவர்ச்சி ஆடல்களும் அண்மைக் காலங்களில் பெருவரவாக மாறிவந்துள்ளதைப் பார்க்கும்போது மக்கள் நுகர்ச்சியும் மாறிவிட்டதோ என ஐயுற வைக்கிறது.

திரைப்படம் பற்பல உத்திமுறைகளால் சிறந்துள்ளதையும் எண்ணவேண்டும். நல்ல திரைப்படம் கவிதை போன்றது என்பர். அத்தகைய படங்கள் தமிழில் குறைவே. மக்களின் ரசனையைப் புரிந்துகொண்டு அதற்கேற்றவாறு காட்சிகளை உருவாக்கும் போக்கே அதிகரித்துவருகிறது. இதற்கிடையே சில நல்ல திரைப்படங்களும் அவ்வப்போது வெளிவருவது வரவேற்கக் கூடியனவாய் உள்ளன.

அண்மைக்கால திரைப்படங்களில் திரைக்கதை அமைப்பும், வசனங்களும் செம்மையாக இருந்துள்ளமையையும் காண முடிகிறது. வணிக நோக்கு முதன்மையாக இருந்தாலும், மாறுதலான போக்கில் திரைப்படம் தயாரித்து வந்ததையும் காணலாம். தயாரிப்பாளர்களே வசன கர்த்தாக்களாகவும், இயக்குநர்களாகவும் இருந்துவருவதைப் பன்முகப் பார்வையில் அணுக முடிகிறது. கூடுதலான பொறுப்பில் இவர்கள் கவனம் செலுத்த வேண்டியுள்ளது. டி. ராஜேந்தர், பாரதிராஜா, பாக்கியராஜ், மணிரத்னம் முதலியோர் இத்தகையினர்.

மகேந்திரன், பாலுமகேந்திரா, பாரதிராஜா, மணிரத்னம் படங்களில் கவித்துவமான காட்சி அமைப்புகளும் கதை கூறும் முறையும் செழுமையான முறையில் அமைந்துள்ளன. இயக்குநர்கள் சிலர் தம் பொறுப்பில் கூடுதலான பங்காற்றி நல்ல திரைப்படங்களைத் தருதற்கு முனைகின்ற போக்கையும் காணமுடிகிறது. ஆர்.டி. விக்ரமன், பார்த்திபன், உதயகுமார், சேரன், வஸந்த், தங்கர்பச்சான் முதலிய இளைய தலைமுறையினர் இத்தகையினர்.

கடந்த முப்பது ஆண்டுகளில் இசையமைப்பில் கே.வி. மகாதேவன், விசுவநாதன், இராமமூர்த்தி, சங்கர் கணேஷ் முதலியோர் குறிப்பிடவேண்டியவர்களாவர். இசையமைப்பில் சிறந்த சாதனை படைத்த இளையராஜா கிராமிய மெட்டுக்களைத் திரை இசையில் நன்கு அறிமுகப்படுத்தியதோடு, தானும் பாடகராக விளங்கியவர். இளைய வயதில் இமயம் அளவிற்குப் புகழின் உச்சிக்குச் செல்ல ஏ.ஆர். ரகுமானுக்குக் காரணமாக இருப்பவை மேலைநாட்டு, நம் நாட்டு இசைக் கலவைகளின் பின்னணி ஆகும். பழைய மெட்டுக்குப் புத்துருவம் கொடுத்து வருபவராகத் தேவா விளங்குகிறார். பின்னணிப் பாடகர்களான டி.எம். சௌந்திரராஜன், சீர்காழி கோவிந்தராஜன், சிதம்பரம் செயராமன், எஸ்.பி. பாலசுப்பிரமணியம், ஜேசுதாஸ் முதலியோரும் பாடகிகளான சுசீலா, ஜானகி, சித்ரா முதலியோரும் குறிப்பிடப்பட வேண்டியவர்களாவர்.

திரைப்படப் பாடல்களில் கடந்த இருபது ஆண்டுகளில் கண்ணதாசனுக்குப் பிறகு அத்துறையில் தங்களைத் தக்கவைத்துக் கொண்டவர்களாக வாலியும், வைரமுத்துவும் விளங்கி வருகின்றனர். வைரமுத்துவின் ஆளுமை, புதிய புதிய சொல்லாட்சிகளால் திரைப்படப்பாடல்களுக்குப் புதுமைப் பொலிவைத் தந்துள்ளது. புலமைப்பித்தன், முத்துலிங்கம், நா. காமராசன், மேத்தா, கங்கை அமரன், குருவிக்கரம்பை சண்முகம் ஆகியோரும் திரை இசைக் கவிஞர்களாக விளங்கினர். இன்றைய இளைய தலைமுறையினரில் பழநி பாரதி, முத்துக்குமார், தாமரை, வெ. கபிலன் முதலியோர் எழுதிவருகின்றனர்.

திரைப்பட உரையாடல்களில் நீண்ட உரையாடல்கள் அண்மைக் காலங்களில் தவிர்க்கப்பட்டு எளிமையும், கூர்மையும் கொண்டு அவை படைக்கப்பட்டு வருகின்றன. இலக்கியவாதிகள் சிலர் குறிப்பாக, சுஜாதா, பாலகுமாரன், ஞானக்கூத்தன், அறிவுமதி முதலியோர் சிற்சில படங்களுக்கு அவ்வாறு உரைநடை தீட்டியுள்ளனர்.

மிகப் பரவலான ரசிகத்தன்மையை எம்.ஜி.ஆருக்குப் பிறகு பெற்றிருப்பவர் ரஜினி. நடிப்பில் புதுமையையும், தொழில் நுட்பங்களில் புதிய உத்திகளைப் பயன்படுத்தியும் வருபவர் கமலஹாசன். இளைய தலைமுறையினர் மிகுதியான படங்களில் இடம்பெற்று வருகின்றனர்.

## கணினி

ஊடகங்களின் பன்முகவளர்ச்சியில் இணையமும் இணைகிறது. தமிழை உலகளாவிய தளத்திற்கு எடுத்துச் செல்வதற்குரிய நிலைப்பாடு வளர்ந்துள்ளது. பன்னாடுகளில் வாழும் தமிழர்களுக்குப் பயன்படும் வகையில் அதன் தகவலும், இலக்கியப் பரிமாற்றமும் கூடியுள்ளன. இணையத்தளம், இன்றுள்ள ஊடகங்களில் சிறந்த பங்கை ஆற்றுதற்குரிய சாத்தியக் கூறுகளைக் கொண்டுள்ளது. கணினியின் மொழிப் பயன்பாடு புதிய திசைகளைக் காட்டவல்லது. ஆங்கிலத்திற்கு அடுத்தபடியாக, மிகுதியான அளவில் இணையத் தளத்தில் பயன்படுத்தும் மொழியாகத் தமிழே விளங்கிவருகிறது. இதற்கு அடிப்படையான காரணம் புலம்பெயர்ந்த தமிழர்களின் பெரு முயற்சியே. உலகத் தமிழர்களை ஒன்றிணைக்க முயலும் இணையத் தளம் இன்று ஊடக அளவில் வெற்றிபெற்று வருகிறது.

மொழியைக் கற்கவும், கற்பிக்கவும், இலக்கிய அறிவு பெறவும் பெருந்துணை செய்வதாய் இணையத்தின் பங்களிப்பு உள்ளது. வெளிநாட்டில் வாழ் தமிழர்களுக்கும் அவர்தம் மழலை, சிறுவர் முதலியோர்க்கும் தமிழ் கற்பிக்கப் பயன்படுகிறது. எழுத்துப் பயிற்சி, சொற்பயிற்சி, தொடர்களை உருவாக்கும் திறன், உரையாடல் பயிற்சி, தமிழ் இலக்கண/இலக்கியப் பாடப் பயிற்சியும் அறிமுகமும் எனப் பல்வேறு பயிற்சிகளை அளிக்கிறது இணையம். இணையத்தின் மின் நூலகத்தால் தமிழ்நூல் பற்றிய விவரக்குறிப்புகள் கிடைக்கின்றன. தமிழ், தமிழர் வரலாறு, பண்பாட்டுச் செய்திகள் அனைத்தும் அடங்கிய தகவல் கருவூலமாக இணையத்தளம் உள்ளது. இது ஒருவகையில் ஆவணக் காப்பகமாகச் செயல்படுகிறது.

கணினியின் மிகப்பெரிய வளர்ச்சியால் அடுத்த காலக்கட்ட வளர்ச்சி நோக்கித் தமிழ் நடைபோடுகிறது. இதனை உலகத் தமிழர்கள் உணர்ந்த அளவிற்கு உள்ளூர்த் தமிழர்கள் இன்னும் உணர்ந்ததாகத் தெரியவில்லை. தமிழ்நாட்டு மக்கள் அதனைப் பரவலாக அறியும் வாய்ப்பைப் பெற்றாகவேண்டும்.

தமிழ்நூல்கள் பற்றி, இணையத்தில் பதிவு செய்யப்பட்ட முதல் நூல் திருக்குறள் ஆகும். திருக்குறள் பற்றி அனைத்துத் தகவல் அடங்கிய பதிவு வலைத்தளத்தில் தொகுக்கப்பட்டுள்ளது. அதன்வழித் திருக்குறள் உரை, விளக்கம், மொழிபெயர்ப்புகள், திருக்குறள் தொடர்பான நூல்கள், திருக்குறள் குறித்து இதுவரை வந்துள்ள ஆராய்ச்சிகள் முதலியன அதில் இடம்பெற்றுள்ளன. சங்க நூல்கள் சில இவ்வகையில் பதிவாக்கம் செய்யப்பட்டுள்ளன.

தமிழ் இணையத் தொகுப்பாளர்கள் இணையங்களைத் தமிழின் பயன்கருதித் தொகுத்துள்ளனர். திரு. கு. கல்யாணசுந்தரம், சரவணன், பசுபதி, மகேந்திரன், தாஜுதின், ப. திருநாவுக்கரசு முதலியோர் தமிழ் இணையத் தொகுப்பாளர்களாக உள்ளனர்.

தமிழ் இணையத்தின் முன்னோடிகளாக இருந்து பெரும்பெ பங்கை ஆற்றியவர்களாக நா. கோவிந்தசாமி, குப்புசாமி கல்யாணசுந்தரம், முத்து நெடுமாறன், ஜெயகிருஷ்ணன், இன்தாம் சௌரிராஜன், கிருஷ்ணமூர்த்தி, சுஜாதா, ஆண்டோபீட்டர், தெய்வசுந்தரம் முதலியோர் விளங்குகின்றனர்.

இணைய இதழ்கள் (மின் இதழ்கள்) பல வெளிவந்து கொண்டிருக்கின்றன. இது இணையம் பெற்றுள்ள வளர்ச்சியைக் காட்டுகிறது. விண்ணோசை, ஒளியோவியம், இலக்கியச் சாளரம், புத்தகம், சென்னைச் சுவர்கள், வளர்தொழில், தமிழ் கம்ப்யூட்டர் முதலானவை இவ்வகையின.

தமிழ் இணையம் பற்றிய மாநாடுகள் நடந்தேறி வருவதும் அதன் வளர்ச்சியைக் காட்டுகிறது. உலகத் தமிழ் இணைய மாநாடு, 1997இல் சிங்கப்பூரில் நடந்தது. தமிழ்நெட் என்ற இரண்டாம் மாநாடு சென்னையில் நடந்தேறியது. 'தமிழ் இணையம் 2000' சிங்கையில் மூன்றாவது மாநாடாக நடந்தது. கணினிப் பேரறிஞர்கள் தமிழைப் பல்வேறு கோணங்களில் இணையம்வழிக் கொண்டு செல்வதற்கான ஆக்கமுயற்சியைப் பற்றிக் கட்டுரைகள் படித்தனர்.

இணையத் தமிழ்ப் பல்கலைக்கழகம் (Tamil Virtual University) சென்னையில் அமைக்கப்பட்டது. இதன் இயக்குநராக முனைவர் பொன்னவைக்கோ திறம்படச் செயல்பட்டு வருகிறார். பல ஊடக முறைகள் இவ் இணையத்தில் உருவாக்கம் பெற்றுள்ளன.

தொழில்நுட்பப் பூங்கா (Tidal Park) 2000இல் சென்னை, தரமணியில் தொடங்கப்பட்டது. இத்தகவல் தொழில்நுட்பப்

பூங்கா இந்தியாவில் மிகப் பெரிய மென்பொருள் உருவாக்க மையமாகும். மற்றும் போலாரிஸ், விப்ரோ, பெண்டா மீடியா ஆகியவை மென்பொருள் உருவாக்க மையத்தை உருவாக்கித் திறம்படச் செயல்பட்டுவருகின்றன.

அரசு அலுவலகங்களிலும், கல்லூரி, பள்ளிகளிலும் கணினியின் பயன்பாடு கருதிக் கணினிமயமாக்குதலை அவை மேற்கொண்டு வருகின்றன. மென்பொருள் உருவாக்கத்தில் இன்று பல நிறுவனங்கள் வெற்றியடைந்துள்ளன. மின் அஞ்சலின் பயன்பாடும் தகவல் தொடர்பின் பெரும் பயன்களில் ஒன்றாகும். குறுந்தகடுகளின் வழி ஒலி, ஒளி விளக்கங்களுடன் தகவல் அறியலாம். பன்முகப் பயன்பாட்டுக்கு உரிய தகவல்களை அந்தந்தத் துறைகளுக்கு ஏற்ற வகையில் அமைத்துக் கொள்ளக் குறுந்தகடு துணைபுரிகிறது.

தகவல் தொடர்பில் அறிவியல் நுட்பத்தின் வழியிலான ஊடக வளர்ச்சி, இன்று உலகை உள்ளங்கையில் சுருக்கிக் கையடக்கமாக ஆக்கும் அளவிற்குப் பெருகியுள்ளது, இந்த நூற்றாண்டின் அரிய பெரிய முயற்சியாக விளங்கிவருகிறது. பழையன வற்றையும் புதுப்பித்துக் கொண்டு, புதிய கண்டுபிடிப்புகளிலும் சிந்தனை செலுத்தித் தகவல் தொடர்பால் உலகை ஒருங்கிணைக்கும் கணினிமய வளர்ச்சி மேலும் பல புதிய திசைகளைக் காட்டும்.

## இலங்கை

**செ. யோகராசா**

அச்சு ஊடகம் (Print Media), மின்பொறியியல் ஊடகம் (Electronic Media) என்ற அடிப்படைகளில் 19ஆம் 20ஆம் நூற்றாண்டு ஊடக வளர்ச்சி பற்றி அவதானிப்பது பொருத்த மானது. இவ்விருவகை ஊடக வெளிப்பாடுகள் பலவகைப்படு மாயினும் அச்சு ஊடக வெளிப்பாடுகளுள் பத்திரிகை (News paper), சஞ்சிகை (Magazine) என்பனவும் மின்பொறியியல் ஊடக வெளிப்பாடுகளுள் வானொலி, தொலைக்காட்சி ஆகியனவும் கவனத்திற்குட்படுத்தப்படுகின்றன.

## 19ஆம் நூற்றாண்டு ஊடக வளர்ச்சி

### அரசியல், சமூகப் பின்னணியும் ஈழத்தில் பத்திரிகையின் தோற்றமும்

19ஆம் நூற்றாண்டிலே ஈழத்தில் ஏற்பட்ட ஆங்கிலேயரது ஆட்சியினால் உருவான மாற்றங்களும் கிறிஸ்தவ சமயத்தைப் பரப்புவதற்கு எடுக்கப்பட்ட முயற்சிகளும் தமிழ்ப்பத்திரிகையின் தோற்றத்திற்கு வழிவகுத்தன. அத்துடன் அச்சுப் பயன்பாட்டு நடைமுறை விதிகள் தளர்த்தப்பட்டமை (1834) அதற்குப் பக்க பலமாக அமைந்தது.

மேற்கூறிய பின்னணியில் ஈழத்தின் முதல் தமிழ்ப் பத்திரிகையாக யாழ்ப்பாணத்திலிருந்து 1841இல் 'உதயதாரகை' வெளிவந்தது. கிறித்தவ சமயப் பிரச்சாரமே இதன் முதன்மை நோக்கமென்பது தெளிவானது. 'உதயதாரகை'யின் கிறித்தவ சமயம் பரப்புதல் தொடர்பான செயற்பாடுகளும் சுதேச மதங்களுக்கெதிரான நடவடிக்கைகளும் சுதேச மதத்தினர் மத்தியில் ஏற்பட்ட விழிப்புணர்ச்சியும் காலப் போக்கில் சைவ சமயத்தினரிடமிருந்தும் (எ-டு: இந்து சாதனம் - 1880), இஸ்லாம் சமயத்தவரிடமிருந்தும் (எ-டு: முஸ்லீம்நேசன் - 1882) பத்திரிகைகள் தோற்றம் பெற வழிவகுத்தன. கத்தோலிக்க சமயத்தினரும் தமக்கெனப் பத்திரிகைகள் ஆரம்பித்தனர் (எ-டு: சத்தியவேத பாதுகாவலன், 1876).

### பத்திரிகைகளினால் ஏற்பட்ட பெறுபேறுகள்

சமயநோக்குடைய பத்திரிகைகள் தோற்றம் பெறுவதற்கு முன்னர் (அச்சுப் பயன்பாட்டுத் தடை நீங்கிய 1834 தொடக்கம்) துண்டுப் பிரசுரங்கள் ஊடாக நிகழ்ந்த கிறித்தவ, சைவ சமயங்களின் மதப் பிரச்சாரச் செயற்பாடுகள் பத்திரிகைகளின் தோற்றத்தினால் பரவலான வட்டத்தினைச் சென்றடைந்தன.

முற்குறிப்பிட்ட பத்திரிகைகளின் முக்கிய நோக்கம் சமயப் பிரச்சாரமெனினும் பொது அறிவு சார்ந்த விடயங்களைப் பிரசுரிக்கும் முயற்சியிலும் அவை ஈடுபட்டன. உதயதாரகை தனது நோக்கம் பற்றிப் பின்வருமாறு எழுதியுள்ளமை அதற்குச் சான்றாகின்றது.

> "உதய தாரகை பத்திரிகையில் முக்கிய கற்கை சரித்திரம், பொதுவான கல்வி, பயிர் செய்கை, அரசாட்சி மாற்றம் முதலானவை

> பற்றியும் அச்சடிக்கப்படும்...... கல்வியே உலகத்தின் மிகப்பெரிய செல்வ மென்றும் பிரயோசனமுள்ள நூல்கள் தமிழ் மொழியிலே இல்லையென்றும் உள்ள சிலவும் பணக்காரர்களின் ஏகபோக உரிமையாக இருக்கிறதென்றும் இங்கிலீஷ் பள்ளிக்கூடங்களில் படிக்க முடியாதவர் களுக்கு இந்த அறிவைப் பெற்றுக் கொள்வது சாத்தியமில்லையென்றும் உலகச் செய்திகளைத் தங்கள்தங்கள் வேலை முயற்சிகளோடே அறிந்துகொள்ள பொது மக்களுக்கு வாய்ப்பில்லையென்றும் நினைத்ததாலும் மக்கள் பலவிதமான அறிவிலும் தேற வேண்டுமென்று கொண்ட தனாலும் இப்படி ஒரு பத்திரிகையை வெளியிட முயன்றோம்".

காலப்போக்கில் பொதுமக்கள் மத்தியிலே சமூக விழிப் புணர்ச்சி ஏற்படுவதற்கும் இப்பத்திரிகைகள் வழிவகுத்தன. கல்வியின் அவசியம், மதுபானத்தால் வரும் கேடுகள் முதலிய விடயங்கள் பற்றி இவற்றில் வெளிவந்த கட்டுரைகள் அதற்குக் காரணமாயமைந்தன.

தமிழ்மொழி, தமிழ் இலக்கியம் முதலான துறைகள் வளர்ச்சியடைவதற்கு இப்பத்திரிகைகளில் பிரசுரமான கட்டுரைகள் வழிவகுத்துள்ளன.

மேற்கூறிய விடயங்கள் கட்டுரை வடிவத்தினூடாகவே பெருமளவு வெளிப்பட்டன. இவ்விதத்தில் பத்திரிகைகளூடாகவே கட்டுரை இலக்கியம் ஈழத்தில் முதன்முதலாக அறிமுகமாயிற்று என்று கூறலாம்.

ஈழத்திலே நவீன தமிழிலக்கியத்தின் தோற்றமும் மேற்கூறிய பத்திரிகைகளூடாகவே முகிழ்த்தது. ஈழத்தின் முதல் நாவலான 'அசன்பே சரித்திரம்' முஸ்லீம் நேசனில் தொடர் கதையாக வெளிவந்தமையும், ஈழத்திலே சிறுகதை தோற்றம் பெறுவதற்குத் தடமமைத்த 'நன்னெறிக் கதா சங்கிரகம்' உதயதாரகையில் தொடராக வெளிவந்தமையும் இதற்குச் சான்றுகளாகின்றன.

ஈழத்தில் தமிழ் உரைநடைவளர்ச்சியிலே இப்பத்திரிகைகள் முக்கிய பங்காற்றி, பொதுமக்களுக்கேற்ற எளிமை வாய்ந்த - உரைநடை உருவாக்கத்திற்கு வழிகோலியுள்ளன.[4]

எ-டு. 'இந்து தேசச் சரித்திரம்'

> "இந்து தேசத்தில் இமையம், மந்தரம், விந்தம் காத்தாடி என்றும் விசேஷித்த மலை களுண்டு, அவற்றுள் முதலாவது இமைய பருவதம் வட அட்சம் 35 பாகையில் சிந்து நதியிற்றுவங்கி, இந்து தேசத்தின் வட மேற்கந்தமாகிய காசுமீரத்துக்கு ஊடாகச் சென்று தெற்காக 1000 மயில் தூரத்துக்குக் கர்வால், நேபாளமென்னும் தேசங்களுக்கு வடபக்கமாய் ஓடி பிரம்மபுத்திர நதிக் கப்பாலே இந்து தேசத்தின் கிழக்கந்தத் திலுள்ள அரக்கன் தேசத்தில் முடிகிறது.

மேற்கூறியவாறான உரைநடை வளர்ச்சி காலப்போக்கில் இலக்கியத்திற்கேற்றவாறான உரைநடை ஈழத்தில் உருவாக வழிவகுத்தது. இவ்விதத்தில் 'தீவிபத்து' பற்றி இடம் பெற்ற செய்தியொன்றின் உரைநடைப் பகுதியை இங்கு எடுத்தாள்வது பயனுடையது.[5]

> "சனிக்கிழமை யிரவு பூசையாகிச் சுவாமி எழுந்தருளப் பண்ணி கொடி மரத்துக்கு முன்னின்று தெற்கு நோக்கி உள் வீதி திரும்புஞ்சமயத்தில் சூலவிளக்கில் இருந்து அக்கினி தேவன் தூங்கிய வாகுமாலை வழியாய்ப் பந்தரிலேறித் தகனஞ்செய்யவெத் தனிக்கப் பகல் வத்தி வெளிச்சத்தாலும் தீவர்த்தியாலும் சற்று நேரம் தெரிய வில்லை. வெளியில் நின்றவர்கள் பந்தரில் நெருப்புப் பற்றிய தெனக் கூவ உள்ளே நின்றவர்கள் சண்டையாகுமென வெளியே யோட வெளியே நின்றவர்கள் உள்ளேவரக் கோபுரவாயிலிற் சந்தடியாய்ச் சனத்திரள் கூடிற்று........."

தவிர, மேற்குறித்த பின்னணியிலே பரவலான முறையில் பொதுமக்கள் உள்ளிட்ட வாசகர் கூட்டம் பத்திரிகை வாசிப் பிலும் புதிதாக உருவாகத் தொடங்கியமை குறிப்பிடத்தக்கது.

## 20ஆம் நூற்றாண்டு ஊடக வளர்ச்சி

### அரசியல், சமூகப் பின்னணியும் பத்திரிகைத் துறை வளர்ச்சியும்

ஈழத்துச் சுதேசிகள் மத்தியிலே குறிப்பாக 20ஆம் நூற்றாண்டின் முதல் ஐந்து தசாப்தங்களுக்கிடைப்பட்ட காலப் பகுதியில் சுதேசிய உணர்ச்சி உருவாகிப் படிப்படியாக வளர்ச்சி பெறத் தொடங்கியது. இத்தகைய சூழலில், சுதேசிய உணர்ச்சி யூட்டுதலையும் சமூக முன்னேற்றத்தையும் குறிக்கோளாகக் கொண்ட பத்திரிகைகள் முப்பதுகளிலிருந்து வெளிவரத் தொடங்கின. (எ-டு) யாழ்ப்பாணத்திலிருந்து ஈழகேசரி (1931), கொழும்பிலிருந்து வீரகேசரி (1931), தினகரன் (1932), தேசநேசன் (1929). ஈழகேசரி தனது வருகைக்கான காரணம்பற்றிப் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளமை மனங்கொள்ளற்பாலது.

> **"நமது நாடு அடிமைப் படுகுழியி லாழ்ந்து அன்னியர் வயப்பட்டு, அறிவிழந்து, மொழி வளங்குன்றி, சமயமிழந்து, சாதிப் பேய்க் காட்பட்டுச் சன்மார்க்க நெறியிழந்து, உன்மத்தராய், மாக்களாய் உண்டுறங்கி வாழ்தலே கண்டகாட்சியெனக் கொண்டாடு மிக்காலத்தில் எத்தனை பத்திரிகைகள் தோன்றினும் மிகையாகாது......"**

ஏறத்தாழ ஐம்பதுகளிலிருந்து ஈழத்துப் பத்திரிகை வளர்ச்சியில் ஏற்பட்ட மாற்றங்களுள் பின்வருவன கவனத்திற்குரியன:

* அரசியல் கட்சிகள் சார்ந்த பத்திரிகைகள் வெளிவருதல்:

எ.டு. தேசாபிமானி (கம்யூனிஸ்ட் கட்சி)
சுதந்திரன் (தமிழரசுக் கட்சி), 1947
தொழிலாளி (சீனக் கம்யூனிஸ்ட் கட்சி)

* பிரதேச நிலைப்பட்ட பத்திரிகைகள் வெளி வருதல் (அண்மைக்காலம் வரை கொழும்பு பிரதேசத்தை மையமாகக் கொண்டே பெருமளவு பத்திரிகைகள் வெளியாகியுள்ளன)

எ:டு. ஈழநாடு 1969.

* தமிழ்த் தேசிய நிலைப்பாட்டைச் சுட்டுவன.

எ:டு. திசை.

ஈழத்துப் பத்திரிகை வளர்ச்சிப் போக்கில் எண்பதுகளில் ஏற்பட்ட மாற்றங்களுள் பின்வருவன குறிப்பிடத்தக்கவை:

* தமிழீழ விடுதலை இயக்கங்கள் பத்திரிகைகள் வெளியிடுதல்:

எ:டு. புலிகளின் குரல்

புகலிட நாடுகளிலிருந்து ஈழத்தமிழரால் பத்திரிகைகள் வெளியிடப்படுதல்:

எ:டு. ஈழநாடு பாரீஸ் (1991)

தொண்ணூறுகளின் பின்னர் ஈழத்திலிருந்து வெளிவரும் வார, இரு வாரப் பத்திரிகைகளுள் சரிநிகர் (1990), தினமுரசு (1992) ஆகியன குறிப்பிடத்தக்கவை. இவற்றுள் 'தினமுரசு' பத்திரிகையின் தனித்துவம், காத்திரமான வாசகருக்கும் பொழுதுபோக்கு வாசகருக்கும் ஏற்ற பல்வேறுபட்ட விடயங்களைப் பிரசுரிக்கின்றமையாகும். சரிநிகரின் முக்கியத்துவம், அரசியல், கலை, இலக்கியம், பண்பாடு, சமூகம் சார்ந்த உயர்நிலை விமர்சனங்களைக் கொண்டு வெளிவந்தமையாகும். "உண்மையில் இதனை வெகுசனப் பண்பாட்டு வட்டத்திலிருந்து வரும் பத்திரிகைகளுக்கான ஒரு மாற்றுப்பத்திரிகையாகவே (Alternative Journal) கொள்ளவேண்டும்."[6]

## பத்திரிகைகளினால் ஏற்பட்ட பெறுபேறுகள்

ஈழத்தமிழரின் சமூக, அரசியல், பண்பாடு, வரலாறு என்பனவற்றை வெளிப்படுத்தும் முக்கியமான பதிவேடுகளாகப் பத்திரிகைகளே உள்ளன. குறிப்பிட்ட விடயங்கள் பெருமளவு எழுதப்படாத சூழலில் இவற்றின் முக்கியத்துவம் இரு மடங்காகிறது. (19 ஆம் நூற்றாண்டுப் பத்திரிகைகளுக்கும் இவ்விடயம் ஏற்புடையது)

ஈழத்தில் நவீன இலக்கியத்தின் தோற்றம், வளர்ச்சி என்பனவற்றில் பின்வரும் விதங்களில் இப்பத்திரிகைகள் முதன்மை இடம்பெறுகின்றன.

அ. ஈழத்து எழுத்தாளரது பொருளாதாரப் பிரச்சினை, விற்பனைப் பிரச்சினை முதலான காரணங்களினால் பெருமளவு நூல்கள் வெளிவரமுடியாத சூழ்நிலையில் அவர்களது முக்கியமான பிரசுரகளமாகத் திகழ்ந்தமை.

ஆ. 'ஈழத்து இலக்கியம்' என்ற உணர்வின் முகிழ்ப்பிலும் வளர்ச்சியிலும் ஈழத்துப் பத்திரிகைகள் கணிசமான பங்காற்றியமை (எ:டு) பேராசிரியர் கைலாசபதி பிரதம ஆசிரியராக விளங்கிய காலத்தில் வெளியான தினகரன் (1957-1960). ஈழத்தில் முற்போக்குச் சஞ்சிகைகள் வெளிவராத காலப்பகுதிகளில் முற்போக்கு எழுத்தாளர் உருவாக்கத்தில் இப் பத்திரிகைகள் (எ:டு சுதந்திரன், தினகரன்) காத்திரமான பங்களிப்பினை நல்கியமை. ஈழத்து விமர்சன வளர்ச்சியில் (குறிப்பாக அறுபதுகள், எழுபதுகளில்) குறிப்பிடத்தக்கதோர் இடத்தினை வகித்துள்ளமை (எ.டு. பேராசிரியர்கள் கைலாசபதி, சிவத்தம்பி ஆகியோரது கட்டுரைகள் 'தினகரன்' பத்திரிகையில் வெளியானமை).

மேற்கூறிய ஆரோக்கியமான பத்திரிகைச் சூழலில் காத்திரமான வாசகர்வட்டம் பத்திரிகைகளூடாக மேற் கிளம்பியமையால் ஈழத்தில் சிறுசஞ்சிகைகளுக்கும், பத்திரிகை களுக்குமான இடைவெளி குறைந்து போனது.

ஈழத்து உரைநடை வளர்ச்சிப் பரிணாமத்தில் (19ஆம் நூற்றாண்டு போன்று) 20ஆம் நூற்றாண்டில் பத்திரிகை வளர்த்த உரைநடையும் முக்கிய இடம் பெற்றுள்ளன.

**சஞ்சிகைகள்**

பொதுவாக, சஞ்சிகை வளர்ச்சியினைப் பொழுதுபோக்குச் சஞ்சிகைகள், சிறப்புச் சஞ்சிகைகள் என்று இருவகைப்படுத்தி அவதானிக்க முடியுமாயினும் ஈழத்தினைப் பொறுத்தளவில் பொழுதுபோக்குச் சஞ்சிகைகள் வெளி வருவதில்லை என்பது மனங்கொள்ளத்தக்கது. சிறப்புச் சஞ்சிகைகள் பலவகைப்படுமா யினும் அவற்றுள் இலக்கியச் சஞ்சிகைகளே அதிகளவு வெளியாகி யுள்ளன. இவையே விரிவான கவனிப்பை நாடி நிற்கின்றன.

மேற்குறித்தவாறான இலக்கியச் சஞ்சிகைகளின் தோற்றம் நாற்பதுகளின் பிற்கூறிலிருந்தே இடம் பெறுகின்றது. நவீன கல்வி முறையில் ஏற்பட்ட மாற்றம் (இலவசக் கல்வி அறிமுகமானமை யினால் குறிப்பாகக் கிராமத்து இளைஞர் பலர் நவீன கல்வி பெறும் வாய்ப்பு ஏற்பட்டது), அரசியல் கட்சிகளின் தோற்றம் (எ-டு: 1943இல் கம்யூனிசக்கட்சி உதயமானமை), சோல்பரி குழுவினரின் சிபாரிசுகளால் உருவான அரசியல் விழிப்புணர்ச்சி,

தமிழ்நாட்டுச் செல்வாக்கு (எ-டு : நவீன கவிதை முன்னோடியான பாரதியார் நவீன இலக்கிய எழுச்சியின் குறியீடாக இங்குக் கருதப் பட்டமை), ஈழகேசரிப் பத்திரிகை ஏற்படுத்தியிருந்த நவீன இலக்கிய நாட்டம் (எ-டு: சோ. சிவபாதசுந்தரம் ஆசிரியராக விருந்த காலத்து ஈழகேசரிப் பத்திரிகையின் இலக்கியச் செயற்பாடுகள்) முதலியன இத்தகைய சிறு சஞ்சிகைகளின் தோற்றத்திற்கான பின்னணியாக அமைந்தன.

மேற்குறித்த சூழலில் தோற்றம் பெற்ற இலக்கியச் சஞ்சிகைகளுள் மறுமலர்ச்சி (1946), பாரதி (1946) ஆகிய இரண்டும் குறிப்பிடத்தக்கன. யாழ்ப்பாணத்திலிருந்து வெளிவந்த மறுமலர்ச்சி (1946-48; ஏறத்தாழ 10 இதழ்கள்) ஈழத்தில் நவீன கவிதையின் தோற்றத்திலும் சிறுகதையின் (2ஆம் காலகட்ட) வளர்ச்சியிலும் முக்கிய இடம்பெற்றுள்ளது. கொழும்பிலிருந்து வெளியான பாரதி, ஈழத்தின் முதல் முற்போக்குச் சஞ்சிகை என்ற விதத்தில் கவனத்திற்குரியது.

ஐம்பதுகளுக்குப் பிற்பட்ட இலக்கியச் சஞ்சிகை வளர்ச்சியில் கலைச்செல்வி (1958), முற்போக்குச் சஞ்சிகைகளுள், புதுமை இலக்கியம் (1956), மரகதம் (1961), மல்லிகை (1966), மார்க்சிய எதிர்நிலைச் சஞ்சிகைகளுள் அலை (1976), பிரதேசச் சஞ்சிகைகளுள் மலர் (மட்டக்களப்பு 1970), தீர்த்தக்கரை, நந்தலாலா, மலைநாடு (1980), அரசியல் கட்சி சார்ந்த சஞ்சிகைகளுள் (தமிழரசுக்கட்சிச் சார்புடைய) சுடர், (தமிழீழ விடுதலை இயக்கங்களில் சஞ்சிகைகளான) பாலம், நெருப்பு, சுதந்திரப் பறவை, பெண்நிலைவாதச் சஞ்சிகைகளுள் நிவேதினி, பெண் (1996), புகலிடச் சஞ்சிகைகளுள் தூண்டில் (1985), சிந்தனை (1986), கவிதைக்கான சஞ்சிகைகளுள் கவிஞன் (1969), கவிதை (1990) முதலியன விதந்துரைக்கப்பட வேண்டியன.

இலக்கியச் சஞ்சிகைகளுக்கு அடுத்ததாக வெளிவருவன வற்றுள் ஆய்வுச் சஞ்சிகைகள் முக்கியமானவை. (அ) கல்வி, கலை, இலக்கிய அமைப்புகளால் வெளியிடப்படுபவை (ஆ) உயர் கல்வி நிறுவனங்களால் வெளியிடப்படுபவை என இவ்வகைச் சஞ்சிகைகளை இருவகைப்படுத்தி நோக்கலாம்.

மேற்கூறியவற்றுள் முதற்பிரிவிற்குச் சிறந்த எடுத்துக்காட்டாக அமைபவை ஞாயிறு (யாழ்ப்பாண ஆரிய திராவிட பாஷாபி விருத்திச் சங்கம் - 1993), கலா நிலையம் (1941), அறிவொளி (1960), ஊற்று (1972) ஆகியவை. இவற்றுள் முதலிரு சஞ்சிகைகளிலும்

பண்டிதர்கள், வித்துவான்கள் ஆகியோரால் எழுதப்பட்ட கலை, இலக்கியக் கட்டுரைகள் இடம்பெற்றன. 'ஊற்று', அறிவியல், மருத்துவம், இலக்கியம் முதலான பல்துறை சார்ந்த கட்டுரைகளைக் கொண்டு வெளிவந்தது.

பல்கலைக்கழகஞ்சார்ந்த ஆய்வுச் சஞ்சிகைகளுள் 'சிந்தனை' (1976) (ஆரம்பத்தில் பேராதனை பல்கலைக்கழகமும், இப்போது யாழ்ப்பாணப் பல்கலைக்கழகமும் வெளியிடுவது) குறிப்பிடத் தக்கது. தவிர, ஈழத்தின் ஒவ்வொரு பல்கலைக்கழகத் தமிழ்ச் சங்கமும் வெளியிட்டுவரும் ஆய்வுச் சஞ்சிகைகள் பல உள. இவை ஆசிரியர்கள், மாணவர்கள் ஆகிய இருசாராரது ஆக்கங்களையும் தாங்கி வெளிவருபவை. இத்தகையனவற்றுள் 'இளங்கதிர்' (பேராதனை, 1948) நீண்ட கால வரலாறுடையது. பேராசிரியர்கள் கணபதிப்பிள்ளை, கைலாசபதி, சிவத்தம்பி, இந்திரபாலா முதலான குறிப்பிடத்தக்க ஈழத்து ஆய்வாளர் பலரது படைப்புகளைத் தாங்கி வெளிவந்தது; இப்போதும் வெளிவருகின்றது.

அரசு சார்பான நிறுவனங்கள் அவ்வப்போது வெளியிட்டு வரும் ஆய்வுச்சஞ்சிகைகள் சிலவும் கவனத்திற்குரியன. இவற்றுள் முன்னர் வெளிவந்த ஸ்ரீலங்கா 'அரசாங்க செய்திப்பிரிவு' (1948), இப்போது வெளிவரும் பண்பாடு (இந்து சமய, கலாசார திணைக் களம், 1988) ஆகியன குறிப்பிடத்தக்கவை.

சிறப்புச் சஞ்சிகைகள் என்ற விதத்தில் ஏனைய துறைகளான சோதிடம், மருத்துவம், அறிவியல், கல்வி, கலைகள், சிறுவர் இலக்கியம், சினிமா, விளையாட்டு முதலியன் தொடர்பான சஞ்சிகைகள் ஈழத்தில் மிக அரிதாகவே வெளிவருகின்றன. முற்கூறிய இலக்கியச் சஞ்சிகைகள் கூட அண்மைக்காலத்தில் குறைந்த எண்ணிக்கையிலேயே வெளியாகின்றன (எ-டு: மல்லிகை, மூன்றாவது மனிதன்). நாடகக்கலை தொடர்பாக இப்போது வெளிவரும் சஞ்சிகைகளும் (எ-டு: ஆற்றுகை, நீண்ட காலமாக வெளிவரும் கலைமுகம்) கவனத்திற்குரியன. தவிர, ஈழத்துத் தமிழ் எழுத்தாளரது ஆங்கில ஆக்கங்கள் தாங்கிக் கடந்த சில வருடங்களாக வெளிவரும் Third Eye சஞ்சிகையின் வரவும் முக்கியத்துவம் வாய்ந்ததொன்றாகும்.

மேற்கூறியவாறு நோக்கும்போது இலக்கியச் சஞ்சிகைகளே கவனத்திற்கொள்ளப்பட வேண்டியனவாகும். இவ்விடயத்தில் பின்வரும் விடயங்கள் அவதானிக்கப்படவேண்டும்.

ஈழத்து நவீன இலக்கிய வளர்ச்சியின் தோற்றத்திலும் காத்திரமான பன்முகப்பட்ட வளர்ச்சியிலும் இவை முதன்மை இடம் பெறுகின்றமை. மேலும், பத்திரிகைகளில் ஏற்பட்ட பெறுபேறுகள் பற்றிக் கூறப்பட்ட விடயங்கள் இத்தகு சஞ்சிகைகளுக்கும் ஏற்புடையனவே.

எனினும், பிரதேச எழுத்தாளர்கள் ஊக்குவிப்பு, சிறந்த இளம் எழுத்தாளர்களை இனங்காணல், நவீன ஓவியம், சினிமா முதலிய கலைகளிலே சிரத்தை, தரமான மொழிபெயர்ப்புகள் முதலான விடயங்களில் இவற்றின் பங்களிப்பு மிக முக்கியமானது.

பெண் நிலைவாதச் சிந்தனைகள், புகலிட எழுத்தாளரது படைப்பாற்றல் என்பனவற்றை வெளிப்படுத்துவனவும் இத்தகைய சஞ்சிகைகளேயாம்.

எண்பதுகளிலிருந்து முனைப்புற்ற தமிழ்த் தேசியவாதச் சிந்தனைகளின் கலை இலக்கிய வெளிப்பாட்டிற்கு ஈழத்துத் தமிழ்ப் பத்திரிகைகள் இடமளிக்க முடியாத சூழலில் அவற்றின் பிரசுரகளமாகத் திகழ்ந்தவையும் சஞ்சிகைகளே என்பது குறிப்பிடத்தக்கது.

## மின் பொறியியல் ஊடகங்கள்

ஈழத்தில் அரசினால் நடத்தப்பட்டுவரும் 'இலங்கை வானொலி' ஒலிபரப்புச் சேவை 1925இல் ஆரம்பிக்கப்பட்டாலும் குறிப்பாகத் தமிழ்ச் சேவை ஐம்பதுகள் அளவிலேயே கவனிப்பிற்குரிய தொன்றாக வளர்ச்சி எய்திற்று எனலாம். இவ்இலங்கை வானொலி தமிழ்ப்பிரிவு இருவகைப்பட்ட ஒலிபரப்புகளை, 'தேசிய சேவை, வர்த்தக சேவை' என்ற பெயர்களில் நடத்தி வருகின்றது.

ஏறத்தாழ கடந்த ஈராண்டுகளாகத் தமிழ் வானொலி ஒலிபரப்புச் சேவைகள் (எ-டு: 'சூரியன் எவ்.எம்', 'சக்தி எவ்எம்', 'சுவர்ணஒலி') தனியார் நிறுவனங்களாலும் ஆரம்பிக்கப்பட்டு நடத்தப்பட்டு வருகின்றன. இவையாவும் 24 மணித்தியால ஒலிபரப்பினை நடத்தி வருகின்றன. ஈழத்திலிருந்து புலம்பெயர்ந்து ஐரோப்பா, கனடா, ஆஸ்திரேலியாவில் வாழ்கின்ற தமிழர் களாலும் வானொலி ஒலிபரப்புச் சேவைகள் அண்மைக்காலத்தில் ஆரம்பிக்கப்பட்டுள்ளன (எ-டு : சர்வதேச வானொலி சேவை- ஐரோப்பா).

மேற்கூறியவாறு நோக்கும்போது பின்வரும் விடயங்கள் கவனத்திற்குரியனவாக அமையலாம்.

விவசாயம், சமயம், அறிவியல், சுகாதாரம், கல்வி, நாட்டு நடப்பு முதலான பலதுறை அறிவுசார் விடயங்கள் பொதுமக்கள் மத்தியில் இலகுவில் சென்றடைதல்.

இலக்கிய வளர்ச்சி என்ற விதத்தில் பின்வரும் நிகழ்ச்சிகள் குறிப்பிடத்தக்கனவாக அமைந்துள்ளன.

இலக்கிய விமர்சனம் இலக்கிய ஆய்வு என்பன இடம் பெறுதல் (எ-டு: எழுபதுகளில் இடம்பெற்ற கலைக்கோலம் எண்பதுகளில் இடம்பெற்ற கலைப்பூங்கா).

வானொலிக் கவியரங்குகள் இடம்பெறுதல் (இவை; ஐம்பது அறுபதுகளில் முக்கிய இடம்பெற்றிருந்தன).

மெல்லிசைப் பாடல்கள் ஒலிபரப்பப்படுதல் ('பொப்' இசைப்பாடல்களுக்கு மாற்றாக அறுபதுகள் அளவில் இவை உருவாக்கப்பட்டன).

இளம் எழுத்தாளர் கவிஞர் உருவாக்கம் நிகழ்தல் (எ-டு : இளைஞர் மன்றம், 'நாளைய சந்ததி' நிகழ்ச்சிகள்).

இலங்கை வானொலி வர்த்தக சேவை, விளம்பரத்துறையில் ஐம்பதுகள், அறுபதுகளில் மிகுந்த செல்வாக்கற்ற நிலையினைப் பெற்றிருந்தது. இவ்விதத்தில் கி.பொ. மயில்வாகனன் முதலானோரின் அறிவிப்புத்திறன் காரணமாக இவ்வர்த்தக சேவை தமிழ்நாட்டிலுள்ளோரது கவனத்தையும் ஈர்த்திருந்தது.

அண்மையில் ஆரம்பிக்கப்பட்ட முற்குறிப்பிட்ட தனியார் வானொலி ஒலிபரப்புகள் பொதுமக்கள் மத்தியில் வெகுசனப் பண்பாட்டுக்குரிய ரசனையை வளர்க்கின்றன.

## தொலைக்காட்சி

ஈழத்தில் தொலைக்காட்சிச் சேவை எழுபத்தெட்டில் ஆரம்பமாயிற்று. எனினும், தமிழுக்கான குறுகிய நேர ஒதுக்கீடு காரணமாக இத்தகைய சேவையில் அதிக நிகழ்ச்சிகள் இடம்பெறவில்லை.

ஏறத்தாழ கடந்த ஈராண்டுகளாகத் தனியார் தொலைக்காட்சித் தமிழ் ஒளிபரப்புச் சேவைகள் (எ-டு: சக்தி) ஆரம்பிக்கப்பட்டு பொதுமக்கள் மத்தியில் மிகுந்த செல்வாக்குப் பெற்றுவருகின்றன.

இரசனை நிலையில் மாற்றம் ஏற்பட்டுள்ளமை (தமிழ்நாட்டு நாடகங்கள், சிங்கள நாடகங்கள் என்பனவற்றை அதிகம் பார்க்கின்ற வாய்ப்பினை இத்தகைய ஒளிபரப்புகள் ஏற்படுத்தியுள்ளன).

அறிவுசார் விடயங்களை அறியும் வாய்ப்பு பரவலாகியமை (எ-டு : ரூபவாஹினி சேவையின் Discovery ஒளிபரப்பு).

முடிவுரை

இதுவரை கூறப்பட்ட, ஈழத்தின் 19ஆம் 20ஆம் நூற்றாண்டு ஊடக வளர்ச்சியினை அதே காலகட்டத் தமிழ்நாட்டு ஊடக வளர்ச்சியுடன் ஒப்பிடும் போது கவனத்திற்குரிய தனித்துவப் பண்புகளாகப் பின்வருவன. அமைகின்றன.

பொழுதுபோக்குச் சஞ்சிகைகள் ஈழத்திலே மிகுதியாக வெளிவருவதில்லை (இதற்கான வியாபாரச் சூழல் இங்கு உருவாகியிருக்கவில்லை). இவ்வாறு கூறும்போது, பொழுது போக்கு வாசகர்கள் ஈழத்தில் இல்லை என்பது பொருளன்று. மாறாக அத்தகையோரது தேவை தமிழ்நாட்டு இறக்குமதிச் சஞ்சிகைகளால் (குமுதம், ஆனந்த விகடன் முதலியன) பூர்த்தியடைகின்றது என்பது நினைவுகூரத்தக்கது.

சிறப்புச் சஞ்சிகைகளுள் இலக்கியச் சஞ்சிகைகள் மட்டுமே ஈழத்தில் வளர்ச்சி கண்டுள்ளன.

அத்தகைய இலக்கியச் சஞ்சிகைகளின் வரவிலும் ஏறத்தாழ கடந்த ஐந்தாண்டுகளாகத் தேக்கநிலை ஏற்பட்டுள்ளது.

ஆரோக்கியமான விதத்தில் பெண் நிலைவாதச் சிந்தனைகளை வெளிப்படுத்தும் பெண்கள் சஞ்சிகைகள் ஈழத்திலே வெளிவருகின்றன.

புலம்பெயர்ந்து வாழும் ஈழத்தவரால் புகலிட நாடுகளிலிருந்து வெளியிடப்படும் இலக்கியச் சஞ்சிகைக்கள் தமிழ்ச் சஞ்சிகை வரலாற்றில் ஈழத்திற்கு முக்கியமானதொரு இடத்தை வழங்கியுள்ளன.

தமிழ்ச் சஞ்சிகை வரலாற்றில் ஈழத்திலிருந்து வெளிவந்த தரமான நகைச்சுவை சஞ்சிகையான 'சிரித்திரன்', தமிழ் எழுத்தாளரது ஆங்கிலப் படைப்புகளைத் தாங்கி வெளிவரும் Third Eye என்பனவும் முக்கிய இடத்தைப் பெறத்தக்கனவாக உள்ளன.

## அடிக்குறிப்புகள்

1. உதயதாரகை,
2. இந்துசாதனம், யூன் 1891; முஸ்லீம்நேசன், பங்குனி 1993
3. புதினாலங்காரி, ஏப்ரல், 1877.
4. உதயதாரகை, 4.2.1941
5. இலங்கை நேசன், வைகாசி, 1879
6. சிவத்தம்பி, கார்த்திகேசு, 'தமிழ் இலக்கிய வரலாற்றில் இதழ்கள் - விரிவான ஆய்விற்கான முன் குறிப்புக்கள் சில' - தேசிகம்
7. கலைப்பூங்காவில் ஒலிபரப்பான சிறந்த இலக்கியப் பேச்சுக்கள் நூலுருப் பெற்றுள்ளன. பார்க்க கலைக்குரல்கள் (இலங்கை வானொலி கலைப்பூங்கா நிகழ்ச்சியில் ஒலிபரப்பான 21 முக்கிய கட்டுரைகளின் தொகுப்பு), கொழும்பு 1999.

## மேற்கூறப்பட்ட விடயந்தொடர்பாக வெளிவந்துள்ள முக்கியமான நூல்களும் கட்டுரைகளும்


1. சிவநேசச் செல்வன். ஆறுமுகம், இலங்கைத் தமிழ்ப் பத்திரிகைத் துறையின் தோற்றமும் வளர்ச்சியும் - 1930 ஆம் ஆண்டு வரை, முதுமாணிப்பட்டத்திற்கான ஆய்வேடு, பேராதனைப் பல்கலைக்கழகம் (1975), (நூலுருப் பெறவில்லை).
2. சிவகுருநாதன். இ., இலங்கையில் தமிழ்ப் புதினப் பத்திரிகையின் வளர்ச்சி, பாரிநிலையம் சென்னை, மு.ப. டிசம்பர், 1993.
3. சிவத்தம்பி. கார்த்திகேசு, தமிழில் இலக்கியச் சஞ்சிகை மரபும் சுபமங்களாவும், கலைஞர் முதல் கலாப்ரியா வரை (சுபமங்களா நேர்காணல்கள்), நர்மதா பதிப்பகம், ஜூலை 1997, பக். 521-538.
4. சிவத்தம்பி. கார்த்திகேசு, தொடர்பு ஊடகங்களில் தமிழ், (முகவாசகம்) கலைக்குரல்கள் (இலங்கை வானொலியில் கலைப்பூங்கா நிகழ்ச்சியில் ஒலிபரப்பான 21 முக்கிய கட்டுரைகளின் தொகுப்பு), கொழும்பு 1999, பக். 10-25.
5. சிவத்தம்பி. கார்த்திகேசு, தமிழ் இலக்கிய வரலாற்றில் இதழ்கள், விரிவான ஆய்விற்காக முன்குறிப்புக்கள் சில, தேசிகம் நமசிவாய தேசிகர் நினைவுமலர், யாழ்ப்பாணம் 1999, பக்.71-79.

6. யோகராசா. செ., இருபதாம் நூற்றாண்டு முடிவில் ஈழத்துச் சிறுசஞ்சிகை, கிழக்கொளி (25வது சிறப்பு இதழ்), மட்டக்களப்பு, 1999.

7. சிவம். கோப்பாய், இலங்கையில் தமிழ்ப் பத்திரிகைகள் சஞ்சிகைகள் (1841-1984) ஒருகையேடு, கிளிநொச்சி, 1985.

# மலேசியா

**எஸ். குமரன்**

இன்றுள்ள மலேசியத் தமிழ் இலக்கியமானது பிரதானமாகத் தமிழ் நாட்டுச் செல்வாக்கு வழியாக வந்த இலக்கியமேயாகும். டாக்டர் இரா. தண்டாயுதம் தமது தற்காலத் தமிழ் இலக்கியம் என்ற நூலில் இவ்வாறு கூறுகின்றார்: 'மலேசியத் தமிழ் இலக்கியமானது பெற்றோர் இல்லத்திலிருந்து புதுவாழ்வைத் தொடங்கப் புறப்படும் புதுமணத் தம்பதியர் போன்றதாகும்' என்றார். மலேசியாவில் தமிழ் இலக்கியத்தின் தொடக்க காலத்தை ஆராயும் வேளை அது தமிழ்நாட்டு இலக்கியத்தின் வளர்ச்சியின் பின்னணியாகவே இருந்தது எனலாம் (இரா. தண்டாயுதம், 1983 : 111).

1821-இல் பினாங்கு மாநிலத்தில் எழுந்த தமிழ்ப் பள்ளிகளின் மூலமாகவே மலேசியாவில் தமிழ் மொழியும் இலக்கியமும் வேரூன்றத் தொடங்கின (இராம. சுப்பையா, 1959:25). இதன் தொடக்கமாகச் சிங்கப்பூர் இலவசப் பள்ளிகளிலும் (Singapore Free School), சிங்கப்பூர்க் கல்வி நிறுவனத்திலும் (Singapore Education Institute) தமிழ் வகுப்புகள் தொடங்கப்பட்டன. 1859-இல் சிங்கப்பூரில் பிற பள்ளிகளிலும் மலாக்காவிலும் தமிழ் வகுப்புத் தொடங்கப்பட்டது.

1872-இல் லெனாக்கிலுள்ள நிபாங் ரெபாலிலும் (Nibong Tebal) தோட்டத் தொழிலாளர் பிள்ளைகளுக்கென ஒரு தமிழ்ப் பள்ளி நிறுவப்பட்டது. அதுமுதல் படிப்படியாகப் பல தமிழ்ப் பள்ளிகள் நிறுவப்பட்டு, 1922-இல் மொத்தம் 122 தமிழ்ப் பள்ளிகள் நாட்டில் இருந்தன. இன்று ஏறக்குறைய 530 தமிழ்ப் பள்ளிகள் உள்ளன.

## இதழ்கள்

தமிழ் நாளிதழ்கள் என்று பார்க்கும்போது தற்போது நமக்குக் கிடைத்துள்ள முதல் நாளிதழாக உலக நேசன் (1877) விளங்குகிறது. இதனை அடுத்து சிங்கை நேசன் வெளிவந்தது. இவ்விரண்டு இதழ்களும் வார இதழ்களாக வெளிவந்தன. உலக நேசனுக்கு முன்பாகச் சிங்கை வர்த்தமாணி (1875) என்ற நாளிதழ் வெளிவந்ததாகச் சிங்கை நேசனில் வந்த செய்தியின் மூலம் அறிய முடிகின்றது. தொடர்ந்து தேசாபிமாணி (பேராக்) (1896) மற்றும் பினாங்கு வர்த்தமாணி (1897) ஆகிய இதழ்கள் வெளிவந்தன. இவை நாளிதழாகத் தினமும் வெளிவந்தன. 19-ஆம் நூற்றாண்டில் இந்நாளிதழ்களில் முக்கியச் செய்தியாக மலேசிய இந்தியச் சமுதாயம் தொடர்புடைய செய்திகள் அதிகமாக வெளிவந்தன. நாட்டின் முன்னேற்றத்தில் இந்தியச் சமுதாயத்தின் பங்கு, தைப் பூசத் திருவிழா, இந்தியர்களிடையே காணப்படும் வியாபாரப் போட்டிகள் போன்ற செய்திகளைப் பெரிதும் வெளிப்படுத்தின. இச்செய்திகள் இந்தியச் சமுதாயத்திற்கு விழிப்புணர்வை ஏற்படுத்தின. அவ்வப்போது வெளிநாட்டுச் செய்திகளாக இந்திய நாட்டுச் செய்திகளும் வெளியிடப்பட்டன.

20-ஆம் நூற்றாண்டில் வர்த்தமானை, விஜியன், ஞான சூரியன், ஜனோபகாரி, மஹாயுத்த சமாசாரம், சத்யவான், பாதுகாவலன் போன்ற பத்திரிகைகள் மலேசிய இந்தியச் சமுதாயத்தினரிடையே விழிப்புணர்வை ஏற்படுத்த முனைந்தன. கையெழுத்தைக் கொண்டு வெளிவந்த மஹாயுத்த சமாசாரம் என்ற நாளிதழ் முதலாவது உலகப்போரைக் குறித்துச் செய்திகளை வெளியிட்டது. தோட்டப்புறங்களில் தமிழர்கள் எதிர்நோக்கும் பிரச்சனைகளையும் எழுதியது. ஞானசூரியன் என்ற நாளிதழ் ஐரோப்பியர்கள் தோட்ட நிருவாகிகளாக இருந்து தமிழர்களுக்கு இழைத்த கொடுமைகளைக் கூறியது.

1920-களில் வெளிவந்த இதழ்களானப் பொதுஜன மித்திரன், சிந்தாமணி, கலியுக நண்பன் மற்றும் முன்னேற்றம் போன்ற இதழ்களும் தோட்டப் பாட்டாளிகளின் இன்னல்களை வெளிப் படுத்தின. பொதுஜன மித்திரனில் ஆசிரியர் பார்வையில் வாசகர்கள் சிறுசிறு தொழில்கள் தொடங்குமாறு ஊக்குவிக்கப் பட்டது. பெண்களின் முன்னேற்றத்தை ஊக்குவிக்கவே சிந்தாமணி என்ற நாளிதழ் தொடங்கப்பட்டது. கலியுக நண்பன் தமிழர்களை மலேசிய நாட்டைச் சொந்தநாடாக நினைக்கவும், இந் நாட்டிற்கு விசுவாசமிக்க குடிகளாகவும் இருக்கவேண்டும்

என்னும் அறிவுரையை முதன்முதலில் கூறியது. அதோடு மதுபானம் அருந்தும் பழக்கத்தை வெறுத்ததோடு மதுபானம் சம்பந்தப்பட்ட விளம்பரங்களையும் ஏற்காமல் இருந்தது. 1930-களில் தமிழர்களிடையே பெரிய மறுமலர்ச்சியை இவ்விதழ் ஏற்படுத்தியது எனலாம்.

1923இல் தமிழ்நேசன் தொடங்கப்பட்டது. இவ்விதழே இன்று வரையிலும் தொடர்ந்து வெளிவந்து கொண்டிருக்கும் நீண்டகாலப் பழைய நாளிதழாக விளங்குகின்றது. 1930இல் மலேசிய நாணயம் 60,000த்தை மூலதனமாகக் கொண்டு தொடங்கப்பட்ட அகில மலாயாத் தமிழ்ச் சமூக அச்சகச் சங்கம் 1931-இல் தமிழன் என்ற ஒரு நாளிதழை வெளியிட்டது. இந் நாளிதழில் தினச் செய்திகளோடு சிறுகதை, தொடர்கதை, கவிதை போன்றவை வெளிவரத் தொடங்கின. தொடர்ந்து தமிழவேள், கோ. சாரங்கபாணியின் தமிழ் முரசு வெளிவரத் தொடங்கியது. இந்நாட்டில் தமிழ் இலக்கியம் வளருவதற்கு இந்நாளிதழ் பெரிதும் பங்காற்றியது எனலாம். ஒரு காசு விலையில் விற்கப் பட்டதால் அதிகமான பிரதிகள் விற்கப்பட்டு தொடர்ந்து வளர்ச்சி கண்டது. 1940-இல் மலாயாவில் ஜப்பானியர் ஆதிக்கத்தில் மக்கள் பெரிதும் கொடுமைகளை அநுபவித்தனர். இக்கொடுமைகளை வெளிப்படுத்துவனவாக ஜெய பாரதம், சிந்தாபாத், புது உலகம், இளங்கதிர், இளம்பிறை, இடிமுழக்கம், உதய சூரியன், ஜெயமணி, இஸ்லாமிய இளைஞன், சிரம்பான் செய்தி போன்ற நாளிதழ்கள் வெளிவந்தன.

1950-களில் மலாயா நண்பன், களஞ்சியம், ஜனநாயகம், சங்கமணி, தேசநேசன் போன்ற இதழ்கள் வெளிவந்தன. இக்கால கட்டத்தில் மலேயத் தமிழ் இலக்கியத்தில் குறிப்பாகச் சிறுகதை வளர்ச்சியடையத் தொடங்கியது. உள்ளூர் எழுத்தாளர்களின் படைப்புகளும் தமிழ் நாட்டு எழுத்தாளர்களின் படைப்புகளும் வெளிவந்தன. தமிழ்நேசன் 'கதை வகுப்பு' என்று ஒன்றைத் தொடங்கி இளம் எழுத்தாளர்கள் சிறந்த எழுத்துக்களைப் படைக்க வழிகாட்டியது.

இவ்வகுப்பின் மூலமாகத் தரமான பல இளம் எழுத்தாளர்கள் உருவாகினர். அதேவேளை சிறுகதை எழுதும் போட்டிகளையும் நடத்தியது. 1959-இல் தமிழ்நேசன் தேசிய அளவிலான சிறுகதை எழுதும் போட்டியை நடத்தியது. அப்போட்டிக்கு 457 சிறுகதைகள் வந்தன. இதேபோன்று தமிழ் முரசும் வாராந்திரச் சிறுகதைப் போட்டியை நடத்தியது.

இக்காலகட்டத்தில்தான் தமிழ் முரசு 'மாணவர் மன்றம்' என்ற ஒரு பகுதியைத் தொடங்கி மாணவர்களுக்கென இரண்டு பக்கங்களை ஒதுக்கியது. தமிழ்ப் பள்ளிகளிலும் மன்றம் அமைக்கும் அளவிற்கு இம்மன்றம் மேம்பாடடைந்தது. இது இன்றுள்ள மலேசியத் தமிழ் இளைஞர் மணிமன்றம் அமைய தூண்டுகோலாக இருந்தது. தமிழ் இளைஞர் மணிமன்றத்தில் தற்சமயம் ஏறக்குறைய ஒரு இலட்சம் இளைஞர்கள் உறுப்பினராக உள்ளனர். மேலே குறிப்பிட்ட இளைஞர் மணிமன்றமே 1950-களிலும் 1960-களிலும் பல சிறந்த எழுத்தாளர்கள் உருவாகக் காரணமாக இருந்தது.

1960-களில் தமிழ் மலர், சக்தி, மலைநாடு, தேசதூதம் போன்ற பத்திரிகைகள் வெளிவந்தன. இவற்றுள் தமிழ் மலர் மட்டுமே தொடர்ந்து வெளிவந்து கொண்டிருந்தது. இக்கால கட்டத்தில் படைப்பிலக்கியம் வளர்ந்ததோடு மலேசிய நாட்டின் புதிய கொள்கைகள் குறித்த செய்திகளும் அதிகமாக இடம் பெற்றிருந்தன. அப்போதைய சிறுகதைகளில் மலேசிய இந்தியச் சமுதாயத்தைப் பாதித்த தோட்டத் துண்டாடல் பிரச்சனையே மையமாக இருந்தது.

1970-கள் மலேசிய இந்தியர்களுக்குப் போராட்டம் மிக்க ஒரு காலகட்டமாகும். இக்காலகட்டத்தில்தான் தோட்டத் துண்டாடல் பிரச்சனையின் எதிரொலியாக அதிகமான தோட்டத் தொழிலாளிகள் வேலைகளை இழந்துத் தோட்டங்களை விட்டு வெளியேற நேரிட்டது. குடியிருப்புகளையும் இழந்தனர். அதோடு சிவப்பு அடையாளக்கார்டு பிரச்சனையும் எழுந்தது. சிவப்பு அடையாளக்கார்டு பிரச்சனையே மிகப் பெரிய பிரச்சனையாக இருந்தது. இக்காரணத்தினாலேயே பலர் மலேசிய நாட்டை விட்டுத் தமிழகத்திற்குத் திரும்ப வேண்டிய கட்டாய நிலை ஏற்பட்டது. நாட்டுக் குடியுரிமையைப் பெரிதுபடுத்தாது வாழ்ந்த நிலையே இதற்குக் காரணமாக அமைந்தது.

எனவே, தமிழ் நாளிதழ்கள் குடியுரிமைப் பிரச்சனையை மையமாக வைத்தே சிறுகதைகளையும் கட்டுரைகளையும் வெளியிடத் தொடங்கின. இதன் மூலம் விழிப்புணர்வை ஏற்படுத்த முனைந்தன. தமிழ் நேசன், தமிழ் முரசு, தமிழ் மலர் இம்மூன்று நாளிதழ்களுமே நீண்ட காலமாக வெளிவந்து கொண்டிருந்தன. பிறகு தமிழ் முரசு சிங்கப்பூரில் மட்டும் வெளிவரத் தொடங்கியது. 1972 முதல் 1976 வரையில் தமிழ் நேசன் சிறுகதைப் போட்டியை நடத்திச் சிறந்த சிறுகதைகளுக்குத் தங்கப் பதக்கத்தைப் பரிசாகக்

கொடுத்தது. 1970-களில் தமிழ் நாளிதழ்களில் உள்நாட்டு அரசியல் குறித்த செய்திகள் வெளிவரத் தொடங்கின.

1980-களில் தமிழ் மலர், 'தினமணி' என்ற பெயரில் வெளிவரத் தொடங்கியது. அதோடு தமிழ் ஓசை என்ற ஒரு புதிய நாளிதழும் தொடங்கப்பட்டது. இந்நாளிதழ்களில் தமிழர்களின் குறைபாடுகள் குறிப்பாகத் தமிழ்ப் பள்ளிகளின் நிலை, மாணவர்களின் மனப்போக்கு, பெற்றோர்களின் மனப்போக்கு, ஆசிரியர்களின் மனப்போக்கு போன்ற செய்திகள் அதிகமாக வெளிவரத் தொடங்கின.

1990-கள் தொடங்கி நாளிதழ்கள் வழக்கமான சிறுகதைகள், கவிதை, கட்டுரை, சினிமா, அரசியல், பக்தி போன்ற பலதரப்பட்ட செய்திகளைத் தாங்கி வெளிவருகின்றன.

மலேசியாவில் ஒலிபரப்பு வரலாறு

1921-இல் மலேசியாவின் தெற்கு மாநிலமான ஜோகூர் மாநிலத்தில் ஏ.எல்.பெர்ச் (A.L. Birch) என்பவர் பிரிட்டனிலிருந்து ஒரு வானொலிப் பெட்டியை எடுத்து வந்தார். கப்பலில் உள்ள ஒலிபரப்புக் கருவியின் மூலமாக ஒலிபரப்பு நடந்தது. 1923-இல் ஜெஸீஹார் வயர்லெஸ் சங்கத்தின் (Johor Wireless Society) உறுப்பினர்கள் தங்கள் சக உறுப்பினர்களுக்காக மகிழ்ச்சியூட்டும் பாடல்களையும் உள்நாட்டுத் தகவல்களையும் ஒலிபரப்ப வானொலியைப் பயன்படுத்தினர். 1940-கள் வரையில் பினாங்கு, கோலாலம்பூர் மற்றும் பிற மாநிலங்களிலும் இச்சங்கத்தை நிறுவியதன் மூலம் வானொலி ஒலிபரப்பு பரவியது.

1925-இல் பெர்ட் சிங்கப்பூரில் முதல் வானொலி நிலையத்தை நிறுவினார். அதன்பிறகு 1935-இல் (சிங்கப்பூரில்) பிரிட்டிஷ் மலாயன் ஒலிபரப்புக் கூட்டுத்தலைமை (The British Malayan Broadcasting Corporation, BMBL)) நிறுவப்பட்டது. 1940-இல் மலாயா அரசாங்கம் இதனை ஏற்று நடத்தியது. ஐரோப்பாவிலும் ஆசியாவிலும் இரண்டாம் உலகப் போர் மூளும் என்ற அறிகுறி தென்படவே மக்களின் பாதுகாப்புக்கும் மற்றும் போர் சம்பந்தப்பட்ட தகவல்களைத் தரவும் இந் நிலையத்தை அரசாங்கம் ஏற்றுக்கொண்டது.

1941 முதல் 1945 வரை இரண்டாம் உலகப் போரின்போது மலாயாவிலிருந்த அனைத்து ஒலிபரப்பு நிலையங்களையும் ஜப்பான் கைவசப்படுத்திக்கொண்டது. 1945-இல் ஜப்பான் போரில் தோல்வி கண்டதும் இந்நிலையங்களைப் பிரிட்டிஷ்

இராணுவ நிர்வாகம் ஏற்றுக் கொண்டது. இக்காலகட்டத்தில் ஒரு நாளைக்கு 12 முறை செய்திகள் வழங்கப்பட்டன. ஆங்கிலம், மலாய், சீனம், தமிழ், இந்துஸ்தான், உருது, பிரெஞ்சு ஆகிய மொழிகளில் செய்திகள் வழங்கப்பட்டன.

1951-இல் தான் 'ஊரடங்கு ஒலிபரப்பு' மற்றும் 'புற நகர் ஒலிபரப்பு' என்று நாடு முழுவதும் ஆங்கிலம், மலாய், சீனம், தமிழ் ஆகிய நான்கு மொழிகளில் ஒலிபரப்பு செய்யப்பட்டன. 1957-இல் மலேசியா சுதந்திரம் பெற்றபின்பு வானொலி, தகவல், தேசிய திரைப்படம் ஆகிய இலாகாக்கள் பிரதமர் நிருவகிப்பில் சேர்த்துக் கொள்ளப்பட்டன.

''நாட்டின் வளர்ச்சியில் பங்குகொள்ள மக்களைக் குறிப்பாக நாளிதழ் தாமதமாக அல்லது கிடைக்காத இடங்களில் வாழும் மக்களை இணைப்பதில் வானொலி பெரிய பங்கை ஆற்ற வேண்டும்'' என்ற அப்போதைய பிரதமர் துன் ஹஜி அப்துல் ரசாக் உசேன் அவர்களின் வேண்டுகோளுக்கு இணங்க, 1961-இல் முதன் முதலாக வானொலி ஒலிபரப்புகள் நாட்டின் நான்கு முக்கிய மொழிகளான ஆங்கிலம், மலாய், சீனம், தமிழ் ஆகிய மொழிகளில் ஒலிபரப்பத் தொடங்கின. இதன் தொடர்ச்சியாகத் தான் சிவப்பு ஒலியலை அல்லது வானொலி 6 உதயமானது. இவ்வொலியலை தமிழ்மொழியை முக்கிய மொழியாகக் கொண்டு செயலாற்றியது. மற்ற மொழிகளான தெலுங்கு, மலையாளம், பஞ்சாபி ஆகிய மொழிகளும் அவ்வப்போது திரையிசைப் பாடல்களின் மூலம் வெளிப்பட்டன.

**வானொலி 6**

1938-இல் சிவப்பு ஒலியலை தொடங்கினாலும் 1946-இல் மலாயா வானொலி தொடங்கிய பின்புதான் அதன் வளர்ச்சியை வெளிப்படையாகக் காணமுடிந்தது. மலேசிய இந்தியர் களிடையே சமூக, பொருளாதார, அரசியல் மாற்றங்களைக் கொண்டு வந்ததில் வானொலி 6 பெரும் பங்காற்றியுள்ளது என்றால் அது மிகையாகாது. அதே வேளை மக்களுக்குத் தேவையான தகவல்களைக் கொடுப்பதிலும் அரசாங்கக் கொள்கைகளை வெளிப்படுத்துவதிலும் மற்றும் பயிற்றுநராகவும் மனமகிழ்ச்சி ஊட்டுவதிலும் வானொலி 6 ஆற்றிய பங்கை மறுக்க இயலாது. மலேசிய இந்தியர்களிடம் ஒரு புதிய சிந்தனையை உருவாக்குவதில் வானொலி 6 தன்னை முழுமையாக அர்ப்பணித்துக் கொண்டது எனலாம்.

வானொலி 6 தற்சமயம் கோலாலம்பூர் அங்காசாபுரியிலிருந்து ஒலிபரப்பப்படுகின்றது. இந்தியர்களுள் ஏறக்குறைய 80 சதவிகிதத்தினர் தமிழ்மொழி பேசுபவர்களாக இருப்பதால் தமிழ்மொழியையே தொடர்பு மொழியாகக் கொண்டுள்ளது. ஏனைய மொழிகளான தெலுங்கு, மலையாளம், பஞ்சாபி போன்ற மொழிகள் 'குறிப்பாகத் திரைப்பாடல்கள் வழி மக்களைப் போய்ச் சேர்கின்றன.

1980-களில் நாடு பொருளாதாரத் துறையிலும் சமூகம் மற்றும் அரசியல் துறைகளிலும் மேம்பாடு கண்டது. 1990-களில் அறிவியல் மற்றும் தொழில்நுட்பத் துறைகளிலும் துரித வளர்ச்சிகண்டது. நாட்டின் மேம்பாட்டை மக்களுக்கு அவ்வப்போது அறிவிப்பதிலும் மக்களையும் குறிப்பாக இந்திய சமூகத்தையும் மேம்பாட்டில் பங்குகொள்ளச் செய்வதிலும் வானொலி6 வெற்றி கண்டுள்ளது எனலாம். தகவல் தொழில் நுட்பத்தில் நமது சமூகமும் மேம்பாடடைய வேண்டும் என்ற அக்கறையில் வானொலி 6 பல நிகழ்ச்சிகளை ஒலிபரப்பி வருகின்றது.

## தற்சமயம் வானொலியில் ஒலிக்கும் நிகழ்ச்சிகள்

திரைப்பாடல்கள், பக்திப்பாடல்கள், நாட்டுப்பற்றுப் பாடல்கள், கவியரங்கம், நாடகம், இசையரங்கம், இசை சொல்லும் கதை, வானொலி மருத்துவர், விவசாய உலகம், மகளிர் நேரம், மகளிர் கேட்டவை, உங்கள் சிந்தனைக்கு, தகவல் யுகம், இளைஞர் உலகம், நாடாளுமன்ற அறிக்கை, விளையாட்டு அரங்கம், மக்கள் நடுவே, நமது விருந்தினர், ஞாயிற்றுக்கிழமைப் பேச்சு, தமிழ்ச் செய்திகள், வணிகச் செய்திகள், நாட்டு நடப்புகள், பத்திரிகைச் செய்திகள், திரைக்கதை, திரை உலகம், பயனீட்டாளர் உலகம், சட்டமும் நாமும், அழகிய மலேசியா, உதய காலம், அந்தி மலர், உறங்காத கண்கள், இரவுக் கதம்பம், நாடகம், கலப்படம், நகைச்சுவை நேரம், வளரும் கலைஞர் இன்னும் பல.

## மலேசியத் தொலைக்காட்சி

மலேசியத் தொலைக்காட்சி சேவையானது 28 டிசம்பர் 1963-இல் தொடங்கப்பட்டது. அச்சமயம் 'டேவான் துங்கு அப்துல் ரஹமான்' தற்காலிக ஒலிபரப்பு நிலையத்திலிருந்து அஞ்சல் செய்யப்பட்டு வந்தது. அதன்பிறகு 6 அக்டோபர் 1969-முதல் விஸ்மா அங்காசாபுரி வானொலி, தொலைக்காட்சி நிலையத்திலிருந்து இயங்கி வருகிறது.

# சிங்கப்பூர்

சுப. திண்ணப்பன்
ஆ.ரா. சிவகுமாரன்

சிங்கப்பூரில் வானொலி, செய்தித்தாள் ஆகிய மக்கள் தொடர்பு தகவல் சாதனங்கள் 60 ஆண்டுகளுக்கு மேலாகத் தமிழிலக்கிய வளர்ச்சிக்குப் பெரும் பங்காற்றியுள்ளன. பின்னர் தொலைக்காட்சி, கணினி முதலிய தகவல் சாதனங்களும் அப்பணியைத் தொடர்ந்து செய்கின்றன.

**வானொலி**

சிங்கப்பூரில் 1-6-1936இலிருந்து தமிழில் வானொலி ஒலிபரப்பு செயல்படத் தொடங்கியது. வானொலியில் பொது மக்களுக்குப் பழைய இலக்கியங்களை எளிய முறையில் அறிமுகப் படுத்துவதும் புதிய இலக்கியப் படைப்புகளுக்கு ஊக்கம் ஊட்டுவதும் முதன்மைப் பணிகளாக அமைந்தன. சிலப்பதிகாரம், மணிமேகலை, கம்பராமாயணம், சீவகசிந்தாமணி, பெருங்கதை, மனோன்மணீயம், நளவெண்பா முதலிய இலக்கியங்களை நாடக வடிவில் வானொலியில் ஒலிபரப்பினர். சங்க இலக்கியக் காட்சிகளும் கூட நாடக வடிவில் ஒலிபரப்பப் பெற்றன. இவ் வகையில் மகாபாரதம், இராமாயணம் ஆகிய இதிகாசங்கள் பல வாரங்கள் தொடர் நாடகமாக ஒலிபரப்பப்பட்டுப் பொதுமக்களின் இலக்கிய ஆர்வத்தைத் தூண்டின. அறிஞர்களின் இலக்கியப் பேச்சுகளும் இலக்கிய நிகழ்ச்சிகளும் இடம் பெற்றன. 'நாளும் ஒரு குறள்' திருக்குறளைப் பொதுமக்கள் சுவைக்க வழி வகுத்தது. இலக்கியப்படைப்புகளை உருவாக்கும் பணியில் கவியரங்கம், பாடிப்பழகுவோம், சிறுகதைகள், நாடகங்கள் தொடர்பான நிகழ்ச்சிகள் பெரும்பங்கு வகித்தன. வானொலியில் படைத்த கவிதைகள், கதைகள், நாடகங்கள் பிற்காலத்தில் நூல் வடிவம் பெற்றன. இவற்றில் குறிப்பிடத்தக்கவை கவிஞர் பெருமாள் எழுதிய 'சிங்கப்பூர்ப் பாடல்கள்', கவிஞர் க.து.மு. இக்பால் எழுதிய 'அன்னை', கவிஞர் பரணின் 'மழை' முதலிய கவிதை நூல்கள் ஆகும். பி. கிருஷ்ணன் எழுதிய அடுக்கு வீட்டு அண்ணாசாமி, மாடிவீட்டு மங்களம் முதலிய நகைச்சுவை நாடகங்கள் உள்நாட்டுப் பின்னணியைக் கொண்டவை; அதிகமான பொதுமக்களின் வரவேற்பைப் பெற்றவை. மர்ம நாடகங்களை எம்.கே. நாராயணன் எழுதி ஒலிபரப்பி வெற்றி பெற்றார். ஷேக்ஸ்பியர் நாடகங்களும் தமிழாக்கம் பெற்று ஒலிபரப்பப்

பெற்றன. சிங்கப்பூர் மண்ணின் மணம் கமழத் தக்க இலக்கிய உருவாக்கத்திற்கு வானொலி வழி வகுத்துள்ளது எனலாம். மெ. திரு. அரசு பழந்தமிழ் இலக்கியங்களை அறிமுகம் செய்து வைக்கும் பணியில் ஈடுபட்டார்.

திரைப்பாடல் விமர்சனம் என்னும் ஒரு நிகழ்ச்சி திரைப் பாடல்களில் உள்ள இலக்கியச் சுவைகளை நன்கு நுகர உதவியது.

### செய்தித்தாள்

செய்தித்தாள்களில் தமிழ் முரசு, தமிழ்மலர், தமிழ்நேசன், மலாயா நண்பன் முதலியவை கவிதை, சிறுகதை, நாவல், இலக்கியக் கட்டுரை முதலிய இலக்கிய வளர்ச்சிக்குப் பெரிதும் உதவி உள்ளன. செய்தித்தாள் இல்லையேல் சிங்கப்பூரில் இலக்கிய வளர்ச்சி இல்லையென்றுகூடக் கூறலாம். படைப்பாளர்களின் படைப்புகளை வெளியிடுவதற்கு இவையே ஊடகமாக அமைந்தன. வெண்பாப் போட்டி, சிறுகதைப்போட்டி நடத்தியும், எழுத்தாளர் பேரவை என்ற அமைப்பை ஏற்படுத்தியும், சிறுகதை வகுப்பு நடத்தியும், திறனாய்வுக் கட்டுரைகள் எழுத ஊக்குவித்தும் செய்தித்தாள்கள் இலக்கிய வளர்ச்சிக்கு உதவின. சிறுவர்கள், இளைஞர்கள் ஆகியோரிடம் இலக்கியப் படைப்பாற்றலை உருவாக்குவதற்காகத் தமிழ்முரசு மாணவர் மணிமன்றம் என்னும் பகுதியைத் தொடங்கி நடத்தியது. இதன்வழி உருவாகிய எழுத்தாளர்கள் பலர். அவ்வப்போது வெளியிடப்பட்ட ஆண்டுமலர்கள் எழுத்தாளர்களின் இலக்கிய ஆர்வத்தைத் தூண்டிப் பல படைப்புகள் பிறக்கக் காரணமாயின.

### தொலைக்காட்சி

1963இல் தொடங்கப்பெற்ற தொலைக்காட்சி இலக்கியக் காட்சிகளை நாடகங்களாகச் சிறுவர்களுக்காகவும் இளைஞர் களுக்காகவும் படைத்தது. சமூக நாடகங்களையும், நகைச்சுவைத் தொடர் நாடகங்களையும் ஒளி பரப்பியது. இத்துறையில் பணி ஆற்றியவர்களில் இ.எஸ்.ஐ. சந்திரன், பக்கிரிசாமி, கலைச் செல்வன், தி.சு. மோகனம் முதலியோர் குறிப்பிடத்தக்கவர்கள். எழுத்தாளர்களின் பேட்டிகள், படைப்பாளர்கள் பற்றிய செய்தித் தொகுப்புகள் ஆகியவற்றைப் படைத்தும் இலக்கிய வளர்ச்சிக்குத் தொண்டாற்றி வருகிறது. அண்மையில் புதுக்கவிதைகளைக் காட்சிப்படுத்தும் வகையில் கவிதைக்குக் காட்சியுரு கொடுத்தும் இலக்கியப்பணி ஆற்றுகிறது.

## கணினி

இந்நூற்றாண்டின் இணையற்ற தகவல் சாதனமாக விளங்கும் கணினி வழி இலக்கியப்பணி ஆற்றும் முயற்சியிலும் சிங்கப்பூர் முன் நிற்கின்றது. தமிழில் இணையத்தைப் புகுத்த வழி செய்த திருவாளர் நா. கோவிந்தசாமி தமிழ் வலைப்பின்னல் என்னும் இல்லப் பக்கத்தைத் தொடங்கிச் சிங்கப்பூர்த் தமிழ் இலக்கியம் சார்ந்த கவிதைகள், சிறுகதைகள், கட்டுரைகள் சிலவற்றை அவ்வில்லப் பக்கத்தின் வழி உலவ விட்டார். சிங்கை, இணையம், நம் குடும்பம் முதலிய இணைய இதழ்கள் இப்போது சிங்கப்பூரிலிருந்து வெளிவருகின்றன. இவற்றிலும் இலக்கியப் பகுதிகள் இடம்பெறுகின்றன. சில கவிஞர்கள் தங்கள் பாடல்களைக் குறிப்பாகக் குழந்தைப் பாடல்களை இசைவட்டு மூலமாகவும் வெளியிட்டுள்ளனர். சிறுவர்களுக்கு ஏற்ற கதைகளும் கணினி வட்டு மூலம் வெளிவந்துள்ளன.

# ஆய்வியல் தமிழ்

## தமிழகம்

இராம. குருநாதன்

தமிழில் ஆய்வுப் போக்குகள் இருந்தமைக்கான சான்றுகளை இலக்கிய இலக்கண உரைகள் வழியே அறியலாம். ஆராய்ச்சி என்பதற்கான கலைச்சொற்கள் தொல்காப்பியர் கால முதலே வழங்கிவந்துள்ளன. திறன் என்ற ஒரு சொல்லே பல கோணங்களில் பொருள் உணர்த்தவல்லது. கால மாற்றத்தாலும், மொழிக்கலப்பாலும், குணதோஷ விளக்கம், விமரிசனம், இரசனை, நயம் முதலிய சொற்கள் தமிழில் புகுந்தன.

இலக்கிய இலக்கண ஆய்வுகளுக்குப் பண்டைய உரையாசிரியர்கள் முன்னோடிகளாக இருந்துள்ளனர். அவர்கள் உரை காண எடுத்துக்கொண்ட நூல்களுக்கு அகலமாகவும் நுட்பமாகவும் உரை எழுதியுள்ளமை ஆய்வுப் பாங்கை வெளிப்படுத்தவல்லது. தமிழிலும் வடமொழியிலுமாக இருமொழிப் புலமை பெற்றிருந்த காரணத்தால், அவர்தம் உரைகள், ஒப்பீடு, தருக்கம், பாராட்டு, தடைவிடைகள் முதலிய பார்வைகளில் அமைந்திருந்தன.

பண்டைக்காலத்தே புலவர்கள் ஒருங்கு கூடிச் செய்யுளை ஆராய்ந்தமை, புலமையை வெளிப்படுத்த கழகங்கள் இருந்தமை முதலியன ஆய்வுப் பாதைக்கு வழிவகுத்துள்ளன. பண்டை நாளில் எழுந்த தொகை நூல்களின் வகைப்பாடும் வரையறையும், வடிவ ஒழுங்கிற்கும், பொருண்மைக்கும் இடமளித்தன. நூற்பெயரமைவு, நுவல்பொருள், திணைப்பாகுபாடு, மேற்கணக்கு - கீழ்க்கணக்கு பாகுபாடு, சிறுகாப்பிய - பெருங்காப்பிய வரையறைகள் முதலியன ஆய்வுப்போக்கு இருந்தமைக்கான அடையாளங்களைக் காட்டுவன. பிற்காலத் திரட்டு நூல்களுக்கும், முறை வைப்புக்குமான தொகுப்புக்கலைக்கு அவற்றை முன்னோடியாகக் கருதலாம். மேலும் பதிப்புக்கலைக்கும் அவை போன்றவை உதவின.

இலக்கிய ஆய்வுகளுக்கு இடந்தரும் வகையில் ஒரு முன்னோட்டமான உணர்வை மேற்கூறியவற்றால் அறியலாம். இன்று தமிழியல் ஆய்வு என்பது பல துறைகளை (Multi-disciplinary) உள்ளிட்ட ஆய்வாகவுள்ளது.

பதினெட்டு, பத்தொன்பதாம் நூற்றாண்டுகளில் ஐரோப்பிய பாதிரிமார்கள், ஆங்கிலேயர் முதலியோர் பணி நிமித்தமாகத் தமிழகம் வரவும், தமிழ் இலக்கிய / இலக்கணம் பற்றிய பார்வை மாற்றத்திற்கும் புதுமைக்கும் உட்படலாயிற்று. அவர்கள் அளித்த ஆங்கிலக்கல்வி, புதிய விழிப்புணர்ச்சியை இலக்கிய உலகிலும் ஏற்படுத்தியது. பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் ஆங்கில வழியிலான ஆய்வுப் பார்வைகள் தோன்றத் தொடங்கின. இது தமிழ் இலக்கிய ஆய்வுப் பரப்பு மெல்ல அரும்பத் தொடங்கிய காலகட்டமாகும். இலங்கையைச் சார்ந்த சைமன் காசிச்செட்டி The Tamil Plutarch (1859) என்ற நூல்வழியே புலவர் பற்றிய கருத்துகளைத் தந்ததும், மனோன்மணீயம் எழுதிய சுந்தரனார் Some Milestones in the History of Tamil Literature (1891) என்ற நூல்வழியே இளந்தலைமுறையினர் ஆய்வு மனப்பான்மையை வளர்க்க வேண்டும் என்று வலியுறுத்தியதும் மனங்கொள்ளத் தக்கன. இக்காலகட்டத்தில் திறனாய்வு மனப்பான்மை ஆங்கில வழியிலான அணுகுமுறைக்கு உட்படக் காரணமாக இருந்தவர் படைப்பாசிரியரான அ. மாதவையா ஆவார். அவர் விவேக சிந்தாமணி (1892) இதழில் மனோன்மணீயம் பற்றிய தொடர்க் கட்டுரை எழுதிவந்தது திறனாய்வுக்கு முன்னோடியாக அமைந் திருந்தது. இவர், குருசாமி சர்மா எழுதிய பிரேமகலாவதியம் (1893) என்ற புதினத்திற்குத் திறனாய்வுக் கட்டுரை எழுதியதையும் இங்குக் குறிப்பிடவேண்டும்.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் எழுந்த தமிழ் நூல்களின் முன்னுரைகள் பதிப்பு நூல்களில் செலுத்திய பார்வைகள் இலக்கிய ஆய்வுக் கண்ணோட்டத்தை ஊக்கப்படுத்துவனவாய் அமைந்தன; அவை ஆய்வு முயற்சிக்கு வழிகோலின; தமிழ்ப் பண்பாட்டாராய்ச்சி, வரலாற்றுணர்வு, தமிழ்ச் சமுதாய மறுமலர்ச்சி முதலிய சிந்தனைகளை மொழிந்தன.

பண்டைய தமிழ் நூல்களை வெளிக் கொணர்ந்த பதிப்புப் பார்வைகள் முறையான ஆய்வுப் போக்கினை வளர்க்க முயன்றன. தமிழ் இலக்கிய / இலக்கணங்களை மீட்டெடுத்துப் பதிப்புப் பணியை மேற்கொண்ட சி.வை. தாமோதரனார், உ.வே.சா. முதலியோரின் பதிப்புகள் மூலபாடத்திறனாய்விற்குரிய வாய்ப்பு

களுக்குத் தோற்றுவாய் ஆயின. தமிழ் இலக்கிய/இலக்கணம் பற்றிய பரவல் இவர்களின் பதிப்புகளால் தெரியவந்தது. குறிப்பாகத் தொல்காப்பியம், சங்க இலக்கிய நூல்கள் ஆகியன பண்டைத் தமிழர் வாழ்க்கையை அகச்சான்றுகள் வழி மெய்ப் பிக்க உதவின. தமிழர் வரலாற்றை அறிந்து கொள்வதற்குரிய சான்றாதாரங்களை முன்வைத்து நூல்கள் எழுந்தன. வரலாறு தொடர்பான செய்திகளில் நாட்டங்கொண்டு 1800 ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழகம் (1895) (வி. கனகசபை பிள்ளை), A Primer of Tamil Literature (1905) (எம்.எஸ். பூரணலிங்கம் பிள்ளை), Augustian Age of Tamil Literature (1909) (எஸ். கிருஷ்ணசாமி ஐயங்கார்), Studies in South India (1919) (எம்.எஸ். இராமசாமி ஐயங்கார்), தமிழ் வரலாறு (1922) (கே.எஸ். சீனிவாச பிள்ளை), History of the Tamils (பி.டி. சீனிவாச ஐயங்கார்) முதலிய நூல்களின் உருவாக்கம், பண்டைத் தமிழரின் வாழ்வும் வரலாறும் பற்றிய செய்திகளைப் புரிய வைத்தது.

தமிழர் வாழ்வையும் வரலாற்றையும் எழுதியோர் தமிழின் பெருமையை எடுத்துக்காட்டிய சூழ்நிலை, இருபது முப்பதுகளில் நிலவியது. இக்கால கட்டத்தில் சமுதாயப் போக்கிலும் அரசியல் நிலையிலும் தேசிய உணர்வுகள் அரும்பியதோடு மட்டுமன்றி, பிராமணர் பிராமணரல்லாதார் சமூக எதிர்ப்புணர்வும் கிளம்பியது. தனித்தமிழியக்கம், சுயமரியாதை இயக்கம் முதலிய இயக்கங்கள் தோன்றுதற்கு எதிர்ப்புணர்வும் காரணமாயிருந்தது. மேலும், அரசியல் போக்கில் நீதிக்கட்சியும் தோன்றியது. பண்டைத் தமிழர் வரலாற்றை இலக்கியத்தோடும் சமுதாயத்தோடும் எழுதி வந்தோரில் ஒரு பிரிவினர் ஒரு சார்புத்தன்மைப்பட வடமொழியின் தாக்கத்தைப் பெற்றே தமிழ் இலக்கியம் / இலக்கணம் வளரத் தொடங்கியது என்ற கருத்துகளை நூலில் பதிவு செய்தனர். திராவிட ஆரிய இன வேறுபாடுகளுக்கு வடமொழி சார்ந்து ஒரு சார்புத்தன்மையோடு எழுதிய சிலர் காரணமாயிருந்தனர். அரசியலிலும், சமூகத்திலும் கலை வெளிப் பாட்டிலும் இத்தகைய வேறுபாட்டு உணர்வு தோன்றியது. இது இலக்கியத்திலும், இலக்கிய ஆராய்ச்சியிலும், வெளிப்படை யாகவே தெரிந்தது. தமிழர் பற்றிய வரலாற்று நூல்களிலும் பதிவாகியது. தனித்தமிழ் இயக்கத்தைத் தோற்றுவித்த மறைமலையடிகள், சுயமரியாதை இயக்கம் கண்ட பெரியார் ஆகியோருக்கு முன்னரே, தமிழ் / தமிழ் பற்றிக் குறைவாக மதிப்பிட்டும், வடமொழிக்குச் சார்பாக எடுத்துக் காட்டியும் அமைந்த போக்கினைச் சுட்டி அவற்றிற்குரிய மறுப்பினை

எழுதினர். அவர்களில் செல்வகேசவராய முதலியார், பூரணலிங்கம் பிள்ளை, சுந்தரம் பிள்ளை முதலியோர் முக்கியமானவர்கள் ஆவர்.

தமிழ்ப் பண்பாட்டிலான ஆய்வுகளிலும், சமூக வரலாற்றியல் ஆய்வுகளிலும் அவ்வேறுபாட்டு உணர்வு அரும்பத் தொடங்கியது. தமிழ் உரைநடை வரலாறு (1904) எழுதிய செங்கல்வராய பிள்ளை, தமிழ்ப் புலவர் சரித்திரம் (1932) எழுதிய வி.கோ.சூரிய நாராயண சாஸ்திரியார் முதலியோர் நடுநிலையோடு தமிழ் இலக்கியத்தை ஆராய்ந்து தம் கருத்துக்களை முன்மொழிந்தனர். தமிழ் வரலாறு (1922) எழுதிய கே.எஸ். ஸ்ரீநிவாச பிள்ளையும் இது தொடர்பாகச் சுட்டப்படக் கூடியவர் ஆவார். இன்று இப்பணியைக் க.ப. அறவாணன் தமிழரின் தாயகம் (1984), தமிழ் இலக்கியச் சமூகவியல் (1992), தமிழ்ச் சமுதாய வரலாறு - பண்டைக் காலம் (1992), தமிழர் மேல் நிகழ்ந்த பண்பாட்டுப் படையெடுப்புகள் முதலான நூல்களால் தொடர்கிறார். அன்னிதாமசுவின் தமிழர் கொடிகள் (2000), தமிழர் சமூகவியல் (2000) முதலான நூல்களும் இங்குச் சுட்டத்தக்கன.

ரா.பி. சேதுப்பிள்ளையின் ஊரும் பேரும் முதலான நூல்கள் வழி வளர்ந்து வரும் ஊர்ப்பெயர் ஆய்வுகளும் இதனுள் கருதத்தக்கனவாகும். கி. நாச்சிமுத்து (கோவை மாவட்ட ஊர்ப் பெயர்கள்), கு. பகவதி (இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள்), ஆர். ஆளவந்தார் (கல்வெட்டில் ஊர்ப்பெயர்கள்) போன்றோர் இதில் சுட்டத்தக்கவராவர்.

தமிழ் இலக்கிய வரலாறு, கால ஆராய்ச்சி முறையிலான போக்கில் வளரத் தொடங்கியது. முப்பதுகளின் தொடக்கத்தில் வெளிவந்த கா.சு. பிள்ளையின் தமிழ் இலக்கிய வரலாறு (1930), மாணிக்கவாசகர் காலமும் வரலாறும் (1920), சோமசுந்தர தேசிகரின் தமிழ்ப் புலவர்கள் வரலாறு (1936) முதலியன இவ் வகையில் குறிக்கத்தக்கன. தமிழர்கள் கால உணர்வுக்கு இன்றியமையாத இடம் தந்தனர் என்று கூற இயலாது. பண்டை நாளில் எழுந்த நூல்களைக் கால வரிசைப்படுத்துவது (Chronological order) கடினமாகவே இருந்துள்ளது. தமிழில் கால ஆராய்ச்சி பற்றிய நூல்கள் மிகச் சிலராலேயே எழுதப்பட்டன.

தமிழில் கால ஆராய்ச்சியை மேற்கொண்டோருள் கிருஷ்ணசாமி ஐயங்கார், சோமசுந்தர தேசிகர், சதாசிவ பண்டாரத்தார், வையாபுரிப்பிள்ளை, மா. இராசமாணிக்கனார், மு. கோவிந்தசாமி முதலியோர் குறிப்பிடத்தகுந்தவர்கள் ஆவர்.

தமிழ் இலக்கிய ஆராய்ச்சியை முன் எடுத்துச் சென்றோருள் மறைமலையடிகளின் பங்கு எண்ணிப்பார்க்கத்தக்கது. மும்மொழிப் புலமைமிக்க அவர், தமிழின் பெருமையை நிலை நாட்டுதற்கு முயன்றவர். அவர் வாழ்ந்த காலகட்டம், வடமொழி ஆதிக்கம், அந்நியர் ஆட்சி முதலியன கல்விச் சூழலில் நிலவி வந்த காலம். தமிழ்மொழியின் பண்டைய புகழைத் தனித்தமிழ் இயக்கத்தின் மூலம் நிலைநிறுத்தியவர் அவர். தனித்தமிழ் இயக்கத் தந்தையான அவர், முல்லைப் பாட்டாராய்ச்சி, பட்டினப்பாலை ஆராய்ச்சி, சாகுந்தல நாடக ஆராய்ச்சி முதலிய ஆழமும் நுட்பமும் செறிவும் கொண்ட நூல்களைப் படைத்தார். மணிவாசகரின் கால ஆராய்ச்சித் தொடர்பாக எழுதப்போய்த் தமிழ் இலக்கியத்தின் பரந்த தளத்தை விரித்துரைக்க ஏதுவான நூலாக அவரது 'மாணிக்க வாசகர் காலமும் கருத்தும்' என்ற நூல் அமைந்தது. சமயம், தத்துவம் தொடர்பான ஆய்வுகளுக்கு இவருடைய புலமை இடந்தந்தது.

தமிழில் மூல பாடத் திறனாய்வுக்கு முன்னோடியாகத் திகழ்ந்தவர்கள் உரையாசிரியர்கள் ஆவர். பாடவேறுபாடுகளை ஆங்காங்கே காட்டிச் செல்வது இவ்வகைத் திறனாய்வு நெறியாகும். பண்டைய உரையாசிரியர்களுக்குப் பின் இவ்வகை ஆய்வு திளைத்தது. சி.வை. தாமோதரனார் பதிப்பித்த நூல்களில் இவ் ஆய்வினை அறியலாம். ஆறுமுக நாவலர், உ.வே.சா., மு. இராகவையங்கார், சௌரிப் பெருமாளரங்கன், பின்னத்தூர் நாராயணசாமி ஐயர், ஔவை துரைசாமி பிள்ளை, ந.மு. வேங்கட சாமி நாட்டார் முதலியோர் நூல்கள் பதிப்பித்தும், உரை எழுதியும் தத்தம் ஆராய்ச்சி வெளிப்பாட்டைப் புலப்படுத்தியவர் ஆவர்.

சங்க நூல்கள் வெளிவந்தபோது அவற்றின் பதிப்புகள் முக்கியம் வாய்ந்தவை என்பதோடு, பின்வந்த சங்க இலக்கியப் புலமையோர்க்கும் ஏனைய இலக்கிய ஆர்வலர்களுக்கும் மிகுபயன் விளைவித்தன. நாற்பதுகளிலும் ஐம்பதுகளிலும் பண்டைய இலக்கியங்கள், பல்வேறு ஆராய்ச்சிகளுக்கு இடந் தர முயன்றன. செவ்வியல் இலக்கியம் என்ற தகுதி பெற்ற சங்க இலக்கியத்தில் ஆர்வம் கூடிற்று. இக்காலகட்டத்தே தமிழாய்வுப் போக்கு, இரசனை முறை ஆராய்ச்சியாகவும், விளக்கவியல் ஆய்வாகவும் திகழ்ந்தது. செய்யுள் நலம் பாராட்டல், சொல்நயம், பொருள்நயம் காண்பது முதலியன தென்பட்டன.

ஆர்.கே.எஸ். சண்முகம் செட்டியார், டி.கே.சி. கலாநிலையம் இராஜகோபாலாச்சாரி, டி.என். சேஷாசலம் முதலியோர் மேற்கூறிய ரசனைமுறை ஆய்விலும், விளக்கவியல் அணுகுமுறையிலும் பண்டைய இலக்கியங்களைப் பரப்புவதில் திளைத்தனர். இவ் வகையிலான ஆய்வுகளுக்கு இத்தகையோர் முன்னோடிகளாவர்.

முப்பதுகளிலும் நாற்பதுகளிலும் தமிழரிடையே இன உணர்வு சற்றே தீவிரமடையவும் அரசியல், சமுதாயப் போக்குகளில் அது எதிரொலித்தது. இலக்கிய ஆய்வுலகிலும் அவ்வுணர்வு முகிழ்த்தது. திராவிட இனச் சிந்தனைகளை அரசியல் நிலைகளில் வைத்து எண்ணத் தொடங்கியபோதே, இலக்கியச் சிந்தனைகளில் ஆரிய-திராவிட உணர்வுகளின் பிரதிபலிப்பு இக்காலகட்டங்களிலும் தொடர்ந்தது. நாவலர் சோமசுந்தர பாரதியார் போன்றோர் தொல்காப்பியப் பொருளதி காரத்திற்கு உரை எழுதியபோது தமிழ் இன உணர்வின் ஆழத்தை அத்தகையோர் உரை காட்டியது. நச்சினார்க்கினியரின் உரைகளைத் தக்கவகையில் மறுத்து எழுதினர். தமிழர் பண்பாடு குறித்த செய்திகள் தொல்காப்பியப் பொருளதிகாரத்தில் அமைந் திருக்க, அதற்கு மாறாக வடவரின் தாக்கம் அப்பண்பாட்டில் செறிந்துள்ளதாக ராகவையங்கார் போன்றோர் உரையில் கூறவும், அதற்குப் பாவாணர் போன்றவர்கள் தக்கவழி மறுத்து எழுதினர்.

தமிழ்ப் புலவர்கள் பற்றிய குறிப்புகள் அடங்கல் நூல்கள் வழியாக முன்பே பதிவு செய்யப்பட்டாலும், தனித்தனிப் புலவர்கள் பற்றி ஆய்வுகள் தமிழில் வெளிப்பட்டன. இவ்வகையில் வேங்கடராஜுலு ரெட்டியார் எழுதிய கபிலர், பரணர் ஆகிய நூல்கள் சுட்டிக்காட்டத்தக்கன.

கல்விசார் நிறுவன ஆய்வுகள் முப்பதுகளின் இறுதியிலும் நாற்பதுகளிலும் தோன்றத் தொடங்கின. தனிப்பட்ட முறையில் ஆய்வு மேற்கொண்டோரில் மயிலை. சீனி. வேங்கடசாமி குறிப்பிடத்தக்கவர். சமூக அரசியல் பற்றிய சிந்தனைகளுக்கு நடுவே, சமயங்கள் இலக்கிய வளர்ச்சிக்குப் பங்கு ஆற்றியதை இவர் வெளிப்படுத்தினார். இவ்வகையில் இவர் எழுதிய கிறித்தவமும் தமிழும் (1930), பௌத்தமும் தமிழும் (1940), சமணமும் தமிழும் (1954) ஆகிய நூல்கள் குறிப்பிடத்தக்கன. கல்விசார் நிறுவன ஆய்வுகள் நாற்பதுகளில் முனைவர் பட்டத் திற்காக மேற்கொள்ளப்பட்டன. அ. சிதம்பரநாதன், யாப்பு வளர்ச்சி நிலை குறித்து எழுதிய ஆய்வும் மு.வ. சங்க இலக்கியத்தில் இயற்கை பற்றி எழுதிய ஆய்வும் தொடக்கங்களாயின.

அதன்பின்னர் மெல்ல மெல்லக் கல்லூரிகளிலும், பல்கலைக் கழகங்களிலும் ஆய்வுப் பட்டத்திற்கான ஆய்வுகள் அரும்பத் தொடங்கின.

கல்விசார் நிறுவன ஆய்வுகளும் போக்குகளும், தனியார் மேற்கொள்ளும் தன்னார்வ ஆய்வு முயற்சிகளும் தனித்தனி எல்லைகளாக அன்று முதல் இன்று வரை நிலவிவந்துள்ளன. கல்விசார் நிறுவன ஆய்வுகள் வரையறைக்குட்பட்டதாய், நெறியாளர் பார்வையின் கீழ்ச் செய்யப்படுவதாய் இருத்தலின் அவற்றிற்குக் கட்டுப்பாடுகள் உள்ளன. கல்வி சாராத ஆய்வுகளில் கட்டுப்பாடோ, வரையறையோ இல்லை. கல்விசார் நிறுவனங்களில் பணியாற்றியோர், பண்டை இலக்கியத்தில் நாட்டமும் ஈடுபாடும் கொண்ட காரணத்தால் அது பற்றிய ஆய்வுகளையே பெரிதுமாக மேற்கொண்டனர். சங்க இலக்கிய ஆய்வுப் பரப்பு சற்றே விரிந்த தளத்தில் அதன் பொருண்மைக் கூறுகள், திணை ஆராய்ச்சி, சமூகப் பண்பாட்டு நிலைகள், வரலாற்றுப் பார்வை, அரசியல் சூழல், இலக்கிய உத்திகள், தனிப்புலவர் திறன் முதலிய போக்குகளில் செய்யப்பட்டன. இவ் ஆய்வுகளுக்கு அடிப்படையாகச் சங்க இலக்கியப் பதிப்புகள், உ.வே.சா.வின் ஆராய்ச்சி முன்னுரைகள், சங்க இலக்கியச் சொற் பொழிவு நூல்கள் முதலியவை அமைந்தன.

ஐம்பதுகளில் தமிழாய்வு வையாபுரி பிள்ளையின் இலக்கிய ஆய்வு நூல்கள் (இலக்கியச் சிந்தனை, இலக்கிய உதயம், காவிய காலம் முதலியன) தமிழாய்வாளர்களுக்குப் பெருவிருந்தாக அமைந்தன. பலவகையான பார்வைக்கு உட்பட்ட அவரது ஆய்வு அணுகுமுறை பரந்துபட்ட தளத்தில் இயங்கியது. கண்ணோட்டங்கள் சில தவறாக அமைந்திருப்பினும், அவரது பரந்த அறிவும், அணுகுமுறைகளும் புதிய கருத்தோட்டங்களாக இருந்தன. அவரது ஆய்வுப் பார்வைகள் ஒருசார்பு உடையன என்று கருதியதால் மறுப்பும் வெளிவந்தன. ஆய்வுப் போக்குகள் தீவிரமடையத் தொடங்கிய காலமாக ஐம்பதுகளைக் கருதலாம். இலக்கிய ஆய்வுகளில் வளர்ச்சி காணப்பட்டது. தமிழகத்தும் இலங்கையிலும் தமிழ் இலக்கிய வரலாற்று நூல்கள் முனைப்புடன் எழுதப்பட்டன. வி. செல்வநாயகம், தனிநாயக அடிகள், கா.பொ. இரத்தினம் போன்ற இலங்கைத் தமிழறிஞர்கள் ஐம்பதுகளில் தமிழ் இலக்கிய வரலாற்றுத் தொடர்பாகவும், சங்க இலக்கியத் தொடர்பாகவும் எழுதிய நூல்கள் குறிப்பிடத்தகுந்தன.

சங்க இலக்கியத்தை உலக அளவிற்கு எடுத்துச் சென்ற மேனாட்டாரின் அறிமுக ஆய்வுகளும், சங்க இலக்கியம் பற்றிய ஆங்கில நூல்களும் மிகுந்த கவனிப்புக்குரியவை. தனிநாயக அடிகளுக்கு முன்னரே தமிழ் இலக்கியம் பற்றிய அறிமுகத்தை வெளிநாட்டவர் அறிந்திருந்தார்கள். சங்க இலக்கியத்தில் இயற்கை பற்றிய அவரது ஆய்வுநூல், ஐரோப்பிய மொழி இலக்கியங்களோடு தமிழரின் இயற்கை ஈடுபாட்டைப் பல நிலைகளில் ஆராய்ந்தது. தமிழ் ஒப்பியலுக்கு முன்னோடியான நூல்களுள் ஒன்றாக விளங்கிற்று. வெளிநாட்டுத் தமிழறிஞர் களுள் பிலியாட்சோ, ஜான்மார், கமில் சுவலபில் முதலியோர் சங்க இலக்கிய ஆய்வில் ஈடுபாடு கொண்டவர்கள் ஆவர்.

கல்விசார் நிறுவனங்களில் அறுபதுகளிலும் எழுபது களிலும் ஆய்வு செய்தோரில் செம்பாகம் சங்க இலக்கியங்களை ஆய்வுக்கு மேற்கொண்டனர். சங்க நூல்களைப் பல்வேறு பார்வைக்கு உட்படுத்திய ஆய்வுகள் இக்காலகட்டங்களில் வளர்ந்தன. பண்டைய இலக்கியத்தையே ஆய்வுப் பொருளாகக் கொள்ள வேண்டும் என்ற உணர்வு, கல்லூரிகளிலும் பல்கலைக் கழகங்களிலும் தோன்றியதற்கு அன்று இருந்த ஆய்வு நெறியாளர் களே காரணமாயினர். பேராசிரியர்களிடையே பழமரபு வேரூன்றி இருந்த காரணத்தால், ஆய்வுப் பொருண்மையும் அதனைச் சார்ந்ததாய் இருந்தது. இதனால் கல்விசார் நிறுவன ஆய்வுகள் உழுதசால் உழுகின்ற போக்குடையன என்ற கருத்தும் நிலவிவந்தது. சிலரிடம் இன்றும் அக்கருத்து மாறாதிருப்பதைக் காணலாம்.

அறுபதுகளின் தமிழாராய்ச்சி பல புதுமைகளைக் கண்டதோடு, விரிந்ததளத்தில் ஆயப்படுதற்குக் காரணமா யிருந்தது. கல்விசார் நிறுவன ஆய்வுகள், கல்விசாரா நிலையில் மேற்கொள்ளப்பட்ட ஆய்வுகள் ஆகியன ஓரளவு வளர்ந்தன. ஆய்வுலகில் பன்முகப் பார்வை கூடியது. கல்வித் திட்டங்களில் புதுமையான பாடங்கள் அறுபதுகளிலும் எழுபதுகளிலும் ஏற்பட்டதால் அவற்றைப் பற்றிய விரிவான பார்வையை விளக்கமாக அறிதற்குப் பேராசிரியர்களும் மற்றவர்களும் முனைந்தனர்.

இக்காலகட்டத்தில் புத்திலக்கிய ஆய்வுகள் பற்றிய திறனாய்வு நூல்கள் வெளிவந்தன. பண்டைய இலக்கியம் குறித்த ஆய்வுகள் புதிய நோக்கில் வெளிப்பட்டன. ஆங்கிலத் திறனாய்வு நூல்கள் வழியே காணும் அணுகுமுறைகள் கல்விசார் நிறுவன ஆய்வு களிலும் பேராசிரியர்களின் ஆய்வுகளிலும் புகுத்தப்பட்டன.

தெ.பொ. மீனாட்சி சுந்தரனார், ஏ.கே. இராமானுஜம், எஸ். இராமகிருஷ்ணன், மு.வ., அ.ச.ஞா. முதலியோர் ஐம்பது களின் இறுதியிலும் அறுபதுகளிலும் இலக்கிய ஆராய்ச்சியை விரிவுபடுத்தியவர்கள் ஆவர். தமிழ்ப் புலமை, கல்விப்பணி, ஆங்கிலத் திறனாய்வு நெறி, ஆராய்ச்சி உணர்வு முதலியவற்றில் நாட்டங்கொண்ட காரணத்தால் இவர்கள் இலக்கிய ஆய்வினை விரிந்த தளத்தில் செய்துவந்தனர். கல்விசாரா ஆய்வுகளில் புத்திலக்கியத்தின் மீது மிகுந்த ஆர்வம் செலுத்தி நூல்களைக் க.நா. சுப்பிரமணியம் எழுதி வந்தார். இந்திய இலக்கியம் உலக இலக்கியம் பற்றிய உணர்வுகள் தமிழ் ஆய்வுகளில் கருக்கொண்ட காலமாக இக்காலகட்டத்தைக் கருதலாம். பன்னாட்டு இலக்கிய ஆர்வம் கிளைத்தது. அனைத்துலகப் பார்வை தெ.பொ.மீ., க.நா.சு. போன்றோரிடம் இருந்தது. மேற்கத்திய இலக்கியத் திறனாய்வின் தாக்கம் தமிழாய்வுகளில் எதிரொலித்தது.

உரையாசிரியர் காலத்தே நிலவிவந்த விதிமுறைத் திறனாய்வுப் போக்கு மாறி, ரசனை முறைத் திறனாய்விலும் முருகியல் திறனாய்விலும் கிளைத்த ஆய்வுப்போக்கு, பின்னர் விளக்கவியல் ஆய்வுகளில் தஞ்சம் புகுந்தது. அறுபதுகளிலும் அதன் பின்னரும் மேலை நாட்டவரின் திறனாய்வுக் கொள்கைகள் பரவலாகத் தோன்றின. இதனைத் தமிழ் இலக்கிய ஆராய்ச்சிப் போக்கில் காணப்பட்ட வளர்ச்சி நிலைக்கான காலகட்டமாகக் கருதலாம்.

சங்ககால ஆய்வுகள் ஒருபுறம் வளர்ந்துவரினும், காப்பியங் களிலான பார்வை இக்காலகட்டத்தே செழித்தோங்கியது. டி.கே.சி. போன்றோர் முருகியலிலும் விளக்கவியலிலும் கம்பராமாயணத்தைத் திறனாய்வு செய்து மகிழ்ந்ததற்கு முன்பே இராமாயணம் குறித்த விரிந்த ஒப்பியல் பார்வை, மேலை இலக்கியத் திறனாய்வு அணுகுமுறை முதலியவற்றை உட்படுத்திய ஆய்வுப்போக்கு இருந்துள்ளது. பத்தொன்பதாம் நூற்றாண்டில் மேலை நாட்டுத் திறனாய்வு, கல்வியாளரிடையே அறிமுக மாகியது. மேலைத் திறனாய்வு முறையைத் திருமணம் செல்வகேசவராய முதலியார் முதன்முதல் தொடங்கி வைத்தார். கம்பனைப் பற்றிய அவரது கட்டுரைத் தொடர் 1897இல் 'சித்தாந்த தீபிகை' என்னும் இதழில் வெளிவந்தது. திறனாய்வுத் தளத்தில் கல்விசார் நிறுவன ஆய்வுக்கு முன்னோடியான இவர், அணிக்கோட்பாடு, கற்பனைச் செறிவு, கவித்துவம் ஆகியன குறித்தும் இலக்கியத் தோற்றம், சொல்லும் முறை, பயன்பாடு

முதலியன பற்றியும் தெளிவான பார்வை கொண்டிருந்தார். வ.வே.சு. ஐயரின் கம்பராமாயணம் பற்றிய ஆய்வு ஒப்பியல் நோக்குடையது. ஒப்பியல் ஆய்வுக்கு வ.வே.சு. ஆங்கிலத்தில் எழுதிய 'Kambaramayanam - A Study' என்னும் நூல் முன்னோடியாகும்.

ஐம்பது அறுபது ஆகிய காலகட்டங்களில் எதிர்மறையான ஆய்வுகள் (Negative Criticism) வெளிவந்தன. வரலாற்று நோக்கில் தமிழ் நாகரிகம், பண்பாடு ஆகியவற்றில் வடவரின் பாதிப்பு இருந்துள்ளது என்ற கருத்து வரலாற்றாசிரியர் சிலரால் கூறப்பட்டது போல, இலக்கியத்திலும் எதிர்மறையான ஆய்வுப் போக்கு இக்காலகட்டங்களிலும் தோன்றியது. இலக்கியத்தில் கால ஆராய்ச்சி குறித்த செய்திகளை எதிர்த்திசையில் உணர்த்திய வையாபுரி பிள்ளை போன்று, அவருக்குப் பின், இது போன்ற பார்வை தலையெடுத்தது. கம்பராமாயணம், சிலப்பதிகாரம், பெரியபுராணம் போன்ற காப்பியங்கள் எதிர்மறையிலான பார்வைக்கு உள்ளாயின. இதற்கு அடிப்படைக் காரணமாக இருந்தது ஆரியர் - திராவிட பாகுபாட்டு உணர்வே. இப்பாகுபாட்டைப் புகுத்தியே கம்பராமாயண எதிர்த் திறனாய்வு தோன்றியது. திராவிடருக்கு எதிராகவும் ஆரியருக்கு ஆதரவாகவும் கம்பராமாயணம் எழுதப்பட்டதாக இருதரப்பு ஆய்வுகள் கிளைத்தன. இதற்கு நாற்பது ஐம்பதுகளில் தமிழகத்தில் பிராமணர் - பிராமணர் அல்லாதோர் பற்றிய வேறுபாடு அரசியலிலும், சமுதாயப் போக்கிலும் விரிவடைந்தது காரணமாகும்.

நீதிக்கட்சி, திராவிடக்கட்சி அத்தகையதொரு பாகுபாட்டை வளர்த்தது மட்டுமன்றி, அதனை மேடைகளிலும் முழங்கி வந்தது. ஆரியர்-திராவிடர் என்ற உணர்வைக் கருத்து முழக்கமாகப் பிரச்சாரம் செய்தன திராவிடக் கட்சிகள். இப்போக்கு பட்டி மன்றங்களுக்கும் கருத்துப் போர்களுக்கும் கூட அன்று இடந் தருவதாய் ஆனது. இந்நிலையில் ஏற்பாரும் மறுப்பாருமாகிய இரு தரப்பினரும் இராமாயணத்தை நன்கு படிக்கவேண்டியிருந்தது. இதன் பயனாக இராமாயணம் குறித்த இருவேறு பார்வைகள் கிடைத்தன. பெரியார், அண்ணா போன்றோர் இராமாயண எதிர்ப்புப் போரில் தீவிரம் காட்டினர். எம்.எஸ். பூரணலிங்கம் பிள்ளை எழுதிய Ravana, the Great, பா.வே. மாணிக்க நாயக்கரின் 'கம்பன் புளுகும் வால்மீகி வாய்மையும்', அண்ணாவின் கம்பரசம் முதலியன எதிர்நிலையில்

கம்பராமாயணத்தை ஆய்ந்தன. இவற்றிற்கு மறுப்பாக, கம்பரசு ஆராய்ச்சி (கு. பாலசுந்தர முதலியார்), அரக்கர் தமிழரா! (ரா.பி. சேதுபிள்ளை) முதலியவை தோன்றின. பொதுநிலை ஆய்வாக, தயரதன் குறையும், கைகேயி நிறையும் (நாவலர் சோமசுந்தர பாரதியார்) இராவணன் மாட்சியும் வீழ்ச்சியும் (அ.ச.ஞா.) முதலிய நூல்கள் குறிக்கத்தக்கன. கம்பராமாயண ஆய்வுகளுக்கு இவை உந்துதலாக அமைந்தன. காவியங்கள் குறித்த ஆராய்ச்சிகளில் கி.வா.ஜ. போன்றோர் முன்னோடிகளில் ஒருவராக இருந்தமை எண்ணத்தக்கது.

சிலப்பதிகாரம் பற்றிய எதிர்த்திறனாய்வு இக்கால கட்டத்தே தோன்றியது. அந்நூலின் கால ஆராய்ச்சி வையாபுரிப் பிள்ளை போன்றோரால் பின்னுக்குத் தள்ளப்பட்டதுபோல, அந்நூலின் பதிகம் பற்றியும் நிகழ்ச்சிகள் குறித்தும், மாந்தர் படைப்புக் குறித்தும் எதிர்த்திறனாய்வுகளுக்கு அது இடந்தந்தது. வஞ்சிக்காண்டம் இளங்கோவால் எழுதப்பட்டதன்று என்ற கருத்துகள் வெளியாயின. அதற்கு மறுப்பும் தோன்றின. மு.வ. போன்றோர் சிலப்பதிகாரத்தில் இடம்பெற்ற கண்ணகி, மாதவி பற்றிய நேரிய ஆய்வுகளை விளக்கி நூல் எழுதவும் வையாபுரிப் பிள்ளை வழிவந்த பொ. திரிகூடசுந்தரம் பிள்ளை, மாதவி மாண்பு, சிலப்பதிகாரச் சொற்பொழிவு ஆகிய நூல்கள் வழியே மு.வ. கருத்துகளுக்கு மறுப்புக் கூறியதோடு அமையாமல், அவ்விரு நூல்களை உழுதசால் உழாது மாற்றுப் பார்வையிலான அணுகுமுறைக்கும் இடம் தந்தார். சிலம்பு குறித்த சில செய்திகளை எதிர்ப்பார்வையில் கண்ட சுப்பிரமணிய ஆச்சாரியாரின் நூலும் இது தொடர்பாகச் சுட்டத்தக்கது.

தமிழில் அவ்வப்போது ஆரியர், திராவிடர் என்ற இன வேறுபாடு மொழி இலக்கிய அடிப்படையில் நிலவிவந்ததைச் சுட்டிக் காட்டுவது போல, வடமொழியில் தமிழின் செல்வாக்கு, தமிழ் வடமொழிக்கு அளித்த பங்களிப்பு முதலிய கருத்தியல் நிலைகள் மெல்ல மெல்ல உருவாக்கம் பெற்றன. தமிழ்ப் பண்பாடு சமூகச் சூழ்நிலையின் பெருமையைப் பண்டைய நூல்கள் வழிக் காட்டும் முயற்சியில் கல்வி சார் ஆராய்ச்சியாளர்கள் ஈடுபட்டனர். இதன் எதிரொலியாகத் தான் காப்பியம் குறித்த ஆய்வுகள் வெளிப் பட்டன. மு.வ., அ. முத்துசிவன், அ.ச.ஞா., வ.சுப. மாணிக்கம், ச.வே. சுப்பிரமணியன், ம.ரா.போ. முதலியோர் தம் ஆய்வுகளில் தவறாது பண்டைய பெருமையைப் பதிவு செய்தனர். கல்விசார் நிறுவனத் திறனாய்வு (Academic Criticism) ஐம்பது அறுபதுகளில்

பெரிதுமாகத் தமிழ் ஆய்வுலகில் இடம்பெற்ற காலகட்டமாகக் கருதலாம். பழங்கால இலக்கியத்திற்கு மெருகு ஊட்டி மேலை நாட்டுத் திறனாய்வுகளை இணைத்து ஆராயும் போக்குளை உணர்த்திய பாங்கு மற்றும் சிலரைச் சாரும்.

திறனாய்வுக் கலையில் அதன் அடித்தளத்தை விரிவுபடுத்தி யோருள் ஒருவரான தெ.பொ.மீ. சமூகம், மொழித் தொடர்பான நோக்குகளிலும் ஏனைய அணுகுமுறைகளிலும் இலக்கியத்தை ஆய்வுக்கு உட்படுத்தியவர். இதற்கு இவரிடம் அமைந்த பன்மொழி அறிவு பயன்பட்டது. கானல்வரி, குடிமக்கள் காப்பியம் முதலிய நூல்களில் இவரது பன்முக ஆய்வுப் போக்கைக் கண்டு கொள்ள முடியும்.

ஐம்பதுகளிலும் அதன் பின்னரும் அமைந்த கால கட்டங்களில் தமிழைச் சிறப்பாக எடுத்துக் கற்ற/கற்பித்த மாணவர்களுக்கும் பேராசிரியர்களுக்கும் மேலைநாட்டுத் திறனாய்வாளர்கள் (ஹட்சன், ஆபர்கிராம்பி, வின் செஸ்டர், ஏ.சி. பிராட்லி, மாத்யூ ஆர்னால்ட், ரிச்சர்ட்சன், ஹேஸ்லிட் முதலானோர்) எழுதிய நூல்கள் பெரிதுமாகப் பயன்பட்டன. அத்தகையோரின் கருத்துகளை உள்வாங்கிக் கொண்டு திறனாய்வுத் துறையை அகலப்படுத்திய போக்கு அக்கால கட்டத்தில் காணப்பட்டது.

அ.ச.ஞா., மு.வ. ஆகியோர் மேலைநாட்டு இலக்கியத் திறனாய்வு நூல்களைத் தமிழ்ப் பாடத்திற்கு ஏற்ப அறிமுகப்படுத்தினர். இலக்கியக்கலை (அ.ச.ஞா.) இவ்வகையில் முன்னோடியான நூல் எனலாம். மு.வ. எழுதிய இலக்கிய ஆராய்ச்சி, இலக்கியத்திறன், இலக்கிய மரபு ஆகிய நூல்கள் மேலே கூறிய மேனாட்டுத் திறனாய்வு அறிஞர்களின் கருத்துகளை உட்படுத்தி எழுதப்பெற்ற நூல்களாகும். எழுபது களிலும் அதன் பின்னரும் இப்பணி வெகுவாகச் சிலரால் மேற்கொள்ளப்பட்டுத் திறனாய்வுக் கலை நூல்கள் பல வெளிவந்தன. தா.ஏ. ஞானமூர்த்தி, க. பாலச்சந்திரன், நபிச்சமுத்து, சி.இ. மறைமலை, அ.அ. மணவாளன், தசு. நடராசன், க. பஞ்சாங்கம் முதலிய கல்விசார் நிறுவனங்களைச் சார்ந்தோரே பெரும்பான்மையும் இத்துறையில் நூல்களை எழுதினர்.

எழுபதுகளில் தமிழியல் ஆய்வு பரந்துபட்ட நிலையில் மேற்கொள்ளப்பட்டதற்குத் தமிழில் எழுந்த இலக்கிய வகைகளின் வளர்ச்சி காரணமாகும். புத்திலக்கிய ஆய்வுப் பார்வைகள் விரிவடைந்தன. இலக்கியப் போக்கில் காணப்பட்ட

மாற்றம், திறனாய்வுப் போக்கிலும் தென்பட்டது. புதிய திறனாய்வு அணுகுமுறைகளின் தோற்றுவாய், இக்காலகட்டத்தில் தொடங்கியது. பழைய மரபுமுறைத் திறனாய்வுப் பார்வை புத்தாக்கம் பெற்றது. சிறுகதை, புதினம், நாடகம், கவிதை முதலிய இலக்கிய வகைகள் குறித்துத் திறனாய்வாளர்கள் புதுமையான கண்ணோட்டங்களை முன்வைத்தனர். உள்ளடக்க ஆய்வுகளுக்கு அப்பாலும், புதிய பார்வைகள் கிடைக்கத் தொடங்கின. இதனால் இலக்கியத்தின் அமைப்பு நிலை, உத்திகள், அணுகுமுறை போன்றவை மேற்கொள்ளப்பட்டன. சமூகவியல் நோக்கிலான பார்வைகள், திறனாய்வுக் கலைக்குப் புத்துயிர் ஊட்டிய காலம் இதுவெனலாம். இயக்க வழியிலான பார்வைகளும் இக்காலகட்டத்தே அரும்பின. பொதுவுடைமை வாதிகள் தங்கள் இடதுசாரி ஆய்வுகளை மார்க்சிய ஆய்வுப் பார்வையில் செலுத்தத் தொடங்கினர். அழகியல், வரலாற்று முறைக் கண்ணோட்டம், சமூகவியல் ஆகிய நிலைகளில் ஆய்வியலை அணுகி ஆய்வுலகில் புதுமையை உணர்த்தும் காலகட்டத்திற்குத் தமிழியலைக் கொண்டு சென்றனர்.

ஆய்வில் புதிய போக்குகள் உணர்த்தப்பட்ட இக்கால கட்டம் இன்றியமையாதது. கல்விசார் நிறுவன ஆய்வுகள் ஒருபுறம், கல்விசாராத நிலையில் செய்யப்படும் ஆய்வுகள் மறுபுறம் என்ற இரு நிலைகளை அறிய முடிகிறது. திறனாய்வுக் கலையும் விரிந்த தளத்தில் நடைபோட்டது. இதழ்கள் சில இக் கலையை ஆர்வத்துடன் வரவேற்றன; விவாதங்களை நடத்தின எழுபதுகளிலும் அதற்குப் பின்னருமான காலகட்டங்கள் தமிழாய்வுலகைப் பரந்துபட்ட நிலைக்குக் கொண்டு சென்றன. இயக்க வழியிலான ஆய்வுகள் வளர்ச்சி கண்டன. காந்திய, மார்க்சிய திராவிட இயக்கங்கள் தத்தம் நோக்கங்களில் ஆய்வுப் பரப்பை முன்னின்று உணர்த்த முற்பட்டன. இவற்றில் மார்க்சிய வழியிலான ஆய்வுகள் தமிழிலக்கிய ஆய்வுகளை அகலப்படுத்தின. மார்க்சிய அணுகுமுறை, ஏனைய அரசியல் இயக்க வழியிலான ஆய்வுகளை விட, விரிந்தது, பரந்தது, ஆழமானது. அவ் இயக்கம் சார்ந்தோர் பல்வேறு இலக்கியங்களையும் சமூகக் கண்ணோட்டத்தோடு மார்க்சிய அடிப்படையில் கண்டனர். நா. வானமாமலை, தொ.மு.சி. ரகுநாதன், எஸ். இராமகிருஷ்ணன், கே. முத்தையா, ஆர்.கே. கண்ணன், எஸ். தோத்தாத்திரி, ஞானி, தி.க.சி. என நீண்ட பட்டியல் இடும் அளவிற்கு மார்க்சியத் திறனாய்வாளர்கள் உள்ளனர். இவ்வகைத் திறனாய்வு முயற்சி,

அறுபதுகளின் இறுதியிலிருந்தே தொடங்கியதெனினும் எழுபது/ எண்பதுகளின் பின்னர் தான் உரிய பார்வையில் செயல்பட்டது. மார்க்சிய வழித் திறனாய்வின் முன்னோடிகளுள் ஒருவரான கைலாசபதியைப் பின்பற்றிக் கல்வியாளர்கள் சிலர் அத்தகு திறனாய்வுப் போக்கில் கவனம் செலுத்தத் தொடங்கினர். ஏனையோரும் இம்முயற்சியை மேற்கொண்டனர். சிவத்தம்பி, நுஃமான், கோ.கேசவன், தமிழவன், அக்கினிப் புத்திரன், பூரணசந்திரன், சி. கனகசபாபதி, அ. மார்க்ஸ், ஆ. சிவசுப்பிரமணியன், வீ. அரசு முதலிய கல்வியாளர்களிடையே மார்க்சிய அணுகுமுறை ஆய்வு வளப்படுத்தப் பெற்றது.

மேலே குறிப்பிட்ட சிலர் மார்க்சியம் பற்றிய புதிய அணுகுமுறையை மேற்கொண்டு அதனை மறு மதிப்பீடு செய்து புதிய மார்க்சீயப் பார்வையை ஆய்வுலகில் புகுத்திவருகின்றனர். மார்க்சிய அணுகுமுறையின் மறுதலையான போக்குகளைச் சுட்டிக் காட்டிப் புதிய பரிமாணத்தில் இலக்கியத் திறனாய்வை மேற்கொண்டவர்களாக ஞானி, அ. மார்க்ஸ், தமிழவன் முதலியோரைச் சுட்டலாம். இவர்கள் மார்சிய இலக்கியத் திறனாய்வுவாதிகளையும் அவர்தம் ஆய்வுப் போக்குகளையும் மறுபரிசீலனைக்கு உட்படுத்தியவர்களாவர். மார்க்சியக் கோட்பாடுகளை உட்படுத்தி எழுதிய இலக்கியத் திறனாய்வு நூல்களினால் தம்மை அடையாளப்படுத்திக் கொண்டவர். இவருடைய பள்ளு இலக்கியம் - ஒரு சமூகவியல் பார்வை, மண்ணும் மனித உறவுகளும், இலக்கியமும் இயக்கங்களும் முதலிய நூல்கள் சுட்டிக்காட்டத்தக்கன.

பழந்தமிழ் இலக்கியத்தை மார்க்சியக் கண்ணோட்டத்தோடு ஆய்வதைத் தொடங்கி வைத்தவர்களுள் தொ.மு.சி. குறிப்பிடப் பட வேண்டியவர். சிலம்பு குறித்து விரிவானதொரு தளத்தில் 'இளங்கோ யார்'? என்ற நூலை எழுதியவர். தமிழில் உள்ள இலக்கிய வகைகளைக் குறித்து முதன்முதலில் இலக்கிய விமர்சனம் என்ற நூல் வெளியிட்டவர். அண்மையில் புதுமைப் பித்தன் பற்றிய மாறான பல்வேறு கருத்துரைகளுக்கு மறுப்புத் தெரிவிக்கும் விதத்தில் 'புதுமைப்பித்தன் விமர்சனங்களும் விஷமத்தனங்களும்' என்ற நூலில் புதுமைப்பித்தனை இனங் காண்கிறார்.

மார்க்சியத் திறனாய்வு நெறியில் எஸ். இராமகிருஷ்ணன் எழுதிய நூல்கள் சுட்டக்கூடியன. திருக்குறளைச் சமூகவியல் ஆய்விற்கு உட்படுத்திய இவர், ஒப்பிலக்கியத் தளத்தை விரிவு

படுத்தியவர்களுள் ஒருவர். கம்பனும் மில்டனும் பற்றிய ஆய்வும், கம்பனும் சேக்ஸ்பியரும் என்ற ஆய்வு நூலும் குறிப்பிடத்தக்கன.

நா. வானமாமலை 'ஆராய்ச்சி' இதழ் மூலம் பல்துறைக் கூட்டாய்வை நிகழ்த்துவதற்குக் காரணமாக இருந்தவர். தத்துவம், பண்பாடு, மானிடவியல், நாட்டுப்புறவியல், உளவியல் முதலிய துறைகளைக் கலை, இலக்கியத்தோடு சார்த்திப் பார்க்கும் ஆய்வுகளை முன்வைத்தது இவ்விதழ். நா. வானமாமலையின் ஆராய்ச்சிப் போக்குகளில் யதார்த்தவாதமும், நவீனத்துவமும் பிரதிபலிப்புக் கோட்பாடும் காணப்பட்டன. நா. வானமா மலையின் அடிச்சுவட்டில் அவரது ஆய்வுமுறையைப் பின்பற்றி ஆ. சிவசுப்பிரமணியம், வெ. கிருஷ்ணமூர்த்தி, மே.து. ராசுகுமார் முதலியோர் எழுதியுள்ளனர்.

மார்க்சிய ஆய்வுப் போக்குகளில் பொருள் முதல்வாதம், கருத்துமுதல்வாதம் ஆகிய இரண்டையும் உட்படுத்தி இணைத்துக் காண்பது கோவை ஞானியின் ஆய்வுப் பார்வை யாகும். மார்க்சியத் தத்துவப் பார்வையை நோக்கிய ஓர் ஆன்மத் தேடலை இவரது ஆய்வுப்போக்கில் காணலாம்.

இன்றைய நிலையில், மார்க்சிய கண்ணோட்டத்தில் செய்யப்பட்டுவரும் ஆய்வுகள், கல்விசார் நிறுவன ஆய்வுகளிலும் அதன் பரப்பை அகலப்படுத்தி வருகின்றன.

ஆய்வுகளில் இதழ்களின் பங்கும் குறிப்பிடத்தக்கது. சாந்தி, சரஸ்வதி, எழுத்து போன்ற இதழ்களே தமிழ் ஆராய்ச்சிக் கட்டுரைகளை - குறிப்பாகப் படைப்பிலக்கியத் திறனாய்வை முதன்முதலாக வெளியிட்டன. பழந்தமிழ் இலக்கியங்கள் பற்றிய ஆய்வுகள் இவற்றுக்கு முன்னோடியாக இருந்துள்ளன. இவ்வகையில் செந்தமிழ், செந்தமிழ்ச் செல்வி, தமிழ்ப்பொழில் முதலியன குறிப்பிடத்தகுந்தன. சிற்றிதழ்களில் வெளிவரும் கருத்துகள் சிலரை மட்டுமே சார்ந்திருக்கின்றன. இது ஒரு வகையில் குழுமனப்பான்மையைப் படைப்பாளர்களிடம் / திறனாய்வாளர்களிடம் தோற்றுவித்தது. லயம், மீட்சி, ஞானரதம், கணையாழி, கொல்லிப்பாவை, காலச்சுவடு முதலியன இவ் வகையின. எப்படி இருப்பினும் இவை அவ்வப்போது வெளியிடும் ஆய்வுக் கட்டுரைகள், அவற்றின் மீதான விரிவான விவாதங்கள் ஆகியன ஆய்வுக் கண்ணோட்டத்தை ஆழப்படுத்தியுள்ளன. இடதுசாரி இதழ்கள் இயக்கவழியிலான ஆய்வுப் போக்கிற்கு இடம் தந்தன. மன ஓசை, புதிய கலாச்சாரம், தாமரை முதலிய இதழ்கள் இப்படிப்பட்டவை.

புதிய புதிய அணுகுமுறைகளில் இதழ்களில் ஆய்வுகள் வெளிவந்துள்ளன. இலக்கு, படிகள், இனி நிகழ், வெளி, தமிழ்நேயம், கதைசொல்லி, ஆரண்யம் முதலியவை இவ்வகையின.

ஆங்கில இலக்கியம் கற்றுத் தமிழ் இலக்கிய ஆர்வங் கொண்டவர்களில் சிலர் தமிழாய்விலும் முன்னோடிகளாக இருந்துள்ளனர். இம்மரபு முப்பதுகளில் ஓரளவு காலூன்ற முயன்றாலும், அறுபதுகளுக்குப் பிறகே முனைப்புடன் செயல்படத் தொடங்கியது. அ.சீநிவாசராகவன், ரா.ஸ்ரீ தேசிகன், எஸ். இராமகிருஷ்ணன் முதலியோர் அறுபதுகளின் கால கட்டத்தே இரு மொழி இலக்கிய இன்பத்தைக் காட்டுதற்கு வழிகோலினர். பிறமொழி இலக்கியத்தோடு தமிழ் இலக்கியத்தை ஆய்ந்து நூல்கள் படைத்தனர். எழுபதுகளிலும் அதன் பின்னரும் க. செல்லப்பன், வை. சச்சிதானந்தம், தோத்தாத்திரி, பாலா, மருதநாயகம், முருகன், பிரம்மராஜன் முதலியோர் தமிழாய்வுக்குத் தங்கள் பங்களிப்பைச் செய்துள்ள ஆங்கிலப் பேராசிரியர்கள் ஆவர். ஒப்பியல் பார்வையிலான அணுகுமுறை, இத்தகையோரால் வளர்ச்சி பெற்றது. மதுரைப் பல்கலைக்கழகம் ஒப்பியலுக்குத் தனித்துறை அமைத்து அது தொடர்பான ஆய்வுகளை மேற்கொண்டு வருவதும் நோக்குதற்குரியது.

ஒப்பிலக்கியம் தொடர்பான பல்வேறு ஆய்வுகளைக் கல்விசார் நிறுவனங்களின் வாயிலாக மேற்கொள்ள மதுரைப் பல்கலைக்கழக ஆங்கிலத் துறை இடமளித்தது ஒரு முன்னோடியாக விளங்கியது. அங்குள்ள தமிழ்த் துறையில் தமிழண்ணல், கதிர்மகாதேவன், இரா.மோகன், திருமலை, செ. சாரதாம்பாள், இரா. காஞ்சனா முதலியோர் ஒப்பியல் ஆய்வில் குறிப்பிடப்பட வேண்டியவர்கள் ஆவர். அ.அ. மணவாளன், ஜான் சாமுவேல், ச.வே. சுப்பிரமணியன், கி. ராஜா முதலியோரும் ஒப்பீட்டுச் சிந்தனையை முன்வைத்து நூல்கள் பல எழுதியுள்ளனர்.

எழுபதுகளுக்குப் பின்னர் வளர்ந்த ஆய்வுகளில் மிகு வளர்ச்சி கொண்ட ஒரு துறையாக, இன்றுவரை நிலவி வருவது, நாட்டுப்புற இயல் ஆய்வாகும். பல்வேறு பார்வைகளில் ஆய்வு மேற்கொள்ள அது இடந்தந்துவருவது, அதன் பரந்துபட்ட எல்லையைக் காட்டுகிறது. இத்துறையில் குறிப்பிடத்தக்க சாதனைகளை அமைப்பு நிலை, அணுகுமுறை, சமூகக் கண்ணோட்டம் முதலிய தளத்திலிருந்து செயல்பட்டவர்களாகச் சிலரைச் சுட்டிக் காட்டலாம். பா.ரா. சுப்பிரமணியம், ஆறு. அழகப்பன், சு. சண்முகசுந்தரம், தெ. லூர்து,

ஆறு. இராமநாதன் முதலியோர் இத்துறையில் மிகுந்த அக்கறை கொண்டவர்களாவர்.

இக்கால நிகழ்வில், ஆங்கில வழியிலான ஆய்வுப் போக்குகளைத் தமிழில் அப்படியே கொண்டுவருவதில் அக்கறை காட்டினர் சிலர். தமிழவன், ரமேஷ், பிரேம், இந்திரன், ந.முத்து மோகன் முதலியோர் புதுமையான ஆய்வுகளுக்கு இடமளித்தனர். தமிழாராய்ச்சியின் புதிய போக்குகள் இன்று கல்வியாளர் களிடையே - குறிப்பாகத் தமிழ் இலக்கிய/இலக்கணம் கற்பிப்போரிடையே தீவிரப்படவேண்டும் என்று எண்ணுபவர்கள் இவர்கள். மேலைநாட்டு அண்மைய இலக்கிய/இலக்கணத் திறனாய்வு நூல்களின் மீது இவர்கள் பார்வை செலுத்தி, அவற்றைத் தமிழில் சோதனை முயற்சியாகப் படைத்தமை இத்தகைய எதிர்பார்ப்புகளை உருவாக்கியுள்ளது. மேலைநாட்டுத் திறனாய்வின் புதியபுதிய அணுகுமுறைகள் தீவிரமான ஆர்வத்தோடு தமிழில் சார்த்திப் பார்க்கப்பட வேண்டும் என்ற அவாவில் முன்னிற்பவர்களுள் ஒருவரான தமிழவன், அமைப்பியல் பற்றிய அணுகுமுறையைத் தமிழுக்கு அறிமுகப்படுத்தினார். அதன்பிறகு அமைப்பியல் ஆய்வுகள் பல்வேறு கோணங்களில் சிந்திக்கப்பட்டன. தமிழில் இத்தகைய வாதம், பல ஆய்வுகளை நிகழ்த்துவதற்கும், இலக்கியத்தோடு சார்த்திப்பார்ப்பதற்குமான ஒரு காலகட்டத்தை இன்றைய ஆய்வுலகில் உருவாக்கி வருகிறது. இதில் நாட்டம் செலுத்திய தமிழவனுக்குப் பிறகு பலரும் அமைப்பியல் பற்றிய நூல்களையும், கட்டுரைகளையும் அவ்வப்போது வெளியிட்டு வருகின்றனர். க. செல்லப்பன், அ.அ. மணவாளன், நாகார்சுனன், நோயல் இருதயராஜ், பூரணசந்திரன், அ. மார்க்ஸ், ந. முத்துமோகன், பொ.நா. கமலா முதலியோர் இது தொடர்பாகச் சுட்டிக்காட்டத் தக்கவர்கள்.

ஆய்வு என்பது சிக்கல் நிறைந்த ஓர் உலகம் என்பதை முன் நிறுத்துவதுபோல, அமைப்பியல் ஆய்வுகள், மற்றும் பின் நவீனத்துவ ஆய்வுகள் இன்றைய ஆய்வுலகைப் பாதித்துள்ளன. அல்லது தாக்கத்தை ஏற்படுத்திவருகின்றன. மேலே கூறிய திறனாளிகள் சிலர் இதனை உயர்மட்ட ஆய்வாகவே கருதிக் கொண்டிருப்பதால் பல்கலைக்கழக / கல்லூரி ஆய்வுகளில் இன்னும் இது ஆழமாக வேரூன்றாமல் இருக்கிறது. இந்த இடைவெளிக்குக் காரணம் புரிதல்தன்மை சற்றே கடினமாக இருப்பதாக உணரப்படுவதுதான்.

பழைய மரபுகள் தகர்க்கப்பட்டுப் புதிய தருக்க முயற்சிக்கான தளங்களில் பிரதி (Text)யைப் பார்ப்பதும், படைப்பாளி படைத்த பின் அவனுக்கும் படைப்புக்குமான உறவு அற்றுப்போகிறது என எண்ணுவதும், படைப்போனுக்கும் படிப்போனாகிய நுகர்வோனுக்கும் உள்ள உறவு, பிரதியைப் புரிய வைக்கிறது எனக் கருதுவதுமான நவீனத்துவப் போக்குகள் தமிழில் சுவடு பதித்துவருகின்றன. இந்த நவீனத்துவப் பார்வைகள் இன்றைய ஆய்வுலகில் புதிய திசையைக் காட்ட முயல்கின்றன. காலனி ஆதிக்கப்போக்கு அமெரிக்காவில் கலை, இலக்கியம், அரசியல், சமூகம், பண்பாடு, பொருளாதாரம் போன்றவற்றில் புதிய சூழலை ஏற்படுத்தியது. தமிழ்ச் சமுதாயத்திலும் கலை, இலக்கியம் மற்றும் அவை தொடர்பான சிந்தனைகளிலும் பழமரபு புறக்கணிக்கப்பட்டுப் புதுமாற்றம் தேவை என்றுணர்ந்து ஆய்வுலகைப் புதிய கோணத்தில் செலுத்தும் முயற்சியில் காலனிய எதிர்ப்புப் போக்கிலான முறையில் சிலர் இறங்கியுள்ளனர். இக்காலப் புதிய திறனாய்வுப் போக்குகளின் இத்தகைய அணுகுமுறைகள் கல்விக் கழகங்களிலும் சாதாரண வாசகர் மத்தியிலும் பரவலாக அறியப்படும்பொழுதே அவை வரவேற்பினைப் பெறும்.

எண்பதுகளிலும் தொண்ணூறுகளிலும் இவை போன்ற முயற்சி இலக்கிய இயக்கம் பற்றிய சிந்தனையை வளர்த்தது. அதன் பயனாகத் தமிழ் இலக்கியத்தோடு இலக்கிய இயக்கப் பார்வையை ஆய்வியலில் புகுத்தினர். பாலா (சர்ரியலிசம்) எஸ்.வி. இராஜதுரை (எக்ஸிஸ்டென்சியலிசம்), (அந்நியமாதல்) முதலியோரின் பங்களிப்பு, மேலை இலக்கிய இயக்க வழியிலான சிந்தனைகளைத் தமிழுக்கு அளித்தது. மேலைநாட்டு இலக்கிய அணுகுமுறை குறித்த தனி நூல்கள் தமிழில் வெளிவரத் தொடங்கிப் புதிய அணுகுமுறைக்கு வித்திட்டன. தமிழில் இலக்கிய இயக்க வழிப் பார்வையில் சிறு சிறு நூல்களைத் தமிழண்ணல் அறிமுகப்படுத்தியதையும் இங்குச் சுட்டிக் காட்டலாம்.

இலக்கிய இயக்கங்கள் குறித்து விரிவாக எழுதிய சி.சு. செல்லப்பாவின் கட்டுரைகள் கல்விசார் நிறுவனம் சாராத நிலையில் சுட்டிக்காட்டத்தக்கன.

அமைப்பியலின் இன்னொரு கூறாகிய பின் நவீனத்துவம் பற்றிய நூல்களும் ஆய்வுகளும் அண்மைக் காலத்திய வளர்ச்சி யாகக் காணப்படுகின்றன. இவற்றைப் பின்பற்றி இலக்கிய

ஆய்வுகள் மட்டுமன்றிப் படைப்புகளும் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. மிக அண்மைக் காலங்களில் பின் நவீனத்துவக் கூறுகளில் ஒன்றான மாய யதார்த்தவாதம் (Magical Realism) என்ற உத்தியடிப்படையில் ஆய்வுகளும் படைப்புகளும் வெளிவந்துள்ளன. இலத்தீன் அமெரிக்க எழுத்தாளர் காப்ரியேல், மார்க்குவிஸ், ஆக்டேவியா பாஸ் போன்ற நவீன இலக்கியப் படைப்பாளிகளி டமிருந்து அறிமுகமான இவ்வுத்தி தமிழிலும் சோதனை செய்து பார்க்கப்படுகின்றது. அண்மைக் காலத்தில் ஓரளவு மேல்மட்ட ஆய்வுகளில் இம்முயற்சி காணப்படுகின்றது. பின் நவீனத்துவ உத்திகளுள் ஒன்றாக மேலைநாடுகளில் காணப்படும் இவ்விலக்கிய ஆய்வு, தமிழில் இன்னும் முயற்சி நிலையிலேயே இருந்துவருகிறது.

இன்றைய காலகட்டம் தலித்தியக் கோட்பாடுகளிலும், பெண்ணியப் பார்வையிலுமாகத் த்மிழாய்வுலகைப் பரவலாக்கி யுள்ளது. ஒடுக்கப்பட்டவர்களால் ஒடுக்கப்பட்ட மக்களைப் பற்றி எழுதுவது எனத் தலித்திற்குரிய வரையறைப் பொதுவாகக் கூறப்பட்டாலும், தலித் பற்றிய செல்வாக்கு புதிய பரிமாணங் களில் நோக்கப்படுகிறது. தலித்தியம் அண்மைக் காலத்தில் படைப்பாளிகளையும் ஆய்வாளர்களையும் உருவாக்கி வருகிறது. ராஜ் கௌதமன், இந்திரன், அ. மார்க்ஸ், ரவிக்குமார், பத்மாவதி, விவேகானந்தன் முதலியோர் தலித்தியம் தொடர்பான ஆய்வுகளில் தோய்ந்து தம் பங்களிப்பை ஆற்றி வருகின்றனர்.

சமூகத்தில் உதிரித் தொழிலாளர்களாக இருக்கும், அடிமட்டத்து வகுப்பினரைப் பற்றிய சமூகவியல் ஆய்வுக் கண்ணோட்டங்களில் அவர்கள்தம் வாழ்க்கைப் போக்கு, உரிமை இல்லாதிருத்தல், ஒடுக்கு முறைக்கான காரணங்கள் முதலியனவற்றை ஆய்வு செய்துள்ள முயற்சி அண்மைக் காலத்து வரவாகும். அத்தகைய மாந்தர்களை விளிம்பு நிலை மாந்தராகச் (Sabalturn) சுட்டிக் காட்டும் அ. மார்க்ஸின் ஆய்வுத் தொகுப்பு குறிப்பிடத்தக்கது.

பெண்ணியம் பற்றிய ஆய்வுகள் அண்மைக் காலத்தில் வலிமைபெற்று வருகின்றன. ஆணாதிக்கத்தினின்றும் முற்றுமாக விடுதலை பெறவேண்டும் என்ற கருத்தியலை அனைத்துத் துறைகளிலும் வலியுறுத்தும் மேலை நாட்டினரின் பெண்ணியல் வாதம் தமிழ் ஆய்வுகளில் உற்று நோக்கப்படுகின்றது. பழங்கால மகளிர் மரபுகள் தகர்க்கப்படுவதோடு ஆணை அந்நியப்படுத்தி எத்தகைய சவால்களையும் எதிர்கொள்ளும் போராட்டக் குணத்தை நிலைநாட்ட முயலும் பெண்ணியக் கோட்பாடுகள்

மேலை நாடுகளில் வளர்ந்துவருகின்றன. தமிழ் இலக்கிய உலகிலும் சமூக மதிப்பீடுகளிலும் பெண்களின் உரிமையும் பங்கும் பற்றிய ஆய்வுப்போக்கு, ஒரே குறிக்கோளை மைய அச்சாகக் கொண்டு செயல்படுகிறது. பெண்ணியக் கோட்பாடுகள் குறித்து நூல்கள் படைத்தோருள் முத்துசிதம்பரம், இரா. பிரேமா, தாயம்மாள் அறவாணன், ராஜம் கிருஷ்ணன், க. பஞ்சாங்கம் முதலியோர் சுட்டிக்காட்டத்தக்கவர் ஆவர்.

இவை தவிர தமிழ் மரபிலக்கண முறையில் அமையும் ஆழாய்வுகளும் பலவாக உள. தமிழாய்வு வரலாற்றில் இவற்றிற்கும் முக்கியமான இடமுண்டு. இலக்கணம் முதலாகத் தற்கால இலக்கியங்கள் வரை, அன்று முதல் இன்று வரை சிறப்பான ஆய்வுகள் பல எழுந்துள்ளன. மிகச் சுருங்கிய நிலையில் அவற்றை இங்குக் காணலாம். மு. இராகவையங்கார் (தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி), சி. இலக்குவனார் (தொல்காப்பிய ஆராய்ச்சி) எனத் தொல்காப்பியத்துள் பல சிறப்பாய்வுகள் நிகழ்ந்துள்ளன. பொற்கோ, சோம. இளவரசு, ஆ. சிவலிங்கனார், சோ. ந. கந்தசாமி (தமிழ் யாப்பியலின் தோற்றமும் வளர்ச்சியும்) போன்ற பலரும் இதில் கவனம் செலுத்தியுள்ளனர். ச.வே. சுப்பிரமணியத்தின் இலக்கணத் தொகை நூல்களும் எண்ணத்தக்கன. அன்னிதாமசின் யாப்பியல், ந.வீ. ஜெயராமனின் சிலப்பதிகார யாப்பமைதி, மணிமேகலை யாப்பமைதி முதலானவையும் குறிக்கத்தக்கன. ச. அகத்தியலிங்கம், செ.வை. சண்முகம், கருணாகரன், மு. கோதண்டராமன் முதலானோர் மொழியியல் பார்வையில் தமிழாய்வு செய்வதில் முன்னிற்கின்றனர்.

சங்க இலக்கிய ஆய்வாளர்களில் மா. இராசமாணிக்கனார் (பத்துப்பாட்டு ஆராய்ச்சி), மு.வ. (சங்க இலக்கியத்தில் இயற்கை), ரா. சீனிவாசன் (சங்க இலக்கியத்தில் உவமைகள்), தமிழண்ணல் (சங்க இலக்கிய ஒப்பீடு), வ.சுப. மாணிக்கனார் (தமிழ்க் காதல்), குளோறியா சுந்தரமதி (பகுப்பாய்வு நோக்கில் சங்க இலக்கியம்), முத்துக் கண்ணப்பர் (நெய்தல்), கு.வெ. பால சுப்பிரமணியம் (புறத்திணை ஆராய்ச்சி) எனப் பலர் சுட்டத்தக்கவராவர். இராம. குருநாதனின் இயற்கையும் சமுதாய வாழ்க்கையும், ச. சிவகாமியின் சங்கத் தமிழியல், வெ.தெ. மாணிக்கத்தின் மருதம் போல்வனவும் கருதற்பாலன. ரா.பி. சேதுப்பிள்ளை, அ.கி. பரந்தாமனார், அ.மு. பரமசிவானந்தம், துரை. அரங்கசாமி முதலான பேராசிரியப் பெருமக்களும் இங்கு நினைத்தற்பாலர்.

திருக்குறள் முதலான நீதி இலக்கிய ஆய்வுகளில் க.த. திருநாவுக்கரசு (திருக்குறள் நீதி இலக்கியம்), தி. முருகரத்தினம் (குறள் கண்ட பொருள் வாழ்வு), கு. மோகனராசு (ஒப்புமை ஒளியில் வள்ளுவம்), இ. சுந்தரமூர்த்தி (வான்மறை வள்ளுவம்) போன்றோர் சிறப்புற்றுள்ளனர். தொடரும் காப்பிய ஆய்வுகளில் ச.வே. சுப்பிரமணியன் முன்னிற்கிறார். காப்பியப் புனைதிறன், இளங்கோவின் இலக்கிய உத்திகள், சிலம்பும் சிந்தாமணியும், கம்பரில் உலகியல், கம்பன் கற்பனை, இளங்கோவும் கம்பனும் முதலான பல நூல்கள் இதனை உணர்த்துகின்றன. சிலப்பதிகார ஆய்வாளர்களில் மார்க்கபந்து சர்மா, சிலம்பின் கொடிகள், சிலப்பதிகார ரசனை போன்ற நூல்களால் பெருமை பெற்றுள்ளார். ஔவை சு. துரைசாமி பிள்ளையின் சிலப்பதிகார ஆராய்ச்சி, பொ. திரிகூட சுந்தரம் பிள்ளையின் சிலப்பதிகாரம், தா.ஏ. ஞானமூர்த்தியின் 'தமிழ்க் காப்பியங்களில் அவல வீரர்கள்', அன்னிதாமசின் 'சிலம்பொலி முதல் இளங்கோ வரை', அ. அறிவுநம்பியின் 'கூத்தும் சிலம்பும்', ச. சிவகாமியின் 'சிலம்பும் மணீயமும்', சரளா ராசகோபாலனின் 'வழிவழிச் சிலம்பு', முத்துசண்முகனின் 'இரட்டைக் காப்பியக் கிளைக்கதைகளும் துணைக்கதைகளும்' எனப் பல ஆய்வுகள் முன்னிற்கின்றன.

ஔவை சு. துரைசாமி பிள்ளையின் 'மணிமேகலை ஆராய்ச்சி', 'சிந்தாமணி ஆராய்ச்சி', முத்துசண்முகத்தின் 'துறவு தந்த காப்பியம்', தா.ஏ. ஞானமூர்த்தியின் 'சிந்தாமணிச் செல்வம்', மா. இராசமாணிக்கனாரின் 'பெரியபுராண ஆராய்ச்சி', சொ. பரமசிவத்தின் 'பெரியபுராணம் காட்டும் பண்பாடு', சு. தமிழ்ச்செல்வியின் 'பெரியபுராணம் காட்டும் வயலும் வாழ்வும்', மணவை முஸ்தபாவின் 'சிந்தைக்கினிய சீறா', பா. வளன்அரசின் 'தேம்பாவணித் திறன்', லூர்து சாமியின் 'தேம்பாவணியில் மேனாட்டு இலக்கியத்தாக்கம்', சிலம்பொலி சு. செல்லப்பனின் 'பெருங்கதை ஆராய்ச்சி', 'நெஞ்சையள்ளும் சீறா' போல்வன பிற காப்பிய ஆய்வுகளில் சுட்டத்தக்கனவாகும்.

வ.வே.சு. ஐயர், வையாபுரிப்பிள்ளை, ஜெகவீரபாண்டியனார், பி.ஸ்ரீ., தொ.மு. பாஸ்கரத் தொண்டைமான் போன்ற முதுபெரும் கம்பன் ஆய்வாளருடன் மற்றும் பலர் எண்ணத்தக்கவராவர். மு.மு. இஸ்மாயீல் (கம்பர் கண்ட இராமன்), கு. கோதண்டபாணி (கம்பருக்குக் கீதை கொடுத்தவர் வான்மீகரா?), கு. திருமேனி (கம்பரும் மெய்ப்பாட்டியலும்), ச. தண்டபாணி தேசிகர்

(வள்ளுவரும் கம்பரும்), ந. சுப்புரெட்டியார் (கம்பன் படைத்த சிறுபாத்திரங்கள்), அ. அருணகிரி (கம்பன் காட்டும் தீராக் காதலன்), ச. சிவகாமி (இருபதில் கம்பன்), சரசுவதி இராமநாதன் (கம்பனும் கண்ணதாசனும்), பழ. பழனியப்பன் (கம்பன் என்றொரு நிர்வாகி) முதலானோர் அவர்களுள் சிலராவர்.

சமயம் மற்றும் தத்துவம் தொடர்பாகச் சோ.ந. கந்தசாமி (திருமுறை இலக்கியம்), ந. சுப்பு ரெட்டியார் (ஆன்மீகமும் அறிவியலும்), ஔவை சு. துரைசாமி பிள்ளை (சைவ சமய வரலாறு), ப. அருணாசலம் (பக்தி இலக்கியம்), கி.வா. ஜகந்நாதன் (கந்தரலங்காரச் சொற்பொழிவுகள்), வை. இரத்தினசபாபதி (வீரசைவம்), தெ. ஞானசுந்தரம் எனப்பலர் சிறப்பான ஆய்வுகளை வழங்கியுள்ளனர்.

ந.வீ. ஜெயராமன் சிற்றிலக்கிய ஆய்வைத் தொடங்கி வளர்த்த பெருமைக்குரியவராவார் (சிற்றிலக்கியச் செல்வங்கள், சிற்றிலக்கியத் திறனாய்வு). மு. சண்முகம்பிள்ளை (சிற்றிலக்கிய வளர்ச்சி), கி. இராசா (அறிவியல் நோக்கில் இலக்கிய வளர்ச்சி), சிலம்பு நா. செல்வராசு (இருபதாம் நூற்றாண்டுச் சிற்றிலக்கியங்கள்), சா. வளவன் (பிள்ளைத் தமிழின் தோற்றமும் வளர்ச்சியும்), கு. முத்துராசன் (சிற்றிலக்கியச் சிந்தனைகள்) மற்றும் தமிழ்க்கோட்பாட்டு வரிசை எனச் சிற்றிலக்கிய வகைகளைத் தனித்தனியே அறிமுகப்படுத்தும் எஸ். சௌந்தர பாண்டியன் எனப்பலர் இங்கு நோக்கத்தக்கவராவர்.

இக்கால இலக்கியத் திறனாய்வாளரில் அ.நா. பெருமாள், குமாரவேலன் போன்றோர் நாடக ஆய்வில் தடம் பதித்துள்ளனர். புனைகதைத் திறனாய்வில் எழில் முதல்வன், தா.வே. வீராசாமி, சு. வெங்கட்ராமன், இராம. குருநாதன் முதலியோர் குறிப்பிடத் தக்கவராவர். இக்காலக் கவிஞரில் பாரதியும், பாரதிதாசனும் பரந்து விரிந்த ஆய்வுகளை மிகுதியாகப் பெற்றுள்ளனர். கண்ணதாசன், கவிமணி முதலான மரபு மற்றும் புதுக்கவிஞர் பலர் பற்றிய தனியாய்வுகளும், பொதுவான கவிதையாய்வுகளும் பல்கிப் பெருகியுள்ளன.

ஆய்விற்கு அடிப்படைத் தரவுகளைத் தொகுத்துத் தரும் பணியும் இருபதின் பிற்பகுதியில் தோன்றி வளர்ந்து ஆய்வு வளர்ச்சிக்குத் துணையாகியுள்ளன. ஆ. சிவலிங்கனார் மற்றும் க. வெள்ளைவாரணனாரின் தொல்காப்பிய உரைவள நூல்கள், துரைபட்டாபிராமனின் இலக்கண ஆய்வடங்கல், கேரளப்

பல்கலைக்கழகச் சங்க இலக்கிய அட்டவணை, சு. அமிர்த லிங்கத்தின் சங்க இலக்கியக் களஞ்சியம், இரா. காசிராசனின் சிலப்பதிகார ஆய்வடங்கல், ச. சிவகாமியின் கம்பன் ஆய்வடங்கல், இரா. மோகனின் மு.வ. ஆய்வடங்கல், சு. வெங்கட் ராமனின் அகிலன் ஆய்வடங்கல், அறிவழகனின் ஜெயகாந்தன் ஆய்வடங்கல் என இத்தகு நூல்களின் வரவும் பெருகித் தமிழாய்வு வளர்ச்சிப் பாதையில் சிறப்பிடம் பெற்றுள்ளது.

தமிழாய்வு வரலாற்றில் சிலம்புச் செல்வர் ம.பொ. சிவஞானம் (விடுதலைக்கு முன் தமிழ் வளர்ந்த வரலாறு, வள்ளலார் கண்ட ஒருமைப்பாடு), குன்றக்குடி அடிகளார் (குன்றக்குடி அடிகளார் நூல்வரிசை - 16 தொகுதிகள்), பெ.சு. மணி (பாரதியியல் ஆய்வுக் கட்டுரைகள், வ.வே.சு. ஐயர் அரசியல், இலக்கியப் பணிகள்) முதலானோரும் எண்ணப்பட வேண்டியவர்களாவர். முழுமையான தமிழார்வத்தால் இவர்கள் படைத்துள்ள எண்ணற்ற நூல்கள் சுவைத்து மகிழவும் சிந்திக்கவும் தக்கன. பிற துறை அறிஞராலும் தமிழாய்வு வளம் பெற்றுள்ளமைக்குப் பி.எல்.சாமி சிறந்த எடுத்துக்காட்டாவார். கம்பன் காவியத்தில் உயிரினங்கள், இலக்கியத்தில் அறிவியல், சங்க நூல்களில் புள்ளின விளக்கம் முதலிய நூல்கள் இதனை உணர்த்தும்.

தமிழாய்வுப் பணியில் சென்னை, மதுரை, கேரளப் பல்கலைக் கழகங்களும் தம் பங்காற்றியுள்ளன. இவற்றுடன் தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகம், சென்னை ஆசியவியல் நிறுவனம் ஆகியவற்றின் தமிழ்ப்பணியும் பாராட்டத்தக்கவை யாகும். இவை அனைத்தினும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் பணி வியந்து போற்றுதற்குரியதாகும். ஆய்வுலகிற்கு வழிகாட்டும் நெறிப்படுத்தும் அடிப்படை ஆய்வுகள் (ஆராய்ச்சி நெறி முறைகள், தமிழாய்வுக் களங்கள்); தமிழுக்கென இலக்கியக் கொள்கைகள் உண்டு என்பதை அழுத்தமாக உணர்த்துதல் (தமிழிலக்கியக் கொள்கைகள் ஒன்பது தொகுதிகள்); ஊர்ப் பெயராய்வுகள் (செங்கை மாவட்ட ஊர்ப்பெயர்கள்); கலையியல் (தமிழர் உணவு, தமிழர் பழக்கவழக்கங்களும் நம்பிக்கைகளும்), தொல்லியல் (காசுஇயல்), சமூகவியல் (இருபதின் கவிதைகளில் சமூகநீதிக் கோட்பாடு), சமயவியல் (தமிழகத்தில் ஆசீவகர்கள்), பெண்ணியல் (தமிழக மகளிரியல்), ஒப்பியல் (கம்பன் எழுத்தச்சன் இராமாயணங்கள், தமிழும் பிறதுறைகளும்), வரலாற்றியல் (காந்தீயப் பெருந்தலைவர் காமராசர்), மருத்துவயியல்

(கண்மருத்துவம்), அறிவியல் (தமிழும் விலங்கியலும்), இதழியல் (விடுதலைக்கு முந்தைய தமிழ் இதழ்கள்), கோட்பாட்டாய்வியல் (அழகியல்), சங்க முதல் தற்காலம் வரையிலான இலக்கியவியல் (பாரதியார் வாழ்க்கைக் கொள்கைகள், திவ்வியப்பிரபந்தத்தில் மனம்), நாட்டுப்புறவியல் (நாட்டுப்புறவியலில் உளவியல் பார்வை), சுவடியியல் (சுவடியியல் பயிற்சிக் கையேடு, மனைநூல்), மொழிபெயர்ப்பியல் (மொழிபெயர்ப்பியல்), தமிழறிஞரியல் (தமிழ் வள்ளல் பாண்டித்துரையார்), இலக்கணவியல் (கிறித்தவ அறிஞர்களின் இலக்கணப்பணி) எனத் தமிழாய்வுத் துறைகள் அனைத்திலும் இதனாய்வு வெளியீடுகள் பரந்து நிற்கக் காண்கிறோம். ஐந்நூற்றுக்கும் மேற்பட்ட நூல்களை இவற்றில் வெளியிட்டு பலவற்றில் முன்னோடியாகத் திகழ்வதுடன் ஆய்வாளர்களுக்குக் கலங்கரை விளக்கமாகவும் அமைவது போற்றிப் பாராட்டப்பட வேண்டியதாகும்.

தமிழில் பிறதுறை ஆய்வுகளும் மொழிபெயர்ப்பு ஆய்வுகளும் ஓரளவு வளர்ச்சியுற்று வருகின்றன. மொழி பெயர்ப்புத் திறனாய்வு (Translational Criticism) என்ற வகையில் சிலவே தமிழாய்வில் இடம்பெற்றுள்ளன. அறிவியலோடும் நுண்கலையோடும் ஒப்பிட்டுக் காணும் ஆய்வு முறைகளும் தமிழில் குறைவே. தமிழியல் ஆய்வு என்ற தொடர் அறிவியல் வழியிலான ஆய்வினைச் சுட்டும். இலக்கியத்தைப் புதிய புதிய தடங்களில் செலுத்துதற்கு இவ்வகை ஆய்வுப் போக்கு துணைசெய்யும். இன்றைய ஆய்வு நிலைகளில் பகுப்பாய்வு, ஒப்பாய்வு தரவுகளைத் தொகுத்தல், சான்று தேடுதல் முதலியன அறிவியல் ஆய்வில் தமிழிலக்கியத்தைக் காணுதற்கான சாத்தியக் கூறுகளைக் கொண்டுள்ளன.

இலக்கிய, இலக்கண மற்றும் பிறதுறை தமிழ் ஆய்வுகளை ஆய்வு செய்யும் பாங்கு இன்று வளர்ந்து கொண்டிருப்பது சுட்டத்தக்கதாகும். க. பஞ்சாங்கத்தின் தமிழ் இலக்கியத் திறனாய்வு வரலாறு, பச்சையப்பன் ஆய்வரங்கத்தின் தமிழ் ஆய்வு வளர்ச்சி வரலாறு என்பன எடுத்துக்காட்டுகள்.

ஆய்வு வரலாறு என்பது நீண்டதொரு பயணமாகத் தொடர்வதாகும். இலக்கிய வகைகள் விரிய விரிய அதற்கானத் திறனாய்வு வகைகளும் வளர்வது இயல்பானது. இரண்டும் இணைந்து சென்றே புதிய திசைகளைக் காட்டுவதும் கண்கூடாகத் தெரிகிறது.

# இலங்கை

க. அருணாசலம்

ஏறத்தாழக் கி.பி. பதின்மூன்றாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்து, குறிப்பாக யாழ்ப்பாண இராச்சியத்தின் தோற்றக் காலத்திலிருந்து இன்று வரையிலான இலங்கைத் தமிழ் இலக்கிய வரலாற்றைத் தொடர்ச்சியாகவும் பெருமளவு தெளிவாகவும் அறிந்துகொள்ள முடிகின்றது. அதே போன்று மரபுமுறையிலான ஆய்வு முயற்சிகளும் இடம்பெற்று வந்துள்ளமையையும் அவை ஏறத்தாழப் பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியிலிருந்து படிப்படியாக அறிவியல் பூர்வமான ஆய்வுகளாகப் பரிணமித்தமையையும் அவதானிக்கலாம். இலங்கையில் நவீன ஆய்வு நெறிமுறைகளின் அடிப்படையிலான முயற்சிகள் பல்வேறு வளர்ச்சிப்படிநிலைகளை எய்திக் கொண்டிருக்கின்றமை பெருமளவிற்கு மன நிறைவைத் தருவதாகும்.

தமிழியல் தொடர்பாக இலங்கையின் தமிழ்பேசும் சமூகங்களைச் சேர்ந்தோரது ஆய்வு முயற்சிகள் மட்டுமே இச்சிறு கட்டுரையில் நோக்கப்படும். இலங்கையின் பெரும்பான்மைச் சமூகத்தைச் சேர்ந்தவர்களும் இலங்கையில் வாழ்ந்த மேலைத் தேயத்தவர்களும் தமிழியல் தொடர்பாக ஆய்வுகள் செய்துள்ளனர் என்பதை நாம் மனங்கொளல் வேண்டும்.

இலங்கையில் தமிழியல் தொடர்பாக இடம்பெற்று வந்துள்ள ஆய்வு முயற்சிகளை முக்கியமான மூன்று பிரிவுகளுள் வகுத்து நோக்கலாம். அவையாவன:

(1) மரபுமுறையிலான ஆய்வு முயற்சிகள்

(2) மரபுமுறையுடன் ஓரளவேனும் நவீன ஆய்வு நெறிமுறைகளைப் பின்பற்றிய ஆய்வு முயற்சிகள்

(3) அறிவியல்பூர்வமானதும் நவீன ஆய்வு நெறிமுறைகளுடன் கூடியவையுமான ஆய்வு முயற்சிகள்.

இம்மூவகைப் பிரிவுகளினுள்ளும் பல்வேறு உபபிரிவுகள் இடம்பெற்று வந்துள்ளன என்பதையும் நாம் மனத்திருத்துதல் அவசியமாகும். எனினும் அவைபற்றியெல்லாம் நுணுக்கமாக நோக்குவதற்கு இச்சிறுகட்டுரையில் இடமில்லை. அதே போன்று தமிழியல் தொடர்பான இலங்கையின் ஆய்வாளர்கள் எல்லோரையுமோ அவர்களது ஆய்வு முயற்சிகள் பற்றிய எல்லா விவரங்களையுமோ இக்கட்டுரையிற் குறிப்பிடுதல் சாத்தியமன்று.[3]

மேலும் இலங்கையில் இடம்பெற்று வந்துள்ள ஆய்வு முயற்சிகளைப் பின்வரும் முக்கிய தலைப்புகளில் நோக்கலாம்.

(1) பதிப்பு முயற்சிகளும் அகராதி முயற்சிகளும்
(2) தமிழ் இலக்கிய வரலாறு
(3) தமிழ் மரபிலக்கணமும் மொழியியலும்
(4) பண்டைய தமிழ் இலக்கியங்களும் இடைக்காலத் தமிழ் இலக்கியங்களும்
(5) நவீன தமிழ்க்கவிதையும் புதுக்கவிதையும்
(6) நாவலும் சிறுகதையும்
(7) இஸ்லாமியத் தமிழ் இலக்கியம்
(8) மலையகத் தமிழியல்
(9) ஆற்றுகைக்கலைகள்
(10) நாட்டார்வழக்காற்றியல்
(11) வரலாற்று நாயகர்களும் அறிஞர் பெருமக்களும்
(12) சாசனவியலும் தொல்பொருளியலும் வரலாற்றியலும்
(13) சமூகமும் பண்பாடும்
(14) சமயமும் தத்துவமும்
(15) அரசியலும் பொருளாதாரமும்
(16) க்ல்வியியல்
(17) பெண்ணியம்
(18) பத்திரிகை
(19) தமிழும் அறிவியலும்
(20) மருத்துவம்
(21) பல துறைகள் சார்ந்த மொழிபெயர்ப்பு முயற்சிகள்

இத்தகைய பிரிவுகள் கூட முழுமையான ஒன்றல்ல.

தமிழியல் தொடர்பாக இலங்கையில் ஏறத்தாழ 1960களின் இறுதிவரை இடம்பெற்ற ஆய்வு முயற்சிகளுள் மிகப் பெரும் பகுதி தமிழகத்தைப் பற்றியதாகவே அமைந்துள்ளமையையும் ஏறத்தாழ 1970களின் ஆரம்பத்திலிருந்தே இலங்கையைப் பற்றிய ஆய்வு முயற்சிகள் பெருகத் தொடங்கியமையையும் அவதானிக்கலாம்.[4] இவற்றுக்குப் பல்வேறு காரணங்கள் காணப் பட்டாலும் முக்கியமான ஒருசிலவற்றை இங்குக் குறிப்பிடலாம். தமிழகமே தமிழியலின் தாயகமாக விளங்கிவந்துள்ளமை, தமிழகம் பற்றிய குறைந்தபட்ச அறிவேனும் இல்லாது தமிழகத்திற்கப் பாலுள்ள தமிழ்பேசும் மக்கள் வாழும். நாடுகளின் தமிழியல் பற்றி ஆய்வுசெய்யமுடியாமை, தமிழகத்திற்கும் இலங்கைக்கு

மிடையிலான நீண்ட கால நெருங்கிய பிணைப்புகள், 'தமிழகம் தாயகம்: ஈழம் சேயகம்' என்னும் கருத்துநிலை நீண்டகாலமாக வலுப்பெற்றிருந்தமை, 1950களிலிருந்து இலங்கையில் ஏற்பட்டுக் கொண்டிருந்த அரசியல், சமூக மாற்றங்கள் முதலியனவாகும்.

## மரபுமுறையிலான ஆய்வு முயற்சிகள்

இலங்கையில் இடம்பெற்று வந்துள்ள ஆய்வுமுயற்சிகளுள் மரபு முறையிலான ஆய்வு முயற்சிகளை முதலில் நோக்குவது பொருத்தமானதாகும். அவர்களது ஆய்வுமுயற்சிகள் என்னும் பலம்வாய்ந்த அத்திவாரத்தின் மீதே பிற்கால ஆய்வு முயற்சிகள் இடம் பெற்றுள்ளன. இவ்வகையிலே இலங்கையின் புகழ் பூத்த உரையாசிரியர்களும் புராண - இதிகாசச் சொற்பொழிவாளர் களும் வித்துவ பரம்பரையினரும் எமது கவனத்திற்குரியவர்கள். இவ்வகையிலே ஞானப்பிரகாச முனிவர், வித்துவசிரோமணி ந.ச. பொன்னம்பலபிள்ளை, சபாபதி நாவலர், புலோலியூர் கதிரைவேற்பிள்ளை, மகாவித்துவான் கணேசையர், பிரம்மஸ்ரீ தி. சதாசிவஐயர், பிரமஸ்ரீ நவநீதகிருஷ்ணபாரதியார், பண்டிதர் பொ. கிருஷ்ணன், பண்டித மணி, சு. அருளம்பலவாணர், சுன்னாகம் அ. குமாரசுவாமிப் புலவர், ஆசுகவி வேலுப்பிள்ளை, நமசிவாயதேசிகர், நா. சிவபாதசுந்தரனார், பண்டிதமணி. சி. கணபதிப்பிள்ளை, புலவர்மணிபெரியதம்பிப் பிள்ளை, பண்டிதர்கள் வீரகத்தி, இ. வடிவேல், வே. அகிலேசபிள்ளை முதலியோர் குறிப்பிடத்தக்கவர்கள்.[5]

காலத்தால் முற்பட்டவர்களான வையாபுரி ஐயர் எழுதிய வையாபாடல் இலங்கையின் மன்னர் பரம்பரையினையும் வன்னிமைகளையும் காலத்துக்குக் காலம் இலங்கையில் இடம்பெற்ற குடியேற்றங்களையும் விவரிக்கும் வரலாற்று நூலாக விளங்குகின்றது. முத்துராசக் கவிராசரால் எழுதப்பட்ட கைலாய மாலை யாழ்ப்பாணத்தரசர் காலத்தில் சிறப்புடன் விளங்கிய கோயில்களுள் ஒன்றான கைலாசபிள்ளையார் கோயிலைப் பற்றியும் யாழ்ப்பாணத்தரசர்களின் சமயப் பணிகள் பற்றியும் யாழ்ப்பாணத்தரசு பற்றியும் விவரிக்கின்றது.

கவிராசவரோதயனால் இயற்றப்பட்ட கோணேசர் கல்வெட்டு என்னும் நூல் குளக்கோட்டனின் திருப்பணிகள். வன்னிமைகள் முதலியவை பற்றி விவரிக்கின்றது. மேற்கண்ட நூல்களின் தொடர்ச்சியும் வளர்ச்சியுமாகச் சிலநூல்கள் தோன்றின. அவற்றுள் விதந்து கூறத்தக்கவை மாறகல்

மயில்வாகனப் புலவரின் யாழ்ப்பாண வைபவமாலை, கல்லடி ஆசுகவி வேலுப்பிள்ளையின் யாழ்ப்பாண வைபவகௌமுகி, சைமன்காசிச் செட்டியின் சிலோன் கசற்றியர், தமிழ் புளூராக் ஆகியனவாகும். பொதுவாக இலங்கையினதும் சிறப்பாக யாழ்ப்பாணத்தினதும் வரலாறு, குடியேற்றங்கள், சாதியமைப்பு, ஆசாரங்கள், முதலியனவற்றை இவை விவரிக்கின்றன. ஆய்வு முயற்சிகள் என்ற வகையில் மேற்கண்ட நூல்களிற் குறைபாடுகள் சில காணப்பட்ட போதும் பின்னாளில் புலமைசார் ஆய்வாளர்கள் காத்திரமான ஆய்வுகளை மேற்கொள்வதற்கு இவை அருந்துணையாக அமைந்தன என்பதில் ஐயமில்லை.

இலங்கையின் வித்துவபரம்பரையின் முக்கியஸ்தருள் ஒருவரும் தொல்காப்பியக் கடல் எனப் போற்றப்படுபவருமான வித்துவசிரோமணி சி. கணேசையரது தொல்காப்பிய உரை விளக்கக் குறிப்புகள், பல்வேறு இலக்கியங்களுக்கும் எழுதியுள்ள உரைகள், ஈழநாட்டுப் புலவர்கள் சரிதம், குமாரசுவாமிப் புலவர் சரிதம் முதலியவை பாராட்டத்தக்கவை. தமிழகத்தைப் போன்று இலங்கையிலும் குறிப்பிட்டுக்கூறக் கூடிய அளவிற்கு உரைப் பாரம்பரியம் ஒன்று இடம்பெற்று வந்துள்ளது. உரையாசிரியர் களின் உரைக்குறிப்புகளும் விளக்கவுரைகளும் இரசனை முறையும் நவீன திறனாய்வு முயற்சிகளுடன் ஒப்பிட முடியாதெனினும் நவீன திறனாய்வுக்கேற்ற மூலவேர்களாக அவை அமைந்துள்ளன என்பதில் ஐயமில்லை. மேலும்இவ்வுரையாசிரியர்களிடம் பொதுப்பண்புகள் சில காணப்பட்டபோதும் இவர்கள் எல்லோரும் ஒரே ரகத்தினர் என்றோ ஒரே தரத்தினர் என்றோ கூறவியலாது. இலங்கையில் உரைப்பாரம்பரியத்துடன் இணைந்து வளர்ந்து வந்த புராண படனமுறையும் இத்தகையதே. இவ்வகையில் ஆறுமுக நாவலர், வித்துவசிரோமணி பொன்னம்பல பிள்ளை, வித்துவசிரோமணி கணேசையர், உடுப்பிட்டுச் சிவசம்புப்புலவர், நவநீதகிருஷ்ணபாரதியார், வல்வை. வயித்தியலிங்கம்பிள்ளை, ம.க.வேற்பிள்ளை, பண்டிதர் சு. அருளம்பலவாணர் முதலியோர் மனங்கொளத்தக்கவர்கள்.

இத்தகைய மரபில் வந்த பண்டிதமணி சி. கணபதிப்பிள்ளை, புலவர்மணி பெரியதம்பிப்பிள்ளை முதலியோர் இருபதாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும் தங்களது அயராத முயற்சிகளினால் தமக்கென்றொரு பரம்பரையை உருவாக்கியமை குறிப்பிடத் தக்கது. காலத்துக்கேற்றவகையில் சாதாரண கல்வி அறிவுள்ள யாரும் படித்து விளங்கக்கூடிய வகையில் எளிய நடையைக்

கையாண்டு எளிமையாக விடயங்களை விளக்கிச் செல்லுந் திறனை இவர்களிடத்துக் காணலாம்.

### மரபுமுறையுடன் ஓரளவேனும் நவீன ஆய்வுநெறிமுறைகளைக் கைக்கொண்ட ஆய்வுமுயற்சிகள்

இவ்வகையில் மாறகல்மயில்வாகனப்புலவர், தி.த. கனக சுந்தரம்பிள்ளை, குல. சபாநாதன், கனக செந்திநாதன், எப்.எக்ஸ்.சி. நடராசா, க. சொக்கலிங்கம், கலாநிதி ஆ. கந்தையா முதலியோர் குறிப்பிடத்தக்கவர்கள். இவர்களது ஆய்வுமுயற்சிகள் இக் கட்டுரையில் ஆங்காங்கே நோக்கப்படும்.

### நவீன ஆய்வுநெறிமுறைகளுடன் கூடியதுமான ஆய்வு முயற்சிகள்

இலங்கையின் தமிழியல் ஆய்வு முயற்சிகளைப் பொறுத்தவரை விதந்துகூறக் கூடியதோர் அம்சம் பத்தொன்பதாம் நூற்றாண்டின் நடுப்பகுதியிலிருந்து ஆங்கிலமொழி மூலம் நவீன கல்வியைப் பயின்றவர்களுட் பலர் ஆய்வு முயற்சிகளில் ஈடுபட்டமையாகும். இலங்கையில் அறிவியல்பூர்வமானதும் நவீன ஆய்வு நெறிமுறைகளுடன் கூடியதும் பலதுறைகள் சார்ந்ததுமான ஆய்வுமுயற்சிகள் பல்கிப் பெருகுவதற்கு முதலில் வித்திட்ட முன்னோடிகள் இவர்களே என்பதில் ஐயமில்லை. இவர்களது ஆய்வு முயற்சிகளில் பல குறைபாடுகள் காணப்படுகின்ற பொழுதும் அவை ஆரம்ப முயற்சிகளாகும்.

இவ்வகையில் நவீன வளர்ச்சி பற்றிய அறிவுப் பின்புலத் துடன் தமிழை, தமிழரை, தமிழ்ப்பண்பாட்டை உலகுக்கு அறிமுகப்படுத்திய அறிஞர்கள் சிலர் 20ஆம் நூற்றாண்டின் தொடக்ககாலத்தில் தொழிற்பட்டனர். இவர்களின் பங்களிப்புக் களிலே தாரதம்மிய வேறுபாடுகள் உள்ளன. அத்தகைய அறிஞர்களுள் மறக்கப்பட முடியாதவர்களாக உள்ளவர்களில் வி. கனகசபைப்பிள்ளை, சைமன் காசிச் செட்டி, ஆனந்தக் குமாரசுவாமி, அருணாச்சலம், சேனாதிராஜா, செல்லையா, ஆனல்ட் சதாசிவம்பிள்ளை முதலியோர் குறிப்பிடத்தக்கவர்கள்.

### பதிப்புமுயற்சிகளும் அகராதி முயற்சிகளும்

நவீன தமிழ் இலக்கிய வளர்ச்சியில் அச்சியந்திரவிருத்தி வகிக்கும்பங்கு எத்துணை முக்கியமானது என்பதனை இங்கு வற்புறுத்த வேண்டியதில்லை. நீண்ட காலமாக அழியும் நிலையிலிருந்த ஏட்டுச் சுவடிகள் நூல்வடிவம் பெறுவதற்கும்

பாதுகாக்கப்படுவதற்கும் அவை மக்கள் மத்தியில் பரவுவதற்கும் ஆய்வு முயற்சிகள் பெருகுவதற்கும் மூலகாரணம் அச்சியந்திர விருத்தியேயாகும். இலங்கையிலே முதன்முதல் 1736ஆம் ஆண்டு அச்சியந்திரம் நிறுவப்பட்டது. எனினும் சுதேசிகள் அச்சியந்திரத்தை நிறுவும் உரிமையைப் பெற நூறாண்டுகளுக்குமேற்சென்றது. 1849ஆம் ஆண்டு நல்லூரிலே ஆறுமுகநாவலர் வித்தியாநுபாலன யந்திர சாலையை நிறுவினார். இதனைத் தொடர்ந்து சுதேசிகள் பலர் அச்சியந்திர சாலைகளை நிறுவினர். அச்சியந்திரவிருத்தியினால் பழைய ஏட்டு சுவடிகள் பதிப்பிக்கப்பட்டது மட்டுமன்றிப் புதிய நூல்களும் அறிக்கைகளும் துண்டுப் பிரசுரங்களும் வெளியிடப் பட்டன. பத்திரிகைகள் பெருகலாயின.

ஆறுமுக நாவலர், சி.வை. தாமோதரம்பிள்ளை, வல்வை ச. வயித்தியலிங்கம் பிள்ளை, ச. தம்பிமுத்துப் பிள்ளை, மு. கார்த்திகேய ஐயர், வித்துவசிரோமணி பொன்னம்பலபிள்ளை எனப் பலரும் தமிழ் நூற்பதிப்பிலே ஈடுபட்டன ராயினும் சி.வை. தாமோதரம்பிள்ளை அவர்களே பதிப்பாசிரியர் என்னும் சிறப்புப் பெயரைப் பெறுமளவிற்கு அருந்தொண்டாற்றி யுள்ளார். ஆறுமுக நாவலர், சி.வை. தாமோதரம்பிள்ளை முதலியோர் தாம்பதிப்பித்த நூல்களுக்கு எழுதியுள்ள முன்னுரைகள், விளக்கக் குறிப்புகள், மூலபாடத்திறனாய்வு முதலியவை தமிழியல் ஆய்வு முயற்சிகளுக்கு வழிகாட்டியாக அமைந்தன. சி.வை. தாமோதரம் பிள்ளையின் முன்னுரைகளது முக்கியத்துவம் கருதியே அவை தொகுக்கப் பட்டு 'தாமோதரம்' என்னும் பெயரில் வெளிவந்தமையும் குறிப்பிடத்தக்கது.

அகராதி ஆக்கத்திலே மேலைநாட்டவர்களுடன் சுதேசிகளும் இணைந்து செயற்பட்டமை விண்டுரைக்கத்தக்கது. ஜோசப்நைற் பாதிரியார், சாமுவல் ஹற்சிங்ஸ், வின்ஸ்லோ, பேர்சிவல், மாகறல் விசுவநாதபிள்ளை, இருபாலைச் சேனாதிராய முதலியார், கெலக் விசுவநாதபிள்ளை, வில்லியம் நெவின்ஸ் முதலியோரது கூட்டு முயற்சியினால் தமிழ்-தமிழ், தமிழ்- ஆங்கிலம், ஆங்கிலம்-தமிழ் அகராதிகள் வெளிவந்தன. தமிழியல் ஆய்வின் ஒரு பகுதியாக இம்முயற்சிகள் அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

### தமிழ் இலக்கிய வரலாறு

தமிழ் இலக்கிய வரலாறு தொடர்பான ஆய்வுமுயற்சிகளை இருமுக்கிய பிரிவுகளாக வகுத்து நோக்கலாம். அவையாவன இலங்கைத் தமிழ் இலக்கிய வரலாறு, தமிழக இலக்கிய வரலாறு

என்பனவாகும். தமிழ் இலக்கிய வரலாறு என்ற வகையில் காலத்தால் முற்பட்ட ஆய்வு முயற்சிகளாக 1859ஆம் ஆண்டில் சைமன் காசிச்செட்டி என்பவரால் எழுதிவெளியிடப்பட்ட தமிழ்ப் புலவர்சரித்திரம், 1886 ஆம் ஆண்டில் ஆனல்ட் சதாசிவம் பிள்ளை அவர்களால் எழுதி வெளியிடப்பட்ட பாவலர் சரித்திர தீபகம், 1916ஆம் ஆண்டில் சுன்னாகம் குமாரசுவாமிப் புலவரால் எழுதி வெளியிடப்பட்ட தமிழ்ப் புலவர் சரித்திரம், 1922ஆம் ஆண்டில் ஆ. முத்துத்தம்பிப்பிள்ளை என்பவரால் எழுதி வெளியிடப் பட்ட ஈழமண்டலப் புலவர் சரித்திரம், 1939ஆம் ஆண்டில் வித்துவசிரோமணி கணேசையரால் எழுதிவெளியிடப்பட்ட ஈழ நாட்டுத் தமிழ்ப்புலவர் சரித்திரம் முதலியவற்றைக் குறிப்பிடலாம்.

இவ்ஆய்வு முயற்சிகளில் பல குறைபாடுகள் காணப்பட்ட போதும் ஏறத்தாழ எழுபது முதல் நூறாண்டுகளுக்கு முன்னதாக நிலவிய சூழ்நிலையில் இம்முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன என்பதையும் இருபதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் பலராலும் மேற்கொள்ளப்பட்ட தமிழ் இலக்கிய வரலாறு தொடர்பான ஆய்வு முயற்சிகளுக்கு இவை ஏற்றதொரு பலம் வாய்ந்த அத்திவாரத்தை இட்டன என்பதையும் நாம் மனம் கொளல் வேண்டும்.

இவர்களது முயற்சியினை அடியொற்றி இருபதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வெளிவந்த கனகசெந்திநாதன் அவர்களின் ஈழத்து இலக்கிய வளர்ச்சி (1964), மு. கணபதிப் பிள்ளை அவர்களின் ஈழநாட்டின் தமிழ்ச் சுடர்மணிகள் (1967), கா.பொ. இரத்தினம் அவர்களின் இலங்கையில் இன்பத்தமிழ் (1959) ஆகிய நூல்கள் 'புலமைசார்' ஆய்வாளர்களின் முயற்சிகளுக்குப் பலவகையிலும் முன்னோடி முயற்சிகளாக அமைந்தன எனலாம்.

இவர்களைத் தொடர்ந்து இலங்கைத் தமிழ் இலக்கிய வரலாறு தொடர்பாக மேற்கொள்ளப்பட்ட நவீன ஆய்வு நெறிமுறைகளுடன் கூடிய ஆய்வு முயற்சிகளுள் பேராசிரியர்கள் கைலாசபதி அவர்களின் ஈழத்து இலக்கிய முன்னோடிகள் (1986), கா. சிவத்தம்பி அவர்களின் ஈழத்தில் தமிழ் இலக்கியம் (1978), சி. தில்லைநாதன் அவர்களின் இலங்கைத் தமிழ் இலக்கியம் (1997), கலாநிதிகள் க.செ. நடராசா அவர்களின் ஈழத்துத் தமிழ் இலக்கிய வளர்ச்சி (1997), சி. மௌனகுரு, எம்.ஏ. நுஃமான், திருமதி சித்திரலேகா ஆகியோர் இணைந்து எழுதி வெளியிட்ட

இருபதாம் நூற்றாண்டு ஈழத்துத் தமிழ் இலக்கியம் (1979) முதலியவை இவ்வகையிற் குறிப்பிடத்தக்கவை.

தமிழக இலக்கிய வரலாறு தொடர்பாக இலங்கைத் தமிழர்களால் மேற்கொள்ளப்பட்ட காலத்தால் முந்திய ஆய்வு முயற்சிகளுள் சைமன் காசிச்செட்டி அவர்களின் 'தமிழ் புளூராக்' (ஆங்கிலம்), வி. கனகசபைப் பிள்ளையின் 'ஆயிரத்து எண்ணூறு ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழர்' (ஆங்கிலம்), ஜே.ஆர். ஆனல்ட் அவர்களின் 'பாவலர் சரித்திர தீபகம்', சி.வை. தாமோதரம்பிள்ளை அவர்களின் 'தமிழ்ப் பாஷையின் காலவருத்தமானம்' (வீரசோழியப் பதிப்புரையில் இடம்பெற்றுள்ளது) ஆர்.ஓ.டி. அஸ்பரி அவர்களின் 'தமிழ் இலக்கிய வரலாறு' ஆகியவை முக்கியமாகக் குறிப்பிடத் தக்கவை.

இவற்றுள் வி. கனகசபைப்பிள்ளை அவர்களின் நூல் இலக்கிய வரலாறு அல்லவாயினும் தமிழ் இலக்கியங்கள் பற்றிய விரிவான குறிப்புகள் இடம் பெற்றுள்ளமை அவதானிக்கத்தக்கது. சி.வை. தாமோதரம்பிள்ளை அவர்களின் காலப்பாகுபாடு பற்றிய கணிப்பு நுட்பமானது. இன்றைய நிலையில் வைத்து நோக்குமிடத்து மேற்கண்ட நூல்களில் பல குறைபாடுகள் காணப்படினும் தமிழ் இலக்கிய வரலாறு தொடர்பான ஆய்வு முயற்சிகள் இருளடைந்து காணப்பட்ட ஒரு காலப்பகுதியில் இவை வெளிவந்தன என்பதும், இருபதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் இலங்கையிலே பலர் தமிழ் இலக்கிய வரலாறு தொடர்பான அறிவியல் பூர்வமானதும் காத்திரமானதுமான ஆய்வுகளை மேற்கொள்வதற்கு ஏற்ற அடித்தளமாக அமைந்தன என்பதும் நாம் மனங்கொளத்தக்கவை.

இலங்கையிலும் தமிழகத்திலும் ஏறத்தாழ 1950ஆம் ஆண்டிலிருந்து இற்றைவரை பல நூல்களும் கட்டுரைகளும் வெளிவந்துள்ளன. எனினும் அவை எவற்றிலும் காணப்படாதப் பல சிறப்பியல்புகளைக் கொண்டதாக பேராசிரியர் செல்வநாயகம் அவர்களின் 'தமிழ் இலக்கிய வரலாறு' (1951) விளங்குகின்றது. பேராசிரியர் செல்வநாயகத்துக்கு ஒப்பற்ற புகழைத் தேடிக் கொடுத்த இந்நூல் இதுவரை பல பதிப்புகளைக் கண்டுள்ளது; பேராசிரியர் செல்வநாயகம் அவர்களுக்கு அழியாப் புகழைத் தேடிக் கொடுத்த இன்னொரு நூல் அவரது 'தமிழ் உரைநடை வரலாறு' என்பதாகும்.

பேராசிரியர் செல்வநாயகம் அவர்களைத் தொடர்ந்து அவரது மாணவ பரம்பரையினர் பலர் தமிழ் இலக்கிய வரலாறு தொடர்பான ஆய்வு முயற்சிகளில் தீவிர ஈடுபாடு காட்டி அவரது முயற்சிகளை முன்னெடுத்துச் சென்றனர்; புதிய ஒளியைப் பாய்ச்சினர். அவர்களுள் விதந்து கூறத்தக்க இருவர் தமிழ் கூறும் நல்லுலகெங்கும் நன்கு அறிமுகமானவர்கள்; இருபதாம் நூற்றாண்டுப் பிற்பகுதியின் தமிழ்த் திறனாய்வு உலகில் ஓங்குபுகழுடன் திகழ்பவர்கள். அவர்கள் முறையே பேராசிரியர்கள் க. கைலாசபதி, கா. சிவத்தம்பி ஆகியோராவர். தமிழ் இலக்கிய வரலாறு தொடர்பாக இதுகாலவரை வெளிவந்த ஆய்வுமுயற்சிகளுள் விதந்து கூறத்தக்க ஒன்று பேராசிரியர் சிவத்தம்பி அவர்களின் 'தமிழில் இலக்கியவரலாறு' (1988) என்னும் நூலாகும். 1980களின் பிற்பகுதிவரை தமிழ் இலக்கிய வரலாறு தொடர்பாக வெளிவந்த ஆய்வுகளை ஒருங்கு திரட்டி அவை எழுதப்பட்ட முறைமைகள், அவற்றிற்காணப்படும் குறைபாடுகள் முதலியவற்றைச் சுட்டிக்காட்டியுள்ள ஆய்வாளர் எதிர்காலத்தில் தமிழ்இலக்கிய வரலாறு தொடர்பாக ஆய்வுகளை மேற்கொள்வோர் கவனத்திற்கொள்ள வேண்டியவற்றையும் வலியுறுத்தியுள்ளார்.

"'இலக்கியத்தின் வரலாறு', 'இலக்கிய வழி வரலாறு' ஆகாது. இலக்கியத்தின் வரலாறு என்பது சமூகத்தில் இலக்கியம், அதற்குரிய பண்புகளோடு வளர்ந்த முறையை எடுத்துக்கூறுவது. ஆனால் உண்மையான 'இலக்கிய வரலாறு' என்பது, ஒரு சமுதாயத்தின் வரலாற்றை அதன் இலக்கியங்களைக் கொண்டு, அதன் இலக்கியங்களின் அடிநாதங்கள், வெளிப்பாடுகள், தாக்கங்கள் ஆகியன கொண்டு எடுத்துக் கூறுவதாகும்......" என வரும் அவரது கூற்று இவ்வகையில் சிந்திக்கத்தக்கது.

இந்நூலின் சுருக்கம் எனக்கூறத்தக்க வகையில் முன்னதாகவே அவர் ஆங்கிலத்தில் எழுதி வெளியிட்ட நூல் 'Literary History in Tamil - A Historiographical Analysis' (1986) என்பதாகும். பேராசிரியர் சு. வித்தியானந்தன் அவர்களின் தமிழர் சால்பு, இலக்கியத் தென்றல், பேராசிரியர் ஆ. வேலுப்பிள்ளை அவர்களின் இலக்கியத்திற்காலமும் கருத்தும், பேராசிரியர் க. கைலாசபதி அவர்களின் அடியும் முடியும், பண்டைத்தமிழர் வாழ்வும் வழிபாடும் முதலிய நூல்களும் இவ்வகையில் மனங்கொளத்தக்கவை.

## தமிழ் மரபிலக்கணமும் மொழியியலும்

சைமன்காசிச் செட்டி அவர்களின் 'சிலோன்கசற்றியர்', 'தமிழ் புளூராக்' ஆகியவற்றின் சில பகுதிகள் மொழியியல்துறையில்

அவர் கொண்டிருந்த ஆர்வத்தை வெளிப்படுத்துகின்றன. மொழியியல் ஆய்வில் காத்திரமான பங்களிப்பினைச் செய்த காலத்தால் முற்பட்டவர்களுள் சுவாமி ஞானப்பிரகாசர் முதலில் வைத்து நோக்கத்தக்கவர். பன்மொழிப் புலமைமிக்க அவரது ஆய்வுகள் பெருமளவிற்கு அறிவியல்பூர்வமானவையாகவும் பின்வந்தோருக்கு வழிகாட்டியாகவும் விளங்குகின்றது. அவரது ஆய்வறிவுத்திறனையும் ஒப்புநோக்கும் பண்பையும் வெளிப்படுத்து வனவாக 'தமிழ் அமைப்புற்ற வரலாறு', 'தமிழ்ச் சொற் பிறப்பாராய்ச்சி', 'தமிழ் ஒப்பியல் அகராதி' முதலிய நூல்கள் அமைந்துள்ளன. ஆறுமுக நாவலர், சி.வை. தாமோதரம்பிள்ளை, அ. குமாரசாமிப்புலவர், வித்துவசிரோமணி கணேசையர், நமசிவாய தேசிகர், பண்டிதமணி சி. கணபதிப்பிள்ளை, புலவர்மணி பெரியதம்பிப்பிள்ளை, எஃப்.எக்ஸ்.சி. நடராசா, பண்டிதர் வீரகத்தி, பேராசிரியர்கள் சுவாமி விபுலாநந்தர், சு. வித்தியானந்தன், புலவர் நா. சிவபாதசுந்தரனார் முதலியோர் மரபிலக்கணம் தொடர்பாகப் பயன்மிக்க ஆய்வுகளைச் செய்துள்ளனர்..

சாசனங்களைத் துணைக் கொண்டு தமிழ்மொழி வரலாற்றினை ஆய்வு செய்யும் முயற்சிக்கு அடித்தளமிட்டு முன்னோடியாக விளங்கியவர் பேராசிரியர் க. கணபதிப்பிள்ளை அவர்களாவார். அவரால் ஆரம்பிக்கப்பட்ட முயற்சியை அவரது மாணவனான பேராசிரியர் ஆ. வேலுப்பிள்ளை மேலும் முன்னெடுத்துச் சென்று பயன்மிக்க ஆய்வுகள் பலவற்றைச் செய்துள்ளார். மரபிலக்கணத்திலும் நவீன மொழியியலிலும் சாசனத் துறையிலும் பரிச்சயம் மிக்க அவரது ஆய்வுகள் நூல்களாகவும் கட்டுரைகளாகவும் வெளிவந்துள்ளன. அவற்றுள் தமிழ் வரலாற்றிலக்கணம், சாசனமும் தமிழும், Pandya Inscriptions: A Language Study, A Study of the Dialects of Inscriptional Tamil முதலியவை முக்கியமாகக் குறிப்பிடத்தக்கவை.

பேராசிரியர்கள் சுசீந்திரராசா, சண்முகதாஸ் ஆகியோரும் தமிழ் மரபிலக்கணம், தமிழ்மொழி வரலாறு, மொழியியல் முதலியன தொடர்பாகக் காத்திரமான ஆய்வுகள் பலவற்றைச் செய்துள்ளனர். அவர்களது ஆய்வுகளுள் கணிசமானவை நூல்களாகவும் வெளிவந்துள்ளன. இவ்வகையில் பேராசிரியர் சுசீந்திரராசா அவர்களின் An Introduction to spoken Tamil (Prof. W. Gair, W.S. Karunatillake ஆகியோரது உதவியுடன் எழுதப் பட்டது), தமிழ்மொழியியற் சிந்தனைகள், பேராசிரியர்

சண்முகதாஸ் அவர்களின் தமிழ்மொழி இலக்கண இயல்புகள் முதலியன குறிப்பிடத்தக்கவை. பேராசிரியர்கள் வேலுப்பிள்ளை, சுசீந்திரராசா, சண்முகதாஸ் ஆகிய மூவரது ஆய்வுகளில் மரபிலக்கணமும் மொழியியலும் சங்கமமாவதையும் மரபிலக்கணமானது மொழியியலாகப் பரிணமித்துக் கொண்டிருப்பதையும் ஒருங்கே தரிசிக்கலாம்.

தமிழ் மரபிலக்கணம், மொழியியல் ஆகியன தொடர்பாகப் பல ஆய்வுகளைச் செய்துள்ள இன்னொருவர் பேராசிரியர் சதாசிவம் அவர்களாவார். சுமேரிய மொழி பற்றிய அவரது ஆய்வுகள் அவருக்குப் புகழைத் தேடிக் கொடுத்தன. பேராசிரியர்கள் தனஞ்செயராசசிங்கம், பூலோகசிங்கம், தில்லைநாதன், கலாநிதிகள் நுஃமான், பார்வதி கந்தசாமி, சுபதினி, இரத்தினமலர் கயிலைநாதன் முதலியோரும் மரபிலக்கணம், மொழியியல் ஆகியன தொடர்பாக ஆய்வுகள் பலவற்றைச் செய்துள்ளனர்.

### பண்டைய தமிழ் இலக்கியங்களும் இடைக்காலத் தமிழ் இலக்கியங்களும்

"----- பொதுவாகக் கிறிஸ்துவிற்கு முற்பட்ட காலத் தொடக்கம் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டின் இறுதிவரையுள்ள காலப்பகுதியைத் தமிழக இலக்கிய வரலாற்றிற் பண்டைக்காலம் என்பர். ஈழத்துத் தமிழ் இலக்கிய வரலாற்றைப் பொறுத்தவரை கி.பி. பதின்மூன்றாம் நூற்றாண்டின் பிற்பகுதி வரையுள்ள காலப்பகுதியைப் பண்டைக்காலம் எனல் பொருத்தமாகத் தோன்றுகிறது.

தமிழகத்தைப் பொறுத்தவரை கி.பி. பத்தாம் நூற்றாண்டிலிருந்து கி.பி. பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதி வரை அல்லது பத்தொன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதி வரையுள்ள காலப்பகுதியை இடைக்காலம் எனலாம். ஈழத்தைப் பொறுத்தவரை கி.பி. பதினான்காம் நூற்றாண்டிலிருந்து கி.பி. பத்தொன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதி வரையுள்ள காலப் பகுதியை இடைக்காலம் எனலாம்..."[7]

தமிழகத்தின் பண்டைய, இடைக்கால இலக்கியங்கள் பற்றி இலங்கையர்கள் பலர் மிகவும் காத்திரமான ஆய்வுகள் பலவற்றைச் செய்துள்ளனர். சைமன்காசிச் செட்டி, சி.வை. தாமோதரம் பிள்ளை முதல் க. கைலாசபதி, கா சிவத்தம்பி முதலியோர் வரை அவர்கள் மேற்கொண்ட ஆய்வு முயற்சிகளைக் கூர்ந்து

நோக்குமிடத்துத் தமிழியல் ஆய்வில் ஏற்பட்டு வந்த வளர்ச்சி நிலைகளையும் பாரிய முன்னேற்றங்களையும் கண்டு தெளியலாம்.

பழமை மோகமும் மொழி, இனம், பண்பாடு முதலியன பற்றிய பெருமைகளும் வெறுமனே ஐதீகங்களும் ஆய்வுலகினை ஆட்டிப் படைத்துக் கொண்டிருந்த நிலைமை படிப்படியாக மாற்றமுற்று வரலாற்றுப் பார்வையும் சமூகவியல் அணுகுமுறையும் ஒப்பியல் நோக்கும் உண்மையை நிறுவ முயலும் பாங்கும் ஏறத்தாழ 1960களிலிருந்து முக்கியத்துவம் பெற்று வந்துள்ளமையை அவதானிக்கலாம். இவ்வகையிலே எடுத்துக்காட்டாக முக்கியமான ஒரு சில ஆய்வு முயற்சிகளை மட்டும் இங்குக் குறிப்பிடலாம். பேராசிரியர் வித்தியானந்தனின் தமிழர் சால்பு, இலக்கியத் தென்றல், தமிழியற் சிந்தனைகள், வண. பிதா. தனிநாயக அடிகளாரின் Landscape and Poetry (Nature Poetry in Tamil - The Classical Period) ஆ. வேலுப்பிள்ளை அவர்களின் இலக்கியத்தில் காலமும் கருத்தும், தமிழர் சமய வரலாறு, க. கைலாசபதியின் Tamil Heroic Poetry, அடியும் முடியும், பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும், ஒப்பியல் இலக்கியம், இலக்கியச் சிந்தனைகள், கா. சிவத்தம்பியின் Drama in Ancient Tamil Society என்னும் நூல் கட்டுரைகள், கட்டுரைத் தொகுப்புகள், சி. தில்லைநாதனின் வள்ளுவன் முதல் பாரதிதாசன் வரை, இலக்கியமும் சமுதாயமும், இலக்கிய பண்பாட்டுச் சிந்தனைகள் முதலியனவாகும்.

மேற்கண்டவர்கள் தவிரப் பேராசிரியர்கள் கணபதிப் பிள்ளை, சதாசிவம், தனஞ்செயராசசிங்கம், சண்முகதாஸ், பூலோகசிங்கம், அருணாசலம், நா. சுப்பிரமணியம், கலாநிதிகள் ஆ. கந்தையா, துரை. மனோகரன் முதலியோரும் மரபு வழித் தமிழறிஞர்களான பண்டிதமணி சி. கணபதிப்பிள்ளை, புலவர் மணிபெரியதம்பிப்பிள்ளை, எஃப்.எக்ஸ்.சி. நடராசா, பண்டிதமணி சு. அருளம்பலவாணர், கனக செந்திநாதன், தேவதாசன் ஜெயசிங், சி. தனபாலசிங்கம், ந.சி. கந்தையா பிள்ளை, ச. அம்பிகைபாகன், க. மகேசன் முதலியோரும் மேற்கொண்ட முயற்சிகள் மனங் கொளத்தக்கவை.

இலங்கையின் பண்டைய, இடைக்காலத் தமிழ் இலக்கியங்கள் தொடர்பாகக் கணிசமான ஆய்வுகள் வெளிவந்துள்ளன. பேராசிரியர்கள் பொ. பூலோகசிங்கத்தின் 'தமிழ் இலக்கியத்தில் ஈழத்தறிஞரின் பெருமுயற்சிகள்', க. கைலாசபதியின் 'ஈழத்து இலக்கிய முன்னோடிகள்', கா. சிவத்தம்பியின் 'ஈழத்தில் தமிழ்

இலக்கியம்', தில்லைநாதனின் 'இலங்கையில் தமிழ் இலக்கியம்', வேலுப்பிள்ளையின் 'அரசகேசரியின் இரகுவம்சமும் அது எழுந்த இந்துப் பண்பாட்டுச் சூழலும்', 'தொடக்க கால ஈழத்து இலக்கியங்களும் அவற்றின் வரலாற்றுப் பின்னணியும்', இலங்கைத் தமிழர்களின் கயிலாசபாரம்பரியம், யாழ்ப்பாணத்துச் சைவப் பாரம்பரியம், கலாநிதிகள் க.செ. நடராசா அவர்களின் ஈழத்துத் தமிழ் இலக்கிய வளர்ச்சி, துரை. மனோகரன் அவர்களின் இலங்கையில் தமிழ் இலக்கிய வளர்ச்சி, திரு. கனகசெந்திநாதன் அவர்களின் ஈழத்து இலக்கிய வளர்ச்சி, பண்டிதமணி சி. கணபதிப்பிள்ளை அவர்களின் இலக்கிய வழி, எஃப். எக்ஸ். சி. நடராசா அவர்களின் ஈழத்துத் தமிழ்நூல் வரலாறு, மு. கணபதிப்பிள்ளை அவர்களின் ஈழநாட்டின் தமிழ்ச்சுடர் மணிகள், கா.பொ. இரத்தினம் அவர்களின் இலங்கையில் இன்பத் தமிழ் முதலிய நூல்கள் முக்கியமாக மனங்கொளத்தக்கவை.

பேராசிரியர் கணபதிப்பிள்ளை அவர்களின் ஈழத்து வாழ்வும் வளமும் என்னும் நூலில் அமைந்துள்ள சில கட்டுரைகள் இடைக்கால ஈழத்து இலக்கியங்கள் பற்றியனவாகும். வரலாற்றுத் துறையைச் சேர்ந்த பேராசிரியர்கள் கா. இந்திரபாலா, சி. பத்மநாதன், சி.க. சிற்றம்பலம், கலாநிதி. செ. குணசிங்கம் ஆகியோரும் ஈழத்தின் பண்டைய, இடைக்கால இலக்கியங்கள் பற்றிக் காத்திரமான ஆய்வுகள் சிலவற்றைச் செய்துள்ளனர். தமிழியல் ஆய்வு முயற்சிகளுக்கு வரலாற்றுத்துறை சார்ந்த ஆய்வுமுயற்சிகள் எத்துணை இன்றியமையாதன என்பதனை இவர்களது ஆய்வு முயற்சிகள் நிரூபித்து நிற்பதை அவதானிக்கலாம்.

இலங்கையின் பண்டைய, இடைக்கால இலக்கியங்கள் பற்றிய ஆரம்ப ஆய்வு முயற்சிகளையும் அண்மைக்கால ஆய்வு முயற்சிகளையும் ஒப்புநோக்கும்போது அண்மைக்கால ஆய்வுகள் திருப்தி அளிக்கவல்லனவாகக் காணப்படுகின்றன. எனினும் இதுகாலவரை மேற்கொள்ளப்பட வேண்டியன அதிகம் என்பது மனங்கொளத்தக்கது. குறிப்பாகக் கி.பி. பதினான்காம் நூற்றாண்டு முதல் பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதிவரை இலங்கையில் தோன்றிய ஆக்கங்கள் பற்றி முழுமையானதும் விரிவானதுமான ஆய்வுகள் எதிர்காலத்தில் மேற்கொள்ளப்படுதல் அவசியமானதாகும்.

### நவீனதமிழ்க் கவிதையும் புதுக்கவிதையும்

தமிழ்மொழியானது மிக நீண்டதொரு கவிதைப் பாரம்பரியத்தைக் கொண்டு விளங்குகின்றது. நவீன தமிழ்க் கவிதையின் தந்தையாக யுகப்பெருங்கவிஞன் பாரதியார் விளங்குகின்றார்.

பாரதியார் பற்றிய ஆய்வுகள் இலங்கையைச் சேர்ந்த பலராலும் அதிக அளவிற் மேற்கொள்ளப்பட்டமை விதந்து கூறக்கூடிய தொன்றாகும். நவீன இலக்கியம் பற்றி அதிகஅளவு ஆய்வுகளைச் செய்துள்ள பேராசிரியர் கைலாசபதி அவர்களே பாரதியார் பற்றி மிகக் காத்திரமானதும் ஆழமானதும் பன்முகப்பட்டதுமான ஆய்வுகள் பலவற்றைச் செய்துள்ளார்; பாரதியார் பற்றிய ஆய்வு வரலாற்றிலே புதிய பரிமாணத்தை ஏற்படுத்தியுள்ளார்.

இலங்கையிலே காலத்தால் முற்பட்டுப் பாரதியின் புகழ் பரப்புவதில் பேராசிரியர் சுவாமி விபுலாநந்தர் முக்கிய பங்காற்றினார். பேராசிரியர்கள் செல்வநாயகம், வித்தியானந்தன், கா. சிவத்தம்பி, தில்லைநாதன், சிவசேகரம், பூலோகசிங்கம், அருணாசலம், மௌனகுரு, சித்திரலேகா, சபா. ஜெயராசா, திருவாளர்கள், ந. இரவீந்திரன், அகளங்கன், க. நவசோதி, செ. கணேசலிங்கன், எஃப்.எக்ஸ்.சி. நடராசா, இ. முருகையன், கே. செந்திவேல், எஸ்.எம். ஹனிபா, இளங்கீரன் முதலியோரது ஆய்வு முயற்சிகளும் இவ்வகையில் மனங்கொளத்தக்கவை. மேற்கண்டோரது முயற்சிகள் தவிரப் பல்வேறு மன்றங்கள், கல்லூரிகள், பாடசாலைகள் ஆகியவற்றால் பாரதி பற்றி வெளியிடப்பட்ட சிறு நூல்களும் சிறப்பு மலர்களும் அலட்சியப் படுத்த முடியாதனவாகும்.

தமிழகத்தின் நவீன கவிதைகள் பற்றிய ஆய்வில் சி.வை. தாமோதரம் பிள்ளை, சைமன் காசிச்செட்டி, கு. சைமன், கதிரைவேற்பிள்ளை, சி.வை. சின்னப்ப பிள்ளை, தி.த. சரவணமுத்துப் பிள்ளை முதலியோர் முன்னோடிகளாக விளங்குகின்றனர். இவர்களைத் தொடர்ந்து பல்கலைக்கழக மட்டத்தில் பேராசிரியர்கள் சுவாமி விபுலாநந்தர், செல்வநாயகம், வித்தியானந்தன், வேலுப் பிள்ளை, தில்லைநாதன், அருணாசலம், நா. சுப்பிரமணியம், சிவசேகரம் முதலியோரும் கவிஞர் முருகையன், அகளங்கன் முதலியோரும் கலாநிதிகள் சபா. ஜெயராசா, துரை. மனோகரன், நுஃமான், செ. யோகரர்சா முதலியோரும் மேற்கொண்ட ஆய்வுகள் குறிப்பிடத்தக்கவை.

மேற்கண்டவர்களது ஆய்வுகளில் விவரத்திறனாய்வும் ரசனைப் பண்பும் கவிஞர்களின் சமூகப் பார்வை, கலைத்துவம் முதலியன பற்றிய நோக்கும் முக்கியத்துவம் பெற்றுள்ளமையை அவதானிக்கலாம்.

மேற்கண்டவர்களிலிருந்து கணிசமான அளவு வேறுபட்ட ஆய்வு முயற்சிகளை விரிவாகவும் ஆழமாகவும் நுண்பகுப்பாய்வு அடிப்படையிலும் மாக்ஸீய சமூகவியல் பார்வையுடனும் பல வகையிலும் இலங்கைக்கு முன்மாதிரியாக மேற்கொண்டவர்கள் என்ற வகையில் பேராசிரியர்கள் க. கைலாசபதி, கா. சிவத்தம்பி ஆகியோர் விதந்து கூறத்தக்கவர்கள். இக்கட்டுரையாசிரியரால் எழுதப்பட்ட இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்க் கவிதைகள் என்னும் விரிவானதொரு ஆய்வுநூல் விரைவில் வெளிவரவுள்ளது.

தமிழகத்தின் புதுக்கவிதை பற்றி இலங்கையரால் மிகக் குறைந்த அளவு ஆய்வுமுயற்சிகளே மேற்கொள்ளப்பட்டுள்ளன. இவ்வகையில் மு. பொன்னம்பலம், மு. ஸ்ரீபதி, சபா. ஜெயராசா, செ. யோகராசா, சு. முரளிதரன், மேமன்கவி, து. குலசிங்கம் முதலியோரது கட்டுரைகள் மனங்கொளத்தக்கவை.

ஈழத்து நவீன கவிதைகள் பற்றிய விரிவான ஆய்வு முயற்சிகள் இது காலவரை இடம்பெறாமை மிகுந்த வேதனைக் குரியதே. பாவலர் துரையப்பாபிள்ளை, சோமசுந்தரப் புலவர், மஹாகவி, முருகையன், சி.வி. வேலுப்பிள்ளை, நீலாவாணன் முதலிய கவிஞர்களைப் பற்றி விரிவான சில ஆய்வுகள் இடம் பெற்றுள்ளனவேயன்றி ஈழத்து நவீன கவிதையின் தோற்றம், வளர்ச்சிப் போக்குகள், அவற்றை நிர்ணயித்த காரணிகள் முதலிய வற்றைக் காலகட்டங்களாக வகுத்து, வரலாற்றுப் பார்வையுடனும் சமூகவியல் அடிப்படையிலும் வேண்டியவிடத்துத் தமிழகத்து நவீன கவிதைகளுடன் ஒப்புநோக்கியும் இயன்றவரை முழுமையாக ஆராயும் தனிநூல் இதுகாலவரை வெளி வரவில்லை. இத்தகைய ஆய்வுகள் அதிகம் வெளிவர வேண்டியது அவசியமானதாகும்.

ஈழத்து நவீன கவிதைகள் பற்றி இதுகாலவரை ஆய்வுகளை மேற்கொண்டோரை மரபுவழித் தமிழ் அறிஞர்கள், புலமைசார் ஆய்வாளர்கள், நவீன இலக்கியப் பரிச்சயமுடையோர் என மூவகையினராக வகுத்து நோக்கலாம். 1960களின் முற்பகுதிவரை ஈழத்துக் கவித்தைகள் பற்றி வெளிவந்த நூல்களும் கட்டுரைகளும் அதிக அளவு தகவல்களைக் கொண்டனவாகவும் கவிஞர்களது வாழ்க்கைச் சுருக்கத்தையும் அவர்களது ஆக்கங்கள் பற்றிய அறிமுகத்தையும் வெளியிடுவனவாகவும் இரசனை முறைத் திறனாய்வாகவும் அமைந்துள்ளன. எனினும் ஏறத்தாழ 1970களி லிருந்து காத்திரமான ஆய்வுமுயற்சிகள் மேற்கொள்ளப்படு வதற்கு அவை தூண்டுகோலாகவும் முன்னோடியாகவும் அமைந்தன

எனலாம். இத்தகைய ஆய்வு முயற்சிகளை மேற்கொண்டவர்களுள் தென்புலோலியூர் மு. கணபதிப்பிள்ளை, பண்டிதமணி சி. கணபதிப்பிள்ளை, கா.பொ. இரத்தினம், கனகசெந்திநாதன், எஃப்.எக்ஸ்.சி. நடராசா, ச. அம்பிகைபாகன் முதலியோர் முக்கியமாகக் குறிப்பிடத்தக்கவர்கள்.

புலமைசார் ஆய்வாளர்கள் என்ற வகையில் பேராசிரியர்கள் கணபதிப் பிள்ளை, செல்வநாயகம், வித்தியானந்தன், சதாசிவம், கைலாசபதி, சிவத்தம்பி, தனஞ்செயராசசிங்கம், வேலுப்பிள்ளை, பூலோகசிங்கம், தில்லைநாதன், சண்முகதாஸ், சிவசேகரம், நா. சுப்பிரமணியம், அருணாசலம், மௌனகுரு, சித்திரலேகா, சபா. ஜெயராசா, கலாநிதிகள் நுஃமான், துரை. மனோகரன், திருமதி கலையரசி சின்னையா, எஸ். ஜெபநேசன், மு. தளையசிங்கம் முதலியோர் குறிப்பிடத்தக்கவர்கள். இவர்களது ஆய்வுகள் பலவற்றில் வரலாற்றுப் பார்வையும் சமுதாய நோக்கும் ஒப்பு நோக்கும் பண்பும் முனைப்புப் பெற்றுள்ளதை அவதானிக்கலாம்.

நவீன இலக்கியப் பரிச்சயமுடையோர் என்ற வகையில் இ. முருகையன், இளங்கீரன், செ. கணேசலிங்கன், மு. பொன்னம்பலம், அ. யேசுராசா, சாரல்நாடன், சோமகாந்தன், ஏ.ஜே. கனகரட்னா, அ.ந. கந்தசாமி, கே.எஸ். சிவகுமாரன், சு. கலாபரமேஸ்வரன், ஆ. சிவநேசச் செல்வன், என்.கே. ரகுநாதன் முதலியோர் மேற்கொண்ட ஆய்வுகள் மனங்கொளத்தக்கவை.

இலங்கையில் ஏறத்தாழ 1950களின் இறுதியிலும் 1960களிலும் தேசிய இலக்கியம், மண்வாசனை இலக்கியம், முற்போக்கு இலக்கியம் முதலியன தொடர்பாகப் பலத்த சர்ச்சைகளும் வாதப் பிரதிவாதங்களும் இடம்பெற்றன. இதன் காரணமாக இலக்கிய உலகில் பல அணிகள் ஏற்பட்டு ஒன்றுக்கொன்று போட்டியாகச் செயற்படலாயின. இலங்கை முற்போக்கு எழுத்தாளர் இயக்கத்திற் கெதிராக மரபுவாதிகளும் நற்போக்குவாதிகளும் மாக்சிசத்துக் கப்பால் உண்மையைத் தேட முயன்றவர்களும் செயற்பட்டனர்; முற்போக்கு எழுத்தாளர் இயக்கக் கருத்துகளுக் கெதிராகத் தமது கருத்துகளை வலியுறுத்த முனைந்தனர்.

ஏறத்தாழ 1970களின் ஆரம்பத்திலிருந்து இலங்கையில் புதுக்கவிதை வேகமான வளர்ச்சியைப் பெற்று வருகின்றது. புதுக்கவிதைத் தொகுதிகள் பல வெளிவந்துள்ளன. எனினும் புதுக்கவிதை தொடர்பான காத்திரமான ஆய்வு முயற்சிகள் எவையும் இதுவரை வெளிவராமை விசனத்துக்குரியதே. புதுக்கவிதை

பற்றிய ஆய்வுகளை மேற்கொண்டோர் என்ற வகையில் பேராசிரியர்கள் சிவசேகரம், க. அருணாசலம், சி. மௌனகுரு, கலாநிதிகள் துரை. மனோகரன், செ. யோகராசா, திருவாளர்கள் மு. பொன்னம்பலம், லெ. முருகபூபதி முதலியோர் புகலிடக் கவிதைகள் பற்றி ஆராய்ந்துள்ளனரேனும் காத்திரமான ஆய்வு முயற்சிகள் இதுவரை வெளிவரவில்லை. இதேபோன்று மொழிபெயர்ப்புக்கவிதைகள், குழந்தைப் பாடல்கள் முதலியன பற்றிய ஆய்வுமுயற்சிகளும் ஆரம்ப நிலையிலேயே உள்ளன.

ஈழத்து நவீன கவிதை வரலாற்றில் ஏறத்தாழ 1980களின் ஆரம்பத்திலிருந்து இன்றுவரை வெளிவந்து கொண்டிருக்கும் கவிதைகளுட் பெரும்பாலானவை தனித்துவமானவை; வேதனைகளும் சோதனைகளும் அவலங்களும் இழப்புக்களும் மிகுந்த போர்க்காலச் சூழலைப் பிரதிப்பலிப்பவை; மரணத்துள் வாழ்ந்து கொண்டிருக்கும் மக்களின் வாழ்க்கைப் போராட்டங்கள் பற்றிய பதிவேடுகளாகவும் காலத்தின் குரல்களாகவும் விளங்குபவை. இவை பற்றியும் விரிவாக ஆராய்தல் அவசியமானதாகும்.

### நாவலும் சிறுகதையும்

தமிழில் வளர்ந்துவரும் நவீன இலக்கிய வடிவங்களுள் நாவலும் சிறுகதையும் முக்கிய இடத்தைப் பெறுகின்றன. நாவலையும் சிறுகதையையும் தமிழ்நாட்டுப் பல்கலைக்கழகங்கள் அங்கீகரிப்பதற்கு முன்னரே இலங்கைப் பல்கலைக்கழகத் தமிழ்த் துறை அங்கீகரிக்கலாயிற்று. ஏறத்தாழ 1940களின் பிற்பகுதியி லிருந்து இலங்கையில் பல்கலைக்கழக மட்டத்தில் தமிழக நாவல்கள், சிறுகதைகள் ஆகியன பற்றிய ஆய்வு முயற்சிகள் ஆரம்பமாயின. இலங்கையைச் சேர்ந்த ஆய்வறிஞர்கள் சிலர் தொடக்கத்தில் தமிழக நாவல்கள், சிறுகதைகள் ஆகியன தொடர்பான ஆய்வுகளிலேயே தீவிர கவனம் செலுத்தினர். ஏறத்தாழ 1960களின் பிற்பகுதியிலிருந்தே இலங்கைத் தமிழ் நாவல்கள், சிறுகதைகள் ஆகியன தொடர்பான ஆய்வுகளில் கவனம் செலுத்தத் தொடங்கினர்.

தமிழக நாவல்களையும் சிறுகதைகளையும் பற்றிய இலங்கையரின் ஆய்வு முயற்சிகள் பல திறப்படும். அவையாவன: தமிழக நாவல்களையும் சிறுகதைகளையும் பற்றிச் சுருக்கமாக அறிமுகப்படுத்தல், சிறந்த நாவல்களையோ சிறுகதைகளையோ தனித்தனியாகவும் விரிவாகவும் ஆராய்தல், நாவல், சிறுகதை எழுத்தாளர்களுள் தரமானவர்களையும், சிறந்தவர்களையும், அறிமுகப்படுத்தல், சிறுகதையினதும் நாவலினதும் தோற்றம்,

வளர்ச்சிப் போக்குகள், அவற்றுக்கான காரணங்கள் முதலியவற்றை வரலாறும் திறனாய்வும் கலந்த பார்வையுடன் விரிவாக ஆராய்தல், தமிழக நாவல்களையும் சிறுகதைகளையும் ஈழத்து நாவல் களுடனும் சிறுகதைகளுடனும் ஒப்பு நோக்குதல் முதலியனவாகும்.

தமிழகத்திலே ஏறத்தாழ 1950ஆம் ஆண்டு வரை எழுந்த நாவல்களையும் சிறுகதைகளையும் பேராசிரியர் செல்வநாயகம் அவர்கள் தமிழ் இலக்கிய வரலாறு என்னும் நூலின் இறுதியில் இருபத்தாறு பக்கங்களுள் சுருக்கமாகவும் கச்சிதமாகவும் மதிப்பிட்டுள்ளார். இலங்கையரை மிகுதியும் ஈர்த்த தமிழக எழுத்தாளர்களுள் புதுமைப்பித்தன் முதன்மையிடம் வகிக்கின்றார். உயர்தரக் கல்வி முதல் பல்கலைக்கழகக் கல்விவரை தமிழ்ப் பாடவிதானத்தில் புதுமைப்பித்தன் கதைகள் பாடநூல்களாகவும் இடம்பெற்றுள்ளன. பல்கலைக்கழகங்களைச் சார்ந்தோரும் சாராதோரும் புதுமைப்பித்தன் பற்றிச் சுருக்கமாகவும் விரிவாகவும் ஆராய்ந்துள்ளனர்.

புதுமைப்பித்தனுக்கு அடுத்தநிலையில் கல்கி, அகிலன், மு. வரதராசன், அ. மாதவையா, கி. ராஜமையர், விந்தன், ஜெயகாந்தன், பார்த்தசாரதி, ரகுநாதன், ராஜம்கிருஷ்ணன், கு.ப.ரா., மௌனி, டி. செல்வராஜ், ஜானகிராமன் முதலியோர் பற்றித் தனித்தனியாகவும் சுருக்கமாகவும் விரிவாகவும் பலர் நோக்கியுள்ளனர்.

தமிழக நாவல்களின் தோற்றம், வளர்ச்சிப் போக்குகள், அவற்றை நிர்ணயித்த காரணிகள், தமிழக நாவல் இலக்கிய வளர்ச்சியில் மேலை நாடுகளின் நாவல்கள் ஏற்படுத்திய பாதிப்புகள், காப்பியத்துக்கும் நாவலுக்குமிடையிலான வேறுபாடுகள் முதலியவற்றைக் கூர்ந்து நோக்கிப் பெருமளவிற்கு முழுமையாகவும் விரிவாகவும் வரலாறும் திறனாய்வும் கலந்த பார்வையுடன் முதன்முதல் நூலினை எழுதிய பெருமை பேராசிரியர் க. கைலாசபதி அவர்களையே சாரும். இந்நூல் வெளிவந்த பொழுது தமிழ் கூறும் நல்லுலகில் ஒருபுறம் அமோக ஆதரவும் பாராட்டுதல்களும் மறுபுறம் காரசாரமான கண்டனங்களும் இடம்பெற்றன. க. கைலாசபதி அவர்கள் இந்நூலை மட்டுமின்றித் தமிழக நாவல்கள் தொடர்பாக நீண்ட கட்டுரைகள் பலவற்றையும் எழுதியுள்ளார். க. கைலாசபதி அவர்களைப் போன்றே பேராசிரியர் கா. சிவத்தம்பி அவர்களும் தமிழக நாவல்கள் தொடர்பாகக் காத்திரம் மிக்க ஆய்வுகள் பலவற்றைச் செய்துள்ளார். அவரது ஆய்வில் சமூகவியல் நோக்கு

மேலோங்கி நிற்பதை அவதானிக்கலாம். அவரது ஆய்வுக் கட்டுரைகளுள் ஒரு பகுதி 'நாவலும் வாழ்க்கையும்' என்னும் நூலாக வெளிவந்துள்ளது. நாவல்களின் சமூகப்பயன்பாடு, சமூகத்தேவை, சமூகவியலம்சங்கள், சமூகவியல், மானிடவியல், சமூக வரலாறு, வெகுசனத் தொடர்பியல் முதலியவற்றுக்கும் நாவல் இலக்கியத்துக்குமிடையிலான நெருங்கிய பிணைப்பு முதலியவற்றைப் பெருமளவிற்கும் தமது ஆய்வுகளில் விண்டு காட்டியுள்ளார்.

தமிழக வரலாற்று நாவல்கள் இக்கட்டுரையாசிரியரால் விரிவாக ஆராயப்பட்டுள்ளது. கலாநிதிப் பட்டத்திற்காகச் சமர்ப்பிக்கப்பட்ட (1979) இவ்ஆய்வுக் கட்டுரை இப்பொழுது நூல்வடிவம் பெற்றுக் கொண்டிருக்கிறது. தமிழில் எழுந்த முதல் நாவல் எது, எந்த ஆண்டில் வெளிவந்தது என்ற வினாக்களும் சர்ச்சைகளும் இடம்பெற்றுக் கொண்டிருந்தபோது அவற்றுக்கு முற்றுப்புள்ளி வைப்பது போன்று 1976ஆம் ஆண்டு யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம் தமிழ் நாவல் நூற்றாண்டு விழாவைக் கொண்டாடியது; கருத்தரங்கையும் நடத்தியது, இக் கருத்தரங்கில் இலங்கையரும் தமிழ்நாட்டினரும் இரு நாடுகளின் நாவல்கள் தொடர்பான ஆய்வுகளைச் சமர்ப்பித்திருந்தனர்.

தமிழக நாவல்கள் தொடர்பாகத் தனிநாயகம் அடிகள், சி. தில்லைநாதன், சி. மௌனகுரு, திருமதி. சித்திரலேகா, நா. சுப்பிரமணியம், கலாநிதிகள் துரை. மனோகரன், நுஃமான், அம்மன்கிளி முருகதாஸ், திருவாளர்கள் கே.எஸ். சிவகுமாரன், அகஸ்தியர், ஏ.ஜே. கனகரட்ணா, செ. கணேசலிங்கன், தெளிவத்தை ஜோசப், கா.பொ. இரத்தினம், சோமகாந்தன் முதலியோரும் குறிப்பிடத்தக்க ஆய்வுகளைச் செய்துள்ளனர்.

தமிழகத்துச் சிறுகதைகள் தொடர்பாகப் பேராசிரியர்கள் செல்வநாயகம், சி. தில்லைநாதன், க. அருணாசலம் முதலியோரும் கலாநிதிகள் நுஃமான், துரை. மனோகரன் முதலியோரும் நவீன இலக்கியப் பரிச்சயமுடைய கே.எஸ். சிவகுமாரன், அ.ந. கந்தசாமி, அ.செ. முருகானந்தன், செ. கணேசலிங்கன், செம்பியன் செல்வன், தெளிவத்தை ஜோசப் முதலியோரும் குறிப்பிடத்தக்க ஆய்வுகளைச் செய்துள்ளனரேனும் இவற்றுக்கெல்லாம் சிகரம் வைத்தாற்போன்று பேராசிரியர் சிவத்தம்பி அவர்களால் 1967ஆம் ஆண்டு வெளியிடப்பட்ட 'தமிழில் சிறுகதையின் தோற்றமும் வளர்ச்சியும்' என்னும் நூல் அமைந்துள்ளது எனலாம். தமிழ்ச் சிறுகதையின் தோற்றம், வளர்ச்சிப் போக்குகள் ஆகியவற்றை

விளக்கிச் சொல்கையில் அவற்றுக்கான காரணங்களையும் தமிழ்ச் சிறுகதை வளர்ச்சிக்கு முக்கியபங்களிப்புச் செய்தவர்களையும் இந்நூலில் விரிவாகநோக்கியுள்ளார். தமிழகச் சிறுகதைகள் பற்றி 1967 ஆம் ஆண்டுவரை வெளிவந்த ஆய்வுகளுள் இந்நூல் பலவகைகளிலும் முக்கியத்துவம் பெறுகின்றது எனலாம்.

ஈழத்துச் சிறுகதை முதல்வர்கள் என விதந்து கூறப்படும் சி. வைத்தியலிங்கம், இலங்கையர்கோன், சம்பந்தன், சோ. சிவபாத சுந்தரம் முதலியோரும் அவர்களையடுத்துச் சிறுகதை, குறுநாவல், நாவல், கவிதை முதலியனவற்றைப் படைப்பதில் தீவிர ஆர்வம் காட்டிய அ.ந. கந்தசாமி, அ.செ. முருகானந்தன், தி.ச. வரதராசன், வ.அ. இராசரத்தினம், கனகசெந்திநாதன், சொக்கன், நாவற்குழியூர் நடராசன் முதலியோரும் பல்வேறு சஞ்சிகைகளிலும் பத்திரிகைகளிலும் எழுதியுள்ள குறிப்புகளும் கட்டுரைகளும் தொடர் கட்டுரைகளும் ஈழத்துச் சிறுகதைகள், நாவல்கள் ஆகியன பற்றிய ஆய்வு முயற்சிகளுக்கு முன்னோடியாக அமைந்துள்ளன என்பதில் ஐயமில்லை.

இதேபோன்று எஃப்.எக்ஸ்.சி. நடராசா, பண்டிதர் கா.பொ. இரத்தினம், மு. கணபதிப்பிள்ளை, சில்லையூர் செல்வராசன் முதலியோரும் தத்தமது நூல்களிலும் கட்டுரைகளிலும் குறிப்பிட்டுள்ள முக்கிய குறிப்புகளும் தகவல் தேட்ட முயற்சிகளும் பிறவும், அலட்சியப்படுத்த முடியாதவை. ஏறத்தாழ 1970களிலிருந்து ஈழத்துச் சிறுகதைகள், நாவல்கள் ஆகியன தொடர்பாகக் காத்திரம்மிக்கதும் பரந்துபட்டதும் ஆழமானதுமான ஆய்வுகள் பெருகுவதற்கு மேற்கண்டவர்களே முதலில் வழி சமைத்தனர் எனலாம்.

ஈழத்துச் சிறுகதைகள் தொடர்பாக ஏறத்தாழ 1973ஆம் ஆண்டுக்கு முன்னரே பேராசிரியர் கைலாசபதி, சிவத்தம்பி, தில்லைநாதன் ஆகியோரால் எழுதப்பட்ட காத்திரமான கட்டுரைகள் பின் வந்த ஆய்வாளர்கள் பலருக்கும் முன்மாதிரியாக விளங்கின என்பதில் ஐயமில்லை. கனக. செந்திநாதன் ஈழத்து இலக்கிய வளர்ச்சி, செம்பியன் செல்வன் அவர்களின் ஈழத்துத் தமிழ்ச்சிறுகதை மணிகள், சி. மௌனகுரு, மௌ. சித்திரலேகா, எம்.ஏ. நுஃமான் ஆகியோரால் எழுதிவெளியிடப்பட்ட இருபதாம் நூற்றாண்டு ஈழத்துத் தமிழ் இலக்கியம், பேராசிரியர் சண்முகதாஸ் அவர்களால் பதிப்பிக்கப்பட்ட ஆக்க இலக்கியமும் அறிவியலும் முதலிய நூல்களிலும் ஈழத்துச் சிறுகதைகள் பற்றிய ஆய்வுகள் இடம் பெற்றுள்ளன.

ஏறத்தாழ 1960களின் ஆரம்பத்திலிருந்து பல்கலைக் கழகங்களில் மட்டுமன்றி அவற்றுக்கு வெளியிலும் ஈழத்து இலக்கியம் பற்றிய தேடுதல் முயற்சிகளும் ஆய்வுகளும் முனைப்புப் பெற்றுவருதல் குறிப்பிட்டுக் கூறக்கூடியதொன்றாகும். இவற்றுள் சிறுகதை, நாவல் ஆகியனதொடர்பான ஆய்வு முயற்சிகளே அதிகம் என்பதும் 'ஈழத்தின் ஆக்க இலக்கிய கர்த்தாக்கள் பலர் ஆக்க இலக்கிய முயற்சிகளில் மட்டுமின்றி ஆய்வு முயற்சிகளிலும் ஈடுபாடு காட்டி வருகின்றனர் என்பதும் மனங்கொளத்தக்கது. இவற்றுட் கணிசமானவை நவீன ஆய்வுநெறி முறைகளுக்கியையாவிடினும் அத்தகைய ஆய்வினை மேற்கொள்ள முயல்வோருக்கு அவசியம் வேண்டிய தரவுகளையும் எழுத்தாளர்களின் வாழ்க்கை அநுபவங்களையும் எழுத்து அநுபவங்களையும் பிறவற்றையும் அளிப்பனவாக விளங்குதல் விதந்து கூறத்தக்கது.

இவ்வகையில் வகை மாதிரிக்கு எடுத்துக்காட்டாக, எஸ். அகஸ்தியர், டானியல், டொமினிக் ஜீவா, செ. கணேசலிங்கன், செ.கதிர்காம நாதன், கே.எஸ். சிவகுமாரன், எஸ். பொன்னுத்துரை, என்.கே. ரகுநாதன், சாரல்நாடன், சு. முரளிதரன், மு. தளைய சிங்கம், மு. பொன்னம்பலம், என். சண்முகரத்தினம், க. சண்முக லிங்கம், அன்ரனி ஜீவா, பெனடிக்ற்பாலன், தெளிவத்தை ஜோசப், சோமகாந்தன், பத்மா சோமகாந்தன், கோகிலா மகேந்திரன், மனோன்மணி சண்முகதாஸ், செங்கை ஆழியான், செம்பியன் செல்வன், அ.ஸ. அப்துல்ஸமது, கலாபரமேஸ்வரன், சிவநேசச் செல்வன், சோ.சிவபாத சுந்தரம் (இலங்கையிலே பிறந்து வளர்ந்த இவர் தற்பொழுது இந்தியப் பிரஜை என்பது மனங்கொளத் தக்கது) தமிழகத்தைச் சேர்ந்த பேராசிரியர் சாலை. இளந்திரையன், ச. செந்தில்நாதன், விஜய பாஸ்கரன், செ. சண்முகவேல் முதலியோர் குறிப்பிடத்தக்கவர்கள்.

இலங்கையில் இதுகாலவரை இடம் பெற்றுள்ள அனைத்துலகத் தமிழாராய்ச்சி மாநாடு, பிரதேசத் தமிழாராய்ச்சி மாநாடுகள், தேசிய சாகித்திய விழாக்கள், மாகாண சாகித்திய விழாக்கள், பல்வேறு வகையான கருத்தரங்குகள் முதலியவற்றிலும் பல்வேறு வகையான மலர்கள், சஞ்சிகைகள் முதலியவற்றிலும் நாவல், சிறுகதை ஆகியன தொடர்பான ஆய்வுகளே முக்கியத்துவம் பெற்றுள்ளமை மனங்கொளத்தக்கது.[8]

ஈழத்துத் தமிழ்ச்சிறுகதைகள் தொடர்பாகப் பலநூற்றுக் கணக்கான கட்டுரைகளும் குறிப்புகளும் ஆய்வுக் கட்டுரைகளும்

இதுவரை வெளிவந்துள்ளனவேனும் முழுமையானதும் விரிவானதும் வரலாறும் திறனாய்வும் கலந்த பார்வையுடன் கூடியதுமான ஆய்வினை இதுவரை எவரும் மேற்கொண்டதாகத் தெரியவில்லை. இத்தகையதொரு பெருங்குறைபாட்டினை ஓரளவேனும் போக்கும் வகையில் இக்கட்டுரையாசிரியரால் மேற்கொள்ளப்பட்ட ஆய்வு அமைந்துள்ளது எனலாம்.

இக்கட்டுரையாசிரியர் தமது முதுகலைமாணிப்பட்டத்தின் பொருட்டு 1965ஆம் ஆண்டு வரையிலான ஈழத்துத் தமிழ்ச் சிறுகதைகளை, அவற்றின் தோற்றம், வளர்ச்சிப் போக்குகள், அவற்றை நிர்ணயித்த காரணிகள், கதைகளின் முக்கிய பண்புகள் என்ற வகையில் விரிவாக ஆராய்ந்து 1974ஆம் ஆண்டு ஜனவரி மாதம் சமர்ப்பித்து இருந்தார். இது தவிர ஈழத்துச் சிறுகதைகள், நாவல்கள் ஆகியன தொடர்பான பல ஆய்வுக்கட்டுரைகளையும் இக் கட்டுரையாசிரியர் வெளியிட்டுள்ளார்.

ஈழத்துத் தமிழ்ச் சிறுகதைகள் தொடர்பாக ஆய்வுகளை மேற்கொண்ட பலரும் ஈழத்து நாவல்கள் தொடர்பாகவும் பயன்மிக்க ஆய்வுகள் பலவற்றைச் செய்துள்ளதால் இச்சிறு கட்டுரையில் அவர்களது பெயர் விபரங்களை மீண்டும் தருவது தவிர்த்துக் கொள்ளப்படுகின்றது. எனினும் விண்டுரைக்கத்தக்க ஒருசிலரது ஆய்வு முயற்சிகள் மட்டும் மிகச்சுருக்கமாக இங்கு நோக்கப்படும். அத்தகையவர்களுள் பேராசிரியர் நா. சுப்பிரமணியம் அவர்களே இது காலவரை பல வகையிலும் மிகுந்த முக்கியத் துவம் பெறுகின்றார் என்பதில் ஐயமில்லை. பேராதனைப் பல்கலைக்கழகத்தில் தமது முதுகலைமாணிப்பட்டத்தின் பொருட்டு ஈழத்துத் தமிழ் நாவல்களை முதன்முதலாக வரலாற்று ரீதியாகவும் விரிவாகவும் ஆராய்ந்துள்ள அவர், அத்துடன் அமையாது பகீரதப் பிரயத்தனத்துடன் அதனை நூலாகவும் வெளியிட்டுள்ளமை போற்றத்தக்கது. ஈழத்தமிழ் நாவல்கள் தொடர்பாகக் காத்திரமானதும் விரிவானதுமான ஆய்வுகளை மேற்கொள்ள முயல்வோருக்குக் 'கலங்கரை விளக்கு'ப் போல் அவரது 'ஈழத்துத் தமிழ் நாவல்கள்- நூல் விபரப்பட்டியல்' என்னும் அறிமுகநூல் (1977) அமைந்துள்ளது. அதே சமயம் 1977 ஆம் ஆண்டிலிருந்த கடந்த சில ஆண்டுகள்வரை வெளிவந்த ஈழத்து நாவல்களைப் பற்றியும் 'மல்லிகை' என்னும் சஞ்சிகையில் தொடர் கட்டுரையாக எழுதி வந்துள்ளமை மனங்கொளத்தக்கது.

அவருக்கு அடுத்த நிலையில் நினைவுகூரப்பட வேண்டியவர்கள் சில்லையூர் செல்வராசன், கனக-செந்திநாதன்

ஆகியோராவர். இவர்களது ஈழத்துத் தமிழ் நாவல் வளர்ச்சி, ஈழத்து இலக்கியவளர்ச்சி ஆகிய நூல்கள் இவ்வகையில் அவதானிக்கத்தக்கவை.

ஈழத்துச் சிறுகதைகள், நாவல்கள் ஆகியன தொடர்பாக இதுகாலைவரை இடம்பெற்றுள்ள ஆய்வுகளிலும் பார்க்க எதிர் காலத்தில் அவசியம் மேற்கொள்ளப்படவேண்டிய ஆய்வுகளே அதிகம் என்பதில் ஐயமில்லை. தமிழக நாவல்கள், சிறுகதைகள் ஆகியன தொடர்பாகத் தமிழகத்தில் இதுகாலவரை இடம் பெற்றுள்ள விவரணத்திறனாய்வுகள், நுண்பகுப்பாய்வுகள், சமூகவியல், மானிடவியல் முதலியவற்றின் அடிப்படையிலான விரிவான ஆய்வு முயற்சிகள் முதலியவற்றுடன் ஒப்பிடுகையில் இலங்கையின் சிறுகதை, நாவல் ஆகியன தொடர்பான ஆய்வு முயற்சிகள் எத்துணை தூரம் பின் தங்கியுள்ளன என்பது தெள்ளிதிற் புலப்படும். இவற்றுக்கு இலங்கையில் நீண்ட காலமாக நிலவிவரும் பிரசுரவசதிக்குறைவும் கடந்த கால் நூற்றாண்டாக நிலவிவரும் கொடூரங்கள் நிறைந்த போர்க்காலச் சூழ்நிலையும் மிகமுக்கிய காரணங்கள் என்பதில் எவ்வித ஐயமுமில்லை.

## இஸ்லாமியத் தமிழ் இலக்கியம்

சைவமும் தமிழும், வைணவமும் தமிழும், சமணமும் தமிழும், கிறிஸ்தவமும் தமிழும், பௌத்தமும் தமிழும், இஸ்லாமும் தமிழும் எனக்குறுகிய மனப்பான்மையுடன் தமிழ் இலக்கிய வரலாற்றை ஆராய்வது பெருந்தவறு என மூர்க்கத் தனமாக வாதிட்டவர்களும் மூர்க்கம் தணிந்த நிலையில் 'அவ்வாறு நோக்குவதும் அவசியம் தான்' என ஒத்துக் கொள்ள லாயினர். 'வேற்றுமைகளில் ஒற்றுமை' என்பதற்கிணங்கவே நீண்ட காலத்தமிழ் இலக்கிய வரலாறு விளங்கி வந்துள்ளமை மனங்கொள்ளத்தக்கது. சமணர்களாகவும் பௌத்தர்களாகவும் கிறிஸ்தவர்களாகவும் மாறிய தமிழ் மக்கள் தம்மைத் தமிழர் களாகவே கருதிச் செயற்பட்டனர். ஆயின் இஸ்லாம் மதத்துக்கு மாறிய தமிழ் மக்கள் தம்மை இஸ்லாமியர்களாகவே கருதிச் செயற்பட்டு வந்துள்ளனர் என்பது வரலாற்றுண்மையாகும். இதன் காரணமாகவே இஸ்லாமியத் தமிழ் இலக்கியம் பற்றிய ஆய்வு முயற்சிகளைத் தனியாக நோக்க வேண்டியுள்ளது.

அகண்டாகாரமான தமிழ் இலக்கியப் பரப்பில் இஸ்லாமியத் தமிழ் இலக்கியம் குறிப்பிடத்தக்க இடத்தினை வகிக்கின்றது.

இஸ்லாம் சமயச் சார்பான தமிழ் இலக்கியங்களையே இஸ்லாமியத் தமிழ் இலக்கியம் எனலாம். தமிழ் இலக்கிய உலகிற்குப் புதிய சில இலக்கிய வடிவங்களையும் புதிய சில பரிமாணங்களையும் இஸ்லாமியத் தமிழ் இலக்கிய கர்த்தாக்கள் நல்கியுள்ளனர். இஸ்லாமியத் தமிழ் இலக்கிய கர்த்தாக்கள் பலர் சிறந்த படைப்புகள் பலவற்றைத் தமிழ் உலகிற்களித்து அழியாப் புகழ் பெற்றுள்ளனர்.

ஏறத்தாழ 1950 ஆம் ஆண்டுவரை இஸ்லாமியத் தமிழ் இலக்கியம் பற்றிய தீவிர தேடுகையோ காத்திரமான ஆய்வு முயற்சிகளோ இலங்கையில் இடம் பெறவில்லை. 'முஸ்லிம்நேசர்' எனப் போற்றப்படும் சுவாமி விபுலாநந்தரே இஸ்லாமியத் தமிழ் இலக்கியம் பற்றிய ஆய்வு முயற்சிகளுக்கு முதலில் அடிகோலியவ ராவர். இலங்கைப் பல்கலைக்கழகத்தில் விபுலாநந்தர் தமிழ்ப் பேராசிரியராக விளங்கிய காலத்தில் தம்மிடம் பயின்று கொண்டிருந்த மாணவனான உவைஸ் அவர்களை இஸ்லாமியத் தமிழ் இலக்கியம் பற்றிய ஆய்வு முயற்சிகளுக்குத் தூண்டினார். அவரைத் தொடர்ந்து பேராசிரியர்கள் கணபதிப்பிள்ளை, வித்தியானந்தன் முதலியோர் உவைஸ் அவர்களுக்குத் தூண்டுதல் அளித்ததோடு தாமும் இஸ்லாமியத் தமிழ் இலக்கியம் பற்றிய ஆய்விற்கவனம் செலுத்தினர். இவ்வகையில் பேராசிரியர் வித்தியானந்தன் மேற்கொண்ட ஆய்வுகள் நூல்களாகவும் கட்டுரைகளாகவும் வெளிவந்துள்ளமை குறிப்பிட்டத்தக்கது.[9]

பேராசிரியர் வித்தியானந்தன் அவர்களைத் தொடர்ந்து பேராசிரியர்கள் சிவத்தம்பி, தில்லைநாதன், சண்முகதாஸ், பாலசுந்தரம், கலாநிதிகள் நுஃமான், துரை. மனோகரன், அனஸ் முதலியோர் இஸ்லாமியத் தமிழ் இலக்கியம் தொடர்பாகக் குறிப்பிடத்தக்க ஆய்வுகளைச் செய்துள்ளனர். அவை கட்டுரைகளாகவும் நூல்களாகவும் வெளிவந்துள்ளன.

இஸ்லாமியத் தமிழ் இலக்கியம் பற்றிய ஆய்வுகளை மேற்கொண்டவர்கள், அவற்றுக்குத் தூண்டுதல் அளித்தவர்கள் என்ற வகையில் எஸ்.ஏ. செய்யிதுஹஸன் மௌலானா, எம்.கே. செய்யிதுஹஸன் அஹமது, எ.எம்.எ. அஸீஸ், ரி.எஸ். அப்துல் லத்தீப், எஸ்.எச்.எம்.ஜெமீல், அ.ஸ.அப்துஸ்ஸமது, மருதூர்க்கொத்தன், வீ.எம்.எம். இஸ்மாயில், எஸ்.முத்துமீரான், மருதூர் எம். மஜீத், ஏ. பீர்முஹம்மது, ஆ. மு.ஷரீபுத்தீன், எஸ்.எம். கமால்தீன், முஹம்மது சமீம், எஸ்.எம்.ஏ.ஹஸன், எம்.ஸி.எம்.ஸீபைர், ஜே.எம்.எம். அப்துல்காதர், ஏ.ஏ.எம்.புவாஜி, எஸ்.எம். ஹனிபா,

பி.எம். புண்ணியாமீன், ஏ.எஸ். உபைத்துல்லா, புவாஜி முதலியோரை முக்கியமாகக் குறிப்பிடலாம்.

கடந்த பல வருடங்களாக நடைபெற்று வரும் அனைத்துலக இஸ்லாமியத் தமிழ் இலக்கிய மாநாடுகள் இஸ்லாமியத்தமிழ் இலக்கிய ஆய்வு வரலாற்றிற் பெரும் திருப்பத்தையும் தாக்கத்தையும் முன்னோக்கிய திடீர்ப் பாய்ச்சலையும் விழிப்புணர்வினையும் ஏற்படுத்தியுள்ளன.[10]

மேற்கண்டவர்களது ஆய்வுமுயற்சிகளுக்கெல்லாம் சிகரம் வைத்தாற் போல் பேராசிரியர் அல்லாமா உவைஸ் அவர்களின் அகண்டாகாரமான ஆய்வுமுயற்சிகள் அமைந்துள்ளன. தமிழ், சிங்களம், ஆங்கிலம் ஆகிய மும் மொழிகளிலும் புலமைமிக்க பேராசிரியர் உவைஸ் அவர்களின் ஆய்வு முயற்சிகளுள் முஸ்லிம்கள் தமிழுக்கு ஆற்றிய தொண்டு, இஸ்லாமியத் தமிழ்க் காப்பியங்கள், ஆறுபெரும்பாகங்களைக் கொண்ட இஸ்லாமியத் தமிழ் இலக்கியவரலாறு ஆகியவை விதந்து கூறத்தக்கவை.

இஸ்லாமியத் தமிழ் இலக்கியம் என ஒன்று உண்டா என மிகுந்த அலட்சியத் தோடு பலசகாப்தங்களுக்கு முன்னர் வினாவியவர்கள் பல்லாயிரம் பக்கங்களைக் கொண்ட இஸ்லாமியத் தமிழ் இலக்கிய வரலாறு என்னும் நூல் வெளிவந்ததும் வாயடைத்துப் போயினர். பேராசிரியர் உவைஸ் அவர்களது ஆய்வு முயற்சிகளின் கொடுமுடியாக இந்நூல் விளங்குகின்றது. இந்நூலாக்கத்தின் போது அவருக்கு உற்ற துணையாக விளங்கிய பேராசிரியர் பி.மு. அஜ்மல்கான் அவர்களது பங்களிப்பினையும் நாம் மறக்கலாகாது. பேராசிரியர் உவைஸ் அவர்கள் ஆய்வாளராக மட்டும் அமையாது இஸ்லாமிய இலக்கியங்கள் பற்றிய தேடுகையிலும் அளப்பரிய பணிகள் புரிந்துள்ளார். முஸ்லிம்கள் தமிழுக்காற்றிய தொண்டு என்னும் விடயம் பற்றிய ஆய்வினை நிறைவேற்றும்போது ஏறத்தாழ இருநூறு இஸ்லாமியத் தமிழ் இலக்கியங்களைக் கண்டறிந்த அவர், மதுரைக்காமராசர் பல்கலைக்கழகத்தில் இஸ்லாமியத் தமிழ் இலக்கியத்துறைப் பேராசிரியராகக் கடமையாற்றியபோது இரண்டாயிரத்துக்கும் மேற்பட்ட இஸ்லாமியத் தமிழ் இலக்கியங்களைக் கண்டு பிடித்தமை சாதாரண சாதனையல்ல. நூல்களைத் தொகுப்பதிலும் பதிப்பிப்பதிலும் மொழிபெயர்ப்பதிலும் உரைகள் எழுதுவதிலும் தீவிர கவனம் செலுத்தினார். சிறியனவும் பெரியனவுமாக நாற்பத்தைந்து நூல்களைச் சுயமாக எழுதி வெளியிட்டுள்ளார்;

பன்னிரண்டு நூல்களை மொழி பெயர்த்துள்ளார்; பதினொரு நூல்களைப் பதிப்பித்துள்ளார்.

பேராசிரியர் உவைஸ் அவர்களது ஆய்வு முயற்சிகளுடன் இஸ்லாமியத் தமிழ் இலக்கியம் பற்றிய ஆய்வு முயற்சிகள் நிறைவு பெற்று விடவில்லை. அவர் காட்டிய வழியிலே மேன்மேலும் காத்திரமானதும் பரந்துபட்டதும்; நுண்பகுப்பாய்வு, சமூகவியல் ஆய்வு முதலியவற்றினடிப்படையிலானதுமான ஆய்வுகள் மேற்கொள்ளப்பட வேண்டும்; தொடர்ந்து இஸ்லாமியத் தமிழ் இலக்கியங்கள் பற்றிய தேடுகை முயற்சி இடம்பெற வேண்டும்.

### மலையகத்தமிழியல்

பல்வேறு காரணங்களால் மலையகத் தமிழியல் தனியாக நோக்கப்பட வேண்டியுள்ளது. கடந்த நூற்றைம்பது ஆண்டுகளுக்கும் மேற்பட்ட கால வரலாற்றைக் கொண்டுள்ள மலையகத் தமிழ் மக்களின் புலப்பெயர்வு, அதற்கான காரணங்கள், அரசியல், சமூக, பொருளாதார நிலைமைகள் தொடர்பான அவர்களது பிரத்தியேகப் பிரச்சினைகள் முதலியன பற்றிய ஆய்வு முயற்சிகள் பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்தே இடம் பெறத்தொடங்கி விட்டன.

மலையகத் தமிழியல் தொடர்பான ஆய்வு வரலாற்றினை, ஏறத்தாழ 1960ஆம் ஆண்டுவரை மேற்கொள்ளப்பட்ட ஆய்வு முயற்சிகள், 1960களின் ஆரம்பத்திலிருந்து ஏறத்தாழ 1980களின் முற்பகுதிவரை மேற்கொள்ளப்பட்ட ஆய்வு முயற்சிகள், 1980 பிற்பகுதியிலிருந்து இற்றைவரை மேற்கொள்ளப்பட்ட ஆய்வு முயற்சிகள் என மூன்று முக்கிய காலகட்டங்களாக வகுத்து நோக்குதல் பொருத்தமானதாகும்.

ஏறத்தாழ 1960ஆம் ஆண்டு வரை மலையகத் தமிழியல் தொடர்பாக மேற் கொள்ளப்பட்ட ஆய்வு முயற்சிகள் பல நூல்களாகவும் கட்டுரைகளாகவும் வெளிவந்துள்ளன. அவற்றுள் அதிகமானவை ஆங்கிலத்திலேயே வெளிவந்துள்ளன. அவற்றுட் கணிசமானவை புலமைமிக்கோரால் ஓரளவேனும் நவீன நெறிமுறைகளுக்கேற்ப மேற்கொள்ளப்பட்டனவாயினும் அதிகமான ஆய்வுகள் வெறுமனே உயிரோட்ட மற்றதும் யந்திரீக மயப்பட்டதுமான முயற்சிகளாகவே அமைந்துள்ளமையினை அவதானிக்கலாம்.

ஏறத்தாழ 1960களின் நடுப்பகுதியிலிருந்து மலையகத் தமிழ் மக்கள் மத்தியில் முன்னர் ஒரு போதும் காணப்படாத அளவிற்கு

விழிப்புணர்வும் எழுச்சியும் ஏற்படலாயின. மலையகத் தொழிலாளரது பல்வேறுபட்ட பிரச்சினைகள், வாழ்க்கைப் போராட்டங்கள், அவலங்கள் முதலியன தொடர்பாகச் சிறுகதைகளும் நாவல்களும் கவிதைகளும் நாடகங்களும் உரை நடைச் சித்திரங்களும் அதிக அளவில் வெளிவரலாயின. அதே சமயம் ஆய்வு முயற்சிகளும் படிப்படியாக அதிகரிக்கலாயின.

1960களின் முற்பகுதியிலிருந்து மலையகத்திலேயே பிறந்து வளர்ந்தவர்களும் இலங்கையின் ஏனைய பகுதிகளிலிருந்து மலையகத்தில் தற்காலிகமாகவோ நிரந்தரமாகவோ வாழ்ந்த வர்களும் மலையகத்தைச் சேர்ந்த பல்வேறு நிறுவனங்களும் கலை இலக்கிய மன்றங்களும் மேற்கொண்ட ஆய்வு முயற்சிகள் மனங்கொளத் தக்கவை. 1983ஆம் ஆண்டு இலங்கையில் இடம் பெற்ற மிகக்கொடூரமான இனக் கலவரம் மலையகத்தையும் வெகுவாகப் பாதித்தது. ஒருசில ஆண்டுகள் ஆய்வு முயற்சிகள் ஸ்தம்பித்த நிலையை அடைந்தன. ஆயின் அதனைத் தொடர்ந்து மலையகத்தில் புத்தெழுச்சி ஏற்படலாயிற்று; ஆய்வு முயற்சிகளும் அதிகரிக்கலாயின.

ஏறத்தாழ 1950களிலிருந்து இற்றை வரை மலையகத் தமிழியல் தொடர்பான ஆய்வுகளை மேற்கொண்டோர் என்ற வகையில் எடுத்துக்காட்டாக முக்கியமான ஒரு சிலரை மட்டுமே இச்சிறு கட்டுரையிற்குறிப்பிடலாம். பேராசிரியர்கள் சிவத்தம்பி, தில்லைநாதன், பஸ்தியாம்பிள்ளை, சந்திரசேகரன், மூக்கையா, சின்னத்தம்பி, சிவராசா, அருணாசலம், நித்தியானந்தன், திருவாளர்கள் சாரல்நாடன், சி.வி. வேலுப்பிள்ளை, அன்ரனி ஜீவா, தெளிவத்தை ஜோசப், சு. முரளிதரன், முத்துலிங்கம், தேவராஜ், நடேசன், கே. வேலாயுதம், ஜெ. சற்குருநாதன், எஸ். சந்திரபோஸ், கலாநிதிகள் வாமதேவன், வேல்முருகு, திருவாளர்கள், சு. மகாலிங்கம், எஸ். விஜயேந்திரன், செல்விகள் ஞானாம்பிகை, சர்மிளாதேவி, மேனகா, சோபனாதேவி, திருமதி சோதிமலர், திருமதி. அம்பிகை, மா. கருணாநிதி, எஸ். இராஜேந்திரன், கலாநிதி. துரை. மனோகரன், திரு. சி. அழகுப்பிள்ளை, மு. நித்தியானந்தன், மாத்தளை வடிவேலன், ஏ.வி.பி. கோமஸ், திருச்செந்தூரன் முதலியோரது முயற்சிகள் குறிப்பிடத்தக்கவை.[12]

மலையகத் தமிழியல் தொடர்பாக இதுவரை நடை பெற்ற ஆய்வுகள் குறிப்பிடத்தக்க நம்பிக்கையை அளிக்கின்றன

வேனும் எதிர்காலத்தில் மேற்கொள்ளப்பட வேண்டிய ஆய்வுகள் மிக அதிகம் என்பதையும் நாம் மனத்திருத்துதல் அவசியமாகும்.

**அவைக்காற்றுக் கலைகள்**

தமிழகத்து நாடகங்கள், நாட்டுக்கூத்து முதலியன தொடர்பாக இலங்கையைச் சேர்ந்த ஆய்வாளர்கள் மேற்கொண்ட ஆய்வு முயற்சிகள் குறைந்த அளவினதே. பேராசிரியர் சிவத்தம்பி அவர்கள் தமது கலாநிதிப்பட்டத்தின் பொருட்டு 'பழந்தமிழர் சமூகத்தில் நாடகம்' என்னும் விடயம் பற்றி விரிவாக ஆராய்ந்துள்ளார். தமிழகமும் நாடகமும், தமிழகமும் சினிமாவும் முதலியன தொடர்பாகவும் பல ஆய்வுக் கட்டுரைகளை எழுதியுள்ளார். தொடர்ந்து ஈழத்து நாடகங்கள் தொடர்பாகவும் பல ஆய்வுகளைச் செய்துள்ளார்.

பேராசிரியர் பதிப்பிள்ளை அவர்கள் சிறந்த பல நாடகங்களை இயற்றியளித்துள்ளதுடன் நாடகங்கள் தொடர்பான ஆய்வுகளையும் செய்துள்ளார். பேராசிரியர் வித்தியானந்தன் தமிழகத்து நாடகங்கள், ஈழத்து நாடகங்கள் ஆகியன தொடர்பாகப் பல ஆய்வுக் கட்டுரைகளை எழுதியுள்ளதுடன் ஈழத்தின் நாட்டுக் கூத்துக் கலைக்குப் புத்துயிரளித்தும் பழைய நாடகங்கள் பலவற்றைப் பதிப்பித்தும் அரும் பணிகள் புரிந்துள்ளார். ஈழத்தில் நவீன நாடகங்களின் தோற்றம், வளர்ச்சிப் போக்குகள் அவற்றுக்கான காரணங்கள் ஆகியனபற்றி க. சொக்கலிங்கம் வரலாற்று ரீதியாகவும் விரிவாகவும் ஆராய்ந்துள்ளார். கலையரசு சொர்ணலிங்கம், ஏ.ரி. பொன்னுத் துரை, இ.சிவானந்தன், பேராசிரியர்கள் கைலாசபதி, தில்லைநாதன், கவிஞர் இ. முருகையன், எஸ். பொன்னுத்துரை, நெல்லை. க. பேரன், அன்ரனிஜீவா, மாத்தளை கார்த்திகேசு, கே.எஸ். சிவகுமாரன், எச்.எம்.பி. முஹிதீன், என். சண்முகரத்தினம், முதலியோர் ஈழத்து நாடகங்கள் தொடர்பாக ஆய்வுக் கட்டுரைகளை எழுதியுள்ளனர்.[13]

ஏறத்தாழ 1970களின் பிற்பகுதிவரை ஈழத்திலே தமிழ் நாடகம் பற்றி மேற்கொள்ளப்பட்ட ஆய்வு முயற்சிகள் பெரும் பாலும் தமிழ்நாடக நூல்கள் பற்றியனவாகவே காணப்பட்டன. ஆயின் ஏறத்தாழ 1980களின் முற்பகுதியிலிருந்து பல்வேறு காரணங்களால் அரங்கியல் பற்றிய ஆய்வு முயற்சிகள் பெருகலாயின. அரங்கியல் பற்றிய முன்னணி ஆய்வாளர்களுள் முக்கியம் பெற்று விளங்குபவர் பேராசிரியர் மௌனகுரு ஆவார்.

சிறுவயதிலிருந்தே நாட்டுக்கூத்துகளில் பங்குபற்றி நடித்தவர் காலப்போக்கில் நாடக ஆசிரியராகவும் நெறியாளராகவும் ஆய்வாளராகவும் பரிணமித்தார். நாடகம், நாட்டுக்கூத்து ஆகியனபற்றிய அவரது ஆய்வுகளுள் பழையதும் புதியதும், ஈழத்துத்தமிழ் நாடக அரங்கு, மட்டக்களப்பு நாட்டுக்கூத்து ஆகிய நூல்கள் முக்கியமாகக் குறிப்பிடத்தக்கவை.

மரபு வழி நாடகம், நவீன நாடகம், அரங்கியல் ஆகிய துறைகள் தொடர்பாகக் காரை. சுந்தரம்பிள்ளை, இளைய பத்மநாதன், சிதம்பரநாதன், பாலசுகுமார் முதலியோர் மேற்கொண்டுவரும் ஆய்வு முயற்சிகளும் குறிப்பிடத்தக்கன. கல்லூரிகளிலும் பல்கலைக்கழகங்களிலும் 'நாடகமும் அரங்கியலும்' பயிற்றப்படுகின்றமையும் நாடக மன்றங்கள், நாடக அரங்கக் கல்லூரிகள் ஆகியவற்றின் செயற்பாடுகளும் ஆய்வு முயற்சிகளுக்குத் தூண்டுதல் அளிப்பனவாக உள்ளன.

### இசை, நடனம், சிற்பம், ஓவியம்

வரலாற்றுக் காலத்தின் ஆரம்பத்திலிருந்தே தமிழ் மக்களால் போற்றிப் பேணிப்பாதுகாக்கப்பட்டு வரும் கவின் கலைகள் பற்றிய ஆய்வு முயற்சிகள் தமிழகத்திற்பெருகியுள்ள அளவிற்கு இலங்கையிற் பெருகவில்லை. எனினும் இவை தொடர்பாகக் குறிப்பிடத்தகுந்த சில ஆய்வுகள் வெளிவந்துள்ளமை மனங்கொளத்தக்கது. இவ்வகையில், கலாயோகி ஆனந்த குமாரசாமி, கலைப்புலவர் நவரத்தினம், பேராசிரியர்கள் சுவாமி விபுலாநந்தர், வித்தியானந்தன், கைலாசபதி, சிவகாமி, சண்முகதாஸ், கோபாலகிருஷ்ண ஐயர், சோ. கிருஷ்ணராசா, கலாநிதி ந. வேல்முருகு, ச. ஸ்ரீகாந்தா, அ.நா. சோமஸ்கந்த சர்மா, நா. சண்முகலிங்கம், இ. முருகையன், சண்முகம் சிவலிங்கம், எஸ். பரராச சிங்கம், த. சண்முகசுந்தரம், தி. நித்தியானந்தன், பேராசிரியை ஞானாகுலேந்திரன் முதலியோர் இந்தியாவினதும் அதன் ஒரு கூருள தமிழகத்தினதும் இலங்கையினாலும் இசை, நடனம், சிற்பம், ஓவியம் முதலியன தொடர்பாகச் செய்துள்ள ஆய்வுகள் கவனத்திற் கொள்ளத்தக்கவை.[14]

### நாட்டார் வழக்காற்றியல்

கல்விமான்களால் நீண்ட காலமாகப் புறக்கணிக்கப் பட்டிருந்த இத்துறை கடந்த சில தசாப்தங்களாகவே பல்வேறு காரணங்களால் பல்கலைக்கழக ஆய்வாளர்களையும் பிறரையும் மிகுதியாக ஈர்க்கத் தொடங்கிற்று. தமிழகத்தில் இத்துறை

தொடர்பாக அதிக அளவு ஆய்வு முயற்சிகள் இடம்பெற்று வருகின்றன. இலங்கையில் கடந்த பல வருடங்களாகத் தொடர்ந்து நிலவிவரும் போர்ச்சூழ்நிலை, பல்வேறு வகையான வசதிக்குறைபாடுகள் முதலியன காரணமாகக் காத்திரமான ஆய்வு முயற்சிகள் அதிகம் பெருகவில்லை. நாட்டாரியல் அல்லது நாட்டார் வழக்காற்றியல் என்பது மிகப்பரந்ததுறை; பல்வேறு பிரிவுகளைக் கொண்டது; சமூகத்துக்குச் சமூகம் பிரதேசத்துக்குப் பிரதேசம் வேறுபாடுகளைக் கொண்டது.

நாட்டார் வழக்காற்றியல் தொடர்பாக ஆய்வு முயற்சிகள் மேற்கொண்டவர்கள் என்ற வகையில் முக்கியமான ஒரு சிலரை மட்டுமே இங்குக் குறிப்பிடலாம். பேராசிரியர்கள் கணபதிப் பிள்ளை, வித்தியானந்தன், கைலாசபதி, சிவத்தம்பி, தில்லைநாதன், இந்திரபாலா, பாலசுந்தரம், மௌனகுரு, அருணாசலம், கலாநிதிகள் நுஃமான், காரை. சுந்தரம்பிள்ளை, திரு. மு.இராமலிங்கம், செ. எதிர்மன்ன சிங்கம், முல்லைமணி, மெட்ருஸ்மயில், எஸ். முத்துமீரான், ஆ.மு. ஷரீபுத்தீன், யூ.எஸ். அலியார், யூ.எல்.ஏ. மஜீத், சி.வி. வேலுப்பிள்ளை, சாரல்நாடன் முதலியோர் இவ்வகையிற்குறிப்பிடத்தக்கவர்கள்.[15]

இலங்கையின் வடக்கு, கிழக்குப் பிரதேசங்களுக்குரிய நாட்டாரியல் தொடர்பாகக் கணிசமான ஆய்வுகள் இடம் பெற்றுள்ளன. வன்னிப் பிரதேசம், மலையகம், பொலநறுவை மாவட்டம், வடமேல் மாகாணத்தின் சிலபகுதிகள் ஆகியவற்றுக் குரிய நாட்டார் வழக்காற்றியல் தொடர்பான ஆய்வுமுயற்சிகள் ஆரம்ப நிலையிலேயே உள்ளன. இஸ்லாமிய நாட்டார் வழக்காற்றியல் தொடர்பான ஆய்வு முயற்சிகளும் ஆரம்ப நிலையிலேயே உள்ளன.

### சமூகமும் சமயமும் பண்பாடும்

இலங்கையில் சமயம், பண்பாடு ஆகியன தொடர்பாகப் பல்வேறு தரத்தினராலும் அதிக அளவு ஆய்வுகள் செய்யப் பட்டுள்ளன. ஆயின் சமூகம் பற்றிய ஆய்வுகள் குறைவாகவே இடம்பெற்றுள்ளன. அவை பற்றி மிகச் சுருக்கமாகவே இங்கு நோக்கப்படும். இத்துறைகள் தொடர்பான ஆய்வு முயற்சிகளைப் பின்வருமாறு வகுத்து நோக்கலாம். அவை மரபுவழித் தமிழ் அறிஞர்கள், சமயப்பெரியோர்கள் முதலியோரால் மேற் கொள்ளப்பட்ட முயற்சிகள், சமூகவியல் சார்ந்த ஆய்வு நிறுவனங்களால் மேற்கொள்ளப்பட்ட ஆய்வு முயற்சிகள், பல்வேறு சமய நிறுவனங்களால் மேற்கொள்ளப்பட்ட ஆய்வு

முயற்சிகள், புலமைசார் ஆய்வாளர்களால் மேற்கொள்ளப்பட்ட ஆய்வு முயற்சிகள் என்பனவாகும்.

பொதுவாக இந்துமதம், அதன் முக்கிய கூறுகள், சைவசித்தாந்தம், இலங்கையில் இந்து மதம், தமிழர் பண்பாடு முதலியன தொடர்பான ஆய்வுகளை மேற்கொண்டவர்கள் என்ற வகையில் வி. கனகசபைப் பிள்ளை, கலைப்புலவர் நவரத்தினம் H.W. தம்பையா C. சீவரத்தினம், C.S. நவரத்தினம், நமசிவாயதேசிகர் பேராசியர்கள் சுவாமி விபுலாநந்தர், கணபதிப்பிள்ளை, தனிநாயகம், வித்தியானந்தன், கைலாசநாதக் குருக்கள், கைலாசபதி, சிவத்தம்பி, தில்லைநாதன், வேலுரர் பிள்ளை, இராம கிருஷ்ணன், பத்மநாதன், இந்திரபாலா, சிற்றம்பலம், சோ. கிருஷ்ணராசா, சிவசாமி, பூலோக சிங்கம், சுப்பிரமணியம், அருணாசலம், கனகரத்தினம், மௌனகுரு, கலாநிதிகள், செ. குணசிங்கம், ஆ. சுந்தையா, திருமதி. அருட்செல்வம், துரை. மனோகரன், திருவாளர்கள் மு. தளையசிங்கம், மு. பொன்னம்பலம், இரவீந்திரன், சோமகாந்தன், கு. சோமசுந்தரம், பண்டிதமணி சி. கணபதிப்பிள்ளை, எஃப்.எக்ஸ்.சி. நடராசா, புலவர்மணி பெரியதம்பிப் பிள்ளை முதலியோர் குறிப்பிடத்தக்கவர்கள்.[16]

சமயம், சமூகம், பண்பாடு ஆகியவற்றுடன் பின்னிப் பிணைந்தனவாகப் பெண் அடிமைத்தனம், பெண்விடுதலை, சாதியாசாரம் சாதீயத்திற்கெதிரான போராட்டம் முதலியன அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கது. கடந்த சில தசாப்தங்களாகச் சாதீயம், பெண்ணியம் முதலியவை தொடர்பான ஆய்வு முயற்சிகள் இலங்கையில் அதிகரித்து வருதல் விண்டுரைக்கத்தக்க ஒன்றாகும். இவ்வகையில் அன்பேரியா ஹனிபா, யோகா. பாலச்சந்திரன், பத்மா சோமகாந்தன், பேராசிரியை சித்திரலேகா, சாந்தி சச்சிதானந்தம், சிரோன்மணி இராஜரத்தினம், சுகந்தி, சூரிய குமாரி, கலாநிதி அம்மன்கிளி, கல்யாணி, உதய தேவி, நஸீமா சித்தீக், லலிதா நடராசா, செல்வி, திருச்சந்திரன் முதலியோரது முயற்சிகள் மனங்கொளத்தக்கவை. இவை ஆரம்ப முயற்சிகளேயாகும். பெண்ணியம் தொடர்பாக எதிர்காலத்தில் காத்திரமான ஆய்வுகள் மேற்கொள்ளப்பட வேண்டும்.

தமிழர் சமுதாயம் பற்றிய ஆய்வில் சாதீயமும் அதற்கெதிரான போராட்டங்களும் முக்கியம் பெற்றுள்ளன. சாதீயத்திற்கெதிரான போராட்டங்கள் பலவற்றில் நேரடிப்பங்கு கொண்டவர்களுட் பலர் எழுத்தாளர்களாகவும் ஆய்வாளர் களாகவும் பரிணமித்தனர். மானிடநேயத்தால் உந்தப்பட்டவர்களும்

இதிற் கவனம் செலுத்தியுள்ளனர். பேராசிரியர்கள் கைலாசபதி, சிவத்தம்பி, தில்லைநாதன், அருணாசலம், மௌனகுரு, திருவாளர்கள் மு. தளையசிங்கம், செங்கை ஆழியான், இராவணா வெகுஜனன், அகஸ்தியர், தெணியான், என்.கே. ரகுநாதன், டானியல், டொமினிக் ஜீவா முதலியோரது முயற்சிகள் இவ்வகையில் அவதானிக்கத்தக்கவை.[17]

**சாசனவியலும் தொல்பொருளியலும் வரலாற்றியலும்**

இந்தியா, இலங்கை முதலிய நாடுகளின் வரலாற்று ஆய்வுக்குத் தொல்பொருளியல், சாசனவியல் முதலியன பற்றிய ஆய்வுகள் எத்துணை இன்றியமையாதன என்பதை இங்கு வற்புறுத்தத்தேவையில்லை. இதேபோன்று தமிழ் இலக்கியம், இலக்கிய வரலாறு, மொழி வரலாறு முதலியன பற்றிய ஆய்வு முயற்சிகளுக்கும் மேற்கண்ட மூன்று துறைகள் தொடர்பான ஆய்வுகள் மிகமிக இன்றியமையாதனவாகும்.

மேற்கண்ட மூன்றுதுறைகள் தொடர்பாக இலங்கையரால் மேற்கொள்ளப்பட்ட ஆய்வு முயற்சிகளைப் பின்வரும் கால கட்டங்களாக வகுத்து நோக்கலாம். (1) தொடக்க காலம் (ஏறத்தாழ 1960ஆம் ஆண்டுவரை) ஆரம்ப முயற்சிகள், (2) ஆய்வு முயற்சிகள் தீவிரம் பெற்ற காலம் (1960ஆம் ஆண்டு முதல் ஏறத்தாழ 1982ஆம் ஆண்டுவரை) (3) ஆய்வு முயற்சிகளில் தேக்க நிலை ஏற்பட்ட காலம் (1983ஆம் ஆண்டிலிருந்து இன்று வரை). 1983 ஆம் ஆண்டு இலங்கையில் இடம்பெற்ற மிகக் கொடூரமான இனக்கலவரமும் அதனைத் தொடர்ந்து நாளுக்கு நாள் உக்கிரம் பெற்றுவரும் போர்க்கெடுபிடிகளும் இத்துறைகள் சார்ந்த ஆய்வு முயற்சிகளை வெகுவாகப் பாதித்துள்ளன.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்தே இலங்கையில் சாசனங்கள் தொடர்பான ஆய்வு முயற்சிகள் ஆரம்பமானபோதும் ஏறத்தாழ 1960 ஆம் ஆண்டுவரை மந்த நிலையே காணப்பட்டது. பேராசிரியர் கணபதிப் பிள்ளை அவர்களே ஆரம்ப ஆய்வு முயற்சிகளை மேற்கொண்டிருந்தார். அவரைத் தொடர்ந்து அவரது மாணவனான பேராசிரியர் வேலுப்பிள்ளை அவர்கள் சாசன ஆய்வில் தீவிரகவனம் செலுத்திப் பல ஆய்வு நூல்களையும் கட்டுரைகளையும் எழுதி வெளியிட்டார். ஏறத்தாழ 1960 ஆம் ஆண்டிலிருந்தே அரசியல், சமூக, பொருளாதார, பண்பாட்டு, வரலாற்றுப் பின்னணியில் அறிவியல் பூர்வமாகச் சாசனங்களை ஆராயும் முயற்சிகள் தீவிர

மடையலாயின. தமிழகத்திலும் ஈழத்திலும் சாசனங்கள் பற்றிக் காத்திரமான ஆய்வுகளை மேற்கொண்டோருள் பேராசிரியர்கள் இந்திரபாலா, பத்மநாதன், சிற்றம்பலம், சிவகாமி, கலாநிதி, செ. குணசிங்கம் ஆகியோர் அதிக முக்கியத்துவம் பெறுகின்றனர்.[18]

ஈழத்திலே சாசனவியல் ஆய்வு வளர்ச்சியடைந்துள்ள அளவிற்குத் தொல்பொருளியல் ஆய்வு வளர்ச்சியடையவில்லை. இதற்குப் பல்வேறு (பாதகமான) காரணங்கள் காணப்படுகின்றன. மிகவும் பாதகமான சூழ்நிலையிலும் இத்துறை தொடர்பாகப் பேராசிரியர்கள் இந்திரபாலா, பத்மநாதன், சிவகாமி, சிற்றம்பலம், கலாநிதிகள் கிருஷ்ணராசா, ரகுபதி, புஷ்பரத்தினம் முதலியோர் மேற்கொண்ட ஆய்வுகள் முன்னோடி முயற்சிகளாக அமைந்துள்ளன எனலாம்.

தமிழகத்தினதும் ஈழத்தினதும் வரலாறு தொடர்பான ஆரம்ப ஆய்வு முயற்சிகள் பற்றி இக்கட்டுரையின் ஆரம்பத்தில் நோக்கப்பட்டுள்ளது. கனகசபைப்பிள்ளை, சைமன் காசிச்செட்டி, இராசநாயகம், சேனாதிராஜா, சுவாமி ஞானப்பிரகாசர், தம்பிப்பிள்ளை, தம்பையா, தம்பி முத்து, ராகவன், ந.சி. கந்தையா பிள்ளை, நவரத்தினம் முதலியோரது ஆய்வு முயற்சிகளைத் தொடர்ந்து ஏறத்தாழ 1960களிலிருந்தே நவீன ஆய்வு நெறிமுறைகளைப் பின்பற்றிய ஆய்வு முயற்சிகள் பெருகலாயின. இவ்வகையிலே பேராசிரியர்கள் அரசரத்தினம், பத்மநாதன், வஸ்தியாம்பிள்ளை, இந்திரபாலா, சிற்றம்பலம், கலாநிதிகள் செ. குணரத்தினம், ரகுபதி, புஸ்பரத்தினம், சத்தியசீலன், கிருஷ்ணராசா, சிவகாமி முதலியோரது முயற்சிகள் குறிப்பிடத் தக்கன.[19]

இலங்கையின் பல்வேறு பாகங்களிலும் பரந்து வாழும் தமிழ் மக்களது வரலாறு இது காலவரை செவ்வனே ஆராயப் படவில்லை எனினும் யாழ்ப்பாணக் குடாநாட்டினது வரலாறு தொடர்பாகப் பேராசிரியர்கள் இந்திரபாலா, பத்மநாதன், சிற்றம்பலம், சிவகாமி, கலாநிதி செ. குணசிங்கம், புஷ்பரத்தினம் முதலியோர் மேற்கொண்ட காத்திரமான ஆய்வு முயற்சிகள் பல நூல்களாகவும் கட்டுரைகளாகவும் வெளிவந்துள்ளமை குறிப்பிடத்தக்கது. வன்னியப் பிரதேச வரலாறு பற்றிப் பேராசிரியர்கள் பத்மநாதன், சிற்றம்பலம், திரு. புஷ்பரத்தினம் முதலியோரது ஆய்வுகள் சில முன்னோடி முயற்சிகளாக அமைந்துள்ளன. திருகோணமலைப் பிரதேச வரலாறு

தொடர்பாக மரபுவழித் தமிழ் அறிஞர்கள் சிலரும் கலாநிதி செ. குணசிங்கம், பேராசிரியர் பத்மநாதன் முதலியோரும் குறிப்பிடத் தகுந்த சில ஆய்வுகளைச் செய்துள்ளனர். மட்டக்களப்புப் பிரதேச வரலாறு தொடர்பாக மரபுவழித் தமிழ் அறிஞர்கள் சிலரும் பேராசிரியர் பத்மநாதன் முதலியோரும் குறிப்பிடத்தகுந்த ஆய்வுகள் சிலவற்றைச் செய்துள்ளனர். நீர்கொழும்பு, சிலாபம், உடப்பு, புத்தளம், மன்னார் முதலிய பகுதிகள் தொடர்பாக இதுவரை காத்திரமான ஆய்வு முயற்சிகள் எவையும் இடம்பெறவில்லை.

தமிழும் அறிவியலும் தொடர்பான ஆய்வு முயற்சிகள் இலங்கையில் கடந்த ஒரு சில தசாப்தங்களாகவே முக்கியத்துவம் பெற்று வருவதை அவதானிக்கலாம். பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்தே ஒருசிலர் இவ்விடயம் தொடர்பாகச் சில செய்திகளை வெளியிட்டுள்ளனரேனும் முதன்முதல் காத்திரமான ஆய்வுகள் சிலவற்றைச் செய்துள்ள பெருமை பேராசிரியர் சுவாமி விபுலாநந்தர் அவர்களையே சாரும். இவ்வகையில் அவரது 'விஞ்ஞான தீபம்' என்னும் நீண்ட கட்டுரை விதந்து கூறத்தக்கதொன்றாகும். இவருக்கடுத்த நிலையிற் கூறத்தக்க ஒருவர் பொறியியற் பேராசியிர் சிவசேகரம் ஆவார். பேராசிரியர்கள் சிவத்தம்பி, தில்லைநாதன், கவிஞர் முருகையன், வைத்திய கலாநிதி முருகானந்தன், நுஃமான் முதலியோரும் இவ்விடயம் தொடர்பாகக் காத்திரமான ஆய்வுகள் சிலவற்றைச் செய்துள்ளனர்.

திறனாய்வு, பத்திரிகைத்துறை, பலதுறைகள் சார்ந்த மொழி பெயர்ப்பு முயற்சிகள், அரசியல், பொருளாதாரம், கல்வியியல், மருத்துவம் முதலியன தொடர்பான ஆய்வு முயற்சிகள் பெரும்பாலும் ஆரம்பநிலையிலேயே உள்ளன. எதிர்காலத்தில் இத்துறைகள் தொடர்பான காத்திரம்மிக்க விரிவான ஆய்வு முயற்சிகள் இடம் பெறுவது இன்றியமையாததாகும்.

**சான்றாதாரம்**

1. இக்கட்டுரையாசிரியரால் விரிவாக ஆராய்ந்து எழுதப்பட்ட 'இலங்கையில் தமிழியல் ஆய்வு முயற்சிகள்' (475பக்) என்னும் நூல் 1997ஆம் ஆண்டு வெளிவந்தது. அந்நூலில், ஏறத்தாழ 1960களின் நடுப்பகுதியிலிருந்து 1980களின் முற்பகுதி வரை இலங்கையில் தமிழியல் தொடர்பாக இடம் பெற்ற ஆய்வு முயற்சிகள் பற்றி விரிவாக நோக்கப்பட்டுள்ளன. அதன் காரணமாக இக்கட்டுரையில் 1960களுக்கு முன்னர்

இலங்கையில் இடம் பெற்ற தமிழியல் ஆய்வு முயற்சிகள் பற்றி ஓரளவு விரிவாகவும் 1960களிலிருந்து இடம்பெற்ற ஆய்வு முயற்சிகள் பற்றி மிகச் சுருக்கமாகவும் நோக்கப் பட்டுள்ளது.

வேலுப்பிள்ளை, ஆ., தொடக்க கால ஈழத்து இலக்கியங்களும் அவற்றின் வரலாற்றுப் பின்னணியும், 1986.

2. மேற்படி நூல்.

3. இவை பற்றி இக்கட்டுரையாசிரியரால் எழுதப்பட்ட 'இலங்கையில் தமிழியல் ஆய்வு முயற்சிகள்' (1997) என்னும் நூலில் மிக விரிவாக நோக்கப்பட்டுள்ளன.

4. இதற்கான காரணங்கள் மேற்படி நூலில் விரிவாக நோக்கப் பட்டுள்ளன.

5. இவ்வகையில் மேற்படி கருத்துகளை வலுவான முறையில் நிறுவுவதாக 'தமிழரின் இலக்கியத் திறனாய்வு முறை சில அறிமுகக் குறிப்புகள்' என்னும் கட்டுரை அமைந்துள்ளது. சு. கலாபரமேஸ்வரன் அவர்களால் எழுதப்பட்ட இவ் ஆய்வுக் கட்டுரை, நான்காவது அனைத்துலகத் தமிழாராய்ச்சி மாநாடு நிகழ்ச்சிகள் (1974) என்னும் கட்டுரைத் தொகுப்பில் இடம் பெற்றுள்ளது.

6. பின்வரும் நூல்களில் இவை பற்றி விரிவாகக் காணலாம்.

மனோன்மணி சண்முகதாஸ், சி. வை. தாமோதரம் பிள்ளை ஓர் ஆய்வு (1983) பூலோகசிங்கம், பொ. தமிழ் இலக்கியத்தில் ஈழத்தறிஞர் பெருமுயற்சிகள் 1970.

7. இவைபற்றி இலங்கையில் தமிழியல் ஆய்வு முயற்சிகள் என்னும் எனது நூலில் விரிவாக நோக்கப்பட்டுள்ளது.

8. இவ் ஆய்வு விபரங்களையெல்லாம் இச்சிறு கட்டுரையிற் குறிப்பிட முடியாது. இவை பற்றிய விபரங்களை மேற்படி எனது நூலிற் காணலாம்.

9. வித்தியானந்தன், சு., எனது நோக்கில் இஸ்லாம், தமிழ் மன்றம், இராஜகிரியா (1991)

வித்தியானந்தன், (பிறையன்பன்) கலையும் பண்பும், கிங்ஸ்லி அச்சகம், கண்டி, 1961.

10. இவை பற்றிய விபரங்களை 'இலங்கையில் தமிழியல் ஆய்வு முயற்சிகள்' என்னும் எனது நூலிற் காணலாம்.
11. இவை பற்றி எனது 'மலையகத் தமிழ் இலக்கியம்', 'மலையகத் தமிழ் நாவல்கள் ஓர் அறிமுகம்', 'இலங்கையில் தமிழியல் ஆய்வு முயற்சிகள்' என்னும் நூல்களில் விரிவாக விளக்கப்பட்டுள்ளது.
12. 'இலங்கையில் தமிழியல் ஆய்வு முயற்சிகள்' என்னும் எனது நூலில் இவை பற்றி விரிவர்கக் காணலாம்.
13. மேற்படி நூலில் இவை பற்றி விரிவாகக் காணலாம்.
14. மேற்படி நூல்.
15. மேற்படி நூல்.
16. மேற்படி நூல்.
17. மேற்படி நூல்.
18. மேற்படி நூல்.
19. மேற்படி நூல்.

# சிங்கப்பூர்

சுப. திண்ணப்பன்
ஆ.ரா. சிவகுமாரன்

சிங்கப்பூரில் தமிழர் பேரவை, சிங்கப்பூர்த் தமிழ் இளைஞர் மன்றம், சிங்கப்பூர்ப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேரவை முதலிய அமைப்புகள் ஆய்வரங்கம் கருத்தரங்கம் முதலியவற்றை நடத்திக்கொண்டு வருகின்றன. சிங்கப்பூர்த் தமிழ் இளைஞர் மன்றம் ஆண்டுதோறும் ஆய்வரங்குகளை நடத்தி வருகின்றது. இதன் வழி தமிழ்மொழி, தமிழர் தொடர்பான பல ஆய்வுகளுக்கு இவ்வமைப்பு வழி விட்டதோடு அவற்றைப் புத்தகங்களாகவும் வெளியிட்டுள்ளது. சிங்கப்பூர்ப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேரவை இரண்டு ஆண்டுக்கு ஒரு முறை 1977லிருந்து ஆய்வரங்கம் நடத்தி வருகிறது. இதன்வழிப் பல ஆய்வுக் கட்டுரைகள் வெளிவந்துள்ளன. இவற்றில் பல புத்தகங்களாக வெளிவந்துள்ளன. கடந்த 13 வருடங்களாக யீசூன் தொடக்கக்

கல்லூரி ஆண்டுதோறும் ஆய்வரங்கத்தை நடத்தி அவ்வாய்வுக் கட்டுரைகளைப் புத்தகமாக ஆக்கியுள்ளது. இவ்வாய்வு அரங்குகளிலும் தனிப்பட்ட முறையிலும் பலர் இலக்கிய ஆய்வுக் கட்டுரைகள் படைத்து வருகின்றனர். அவர்களுள் குறிப்பிடத் தக்கவர்கள், டாக்டர். சுப. திண்ணப்பன், டாக்டர். வீரமணி, டாக்டர். கா. இராமையா, டாக்டர். ஆ. ரா. சிவகுமாரன், வை. திருநாவுக்கரசு, டாக்டர். இலக்குமி மீனாட்சிசுந்தரம், சீதாலட்சுமி, நா. கோவிந்தசாமி, வி.ஆர்.பி மாணிக்கம், பொன். சுந்தரராசு, ச. வரதன், எம்.கே. நாராயணன் முதலியோர் ஆவர்.

தங்கள் இலக்கிய ஆய்வுக்கட்டுரைகளைப் புத்தகங்களாக வெளியிட்டோரும் உண்டு. டாக்டர். சுப. திண்ணப்பன், டாக்டர். அ. வீரமணி, மீனாட்சி சபாபதி, எம்.கே. நாராயணன் முதலியோர் ஆவர்.

ஆய்வாளர்கள் எழுதிய ஆய்வுக் கட்டுரைகளைத் தொகுத்துச் சிங்கப்பூர்த் தமிழ் எழுத்தாளர் கழகம் ஆய்வரங்கம் என்னும் பெயரில் ஒரு நூலாக வெளியிட்டுள்ளது. சிங்கப்பூரைச் சேராத வேற்று நாட்டவராகிய செவ்வியன் சிங்கப்பூரில் தமிழர்களும் தமிழும் என்னும் தலைப்பில் நூல் வெளியிட்டு உள்ளார்.

சிங்கப்பூர் இலக்கியங்கள் குறித்து ஆ.ரா. சிவகுமாரன் சிங்கப்பூர்த் தமிழ்ப் படைப்பிலக்கியம் ஒரு திறனாய்வு (1965-1990) என்னும் தலைப்பில் ஆய்வு செய்து முனைவர் பட்டம் நன்யாங் பல்கலைக்கழகத்திலிருந்து பெற்றுள்ளார்.

சிங்கப்பூர் மலேசியத் தமிழகப் புதுக்கவிதைகளை ஒப்பீட்டு நோக்கில் திரு. தியாகராஜன் ஒரு ஆய்வு செய்துள்ளார்.

# பின்னிணைப்பு

# தமிழிலக்கிய வரலாற்று நூல்கள்

**ச. சிவகாமி**

## I. முழுமை வரலாறு


1. திராவிடப் பிரகாசிகை என்னும் தமிழ் வரலாறு, சபாபதி நாவலர் 1899, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1976.

2. தமிழ் வரலாறு, கே.எஸ். ஸ்ரீனிவாச பிள்ளை, தஞ்சாவூர்.

3. தமிழ் வரலாறு (பிற்பாகம் - முற்பகுதி), தஞ்சாவூர் கே.எஸ். ஸ்ரீனிவாஸ பிள்ளை, பூர்ண சந்திரோதய பிரஸ், மூ.ப. 1930.

4. இலக்கிய வரலாறு - இரு தொகுதிகள், கா. சுப்பிரமணிய பிள்ளை, ஆசிரியர் நூற்பதிப்புக் கழகம், சென்னை, முதல் தொகுதி, மு.ப. 1930, ஐ.ப. 1957; இரண்டாம் தொகுதி மூ.ப. 1949, 1953, 1958, 1970.

5. தமிழ் வரலாறு, ரா. இராகவையங்கார், அண்ணாமலைப் பல்கலைக் கழகம், அண்ணாமலை நகர், பக். 389, மு.ப. 1941, மூ.ப. 1979.

6. தமிழ் இலக்கிய வரலாறு, வி. செல்வநாயகம், 1951.

7. தமிழ் இலக்கண இலக்கியக் கால ஆராய்ச்சி, மா. இராசமாணிக்கனார், பாரி நிலையம், சென்னை, மு.ப. 1957, இ.ப. 1973.

8. தமிழ் இலக்கிய வரலாறு, சி. பாலசுப்பிரமணியன், 1959.

9. தமிழ் இலக்கிய வரலாறு, எம்.ஆர். அடைக்கலசாமி, கழகம், சென்னை, மு.ப. 1960, 7ஆம் ப. 1981.

10. தமிழ் இலக்கிய வரலாறு, பா. மாசிலாமணி, அப்பர் புத்தக நிலையம், தஞ்சை, 1960.

11. தமிழ் இலக்கிய வரலாறு, ப. இராமன், சேகர் பதிப்பகம், சென்னை, மு.ப. 1961.

12. தமிழ் இலக்கிய வரலாறு - ஓர் அறிமுகம், எஸ். இராமகிருஷ்ணன், 1962.

13. தமிழ் இலக்கிய வரலாறு (இலக்கியத் தோற்றம்) - பி.ஏ. தமிழ்ப் பாடத் திட்டம், மு. கோவிந்தசாமி, வாசுகி பதிப்பகம், இ.ப. 1969.

14. **தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும்**, ஆ. வேலுப் பிள்ளை, ல. ராமகிருஷ்ணன், சென்னை, 1969.

15. **வெற்றித் தமிழ் இலக்கிய வரலாறு**, சோம. இளவரசு, மணிவாசகர் நூலகம், சிதம்பரம், 1970.

16. **தமிழ் இலக்கிய வரலாறு**, மு. வரதராசன், சாகித்திய அக்காதெமி, புதுதில்லி, 1972.

17. **தமிழ் இலக்கிய வரலாற்றுச் சுருக்கம்**, இரபிசிங் & சுப்பிரமணியன், -, 1977.

18. **தமிழ் இலக்கிய வரலாறு**, ஞா. தேவநேயன், நேசமணி பதிப்பகம், காட்டுப்பாடி, சூலை 1979.

19. **புதிய நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு**, தமிழண்ணல், ஆசிரியர், மதுரை, மு.ப. 1980.

20. **தமிழ் இலக்கிய வரலாறு**, ரா. சீனிவாசன், அணியகம், சென்னை, மு.ப. சனவரி 1980, இ.ப. டிச. 1980.

21. **தமிழ் இலக்கிய வரலாறு**, பூவண்ணன், வர்த்தமானன் பதிப்பகம், சென்னை, மு.ப. 1981.

22. **தமிழ் இலக்கிய வரலாறு**, பா. இறையரசன், பூம்புகார் பிரசுரம், சென்னை, மு.ப. 1982.

23. **தமிழ் இலக்கிய வகையும் வடிவும்**, ச.வே. சுப்பிரமணியன், தமிழ்ப் பதிப்பகம், சென்னை, 1984.

24. **தமிழ் இலக்கிய வரலாறு**, மணிமேகலைப் பிரசுரம், சென்னை, மு.ப. 1984, 95.

25. **இலக்கியத் தோற்றம் (தமிழ் இலக்கிய வரலாறு)**, மு. கோவிந்தசாமி, மணிவாசகர் நூலகம், சென்னை, 1986 (இலக்கிய காலம் நூலின் திருத்திய பதிப்பு).

26. **தமிழ் இலக்கிய வரலாற்றுக் களஞ்சியம்**, மது. ச. விமலானந்தம், 1987.

27. **தமிழ் இலக்கிய வரலாற்றுக் குறிப்புகள்**, செந்துறைமுத்து, -, -, 1988.

28. **தமிழில் இலக்கிய வரலாறு**, கார்த்திகேசு சிவத்தம்பி, என்.சி.பி.எச்., சென்னை, 1988, 1998.

29. **வண்டமிழ் இலக்கிய வரலாறு**, வத்திராயிருப்பு விசுவநாதன், பொன்முடி பதிப்பகம், காரைக்குடி, 1989.

30. **தமிழ் இலக்கிய வரலாறு** (மேல்நிலை வகுப்பு), ரா. சீனிவாசன், அணியகம், சென்னை, 1990.

31. தமிழ் இலக்கிய வரலாறு, வி. மரிய அந்தோணி, க. திருமாறன், மலர் வெளியீடு, மு.ப. 1991.

32. இலக்கிய வரலாறு, டி.வி. சங்கரலிங்கம், மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 1998.

33. தமிழ் இலக்கிய வரலாறு, செந்துறையான், தமிழன் நிலையம், சென்னை, 1998.

34. தமிழ் இலக்கிய வரலாறு, பூவண்ணன், கழகம், சென்னை, மு.ப. 1998.

35. தமிழ் இலக்கிய வரலாறு, ச.வே. சுப்பிரமணியன், மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 1999.

36. எளிய வினாவிடை முறையில் தமிழ் இலக்கிய வரலாறு - இரு தொகுதிகள், ப. கொழந்தசாமி, பூங்குழல் பதிப்பகம், சென்னை, முதல் தொகுதி - 2000, இரண்டாம் தொகுதி - 2002.

37. கழகப் பைந்தமிழ் இலக்கிய வரலாறு, சோ. இலக்குவன், கழகம், சென்னை, 2001.

38. தமிழ் இலக்கிய வரலாறு, சா. சவரிமுத்து, மணிமொழி பதிப்பகம், சென்னை, 2001.

39. தமிழ் இலக்கிய வரலாறு, சு. சுபாஷ் சந்திரபோஸ், -, -, 2002.

40. தமிழ் இலக்கிய வரலாறு, அரசு ஆறுமுகம்.

41. தமிழிலக்கிய வரலாறு, எம்.எஸ். அருள்சாமி.

42. தமிழ் இலக்கிய வரலாறு, வெ. கந்தசாமி, ஐயநாடார் சானகியம்மாள் கல்லூரி, சிவகாசி.

43. ஈழத்தில் தமிழ் இலக்கியம், கார்த்திகேசு சிவத்தம்பி, நியூசெஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, 1978.

44. மலேசியத் தமிழ் இலக்கிய வரலாறு, வீராசாமி, 1978.

45. மலேசியத் தமிழ் இலக்கிய வரலாறு, மா. இராமையா, புரட்சிப்பண்ணை, சேலம், மு.ப. 1978.

## II. குறிப்பிட்ட கால இலக்கிய வரலாறுகள்

1. தமிழிலக்கிய வரலாறு - தொல்காப்பியம், க. வெள்ளைவாரணன், 1957.

2. தமிழ் இலக்கிய வரலாறு (கி.பி. 1 முதல் 1100)
   1. சமணமும் தமிழும்
   2. பௌத்தமும் தமிழும்
   3. வைணவமும் தமிழும்

ஈ.எஸ். வரதராஜ ஐயர், அண்ணாமலைப் பல்கலைக் கழகம், அண்ணாமலை நகர், மு.ப. 1957, 1979.

3. தமிழ்மொழி இலக்கிய வரலாறு - சங்ககாலம், மா. இராசமாணிக்கனார், பாரி நிலையம், சென்னை, 1963, 1969, 1971.

4. தமிழ் இலக்கிய வரலாறு (தோற்றுவாய்), சு.கு. அருணாசலனார், -, -, 1965.

5. தமிழ் இலக்கிய வரலாறு - இரண்டாம் பாகம், (கழகக்காலம்), சு.கு. அருணாசலனார், சு.கு. சோம சுந்தரனார், சர்வோதய இலக்கியப் பண்ணை, மதுரை, 1981.

6. தமிழ் இலக்கிய வரலாறு (சங்ககாலம்), தெ.பொ. மீனாட்சி சுந்தரனார், சர்வோதய இலக்கியப் பண்ணை, மதுரை, 1981.

7. பழந்தமிழ் வரலாறு, க. சண்முகசுந்தரம், -, -, 1985.

8. தமிழ் இலக்கிய வரலாறு (கி.பி. 250 - கி.பி. 600), தி.வை. சதாசிவப்பண்டாரத்தார், அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலைநகர், 1977.

9. உலகத் தமிழ் இலக்கிய வரலாறு (தொன்மை முதல் கி.பி. 500 வரை), தமிழண்ணல், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 2004.

10. சங்க மருவிய காலத் தமிழ் இலக்கிய வரலாறு, மு. கோவிந்தராசன், சரசுவதி பதிப்பகம், சென்னை, மு.ப. 1993.

11. தமிழ் வரலாறு (பிற்பாகம் - முற்பகுதி), கே.எஸ். ஸ்ரீநிவாஸ பிள்ளை, மகாலிங்கப் பதிப்பகம், தஞ்சாவூர், 1960.

12. காவிய காலம், எஸ். வையாபுரிப் பிள்ளை, வையாபுரிப் பிள்ளை நினைவு மன்றம், சென்னை, 1991, மு.ப. 1957.

13. உலகத் தமிழ் இலக்கிய வரலாறு (கி.பி. 501 - கி.பி. 900), சோ.ந. கந்தசாமி, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 2004.

14. தமிழ் இலக்கிய வரலாறு (தமிழ்ப்புலவர் வரலாறு), ஒன்பதாம் நூற்றாண்டு - இரண்டு பகுதிகள், மு. அருணாசலம், காந்தி வித்யாலயம், திருச்சிற்றம்பலம், 1975.

15. தமிழ் இலக்கிய வரலாறு (தமிழ்ப்புலவர் வரலாறு), பத்தாம் நூற்றாண்டு, மு. அருணாசலம், காந்தி வித்யாலயம், திருச்சிற்றம்பலம், 1972.

16. தமிழ் இலக்கிய வரலாறு (தமிழ்ப்புலவர் வரலாறு), பதினோராம் நூற்றாண்டு, மு. அருணாசலம், காந்தி வித்யாலயம், திருச்சிற்றம்பலம், 1971.

17. தமிழ் இலக்கிய வரலாறு (தமிழ்ப்புலவர் வரலாறு), பன்னிரண்டாம் நூற்றாண்டு - இரண்டு பகுதிகள், மு. அருணாசலம், காந்தி வித்யாலயம், திருச்சிற்றம்பலம், 1973.

18. தமிழ் இலக்கிய வரலாறு (தமிழ்ப்புலவர் வரலாறு), பதின்மூன்றாம் நூற்றாண்டு, மு. அருணாசலம், காந்தி வித்யாலயம், திருச்சிற்றம்பலம், 1970.

19. தமிழ் இலக்கிய வரலாறு (தமிழ்ப்புலவர் வரலாறு), பதினான்காம் நூற்றாண்டு, மு. அருணாசலம், காந்தி வித்யாலயம், திருச்சிற்றம்பலம், 1969.

20. தமிழ் இலக்கிய வரலாறு, (13, 14, 15ஆம் நூற்றாண்டுகள்), தி.வை. சதாசிவப் பண்டாரத்தார், அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலை நகர், 1977.

21. தமிழ் இலக்கிய வரலாறு, பதினைந்தாம் நூற்றாண்டு, மு. அருணாசலம், காந்தி வித்யாலயம், திருச்சிற்றம்பலம், 1969.

22. தமிழ் இலக்கிய வரலாறு, பதினாறாம் நூற்றாண்டு - முதல் பாகம், மு. அருணாசலம், காந்தி வித்யாலயம், திருச்சிற்றம்பலம், 1977.

23. தமிழ் இலக்கிய வரலாறு, பதினாறாம் நூற்றாண்டு - இரண்டாம் பாகம், மு. அருணாசலம், காந்தி வித்யாலயம், திருச்சிற்றம்பலம், 1975.

24. தமிழ் இலக்கிய வரலாறு, பதினாறாம் நூற்றாண்டு - மூன்றாம் பாகம், மு. அருணாசலம், காந்தி வித்யாலயம், திருச்சிற்றம்பலம், 1976.

25. தமிழ் இலக்கிய வரலாறு, சோமசுந்தர தேசிகர், (16, 17ஆம் நூற்றாண்டுகள்), அண்ணாமலைப் பல்கலைக் கழகம், அண்ணாமலை நகர், 1936-1937.

26. தமிழ்ப் புலவர்கள் (பதினெட்டாம் நூற்றாண்டு), சோமசுந்தர தேசிகர், சென்னை, 1937.

27. **பத்தொன்பதாம் நூற்றாண்டில் தமிழ் இலக்கியம் (1800–1900)**, மயிலை. சீனி. வேங்கடசாமி, சாந்தி நூலகம், சென்னை, மு.ப. 1962.

28. **பத்தொன்பதாம் நூற்றாண்டுத் தமிழிலக்கியத்தின் முக்கிய போக்குகள்**, மனோன்மணி சண்முகதாஸ், யாழ்ப்பாணம், 1978.

29. **பத்தொன்பதாம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கியம்**, ச. சிவகாமி, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1994.

30. **விடுதலைப் போரில் தமிழ் வளர்ந்த வரலாறு**, ம.பொ. சிவஞானம், இன்ப நிலையம், சென்னை, 1970.

31. **விடுதலைக்குப் பின் தமிழ் வளர்ந்த வரலாறு**, ம.பொ. சிவஞானம், பூங்கொடி பதிப்பகம், சென்னை, மு.ப. 1978, 1980.

32. **புதுவைத் தமிழ் வளர்ச்சி** (விடுதலைக்குப் பின்), இரா. வாசுகி, முத்துப் பதிப்பகம், விழுப்புரம், மு.ப. 1988.

33. **இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கியம்**, மா. இராமலிங்கம், தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, 1973, இ.ப. செப். 1999.

34. **இருபதாம் நூற்றாண்டு புதுவைத் தமிழ் இலக்கியப் படைப்பாளிகள்**, ப. திருநாவுக்கரசு, நண்பர்கள் தோட்ட வெளியீடு, -, 2000.

35. **நூற்றாண்டுத் தமிழ் வளர்ச்சி**, த. சுந்தரராசன், மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 1999.

36. **தற்காலத் தமிழ் இலக்கியம்**, இரா. தண்டாயுதம், 1973.

37. **எழுபதுகளில் கலை இலக்கியம்** – இலக்கு, காவ்யா, பெங்களூர், 1982.

38. **எண்பதில் தமிழ்**, ச.வே. சுப்பிரமணியன், ர. விஜயலட்சுமி (பதி.), உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1982.

39. **தமிழ் வளர்ந்த வரலாறு (1881 முதல் 1985 வரை)** பத்திரிகைகள், கவிஞர்கள், எழுத்தாளர்கள், பதிப்பகங்கள், அரசு ஆகியோர் ஆற்றிய பணிகள்) சிரஞ்சீவி, ஆசிரியர், சென்னை, 1985.

40. **எண்பத்தொன்றில் தமிழ்**, ச.வே. சுப்பிரமணியன், ந. கடிகாசலம் (பதி.), உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1983.

41. **எண்பத்திரண்டில் தமிழ்**, ச.வே. சுப்பிரமணியன், ந. கடிகாசலம், அன்னிதாமசு (பதி.), உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1985.

42. **எண்பத்து மூன்றில் தமிழ்** (3 தொகுதிகள்), அன்னிதாமசு (பதி.), உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, முதல் தொகுதி 1995, இரண்டாம் தொகுதி 1995, மூன்றாம் தொகுதி 1998.

43. **பிற்காலப் புலவர்கள்**, எச். வைத்தியநாதன் (பதி.), உ.வே. சாமிநாதையர் நூல் நிலையம், சென்னை, 1986.

44. **மறைந்துபோன தமிழ் நூல்கள்**, மயிலை சீனி. வேங்கடசாமி, மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம், மு.ப. சன. 1959, மூ.ப. டிச. 1983.

45. **அறியப்படாத தமிழ் இலக்கிய வரலாறு**, சு. வேங்கடராமன், மீனாட்சி புத்தக நிலையம், மதுரை, 2004.

## III. சமய இலக்கிய வரலாறுகள்

1. **பக்தி இலக்கியம்**, ப. அருணாசலம், பாரி புத்தகப் பண்ணை, சென்னை, மு.ப. 1973, 1983.

2. **சைவ இலக்கிய வரலாறு** (கி.பி. 7 முதல் 10-ம் நூற்றாண்டு வரை), ஔவை சு. துரைசாமி பிள்ளை, அண்ணாமலைப் பல்கலைக் கழகம், அண்ணாமலை நகர், 1958.

3. **தமிழும் வைணவமும்**, எம். ராதாகிருஷ்ண பிள்ளை, 1956.

4. **சமணமும் தமிழும்**, மயிலை சீனி. வேங்கடசாமி, கழகம், சென்னை, மு.ப. 1954, மூ.ப. 1980.

5. **பௌத்தமும் தமிழும்**, மயிலை சீனி. வேங்கடசாமி, கழகம், சென்னை, மு.ப. 1940, 1972.

6. **இஸ்லாமியத் தமிழ்ப்புலவர்**, மதனீ, அறிவு மலர்ப் பதிப்பகம், கும்பகோணம், 1952.

7. **இஸ்லாமும் இன்பத் தமிழும்**, முகம்மது உவைஸ், யுனிவர்ஸல் பப்ளிஷர்ஸ், சென்னை, 1976.

8. **இஸ்லாமும் தமிழும்**, மு. அப்துல் கறீம், கழகம், சென்னை, 1982.

9. **இஸ்லாம் வளர்த்த தமிழ்**, ம.மு. உவைஸ், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1984.

10. **இஸ்லாமியச் சிற்றிலக்கியங்கள்**, மு. சாயபு மரைக்காயர், பாத்திமா பதிப்பகம், காரைக்கால், 1985.

11. **இஸ்லாமியர் தமிழ்த் தொண்டு**, மு. சாயபு மரைக்காயர், கங்கை புத்தக நிலையம், சென்னை, மு.ப. 1986.

12. **இஸ்லாமியத் தமிழ் இலக்கிய வரலாறு, தொகுதி ஒன்று (தொடக்க காலம் - கி.பி. 1700 வரை)**, ம. முகம்மது உவைஸ், பீ.மு. அஜ்மல்கான், மதுரை காமராசர் பல்கலைக் கழகம், மதுரை, 1986.

13. **இஸ்லாமியத் தமிழ் இலக்கிய வரலாறு, தொகுதி - 2 (காப்பியங்கள்)**, ம. முகம்மது உவைஸ், மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை, 1990.

14. **இஸ்லாமியத் தமிழ் இலக்கிய வரலாறு, தொகுதி - 3 (சிற்றிலக்கியங்கள்)**, ம. முகம்மது உவைஸ், பீ.மு. அஜ்மல்கான், மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை, 1994.

15. **கிறித்தவமும் தமிழும்**, மயிலை சீனி. வேங்கடசாமி, கழகம், சென்னை, மு.ப. 1936, 1971.

16. **இக்காலக் கிறிஸ்தவ தமிழ் இலக்கியம்**, இர. ஆரோக்கிய சாமி, கிறிஸ்தவ இலக்கியச் சங்கம், சென்னை, 1983.

17. **கிறித்தவமும் தமிழகமும்**, சூ. இன்னாசி, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1990.

## IV. சிற்றிலக்கிய வகைமை வரலாறுகள்

1. **சிற்றிலக்கியச் செல்வங்கள்**, ந.வீ. செயராமன், மணிவாசகர் நூலகம், சிதம்பரம், 1967.

2. **சிற்றிலக்கியங்களின் தோற்றமும் வளர்ச்சியும்**, முத்துச் சண்முகன், நிர்மலா மோகன், முத்துப் பதிப்பகம், மதுரை, 1979.

3. **சிற்றிலக்கிய வளர்ச்சி**, மு. சண்முகம்பிள்ளை, மணிவாசகர் நூலகம், சிதம்பரம், 1981.

4. **சிற்றிலக்கிய வகைகள்**, மு. சண்முகம் பிள்ளை, மணிவாசகர் நூலகம், சென்னை, 1982.

5. **சிற்றிலக்கிய அகராதி**, ந.வீ. செயராமன், நறுமலர்ப் பதிப்பகம், -, 1983.

6. **சிற்றிலக்கிய ஆராய்ச்சி - 2 தொகுதிகள்**, இரா. கண்ணன், அப்பர் பதிப்பகம், சென்னை, 2002.

7. **இருபதாம் நூற்றாண்டுச் சிற்றிலக்கியங்கள்**, சிலம்பு நா. செல்வராசு, மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 1995.

8. **அந்தாதி இலக்கியங்கள்**, பி. கலியபெருமாள், மணிவாசகர் நூலகம், சிதம்பரம், 1967.

9. **உலா இலக்கியங்கள்**, ந.வீ. செயராமன், மணிவாசகர் நூலகம், சிதம்பரம், 1966.

10. **தமிழில் உலா இலக்கியம்**, சு. சௌந்தரபாண்டியன், ஐந்திணைப் பதிப்பகம், சென்னை, 2000.

11. **ஊஞ்சல் இலக்கியம்**, த. அழகப்பராசு, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1983.

12. **தமிழில் கதைப்பாடல்கள்**, அ.நா. பெருமாள், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1987.

13. **தமிழில் கலம்பக இலக்கியம்**, எஸ். சௌந்தர பாண்டியன், ஸ்டார் பிரசுரம், சென்னை, 1998.

14. **கும்மிப் பாடல்கள்**, ஏ.என். பெருமாள், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1982.

15. குறவஞ்சி, முத்துச் சண்முகன், நிர்மலா மோகன், முத்துப் பதிப்பகம், மதுரை, 1977.

16. **குறவஞ்சி இலக்கியம்**, நிர்மலா மோகன், மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம், 1985.

17. **தமிழர் கூத்துகள்**, ஜான் ஆசீர்வாதம், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1985.

18. **சதகங்களின் சிறப்பு**, இளங்கீரன், மணிவாசகர் நூலகம், சிதம்பரம், 1962.

19. **சதக இலக்கியங்கள்**, ந.வீ. செயராமன், மணிவாசகர் நூலகம், சிதம்பரம், 1966.

20. **தமிழ்ச் சதக இலக்கியம்**, ச. சிவகாமி, உலகத் தமிழ்க் கல்வி இயக்ககம், சென்னை, 1985.

21. **தமிழில் சதக இலக்கியங்கள்**, பழனியம்மாள், நளினி மங்கை பதிப்பகம், மதுரை, 1992.

22. **சிந்து இலக்கியம்**, பழ. முத்தப்பன், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1983.

23. **சிந்து இலக்கியம்**, இரா. திருமுருகன், தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், 1991.

24. **சிலேடை இலக்கியங்கள்**, கரு. நாகராசன், மெய்யம்மை பதிப்பகம், காரைக்குடி, 1983.

25. **தமிழில் தலபுராண இலக்கியம்**, வே. கிருஷ்ணசாமி, ஜெயகுமாரி ஸ்டோர்ஸ், நாகர்கோவில், 1974.

26. **தமிழில் தலபுராணங்கள்** (2 பகுதிகள்), வே.இரா. மாதவன், பாவை வெளியீட்டகம், தஞ்சை, நவ. 1995.

27. **தூது இலக்கியங்கள்**, ந.வீ. செயராமன், மணிவாசகர் நூலகம், சிதம்பரம், 1965.

28. **தமிழில் தூது இலக்கிய வளர்ச்சி**, அ. ஆனந்த நடராசன், அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலை நகர், 1997.

29. **பரணி இலக்கியம்**, சோம இளவரசு, மணிவாசகர் நூலகம், சிதம்பரம், 1978.

30. **பள்ளு இலக்கியம்**, ந.வீ. செயராமன், மணிவாசகர் நூலகம், சென்னை, மு.ப. சனவரி, 1980.

31. **பள்ளு இலக்கியம் - ஒரு சமூகவியல் பார்வை**, சோ. கேசவன், 1981, 1991, அன்னம், சிவகங்கை.

32. **தமிழில் பிள்ளைத்தமிழ் இலக்கியம்**, எஸ். சௌந்தர பாண்டியன், ஸ்டார் பிரசுரம், சென்னை, 1989.

33. **பிள்ளைத்தமிழ் இலக்கியம்**, கு. முத்துராசன், மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 1984.

34. **பிள்ளைத்தமிழ் இலக்கியங்கள் - ஓர் ஆய்வு**, கு. முத்து ராசன், வசந்த செல்வி பதிப்பகம், தர்மபுரி, சூன், 1992.

35. **பிள்ளைத் தமிழில் தோற்றமும் வளர்ச்சியும்**, சா. வளவன், ஆசிரியர், சென்னை, 1997.

36. **புராண இலக்கிய வரலாறு**, அரு. மருததுரை, ஐந்திணைப் பதிப்பகம், சென்னை, 1988.

37. **தமிழ் வில்லுப்பாட்டுகள்**, தி.சி. கோமதிநாயகம், தமிழ்ப் பதிப்பகம், சென்னை, 1979.

38. **தமிழ் நாட்டுப்புறவியல் ஆய்வின் வரலாறு**, அ. பிச்சை, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 2003.

39. குழந்தை இலக்கிய வரலாறு, பூவண்ணன், -, -, -.

## V. உரைநடை இலக்கிய வரலாறுகள்

1. தமிழ் உரைநடை வரலாறு, வி. செல்வநாயகம், சாரதா விலாஸ் பிரஸ், கும்பகோணம், மு.ப. 1957.

2. பத்தொன்பதாம் நூற்றாண்டில் தமிழ் உரைநடை வளர்ச்சி, அ.மு. பரமசிவானந்தம், தமிழ் எழுத்தாளர் கூட்டுறவுச் சங்கம், சென்னை, மு.ப. 1966.

3. இருபதாம் நூற்றாண்டில் தமிழ் உரைநடை வளர்ச்சிகள், மா. இராசமாணிக்கனார், -, -, 1978.

4. இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் உரைநடை, சு. சக்திவேல், மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 1979.

5. நூற்றாண்டுத் தமிழ் உரைநடை, சு. சக்திவேல், மணிவாசகர் நூலகம், சிதம்பரம், 1987.

6. தமிழ் உரை நூல் உரையாசிரியர் நூலடைவு, முகம்மது உசேன், அற்புதா பதிப்பகம், கும்பகோணம், 1988.

7. தமிழ் நாவல் – நூற்றாண்டு வரலாறும் வளர்ச்சியும், பெ.கோ. சுந்தரராசன், சோ. சிவபாத சுந்தரம், கிறிஸ்தவ இலக்கியச் சங்கம், சென்னை, 1977.

8. தமிழ் நாவல் வகைகள், தா.வே. வீராசாமி, தமிழ்ப் பதிப்பகம், சென்னை, 1974.

9. தமிழ் நாவல்கள் – ஓர் அறிமுகம், கோ.வெ. கீதா, அணியகம், சென்னை, 1979.

10. நூற்றாண்டுத் தமிழ் நாவல் தரும் செய்தி, தி. பாக்கிய முத்து, சி.எஸ்.எஸ்., சென்னை, 1979.

11. விடுதலைக்குப்பின் தமிழ் நாவல்கள், டேவிட் பாக்கியமுத்து, 1974.

12. நாவல் வளர்ச்சி, இரா. மோகன், மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 1989.

13. நாவல், ஜெயமோகன், -, -, 1995.

14. நாவல் இலக்கியம், மா. இராமலிங்கம், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, 1999.

15. நாவல் வளர்ச்சி – கிறிஸ்தவ இலக்கியம், டேவிட் சித்தையா, மெய்யப்பன் தமிழாய்வகம், சிதம்பரம், 2000.

16. **ஈழத்துத் தமிழ் நாவல் இலக்கியம்**, நா. சுப்பிரமணியம், முத்தமிழ் வெளியீட்டுக் கழகம், யாழ்ப்பாணம், 1978.

17. **மலேசியத் தமிழ் நாவல்கள் - ஓர் அறிமுகம்**, ம. மதியழகன், பரீத் வெளியீட்டகம், காரைக்கால், 1988.

18. **விடுதலைக்கு முன் புதிய தமிழ்ச் சிறுகதைகள்**, கு.ப. ராஜகோபாலன்.

19. **தமிழில் சிறுகதையின் தோற்றமும் வளர்ச்சியும்**, கார்த்திகேசு சிவத்தம்பி, மு.ப. 1967.

20. **இருபதில் சிறுகதைகள்**, தா.ஏ. பியூலாமெர்சி, ஜெயகுமாரி ஸ்டோர்ஸ், நாகர்கோவில், 1974.

21. **தமிழ்ச் சிறுகதை வரலாறு - முதற் பகுதி**, எம். வேதசாய குமார், ஆசிரியர், திருவனந்தபுரம், 1979.

22. **தமிழ்ச் சிறுகதை - நேற்றும் இன்றும்** (தொகுதி 2, 3), ம. திருமலை, ஐந்திணை வெளியீடு, சென்னை, 1993, 1997.

23. **வாழ்க்கை வரலாற்றிலக்கியம்**, சாலினி இளந்திரையன், தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, 1974.

24. **தமிழ் வாழ்க்கை வரலாற்றிலக்கியம்**, ச. சிவகாமி, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1985.

25. **தமிழில் பயண இலக்கியம்**, இரா. ஞானபுஷ்பம், தேன்மழைப் பதிப்பகம், சென்னை, 1990.

26. **குழந்தை இலக்கிய வரலாறு**, கோபாலகிருஷ்ணன், 1960.

27. **தமிழில் குழந்தை இலக்கியம் - ஒரு மதிப்பீடு**, கட்டுரைத் தொகுப்பு, குழந்தை எழுத்தாளர் சங்கம், சென்னை, 1976.

28. **வளர்ந்துவரும் குழந்தை இலக்கியம்**, அழ. வள்ளியப்பா, பாரி நிலையம், சென்னை, 1981.

29. **தமிழ் நாடக வரலாறு**, இரா. குமாரவேலன்.

30. **தமிழ் நாடக வரலாறு**, சக்திப்பெருமாள், வஞ்சிக்கோ பதிப்பகம், மதுரை.

31. **தமிழ் நாடகத்தின் தோற்றமும் வளர்ச்சியும்**, ஏ.என். பெருமாள், அணியகம், சென்னை, 1977.

32. **தமிழ் நாடகத்தின் தோற்றமும் வளர்ச்சியும்**, ஆறு. அழகப்பன், அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலை நகர், 1987.

33. **தமிழ் நாடக வளர்ச்சி – விடுதலை இயக்கமும் திராவிட இயக்கமும்**, இரா. குமாரவேலன், தமிழரசி பதிப்பகம், சென்னை, 1992.

34. **தமிழ் நாடகவியல்**, மேலகரம் முத்துராமன், கங்கை புத்தக நிலையம், சென்னை, 1998.

35. **தமிழ் நாடகம் நேற்று இன்று நாளை**, மு. இராமசுவாமி, ருத்ரா பதிப்பகம், தஞ்சாவூர், 1998.

## VI. எஞ்சியன

1. **புதுத் தமிழ் முதல்வர்கள்**, சாலை இளந்திரையன், தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, மே 1972.

2. **ஈழத்து இலக்கிய முன்னோடிகள்**, க. கைலாசபதி, மக்கள் வெளியீடு, சென்னை, மு.ப. அக். 1986.

3. **பகுத்தறிவு இலக்கிய வரலாறு**, கு. வணங்காமுடி, பகுத்தறிவுப் பதிப்பகம்,சென்னை, 1985.

4. **கொங்கு நாட்டுப் புலவர்கள்**, இரா. இளங்குமரன், கழகம், சென்னை, 1979.

5. **சென்னைத் தமிழ்ப் புலவர்கள் – இரண்டாம் புத்தகம்**, மணி. திருஞானசம்பந்த முதலியார், கழகம், சென்னை, 1951.

6. **நெல்லைத் தமிழ்ப் புலவர்கள் (முதற்புத்தகம்)**, இ.மு. சுப்பிரமணியப்பிள்ளை, கழகம், சென்னை, 1952, 1953.

7. **நெல்லைத் தமிழ்ப் புலவர்கள் – இரண்டாம் புத்தகம்**, இ.மு. சுப்பிரமணியப்பிள்ளை, கழகம், சென்னை, மு.ப. சன. 1959.

8. **தமிழ்ப் புலவர் வரிசை – 6 தொகுதிகள், 18 புத்தகங்கள்**, சு.அ. இராமசாமிப் புலவர், கழகம், சென்னை.

9. **தமிழ்ப் புலவர் வரலாற்றுக் களஞ்சியம்**, மூன்று தொகுதிகள் (அ-ஔ), வ.சுப. மாணிக்கம் (பொதுப் பதிப்பாசிரியர்), தொகுதி மூன்று (ஞ-ப) வெ. பழநியப்பன், உ. பழநி, அண்ணாமலைப் பல்கலைக் கழகம், 1974, -, 1989.

10. **தமிழ் வளர்த்த நல்லறிஞர்கள்**, குன்றக்குடி பெரிய பெருமாள், காமதேனு பப்ளிகேஷன், சென்னை, 1996.

11. தமிழ் நாவல்கள் (அகரவரிசை), வே.சிதாலட்சுமி, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1985.

12. படைப்பிலக்கியம், ந. பிச்சமுத்து, தேன் தமிழ்ப் பதிப்பகம், சேலம், 1976.

13. தமிழ்நாட்டு வரலாற்றில் இலக்கிய ஆதாரங்கள், பா. சூரிய நாராயணன், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1998.

14. மொழிபெயர்ப்புத்தமிழ், ச. சிவகாமி, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 2004.

## VII. ஆங்கிலத் தமிழ் இலக்கிய வரலாறுகள்

1. **A Primer of Tamil Literature**, M.S. Purnalingam Pillai, Madras, 1904.

2. **Tamil Literature**, M.S. Purnalingam Pillai, Tamil University, Thanjavur, Reprint, 1985. F.E. 1929.

3. **Studies in Tamil Literature and History**, V. Ramachandra Dikshithar, London, 1930.

4. **Historical Tamil Reader**, P.S. Subrahmanya Sastri, P.S. Krishnan, Thiruvaiyaru, 1945, 1967.

5. **The Tamil Plutarch**, Simon Casie Chetty, Colombo, 1946.

6. **Two thousand years of Tamil Literature**, J.M. Somasundaram Pillai, The South India Saiva Siddhanta Works Publishers Society, Tirunelvely, 1959.

7. **A History of Tamil Literature**, C. Jesudasan and Hepzibah Jesudasan, 1961.

8. **History of Tamil Literature**, T.P. Meenakshi Sundaram, Annamalai University, Annamalainagar, 1965.

9. **History of Tamil Literature**, P. Meenakshi Sundaram, Marathi Sahitya Parishad, Hyderabad, 1965.

10. **A History of Tamil Literature**, J.M. Somasundaram, Author, Annamalai Nagar, 1968.

11. **A Survey of the Sources for the History of Tamil Literature**, M. Govindasamy, Annamalai University, Annamalai nagar, 1970.

12. **An Introduction to the History of Tamil Literature,** M. Arunachalam, Gandhi Vidyalayam, Tiruchitrambalam, 1977.

13. **An Introduction to Tamil Literature**, N. Subramanian, The Christian Literature Society, Madras, 1981.

14. **Literary History in Tamil (a historical analysis)**, Karthigesu Sivathamby, Tamil University, Thanjavur, 1986.

15. **The Chronology of the Early Tamils**, K.N. Sivaraja Pillai, Asian Educational Service, New Delhi, 1984.

16. **A History of Tamil Literature**, M. Varadarajan, Translated from Tamil by E.Sa. Viswanathan, Sahitya Akademy, New Delhi, 1988.

17. **History of Tamil Language and Literature (Beginning to 1000 A.D.)**, S. Vaiyapuri Pillai, New Century Book House, Madras, 1956.

18. **Count Down from Solomon** - 4 Vols., Hebsiba Jesudhasan, Asian Studies, Chennai, Vol.I & II 1999, Vol. III 2001, Vol. IV 2004.

19. **Some Mile-stones in the History of Tamil Literature,** P. Sundaram Pillay, Pioneer Book Services, Madras, 1985. (F.E. 1909).

20. **Some Landmarks in the History of Tamil Prose,** R.E. Asher, University of Madras, Madras, 1972.

21. **The History of Tamil Christian Literature,** D. Rajarigam, The Christian Literature Society, Mysore 1958.

22. **The Contribution of European Scholars to Tamil,** K. Meenakshisundaram, University of Madras, 1974.

23. **The History of the Growth of Tamil During the Indian War of Independence,** M.P. Sivagnanam, University of Madras, Madras, 1980.

24. **Tamil Drama - Origin and Development,** A.N. Perumal, International Institute of Tamil Studies, Chennai, 1981.

25. **Gems from the Treasure House of Tamil Literature,** issued on the Occasion of the Asian Writers Conference by the Tamil writers Association, New Delhi.

**உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை - 600 113**

**அண்மை வெளியீடுகள்**

| | |
|---|---|
| தமிழர் கண்ட தாவரவியல் | 40.00 |
| திராவிட இயக்க இதழ்கள் | 60.00 |
| திருவாவடுதுறைப் புராணம் | 250.00 |
| இலக்கிய இதழ்கள் | 110.00 |
| இந்திய விடுதலைக்கு முந்தைய தமிழ் இதழ்கள் - தொகுதி 3 | 60.00 |
| மகாவித்துவான் ரா. ராகவையங்கார் | 30.00 |
| சித்தாந்தச்செல்வர் க. வெள்ளை வாரணனார் | 25.00 |
| தமிழில் பிற துறைக் கோட்பாட்டாய்வுகள் | 25.00 |
| வ.உ.சி. ஒரு பன்முகப் பார்வை | 25.00 |
| இலக்கண நூல்களில் கருத்து வளர்ச்சி | 35.00 |
| தெ.பொ.மீனாட்சிசுந்தரனாரின்தமிழ்த்தொண்டும்மொழியியல்பங்களிப்பும் | 25.00 |
| இஸ்லாமியத் தமிழ்ப் புதினங்கள் சித்திரிக்கும் அறியப்படாத வாழ்வும் பண்பாடும் | 40.00 |
| பண்டைத் தமிழக வரைவுகளும் குறியீடுகளும் | 80.00 |
| தமிழெனப்படுவது | 115.00 |
| தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள் - இலக்கணம் & மொழியியல் | 105.00 |
| வலங்கை மாலையும் சான்றோர் சமூகச் செப்பேடுகளும் | 70.00 |
| தொல்லியல் நோக்கில் சங்ககாலம் | 45.00 |
| உலகத் தமிழிலக்கிய வரலாறு (தொன்மை முதல் கி.பி.500 வரை) | 45.00 |
| உலகத் தமிழிலக்கிய வரலாறு (கி.பி.501 - கி.பி.900) | 70.00 |
| பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயர் | 35.00 |
| திருமணம் செல்வக்கேசவராய முதலியார் | 30.00 |
| அருந்தமிழ் நூற்காவலர் அடிகளார் | 55.00 |
| சிவக்கவிமணி சி.கே. சுப்பிரமணியமுதலியார் | 40.00 |
| மூதறிஞர் மு. இராகவையங்கார் | 40.00 |
| ம.பொ.சி. யின் பார்வையில் தமிழ்மொழி இலக்கியம் பண்பாடு | 30.00 |
| தணிகைமணி வ.சு. செங்கல்வராயப் பிள்ளை | 50.00 |
| அருந்தமிழ் அறிஞர் அ.ச.ஞா | 50.00 |
| ஆராய்ச்சிப் பேறறிஞர் தி.வை. சதாசிவ பண்டாரத்தார் | 45.00 |
| இக்கால உலகிற்குத் திருக்குறள் தொகுதி-1 | 80.00 |
| இக்கால உலகிற்குத் திருக்குறள் தொகுதி-2 | 85.00 |
| இக்கால உலகிற்குத் திருக்குறள் தொகுதி-3 | 95.00 |
| திராவிட மொழி இலக்கியங்கள் | 180.00 |
| நாவல்கலையியல் | 50.00 |
| பண்டைத் தமிழ் எழுத்துக்கள் | 40.00 |
| அறிவியல் தமிழ் அறிஞர் பெ. நா. அப்புசுவாமி | 60.00 |
| சங்கப் பெண்பாற் புலவர்களின் மொழியும் கருத்தும் | 30.00 |
| தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள் இலக்கியம் | 100.00 |
| தமிழக வரலாறு மக்களும் பண்பாடும் | 125.00 |
| தமிழ்ச் சமூகவியல் ஒரு கருத்தாடல் | 25.00 |
| தமிழ் நாட்டுப்புறவியல் ஆய்வின் வரலாறு | 50.00 |
| நாடகமும் நாடகக் கம்பெனி அனுபவங்களும் | 60.00 |
| தமிழ்ச் சுருக்கெழுத்து நூல் | 50.00 |
| தமிழர் நாட்டு விளையாட்டுகள் | 75.00 |

**545** **உலகத் தமிழிலக்கிய வரலாறு** **180.00**

(கி.பி.1851- கி.பி.2000)